# இந்தியா பிரிக்கப்பட்டால்...

1004

இடைக்கால சர்க்காரின் உணவு மந்திரியும்
அரசியல் நிர்ணய சபைத் தலைவருமான இந்
நூல் ஆசிரியர் பாபு ராஜேந்திர பிரசாத்
சென்னை மாகாணத்துக்கு விஜயம் செய்த
போது தமிழ் மொழிபெயர்ப்பான இந்நூல்
அவரிடம் சமர்ப்பிக்கப்படுகிறது.

ஆசிரியர் :
**ராஜேந்திர பிரசாத்**

தமிழாக்கியவர் :
**ரா. நடராஜன்**

பதிப்பாளர்கள் :
**நவயுகப் பிரசுராலயம்**

இஸ்லாமிய பக்திமானும் உறுதிபடைத்த தேசிய முஸ்லிமும் தேசத் தொண்டில் முன்னணியில் நின்றவரும் சுகபோகத்தை விடுத்துத் துன்பம்சூழ் சேவையையும் தியாகத்தையும் மேற்கொண்டவரும் ஆடம்பர வாழ்வை விட்டு வறுமை வாழ்வை நாடியவரும் அரண்மனை போகத்தைத் துச்சமாகக் கருதி அறச்சாலையான சிறைச் சாலையை நண்ணியவரும் சிக்கந்தர் மாளிகையை விட சாதாக்கத் ஆசிரமமே உயர்வெனக் கொண்டவருமான

**மஜ்ஹார் - உல் - ஹக்கின்**

புனிதமயமான ஞாபகார்த்தத்துக்கு
இந்நூல் சமர்ப்பணம்

—ராஜேந்திர பிரசாத்

# பதிப்புரை

பீஹார் மாகாணத்தைச் சேர்ந்த சம்பரான் என்ற இடத்திலே 1917-ல் ஒரு புரட்சி நடந்தது. நிறவெறியும் சுரண்டலுக்குப் பெரும் பசியும் கொண்டிருந்த வெள்ளைக்காரத் தோட்ட முதலாளிகள் படு அமர்க்களப்படுத்தி வந்தார்கள். தென்னுப்பிரிக்காவில் அறப்போர் நடத்திவிட்டு வந்திருக்கும் மகாத்மாவுக்கு இந்த அமர்க்களம் பிடிக்கவில்லை. சம்பரான் விவசாயிகள் துன்பம் அவர் மனதை வாட்டியது. சம்பரான் திசை நோக்கி மகாத்மா சென்றுர். அரசாங்கத்தின் விசேஷ பராமரிப்பிலிருந்த வெள்ளைத் தோட்ட முதலாளிகள் மகாத்மாவைத் துச்சமாக மதித்தார்கள். குட்டி அதிகாரிகளோ சம்பரானிலிருந்து வெளியேற வேண்டுமென மகாத்மாவுக்குத் தடை போட்டார்கள். தடையை மகாத்மா மீறினுர். உடனே வழக்குத் தொடுத்தார்கள். பெரும் கிளர்ச்சி மூண்டது. சம்பரான் சத்தியாக்கிரகப் போர் முரசு கொட்டப்பட்டது. இறுதியில் சர்க்கார் வெற்றிகரமாக வாபஸானுர்கள். 1918-ல் சம்பரான் விவசாயிகள் நிவாரணச் சட்டம் என்ற ஒரு சட்டம் பிறந்தது. மகாத்மா வாகை சூடினுர். அதோடு மட்டுமல்ல, கிடைத்தற்கரிய பொக்கிஷமொன்றையும் பெற்றுர். அப்பொக்கிஷம்தான் இந்நூலாசிரியர் டாக்டர் ராஜேந்திர பிரசாத்.

பாட்னுவில் பெரிய வக்கீலாக டாக்டர் ராஜன் பாபு இருந்தார். அச்சமயத்தில்தான் சம்பரான் சத்தியாக்கிரகம் மூண்டது. விவசாயிகளின் துன்பத்தையும் மகாத்மா மேற்கொண்ட புனித காரியத்தையும் கண்டு தம் தொழிலை அப்படியே விட்டுவிட்டு வந்தவர் டாக்டர் ராஜன் பாபு. பட்டம் பதவி பெற்ற பிரமுகர்களில் மிகமிக மனத்துணிச்சலோடு காந்திஜியைப் பின்பற்ற முன்வந்த தலைவர்களில் ராஜன்பாபு முதன்மையானவர். காந்திஜியின் சுயசரிதத்திலுள்ள ராஜன்பாபு பற்றிய வாசகங்கள் மறக்க முடியாதவை.

சம்பரான் சத்தியாக்கிரகம் நடந்து எவ்வளவோ காலமாகிவிட்டது. அதை அடுத்து எவ்வளவோ புரட்சிகள் இந்தியாவில் நிகழ்ந்துவிட்டன. சமூக ராஜீயத் துறைகளில் மறக்கமுடியாத பல கட்டங்கள் சம்பவித்திருக்கின்றன. ஆனுல் ராஜன் பாபுவின் வாழ்க்கையை, அவை துளிகூட மாற்றவில்லை. சம்பரான் சத்தியாக்கிரக நாளிலிருந்து இதுநாள்வரை அவர் மகாத்மாவுடன் அறநெறியிலிருந்து இம்மிகூடப் பிறழாது செல்லுபவர். தேங்கிக்கிடந்த இந்திய ராஜீய வாழ்வில் பெரும் விழிப்பை உண்டுபண்ணிய 1920-ம் வருஷ ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பமானதும் ராஜன்பாபு இயக்கத்தில் இரண்டறக் கலந்தார். லக்ஷக்கணக்கான ரூபாய் வருமானத்தை விட்டுவிட்டுச் சட்ட மறுப்பு என்னும் தீக்குழி இறங்கினுர். அரசாங்கம் அவரைச் சிறையிட்டது. சொல்லொணுத் துன்பங்களை இழைத்தது. ராஜன்பாபுவின் வைர உள்ளத்தை அவைகள் அசைக்க முடியவில்லை.

தேசத்தில் காங்கிரஸ் மகாசபையின் சங்கநாதம் முழங்கின சமயமெல்லாம் ராஜன்பாபுவைப் போர்க்கள முன்னணியில் காணலாம். அடுத்தடுத்துப் சிறைபுகுந்ததால் அவர் உடல்நிலை தளர்ந்தது. ஆனுல் உள்ளத்தின் உறுதி பன்மடங்காகியது. 1934-ல் இந்தியாவையே அலறச் செய்யும்படியான பீஹார் பூகம்பம் ஏற்பட்டது நண்பர்களுக்குத் தெரியும். சிறையில் குற்றுயிராகக் கிடந்த ராஜன்பாபுவை இந்த பூகம்பம் ஏற்பட்ட சில தினங்கள் கழித்து அரசாங்கம் விடுவித்தது. டாக்டர் ராஜன்பாபு சிறையைவிட்டு வெளியேறியதும் பீஹார் மக்களிடம் ஓடினுர். பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட ஏழை மக்களிடம் இரவுபகலாக இருந்து அருந்தொண்டாற்றினுர். ராஜன்பாபுவின் உருக்கமான வேண்டுகோளைக் கேட்டு இந்தியா நிவாரண நிதிக்கு வாரிக் கொடுத்தது. பீஹார் ஏழைமக்கள் எங்கள் துணைவன், முடிசூடா மன்னன் என்று வாழ்த்தினுர்கள்; அரசாங்கம் பரம வைரி என்று மனம் புழுங்கியது.

ராஜன்பாபு பெரிய அரசியல்வாதி மட்டுமல்ல. எளிமையும் அன்பும் பூத்த தலைவர் மட்டுமல்ல. பெரிய பண்டிதர். மேதை. பாட்ன சர்வகலா சாலையில் பேராசிரியராக இருந்தவர். அடிமைக் கல்வியை எதிர்த்துக் கிளம்பிய வித்தியாபீடத்தின் தலைமை அமைச்சராக இருந்தார். இதைப்போன்ற பல் வேறு முக்கிய பதவிகளைத் திறம்பட நிர்வகித்து வந்தவர்.

பீஹார் மக்கள் அவரை எங்கள் மன்னன் என்றழைத்தது இந்தியாவுக்குப் பொறுக்கவில்லை. 1934-ல் இந்தியாவே கூடி அவரை ராஷ்டிரபதி ராஜன்பாபு என்றழைத்தது. காங்கிரஸ் மகாசபையின் தலைவராக விளங்கினுர். 1939-ல் மீண்டும் ராஷ்டிரபதியானுர்.

1942-ல் இந்தியாவின் விடுதலைப் போர் முரசு கொட்டப்பட்டது பம்பாயில் மகாத்மா இதுவே இறுதிப் போராட்டம் என்று தேசமக்களை அழைத்தார். ஆகஸ்ட் புரட்சி என்று தேசமே வீறுகொண் டெழுந்தது. யுத்த முயற்சியில் தலைகால் தெரியாமல் சென்றுகொண்டிருந்த லின்லித்கோ சர்க்கார் தலைவர்களைச் சிறையிலடைத்தது. டாக்டர் ராஜன்பாபுவை பங்கிப்பூர் சிறைக்குக் கொண்டுபோனுர்கள். பங்கிப்பூர் சிறையின் ஏகாந்தம் அவரை இந்த அற்புத நூலை எழுத வசதிசெய்து கொடுத்ததுபோலும்.

1940-ல் லாகூரில் பாகிஸ்தான் தீர்மானம் பிறந்தது. தீர்மானம் பிறந்து ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டன. பாகிஸ்தான் பற்றி எவ்வளவோ வாதங்கள் பேச்சு வார்த்தைகள் நடந்திருக்கின்றன. ஆனுல் யாருக்கும் பாகிஸ்தான் என்ருல் என்ன என்பது தெரியாது. பாகிஸ்தான் கர்த்தாக்களும் வீரர்களுமான லீகர்களுக்கே தெரியாது என்பதுதான் இதில் வேடிக்கை. அதைவிடப் பெரிய வேடிக்கை லீகின் சாம்ராட்டாக விளங்கும் ஸ்ரீ ஜின்னுவுக்காவது தெரியுமா என்ருல் இல்லை என்பதுதான் பதில். இருந்தாலும் பாகிஸ்தான் கூச்சலை லீகர்களோ பிரிட்டிஷ் அரசாங்கமோ கைவிடவில்லை.

உருவும் உயிரும் அற்ற இந்த பாகிஸ்தான் தேசத்துக்கே அனர்த்தம் விளைவிப்பது; இந்தியாவைச் சீந்துவாரற்ற தேசமாகச் செய்யத் திட்டமிடுவது; இந்தியாவில் வெள்ளைக்காரன் செல்வாக்கு பூண்டோடு அறுபட முடியாமல் நிற்பது என்பதை ‘இந்தியா பிரிக்கப்பட்டால்’ என்ற இந்த நூல் விளக்குகிறது. பாகிஸ்தான் தீர்மானம், அதற்குச் சாதக பாதகமான திட்டங்கள் முதலியவைகளை அணு அணுவாக ராஜன்பாபு இந்நூலில் பிரித்து, அலசி ஆராய்ந்திருப்பது குறிப்பிடத்தக்கது. மற்ருெரு சிறந்த காரியத்தையும் அவர் செய்திருக்கிறுர்.

பிரித்தாள்வது என்ற சித்தாந்தத்தை ரத்தத்தில் ஊறவிட்டிருக்கும் பிரிட்டிஷார் இந்தியாவில் பிரிவினை நஞ்சை எப்படிப் புகுத்தினார்கள், அதை எவ்வாறு மெள்ள மெள்ளப் பரவச் செய்து நாளடைவில் அது இந்தியாவின் குரல்வளையை எட்டிப் பிடிக்கும்படி செய்தனர் என்பன போன்ற விவரங்களை ராஜன்பாபு எடுத்துக் கொடுத்திருப்பதுபோல இதுநாள்வரையிலும் வேறெந்த நூலாசிரியரும் எடுத்துத் தரவில்லை. தம் முடிவுகளுக்கு அவர் ஆதாரங்களையும் புள்ளி விவரங்களையும் தேடி எடுத்திருப்பது அவரின் பொறுமையையும் செயல் திறனையும் விளக்கும் சிறந்த அம்சம்.

பாஞ்சாலத்தையும் கல்கத்தாவையும் கண்டு துள்ளிக் குதிக்கும் தமிழ் நாட்டு முஸ்லிம் நண்பர்கள் இந்நூலைப் படிக்கவேண்டும். பாகிஸ்தான் என்றால் அராபியக் கதையில்வரும் மாந்திரீக உலகம் என்று நினைத்திருக்கும் நம் சகோதர இஸ்லாமானவர்கள் இந்நூலைப் படித்தால் பெரிதும் பயன் அடைவார்கள். மற்றவர்களும் இந்நூலைப் படிக்கவேண்டும்—படிப்பார்கள் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

ராஜன் பாபுவின் நூல் ஆராய்ச்சிக் களஞ்சியம். காலம் என்ற கட்டை மீறி அமரத்துவம் வாய்ந்திருக்கும் பெரும் நிதி. தவறான வழியில் முரண்டிக் கொண்டு ஓடும் சகோதரனை இதமாகத் திருப்ப முயற்சிப்பது இந்நூலின் உள்ளமைப்பு. இதைத் தமிழில், மூலத்தின் சுவை குன்றாமல், கருத்துப் பிறழாமல், வேகம் சறுக்காமல் மொழிபெயர்ப்பது மிகக் கஷ்டமான வேலை. இக் கஷ்டத்தைத் தம் திரு முயற்சியால் நண்பர் திரு. ரா. நடராஜன் சமாளித்திருக்கிறார். இந்நூலைத் தமிழாக்கி வெளியிட உரிமையளித்த தலைவர் ராஜன் பாபுவுக்கும், தமிழாக்கிய திரு. ரா. நடராஜன் அவர்களுக்கும், எங்களுடன் ஒத்துழைத்த தினசரி உதவியாசிரியர் திரு. எஸ். எஸ். மாரிசாமி அவர்களுக்கும் எங்கள் நன்றி.

சென்னை }
12-5-47 }

டி. ஆர். அருணாசலம்
நிர்வாகி

# முன்னுரை

இந்தியாவை முஸ்லிம் மண்டலம் இந்துமண்டலம் எனப் பிரிக்க வேண்டுமென்று 1940-ஆ மார்ச்சு மாதத்தில் லாகூரில் கூடிய அகில இந்திய முஸ்லிம் லீக் தீர்மானித்ததிலிருந்து இந்தப் பிரிவினைப் பிரசினை முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. பிரிவினை பற்றி ஏராளமாகவும் எழுதப்பட்டு அதுபற்றிய ஆராய்ச்சிநூல்களும் பெருகிவிட்டன. இருந்தாலும், பிரிவினையின் பல தோற்றங்களையும் விவரிக்க முற்படும் இன்னொரு புத்தகத்துக்கும் இடமிருக்கும் என்றே எண்ணுகிறேன். பிரிவினைபற்றி வாசகர் தாமே தமது சொந்த அபிப்பிராயத்தை அமைத்துக் கொள்ளுவதற் கேற்றவாறு வேண்டிய தகவல்களையும் விஷயங்களையும் சுருக்கமாகச் சேகரித்துத்தர "இந்தியா பிரிக்கப்பட்டால்" என்னும் இந்நூலில் முயன்றிருக்கிறேன். பிரிவினை சம்பந்தமான விஷயங்களுக்கப்புறம், அவைகளிலிருந்து நான் கொண்டுள்ள அபிப்பிராயத்தையும் வெளியிட்டிருக்கிறேன். என்னுடைய முடிவுகளை ஒதுக்கி விடுட் இந்நூலில் காணப்படும் தகவல்களைக் கொண்டு வாசகர் தாமே தமது சொந்த முடிவுக்கும் வரலாம்.

இப்புத்தகம் ஆறுபாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இவற்றில் முதற்பகுதி, இந்துக்களும் முஸ்லிம்களும் வெவ்வேறு தேசிய இனங்களைச் சேர்ந்தவர்களா என்ற பிரசினையைப்பற்றியதாகும். இப் பிரசினைக்குச் சரித்திரத்திலும் இடமில்லை; அன்றாட வாழ்க்கையிலும் ஆதாரமில்லை; பிரதிநிதித்துவம் வாய்ந்த பிரபல முஸ்லிம் தலைவர்களும் இதை ஆதரிக்கவில்லையென்பதை முதற்பகுதி காட்டுகிறது. ஒருகால் முஸ்லிம்கள் தனித் தேசிய இனத்தினர் என்பதாக வைத்துக் கொண்டாலும், இந்தியாவிலுள்ள இந்து முஸலிம் பிரசினையைத் தீர்க்கும்வழி தேசிய இன ராஜ்யங்களை அமைப்பதன் மூலமாக அல்ல. இவ்வாறு ஏற்படுத்தப்பட்ட தேசிய இன ராஜ்யங்கள் சிறுபான்மைப் பிரசினையைத் தீர்க்கவில்லை என்பதோடல்லாமல், நிதிநிலைமை, பொருளாதாரம், தொழிலாக்கம், அரசியல், ராணுவப்பாதுகாப்பு, போர்முறை முதலிய துறைகளிலும் புதுப்புது சங்கடங்களைக் கிளப்புகின்றன. பிற நாடுகளின் அனுபவத்தைக் கொண்டும், சிறுபான்மைப் பிரசினை விஷயமாக உலகமெங்கும் புகழ்பெற்ற ஆசிரியர்களுடைய தேர்ந்து தெளிந்த முடிவுகளின் படிக்கும் பார்த்தால் பல தேசிய இனங்களைக்கொண்ட ராஜ்யத்தை அமைத்து அதிலடங்கிய பல தேசிய இனங்களுக்கும் கலாசார சுதந்திரம் கொடுப்பதன் மூலமாகவே சிறுபான்மைப் பிரசினையைத் தீர்க்க முடியுமென்பதையும் இப்பாகம் காட்டுகிறது.

இந்துமுஸ்லிம் பிரசினை எப்படிப் பிறந்தது? எவ்வாறு வளர்ந்தது? இவ்வளவு பெரிய இந்த நிலைமையை எவ்வாறு அடைந்தது? என்பதையும், வகுப்புவாத அடிப்படையை விரிவாக்கியதன் மூலமாக வகுப்பு வேற்றுமைகள் பெரிதாக்கப்பட்ட தென்பதையும் இரண்டாம் பாகம் விரிவாகக் கூறுகிறது.

அனேக பிரிவினைத் திட்டங்கள் சுருக்கமாக மூன்றாவது பாகத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

அகில இந்திய முஸ்லிம் லீகின் லாகூர் தீர்மானம் தெளிவில்லாதது. ஆளுக்கொருவிதமாக அதற்குப் பொருள் கூறலாம். ஆகையால் அதன் தராதரத்தை ஆராய்வது யாருக்கும் கஷ்டம். இதை நாலாவதுபாகம் எடுத்துக் காட்டுகிறது. இதில் அத்தீர்மானம் அலசி ஆராயப்படுகிறது. தீர்மான வார்த்தைகளுக்குண்டான அர்த்தத்தின்படி அத்தீர்மானத்தின் கருத்து என்ன என்பதையும் பாகிஸ்தானின் எல்லையையும் இப்பாகத்தில் காணலாம்.

முஸ்லீம் ராஜ்யங்களின் நிதிவளங்கள் யாவை என்பதையும் பிரிவினைத் திட்டம் நடைமுறையில் சாத்தியமில்லை என்பதையும் ஐந்தாவது பாகம் குறிக்கிறது.

இந்து முஸ்லிம் பிரசினையைத் தீர்ப்பதற்காகத் தனி மனிதர்களும் சபைகளும் கொண்டுவந்துள்ள சில திட்டங்கள் ஆருவது பாகத்தில் கொடுக்கப் பட்டுள்ளன.

இந்நூலின் 1, 3, 4, 5, 6-வது பாகங்கள், நான் பங்கிப்பூர் சிறையில் உடல்நிலை சரியாயிருந்த சமயங்களில் அவ்வப்போது எழுதப்பட்டவை. ஆகவே அவைகளில் குறைபாட்டின் அடையாளங்கள் இருப்பது இயல்பு. விடுதலை யானபிறகு இரண்டாவது பாகம் எழுதப்பட்டதென்ருலும், முன்னுல் எழுதியவைகளைத் திருப்பிப் பார்க்க நேரமில்லை. சிறையிலிருக்கும்போது புத்தகங்கள் கிடைப்பதரிது. டாக்டர் சச்சிதானந்த சின்ஹா இக்கஷ்டத்தைப் பெரிதும் நீக்கினுர்.

சின்ஹா நூல்நிலையத்திலிருந்து தாராளமாக எனக்குப் புத்தகங்கள் கிடைக்கும்படி அனுமதித்தார். பீஹார் சட்டசபைத் தலைவரான சர் ரஜீவ ரஞ்சன் பிரசாத் சின்ஹாவும் பீஹார் சட்டசபை நூல்நிலையத்திலிருந்து புத்தகங்களைக் கொடுத்துதவினுர். ப்ம்பாயைச் சேர்ந்த ஸ்ரீ சாந்தி குமார் மொரார்ஜி எனக்கு நிறைய நூல்களும் புள்ளிவிவரங்களும் கொடுத்தார். இவர்களனைவருக்கும் எனது நன்றி. பம்பாய் ஸ்ரீ கே. டி. ஷாவும், பிலானி பிர்லாக் கல்லூரிப் பேராசிரியர் பாலகிருஷ்ணுவும் கூறிய சிறந்த யோசனை களுக்காக அவர்களுக்கு எனது நன்றி. தமது நூல்நிலையத்திலிருந்து புத்தகங்கள் கொடுத்துதவிய பிர்லாக் கல்லூரிக்கும் எனது வந்தனம். சிறையில் எழுதப்பட்ட பகுதி அங்கு டைப் அடிக்கப்பட்டது. ஜாம்ஷெட் பூரிலுள்ள ட்டாடா தொழிலாளர் யூனியன் செயலாளர் ஸ்ரீ எம். ஜான் அந்த டைப் பிரதியை பிரதி எடுத்து கொடுத்ததற்காகவும் ஸ்ரீ எஸ். எச். ராஸி, எம். டி. மதன்., எம். கே. கோஷ், டைப்புப் பிரதியை ஒப்பிட்டுப் பார்த்ததற்கு அவர்களுக்கும் எனது நன்றி உரியதாகும்.

ஸ்ரீ ஜான் டைப்புப் பிரதியைத் தயார் செய்வதற்கு அனுமதித்த பீஹார் அரசாங்கத்திற்கு நான் நன்றி செலுத்துகிறேன். டாட்டா ரசாயன ஆராய்ச்சி நிலையத்தைச் சேர்ந்த ஸ்ரீ எம். கே. கோஷ் புள்ளி விவரங்களைச் சரிபார்த்துக் கணக்குப் படங்களைத் தயார்செய்து கொடுத்தார். அவருக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். இரண்டாவது பாகத்தை எழுதுவதற்கும், அச்சிடுவதற்கும், ஸ்ரீ மதுரப் பிரசாதும், ஸ்ரீ சக்ரதார சர்மாவும் பலவகையில் ஒத்தாசை புரிந்தார்கள். அவர்களுக்கும் எனது நன்றி.

அறிக்கைகளையும் மேற்கோள்களையும் எடுத்தாள உதவிய யாவருக்கும் எனது நன்றியை ஆங்காங்கே தெரிவித்திருக்கிறேன்.

சாதாக்கத் ஆசிரமம்<br>திகாகாத், பாட்னு<br>டிசம்பர் 15, 1945.

ராஜேந்திர பிரசாத்

## மறு பதிப்பின் முகவுரை

மறுபதிப்பின்போதும் இந்நூல் உள்ளுறையைத் திருப்பிப் பார்க்க முடியாதுபோயிற்று. ஆனுல் பிரிவினைப் பிரசினையின் நாளது வரலாறுவரை எடுத்துக் கூறும் பிற்சேர்க்கை சேர்க்கப்பட்டிருக்கிறது.

26 ஏப்ரல் 1946.

ராஜேந்திர பிரசாத்

## மொழிபெயர்ப்பாளரின் வார்த்தைகள்

நூலாசிரியரும் நூலும்: சூரியன் ஒளியும் உயிரும் அளிக்கிறான். சூரியனைச் சுற்றிப் பல கிரகங்கள் சுற்றுகின்றன.

மகாத்மாஜி நமது சூரியன். அவரைச் சுற்றிவரும் கிரகங்களுள் ராஜேந்திர பிரசாத் நாம் வசிக்கும் இப்பூமியைப் போன்றவர்.

பிரசாத், மகாத்மாஜியை அப்படியே அணுவளவும் பிசகாதபடி பின்பற்றக் கூடியவர்களில் தலை சிறந்தவர், சிறந்த அஹிம்சாவாதி என்று மாத்திரம் நாம் எண்ணக்கூடும். இந்நூலிலிருந்து அவரை எவ்வாறு அறிகிறோம்?

ராஜேந்திர பிரசாத் ஆழமான, நிலைகலங்காத, உறுதியான அறிவு படைத்தவர். எளிதில் அவரை ஏமாற்றமுடியாது. வாணவேடிக்கைகளில் மயங்குபவரல்ல. வெடிகளுக்கும் அஞ்சினவரல்ல. உண்மையை எளிதில் கண்டறிந்து எந்நிலைமையிலும் கைவிடாதவர்.'

பொறுமைக்கிருப்பிடம். சலிப்பென்பதை அறியாதவர்.

நுட்ப அறிவுபடைத்த சரியான வக்கீல். 'சொலல் வல்லன், சோர்விலான், அஞ்சான், இவனை இகல்வெல்லல் யார்க்கும் அரிது.'

பழுத்த கிராமவாசி. ஏழை எளியவர்களிடைத் தோளோடு தோள் நிற்பவர். கிராம வாழ்வையும், வீட்டுப் பழக்க முறைகளையும் பெண்களைக் காட்டிலும் நன்றாக அறிந்திருக்கிறார்.

நடுநிலை கோடாதவர். அருஞ்செயலாற்றும் மகா திறமைசாலிகளில் ஒருவர்.

இந்நூலைப் படித்த பின்பு 'ஆஹா! நாற்பதுகோடி மக்களுள்ள நாட்டின் அரசியல் நிர்ணய சபைக்கு இவரே தலைமை தாங்கத் தகுதிவாய்ந்தவர்' என்பதை நன்குணர்கிறோம்.

இந்நூல்: இன்றைய வாழ்வில் அரசியல் நமது உணவோடு கலந்ததாகிவிட்டது. எங்கும் அரசியலே பேச்சு, மூச்சு. 'யாரோ அரசன்?' என்ற காலம் போய் 'யானே அரசன்!' என்ற எண்ணம் எல்லோர் மனத்திலும் பொங்கிக் குமுறிக் கொண்டிருக்கிறது. அதை நிரூபிப்பதற்கு ஏதாவது சுலபமான வழியிருக்கிறதா என்று யாவரும் பெருமுயற்சிசெய்துகொண் டிருக்கும் காலம் இது. யாவரும் தங்களது அரசியலறிவைப் பெருக்கிக்கொள்ள வேண்டிய அவசியம். ஏற்பட்டிருக்கின்றது இந்நூல் அரசியல் வாழ்வில் பெரிதும் ஈடுபட்ட ஒருவரால் எழுதப்பட்டது. வெறும் பிரசாரத்திற்கு எழுதப்பட்டதல்ல' இந்நூலில் சத்திய சோதனையின் கையை ஒவ்வொரு வார்த்தையிலும் காணலாம். உண்மைக்காக வாதாடும் வக்கீலின் குரலைக் கேட்கலாம். நடுநிலை கோடாத நீதிபதியின் தீர்ப்பைப் பார்க்கலாம்.

சிறுபான்மைப் பிரசினை என்ற நோய் இப்போது எங்கணும் காணப்படுகிறது. ஒரு நாட்டு மக்களை, சிறுபான்மையினர் பெரும்பான்மையினர் என்று

பிரிப்பதும், அவர்கள் ஒருவரையொருவர் முதலில் சந்தேகிப்பதும், பிறகு வெறுப்பதும், எதிர்ப்பதும், சண்டையிடுவதுமான காரியத் தொடர்ச்சிகள் ஐரோப்பாவில் முளைத்தன. இந்தியாவில் ஆங்கிலேயர் சிறுபான்மைப் பிரசினையின் விதையை விதைத்தார்கள். பேணிப் போற்றி வளர்த்தார்கள். உலகமெங்கும் ஒவ்வொரு தினுசில் காணப்படும் சிறுபான்மைப் பிரசினையின் ஒரு பாகமே இந்தியாவில் காணப்படும் இந்து முஸ்லிம் பிரசினை.

இந்தக் கடுமையான பிரசினையைப் பற்றிய ஆதார பூர்வமான முழு நூல் இது. அரசியலை நன்கு தெரிந்துகொள்ள உண்மையாக ஆசைப்படுகிறவர்கட்கும் அரசியலில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும் அருநிதியம் போன்றது. சரித்திரப் பிரசித்திபெற்ற மனிதரால் சரித்திரத்தைப்பற்றி எழுதப்பட்ட சரித்திரப் பிரசித்திபெற்ற புத்தகம் என்று இதைச் சரித்திரம் கூறப்போவதுறுதி, உண்மை.

தமிழ் நாட்டின் முன்னணி விளக்கமாக விளங்கும் நவயுகப் பிரசுராலயத்தார் பல்வேறு அசௌகரியங்களுக் கிடையே இதை வெளியிட முன்வந்தது அவர்களுக்குள்ள ஆற்றலின் பெருமையை நன்கு காட்டுகிறது. அவர்களுக்கு எனது ஆழ்ந்த நன்றி. சரி. இந்த நூலின் தமிழாக்கத்தைப்பற்றி ஏதேனும் கூறவேண்டாமா? அதற்கு வாசகரைத்தவிர வேறு யார் தகுதியுள்ளவர்? இந்நூல் தமிழில் தோன்றுவதற்கு முதற்காரணமாயிருந்த உயர்திரு ராம. சிதம்பரம் அவர்கட்கும் வித்துவான் க. தேசிகன் அவர்கட்கும் நான் என்றும் கடமைப்பட் டிருக்கிறேன்.

ரா. நடராஜன்

# பொருளடக்கம்

## முதற் பாகம்: இரு தேசீய இனக் கொள்கை



## இரண்டாம் பாகம்: வகுப்புவாத முக்கோணம்



## மூன்றும் பாகம்: பிரிவினைத் திட்டங்கள்

## நான்காம் பாகம்: முஸ்லிம் லீகின் பாகிஸ்தான் தீர்மானம்



## ஐந்தாம் பாகம்: முஸ்லிம் ராஜ்யங்களின் வளங்கள்



## ஆறும் பாகம்: பாகிஸ்தானுக்கு மாற்றுத் திட்டங்கள்



காஷ்மீரம்
எல்லைப் புற மாகாணங்கள்
பஞ்சாப்
பலுச்சிஸ்தானம்
சிந்து
ராஜபுதனம்
ஐக்கிய மாகாணம்
பீஹார்
வங்காளம்
அஸ்ஸாம்
மத்திய மாகாணம்
ஒரிஸ்ஸா
பிரார்
ஹைதராபாத்
மைசூர்

## 1. இரு தேசிய இனங்கள்—பாகிஸ்தானின் அடிப்படை

இந்தியாவை முஸ்லீம் பிரதேசம், முஸ்லீம் அல்லாத பிரதேசம் என்று பிரித்து, ஒவ்வொன்றையும் தனித்தனி சுதந்திர ராஜ்யமாக்கவேண்டும் என்ற பிரேரணை, இந்துக்களும் முஸ்லீம்களும் தனித்தனி தேசிய இனத்தினர் என்ற கொள்கையின் அடிப்படையில் எழுந்தது. லாகூரில் முஸ்லிம் லீக் கூட்டத்திற்குத் தலைமை வகித்த திரு. ஜின்னு கூறியதாவது: 'தேசிய இனம் பற்றி எத்தகைய வியாக்கியானம் செய்தபோதிலும் முஸல்மான்கள் ஒரு தேசிய இனத்தினரே. அவர்களுக்கென ஒரு தாய் நாடும், ராஜ்யமும், அரசியலும் இருக்கவேண்டும்.'[1] 'இஸ்லாம், இந்து இவ்விரு மதங்களின் உண்மையான தன்மையை, இந்து நண்பர்கள் ஏன் உணரத் தவறுகிருர்கள் என்பதை அறிவது கடினமாக இருக்கின்றது. நுணுகி ஆராய்ந்தால், வெளிப் பார்வைக்குத் தென்படுவதுபோல அவைகள் மதங்களல்ல; தனித்தனி சமூக அமைப்புக்கள் என்பது விளங்கும். அவை இரண்டும் ஒன்ருய்க் கலந்து புதியதொரு தேசிய இனம் உண்டாகுமென நினைப்பது வெறும் கனவுதான். ஒரே இந்தியா என்ற தவருன எண்ணம் அளவுக்கு மிஞ்சிப் போய்விட்டது; நம்முடைய அநேக கஷ்டங்களுக்கு அதுவே காரணம். காலா காலத்தில் நமது கருத்துக்களைத் திருத்திக் கொள்ளாவிட்டால், அது இந்தியாவின் அழிவில்தான் கொண்டுபோய் விடும். இந்துக்களும் முஸ்லீம்களும் இரு வேறுபட்ட சமய தத்துவங்கள், சமூக வழக்கங்கள், இலக்கியங்கள் இவற்றை உடையவர்கள். அவர்களுக்குள் கலப்பு மணமோ, உடனிருந்து உண்ணுதலோ கிடையாது. அவர்கள் உண்மையாக இரு வேறு நாகரிகத்தைச் சேர்ந்தவர்கள். அந்நாகரிகங்கள் ஒன்றுக்கொன்று நேர்முரணுன கருத்துக்களில் பிறந்தவை. வாழ்வைப் பற்றிய கருத்துக்களும் நோக்கங்களும் வெவ்வேருனவை. இந்துக்களும் முஸ்லீம்களும் வெவ்வேறு சரித்திர ஊற்றுக்களிலிருந்து மனே எழுச்சி பெறுகிருர்கள் என்பது மிகத் தெளிவான விஷயம்; வேறுபட்ட இதிகாசங்களையும், இலட்சிய புருஷர்களையும், கதைகளையும் பெற்றிருக்கிருர்கள். அநேகமாய் ஒருவருடைய இலட்சிய புருஷன் மற்றவருடைய பகைவனுகவும், ஒருவருடைய வெற்றி மற்றவருடைய தோல்வியாகவுமே இருந்து வந்துள்ளன. தொகையில் சிறிதும் பெரிதுமான இத்தகைய இரு தேசிய இனங்களை ஒரு தனி ராஜ்யத்தில் பின்னிப் பிணைத்து வைப்பதால் அதிருப்தி வளரும். இத்தகைய ராஜ்யத்தில் அமைக்கப்பட்ட எவ்வித ஆட்சியும் முடிவில் அழிவெய்தும்.'[2]

**கான்பிடரசி ஆப் இண்டியா** என்ற புத்தகத்தை 'ஒரு பஞ்சாபி' எழுதியுள்ளார். அவரும் இதே கருத்துக்களை ஆதாரமாகக் கொள்கிருர்; 'நமது முந்திய விவாதங்களிலிருந்து இந்துக்களும் முஸ்லீம்களும் முற்றிலும் வேறுபட்ட பிரிவினர் எனக் காண்கிருேம். அவர்களது நாகரிகங்கள் சந்தேக

1. *Recent Speeches and Writings of Mr. Jinnah*, p. 155.
2. *ibid*, p. 153.

மின்றி வெவ்வேருனவை. அந்நாகரிகங்கள் ஒன்றை ஒன்று மெதுவாகத் திருத்தி யிருப்பினும், அவை ஒன்ருகி விடா. அவர்களுடைய பழக்க வழக்கங்கள், சமூக அமைப்புக்கள், நன்னெறி விதிகள், சமய, கலாசார, அரசியல் கருத்துக்கள், மரபு, கலை, வாழ்க்கை நோக்கு எல்லாம் வேறுபட்டவை மாத்திரமல்ல, முரணுனவையும்கூட. வாழ்க்கையின் இத்தகைய முக்கிய வேற்றுமைகள் ஒரே தேசத்தை அமைக்க உதவா. இவைகள் எப்பொழுதும் பரஸ்பர அவநம்பிக்கையையும் மனவேற்றுமையையும் உண்டாக்கும். இரு வகுப்பாரிடையே உள்ள அடிப்படை வேற்றுமைகள், முன்னுளிலும் இன்னுளிலும் இவர்களிடையே ஏற்பட்ட போட்டிகளைப் பற்றிய நினைவுகள், கடந்த ஆயிர வருடங்களாக ஒருவர்மீது ஒருவர் சாட்டிய பழிகள் என்ற இவைகள் இடைநின்று இவர்களை ஒன்று சேரவிடாதபடி தடை செய்கின்றன. நாம் ஏற்கெனவே கூறியவண்ணம் கடந்த சில நூற்ருண்டுகளாக இவர்களிடம் காணும் ஒரே ஒற்றுமை இவர்கள் அந்நிய ஆட்சிக்கு அடிமைப்பட்டிருப்பதுதான். அந்நிய ஆட்சித் தளை அறுபடவும் இவர்கள் சிதறி நிற்பார்கள். இப்பொழுது அமுக்கி வைத்தாற்போலிருக்கும் வேற்றுமைகள் அப்பொழுது பளிச்சென்று வெளிப்படும்.'[3]

அலிகாரைச் சேர்ந்த ஸையது ஸாப்ருல் ஹாஸன், மகமது ஆப்சல் ஹுஸேன் காத்ரீ என்ற பேராசிரியர்கள் பிரசுரித்த வெளியீட்டில் ஓர் இந்தியப் பிரிவினைத் திட்டத்தை வகுத்துள்ளனர். அவர்கள் எவ்வகையிலும் 'பஞ்சாபி' க்கு இளைத்தவர்கள் அல்லர். அவர்கள் கூறுவதாவது: 'இந்திய முஸ்லீம்கள் இந்துக்களோடு முற்றிலும் வேறுபட்ட தேசீய இனத்தினர். அவர்களுடைய நோக்கும், ஆர்வங்களும் வெவ்வேருனவை. இந்து தேசீய இனம் அல்லது இந்துவல்லாத தேசீய இனம் என்பவைகளில் இந்திய முஸ்லீம்கள் ஒன்ருகிக் கலக்கமுடியாது. இம் மறுக்கமுடியாத உண்மையை, 1935-ம் வருடத்திய அரசாங்கச் சட்டம் உணராதது அதன் முதல் தவறு; மேலும் கூறுகிருர்கள்: 'இந்திய முஸ்லீம்கள் தாங்களாகவே ஒரு தேசீய இனமாக இருக்கின்ருர்கள்; இந்துக்களினின்றும், முஸ்லீமல்லாத பிற இனங்களினின்றும் வேறுபட்ட தனித் தேசீய உருவம் பெற்றவர்கள். ஸெக் ஜாதியாரிடம் இருந்து ஸுடேட்டென் ஜெர்மானியர் எவ்வளவு வேறுபட்டவரோ, அதைக்காட்டிலும் அதிகமாக இந்துக்களிலிருந்து முஸ்லீம்கள் வேறுபட்டவர்கள். இதை நாங்கள் இடைவிடாது ஊக்கத்தோடு வற்புறுத்த வேண்டும் என்பதை உணருகிருேம்'.

எல். ஹம்ஸா, **பாகிஸ்தான்—ஒரு தேசீய இனம்** என்ருெரு புத்தகம் எழுதியிருக்கிருர். அவர் கூறும் விஷயங்களாவன. (1) இந்தியா ஒரு நாடல்ல. பலவேறு மனிதச் சூழ்நிலை கொண்ட பல நாடுகள். (2) அங்கு வசிப்பவர்களை ஒரு தேசீய இனத்தினர் என்று சொல்ல முடியாதபடி அவ்வளவு இனவேறுபாடும் கலாசார வேறுபாடும் அங்கு வாழ்பவரிடைக் காணப்படுகிறது. 'தேசீய இனம்' என்ற சொல்லுக்குள்ள தற்காலப் பொருளின்படி அவர்கள் பல தேசீய இனங்களைச் சேர்ந்தவர்கள் என்றே கருதவேண்டும்.[4] இந்த வேறுபாடுகளைக் காட்டவந்தவர் குதூகல பரவசமடைந்து தன் சொற்களில் வருணனைப் போக்கையும் கையாண்டிருக்கிருர்:

3. *Confederacy of India*, by 'A Punjabi', pp. 150-1.
4. El. Hamza: *Pakistan - A Nation*, p. 7.

'இந்துமதம் பருவமழை உடைய இடத்தையும் இஸ்லாம் பாலைவன முடைய இடத்தையும் சேர்ந்தது.'[5] 'இந்தியாவில் ஒட்டகம் எங்கெங்கு பரவியுள்ளதென்பதைக் கவனிக்க ஆரம்பித்தால் ஒழிய, வடமேற்கின் தனித் தன்மையைக் காணமுடியாது.'[6] 'எண்ணங்கள் பாயும் எல்லாத் துறைகளிலும் பூகோளம், சரித்திரம், தத்துவம் எதுவாயினும் - ஒட்டகத்தோடு நாம் கொண்ட தொடர்புகள் எண்ணிறந்தன. நாகரிக வளர்ச்சிச் சரித்திரத்தின் ஒரு சிறந்த பகுதியை ஒட்டகத்தை மனத்துட்கொண்டு படித்துணரக்கூடும். தென்மேற்கு ஆசியாவிலிருந்து ஓர் இன எழுச்சி தோன்றி, அப்பொழுது தெரிந்திருந்த உலகப் பகுதியை எல்லாம் அடக்கி ஆண்டு, சரித்திர வளர்ச்சியில் ஒரு பெரிய மாறுதலைச் செய்தது. அம்மாறுதலைக் குறிக்கும் அடையாளமாக ஒட்டகத்தைக் கொள்ளலாம். அநேக நூற்றாண்டுகள் கழிந்தபின் வாழ்கின்ற நாம்கூட அரேபியப் புகழ் பரப்பும் வண்ணக் கொடிகளை நெடுந்தொலைவில் மங்கலாய்க் காண்கிறோம். நூற்றாண்டுகள் எனப்படும் இந்நாடக மேடையில் நாம் காண்பதென்ன? பாலை மணற் குன்றுகளிடையே ஒட்டகப் படைகள் திக்கு விஜயம் செய்கின்றன. அரேபியாவின் பெருமை நிறைந்த நாட்கள் கழிந்தொழிந்தன. எனினும், வறண்ட நிலப்பரப்புடைய அத்தனியுலகத்திலே ஒத்த சமயமும், கலாசாரமும் அமைந்து, அங்கு வாழ்கின்ற மக்களுக்கு ஒட்டகம் தோழனாக இன்னும் இருந்து வருகிறது. ஒட்டக நாடு சிமிட்டார் எனப்படும் வாட்கள், டம்போரின் பறைகள், மசூதிகள், தொழுகை கூறுவோர்கள் டும், மினரட் கோபுரங்கள் உள்ள நாடாக இன்னும் திகழ்கிறது.'[7] வடமேற்குப் பிராந்தியத்தைப் பிரிப்பதற்காக இவ் எழுத்தாளர் ஒட்டகத்தையும் இத்தகைய பிற பொருள்களையும் கொண்டு வருவது பொருத்தமற்றதென்பதை அவர் உணருவதாகத் தோன்றவில்லை. வடமேற்குப் பிராந்தியம் ஒட்டகங்கள் உள்ள நாடே. 'சிமிட்டார் வாட்கள், டம்போரின் பறைகள், மசூதிகள், தொழுகை கூறுவோர் டும், மினரட் கோபுரங்கள்' அற்ற நாடாகிய ராஜபுதனமும் ஒட்டகங்களில் குறைந்ததல்ல. இவ்விவாதம் சரியென்று நிலைநாட்டும் பட்சத்தில் கிழக்குப் பகுதியைப் பிரிப்பதற்குக் காரணமேயில்லை. அங்குள்ள பிராணி, தாவர இனங்களும், பசும் வயல்களும், இடைவிடாது பயங்கரமாக வீசும் பருவக்காற்றுகளும் உஷ்ணமண்டலத்தைச் சேர்ந்தவைகள். மலேயா தீபகற்பம் போன்ற உஷ்ணமண்டல நாடுகளிலும் முஸ்லீம்கள் இருக்கக்கூடாது.

அந்தந்த நிலப்பகுதியிலுள்ள வேற்றுமை காரணமாகவும், இன்னும் இதைப்போன்ற விஷயங்களுக்காகவும் வடமேற்கத்திய பாகிஸ்தான் வேண்டும் என்னும் வாதம் பலமற்றதென்பதை எப். கே. கான் துரானி காணத் தவறவில்லை. **பாகிஸ்தானின் அர்த்தம்** என்ற புத்தகத்தில் அவர், 'பாகிஸ்தானில் வாழ்ந்தாலும் சரி, இந்துஸ்தானில் வாழ்ந்தாலும் சரி, எல்லா முஸ்லீம்களும் ஒரே தேசத்தினர். பாகிஸ்தானிலுள்ள நாம், இந்துஸ்தானத்திலுள்ள நமது சமயத்தவரை நமது சதையின் சதையாகவும் இரத்தத்தின் இரத்தமாகவும் கருதவேண்டும்'[8] என்று கூறுகிறார்.

எல். ஹம்ஸாவின் விவாதத்தைப் பரிசீலனை செய்து அவர் எழுதுவதாவது: '**பாகிஸ்தான் - ஒரு தேசம்** என்ற நூலாசிரியர் தம்முடைய முழு

5. El. Hamza, op. cit., p. 45. 6. *ibid.*, p. 70.
7. *ibid.*, p. 72.
8. F. K. Khan Durrani: *The Meaning of Pakistan*, p. viii.

விவாதத்திற்கும், இந்தியாவின் இதர பாகங்களிலிருந்து வடமேற்கு மாகாணங்களாகிய பஞ்சாப், காஷ்மீரம், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், சிந்து, பலுசிஸ்தானம் ஆகியவை எவ்வித பூகோளத் தனி இயல்புகள் கொண்டுள்ளனவோ, அவைகளை ஆதாரமாகக் கொண்டு பேசுகிறார். சில மாகாணங்கள் இதர மாகாணங்களைக் காட்டிலும் அதிக மழையைப் பெறுகின்றன. சில மாகாணங்களின் முக்கிய உணவு கோதுமை; மற்ற மாகாணங்களில் அரிசி; பருவ மழைப் பிரதேசங்களிலோ பயிர் பச்சைகள் வளம் கொழிக்கும்; இதர பாகங்களில் பசும்புல்லும் அரிது. மாகாணத்திற்கு மாகாணம் பிராணி, தாவர வர்க்கங்கள் வேறுபடுகின்றன. வடமேற்கின் வறண்ட நாடுகள் ஒட்டகத்தின் சொந்த வீடு; தென்னாடு, அஸ்ஸாம், வங்காளம் ஆகிய நீர்வள நாடுகள் பெரிய யானைகளுக்குப் பிறப்பிடம். வறண்ட வடமேற்குப் பிராந்தியங்களிலுள்ள மக்களுக்கும், இதர பாகங்களில் காணப்படும் மென்மையும் கருப்பு நிறமுமுடைய மக்களுக்கும் பலவகையில் வேறுபாடுண்டு. பல பல மக்களினம் வாழ்கின்ற இந்தியாவைப் போன்றதொரு நாட்டிலே, பல அட்ச ரேகை, தீர்க்க ரேகைகளுக்கடங்கிய நாட்டிலே, கடலாலும், மலையாலும், பாலைவனத்தாலும் பலவகை மாறுதலுறும் நாட்டிலே மக்களுள்ளும் உற்பத்தியிலும் வேறுபாடுகள் இருப்பது இயற்கை; தவிர்க்க முடியாதது. முஸ்லீம் இந்தியாவின் அரசியலுக்கு இக்காரணங்கள் சற்றும் தொடர்பற்றவை. மேலும், இத்தகைய வாதத்தைப் பின்பற்றினால், பாகிஸ்தானுக்கு வெளியில் வாழும் பெருவாரியான முஸ்லீம்களை நாம் கைவிட வேண்டியது தான். அவர்கள் உடுப்பதும் உண்பதும் நம்மைப்போல் அல்ல. நாம் அவர்களை அன்னியர்களாக நடத்தவேண்டி ஏற்படும். அவர்களோடு சமுதாயத் தொடர்பு வைத்துக்கொள்ள முடியாது. அத்தகைய ஏற்பாட்டைப் பாகிஸ்தானிலுள்ள எந்த முஸ்லீமும் ஒரு நிமிஷமேனும் நிலைகொள்ளச் சம்மதிக்க மாட்டான். உண்மையில், பஞ்சாபிலுள்ள ஒவ்வொரு முஸ்லீமும் இது நினைக்கவும் கூடாத காரியம் என்று உதறித் தள்ளிவிடுவான்.' [9]

இக் கோட்பாட்டை நிரூபிக்க இதரரும் தேச சரித்திரங்களிலிருந்து அநேக பகுதிகளை எடுத்துக் காட்டும் சிரமத்தை மேற்கொண்டிருக்கின்றனர். அவர்களுள் முக்கியமாக டாக்டர் பி. ஆர். அம்பேத்கார், தம்முடைய **பாகிஸ்தானைப் பற்றிய சிந்தனைகள்** என்ற புத்தகத்தில், இந்தியாவில் படையெடுத்தும், ஆண்டும் வந்த முஸ்லீம் மன்னர்கள் எவ்வாறு இந்துக் கோயில்களை அநாசாரப்படுத்தினார்கள்? அங்குள்ள விக்ரகங்களை உடைத்துக் கோயில்களைப் பள்ளிவாசல்களாக்கினார்கள்? எவ்வாறு இந்துக் கோயில்களிலுள்ள பொருள்களை மற்ற இடங்களில் மசூதி கட்டுவதற்கு அப்புறப்படுத்தினார்கள்? எவ்வாறு தங்களுக்குட்பட்ட இந்துக்களை 'ஒன்று, குர் ஆனைத் தழுவு அல்லது வாளுக் கிரையாகு' என்று நிர்ப்பந்தம் செய்தார்கள்? எவ்வாறு மகமதிய மதத்தைத் தழுவ மறுத்த ஆயிரக்கணக்கான இந்துக்களைச் சித்திரவதை செய்து கொன்றார்கள் என்பன போன்ற பகுதிகளையே எடுத்துக் காட்டுகிறார். இதன்மூலம் இவர்கள் நாம் உணரவேண்டும் என நினைப்பது, இந்துக்கள் இந்த அட்டூழியங்களை மறக்கவில்லை, மறக்கவுமாட்டார்கள்; இவை ஆறாத வடுக்களாக மனத்திலுறைந்துவிட்டன என்பதாம். மசூதிக்கு முன் மேளம் வாசிப்பது, பசுக்கொலை செய்வது முதலிய அற்ப காரியங்களும் இந்து முஸ்லீம் கலகத்திற் கேதுவாயிருப்பது, பழைய பகைமை இன்னும் நிலவு

9. Durrani, op. cit., pp. 1-2.

வதைக் காட்டுவதாகவும் கூறப்படுகிறது. இரு வகுப்பாரும் பிரிட்டிஷாருக்குப் பொது அடிமைகளாகயிருக்கும் நிலையும், அவர்களது கடுமையான ஆட்சியும் இவர்களிடை நெருக்கத்தை உண்டாக்கவில்லை.

இந்தியாவை இந்துப் பிராந்தியம் முஸ்லீம் பிராந்தியம் என்று பிரிவினை செய்யவேண்டுமென்று வாதாடுபவர்களின் நோக்கம் இந்தியாவின் சில பகுதிகளை முஸ்லீம் ஆட்சியின் கீழ் வைப்பதே. அதற்கு, மேற்கூறிய வாதங்களைக் கொண்டு வருவது ஏனென்பது தான் நமக்கு விளங்கவில்லை.

பிற மதத்தினிடம் அநாசாரச் செயல்களையும், கலையைப் பொறுத்த மட்டிலும் நாசகாரத்தனத்தையும், இஸ்லாம் அனுமதித்து ஊக்கியதென்று சொல்லப்படுகிறதா? அக்காரியங்களை அனுமதித்து ஆதரித்ததென்ருல், இப்பொழுது அப்படிச் செய்வதினின்றும் நின்றுவிட்டதா? இவ்வகையில் இஸ்லாம் தனது மனப்போக்கை மாற்றிக்கொண்டதென்பதற்கு என்ன அத்தாட்சி இருக்கிறது? அரேபிய தீர்க்கதரிசியின் சமயக் கோட்பாட்டிற்குச் சிறிதும் சம்பந்தமற்ற நோக்கம்கொண்ட பேராசைக்காரர்கள் இஸ்லாமைத் தழுவி, இஸ்லாம் என்னும் போர்வையின் மறைவில் செய்த அட்டூழியங்களாக இவை இருப்பின், வருங்காலத்திலும் இஸ்லாமைத் தழுவுபவர்கள் அத்தகைய பேராசைகொண்டு கிளம்பமாட்டார்கள், தங்களுடைய அதிகாரத்தை அவ்வாறு பிரயோகிக்கமாட்டார்கள் என்பதற்கு என்ன ஆதாரம், நம்பிக்கை இருக்கின்றன? சில பகுதிகளை ஒதுக்கிப் பிரித்து அங்கு முஸ்லீம் ஆட்சியை நிறுவவேண்டும் என்பதெல்லாம், அங்கு கைவிடப்பட்ட முஸ்லீம் அல்லாதாரை என்றென்றும் வதைப்பதற்கா? அதுதான் அந்தரங்க நோக்கமாயின், இத்தகைய திட்டத்திற்கு எந்த ஒரு முஸ்லீமல்லாதாரும் ஒத்தூதுவாரென்று எதிர்பார்க்க வேண்டாம்.

அவையெல்லாம் இஸ்லாமின் போதனை அல்ல. அவை இஸ்லாமுடைய அடிப்படைக் கொள்கைகளான அமைதி, சகிப்புத்தன்மைக்கு முரணுனவை என்பது உண்மை. ஆனுல், முஸ்லீம் முஸ்லீம் அல்லாதார் ஆகிய இரு சாரார்களுக்கிடையே இப்பழைய சரித்திரக் குப்பைகளைக் கிண்டிக் கிளறிக்கொண்டிருப்பது விரும்பத் தகுந்ததா? எல்லோருடைய நன்மையையும் கருதுமிடத்து இவைகளை மறப்பது நல்லதல்லவா? மறக்க வேண்டியவைகளைக் கிண்டுவதென்ருல் பழைய பகைமைக்குத் தூபம் போடாமல் எவ்வாறு இருக்கமுடியும்? இஸ்லாம் மதம், தான் பரவுவதற்குத் தூய்மையும், மேன்மையுமான முறைகளை நம்பி இருந்தது; இருக்கிறது. அட்டூழியச் செயல்களை இஸ்லாம் அனுமதிக்காதபோது, அதன் பேரால் கொடுமை இழைத்தவர்கள் தங்களுடைய ஆதிக்கத்தைப் பெருக்குவதற்காக அவ்வாறு செய்தார்களேயன்றி, இஸ்லாமைப் பரப்புவதற்காக அல்ல. இத்தகைய செயல்களால் இஸ்லாம் மதம் மாசடைந்தது முஸல்மான்களது சரித்திரத்தில் வெட்கப்படத்தக்க படலமாகும். தான் பரவுவதற்கு இஸ்லாம் மதம் அட்டூழியங்களை அனுமதிக்கிறதென்ற அச்சம், மற்ற மதத்தாரிடமிருந்து அகற்றப்பட்டு, நல்லெண்ணமும் சாந்தமும் தோன்றி வளர்ந்தோங்கும் புதிய சகாப்தம் வரவேண்டும். ஆகவே, இரு தரப்பினருக்கும் ஒவ்வொரு வகையில் மறக்கத் தக்கவை மேற்கண்டவை.

இவ் எடுத்துக்காட்டுகளால் நிரூபிக்க வந்த விஷயங்களை முஸ்லீம் ஆட்சியின் அம்சம் என்று முஸ்லீம்களும் இதரரும் கொஞ்சமாவது ஒப்புக்கொள்ளு

வார்களானால் பண்டைய நாளில் கொடுமை செய்தோர்கள் எந்த உரிமையால் அதிகாரம் ஏந்திக் கொடுமை செய்தார்களோ, அதே முறைகளால் அவ்விதச் செயல்கள் புரிவதற்கு முஸ்லீம்கள் உரிமை பெறவேண்டியவர்க ளாயிருக்கிறார்கள். இதர மதத்தார் ஒப்பந்தமோ சம்மதமோ அளித்ததன்மூலம் அக்காலத்திய முஸ்லீம்கள் இந்த உரிமையையும் அதிகாரத்தையும் பெறவில்லை. முற்கூறிய சம்பவங்களையும் மேற்கோள்களையும் கொடுத்த அதே சரித்திரம் தான் இதையும் எடுத்துக் காட்டும். நூற்றுக் கணக்கான ஆண்டுகள் கடந்த பின்பும், அவ்வாண்டுகளில் நடைபெற்ற செயல்களும், உலகப் போக்கிலுள்ள தற்கால நிலைமைகளும், இந்தியாவில், முஸ்லீம் முஸ்லீம் அல்லாதவரிடையே ஒருவர்பால் ஒருவர் கொண்டுள்ள மனோபாவத்தில் ஒருவித மாறுதலையும் ஏற்படுத்தாவிட்டால், முஸ்லீம் அல்லாதார் மாத்திரம் மாறவேண்டும் என்று ஏன் எதிர்பார்க்கப்படுகிறது ? இந்திய முஸ்லீம்கள் உள்பட, உலக நாகரிக மக்களனைவரும் சேர்ந்து கண்டிக்கும் தீங்குகளுக்கும் அட்டூழியங்களுக்கும் முஸ்லீம் அல்லாதார் ஏன் உட்பட வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறது? ஒன்று, இச்செயல்கள் இஸ்லாமியச் சட்டப் பகுதியா யிருக்கவேண்டும், அல்லது அதில் சேராததாக இருக்கவேண்டும். 'முழுக்க முழுக்க இஸ்லாமியப் போக்கிலேயே உலகப் புரட்சியை உண்டாக்க வேண்டுமென்ற இலட்சியத்தைக்கொண்ட ஓர் உன்னத இஸ்லாம் ராஜ்யத்தை'[10] ஏற்படுத்துவதன் மூலம், பழைய நிலைமைகள் திரும்பவும் தலைகாட்டுவதற்கு முஸ்லீம் அல்லாதார் இம்மியும் இடங்கொடார். முன்னைய மேற்கோள்கள் பகிரங்கப்படுத்துவது போல, இம் முஸ்லீம் ராஜ்யம் தன் பழஞ் சரித்திரத்தை மீண்டும் திருப்பக் கிளம்பியதாகவே தோன்றுகிறது. சரி, இஸ்லாமியச் சட்டங்களில் இக்காரியங்கள் இடம் பெறவில்லை எனில், பழஞ் சரித்திரங்களுக்குப் புத்துயிர் கொடுப்பதில் பயன் ஒன்றுமில்லை. அவைகள் முஸ்லீம் அல்லாதாருடைய மன எரிச்சலைத் தான் கிளப்பும். பிரிவினையை ஒப்புக் கொண்டாலும் சரி, தள்ளிவிட்டாலும் சரி, மேலும் தொடர்ந்து மன எரிச்சலைக் கிளப்புவது எவருடைய நோக்கமாயு மிராது. பழைய காரியங்களால், இந்துக்களும் முஸ்லீம்களும் சேர்ந்து வாழ இயலாது. ஆகவே, அவர்கள் பிரிந்து வாழச் சம்மதிக்க வேண்டும் என்பது இதன் நோக்கமென்றால், இதன்மூலம் அதற்கு எதிரிடையான பலன்தான் ஏற்படும் என்பதை மனத்தில் வைத்துக்கொள்வது நல்லது. தங்களுடன் வாழும் பிற மதத்தினர் மீதும் முஸ்லீம்கள் இதே கொடுமைகளைச் செய்ய நேரிடும் என்ற அதேகாரணத்திற்காக, முஸ்லீம் பிராந்தியங்களில் உள்ள இந்துக்களை விட்டுப் பிரிய இதர பாகத்திலுள்ள இந்துக்கள் மனமிசையார். ஆகவே, இப்பிரசினையைச் சாத்தியமான முறையில் தீர்த்துவைப்பதற்கு இத்தகைய மேற்கோள்களும், எடுத்துக் காட்டுகளும் பயனற்றவை.

இம்மேற்கோள்களின் நோக்கமும் பயனும் ஒருபுறமிருக்க, பண்டைக் காலத்திலோ அல்லது தற்காலத்திலோ எழுதப்பட்ட உதவாக்கரைப் புத்தகங்களிலிருந்து இத்தகைய பகுதிகளை அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பொறுக்கிப் போடுவதற்கு அதிக வுழைப்போ, நுண்ணறிவோ தேவையில்லை. சரித்திர நூல்கள் சமீப காலம் வரையும், அரசர்கள், நாடு பிடித்தவர்கள், இவர்களுடைய நற்செயல்கள் தீச்செயல்கள், அவர்கள் தொடுத்த போர்கள் வெற்றிகள், அவர்களது தர்பார்ச் சிறப்புகள் அரண்மனைச் சூழ்ச்சிகள்

10. 'A Punjabi', op. cit., pp. 269-70.

முதலியவற்றைப் பற்றியே பெரும்பாலும் கூறிவந்துள்ளன. மிகமிகச் சாதாரண மனிதன் வயலில் ஏர், மண்வெட்டி. கொண்டு பாடுபடுவான்; அல்லது தன் குடிசையிலேயே ராட்டை, தறி, கோடரி, உளி, அரிவாள், சம்மட்டி, ஊசி நூல் போன்ற கருவிகளைக் கொண்டு தொழில் செய்து தெய்வமே யென்று நிம்மதியாக. எளிய வாழ்வு வாழ்வான். மேற்கண்ட நூலாசிரியர்கள் இவர்களைக் கவனிக்கவேயில்லை. பொது மக்களின் வாழ்க்கை வரலாற்றில் குருமார், பக்தர்கள், விஞ்ஞானிகள், முனிவர்கள், கற்றோர், சீர்திருத்தவாதிகள், கவிகள், தத்துவஞானியர், ஓவியர், பாணர் முதலானவர்களுடைய வாழ்க்கைகளுக்கும் செயல்களுக்கும் உரிய முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. காபிர்களைத் துன்புறுத்துவதன் மூலம்தான், முஸ்லீம் அரசர் அல்லது நாடுபிடிப்போரின் மத ஆர்வத்தை நிரூபிக்க முடியும் என்ற தவறான எண்ணங் கொண்டவர்கள் இந்நூலாசிரியர்கள். பெரும்பாலும் இவர்கள் அவ்வரசர்களுடைய நிழலில் வாழ்ந்தவர்கள், அவர்களுக்குக் கடமைப்பட்டவர்கள்; பிற முஸ்லீம் அரசர்கள் இவ்வாறு கொடுமை செய்வதற்கும், தோல்வியடைந்தவர்கள் பயந்து ஒடுங்குவதற்கும் ஏதுவாக இத்தகைய சம்பவங்களை விரிவாக எழுதுவதால், தாங்களும் இஸ்லாமுக்குச் சேவை செய்கிறோம் என்று நினைத்தார்கள். இச்சம்பவங்கள் மிகைப்படுத்தியோ, புனைந்தோ கூறப்பட்டிருக்கிறதென்று யாரும் தள்ளிவிட வேண்டுமென்பதில்லை. எழுதப்பட்ட சரித்திரத்தில் குறிப்பிடத் தக்கவை இவை மாத்திரமல்ல என்பதை மனத்துட் கொண்டால் போதுமானது. எவ்வாறு இந்துக்களும் முஸ்லீம்களும் ஒருவருக்கொருவர் தமக்குற்ற இன்ப துன்பங்களைப் பங்கிட்டு அமைதியாக நூற்றுக்கணக்கான ஆண்டுகள் வாழ்ந்து வந்தார்கள் என்பதையும், எவ்வாறு முஸ்லீம் சித்தர்களும் இந்து சாதுக்களும் இவ்விரு சமூகத்தாருடைய பழக்க வழக்கங்களையும், மதச் சடங்குகளையும், வாழ்க்கைகளையும், சுற்றுப்புறங்களையும் மாற்றி இருக்கிறார்கள் என்பதையும், எவ்வாறு முஸ்லீம் வீடுகளில் கொண்டாடப்படும் பிறந்தநாள், கல்யாணச் சடங்குகள் இந்து வீடுகளில் நடைபெறுவதை ஒட்டியிருக்கின்றன என்பதையும், எவ்வாறு வெவ்வேறு மாகாணங்களில் உள்ள முஸ்லீம்களுக்குள்ளும் சடங்குகளும் பழக்கங்களும் மாறுபடுகின்றன என்பதையும், முஸ்லீம் படையெடுப்பாளர் அல்லது அரசர்களுடைய வாளுக்கும் நெருப்புக்கும் அல்லாமல் முஸ்லீம் சாதுக்களுக்கே பெருவாரியான இந்துக்களை மதமாற்றிய பெருமை சாரும் என்பதையும் விவரித்தால் இத்தகைய சரித்திரங்கள் முஸ்லீம் அரசர்களுடைய அட்டூழியச் சரித்திரங்களைக் காட்டிலும் பெரிதும் விரியும். இம்முறையில் எழுதப்படும் புத்தகங்களுக்கும், முந்திய மேற்கோள்களை ஈந்து உதவிய புத்தகங்களுக்கு முள்ள விகிதா விகிதம், ஒரு நாட்டிலுள்ள பொது ஜனத் தொகைக்கும் அதே நாட்டில் வாழ்ந்த அரசர்கள், மந்திரி பிரதானிகள், கவர்னர்கள், அந்தப்புரங்கள், அரண்மனைகள் எல்லாம் கூட்டி வந்த தொகைக்கும் உள்ள விகிதமாகும். மேலும், ஒரு சமூகத்தார் மறு சமூகத்தாரோடு அமைதி, அன்பு, உதவி, சகிப்பு, உறவு முதலிய பண்பாட்டை மேற்கொண்டு வாழ்ந்த நாட்களோடு அவர்களிடையே சண்டை சச்சரவு, கொலை கொள்ளை, கலகம் நடைபெற்ற நாட்களை ஒப்பிட்டால் போதும். இன்றைக்கும்கூடப் பத்திரிகைகளில் அக்ரமச் செய்திகளைத் தாங்கிய பக்கங்கள் நல்ல செய்திகளைத் தாங்கும் பக்கங்களைவிட மிஞ்சி இருக்கும். ஐநூறு ஆண்டுகட்குப் பின்னர், இத்தகைய பத்திரிகைச் செய்திகளை ஆதாரமாகக்

கொண்டொருவர் சரித்திரம் எழுதப் புகுந்தால், அல்லது இச்செய்திகளை எடுத்துக் காட்டினுல், அந்த ஆதாரத்தை வைத்து பிரிட்டிஷாரின் சாந்த, சுக ஆட்சியிலும் ஒரு நாளாவது அமைதி இருந்ததில்லை என எளிதில் முடிவு கட்டலாம். சரியான ஆதாரங்கள் போதுமான அளவு இல்லாததால், சமூக கலாசார இயக்கங்களைப் பற்றியும், அவைகள் எவ்வளவு தூரம் மக்கள் வாழ்வில் ஆழமாகப் பதிந்து அமைதியாக உள்ளும் புறமும் உருவாக்கின என்பது பற்றிய முழு விவரமும் அடங்கிய நூல் எழுதுவது எளிதன்று.

## 2. தேசிய இனத்தன்மையும் ராஜ்யமும்

இந்தியா என்று நாம் அழைக்கும் நிலப்பகுதியில் வாழ்கின்ற இந்துக்களோடும் இதர மக்களோடும் முஸ்லீம்கள் வேறுபட்ட தேசிய இனத்தினராவர் என்று கொள்ளப்படுகிறது. அக்கொள்கையின் அடியாக, இந்தியாவின் வடமேற்கு, வடகிழக்கில் தனித்தனி சுதந்திர முஸ்லீம் ராஜ்யங்களை நிறுவ வேண்டுமென்று கோரப்படுகிறது. ஆகவே, தேசிய இனம் என்ருல் என்ன என்பதைத் தெளிவாக அறிந்து கொள்ளுதல் அவசியம். நிலப் பரப்பில் இந்தியா ஒரே நாடு என்பதை மறுக்க முடியாது. ஏனென்ருல் நிலப் பரப்பை மனிதனுல் மாற்ற முடியாது. திரு. எப். கே. கான் துரானி இதைத் தெளிவுபடக் கூறுகிருர்: "கடலாலும் மலைகளாலும் சூழப்பட்டுத் தெளிவாக ஒரு தனி தேசமாக ஆக்கப்பட்ட நாடு இந்தியாவைப்போல வேருென்றில்லை" என்று திரு. பெனிபிரசாத் கூறுவதை 'நான் அப்படியே ஒப்புக் கொள்கிறேன். ஆங்காங்குள்ள மக்களினம், சீதோஷ்ண நிலை, மண்ணியல் முதலியன பலவகையில் வேறுபட்டிருந்தாலும், சுலைமான் குன்றுகள் முதல் அஸ்ஸாம் குன்றுகள் வரையும், வட இமயம் முதல் தென் குமரி வரையும் இந்தியா ஒரே நிலப்பாங்காகும்.'[1] அப்படியானுல் தேசம் என்பது என்ன? தேசமாய் அமைவதெது? பிரிவினை ஆதரவாளர்கள் இக்கேள்வியைக் கேட்டுக் கொண்டு பதிலும் கூறி இருக்கின்ருர்கள். தங்களுடைய பதிலுக்குகந்த மேற்கோள்களைப் பெரிய பெரிய நூலாசிரியர்களுடைய வாசகங்களிலிருந்து எடுத்துக் காட்டுகிருர்கள். இதை நன்கு பரிசீலனை செய்துள்ள திரு. துரானியின் முடிவுகள் குறிப்பிடத்தக்கன: (1) 'நிலப்பாங்கில் இந்தியா ஒன்ருனுலும் அதன் மக்கள் ஒன்ருகார்; ராஜ்யங்களையும் தேசங்களையும் ஆக்குவதில் மக்களே அன்றி மண்ணியல் முக்கியமல்ல...ரேனுனின் வார்த்தைகளின் வண்ணம் ஆறுகளின் பாதையாலும், மலைத் தொடர்களின் போக்காலும் மனிதனின் உயிர்த் துடிப்பை மடக்கி யொடுக்க வொண்ணுது. போருக்கும், உழைப்புக்கும் நிலம் களமாகிறது. மனிதனே அதற்கு உயிர் கொடுத்து உதவுகிருன். ஜனங்கள் என்ற புனிதப் பொருளின் ஆக்கத்திற்கு மனிதனே எல்லாமு மாகின்ருன். வேறெவ்வித இயற்கைப் பொருளும் அவனுக் கீடாகாது. (2) உண்மையில், தேசங்களை ஆக்குவது மண்ணியல் அல்ல; அதே போல ஜாதிகளும் அல்ல...(3) மதத்தை அரசியலோடு கலக்கக் கூடாது என்ற கருத்தை இருபது வருடங்களாக இந்துத் தலைவர்கள் பரப்பி வந்துள்ளனர்; அரசியல் அடிப்படை மீதுதான் ஓர் ஐக்ய தேசத்தை அமைக்கவேண்டு மென்றும் கூறி வந்துள்ளனர். அரசியல் அடிப்படையில் மாத்திரம் ஒரு தேசத்தை உண்டாக்க முடியுமா? அரசியல் தத்துவநூலார்,

1. F. K. Khan Durrani: *The meaning of Pakistan*. p. 2.

ஒரு தேசத்தை உண்டாக்குவதற்கு வெறும் அரசியல் சம்பந்தங்கள் மாத்திரம் போதா என நினைக்கின்றனர்.'[2] தன் கோட்பாட்டிற் காதரவாகப் பிரைஸ் பிரபுவையும், ஸிட்ஜ்விக் பேராசிரியரையும் மேற்கோள் காட்டுகிருர். ஸிட்ஜ்விக் எழுதுகிருர்: 'ஓர் அரசியல் சமுதாயத்தில் வாழும் மக்களிடை, நாம் ஒரே அரசாங்கத்திற்குக் கீழ்ப்பட்டவர்கள் என்ற உணர்ச்சி ஒன்றுதான் ஒற்றுமை உணர்ச்சியை உண்டாக்குகிறது என்ருல், அவ்வரசியல் சமுதாயம் திருப்திகர மற்றது; நிலையற்றதுமாகும். வெளிநாட்டுப் போர்களாலும், அதிருப்தியாலும் ஏற்படும் தாக்குதல்களையும் அதிர்ச்சிகளையும் சமாளிக்கக் கூடிய ஒற்றுமைச் சக்தி இத்தகைய சமுதாயத்தில் குறைந்திருக்கிறது. ஆகையினல், "தேசீய இனம்" என்ற சொல் இன்னும் ஏதோ சில உறவுகளைப் புலப்படுத்துவது போலத் தோன்றுகிறது. அவ் உறவுகளாலும் ஒரு நாட்டு மக்கள் ஒன்ருக்கப்பட்டிருத்தல் விரும்பத் தகுந்தது.'[3] ஸிட்ஜ்விக் மேலும் எழுதுகிருர்: 'ஒரு ராஜ்யம் என்பதன் தற்காலக் கருத்தும், தேசீய இனம் என்பதும் ஒன்றே. அதற்கு இன்றியமையாதது என்ன என்று பொதுவாகப் பார்க்கப் போனல், அதில் சேர்ந்திருப்போர்கள், தாங்கள் ஓர் அரசாங்கத்தின் கீழ் இருக்கிரேம் என்று எண்ணுவதோ டல்லாமல், ஒருவர்க் கொருவர் சொந்தமென்றும், ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர்களென்றும் உணர வேண்டும். அப்படி யிருந்தால்தான், அவர்கள் ஆளும் அரசாங்கம் போரினலோ புரட்சியாலோ அழிந்தாலும், பின்னும் அவர்கள் நெருங்கி வாழ முயலுவர். வேறு என்னதான் குறை யிருந்தாலும், இந்த ஓர் உணர்ச்சி அவர்களிடை உள்ளதாயின், அவர்களை ஒரு 'தேசீய இன''மென்று கருதுகிரேம்.'[4] பிரைஸ் பிரபு தேசீய இனத்தன்மையை, 'சில மன உணர்ச்சிகளால் இழுக்கப்பட்டு ஒன்றுசேர்க்கப்பட்ட மனிதக் கூட்டம்' என்று கூறுகிருர். மேலும் அவர் சொல்லுவதாவது: 'அவ்வுணர்ச்சிகளில் முக்கியமானவை இன உணர்ச்சியும், மத உணர்ச்சியும் ஆகும். அதோடு பொதுமொழி பேசுதல், பொது இலக்கிய உடைமை, முன் காலத்தில் அடைந்த பொதுவான காரியசித்திகள் அல்லது கஷ்டங்களின் ஞாபகங்கள், பொது மனேபாவங்கள், பொது லட்சியங்கள், ஆர்வங்கள் ஆகிய இவற்ருல் தோன்றும் ஒரு குலத்தோரென்ற அறிவும் சேரும். சில சமயங்களில், இத்தனை உணர்ச்சிகளும் நின்று நிலவி அக்கூட்டத்தின் அங்கத்தினர்களை ஒன்று சேர்த்திருக்கக்கூடும்; சில சமயங்களில், இவ்வுணர்ச்சிகளில் ஒன்ரே பலவோ இல்லாமலும் இருக்கலாம். எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக இவ்வுணர்ச்சிகள் இருக்கின்றனவோ அவ்வளவுக் கவ்வளவு ஒற்றுமை உணர்ச்சியும் பலமாக இருக்கும். இவ்வொற்றுமைச் சங்கிலியில் எத்தனை வளையங்கள் இருக்கின்றன என்பது முக்கியமல்ல. ஒவ்வொரு வளையமும் எவ்வளவு வலுவான தென்பதுதான் முக்கியம்.'[5] இன்னும் சில மேற்கோள்கள் காட்டிவிட்டுத் திரு. துரானி இந்த முடிவுக்கு வருகிருர்: 'தேசீயத் தன்மை உண்மையில் ஓர் உணர்ச்சி சம்பந்தமான விஷயம்; வெறும் மனநிலைமை.'[6] இந்தக் கருத்தை டாக்டர் அம்பேத்காரும் ஆதரிக்கின்ருர். அவருடைய வார்த்தைகள்:—'இது ஒருவகையான இன உணர்ச்சி. இவ்வுணர்ச்சியைக் கொண்டவர்களிடையே பொருளாதார சச்சரவுகள், சமூக ஏற்றத்தாழ்வுகள் இருந்தாலும், அவைகளை மீறியும் அது அம்மக்களை ஒன்றுபடுத்துகிறது; வேறு வகையான உணர்ச்சியைக் கொண்டவர்களையும் பிரித்துவிடுகிறது.'[7]

2. Durrani, op. cit., pp. 4-6. 3. *ibid.*, p. 7. 4. *ibid.*, p. 9.
5. *ibid.*, p. 8. 6. *ibid.*, p. 11. 7. *ibid.*, p. 12.

ஆகையால் திரு. துரானியின் கடைசியான முடிவு; '(4) இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கு மிடையே இன உணர்ச்சி இல்லவே இல்லை. அவர்கள் ஒரேயிடத்தில் ஒன்ருக உட்கார்ந்து சாப்பிடுவதில்லை. அவர்களுக்குள் கலப்பு மணம் கிடையாது. ஒருவருடைய உணவு மற்றவருக்கு அருவருப்பாகும். முஸல்மான் தொட்டாலே இந்து தீட்டாகி விடுகிருன். பொதுவான இன உணர்ச்சியைத் தோற்றுவிக்கக்கூடிய சமூகத் தொடர்புகள் கிடையாது. ஆகவே, இவ்விரு இனங்களும்கூடி ஒரே சமுதாயமாக மாறுதல் மனேதத்துவப் போக்கில் இயலாதகாரியம் என்பது உண்மை.'[8]

தேசியத்தைப் பற்றிய இந்தக் கருத்தும், கடந்த இரண்டு அல்லது மூன்று நூற்ருண்டுகளாக வெளியிடப்பட்ட தற்காலக் கருத்தேயாகும். ஒரு தேசிய இனம் என்று கருதப்படுகிற கூட்டங்களில் பிரைஸ் பிரபு அல்லது ஸிட்ஜ்விக் பேராசிரியர் குறிப்பிடும் அம்சங்கள் ஏறக்குறையக் காணப்படும் பொழுது, அக்கூட்டங்களில் ஒவ்வோர் அம்சமும் இருக்கிறதா, இருந்தால் எந்த அளவில் இருக்கிறது, ஆகவே, தேசிய இனங்களென்று அழைக்கலாமா என்றெல்லாம் துருவுவது சரியல்ல. இவ் அம்சங்கள் ஒன்றை ஒன்று பாதிப்பதாலும், அவை எச்சரித்திரக் கோப்பில் இபங்கினவோ அச்சரித்திரக் கோப்பின் செயற்கையாலும் ஏற்பட்ட மொத்த பலாபலனே தேசியத்தை நிர்ணயிப்பது. ஸ்டாலின் எடுத்துக் காட்டியிருப்பதுபோல ஒரு தேசிய இனமென்பது ஒரு குறிப்பிட்ட சமூகம். அது ஒரு குலத்தவராகவோ அல்லது குழுவினராகவோ இருக்கவேண்டுமென்பது அவசியமில்லை அது தற்செயலாகத் திடீரெனக்கூடி மறையும் தாறுமாருன கூட்டமுமல்ல. ஆனல், அது நிலையான ஜனசமூகம். ஒரு தேசிய இனத்தின் சிறப்பியல்புகளில் பொது மொழியும் ஒன்ருகும். அதைப் போன்று பொது நாடும், பொதுவான பிரதேசமும் ஒரு தேசிய இனத்தின் சிறப்பியல்புகள். பொருளாதாரப் பொதுவாழ்வு மற்ருெரு சிறப்பியல்பு. இவைகளைத் தவிர, ஒரு தேசிய இனம் தனக்கே உரிய ஆத்மீக அமைப்பையும் பெற்றிருக்கும். இதுவே தேசிய மனேபாவம் என்று கூறப்படும். அத் தேசிய மனேபாவத்தை அதன் கலாசாரத்தில் காணலாம். ஸ்டாலினது கருத்துக் கிணங்க, 'சரித்திர பூர்வமாகத் தோன்றிய பொதுவான மொழி, பிரதேசம், பொருளாதார வாழ்வு, மனேபாவம், பொதுக் கலாசாரம் உடைய உறுதியான சமூகமே ஒரு தேசிய இனம்.'[9]

ஒரு ராஜ்யத்துக்கும் தேசிய இனத்திற்கும் உள்ள வேறுபாட்டை நாம் தெளிய வேண்டும். இவை இரண்டும் ஒன்றைக் குறிப்பன அல்ல. ஒன்றுக்கு மேற்பட்ட பல தேசிய இனங்களைக் கொண்ட ராஜ்யங்களை முற்காலத்திலும் பார்த்திருக்கிருேம், இப்போதும் காண்கிருேம். இவ்விதமே கனடாவில் வாழும் ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் இரு வேறு தேசிய இனத்தைச் சேர்ந்தவர்களாக இருப்பினும், ஒரு ராஜ்யமாக இருக்கின்ருர்கள். தென் ஆப்பிரிக்காவிலுள்ள ஆங்கிலேயரும் போயரும் ஒரு கொடிய யுத்தத்திற்குப் பிறகு, ஒப்பந்தம் செய்துகொண்டு ஒரு தேசமாக இருக்கிருர்கள். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் எத்தனையோ தேசிய இனத்தைச் சேர்ந்தவர்கள் ஒரு ராஜ்யத்தைச் சேர்ந்தவர்களாக வாழ்கிருர்கள். ரஷ்யாவில் உள்ள சோவியத் குடியரசு அநேக தேசிய இனங்களைக் கொண்டதாக இருக்கிறது

8. Durrani, op cit., p. 13.
9. J. Stalin: *Marxism and the question of nationalities*, p. 6.

இவ்வினங்கள் நிர்வாக சுதந்திரம் பெற்றிருக்கின்றன. இவைகள், தங்களுக்கென்று படைகள் வைத்துக் கொள்ளவும், அந்நிய ராஜ்யங்களோடு நேரடியான தொடர்பு வைத்துக் கொள்ளவும், தங்களுடைய பிரதிநிதிகளை மாற்றிக் கொள்ளவும், உடன்படிக்கைகள் செய்து கொள்ளவும் உரிமை பெற்றிருக்கின்றன. ஸ்விஸ் ஜனங்கள் ஓர் அருமையான உதாரணமாக விளங்குகிறார்கள். ஸ்விட்ஜர்லாந்தை ஒட்டிப் பிரெஞ்சுக்காரரும், ஜெர்மனியரும், இத்தாலியர்களும் வாழ்கிறார்கள். இம் மூன்று தேசிய இனத்திற்கும் உறவு கொண்டவர்களே ஸ்விஸ் தேசத்தினராக அமைகின்றார்கள். ஸி. ஏ. மெக்கார்ட்னி குறிப்பிடுகின்றார்:[10] 'தேசியத் தன்மை என்ற வார்த்தை இந்த இரண்டில் ஒன்றைத்தான் குறிக்கும். இச் சொற்கள் பழக்கத்தில் ஒன்று போலத் தோன்றினாலும், தோற்றத்திலும் தன்மையிலும் முழுதும் வெவ்வேறானவை. துரதிர்ஷ்டவசமாக, இங்கிலாந்தின் சரித்திரப் போக்கு இவ் இரண்டையும் ஒன்றாகவே ஆக்கி விட்டது. தன்னை உபயோகப்படுத்துகிறவர்களுடைய கவனக் குறைவையும், தெளிவின்மையையும் புலப்படுத்துவதைப் போல இவ்விரு சொற்கள் இருக்க, இரண்டிற்கும் ஒரு சொல்லை வைத்தே சரிக்கட்டுகிறது. இருந்தாலும், தேசியத்தன்மை என்ற சொல்லுக்கு இருவித அர்த்தமுண்டு. ஒன்று, ஒரு தேசிய இனத்தைச் சேர்ந்தது என்பதும், மற்றொன்று, ஒரு ராஜ்யத்தின் அங்கத்தினராக இருப்பதும் ஆகும். இவை இரண்டும் வெவ்வேறு காரணங்களால் தோன்றியவை. இவைகளைத் தனித் தனிக் கருத்துக்களுக்கு உபயோகப்படுத்தக் கூடும்.'

'முந்திய அர்த்தத்தை நமது சௌகரியத்திற்காகத் தனி நபருக் குரிய தேசியத்தன்மை எனக் கொள்வோம். அது தனி மனிதனுக்குச் சொந்தமானதாயும், வழி வழிவந்த சிறப்பியல்புகளைக் கொண்டதாயும், வெளியில் காணக் கூடியதாகவும் இருக்கக் கூடும். ஒரு மனிதன் எந்த இடத்தில் வாழ்கிறான், அங்கு வாழ்பவர்களெல்லாம் இவனுடைய இயல்புகளைக் கொண்டிருக்கின்றார்களா, எந்த அரசாங்கத்தில் வாழ்கிறான், அவனுடைய சிறப்பியல்புகளைக் கொண்டவர்கள் கையில் அவ்வரசாங்கம் இருக்கிறதா என்ற விஷயங்களுக்கும் ஒரு தனி நபருடைய தேசியத் தன்மைக்கும் சம்பந்தமிருக்கவேண்டும் என்பது அவசியமல்ல. இத்தகைய சிறப்பியல்புகளைக்கொண்ட கூட்டத்தினர் ஒரு தேசிய இனமாக அமைகிறார்கள்.'[11] நாம் ஒரு தேசிய இனத்தினர் என்ற உணர்ச்சி, குலம், மொழி, மதம் ஆகிய மூன்று சிறப்பியல்புகளை அடிப்படையாகக் கொண்டிருக்கிறதென்று சொல்லலாம். அவைகளுக்கு அரசியல் சம்பந்தமான அர்த்தமோ, முக்கியத்துவமோ கிடையாது. ஆஸ்திரியா, ஸெக்கோஸ்லவோகியா, பிரேசில் அல்லது ஹானேலோலு ஆகிய எந்த நாட்டிலிருந்தாலும் சரி, ஒரு ஜெர்மானியன் ஒவ்வொரு துளி இரத்தத்திலும் பெர்லினில் உள்ள ஜெர்மானியனாகவே இருக்கிறான்.

'ராஜ்யமென்பது தனது அடிப்படையிலும் உண்மை நோக்கத்திலும் அடியோடு வித்யாசமானது. அது ஏராளமான ஜனங்களின் பொதுக் காரியங்களைக் கவனித்து அவர்களைக் காத்துவரும் வழக்கமுடைய கருவி. கூட்டமாகச் சேர்ந்து ஒரு ராஜ்யத்தில் வாழும் ஜனங்களுக்கும், இங்கிலாந்தில், துரதிர்ஷ்ட வசமாகத் தேசிய இனமென்றுதான் சொல்லப்படுகிறது; சற்று முன்பு

10. C. A. Macartney : *National States and National Minorities.*
11. *ibid.*, p. 6.

பரிசிலனை செய்த இயற்கையான தனி நபர்த் தன்மைக்கும் இதே பெயர் கொடுக்கப்படுகிறது. ஜனங்களின் காரியங்கள் எதுவரையும் பொது வானவை, அவைகளை எந்த அளவில் அரசாங்கம் கட்டுப்படுத்தலாம் என்பன போன்ற விஷயங்கள் காலத்துக்குக் காலம் மாறுபடுகின்றன ; தேசத்துக்குத் தேசமும் மாறுபடுகின்றன. சில இடங்களில், அரசாங்கத்தின் காரியம் தேசப் பாதுகாப்போடு நின்றுவிடுகிறது; அதைத் தாண்டி அப்பாற் செல்வதில்லை; மற்ற இடங்களில், மனிதனுடைய சொந்தக் காரியங்களில் தவிர வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் கை வைக்கிறது. ஒரு தனி நபருடைய தேசிய இனப் பிரிவைக் காட்டக்கூடிய கலாசாரக் காரியங்களை அரசாங்கம் தொடுவதில்லை ; அரசாங்கக் கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்ட விஷயங்களாகத்தான் அவை இன்றும் கருதப்படுகின்றன......இது ஒருபுறமிருக்க, அரசாங்கத்தின் பெரும்பாலான காரியங்கள் தனி மனிதனுடைய தேசியத் தன்மைக்கு முழுதும் சம்பந்தமற்றவை. எல்லோருக்கும் பொதுவான வீடாகிய தாய்நாட்டைப் பாதுகாத்தல், பொதுஜன அமைதியைக் காத்தல், குற்றங்களைத் தடுத்தல், தண்டித்தல், போக்கு வரவுகளை அமைத்தல், தேசத்தின் செல்வத்தைப் பேணுதல், ஒழுங்கு முறையாக வரி விதித்தல், வசூல் செய்தல் ஆகிய காரியங்கள் ராஜ்யத்தில் வாழ்கின்ற ஒவ்வொருவனுக்கும் தொடர்புடையனவே. அவன் கிறிஸ்துவை ஒப்புக்கொண்டாலும் சரி, மகமதுவை ஏற்றுக்கொண்டாலும் சரி, அவனுடைய தாய்மொழி ஆங்கிலம், வெல்ஷ் அல்லது ஐடிஷ் எதுவாக இருந்தாலும் சரி ; அரசாங்கத்தின் சரியான கடமைகளான இந்த அரசியல், சமூகக் காரியங்களுக்கு எல்லோரும் உதவ வேண்டும். அதனுல் எல்லோருக்கும் ஒன்றுபோல நன்மை உண்டு.'[12]

ஒரு ராஜ்யம் அமைவதற்குத் தனி நபரின் தேசியத் தன்மை முக்கியமான அம்சமாக இருந்தாலும், அது தான் எப்பொழுதும் இன்றியமையாதது, அல்லது முக்கியமானது என்று கூறுவதற்கில்லை. ஒரு தேசிய இனத்தை உண்டாக்குவதற்கு அரசியல் பற்றிய உறவுகள் மாத்திரம் போதா எனினும், அவைகளும் முக்கிய அம்சமாக அமைகின்றன என்பதை மறுக்க முடியாது. ஒரு நாட்டிற்கு வெளி நாட்டிலிருந்து நெருக்குதல் ஏற்படுமானுல், ஜூலியன் ஹக்ஸ்லி சொல்லுவது போல 'தேசிய உணர்ச்சி வளர்ச்சிக்கு ஒருக்கால் அதுவே மிக முக்கியமான காரணமாக அமையக் கூடும்.' இந்தியாவிலும் இப்படித்தான் ஏற்பட்டிருக்கிறது. இதைப்பற்றிப் பின்பு கவனிப்போம்.

தேசிய இன ராஜ்யங்களின் பிரசினை முதல் உலக யுத்தத்திற்குப் பிறகு, தீவிர ஆராய்ச்சிக் குட்படுத்தப்பட் டிருக்கிறது. அதுபற்றி ஏராளமான இலக்கியங்களும் எழுந்திருக்கின்றன. ஸி. ஏ. மெக்கார்ட்னியின் திட்டவட்டமான நூல் 1934ல் வெளியிடப்பட்டதி லிருந்து இவ் ஆராய்ச்சி தொடங்கியது. அப்புத்தகத்தி லிருந்துதான் முன் கண்ட மேற்கோள்கள் எடுக்கப்பட்டிருக்கின்றன. இவ் ஆராய்ச்சிகளின் பலனுக அவர் கண்ட முடிவுகளே, பின்னும் தீர்க்கமாக வலியுறுத்தப் படுகின்றன. அவையாவன: தனி நபர்த் தேசியத் தன்மைக்கும் அரசியல் தேசியத் தன்மைக்கும் வேறுபாடு கண்டு கொள்ள வேண்டும். ராஜ்யமும் தேசியமும் ஒன்ருக இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. தேசிய இனங்களைக் கொண்ட ராஜ்யங்களை அமைப்பது என்ற முயற்சி தோல்வியடைந்து, புதிய பிரசினையைக் கிளப்பி

12. Macartney, op. cit., pp. 11-12.

யிருக்கிறது. தேசீய இன ராஜ்யங்களின் அனுபவமும், அவை தங்களிடம் சிக்கிய சிறுபான்மைச் சமுதாயங்களை நடத்திய மாதிரியும் மகிழ்ச்சி ஊட்டத் தக்கதாகவோ ஊக்கமளிப்பதாகவோ இல்லை. தேசீய இன ராஜ்யங்களில் அகப்பட்டு விழிக்கும் சிறுபான்மைகளுக்குச் சர்வதேச சங்கம் அளித்த உத்தரவாதமும் பலன் கொடுக்கவில்லை; வீண் வார்த்தைகள் ஆயின. தேசீய இன ராஜ்யங்களை அமைப்பதனுல் சிறுபான்மைகளின் பிரசினையைத் தீர்த்துவிட முடியாது. ஒரே இனமக்களைக் கொண்ட ராஜ்யங்களை அமைப்பது முடியாத காரியம். இதர வகுப்பைச் சேர்ந்த சிறுபான்மைகள் அதில் இல்லாமல் இருக்க முடியாது. பல தேசீய இனங்களைக் கொண்ட ராஜ்யம் அமைத்து, அதிலுள்ள எல்லாச் சிறுபான்மைகளுக்கும் தங்களுடைய இனத் தன்மையை அபிவிருத்தி செய்வதற்குரிய சுதந்திரத்தைக் கொடுப்பதன் மூலமாகவே, சிறுபான்மைகளின் பிரசினையைத் தீர்க்க முடியும்.

தற்கால ராஜ்யமும், தேசீயமும் ‘ஒன்றல்ல, ஒரே போக்குக் கொண்டவையுமல்ல, ஒட்டியவையும் அல்ல,’[13] என்று பிரீட்மன் எடுத்துக் காட்டுகிருர். அவருடைய முடிவு: ‘தேசீய இனத்தின் சுய நிர்ணய உரிமையை அடிப்படையாகக் கொண்டு, முழுப் பொறுப்புள்ள ராஜ்யத்தை அமைப்பது இயற்கையில் முரணுனது. பொறுப்புள்ள தேசீய இன அரசாங்கம் என்பது இலட்சியமாக மதிக்கப்படும்வரை, திருப்திகரமான வழி ஒன்றும் ஏற்படாது. இப்பிரசினையைத் தீவிரமாகச் சிந்தனை செய்யும் அனைவரும், இவ் உண்மையை ஒப்புக்கொள்ளுகிருர்கள் என்று தோன்றுகிறது. நுணுக்கமான ஆராய்ச்சிக்குப் பின், சோவியத் ரஷ்யா கிரேட் பிரிட்டன் இவ் விரு நாடுகளுடைய அனுபவத்தை ஒட்டி, பல தேசீய இனங்களும் கலந்த ராஜ்ய அமைப்புக்களை மெக்கார்ட்னி ஆதரிக்கிருர்.’[14] **தேசங்களின் வருங்காலம்** என்று பேராசிரியர் கார் எழுதிய நூலிலிருந்து தாம் ஒப்புக்கொள்கிற பகுதியை எடுத்துக் காட்டுகிருர்; ப-49: ‘பொதுவான பரம்பரைப் பண்பினுலும், பொதுக் கலாசாரத்தினுலும் ஒன்றுசேர்க்கப்பட்ட ஒரே இனத்தவரோ, ஒரே மொழி பேசும் குலத்தவரோ இருந்தால், அவர்களைக் கொண்டு ஒரு சுதந்திர அரசியல் அமைப்பு ஏற்படுத்தலாம் என்பது நிலை நிற்பதல்ல.’[15] டி. எச். கோல் எழுதிய, **ஐரோப்பிய, ரஷ்யநாடுகளும் வருங்காலமும்** என்ற நூலிலிருந்தும் மேற்கோள் கொடுக்கிருர்; ப. 14: ‘இவ்விருபதாம் நூற்ருண்டில் ராஜ்யத்தை அமைப்பதற்குத் தேசீய இனங்கள் அடிப்படையாக அமைவதில்லை.’[16]

அவர் மேலும் கூறுவதாவது: தேசீய இன ராஜ்யம் சிறிதாக இருக்கும்படி நேரிட்டால், தொழிலபிவிருத்தி இயந்திர முன்னேற்றமுள்ள தற்காலத்தில் அது ஒப்பேராத காரியம். தனது நாட்டு எல்லைக்குள்ளே மனித வாழ்வுக்குரிய சகல வசதிகளையும் இந்த ராஜ்யத்தால் ஒருவாறு செய்ய முடிந்தாலும், வெளி ஆக்ரமிப்பைச் சமாளிப்பது நடக்கிற காரியமில்லை. ‘தற்காலத்தில், பாதுகாப்பு என்பது அதோடு நின்றுவிடவில்லை; மனிதத் தொகையிலும், மூலப்பொருள்களிலும் ஒரு ராஜ்யம் எவ்வளவு தூரம் அட்சய பாத்திரமாக விளங்குமென்பதைப் பொறுத்திருக்கிறது. அந்தப் பொருள்களைப் பெற்றிருக்கின்ற அளவைப் பொறுத்தே, நாடுகள் வல்லரசாவதும் ஆகாமல்போவதும் இருக்கின்றன.’[17] ‘இன்றைய அரசியல்,

13. W. Friedmann: *The Crisis of the National State* (1943), p. 9.
14. *ibid.*, p. 40. 15 *ibid.*, p. 133. 16. *ibid.*, p. 9. 17. *ibid.*, p. 140

பொருளாதார, சமூக சக்திகளின் தீவிரப் போக்குகள் தேசிய இன ராஜ்ய அமைப்பிலிருந்து விலகிக்கொண்டே போகின்றன...........தேசியமும், தற்காலத்திய ராஜ்யமும் அளவுக்கு மிஞ்சிவிட்டால், அவைகளுக்குள்ள உறவு அபாய நிலைமையை அடைகிறது... .....தேசிய இனத்தின் சுய நிர்ணயம் என்ற சிக்கலைத் தீர்ப்பதற்கு வழி, பல தேசிய இனங்களை உள்ளடக்கிய ராஜ்யத்தை அமைப்பதாகும். அங்குள்ள பலம் வாய்ந்த அரசாங்கம் பல்வேறு தேசிய இனங்களுக்கும் கலாசார சுதந்திரமளிக்கவேண்டும். அத்தேசிய இனங்களும் தங்களுடைய அரசியல், ராணுவ, பொருளாதார சுதந்திரத்தை அவ்வரசாங்கத்திற்கு விட்டுக்கொடுத்து, அதற்கடங்கியிருக்கவேண்டும்.'[18]

'ராயல் இன்ஸ்டிடியூட் ஆப் இண்டர் நேஷனல் அபேர்ஸ்' என்ற ஸ்தாபனத்தின் ஆதரவில் திரு. ஏ. கப்பான், தேசிய இன சுய நிர்ணயம் பற்றிய நூலை வெளியிட்டார். மெக்கார்ட்னியும் பிரீட்மனும் என்ன முடிவுக்கு வந்தனரோ அதே முடிவுக்குத்தான் இவரும் வந்துள்ளார். அவருடைய புத்தகத்திலிருக்கும் ஒரு பகுதியைக் காண்போம்: 'ஒரு தேசம் என்பது அரசியல் ஸ்தாபனமாகவோ அல்லது ராஜ்யமாகவோ பார்க்கும் பொழுது, அதுஓர் உபயோகத்துக்காக ஏற்படுத்தப்பட்ட அமைப்பு; அரசியல், பொருளாதார நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக அரசியல் திறமையோடு போடப்பட்ட திட்டம் என்பது புலனாகும். அரசியல் துறை இலாப நோக்கமுள்ளது; நல்வாழ்வுக் காதாரமான சட்டம், ஒழுங்கு, அமைதி, பொருளாதார நலம் முதலியவைகளை எவ்வளவுக் கெவ்வளவு வளர்க்கிறதோ அதற்குத் தகுந்தபடி அதன் வெற்றி அமைகிறது. கலாசார நோக்கத்தோடு தேசத்தைப் பார்க்கும் பொழுதோவென்றால், பொதுவாக அது நன்மை வாய்ந்தது, அடிப்படையில் அவசியமானது, மனித வாழ்விற்கு இன்றியமையாத முதற்படியானது. அதனுடைய துறையோ மனித உணர்ச்சிகளின் செயல்களைப் பற்றியது. கலை, இலக்கியம், தத்துவம், மதம் இவைகள் மூலமாக அதன் வேலைப்பாடுகள் வெளிப்படும்......மனித சமுதாயம், முன்னேறுவதற்கு இருவித லட்சியங்களைக் கொண்டு, அவைகளை அடைய இருவகை முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறது. இருவித லட்சியங்களும் அடிப்படையில் வெவ்வேறானவை. துரதிர்ஷ்ட வசமாக, அவ்விரு லட்சியங்களும் தேசமென்ற ஒரே சொல்லால் விளக்கப்படுகின்றன. இவ்வேறுபாடுகள் வெறும் பேச்சளவில் அல்ல, செயலளவில் இருக்கின்றன என்பதை எளிதில் காட்டமுடியும்.'[19] பிரெஞ்ச் கனடியர்களும், பிரிட்டிஷ் கனடியர்களும் தங்களது சொந்தத் தேசிய இனத்தன்மையை விட்டுவிடாமல் ஒரே அரசியல் தேசத்தினராகச் சேர்ந்திருப்பதையும், ஸ்பானிஷ் அமெரிக்காவில் ஒரே கலாசாரப் பின்னமைப்புக்கொண்ட அநேக ராஜ்யங்கள் தனித்தனி அரசியல் ராஜ்யங்களாகப் பிரிந்திருப்பதையும் அவர் உதாரணமாக எடுத்துக் காட்டுகிறார்: 'கலாசார தேசியத்தையும், அரசியல் தேசியத்தையும் ஒன்றாகப் பிணைப்பதற்குச் செய்த முயற்சிகள் தோல்வி அடைந்தமைக்கு, எத்தனையோ இதர உதாரணங்களைக் காணலாம். தற்காலத்தில், இரண்டை ஒரு வார்ப்பில் வார்க்கச் செய்த முயற்சிகள் அத்தனையும் வழக்கமாய்ப் பேராபத்துக்களிலே முடிந்திருக்கின்றன.'[20]

18. Friedmann, op. cit., p. 163-4.
19. A. Cobban: *National Self-determination*, pp. 60.
20. *ibid.*, p. 60.

தேசிய இனத்தை அடிப்படையாக வைத்து அரசாங்கத்தை நிர்ணயிப்பது சரியானபடி. மதிப்பிடுவதாகாது. தேசிய இனத்தன்மை—காலத்துக்குக் காலம், நாட்டுக்கு நாடு, மனிதனுக்கு மனிதன் மாறுபட்டுக்கொண்டே வந்திருக்கிறது என்பதை அவர் மேலும் எடுத்துக் காட்டுகிறுர். மேலும், ஓர் அரசாங்கத்திலுள்ள ஜனங்கள் அத்தனைபேரும் ஒரே இனத்தினர் என்ற கருத்தைக் காட்டுகிறது. அது உண்மையல்ல. உலகத்தை ஒரே இன மக்களுள்ள வகுப்புகளாகப் பிரிக்கமுடியாது. 'இந்தத் தொல்லுலகில் ஏற்கெனவே இருக்கின்ற கலாசாரத்தால் ஏற்பட்ட தேசிய இனங்களையும், அரசியலுக்காக ஏற்பட்ட ராஜ்யங்களையும் துடைப்பது என்பது முடியாது. அப்படி இருக்கும்பொழுது, தேசிய இனங்களைக்கொண்ட ராஜ்யங்களை அமைப்பதுதான் சிறந்த முறை என்ற பழைய நம்பிக்கையைக் கைவிட வேண்டும்; அது அவசியமும்கூட. பல தேசிய இனங்களைக்கொண்ட ராஜ்யம் என்பதுவே சரியான அரசியல் திட்டம் என்பதைக் கொள்ளவேண்டும். ஆக்டன் இதை அநேக வருடங்களுக்கு முன்பே எடுத்துக் கூறினுர்.........சமீபகாலச் சரித்திரமும் சென்ற நூற்ருண்டுச் சரித்திரமும், அரசியல் ராஜ்யமும் தேசிய இனமும் நிச்சயமாய் ஒன்றுதான் என்று கற்பிக்கவில்லை. அதுமட்டுமல்ல. அவை இரண்டும் ஒன்றுகூட முடியாதென்ற உறுதிக்கு வரவேண்டியவர்களாக இருந்திருக்கிறேம்.........கலாசார வகையில் ஒன்றுசேர்ந்த தேசிய இன ராஜ்யம்தான், சட்டபூர்வமான அரசியல் அமைப்புக்கு ஏற்பட்ட ஒரே அடிப்படை என்பது நடைமுறையில் நிற்கவில்லை; கொள்கையிலும் நிலை நின்றதில்லை.'[21]

வெவ்வேறு ஸ்தாபனங்களான தேசிய இனம், ராஜ்யம் என்ற இவைகளைப்பற்றி ஏற்பட்ட மனக் குழப்பத்திற்குக் காரணம் என்ன? ஒவ்வொரு தனிக் கலாசாரக் கூட்டமும், தனக்கென்று தேசிய இன சுய நிர்ணய உரிமை கொண்டாடலாம் என்பதைக் கண்டிப்பான விதியாக ஆக்கியதே இத்தனைக்கும் காரணம். அத்தகைய கண்டிப்பான விதி ஒன்றும் இருக்கமுடியாது. அநேக விஷயங்களை உத்தேசித்துச் சமூகத்தில் தனி நபருடைய சுதந்திரம் எவ்வளவு தூரம் கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறதோ, அதே போல அத் தேசிய இன சுயநிர்ணயமும் வரம்புடையதாகவே இருக்கும்.

'பூகோள, சரித்திர, பொருளாதார, அரசியல் காரணங்களால் உலகத்திலுள்ள அநேக சின்னஞ் சிறு தேசிய இனங்கள் சுய நிர்ணய உரிமை கொண்டாடி, முழுப்பொறுப்புள்ள சுதந்திர ராஜ்யங்களை அமைப்பதென்பது நடக்கவில்லை அல்லவா?' என்று கப்பான் கேட்கிறுர். 'ஒரு தேசிய இனத்தைச் சேர்ந்த பெரும்பான்மையோர் அரசியல் சுதந்திரத்தை விரும்பினுலும், சந்தர்ப்பங்கள் அதைத் தடுக்கலாம். ஆசைப்பட்டவர்கள் எவ்வளவு பெரும்பான்மையினராக இருந்த போதிலும், அவர்களுடைய ஆசை சந்தர்ப்பங்களை மாற்றப்போவதில்லை. பர்க் கூறுவதைப்போல, "சிறு பிள்ளைகள் நிலாவுக் கழுவது போல நாமும் அழுதோமானுல், அழுதுகொண்டே யிருக்க வேண்டியதுதான்."'[22]

இக்காரணங்கள் எல்லாம் இந்தியப் பிரிவினையைத் தடுக்கின்றன என்றும், நாம் கூறலாம். அகில இந்தியாவிலும் எத்தனை முஸ்லீம்கள் இருக்கின்றுர்களோ அத்தனை பேர் சிறுபான்மைகளாக, பிரித்தமைக்கப்பட்ட

21. Cobban, op. cit., pp. 62-3. 22. *ibid.*, p. 74.

ராஜ்யங்களில் இருப்பார்கள். அவ்வாறு இதர சிறுபான்மை வகுப்புகள் இல்லாதபடி ராஜ்யங்களைப் பிரித்தமைப்பதும், எல்லை கட்டுவதும் இயலாத காரியம். இந்தியாவின் பொருளாதார, ராணுவ நிலைமைகளைக் கவனித்தாலும், இந்தியா பெரிய அரசியல் ராஜ்யமாக என்றும் நிலவுவதே நன்மையாகத் தோன்றுகிறது. தனித்தனி சுதந்திர தேசிய இனங்களாகச் சிதறி நிற்பதைப் பொருளாதார, ராணுவ நிலைமைகள் தடுக்கின்றன. பிரிதல் என்பது நாசவேலையாகும். அதை முதல் மருந்தாகக் கொள்ளக்கூடாது. எல்லா வழியையும் பார்த்துவிட்டு, அத்தனையும் உருப்படாமல் போனால்தான் இதைக் கையாளவேண்டும். அத்தகைய நிலைமை இந்தியாவில் நேர்ந்து விட்டாலும்,—முஸ்லீம் லீக் தவிர எந்தக் கட்சியும் இத்தகைய தீவிர நிலைமை வந்ததாகச் சொல்லவில்லை—ஏதாவது ஒரு குறிப்பிட்ட பகுதியைப் பிரிப்பதால் இப்பிரசினை தீர்ந்துவிடாது. இந்து இந்தியாவில், இரு நூறு அல்லது முந்நூறு லட்சம் முஸ்லீம்களை விட்டுவிட வேண்டியதாயிருக்கும். முஸ்லீம் ராஜ்யங்களில் 479 அல்லது 196 லட்சம் முஸ்லீம் அல்லாதாரை விட்டுவிட வேண்டியதாயிருக்கும். அது, முஸ்லீம் ராஜ்யங்களில் முஸ்லீம் அல்லாதார் நிறைய வாழும் பிரதேசத்தைச் சேர்ப்பது அல்லது விலக்குவதைப் பொறுத்திருக்கிறது. ஆகவே, நாம் பிரசினையைத் தற்காலக் கருத்துக்களுக்குப் பொருத்தமான முறையில் தீர்க்கவேண்டும். அவ்வேற்பாடு பல நூற்றாண்டுகளாக அமைந்த சரித்திரத்தை விட்டு விலகியதாக இருக்கக்கூடாது; பூகோளத்திற்கு விரோதமாகச் செல்லக்கூடாது; தற்கால நிலைமைகளில் நாட்டின் பாதுகாப்பை மிகக் கஷ்டமான நிலைமையில் வைத்துவிடக்கூடாது; பிரிக்கப்பட்ட நாடுகள்மீது தாங்க முடியாத சுமையைச் சுமத்தக்கூடாது; இப்புதிய ராஜ்யங்களிலுள்ள சாதாரண மனிதனை மீளா வறுமையிலும், நாற்றத்திலும் அமுக்கிவிடக்கூடாது; "எங்களவர் வசிக்குமிடமெல்லாம் எங்களுக்கே" என்பது போன்ற பிரசினையை முஸ்லீம் ராஜ்யங்களிலும், உண்டாக்கி விடக்கூடாது. மனக்கொந்தளிப்பில் அது அமையக்கூடாது. மேலும், நிலையான சச்சரவுகளுக்கு அது வழியமைப்பதாகவும் இருக்கக் கூடாது.

## 3. முஸ்லீம்கள்—ஒரு தனித் தேசிய இனம்

பிரிவினை வேண்டுமென்பதற்கு, இந்துக்களும் முஸ்லீம்களும் ஒரே தேசிய இனத்தினரல்லர் என்று நிரூபித்தால் மாத்திரம் போதாது. முஸ்லீம்கள் ஒரு தனித் தேசிய இனமென்பதையும், அவர்களுக்கொரு தனி அரசாங்கம் தேவை என்பதையும் எடுத்துக் காட்டியாக வேண்டும். திரு. துரானி தன் கருத்துக்களை வெகு தெளிவாக வெளியிட்டிருக்கிறார்: 'புராதன இந்துக்கள் ஒரு தேசிய இனமல்லர். அவர்கள் மந்தைக் கூட்டம் போன்ற ஜனங்கள்.'

'இந்திய முஸ்லீம்களும் எவ்வகையிலும் மேம்பட்டவரல்லர். இஸ்லாம் உண்மையாக, அதன் ஸ்தாபகர் காலத்திலேயே ஓர் அரசாங்கமாகிவிட்டது. சரியாக வரையறுக்கப்பட்ட அரசியல் சித்தாந்தம் அதற்கு உண்டு. இஸ்லாம் என்பதே ஓர் அரசியல் சித்தாந்தம் என்று சொல்லவேண்டும்.... .இஸ்லாம் அரசாங்கத்தை மத ஆட்சி என்று நான் சொல்ல வரவில்லை.......இஸ்லாம் அரசாங்கம் ஒரு ஜனநாயகம். அதைக் காப்பாற்றும் பொறுப்பு ஒவ்வொரு

முஸ்லீமுக்கும் உண்டு. **லா இஸ்லாமா இல்லா பே ஜாமேத்-ஹூ**—"கட்டுப்பாடான சமூகமின்றி இஸ்லாம் கிடையாது" என்று பேரரசர் ஓமர் சொல்லுகிறார். துரதிர்ஷ்டவசமாக இஸ்லாமிய அரசாங்கம் நீடித்து நிற்கவில்லை. ஓமய்யாத்துகளும் அப்பாசித்துகளும் அதை அழித்து, முள்க் அதாவது பரம்பரை அரசர்களது கொடுங்கோலாட்சியாக மாற்றிவிட்டார்கள்........இவ்விரு கொடுங்கோலாட்சிகள் நடந்த காலத்தில் தான், கடவுள் தத்துவ ஆராய்ச்சியும், சூபிக்கொள்கையும் முஸ்லீம் சமூகத்தில் புகுந்து அதன் அரசியல் வாழ்வை உருக்குலைத்துக் கெடுக்கத் தலைப்பட்டன. இவ்விரு விஷயங்களும் கூடி முஸ்லிமினுடைய பகுத்தறிவைக் கோணலாக்கிவிட்டன; அறநெறியும் அரசியலும் கலந்த சித்தாந்தமான இஸ்லாத்தை ஒரு தினுசான "மதமாக" மாற்றிவிட்டன. இம்மதத்தை, அரசியல் கோஷக் கூட்டம், கடவுளுக்கும் தனி நபருக்குமுள்ள சம்பந்தம் பற்றிய சொந்த விஷயம் என்று ஏதோ கூறுகிறார்கள். இந்தியாவை முஸ்லீம்கள் படையெடுத்த காலத்தில், மதத்துக்கும் அரசியலுக்கும் சம்பந்தமில்லை என்பது உலக முழுவதிலுமுள்ள முஸ்லீம்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட கொள்கை. இந்தியாவைப் படையெடுத்த மனிதர்கள், எந்த முஸ்லீம் அரசருடைய தேசிய ராணுவத்தினரும் அல்லர்; ஆனால், ஓர் ஏகாதிபத்தியக் கொடுங்கோலனின் கூலிப் படைகள் ஆவர். இந்தியாவில் அவர்கள் நிறுவிய ராஜ்யம் ஒரு முஸ்லீம் தேசிய ராஜ்யமன்று. ஆனால், ஒரு கொடுங்கோலனுக்காகவும், அவனைச் சுற்றித் திரியும் குட்டித் தேவதைகளுக்காகவும் கைப்பற்றி, ஆட்சி புரிந்து சுரண்டப்பட்டு வந்த ராஜ்யம் அது. இந்தியாவில் ஏற்பட்ட முஸ்லீம் சாம்ராஜ்யம் எந்த அளவில் முஸ்லீமாக இருந்ததென்றால், அதன் அரசனாக முடி சூடியவன் தன்னை ஒரு முஸ்லீம் என்று சொல்லிக்கொண்ட அளவில் தான். முஸ்லீம்கள் இந்தியாவில் ஆட்சி புரிந்தகாலம் பூராவும் தேசிய உணர்ச்சியை வளர்த்தார்களில்லை......ஆகவே நாம், இந்துக்களும் முஸ்லீம்களுமான இரு இனத்தைக் காண்கிறோம். இரு கூட்டத்தாரும் தேசிய உணர்ச்சி அல்லது ஆர்வம் அற்றவர்களாக, ஏகாதிபத்தியக் கொடுங்கோலாட்சியில் ஒரேவித அடிமைகளாக, பக்கத்தில் பக்கத்தில் வாழ்கிறார்கள்.

'இந்து முஸ்லீம் இவ்விருவர்களுடைய பழக்கங்கள், நம்பிக்கைகள், மதக்கருத்துக்கள் ஒன்றுக்கொன்று ஒத்துப் போகாதென்பதைப்பற்றி எவ்வளவோ எழுதப்பட்டிருக்கின்றன...... இவ்வளவெல்லாமிருந்தும், நூற்றுக் கணக்கான வருடங்களாக அவர்களை அன்னியோன்யமாக வாழும்படி செய்த ஏதோ ஒன்று அவர்களுடைய மதங்களில் இருக்கிறது. பிரிட்டிஷ் ஆட்சியில் அவர்கள் படித்ததும் பட்டதும் அவர்களுடைய மனத்திலிருந்து நீக்கப்படுமானால், அவர்களது மூதாதையர்களை ஒரு நூற்றாண்டுக்கு முன் ஊக்கிய பழைய சமய மனோபாவத்தை அவர்களிடை சிருஷ்டித்துவிடலாம். அந்த மனோபாவம், அவர்களை ஒரே அரசாங்கத்தின் பிரஜைகளாக—நல்ல அயல் வீட்டாராக, அன்னியோன்னியமாக வாழச் செய்யும். அந்த ஒன்று இவ்விரு மதங்களிலும் பதிந்துள்ள சகிப்புத் தன்மையாகும்...... இவ்விரு சமூகங்களுக்குள்ளும் இத்தகைய உறவுகள் இடை முறியாமல் நீடித்திருந்திருக்குமானால், நாளடைவில், ஒரு மனப்பட்ட, ஒருயிரான, ஒரு தேசம் இந்திய மண்ணில் பிறந்திருக்கக்கூடும். அந்த நாட்கள் திரும்பியும் வரக்கூடுமா?'[1]

1. F. K. Khan Durrani: *The Meaning of Pakistan* pp. 34-44.

'ஆகையால், அநேக நூற்றுண்டுகளாக நெருங்கிப் பழகி யிருந்தும், நேசமாக உறவாடியும், இந்துக்களும் முஸ்லீம்களும் தனித்தே யிருந்தனர். இவ்விரு ஆறுகளும் ஒன்று சேரா. அவர்கள் மிகவும் வேறுபட்ட இரு தேசிய இனங்கள். அரசியல் தத்துவஞானி கூறுகின்றபடி தேசீய விழிப்பு ஏற்பட்டு உக்கிரமாகும்பொழுது, அவர்கள் வெவ்வேறு விதமாகத்தான் மாறுதல் அடைவார்கள். அவர்கள் தனி இரு தேசீய இனமாக வளர்வது தடுக்க இயலாதது. நாம் ஒரு தனித் தேசீயஇனத்தினர் என்ற உணர்ச்சி குமுறி வரும் போதுதான் அது தேசீயமெனப்படுகிறது. அதுவே இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் ஏற்பட்டது.'[2] 'இவ்விரு கூட்டத்தினரும் விழிப்படைந்த தேசீய இனத்தினராய் விட்டனர். இதை மனத்துட்கொண்டு அவர்கள் தங்களுக்குள்ள உறவு முறைகளைத் திருத்தியமைக்காத வரையும், அவர்களிடையே சமாதானம் ஏற்படுவது துர்லபம்.'[3]

எப்படி இந்நிலை ஏற்பட்டதென்பதைத் திரு. துரானி ஆராயப் புகுந்து, இம் முடிவுக்கு வருகிருர்—'அதாவது சுருங்கக் கூறின், பிரிட்டிஷாரின் ஒரவஞ்சகத்திஞலும், ஒருவரை வாட்டி ஒருவரைப் பேணும் கொள்கையிஞலும் ஏற்பட்ட பலாபலன்களில் இதுவொன்று.'

'இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் ஏற்பட்டிருக்கும் தேசீய உணர்ச்சி, மெதுவான வளர்ச்சி கொண்டது. எத்தேதியில் முதிர்ச்சி பெற்றதென்று கூற முடியாது. முதலில், சர்க்கார் உத்தியோகத்திற்காக எழுந்த பொருளாதாரப் போட்டியாகத் தோன்றி, பின்னுல், அரசியல் போட்டியாகவும், முடிவில், தேசீயப் பகைமையாகவும் மாறிவிட்டது.'[3]

பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் முஸல்மான்களின் நிலைமையைத் தாழ்த்தி, அவர்களைக் கெடுக்கக் காரணமாயிருந்த சில விஷயங்களென்று அவர் குறிப்பிடுவன: (1) வங்காளத்தின் கைத்தொழில் வியாபார அழிவு; (2) வங்காளத்தின் நிரந்தர நிலவரி ஏற்பாடு. அதன்படி, இந்து ரெவின்யூ கலெக்டர்கள் பெரிய நிலச் சுவான்தார்கள் ஆக்கப்பட்டார்கள். முஸ்லீம் ரெவினியூ அதிகாரிகள் குப்பைக் குழிக்குள் தள்ளப்பட்டு, அவர்களுக்குப் பதிலாக ஐரோப்பிய அதிகாரிகள் நியமிக்கப் பட்டார்கள்; (3) முஸ்லீம்களின் கல்விக்கு மானியங்கள் அளிக்கப்பட்டிருந்தன. அம் மானியங்களைச் சர்க்கார் திருப்பி எடுத்துக் கொண்டதனுல், கல்வி குறைந்து விட்டது; (4) முஸ்லீம்கள், தங்களது கல்வித் திட்டம் அழிக்கப்படவும், சர்க்கார் உத்தியோகங்களில் தங்களது ஸ்தானத்தை இழக்காமலிருக்க முடியாது. அது காரணமாக இந்துக்கள், அதிகாரப் பதவிகள் முழுதையும் தங்களதாக்கிக் கொண்டார்கள்; அது தங்களை விட்டு நீங்காதிருக்கக் கீழ்த்தரமான தந்திரங்களையும், அற்பத்தனமான உபாயங்களையும் கைக்கொண்டனர். அரசாங்க உத்தியோகத்திலுள்ள இவ் ஏற்றத் தாழ்வே இந்திய அரசியலின் பெரும் பகுதியாகும். வகுப்புவாதக் கடுப்புகளுக்கு இவை பெருங் காரணம்.

இதனேடு கூடவே இந்துக்களிடை ஏற்பட்ட மாறுதல்கள் சில உண்டு. இந்துக்களிடம், வம்புக்கிழுக்கும் மனப்பான்மை வளரத் தலைப்பட்டது. சிறப்பாக, வங்காளத்திலும் வட இந்தியாவிலும் இவ்விரு வகுப்பாரிடையே அவநம்பிக்கையும், அரசியல் போட்டாப் போட்டியும் வளர்ந்தன. அவை

2. Durrani, op. cit., p. 47. 3. *ibid.*, p. 48.

களைப் பின்வரும் காரியங்களில் வெளிப்படக் காணலாம் : (1) வந்தேமாதரப் பாட்டின் அடிப்படை உணர்ச்சி; (2) 1857ம் வருடத்திய சிப்பாய்க் கலகத்திற்குப் பிறகு இவ்விரு வகுப்பாரிடையே ஏற்பட்ட மனவேறுபாடு. இந்துக்களால் துவக்கப்பட்ட இக்கலகத்தில் முஸ்லீம்களும் முழுமூச்சா யிறங்கினார்கள். கலகம் அடக்கப்படவும், இந்துக்கள் தங்களுடைய தோழர்களுக்குத் துரோகிகளாகவும், காட்டிக் கொடுப்பவர்களாகவும் மாறிவிட்டார்கள். இப்படியாக, அரசாங்கத்தின் முழுக் கோபத்திற்கும் முஸ்லீம்கள் ஆளாகி, ஆயிரக் கணக்கில் கொலை செய்யப்பட்டனர், ஒடுக்கப்பட்டனர். அவர்களது சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டன. முஸ்லீம்களின் அனாதைக் குழந்தைகள் கிறிஸ்துவப் பாதிரிமார்களிடம் ஒப்படைக்கப்பட்டன. (3) காசியிலுள்ள இந்துப்பிரமுகர்களால் 1867ல் ஓர் இந்துக் கிளர்ச்சி ஏற்படுத்தப்பட்டது. பொது பாஷையாகி விட்ட உருதுவைத் தள்ளிவிட்டு அதற்குப் பதிலாக பிரிஜ் பஷையையும், அரபி எழுத்துக்குப் பதிலாக தேவ நாகரி எழுத்தையும் ஆதரிப்பது அதன் நோக்கம். அதன் பலனாக இந்துக்கள் 'முக்கால் நூற்றாண்டாக, உருதுவை மறக்கவும் ஹிந்தியைப் பரப்பவும் முயல்கின்றனர். மற்றவர்களைக் காட்டிலும் இந்து மனோபாவத்தைத் தெளிவாகக் காட்டும் திரு. காந்தி, வெட்கமின்றிப் பின்வருமாறு சொல்லுகிறார்: "இந்துஸ்தானியிலிருந்து இச்சொற்களையெல்லாம் எடுத்துவிடவேண்டும். முஸ்லீம்கள் இந்த நாட்டை ஆண்டதையும், அவர்கள் இங்கு இருப்பதையும் இவை ஞாபகப்படுத்துகின்றன."' (4) சென்றகாலச் சரித்திரத்தில் இந்துக்களுக்குள்ள பற்றுதல். 'இது ஒரு முக்கியமான அம்சத்தைக் கொடுத்து வந்தது. இந்த அம்சம் இல்லாத காரணத்தால் ஒரு வகுப்பு தேசிய இனமாக ஆகாமல் போய்விட்டது.'[5] இப் பற்றுதலும் பிரிட்டிஷார் ஏற்படுத்திய கல்வித் திட்டத்தால் உண்டாயிற்று. பாடப்புத்தகங்களுக்கு வைக்கப்பட்ட சரித்திர நூல்கள், பிரிட்டிஷ் சிவில் அதிகாரிகள் அல்லது பாதிரிகளால், 'முஸ்லீம்களுக் கெதிராக இந்துக்கள் மனத்தைக் கெடுத்து, அவர்கள்மீது வெறுப்பையும் பகைமையையும் உண்டாக்குவதற்கென்றே எழுதப்பட்டவை;' (5) 'சிவாஜியை வணங்கும் வழக்கத்தை ஏற்படுத்தியவரும், காங்கிரஸில் பெருந்தலைவருமான மகாராஷ்டிர மதவெறியர் பாலகங்காதர திலகர் ஆரம்பித்த பசுக்கொலை எதிர்ப்பியக்கம்.'[6]

'சர் சையது அகமது சையதுகான் இவற்றால் தூண்டப்பட்டு, தன் மதத்தினரைக் காங்கிரஸிலிருந்து விலகி நிற்குமாறு புத்தி சொன்னார்.' இதற்கு 'வங்காளத்து இந்துப் பத்திரிகைகளும் ஓரளவு காரணமாகும். அவைகள் முஸ்லீம்களைக் கலகக்காரர்களென்றும், ஆகவே, அவர்களை அரசாங்க உத்தியோகங்களில் அமர்த்தக்கூடாதென்றும் கூறிவந்தன.'[7]

இவ்விதமாக 1857 லிருந்து இந்துக்களும் முஸ்லீம்களும் ஒரே கூட்டத்தாராகத் தங்களைக் கருதி வரவில்லை. 'சர் சையது அகமது கான், சர்க்காருக்கும் பொது ஜனங்களுக்கும் பின் வருமாறு எச்சரிக்கை செய்தார் : பிரதிநிதித்துவ ஸ்தாபனங்கள் ஒரே இனத்தைச் சேர்ந்த மக்களுள்ள நாடுகளுக்குத்தான் பொருந்தும். இந்தியாபோன்ற மிகவும் வேறுபட்ட பலவினத்தையும் சேர்ந்த மக்களுள்ள நாடுகளில் பிரதிநிதித்துவ ஸ்தாபனங்களைப் புகுத்துவதால் சமூக, அரசியல் கேடுகளுண்டாகும்.'[8] பொதுஜன சபைகள் ஏற்படப்

4. Durrani, op. cit., p. 67. 5 *ibid.*, p. 68.
6. *ibid.*, p. 74. 7 *ibid.*, p. 70. 8. *ibid.*, p. 78.

போகின்றன என்று தெரிந்தபொழுது, 1906ல் முஸ்லீம் பிரதிநிதிகள் சென்று, முஸ்லீம் சமூகத்தினருக்குத் தனிப்பிரதிநிதித்துவம் வேண்டுமென்று கேட்டு, அதைப் பெற்றார்கள்.

'தனித்தொகுதிகள் இல்லாமலிருந்தால்மட்டும் ஒரே தேசிய இனம் உண்டாகியிருக்கும் என்பது பொருத்தமில்லாத ஒன்று. முஸ்லீம்களின் மீது இந்து ஆதிக்கம் உண்டாகித்தானிருக்கும்.'[9]

'இம்மத மறுமலர்ச்சி, அரசியல் விழிப்புக்கு முன்னமே ஏற்பட்டது. இருந்தாலும், 1906-வரையும் தேசிய மனப்பான்மையில் வகுப்பு வாதம் கலந்திருந்தது. காந்தியத் தத்துவமான வகுப்பு வாதம் கலவாத தேசீய மனப்பான்மை அதற்குமுன் வளரவில்லை. ஒவ்வொருவரும் தங்களை இந்துவென்றோ முஸ்லீமென்றோ வெளிப்படையாகக் கூறிக்கொண்டு அந்நோக்கோடுதான் நடந்துவந்தனர். வகுப்புவாதமென்பது வசவுக்குரிய சொல்லாகவில்லை. இந்து முஸ்லீம்கள், தங்களோடு தொழிலில் போட்டியிடுபவர்களைச் சகிப்போடும், பரிவோடும், மரியாதையாகவும் நடத்தி வந்தார்கள். வகுப்புவாத மனோபாவம் இந்து மகாசபையினிடத்துக் காணப்பட்டது. இந்து மகாசபை 1907ல் பஞ்சாபில் தோன்றி, பின்னர் அகில இந்திய ஸ்தாபனமாயிற்று. 1906 டிசம்பரில் ஏற்பட்ட அகில இந்திய முஸ்லீம் லீகிலும் இம்மனோபாவத்தைக் காணலாம்.

'பிரிட்டிஷாருக்கு விசுவாசமாக இச்சகம் பேசி நடந்து கொள்வது முஸ்லீம்களுடைய கொள்கை. இக்கொள்கையை ஆதரித்துப் பரப்பியவர் சர். சையது அகமதுகான். பிரிட்டிஷாரின் கொடுங்கோலாட்சிக்குப் பயந்து இக்கொள்கை உதயமாயிற்று. இக்கொள்கை தோன்றுவதற்குக் காரணமாயிருந்த நிலைமைகள் மறைந்த பின்பும், இக்கொள்கையே அலிகாரைச் சேர்ந்த அரசியல் கட்சிக்குரிய வளமையாகிவிட்டது.'[10] முஸ்லீம்களுடைய ராஜ விசுவாசமும் பின் வரும் காரணங்களால் ஆட்டம் கண்டுவிட்டது: (அ) 1911-ல் இத்தாலி, டிரிபோலிமீது படை யெடுத்தது. பிரிட்டிஷ் சர்க்காருக்கும் இதில் பங்கு உண்டு. (ஆ) வங்காளப் பிரிவினையை 1911 டிசம்பரில் ரத்து செய்தார்கள். (இ) 1912-ல் பிரிட்டனின் முழு தார்மீக ஆதரவையும் பெற்று, பால்கன் நாடுகள் துருக்கிமீது பாய்ந்தன. (ஈ) கான்பூரில் ரோடு போடும் திட்டத்தை எதிர்த்ததற்காக முஸ்லீம்கள் படுகொலை செய்யப்பட்டனர். இவைகளெல்லாம் முஸ்லீம் லீகின் மனோபாவத்திலும், நோக்கிலும் அடிப்படையான மாறுதலை உண்டாக்கின; தனது அரசியல் இலட்சியம், பொறுப்புள்ள சுயாட்சியென்று கூறித் தனது கொள்கையைக் காங்கிரஸ் கொள்கையோடு ஒன்று சேர்ந்து வந்தது. 1916 வரையும், இவ்விரு ஸ்தாபனங்களும் ஒரேயிடத்தில் தங்களுடைய வருடாந்தரக் கூட்டங்களை நடத்த ஆரம்பித்தன. 1916-ல் பிரசித்திபெற்ற லக்ஷ்மணபுரி ஒப்பந்தத்தைச் செய்தார்கள். அது 1919-ம் வருடத்திய இந்திய அரசாங்கச் சட்டத்திலும் சேர்க்கப்பட்டது. இவ்வொப்பந்தம் முஸ்லீம் வகுப்பாருக்கு நீதி வழங்கவில்லையென்றாலும், அதன் நோக்கங்களில் மகத்தான முக்கியத்துவ முடையது. 'இவ்வொப்பந்தத்தின் மூலமாக, இந்துக்களும் முஸ்லீம்களும் தனித் தனி தேசிய இனங்கள் என்பதைக் காங்கிரஸ் ஒப்புக்கொண்டது. காங்கிரஸ் இந்துக்களின் பிரதிநிதியாகவும், முஸ்லீம் லீக் முஸ்லீம்களின் பிரதிநிதி

9. Durrani, op. cit., p. 79. 10. *ibid.*, p. 83.

யாகவும் ஆயது. ஆனால், அந்த நிலைமையிலிருந்து காங்கிரஸ் இப்பொழுது விலகி, தானே இந்தியா முழுமைக்கும் பிரதிநிதி என்று உரிமை கொண்டாடுகிறது.[11]

முதலாவது உலக மகாயுத்தம், தேசிய உணர்ச்சி அளவிறந்து அதிகப்பட்டதனால் தோன்றிற்று; உணர்ச்சிகளை ஆவேசப் படுத்தியது. சும்மா இருந்த ஜனங்களுக்கு விஷத்தை ஊட்டி விட்டது. ‘அது, இந்திய ஜனங்களிடையே அன்னியர் ஆட்சியிலிருந்து விடுதலை பெற வேண்டுமென்ற ஆவலை வெகு உக்ரமாக்கி விட்டதால், 1919-22ல் இந்து முஸ்லீம் ஒற்றுமை சாத்தியமாயிற்று.’[12] ஆனால், திரு. காந்தியும், அவருடைய தோழர்களும் பிரதேச வாரி தேசியத்தால் கவரப்பட்டு விட்டார்கள். ‘அரசியலில் மதத்திற்கு இடங்கொடுக்க லாகாதென்று காங்கிரஸ் பண்டிதர்கள் புகன்றார்கள்.’ ‘பூகோளத்தை, அரசியலை, பொருளாதாரத்தை அடிப்படையாகக்கொண்ட ஓர் ஐக்கிய இந்து தேசத்தை அமைக்கக் காங்கிரஸ் முயன்றது. உண்மையில், ஏற்கெனவே ஒரு தேசம் இருப்பதாக அது கருதிக்கொண்டது. அவ்வாறு நினைத்ததே தவறு என்பது தெளிவு. தவறான அஸ்திவாரங்களின் மேல் காங்கிரஸ் கட்டப் புகுந்த தேசிய மாளிகை மூன்று வருடத்திற்குள்ளாகவே சரிந்து விழுந்தது.......மகாத்மா சிறை சென்றார். இந்து முஸ்லீம் ஒற்றுமைப் பகட்டு உடைந்து நொறுங்கி விட்டது. சுவாமி சிரத்தானந்தரும், பண்டித மதன்மோஹன் மாளவியாவும் சிறைக்கு வெளியே வந்து, வெளிப்படையாக முஸ்லீம்களுக்கெதிரான வெட்கமற்ற பிரசாரங்களில் இறங்கினார்கள். அகில இந்திய இந்து மகாசபை 1923-ல் திருத்தி யமைக்கப்பட்டது......,.பிற வகுப்பாருக்குப் பாதகம் விளைவிக்காதபடி இந்துக்களுடைய நலன்களை மாத்திரம் கவனிப்பதென்று 1907-லும் 1915-லும் ஏற்படுத்தப்பட்ட கொள்கை கைவிடப்பட்டது. இந்தியா இந்துக்களுடைய புண்ணிய பூமி யென்றும், இந்துக்கள் ஒரு தேசத்தவரென்றும், அதில் முஸ்லீம்கள், கிறிஸ்தவர்கள், பார்ஸிகளுக் கிடமில்லையென்றும், இந்துக்களின் அரசியல் இலட்சியம் இந்து ராஜ்யத்தை நிறுவுவதென்றும் புதிதாகக் கற்பனை செய்யப்பட்டது.’[13]

காலஞ்சென்ற லாலா ஹரிதயாளுவால் எழுதப்பட்ட **மேரே விசார்** என்ற கட்டுரை 1925-ல் இந்தியா வந்து சேர்ந்தது. எல்லா இந்துப் பத்திரிகைகளிலும் பிரசுரிக்கப்பட்டது. அவர் அதைத் தனது அரசியல் ஏற்பாடாகச் சொல்லியிருந்தார். திரு. இந்திரப் பிரகாஷும், டாக்டர் அம்பேத்காரும் முறையே தங்களுடைய நூல்களான, **எங்கு நாம் மாறுபடுகிறோம், பாகிஸ்தானைப்பற்றிய சிந்தனைகள்** என்பவற்றில் மேரே விசாரிலிருந்து சில மேற்கோள்கள் காட்டுகின்றனர். அம் மேற்கோள்களிலேயே சில பகுதிகளைத் திரு. துரானியும் கையாளுகிறார். முன் கூறிய நூலிலுள்ள சொற்களைக் கொண்டே அதைச் சுருக்கிச் சொல்கிறேன். ராஜ்யம் இந்துக்களுக்குச் சொந்தமா யிருக்கவேண்டும். அதில் முஸ்லீம்கள் வாழலாம்; ஆனால், ராஜ்யம் முஸ்லீம் ராஜ்யமாக இருக்க முடியாது; இந்து முஸ்லீம் கூட்டரசாட்சியாகவும் இருக்க முடியாது.......சுயராஜ்யத்தை அடைவதற்கு நமக்கு (இந்துக்களுக்கு) முஸ்லீம்களுடைய சகாயம் தேவையில்லை. ஒரு கூட்டரசாட்சியை ஏற்படுத்துவதும் நமது விருப்பமல்ல........இந்துஸ்தானத்திலும்

11. Durrani, op. cit., pp. 84-85. 12. *ibid.*, pp. 90.
13. *ibid.*, pp. 91-3.

பஞ்சாபிலுமுள்ள இந்துக்களைக் காக்கின்ற ஆதாரங்களாவன: (1) இந்து சங்காதன். (2) இந்து ராஜ்யம். (3) முஸ்லீம்களை மத மாற்றுதல். (4) ஆப்கானிஸ்தானத்தையும், எல்லைப்புறத்தையும் கைப்பற்றி மதமாற்றுதல்.[14] 1923-லிருந்து இன்றுவரை இதுவே இந்துமகா சபையின் கொள்கையாக இருந்து வந்திருக்கிறது. இதற்காதாரமாகத் திரு. துரானி, திரு. சவர்க்காருடைய அறிக்கைகளிலிருந்து நிறைய மேற்கோள் காட்டுகிறார். அவையாவன: 'இந்தியா இன்று ஒரே யினங்கொண்ட தேசம் என்று கருதுவதற்கில்லை. அதற்கு மாருக இந்தியாவில், இந்துக்கள் முஸ்லீம்கள் என்ற இரண்டு முக்கிய தேசிய இனங்கள் இருக்கின்றன.' திரு. துரானி மேலும் கூறுகிறார்: 'திரு. சவர்க்காரின் வாதம் சரித்திர உண்மைகளையும், அரசியல் விதியையும் முழுதும் ஒத்துப் போகின்றது. அவருடைய வாதத்தோடு நாம் முரண்படுவதற்கில்லை. அவர், தானே தன்னுடைய வாதத்தோடு முரண்படும்போது தான் தகராறு கிளம்புகிறது. இந்த நாட்டில் இந்துக்களும் முஸ்லீம்களும் விழிப்படைந்ததைப் போல, எப்பொழுது இரண்டு வகுப்பார்கள் தேசிய விழிப்படைந்து விட்டார்களோ, அப்பொழுது உள்நாட்டுச் சண்டை சச்சரவுகளுக்கு இடம் வைத்துக் கொள்ளாதபடி நேசமாகப் பிரிந்து, தங்களுக்கென்று தனி ராஜ்யங்களை ஏற்படுத்திக் கொள்வதுதான் உசிதம் என்று அரசியல் அறிஞன் கூறுவான். அதுதான் அகில இந்திய முஸ்லீம் லீகின் வாதமும். பிரதேசத்தை அடிப்படையாகக் கொண்ட தேசியத் தன்மையை, மிகுந்த சாதுரியத்தோடு மறுத்த திரு. சவர்க்கார், பூகோள நோக்கத்தை மனத்துட் கொண்டு, இந்தியா முழுதும் இந்துக்களின் சொத்தென்றும், இந்துக்களின் புண்ணிய பூமி என்றும் உரிமை கொண்டாடுகிறார். ஆகவே, கீழாகத் தாழ்ந்த நிலையில் முஸ்லீம்களிருக்க, இந்தியா முழுவதும் இந்துக்கள் மாத்திரம் ஆட்சி செய்கிற ஒரு தனி ராஜ்யம் ஆகவேண்டுமென்று அவர் எதிர்பார்க்கிறார். வேறு வார்த்தைகளில் கூறுமிடத்து இந்துக்கள் ஆளுமினத்தார், முஸ்லீம்கள் அடிமை யினத்தார் ஆக இருக்க வேண்டுமென்பது அவரது அவா.'[15]

இந்திய தேசீய காங்கிரஸ், ஒன்றும் சிலாக்கியமாக இருந்துவிடவில்லை. 'இந்துக்களின் புத்துயிர்ப்பு இயக்கம் காரணமாகத்தான் காங்கிரஸ் பிறந்தது. உண்மையில் அது இந்து தேசப் பிறப்பைத்தான் குறிக்கிறது. அதன் ஆரம்ப காலத்தில், சில முஸ்லீம்கள் காங்கிரஸோடு தொடர்புகொண்டிருந்தார்கள் என்பது உண்மையே. இடையிலே கொஞ்ச காலத்திற்குத் தவிர, அது எப்பொழுதும் இந்து சங்கமாகத் தனக்கேற்பட்ட குணத்தைக் கைவிட்டதில்லை. இன்றைக்கும் அதன் முகத்திலேயே அதன் பிறவி அடையாளங்கள் சிறப்பாக இருப்பதைக் காணலாம்.'[16] இதைத்தான் காங்கிரசும் 1916ல் லக்ஷ்மணபுரி ஒப்பந்தம் ஏற்படும்பொழுது வெளிப்படையாக ஒப்புக்கொண்டது. இடையிலேற்பட்ட கொஞ்சகாலமென்பது, திரு. காந்தியும் அலி சகோதரர்களும் ஒத்துழையாமை இயக்கத்திற்குத் தலைமை வகித்த காலம். அந்த இயக்கமோ பெருந் தோல்வி அடைந்தது. அதில் முஸ்லீம்கள் கனசேதம் அடைந்தார்கள். அந்தக் காலத்திலேயும், இந்து முஸ்லீம் ஒற்றுமை யென்ற வெளி முகப்பிலே உள்பிளவுகள் இருக்கத்தான் செய்தன.

14. Speech of Mr. V. D. Savarkar at the Ahmedabad session of the Hindu Maha Sabha in 1937, quoted in Durrani, op. cit., p. 102.

15. *ibid.*, p. 105. 16. *ibid.*, p. 109.

'திரு. காந்திக்கு இந்துக்கள் மனத்தை ஆழ்ந்தறியும் நுட்பப் பார்வை உண்டு ..... இந்துக்களின் பொதுஜன அபிப்பிராயம் தவறுன பாதையில் போவது தெரிந்தும் கூட, அவருக்கு அதைத் தட்டிப் பேசுவதற்குத் தைரியம் இல்லை. இந்துக்களுக் கெல்லாம் பொதுவான மூடப் பழக்கங்களில், அதாவது பசுவைக் கும்பிடுதல் போன்றவைகளில் அவருக்கு மதிப்புக் கிடையாது. அவர் மிகவும் புத்தி நுட்பமானவர். பசுக் கொலையைத் தடுக்காத சுயராஜ்யத்தால் பலனில்லை யென்று, இந்துக்களுக்கு இன்ப மூட்டுவதற்காக ஒரு தடவை யல்ல, அவர் பலதடவை கூற வேண்டியதாக இருக்கிறது.'[17]

1923ல் இந்து மகாசபையைத் திருத்தி அமைத்ததற் கப்புறம், அதனுடைய நோக்கமாகிய இந்து ராஜ்யத்தை ஸ்தாபிப்பதற்கு மூன்று திட்டங்கள் கையாளப்பட்டன. 'முஸ்லீம்கள் சிறுபான்மையராக இருந்தும், தங்களுடைய ராணுவ பலத்துக்காக எப்பொழுதும் விசேஷ உரிமைகளை அனுபவித்து வந்திருக்கிருர்கள். இந்துக்கள் தொகையில் பெருவாரியாக இருந்தும்கூட, முஸ்லீம்களுக்கு முன் ஆடுகளைப் போலவே இருந்திருக்கிருர்கள்.'[18] 'இந்து மகாசபை 1923-ல் தனது புதிய கொள்கையை அமைத்த பொழுது, இந்துக்களிடத்தில் ஆக்ரமிப்பு உணர்ச்சியை உண்டாக்கவும், முஸல்மான் என்ற பெயரால் இந்துக்கள் திகிலடைவதைப் போக்குவதற்கும் ஒரு புதுத் திட்டத்தைக் கையாண்டது. இந்தியா முழுவதும், திட்டம் போட்டுக் கலவரங்கள் ஆரம்பிக்கப்பட்டன. ரணகளத்தில் முஸ்லீம்களோடு எவ்வாறு பொருதுவதென்பதற்கு, நகரங்களில் தெருச் சண்டைகள் ஒத்திகை போடப்பட்டன..... முஸ்லீம்களுக்குப் பயப்படுகின்றவரை வகுப்புக் கலவரங்கள் நடைபெரு. இந்துக்கள் படைவீரராவதற்கு இந்தக் கலவரங்கள் வசதி யளிக்கும்.'[19] பண்டித மாளவியாதான் அவர்களை ஒன்று திரட்டிய முக்கியமான மனிதர். அந்தக் காலத்தில் பத்திரிகைகள் அவருடைய பிரயாணத் திட்டங்களைப் பிரசுரித்துவிட்டு, 'பண்டித மாளவியாவின் விஜயத்தைத் தொடர்ந்து, சில வாரங்களில் அந்த நகரில் கொடிய கலவரங்கள் ஏற்பட்டதையும்'[19] போடுவதுண்டு. '1924 பிப்ரவரியில் காந்தி ஜெயிலை விட்டு வந்ததும், நாடு பண்டிதமாளவியாவின் அரசியல் காலிகள் கையிலிருப்பதைக் கண்டார். ஆனால், நிலைமையைச் சமாளிக்க அவருக்குத் தைரியம் கிடையாது.........இந்தத் தீயை அணைக்க மகாத்மா ஒன்றும் செய்யவில்லை; இந்திய இந்துக்களின் அரசியல் வாழ்வுக்கு, தீமையில் வல்ல மாளவியா வழிகாட்டும்படி (1923-27) ஐந்து நீண்ட வருஷங்களை விட்டு விட்டார்.'[20] இந்துக்கள் சைமன் கமிஷனை பகிஷ்கரிக்க விரும்பினுர்கள். அது இந்து முஸ்லீம்கள் ஒன்று சேர்ந்து நடத்தியதாக இருக்கவேண்டுமென்று ஆசைப்பட்டார்கள். 'அதற்கிணங்க இந்துத் தலைவர்கள்கூடி, அவர்களது வழக்கப்படி. முஸ்லீம்களுக் கெதிரான பயங்கர இயக்கத்தை நிறுத்துவதென்று ரகசியத் தீர்மானம் செய்தார்கள். அதன்படி கலவரங்களும் திடீரென்று நின்று விட்டன.'[21] 'திரு. காந்தி வாயைப் பொத்திக் கொண்டு இருந்து விட்டார்; பண்டிதமாளவியா, லாலா லஜபதி போன்ற மகாசபைக்காரர்கள் நடத்தும் ரத்தப்பெருக்கு நாடகத்தைத் தடைசெய்யத் தன் சுண்டு விரலைக் கூட அசைக்கவில்லை; 1928ன் முடிவில் தனது ஓய்வு காலத்திலிருந்து மீளும்போது, சிறைக்குப் போவதற்கு முன் எவ்வாறு

17. Durrani, op. cit., pp. 110-11. 18. *ibid*, p. 113. 19. *ibid.*, p. 114.
20. *ibid.*, pp. 115-116. 21. *ibid.*, p. 116.

இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் அகில இந்தியத் தலைவராக இருந்தாரோ அந்த மாதிரி இல்லை; ஆனால், இந்து வகுப்பாருடைய தலைவராக மட்டுமே வெளிப்பட்டார். மாளவியாவின் இந்து ராஜ்யம், இந்து தேசம் என்ற கொள்கைகளுக்குக் காந்தி மாறியவுடன், பண்டித மாளவியா அரசியல் மேடையை விட்டுவிட்டுத் தன் சொந்தக் காரியங்களைப் பார்க்க மறைந்துவிட்டார். அன்றிருந்து காந்தி இந்து வகுப்பாருக்கு மாத்திரம் தலைவராக இருந்து வருகிறார். அதை அவரே அநேக தடவை ஒப்புக்கொண்டிருக்கிறார். காங்கிரஸ், தனது காரியங்களில் இந்து ஸ்தாபனமாகவே யிருந்து வந்திருக்கிறது. அதனுடைய அங்கத்தினர்களைப் பார்த்தால், அது முழுக்க முழுக்க இந்து தேசிய ஸ்தாபனமாகவே இருந்து வருவது தெரியவரும்.'[22] மகாசபையும், காங்கிரசும் தங்களது ஆட்களை மாற்றிக் கொள்ளுகின்றன. காங்கிரஸ் அங்கத்தினர்கள் மகாசபை அங்கத்தினர்களாவதையும், மகாசபை அங்கத்தினர்கள் காங்கிரஸ் அங்கத்தினர்களாவதையும் தடுத்திருக்கக் கூடியதொரு தீர்மானத்தை, 1938ல் பம்பாயில் கூடிய அ. இ. கா. கமிட்டி ஒதுக்கிவிட்டது; 'ஆனால், முஸ்லிம் லீகின் மீதுள்ள தடை கண்டிப்பான அமுலிலிருந்தது.'[23] '1924லிலிருந்து 1928 வரையுமுள்ள காலம், காந்தி அடைகாத்த காலம்; அதன் முடிவில் சுத்தமான இந்துத் தலைவராக வெளிப்பட்டார்.' உடனே அவர் ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கினார். முஸ்லீம்களோ அதை எட்டிப் பார்க்கவே யில்லை; ஒதுங்கிக் கொண்டார்கள். 1931ல், அவர் வட்ட மேஜை மகாநாட்டுக்குச் செல்வதற்கு முன், இரு சமூகத்தையும் ஒப்பந்தத்திற்கு கொண்டுவர முயற்சிகள் செய்யப்பட்டன. ஆனால், திரு. காந்தி அம்முயற்சிகளைத் தகர்த்து விட்டார். முஸ்லீம்கள் அனைவரும் ஒருங்குகூடி தங்களுடைய கோரிக்கைகளைச் சமர்ப்பிக்க வேண்டு மென்றார். ஏனெனில், தன் கைவசமுள்ள தேசிய முஸ்லீம்களெனப்படும் ஒரு சிலர் இணங்க மாட்டார்கள் என்பது அவருக்கு நன்றாகத் தெரியும்.[24]

'1935-ம் வருடத்திய அரசியல் அமைப்புக்குப் பிறகு, முஸ்லீம் லீக், காங்கிரஸோடு புதிய சீர்திருத்தங்களை அமுலுக்குக் கொண்டுவரலாம் என்று தீர்மானித்தது. காங்கிரஸுக்கும் லீகிற்கும் ஒரே கொள்கையாயிருப்பதால், காங்கிரஸ் லீகிற்குப் போட்டி போடாதென்று எதிர்பார்க்கப் பட்டது....ஆனால், காங்கிரஸோ சவாலுக் கழைத்தது. லீகுக்கு எதிராக அபேட்சகர்களை நிறுத்தியது. காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால் நேரு, காங்கிரஸ், பிரிட்டிஷ் சர்க்கார் என்ற இரு கட்சிகள்தான் நாட்டில் இருக்கின்றன என்று பதிலளித்து விட்டார்.' 1937-ம் வருஷத்திய தேர்தல்களில் காங்கிரஸ் பெருமித வெற்றி அடைந்தது. ஆனால், அது அத்தனையும் இந்துத் தொகுதிகளில்தான். 482 முஸ்லீம் ஸ்தானங்களில் காங்கிரஸ் 58 ஸ்தானங்களுக்குத்தான் போட்டியிடத் தீர்மானித்தது. அதில் 32ஐ இழந்தது. தேர்தல் வெற்றியால் காங்கிரஸ்காரர்களுக்கு மண்டைக் கர்வம் ஒரேயடியாக அளவுக்கு மிஞ்சிப் பெருகிவிட்டது. அரசியல் ஸ்தாபனமான முஸ்லீம்லீக் தனது கடையைக் கட்டிவிட வேண்டும் என்று அவர்கள் கூக்குரலிட்டார்கள். பொது மக்கள் தொடர்பு இயக்கத்தைக் காங்கிரஸ் ஆரம்பித்தது. வகுப்புப் பட்டத்தைத் தூர எறிந்துவிட்டுக் காங்கிரசில் சேரும்படி முஸ்லீம்களைக் கேட்டுக் கொண்டது. இந்த விண்ணப்பம் முஸ்லீம்களுக்கு மாத்திரம் தான் விடப்பட்டது. இந்துக்களோ, காங்கிரசிலும் மகாசபையிலும் ஒரே

22. Durrani, op. cit., p. 117. 23. *ibid.*, p 118. 24. *ibid.*, p. 120.

சமயத்தில் அங்கத்தினராக இருக்கலாம்.[25] 'சிறுபான்மையோரையும் விசேஷ நலன்களையும் பாதுகாப்பதற்குச் சட்டத்தில் இடம் பெற்றுள்ள விசேஷ அதிகாரங்களைக் கவர்னர்கள் பிரயோகிக்காமலிருந்தா லொழிய'[26] தனக்கு அதிகப்படியான ஸ்தானங்கள் கிடைத்த மாகாணங்களில் காங்கிரஸ் பதவி யேற்க மறுத்து விட்டது. யுத்த மேகங்கள் சஞ்சரிப்பதை மனத்தில் வைத்துக் கொண்டு, எப்படியாவது சமாதானத்தை விலைக்கு வாங்கவேண்டு மென்பதற்காக, அரசாங்கம் பணிந்து, வாக்குறுதியளித்தது; முஸ்லீம்களுக்கு மறுபடியும் துரோக மிழைத்தது. 'அதிகாரத்தை மேற்கொண்ட உடனே முஸ்லீம்களை மந்திரி சபைகளில் அனுமதிக்கக் கடமைப்பட்டிருக்கவில்லை என்று காங்கிரஸ் முதலில் வெளியிட்டது. அதற்கிணங்க ஒரிஸா மந்திரி சபையில் முஸ்லீம் அங்கத்தினர் இடம் பெறவில்லை. மத்திய மாகாண மந்திரி சபையிலுள்ள மந்திரியையும் விலக்கச் சந்தர்ப்பம் கண்டுபிடிக்கப் பட்டது. இரண்டாவதாக, தங்களுடைய கட்சிகளை விட்டு நீங்கிக் காங்கிரஸ் உறுதி மொழிப்பத்திரத்தில் கையெழுத்திட்டால், முஸ்லீம்களை மந்திரி சபைக்குள் எடுத்துக் கொள்வதாகக் காங்கிரஸ் கூறியது.'[27]

'ஆனால், காங்கிரஸ் ஆட்சி முஸ்லீம்களுக்கு அநியாயமாகவும் கொடுமை யாகவும் இருந்ததென்ற உண்மை அப்படியே யிருக்கின்றது.......காங்கிரஸ் பெரும்பான்மையோராக இருக்கும் மாகாணங்களில் உள்ள இந்துக்கள், இந்து ராஜ்யம் வந்ததாகவே மதித்து நடக்கலானார்கள்......எல்லாப் பொதுக் கட்டிடங்களிலும், பள்ளிக்கூடங்களிலும் காங்கிரஸ் கொடி பறக்க வேண்டுமென்று மந்திரிசபைகள் உத்தரவிட்டன...இந்துக்களின் ஆதிக்கத்தை மீட்டிக் கொண்டு வருவதற்கும், முஸ்லீம்களை வெறுப்பதற்கும் அறிகுறியான வந்தேமாதரப் பாட்டைப் பாடுவதற்கு அனுமதியும், உத்தரவும் கொடுக்கப் பட்டது. காங்கிரஸ் ஆட்சியுள்ள மாகாண சட்டசபைகளில் வந்தேமாதரப் பாட்டுக்குப்பின் நடவடிக்கைகள் தொடங்கப்பட்டன.'[28] 'பண்டித மாளவியா 1923-27 ல் உக்கிரமாகக் கடைப்பிடித்த, முஸ்லீம் பொதுமக்களைப் பயமுறுத்தும் திட்டங்களும் மீண்டும் தொடங்கப்பட்டன.' ஷாரிப், பஸ்லுல் ஹக், கே. எஸ். அப்துல் ரஹ்மான்கான் ஆகியோருடைய அறிக்கை களில் மேற்படி விவரங்களைக் காணலாம்.[29]

காங்கிரஸ் ஆட்சி, பின்கண்ட விதங்களி லெல்லாம் இந்துக் குற்ற வாளிகளைப் பாதுகாத்தது: (1) முஸ்லீம்கள் பசுக்கொலை புரிகின்ற உரிமையை விட்டுவிட்டு மன்னிப்புக் கோரினால், அவர்களோடு ராஜி செய்து கொள்ளும்படியாகக் கீழ் அதிகாரிகளுக்கு ஊக்கமளிக்கப்பட்டது. (2) சாட்சியமில்லாத போது குற்றவாளிகள் தப்பித்துச் செல்வதற்காகப் போலீஸ் புலன் விசாரிப்பதைத் தாமதிக்கும்படி விடப்பட்டது. மாஜிஸ்டிரேட்டுகள் மாற்றப்பட்டு முஸ்லீம் பகுதிகளில் தண்டப் போலீஸ் நிறுவப்பட்டது.

சாங்தூர் பீஸ்வா வழக்கில், ஓர் இந்துவைக் கொன்றதற்காகச் சில முஸ்லீம்களுக்கு மரண தண்டனையும், இன்னும் சிலருக்குத் தீவாந்தர தண்டனையும் விதிக்கப்பட்டது. ஹைகோர்ட்டில் இந்தத் தண்டனை ரத்து செய்யப்பட்டது. இந்தத் தீர்ப்பிலிருந்து திரு. துரானி விரிவாக மேற்கோள்

25. Durrani, op. cit., pp. 123-4. 26. *ibid.*, p. 126.
27. *ibid.*, pp. 127-8. 28. *ibid.*, pp. 129-130. 29. *ibid.*, p. 131.

எடுத்துக்காட்ட ஆரம்பிக்கிறார். செஷன்ஸ் நீதிபதியோ ஓர் ஆங்கிலேயர். திரு. துரானி இது பற்றிச் சொல்வதாவது: 'மத்திய மாகாணப் பிரதம மந்திரிக்கு வெட்கம் மானம் ஏதாவது இருக்குமானால், தற்கொலை செய்து கொண்டிருக்கவேண்டும் அல்லது பொதுவாழ்வி லிருந்தாவது விலகி யிருக்க வேண்டும். தனது தண்டனைக் காலத்தை அநேகமா யனுபவித்த கைதியை விடுவித்ததற்காக யூசுப் ஷாரிப் பதவியினின்று நீக்கப்பட்டார். ஆனால், ஜனங்களைக் கொல்வதற்காகச் செய்த அருவருக்கத் தக்க சூழ்ச்சிக்கு முகாந் தரம் கூறுமாறு, காங்கிரஸ், பண்டித ஷுக்லாவை (பிரதமர்) அழைக்க வில்லை...........காங்கிரஸின் சர்வாதிகாரியும், பண்டித ஷுக்லாவின் ஆதர வாளருமாகிய திரு. காந்தி, சத்தியம் அஹிம்சை அந்தரங்கக் குரல் இவை களைப் பற்றி ஓயாமல் பிதற்றிக்கொண்டே யிருக்கிறார். சர்வ வல்லவனை கடவுள் இத்தகைய கபடர்களிடம் ஒருக்காலும் பேசுவதில்லை. திரு. காந்தி யினுடைய அந்தரங்கக் குரல் வேறு யாருடையதாகவும் இருக்கக்கூடும். எது எப்படி யிருந்தாலும், இப்படிப்பட்ட நீதியையும் நல்லரசாட்சியையும் கண்முன் நேரிற் கண்டபிறகு, இந்துக்களுக்குத் தாஸர்களாக இருக்க இந்திய முஸ்லீம்கள் மனமிசையப் போவதில்லை.'[30]

காங்கிரஸ் அரசாட்சியின் அட்டூழியங்களைப் பற்றி மேலும் விவரிக்கப் புகுகின்றார்: 'முஸ்லீம்கள் "அஸான்" கூப்பிடவிடாதபடி சில இடங்களில் தடை செய்யப்பட்டார்கள். உணவுக்குப் பசுவைக் கொல்வது தடுக்கப்பட்டது. மசூதிகளும், சமாதியிடங்களும் அனுசாரப் படுத்தப்பட்டன. அதற்கு நிவாரணம் உண்டென்ற நம்பிக்கையில்லை. இதற்கெல்லாம் மேலாக, நுட்பமான முழுத்திட்டம் ஒன்று கைவசம் வைத் திருந்தார்கள். முஸ்லீம்களுடைய கலாசார ஐக்கியத்தை அழித்து அவர் களது முஸ்லீம் தன்மையைக் குறைப்பதுதான் வார்தாக் கல்வித் திட்டத்தின் நோக்கம். வருங்காலக் காங்கிரஸ் ஆட்சியில், இதுவே இந்தியா பூராவும் கட்டாயமாகப் புகுத்தப்படும். மத்திய மாகாணத்தில் வித்தியா மந்திர் திட்டம் என்ற உருவத்தில் அது புகுத்தப்பட்டபோது அதைக் கொஞ்சம் ருசி பார்த்தாகிவிட்டது.'[31] இதற்கெல்லாமப்புறம் காங்கிரசின் ராஜிநாமாதான் முஸ்லீம்களுக்கு ஒரு பெரிய நிம்மதியாக ஆகியது. தனிநபர் சத்தியாக்கிர கமும், கிரிப்ஸின் தாராளத் திட்டமும் பின் தொடர்ந்தன. முஸ்லீம் இந்தியா பிரிந்து, ஒரு சுதந்திரமான முஸ்லீம் ராஜ்யத்தை ஸ்தாபிக்க அதில் இடமளிக் கப்பட்டிருந்தது. அது ஒன்றுதான் அதிலுள்ள நல்ல அம்சம். அதைக் காங்கிரஸால் காணச் சகிக்கவில்லை.

1942 ஆகஸ்டு 8-ல், அ. இ. கா. கமிட்டியின் 'வெளிப்படைக் கலக'த் தீர்மானம், 'ஜப்பானை நேரடியாக அழைப்பதாய் இருந்தது. ஜப்பா னியப்படைகள் எல்லையைத் தாண்டி வந்து, இந்த நாட்டைக் கைப்பற்ற எல்லை யோரத்தில் காத்துக்கொண்டிருந்தன. இங்நிலையில், ஆகஸ்டு தீர்மா னம் இந்தியாவுக்கு இழைக்கப்பட்ட மிகக் கொடிய துரோகச் செயலாகும்; அதுவும், சிறப்பாக முஸ்லீம்களுக் கென்று கூறலாம். இந்துக்கள் தங்களைக் கூறிக்கொள்வது போல, முஸ்லீம்கள் ஜப்பானியருடன் உறவு கொண்டவர்க ளில்லை.'[32] 'லின்லித்கோ பிரபு தனது நீண்டகால ஆட்சியில், துரிதமாகவும்

30. Durrani, op. cit., pp. 134-35.
31. *ibid.*, pp. 135-6. 32. *ibid.*, pp. 139-40.

சரியாகவும் நடந்து கொண்டது, இந்த ஒரு சந்தர்ப்பத்தில்தான். உணர்ச்சியைத் தூண்டும் காந்தி நாடகம், முதல் காட்சியிலேயே முடிக்கப்பட்டது. இந்து அரசாட்சியில் ஏங்கி நிற்கவேண்டிய நிலைமையிலிருந்து முஸ்லீம்கள் காப்பாற்றப்பட்டார்கள்.'[33]

'இஸ்லாம், அறமும் அரசியலும் கலந்த சித்தாந்தமாக இருந்த போதிலும், இந்திய முஸ்லீம்கள் அரசியல் சிந்தனையில் குறைவு பட்டவர்களாகவே இருந்திருக்கிறார்கள். ஆனால், உலகம் அவர்களை அப்படியே விட்டு விடாது. இந்துக்கள் அவர்கள்மீது தொடுத்த "முழு" யுத்தம் அவர்களை அடியோடு ஒரு குலுக்குக் குலுக்கி விட்டது. 1937-ல் அவர்கள் திகைத்துப் போனார்கள். 1938-ல், இந்து முஸ்லீம் ஐக்கிய தேசத்தில் தங்களுக்கு இடமிராது என்பதை முஸ்லீம்கள் உணர்ந்தனர். இதைக் காட்டும் அறிகுறிகளை ஆங்காங்கே காண்கிறோம். இந்தியாவில் இரண்டு தேசங்கள் இருந்தன என்றும், முஸ்லீம்கள் தனி தேசமாக இருக்க உரிமை பெற்றவர்களென்றும் அவ்வருஷக் கடைசியில் இந்தியா முழுதும் குரல்கள் தெளிவாகக் கிளம்ப ஆரம்பித்தன.'[34] ஆகவே, 1940 மார்ச்சில் லாகூரில் கூடிய அ. இ. முஸ்லீம் லீகின் பாகிஸ்தான் தீர்மானம், 'ஏற்கெனவே இருந்த லீகின் அரசியல் கொள்கையையே வெளியிட்டு ஊர்ஜிதப்படுத்தியது.'[35] ஆகவே, திரு. துரானியின் கருத்துப்படி, முஸ்லீம்கள் தாங்கள் ஒரு தனித் தேசீய இனமென்பதை 1938-ல் தான் உணர்ந்தார்கள்; பாகிஸ்தானில் தங்களது மனத்தை ஈடுபடுத்தி விட்டார்கள். 'பாகிஸ்தான் அவர்களுடைய கற்பனையைப் பிரகாசிக்கச் செய்துவிட்டது; கனவிலும் காணமுடியாத, அதிசயமான அளவற்ற சௌகரியங்கள் அதிலிருப்பதாகக் காண்கிறார்கள். கொடுமை, அநீதி, சுரண்டல், சுயநலம், பேராசை, வறுமையச்சம் இவைகளெல்லாம் அற்ற நாடாகப் பாகிஸ்தானைக் கருதுகிறார்கள்......இஸ்லாமிய ராஜ்யமாக இருப்பதால், பிரஜா உரிமைகள், பொருளாதார நன்மைகள் போன்ற விஷயங்களில் முஸ்லீம்களுக்கும், முஸ்லீம்களல்லாதாருக்கும் யாதொருவித வேறுபாடும் இராதென்று நினைக்கிறார்கள்......அவர்கள் அதை, **ஹுக்குமத்-இ-இலாஹி**, அதாவது அல்லாவின் ராஜ்யமென்று அழைக்கிறார்கள். அதைச் சிலர் அறியாமையால், கடவுளே வந்து அரசாள்கின்ற அரசாங்கம் என்று கருதும்படி செய்துவிட்டார்கள். இஸ்லாமிய ராஜ்யம் கடவுளே வந்து அரசாள்கின்ற ஆட்சியல்ல...............இஸ்லாமிய ராஜ்யம் ஒரு ஜனநாயகம். அங்குள்ள மக்கள் "நாங்கள்தான் அரசாங்கம்" என்று உணரும் நிலையி லிருப்பார்கள்; அவ்வாறு கூறும் உரிமையும் பெற்றிருப்பார்கள்.'[36]

திரு. துரானியின் வாசகங்களை அதிகமாகக் கையாண்டிருப்பதால் அவருடைய அறிக்கைகளையும் முடிவுகளையும் நான் ஏற்றுக்கொள்கிறேன் என்று எண்ணிவிடவேண்டாம். அவைகளில் அனேகம் நகைப்பிற்கிடமானவை என்பது வெளிப்படை; அக்கிரமமான பொய்கள். ஆனால், இரு தேசீய இனங்கள் என்ற கொள்கை எப்படி உருவாயிற்று என்பதை முறையாகக் கூறுகிறார்: 'இந்துக்களும் முஸ்லீம்களும் இரு வகுப்பினர்மட்டும் அல்லர்; இரு தேசீய இனத்தினர் என்ற கொள்கையை' முதன் முதல் வரையறுத்தவர்களில் தானும் ஒருவர் என்று உரிமை கொண்டாடுகிறார். மேலும், அவர் கூறுவதாவது: 'இரு தேசீய இனத்தினராக இருப்பதால் ஒப்பந்தத்

33. Durranni, op. cit., p. 141. 34. *ibid.*, pp. 153-4. 35. *ibid.*, p. 157.
36. *ibid.*, pp. 158-9

தின் மூலமாக ஓர் ஐக்கிய தேசம் ஏற்படாது. ஒன்று, ஒரு வகுப்பை இன்னொரு வகுப்பு, தன்னுள் அடக்கிவிட வேண்டும் அல்லது அழித்துவிட வேண்டும். இல்லாவிட்டால், பிறருக்கு அவ்வகுப்பு இன்னலிழைக்காதபடி யாவது வைத்துவிடவேண்டும்......முஸ்லீம்கள் இந்தியாவை இஸ்லாமுக்காக மீண்டும் ஜெயிக்கப் பாடுபடவேண்டும். இவ்வாறு ஜெயித்தலையே, முஸ்லீம்கள் தங்களது அரசியல் இலட்சியமாக வைத்துக் கொள்ளவேண்டும் என்று நான் வாதாடினேன். முஸ்லீம் தேசிய இனத்தைச் சேர்ந்தவனுக இருப்பதால், இவ்வாறு நான் வாதாடுவது எனக்கு இயற்கை. இன்றும் நான் அவ்வாறே நினைக்கிறேன். ஏனெனில், இந்தியாவின் அரசியல் கதிமோட்சம் இஸ்லாமில்தான் இருக்கிறதென்று நான் மனப்பூர்வமாய் நம்புகிறேன்.'[37]

## 4. ஒரு தேசிய இனராஜ்யமும் பல தேசிய இனராஜ்யமும்

நாம் உடனடியாகக் கவனிக்கவேண்டிய விஷயம் இதுதான். விவகார தோரணைக்காக, 1938 லிருந்து தாங்களொரு தனித் தேசிய இனமென்பதை முஸ்லீம்கள் உணர்ந்துகொண்டார்களென்று வைத்துக்கொண்டு, இந்து முஸ்லீம் ராஜ்யங்களை ஏற்படுத்துவதன் மூலம் பிரசினை தீர்ந்துவிடுமா? அவ்விரு தேசிய இன ராஜ்யங்களிலுள்ள சிறுபான்மையோர் நல்ல நிலைமையி லிருப்பார்களா? இது சம்பந்தமாக, மேனுட்டுச் சரித்திரத்தைப் படிப்பது இலாபகரமாயிருக்கும். கூடுமானல், சமீபகாலச் சரித்திரத்தி லிருந்து படிப்பினைகளை அறிந்துகொள்வதும் நல்லது. முதல் உலக யுத்தத் திற்குப் பிறகு மத்திய ஐரோப்பிய சாம்ராஜ்யங்கள் சிதறின. அச்சிதறல்களி லிருந்து, ஏராளமான சின்னஞ்சிறு ராஜ்யங்கள் சிருஷ்டிக்கப்பட்டன. கூடுமானவரை, ஒரேயின மக்களைக்கொண்ட ராஜ்யங்களை உண்டாக்க முயற்சி செய்யப்பட்டது. முடிவு இதுதான்: யுத்தத்திற்கு முன்பு சிறு பான்மைத் தேசிய இனங்களாக இருந்தவை, இந்தப் புதிய ராஜ்யங்களில் தாங்கள் பெரும்பான்மைத் தேசிய இனமாக இருப்பதைக் காணலாயின. இவ்வினங்களின் பெயரே இந்த ராஜ்யங்களுக்கும் இடப்பட்டன. உருக் குலைந்த பழைய ராஜ்யங்களில் பெரும்பான்மைத் தேசிய இனமாயிருந்தவை, இப்புதிய ராஜ்யங்களில் இதரர்களோடு சிறுபான்மையாயின. சிறுபான்மை யினர் அக்கிரமமாக நடத்தப்படக்கூடு மாதலால், உலக சமாதானத்துக்குக் கேடு சூழலாமெனப் பயமேற்பட்டது. அவர்களை எப்படி நடத்துவதென்பது சர்வதேசங்களும் கவனிக்கவேண்டிய விஷயமாயிற்று. சிறுபான்மையோரைக் காப்பதற்காக, இந்தப் புதிய ராஜ்யங்களெல்லாம் உடன்படிக்கைகள் செய்து கொள்ள வேண்டியதாயிற்று. இந்த உடன்படிக்கைகள், 'சிறுபான்மை உடன்படிக்கைகள்' எனப்பட்டன. சிறுபான்மையினரைக் காப்பாற்றுவ தாகச் சர்வதேச சங்கம் உத்தரவாத மளித்தது.

இந்தியப் பிரிவினையின் நோக்கம் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் தனித்தனி ராஜ்யங்களை ஏற்படுத்துவது. அதாவது ஐரோப்பாவில் உலக யுத்தத்திற்குப் பிறகு தேசிய இன ராஜ்யங்கள் ஏற்பட்டதைப்போல. தத்தம் ராஜ்யங்களில் இந்துக்களும் முஸ்லீம்களும் தத்தம் அறிவாற்றல்களுக்கேற்ப, தங்களுடைய கலாசார, ஆத்மீக, பொருளாதார, அரசியல் வாழ்வை ஓங்கு

37. Durrani, op. cit., p. 146.

விக்கச் சந்தர்ப்பம் அளிக்கும் தங்களது வருங்காலத்தைத் தாங்களே உருப்படுத்தலாம். இது கைகூடுமானுல், இந்த நோக்கத்தைப்பற்றி யாரும் தகராறு செய்யத் தேவையில்லை. இந்த நாட்டின் எந்தப் பகுதியிலேனும் இந்துக்களையோ அல்லது முஸ்லீம்களையோ மாத்திரம்கொண்ட ராஜ்யங்களை அடைய முடியாதவாறு, இந்து முஸ்லீம் ஜனத்தொகைகள் எல்லாவிடத்திலும் பரவியும் விரவியும் இருக்கின்றன. அப்படிப் பிரித்தாலும், மறு சமுதாயத்தார் அந்த ராஜ்யத்தில் சிறுபான்மையோராக இல்லாமலிரார். ஒரு பிரதேசத்தில் பெரும்பான்மையாக வாழ்கின்ற மக்களின் மதத்தை அடிப்படையாகக் கொண்டே வெளிப்படையாகப் பிரித்தால், அவை முஸ்லீம் தேசிய இன ராஜ்யங்களாகுவது திண்ணம். அப்படி உண்டாக்கப்பட்ட பிறகு, ஒரு தேசிய இன ராஜ்யத்தை ஆட்டி வைக்கும் பொதுவான மனோபாவத்திலிருந்தும், சித்தாந்தத்திலிருந்தும் அது தப்பி விடலாம் என்பது நடக்காத காரியம். மெக்கார்ட்னியின் வார்த்தைகள்: 'வெவ்வேறு ராஜ்யாதிகாரம் பெற்ற பெரும்பான்மைத் தேசிய இனங்கள், (இந்தியாவில், முஸ்லீம் ராஜ்யத்தில் முஸ்லீம்களும், இந்து ராஜ்யத்தில் இந்துக்களுமா யிருப்பார்கள்) அந்த ராஜ்யங்களைத் தங்களுடைய தேசிய இலட்சியங்களையும் ஆர்வங்களையும் நிறைவேற்றுவதற்குதவும் கருவிகளாக்க முயன்ருல், அந்த முயற்சி மடத்தனமானது. அக்காரியமும் உருப்படாது. அப்படித்தான் செய்வோமென்று பிடிவாதம் பண்ணுகின்றவரை எந்த சர்வதேசியப் பாதுகாப்பு முறையும் சிறுபான்மையோரின் நிலைமையைச் சகிக்கக்கூடிய தாக்கப் போவதில்லை.'[1] ஒரு தேசிய இன ராஜ்யத்தில் பிற தேசிய இனச் சிறுபான்மைகள் இருப்பதென்பது முரண்பாடான விஷயம். இந்தப் பிரசினையைத் தீர்ப்பதற்கு இரண்டு வழிகளிருக்கின்றன. ஒரு வழி, சிறுபான்மையோரை ராஜ்யத்தினின்று விலக்கி விடுவது. ராஜ்யத்திலுள்ள சிறுபான்மையோரை விலக்கும்படியாக அதற்கு எல்லைகளை நிர்ணயிக்கலாம், அல்லது ஜனத்தொகையை மாற்றிக் கொள்ளலாம்.[2] இரண்டாவது வழி, ராஜ்யத்தின்

1. C. A. Macartney: *National States and National Minorities*, (1934) p. 421.

2. பாகிஸ்தான் சிருஷ்டிப்பதை ஆதரிக்கின்ற டாக்டர் அம்பேத்கார் சொல்லுகின்ருர்: 'ஒரே அரசாங்கம் என்ற இரும்புக் கட்டிடத்தில், பெரும்பான்மையும் சிறுபான்மையுமான இரு சமூகங்களை ஒன்றுக்கொன்று எதிரிடையாக நிற்கும்படி வைத்துவிடுவதால் வகுப்புப் பிரசினையைத் தீர்த்துவிட முடியாது.' பாகிஸ்தானிலிருந்து முஸ்லீமல்லாதவர்கள் பெரும்பான்மையாக இருக்கு மிடங்களை ஒதுக்கிவிட்டு, எல்லை திருத்தி அமைத்துக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், பாகிஸ்தான் திட்டம் வகுப்புப் பிரசினையின் தீமைகளை ஒழிக்க முடியாது. ஆகவே, பாகிஸ்தானைப் பொறுத்த மட்டும் ஜனத்தொகைகளை மாற்றுவதும், எல்லைகளைமாற்றி அமைப்பதும் சாத்தியமானதென்று அவர் யோசனை கூறுகிருர். ஆனுல், குறிப்பிடத்தக்க அளவுள்ள முஸ்லீம் ஜனத்தொகையை தன்னகத்தே கொள்ளாத, சர்வம் இந்து மயமாயிருக்கக் கூடிய ஓர் இந்துஸ்தானத்தை எப்படி உண்டாக்குவது என்பதற்கு அவராலும் வழிசொல்ல முடியவில்லை. அந்தப் பிரசினை அவ்வளவு பெரிதாக இருக்காதென்றும், அப்பிரசினையைக் குறைத்து விடுவது இந்துக்களுக்குச் சாதகமாக இருக்குமென்றும் ஏதோ கூறிவிட்டுத் திருப்தி யடைகிருர்.—*vide* Dr. B. R. Ambedkar: *Pakistan or the Partition of India*, Chap. VI, sections 2 and 3, pp. 95-107.

லீகினுடைய தீர்மானத்துக்குக் கொள்ளக்கூடிய சரியான அர்த்தத்தின்படி, எல்லைகள் எப்படி இருக்கக் கூடும் என்பதைத் தீரயோசனை செய்து பார்த்தேன். ஆனுல், 1944ல் திரு. ஜின்னு, மகாத்மா காந்தியோடு நடத்திய பேச்சு வார்த்தைகளில் தற்போதைய

அடிப்படையை மாற்றி விடுவது. ஒரு தேசிய இன ராஜ்யமாக இருப்பதை ஒழித்துவிட்டுப் பல தேசிய இனங்களைக்கொண்ட ராஜ்யத்தை ஏற்படுத்தல் வேண்டும்.

இந்தியாவெங்கும் இந்துக்களும் முஸ்லீம்களும் பரவி ஒன்றுக்குள் ஒன்ருகக் கலந்திருப்பதைக் காணுமிடத்து, நாட்டின் எந்தப் பகுதியையாவது பிரித்து, அதைச் சிறுபான்மையோரற்ற ஒரு ராஜ்யமாக்குவதென்பது இயலாத காரியம். இது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படுவதாக இருக்கிறது. ஆகவே, ஒரு தனி முஸ்லீம் ராஜ்யத்தை யல்லாது மற்ற வகுப்பைச் சேர்ந்த சிறுபான்மைக் கட்சிகளைத் தன்னகத்தே கொண்ட பல பெரிய இந்து முஸ்லீம் தேசிய இன ராஜ்யங்களை நிறுவுவதே சரி எனக் கொள்ளப்படுகிறது. ஒரேவித இனத்தாரைக் கொண்ட ராஜ்யமாக எவ்விதப் பிரிவினையும் செய்ய இயலாது.

ஜனத்தொகையை மாற்றுவதால் ஒரே இனத்தாரைக் கொண்ட ராஜ்யத்தை ஏற்படுத்த முடியுமா? டாக்டர் லத்தீபும், டாக்டர் அம்பேத்காரும் தவிர, வேறு யாரும் இம்முறையை ஆதரிக்கவில்லை. 1940 மார்ச்சில், லாகூரில் கூடிய லீக் மாநாட்டுத் தலைமைப் பிரசங்கத்தில் திரு. ஜின்னு கூறியதாவது: 'இந்தியப் பிரிவினைக்கு சாத்தியமான அளவு ஜனத்தொகையை மாற்றிக் கொள்வது பற்றியும் கவனிக்கப்படும்.'[3] மாற்றிக்கொள்ளவேண்டிய பெருவாரியான ஜனத்தொகை, அதற்கேற்படும் செலவுகள், அசௌகரியங்களைக் கவனித்தாலும், வெளிக் கிளம்பவேண்டிய இந்துக்கள், முஸ்லீம்கள் தாங்கள் வேரூன்றிய தாயகத்தின்மீது கொண்ட பற்றுதல் முதலியவைகளைக் கவனித்தாலும் இது உருப்படாது என்று மற்றவர்கள் கருதியிருக்கிருர்கள். இது சம்பந்தமாக ஐரோப்பியச் சிறுபான்மையோரின் அனுபவத்தைக் கவனிக்கலாம்:

சமாதான உடன்படிக்கைகளின்படி தாமே விரும்பி இடம் மாறுவதும், கட்டாயப்படுத்தி இடம் மாற்றுவதுமான இரண்டு வழிகளும் சோதிக்கப்பட்டன. மெக்கார்ட்னி சொல்லுகிருர்: 'தாமே விரும்பிக் குடியேறியவர்கள் உண்மையாக வெகு சொற்பமானவர்கள். தன்னிச்சையாகவும், பரஸ்பரமாகவும் குடியேறுவதற் கென்று ஒப்பந்தம் ஏற்பட்டிருந்தாலும், அது மிகச் சொற்ப அளவிலன்றி நடைபெறவே யில்லை.'[4] இந்தியாவில், நிலைமை வேறு

மாகாண எல்லைகளே இருக்கவேண்டுமென்று கூறியதாகச் சொல்லப்படுகிறது. ஜனத்தொகையை மாற்றுவதைப் பற்றிக் கவனிப்போம். டாக்டர் அம்பேத்கார் வகுத்த எல்லைகளின்படி, வடமேற்கு வடகிழக்குப் பிராந்தியங்களிலிருந்து முஸ்லீம் அல்லாதாரை வெளியேற்றுவதென்ருல், அவர்களுடைய தொகை முறையே 61 லட்சமும், 1 கோடி 34 லட்சமும், இதற்கு மேலும் இருக்கின்றன என்று கூறினுல் போதுமானது. துருக்கி, கிரீஸ், பல்கேரியா முதலிய நாடுகளில் ஒரு பிரதேசத்திலிருந்து இன்னொன்றுக்கு மாற்றப்பட்ட ஜனத்தொகை 2 கோடி என்று சொல்லுகிருர். இந்தத் தகவலை எங்கிருந்து பெற்ருர் என்று நமக்குத் தெரியவில்லை. மெக்கார்ட்னி கொடுக்கின்ற புள்ளிகளின்படி, இம்மூன்று ராஜ்யங்களின் ஜனத்தொகை 250 லட்சம். இம்மூன்று நாடுகளிலுமுள்ள சிறு பான்மையோர் 35 லட்சத்திற்குக் கொஞ்சம் அதிகம். பல்கேரியாவுக்கும் கிரீசுக்குமிடையே மாற்றவேண்டிய ஜனத்தொகை 154,691 பேர். அதேபோல் கிரீசுக்கும் துருக்கிக்கும் இடையில் மாற்றுதற்குரியவர்களின் எண்ணிக்கை 545,551.

3. *Speeches and Writings of Mr. Jinnah,* Third Edition, p. 158.
4. Macartney, op. cit., pp. 440-1.

விதமாயிருக்குமென்று நினைப்பதற்கில்லை. கிரீஸுக்கும் துருக்கிக்குமிடையே கட்டாய ஜனத்தொகை மாற்றம் கையாளப்பட்டது. மெக்கார்ட்னி தனது முடிவுகளைச் சுருக்கமாகக் கூறுகிறார்: 'சிறுபான்மையோரின் பிரசினைகளைத் தீர்க்கும்பொருட்டு ஜனத்தொகைகளை மாற்றிய அனுபவங்கள், மீண்டும் அவைகளைப் பரிசோதிப்பதற்கு ஊக்கமளிப்பனவாக இல்லை. யுத்தத்திற்கப்புறம் துருக்கியிலும், பால்கனிலும் நிலைமைகள் சரியாக இல்லையென்று கூறலாம். அமைதியான நிலைமைகளில் இவ்வளவு தேகசிரமமும், பண நஷ்டமும் ஏற்பட்டிரா. எப்படி வைத்துக்கொண்டாலும், இம்முறை மிகக் கடுமையானதே. நிலைமை அமைதியாக இருந்து பெரும்பான்மையோருக்கும் சிறுபான்மையோருக்கும் உள்ள உறவு மகிழ்ச்சி தருவதாக இருந்தால், ஜனத்தொகை மாற்றம் என்பதே தேவையில்லை. இஷ்டமுள்ளவர்கள் மாறிக்கொள்ளலாம் என்ற வேண்டுகோள் பலனற்றுப் போய்விடும். சம்பந்தப்பட்ட மனிதர்களின் இச்சைக்கு மாறாகக் கட்டாயப்படுத்துவது காட்டுமிராண்டித்தனமாகும். உண்மையில், நிர்ப்பந்தமான நிலைமைகளில் தவிர, தன்னிச்சையாக இடம் மாறுவதென்பது நிகழ்வதில்லை. இவ்விதக் காரியங்கள் சங்கடங்கள் நிரம்பியவை. இக்காரியங்களை இரக்கத்தோடு செய்வதா அல்லது ஈவிரக்கமில்லாமல் செய்வதா என்பதுதான் இப்பொழுது கேள்வி.'[5]

ஆகவே, மெக்கார்ட்னி இந்த முடிவுக்கு வருகிறார்; 'சிறுபான்மையோரை நீக்கிவிடுவதன் மூலமாகச் சிறுபான்மைப் பிரசினையைத் தீர்ப்பதற்குச் செய்த முயற்சிகளத்தனையும் உற்சாகமளிப்பனவல்ல.........கலப்பு இனங்களைக் கொண்ட ராஜ்யங்கள், சிறுபான்மையோரின் இடைவிடாத நெருக்குதல்களைச் சமாளித்துக்கொண்டிருக்க வேண்டும்.........இன்றையச் சங்கடங்களெல்லாம், தேசிய இனராஜ்யங்களை அமைக்கவேண்டுமென்பதால் ஏற்படுபவை; ஒரு ராஜ்யத்தில் வாழும் மக்களின் அரசியல் இலட்சியத்தையும், அங்கு வாழும் பெரும்பான்மையோரின் கலாசார, தேசிய இலட்சியங்களையும் ஒன்றெனக் கருதிவிடுவதால் ஏற்படுபவை. அடிப்படையில் வேறுபட்ட இந்த இரண்டு விஷயங்களையும் பற்றிய மனக்குழப்பம் நீக்கப்பட்டால், வெவ்வேறு தேசிய இனத்தைச் சேர்ந்தவர்கள் ஒரு ராஜ்யத்தில் முழு ஒற்றுமையுடன் ஏன் வாழக்கூடாதென்பதற்குக் காரணமேயில்லை. இன்று, தேசியச் சிறுபான்மைகள் மானக்கேட்டால் அவதியுறுகின்றன. முன் சொன்ன குழப்பம்தானிதற்குக் காரணம். குழப்பம் நீங்கினால் இவர்களது நிலைமை சீர்பெறும். இன்றும்கூட, ஐரோப்பாவில் தேசிய இனங்களாலான ராஜ்யங்களை அமைக்க மறுத்த ராஜ்யங்கள் இருக்கின்றன. அங்கு உண்மையான சிறுபான்மைப் பிரசினை கிடையாது.'[6] இதற்கு உதாரணமாகச் சோவியத் யூனியனைக் குறிப்பிடுகிறார். இந்தியப் பிரசினைமீதும் ஒரு பார்வை செலுத்தியிருக்கிறார். 'இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் அரசாங்கத்தாரும், இந்திய ஜனங்களும், ஐரோப்பியச் சிறுபான்மைச் சண்டைகளின் வரலாற்றை அறிந்துகொள்ளுவதனால் ஒன்றும் இழந்துவிடப் போவதில்லை. இந்தியாவில், முழுவதும் மாறுபட்ட இருவிதப் போராட்டங்கள் நடைபெறுகின்றன; ஒன்று, ஆங்கிலேயனுக்கும் இந்தியனுக்கும்; மற்றொன்று, (முடிவில்லாத சிக்கல்கள் ஒருபுறமிருக்க) இந்துவுக்கும் முஸ்லீமுக்கும். இந்தியாவிலுள்ள ஆங்கிலேயர் அன்னிய அதிகாரத்தின் பிரதிநிதியாக இருப்பதன்றி, உள்நாட்டுச் செல்வாக்குள்ள ஜாதியாக இருக்கவில்லை. அவர்களுக்கும்

5. Macartney, op. cit., pp. 448-9. 6. *ibid*., p. 450.

இந்தியர்களுக்கும் நடக்கும் போராட்டம், ஐரோப்பாவில் மாக்கியர்கள் ஹாப்ஸ்பர்க் வம்சத்தாரோடு போரிட்டதைப் பெரும்பாலும் ஒத்திருக்கிறது. இந்திய முஸ்லீம்கள் பிரிட்டிஷாருக்குக் காட்டும் ஆதரவு, ஹாப்ஸ்பர்க்கு களுக்கும் ஜெர்மானியருக்கும் குரோட்டுகளுக்கும் இடையே ஏற்பட்ட நேச உறவை ஞாபகப்படுத்துகிறது. ஹாப்ஸ்பர்க்குகள் ஹங்கேரியின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடுகின்ற உரிமையைத் தாமாக விட்டொழிக்காதவரை, மாக்கியர்களுக்கும், ஹங்கேரிச் சமுதாயங்களுக்கு மிடையே ஏற்பட்ட போராட்டம் உச்சநிலையை அடையாதது போல, இந்தியாவில் ஆங்கிலேயர் இருப்பதானது அங்கு உள்நாட்டுச் சண்டைகளை ஒத்திப்போட்டுக்கொண்டு வருகிறது. இந்தியா உண்மையான சுயாட்சியை நெருங்க நெருங்க, கிழக்கு ஐரோப்பிய ராஜ்யங்களைப் பாழாக்கிய சண்டைகளைப் போன்றவை இங்கும் கிளம்பும். இத்தேச சரித்திரத்தைப் படிக்கிறவர்கள் அதன் படிப்பினைகளை உணருவார்களாக என்று நாம் பிரார்த்தனை தான் செய்யக்கூடும்.'[7] இத்தகைய படிப்பினை யொன்றை இப்புத்தகத்தில் முன்னரே நமக்கு இவர் குறிப்பிட்டிருக் கிறார். அதை நாம் மனத்துட்கொள்வது நலம். ஹாப்ஸ்பர்க்குகளுக்கும் மாக்கியர்களுக்கும் வெளிப்படையான சண்டை ஏற்பட்டபொழுது, குரோட்டு களும் மற்றச் சிறுபான்மையோரும் அரசன் பக்கம் சேர்ந்துகொண்டார்கள். மாக்கியர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். ஹங்கேரி, ஜெர்மானியச் செல் வாக்கை வளர்க்கும் மத்திய அதிகார வர்க்கத்தால், வியன்னாவிலிருந்து ஆளப் படலாயிற்று. இதனால் மாக்கியர்களுக்கும் சிலாக்கியமில்லை; ஸ்லவோனிய ருக்கும் நலமில்லை. இந்த நிலைமையை ஒரு நாவலனான மாக்கியர், தனது ஒரு குரோட்டு நண்பரைப் பார்த்து, 'நாங்கள் தண்டனையாகப் பெற்றதை நீங்கள் வெகுமதியாகப் பெற்றிருக்கிறீர்கள். அவ்வளவுதான்'[8] என்று சொல்லும்படி யாயிற்று.

குறிப்பிடத்தக்க அளவில் மற்ற வகுப்பாரைச் சேர்ந்த சிறுபான்மை யோரைக் கொண்ட இந்து முஸ்லீம் தேசீய இன ராஜ்யங்களை அமைப்பதன் மூலமாக இந்தியப் பிரசினையைத் தீர்ப்பதற்குப் பதிலாக, இது காலம்வரை இருந்தபடியும், இப்பொழுது இருக்கிறபடிக்கும் தேசீய இனப்போக்கற்ற ராஜ்யமாக இந்தியாவை நிலைக்கவிடுவது உசிதமல்லவா? தனித்தனித் தேசீய இன ராஜ்யங்கள் வேண்டுமென்று லீக் வெளியிட்ட ஆசைக்கு இன்னும் சரியாக ஆறு வயதுகூட ஆகவில்லை. அத்தனை நூற்றாண்டுச் சரித்திரத் திற்கும் விரோதமாக அது குறுக்கே பாய முயலுகிறது. ஆகவே, நமது நோக்கம் தேசீய இனராஜ்யங்களை உண்டாக்குவதாக இராமல், தற்போது இருக்கின்ற ஒரு தேசீய இனப்போக்கற்ற ராஜ்யத்தையே வலுப்படுத்துவ தாக இருக்கவேண்டும். தேசீய இனப்போக்கில்லாத இந்தத் தன்மையிலிருந்து இதை மாற்றக்கூடிய தோற்றங்களையும், அமைப்புக்களையும் களைய வேண்டும்.

இந்த ஆராய்ச்சியின் முடிவில் நானும் இதை எடுத்தாளுவதைக் காட்டிலும் சிறப்பாக வேறொன்றும் செய்யமுடியாது என்று கூறி, மெக் கார்ட்னி தன்னுடைய நூலின் இறுதியில் ஆக்டன் பிரபுவின் புத்தகத்தி லிருந்து ஒரு மேற்கோள் காட்டியிருக்கிறார்[9]:— 'அவரவர்களுடைய கடமை களை நிறைவேற்றுவதற்குச் சுதந்திரத்தை அமைப்பதுதான் சமுதாயத்தின்

7. Macartney, op. cit., pp. 480-1. 8. *ibid.*, p. 118.
9. *ibid.*, p. 501.

குறிக்கோள் என்ருல், எந்த ராஜ்யங்கள் வெவ்வேறு தேசீய இனங்களைத் தன்னுள் பெற்று, அவைகளை அடக்கி ஒடுக்காமல் இருக்கின்றனவோ அவை களே மிகச் சிறந்த ராஜ்யங்களாகும்; ஜாதிக் கலப்புகளைக் கொண்டதா யில்லாத ராஜ்யங்கள் பூரணத்துவம் பெற்றவையல்ல. எவைகளில் இனக் கலப்பு முயற்சிகள் மறைந்தொழிந்தனவோ அவைகள் முதுமைத் தளர்ச்சி யடைந்தவை. எந்த ராஜ்யத்திற்குப் பலவேறு இனத்தாரையும் திருப்திப் படுத்தும் திறமையில்லையோ அது தனக்கே தண்டனை விதித்துக்கொள்கிறது. சிறுபான்மையோரின் சக்தியை யழிக்கவும், அவர்களைத் தன்மயமாக்கவும் அல்லது விரட்டியடிக்கவும் எந்த ராஜ்யம் முயலுகிறதோ அது தன்னுடைய ஜீவசக்தியையே அழித்துக்கொள்கிறது. சிறுபான்மையோரைத் தன் னகத்தே கொள்ளப்பெருத ராஜ்யம் சுய ஆட்சியின் முக்கிய அடிப்படையை இழந்ததாகும்.'

## 5. படத்தின் இன்னெரு சாயல்

முந்திய பக்கங்களில், இந்துக்களும் முஸ்லீம்களும் வெவ்வேருனவர்க ளென்பதாகவும், இருவகையினரும் ஒன்று சேரார் என்பதாகவும் ஏதோ கண்டோம். அந்தப் படத்தை இன்னெரு சாயலிலிருந்தும் பார்க்கவேண்டிய திருக்கிறது. அதைச் சிறிது காண்போமாக.

ஜூலியன் ஹக்ஸ்லி சொல்லுகிருர்: 'நாம் "தேசம்" என்று அழைக் கின்ற கூட்டு அமைப்பை உருவாக்குவதற்கு அனேகவித மனிதச் செயல்கள், ஆர்வங்கள், எழுச்சிகள் இயற்கையாகவோ செயற்கையாகவோ உதவியிருக் கின்றன. மதம், கலை, சட்டம், உணவு, சைகை, கூடிப்பேசுதல், உடை, விளையாட்டு எல்லாம் அதில் பங்கு கொண்டவை.'[1] 'இன உணர்ச்சியின் ஒருவித உருவத்தைத் "தேசீயம்" என்கிருேம். அது உறவு முறையினை மாத்திரம் அடிப்படையாகக் கொண்டதல்ல. அதைக் காட்டிலும் விரிவான, ஆனுல், இன்னதென்று வரையறுத்துக்கூற முடியாத வொன்றினை அடிப் படையாகக் கொண்டது தேசீயமென்பது. தேசீய உணர்ச்சியினை ஆக்கு கின்ற சில அம்சங்களாவன: பூகோள எல்லைகளைக்கொண்ட ஒரு நாட்டில் வசிப்பது. ஒருவித உடுப்பை அணிவதற்குக் காரணமான சீதோஷ்ண நிலை. எல்லா மக்களுக்கும் பொதுவான கர்ண பரம்பரையான சமூகப் பழக்க வழக்கங்கள். பொதுவான மதானுஷ்டானங்கள். பொதுவான தொழில் முறைகள். மிகவும் முக்கியமானது பொது மொழி. அதோடு, அதை வலுப்படுத்துகின்ற "இரத்த பாசம்" என்ற கற்பனையில் நம்பிக்கை. ஆனுல், இனவொற்றுமையை உண்டாக்கும் எல்லாவித உள்ளக் கிளர்ச்சி களுக்கும் மேலானது, பரம்பரையான உறவு முறைக்கெல்லாம் மேலானது, வெளி நாட்டினர் தலையிடுவதால் கிடைக்கும் மாறுபாடு. பிறவற்றைக் காட்டிலும் இனஉணர்ச்சியை வளர்த்தது அதுதான். தேசீய வளர்ச்சிக்குக் காரணமாகவிருந்த ஒரு பெரிய அம்சம் வெளிநாட்டிலிருந்து வந்த நெருக் கடியே யாகும்.'[2]

இந்தியாவிலுள்ள இந்துக்களையும் முஸ்லீம்களையும் இவைகளில் முக்கியமான அம்சங்கள் எவ்வாறு பாதித்தன என்று காண்போம்.

1. Julian Huxley: *Race in Europe*, p. 3.
2. *ibid.*, p. 15.

## 1. மதம்

மதத்திலிருந்து தொடங்குகிறேன். இந்துக்களும் முஸ்லீம்களும் வெவ்வேறு மதத்தை அனுஷ்டிக்கிருர்க ளென்பதும், அவர்களுடைய சமூக வாழ்வு முறை அம்மதங்களிலிருந்து கிடைத்தது என்பதும் உண்மை. அவர்களுடைய சடங்குகளும், பழக்கங்களும் வெளித் தோற்றத்தில் மிகவும் மாறுபட்டு ஒன்றுக்கொன்று ஒவ்வாதனவாகவும் தோன்றுகின்றன.

ஒரு மதத்தின் பல உட்பிரிவுகளைச் சேர்ந்தவர்களும் அமைதியாக, இதமாக ஒரே தேசத்தினராக வாழக்கூடும். அந்த மத உட்பிரிவி னிடையே எவ்வளவு வேறுபாடுகள் இருக்குமோ அதைக்காட்டிலும் அதிகமாக இந்து முஸ்லீம் மதவேற்றுமைகள் இல்லை. முஸ்லீம் மசூதிக்குள் கடுமையான எளிமை நிலவுகிறது. தொழுகைப் பாய்களும் தண்ணீர்ப் பானைகளும்தான் அங்கு காணலாம். இதற்கு நேர்மாருனவை இந்துக் கோயில்களின் அலங்கார விக்கிரகங்களும், பூசனை முறைகளும். இவைகளுக்குள்ள வேறுபாடு, புரோடெஸ்டண்டு அல்லது பிரஸ்பிட்டேரியன் மாதாகோவிலுக்கும் ரோமன் கத்தோலிக்க மாதாகோவிலுக்கு முள்ளது போன்றதே; வேறல்ல. புரோடெஸ்டண்டு கோவிலில், தொழுபவர்களுக்கு இருக்கைகளும், போதகர்க்கு மேடையு மிருக்கும். கத்தோலிக்கர் கோவிலில் பிரமாத அலங்காரங்கள், விக்கிரஹங்கள், வர்ணச் சித்திரங்கள், மெழுகுவத்திகள் இன்னும் எத்தனையோ உண்டு. முகம்மதியர்க ளிடையிலும் கூட, வைராக்கியமுள்ள சூனிவகுப்பைச் சேர்ந்தவர்கள் ஷியா வகுப்பினருடைய மொஹர்ரம் ஆடம்பரக் கொண்டாட்டத்தை, இந்துக்களுடைய துர்க்கா பூஜை விழாவை வெறுப்பதுபோல வெறுக்கிருர்கள். இருப்பினும், இங்கிலாந்தின் புரோட்டெஸ்டண்டுகளும் கத்தோலிக்கரும் அல்லது சூனிகளும் ஷியாக்களும் வெவ்வேறு தேசீய இனத்தைச் சேர்ந்தவர்களென்று யாரும் உரிமை கொண்டாடவில்லை. இந்துக்களிலும்கூட கோயில், குளம், மதச்சடங்குகள், அனுஷ்டானங்கள் எல்லாவற்றையும் கண்டிக்கிறவர்கள் இருக்கிருர்கள். எனினும் அவர்கள் இந்துக்களென்றே யழைக்கப்படுகிருர்கள்.

மதத்தினுடைய வெளி அடையாளங்கள், சின்னங்கள், சடங்குகள், விசேஷங்கள், அனுஷ்டானங்கள் ஒருபுறம் இருக்க, ஜனங்கள் தத்துவஞானிகளை நன்கு அறிந்திருக்கின்றனர். அத்தத்துவ ஞானிகள் வாழ்வு, சாவு, சாவுக்குப்பின் வாழ்வு என்பதைப் பற்றிய நுட்பங்களைக் கண்டவர்கள். கடவுள் ஒருவரே, ஆன்மா அழிவற்றது, உலகப்பொருள்கள் ஒன்றுஞ் சதமல்ல, ஆத்மீக விஷயங்களே நித்தியமானவை என்ற உண்மைகளை அவர்கள் போதித் திருக்கின்றனர். இந்துக்களின் வேதாந்தத் தத்துவமும், முஸ்லீம்களின் சூபிக் கொள்கையும் ஒரு முடிவிற்கே வருகின்றன. நித்திய உண்மையை நாடி மனித ஆன்மா செய்யும் முயற்சியனுபவத்தில் எய்திய மேலாம் உணர்ச்சியை, இவை யொன்றிலிருந் தொன்று பெற்றனவோ அல்லது அவை இரண்டுக்கும் பொதுவான ஓர் ஊற்றிலிருந்து பெற்றனவோ தெரியவில்லை. இருமதக் கிரந்தங்களிலும் நன்கு கற்றுணர்ந்த டாக்டர் பகவன்தாஸ் போன்றவர்கள், இருவகை உயர்ந்த நூல்களிலு மிருந்து ஒரே கருத்துள்ள பகுதிகளைச் சுலபமாகத் திரட்டிக் கொடுக்க முடியும்.

'முஸ்லீம் ஆன்மஞானத்தின் மூன்ருவது பிறப்பிடம் இந்தியா. முந்திய அதிகாரமொன்றில், இந்தியாவும் பாரசீக வளைகுடாவும் நெருங்கிய வியா

பார உறவுகள் கொண்டிருந்தன என்பது காட்டப்பட்டது. வியாபாரத்தோடு, சந்தேகமில்லாமல், கருத்துக்களும் பரிமாறப்பட்டன. இந்திய எஃகு, வாள், பொன், விலையுயர்ந்த கற்கள் பாரசீகம், ஈராக்கிற்குச் சென்றன. வர்ணந்தீட்டிய ஆர்ச்சு, டூம் கோபுரங்கள் முதலிய சிற்பக்கலைப் பொருள்களும் அந்நாடுகளுக்குச் சென்றன. அதுபோல இந்தியத் தத்துவ உண்மைகளும் அங்கு சென்றன என்பதும் ஒப்புக் கொள்ளக் கூடியதே. பாஸ்ராவில், ஆதி உமாயதுகளிடம் இந்தியர்கள் உயர்ந்த வரவு செலவு நிர்வாகப் பகுதிகளில் அமர்ந்திருந்தனர். கலிபா முவாவியா சிரியாவில் அண்டியாக், ஹஜ்ஜாஜ், காஷ்கர் முதலிய இடங்களில் இந்தியர்களைக் குடியேற்றினர். மாநிறமும் கருங்கண்களுமுடைய இந்தியர்கள், கலிபாவினுடைய முக்கிய நகரங்களில் முஸ்லீம்களோடு கலந்து வாழ்ந்தார்கள். சாம்ராஜ்யத்தின் கிழக்கு ராஜ்யங்களான கோராசான், ஆப்கனிஸ்தான், சிஸ்டான், பலுசிஸ்தான் முதலிய பகுதிகள், மதமாற்றப்படுவதற்கு முன்பு புத்தமதம் அல்லது ஹிந்துமதத்தைச் சேர்ந்திருந்தன.' பால்க்கில் ஒரு புத்தவிஹாரம் (மடம்) இருந்தது. அதன் தலைவர் பாராமாக். அவருடைய வமிசத்தார், பின்னால் அப்பாசைது கலிபாக்களுடைய பார்மாக்கைடு மந்திரிகள் எனப்பட்டனர்.

'ஆதிகாலத்திலிருந்து அராபியர்கள் இந்திய இலக்கியங்களையும், விஞ்ஞானங்களையும் பயின்றார்கள். புத்தமத நூல்களை ஹிஜிரா இரண்டாவது நூற்றாண்டில் மொழிபெயர்த்தார்கள். அவைகளிற் சில: **கிதாபல்-புத், பிலாவ்ஹர் வா புடாசிப்**, வான நூல், மருத்துவநூல் **சிந்த்ஹிந்த்** (சித்தாந்தம்), **ஷுஷ்ருத்** (சுஸ்ருதம்), **ஸ்ராக்** (சாரகம்), **காலிலா தாம்நா** (பஞ்சதந்திரம்), **கிதாப் சிந்தாபாத்** போன்ற கதைகள், அறநூல்கள், **ஷானக்** (சாணக்கியம்) **பித்பா** (இதோபதேசம்), தருக்கநூல், ராணுவநூல்கள் முதலியனவாம்.

'அவர்கள் எந்த மக்களோடு பழகநேர்ந்ததோ அவர்களுடைய பழக்க வழக்கங்கள், விஞ்ஞானம், மதங்கள் எல்லாவற்றையும் வெகு சிரத்தையோடு அறியலானார்கள். அல்-கிந்தி என்பவர் இந்திய மதங்களைப்பற்றி ஒருநூல் எழுதினர். சுலைமானும், மாசூதியும் தங்கள் பிரயாணத்திலறிந்த விஷயங்களைத் தங்களுடைய நூல்களில் எழுதிவைத்தார்கள். அல்-நாடிம், அல்-அஷாரி, அல் பிரூனி ஷாரஸ்தானி போன்றவர்கள் இந்திய மதங்கள், தத்துவ முறைகளைப் பற்றித் தங்களுடைய புத்தகங்களில் ஏராளமாக எழுதியிருக்கிறார்கள்.

'புத்த சரித்திரம் முஸ்லீம் இலக்கியத்தில் ஒரு சாதுவின் சரித்திரம் போல நுழைந்திருக்கிறது. முஸ்லீம் பக்த சரித்திர நூலார், இபின் ஆதாம் கதைகளைப் புத்த சரித்திரத்தைப் போலாக்கி யிருக்கிறார்கள். இருவரிருவராக ஓரிடத்தில் இரண்டு இரவுகளுக்குமேல் தங்காமல் சுற்றித்திரிகின்ற இந்திய சாதுக்களை முஸ்லீம் அறிஞர்கள் நன்கு அறிவார்கள். அவர்களிடமிருந்து அகத் தூய்மை, புறத்தூய்மை, சத்தியம், வறுமை என்ற நான்முக விரதங்களைத் தெரிந்தெடுத்துக் கொண்டார்கள். அதோடு ஜபமாலையும் கூட. நிர்வாணக்கருத்து, எண்வகை விரதங்கள், யோகப்பயிற்சி, மந்திர சக்திகள் முதலியன தானு, தாரிகா அல்லது சாலுக், மொராக்காபா, காராமாத் அல்லது முஜிஸா என்ற பெயரால் எடுத்துக் கொள்ளப்பட்டன.'[3]

3. Dr. Bhagwan Das quoted in Tarachand's *Influence of Islam on Indian Culture*, pp. 67-8.

'ஆனால், தன்னுடைய மிகத் துணிச்சலான கொள்கைகளால், இஸ்லாமிய உலகத்தில் பெரிய அதிர்ச்சியை உண்டாக்கியவர் ஹுசேன்-பின்-மன்சூர் அல்-ஹல்லாஜ்......அவர் இந்தியா உள்பட அநேக நாடுகளில் பிரயாணம் செய்தார். மெக்காவுக்கு மூன்று முறை சென்றிருக்கிறார். அவருடைய காரியங்கள் மிகவும் தீங்குடையனவாக இருந்ததால், அவர் கி. பி. 922ல் கைதுசெய்யப்பட்டார்.'[4] கபீர், தாடு, நானக் இன்னும் அனேக இந்திய சாதுக்கள் முஸ்லீம் சூபிகளின் பாஷையையே உபயோகித்தார்கள்.

இபின்-அல்-அராபி, அப்துல் கரீம் ஜீலி முதலியோர்களுடைய நூல்களில், மன்சூரின் கொள்கைகள் விரிக்கப்பட்டிருந்தன. இபின்-அல்-பரீத், அப்ரீ சையது இபின் அபுல்காயர் ஆகியோரின் செய்யுள்களில் அதே கருத்துக்களிருந்தன. இவை இந்தியா உள்படத் தொலை நாடுகளுக்கும் பரவின.

'ஜீலி இந்து மதத்தை அறிந்திருந்தார். அவர் குறிப்பிட்டிருக்கும் பத்து முக்கிய மதங்களில் பிரஹ்மா (பிரமன்) வும் ஒன்று. அதைப்பற்றி அவர் குறிப்பிடும்பொழுது, பிரமனைத் தொழுகிறவர்கள் கடவுளை அவருடைய முழுத் தன்மையில் வைத்து வணங்குகிறார்களென்றும், தீர்க்கதரிசியோ அல்லது தெய்வ தூதரோ அவர்களுக் கில்லையென்றும் கூறுகிறார். பிராமண வேத நூல்கள் கடவுளால் அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டன அல்ல; தெரிவித்தது ஆப்ரஹாம் (பிரஹ்மா) தான் என்பது அவர் கருத்து. அவ் வேதங்கள் ஐந்து நூல்களில் அடங்கின. ஐந்தாவது நூல் மிகுதியும் நுட்பமான விஷயங்களை யுடையதால், பெரும்பாலான பிராமணர்களுக்குத் தெரியாது. அதைத் தவறாது படித்தவர்கள் முஸ்லீம்களானார்கள். ஜீலி குறிப்பிடுகின்ற ஐந்தாவது புத்தகம் வேதாந்தம். அது ஒருமைப்பாட்டைப் போதிப்பதால் அது தான் இஸ்லாம் என்று ஜீலி நினைக்கும்படியாயிற்று.'[5]

'இரண்டறக் கலப்பதில் (பானா) ஐக்கியத்தை (வாஸ்ல்) நாடுகின்ற முஸ்லீம் ஞானிக்கு ஆன்ம குரு வேண்டும். "ஏனென்றால், ஆசான் இல்லாதவனுக்குச் சாத்தானே இமாம்." வழி காட்டுபவர் அல்லது ஆசான், (பீர் அல்லது ஷேக்) சூபிக் கொள்கையின் நடுநாயகமான மதகுரு...........தனது முர்ஷீதை எப்பொழுதும் மனத்தில் வைத்துப் போற்ற வேண்டுமென்று சிஷ்யனுக்கு உபதேசிக்கப்படுகிறது. இடைவிடாச் சிந்தனையினாலும், தியானத்தாலும் அவரையன்றி வேறொன்றும் நினைக்கக்கூடாது. எல்லா மனிதர்களிலும், எல்லாப் பொருள்களிலும் அவரையே காணவேண்டும். முர்ஷீதில் தன்னழிவு பெறவேண்டும். முர்ஷீதில் தான் முற்றிலும் கலந்துவிடும் நிலையிலிருந்து, பக்தனைப் படிப்படியாக இட்டுச் சென்று, இறுதியில் இறைவனிடம் சேர்ப்பிக்கிறார் ஞானகுரு. மகமது இறைவனிடம் (இஸ்லாம்) சரணடையக் கற்பித்தார். சூபி மதம், இறைவனின் மண்ணுலகப் பிரதிநிதியான குருவிடம் சரணடையக் கற்பிக்கிறது.'[6]

ஹாஜி வாரிஸ் அலிஷா வட இந்தியாவில் ஒரு சூபி சாது. அவருடைய சமாது, ஐக்கிய மாகாணத்தில் பாரா பாங்கி ஜில்லாவில், தீவா ஷாரிப்பில் இருக்கிறது. அவருடைய சிஷ்யர்கள், "வாரிஸி" என்ற சொல்லைத் தங்களுடைய பெயர்களோடு சேர்த்துக் கொள்கிறார்கள். அவர்கள் ஏராளமானவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள். அவர் சூபி மதக் கொள்கைகளைப் பாரசிகப் பாட்டுகளில் சுருக்கமாகப் பாடியிருக்கிறார். அதை உதாரணமாகக் காட்டலாம்:—

4. Tarachand, op. cit., pp. 69-70. 5. *ibid.*, pp. 77-8. 6. *ibid.*, p. 81.

முன் ஹாமீன் கோயெம் கீ பீர்-ஏ-மான் குதாஸ்த்
பேஷ் ஏமுன்கிர் ஈன் சாகுன் குப்டான் காதாஸ்த்;
ஏக் சவாலே மீன் குனும் அய் மார்டுமோன்,
பாஸ் ஜவாப் ஊரா தேஹுந்த் அய் மோமீனுன்
ஹேஸும் அந்தர் நார் சூன் ஷுத் சோக்தா
ரிஷ்தா அந்தர் ஜாமே ஷுத் சூன் தோக்தா
பாஸ் வாரா ஹேஸம் பாகோயெம் யா கே நார்
ரிஷ்தா ரா ஜாமா பாகோயெம் யா கா தார்
சூன் கே பீர்-யே-முன் பானு பில்லா ஷுத்
ருப்த் பாஷ்ரியாத் ஹாமா அல்லா ஷுத்
பாஸ் பே பாயி ஊ குனும் ஹார்தம் சாஜுத்,
வாக்ப் கார்டம் தார் ராஹுஷ் ஜான் ஓ வாஜுத்;
அஸ்கி அஸ் ஜும்லே ஆலம் பார்ட்டார் அஸ்த்
ஸான் கே யீன் மில்லாத் அஹுதாய் அக்பார் அஸ்த்.

**மொழிபெயர்ப்பு** :—பீர் எனது கடவுள் என்று சொல்லுகிறேன். இதை **முன்கீரிடம்** (நம்பாதவர்) சொல்லுவது குற்றமாகும். ஏ மனிதனே! ஒரு கேள்வி கேட்கிறேன். நம்புகிறவர்களே! இதற்குப் பதிலளியுங்கள். விறகு தீயில் எரிந்த பிறகு, நூல் துணியில் நெய்யப்பட்டபொழுது அதை நான் விறகென்று சொல்வதா தீயென்று சொல்வதா? அதைத் துணி யென்று சொல்வதா நூலென்று சொல்வதா? அதுபோல என்னுடைய பீர் கடவுளில் மறைந்தபொழுது மனிதப் பிறப்பு மறைகிறது—எல்லாம் கடவுளாகிறது. ஆகையால், நான் ஒவ்வொரு விநாடியும் அவருடைய பாதங்களை வணங்கு கிறேன். அவருடைய வழிக்கே என்னையும் என்னுயிரையும் ஆக்கிவிட்டேன். எவ்வளவுக்கெவ்வளவு சர்வேசுவரரான கடவுளிடத்துச் செலுத்தப்படும் பக்தியாக அன்பு இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அது எல்லா உலகத் திற்கும் மேலானது.

குரு அல்லது ஆசானின் அவசியம்பற்றி இந்துமத நூல்களும் அதிக மாகக் கூறுகின்றன. கடினமான நோன்புகளுக்கிடையே அவர்தான் வழி நடத்தக்கூடும். அவரில்லாமல் ஆன்ம வளர்ச்சி யென்பது நடக்காத காரியம். உண்மையில் 'குருவே பிரமா, குருவே விஷ்ணு, குருவே மஹேஸ்வரன், குருவே பரப்பிரமம். அந்தக் குருவை நான் வணங்குகிறேன்' என்பது சாதாரணத் தினசரிப் பிரார்த்தனை. ஒரு குருவை அடைந்து, அவரிடம் ஞானோபதேசம் பெறவேண்டுமென்பது ஒவ்வோர் இந்துவின் கடமையும், ஆசையுமாகும்.

'கபீரின் பாந்தாவில் (பிரிவிலும்), சூபிமதப் பிரிவிலுள்ளதைப் போல் குருவுக்கு உயர்ந்த ஸ்தானம் கொடுக்கப்பட்டிருக்கிறது. "கடவுளை வணங்குவது மனிதனை வணங்குவது போன்றதுதான்" என்பது சூபிகளுக்கு உண்மையானால், அது இங்கும் பொருத்தமாகிறது. கபீர் சொல்லுகிறார்......

'குருவைக் கோவிந்தனாக (கடவுளாக) மதி.'

அதற்கும் மேலாக :—

'ஹரி கோபித்தால் உய்வுண்டு. குரு கோபித்தால் உய்வேயில்லை.'

சூபி மதத்தில் போல கபீர் பாந்தாவிலும் உள்ளது:—

'உண்மையான தியானம் (திகர்) குருவின் உருவம் தான். உண்மை யான வணக்கம் குருவின் பாதங்களுக்கே. உண்மையான தோணி குருவின்

திருநாமம். மூன்று உலகங்களிலும், ஒன்பது மண்டலங்களிலும் குருவைக் காட்டிலும் சிறந்தவர்கள் கிடையாது.'[7]

'சூபிகளைப் போல நானக்கும், ஆன்மா இறைவனை நோக்கிச் செய்யும் பிரயாணத்தில் கடவுளால் வழிகாட்டப்படவேண்டும் என்று சொல்லியிருக்கிறார். அவருடைய போதனையிலும் கபீருடைய போதனையில் போல குரு உயர்ந்த ஸ்தானத்தை வகிக்கிறார்.'[8]

கபீர் நானக் என்ற இருவரும், இஸ்லாம் இந்து வேதாந்தம் ஆகிய இரண்டினாலும் உருவாக்கப்பட்டவர்கள் என்றே வட இந்தியர்களுக்குத் தோன்றுகிறார்கள். எண்ணற்ற இந்து வீடுகளில், காலை மாலைப் பிரார்த்தனையின்போது ஏராளமான இந்துக்கள் கபீரின் பக்திப் பாடல்களையே பாடுகிறார்கள்.

'இந்த விதமாகக் கபீர் இந்தியாவின் கவனத்தைப் பொதுநெறிச் சமயமொன்றில் திருப்பினார். இருசாராரும் நடக்கக்கூடிய பொதுப் பாதையொன்றை வகுத்தார். இத்தகைய மதத்திற்கு இந்துவோ முஸ்லீமோ யாரும் தடை சொல்ல முடியாது. அவருடைய சேவையில் இது ஆக்கப் பகுதியாகும். அதில் அழித்தற் பகுதியும் உண்டு. பழமையான பாதையில் வளர்ந்த காட்டை அழிக்காமல் புதுப் பாதையை அமைப்பது முடியாத காரியம். ஆகவே, அஞ்சுதலற்ற வெஞ்சினத்தோடு ஈட்டியெனப்பாயுஞ் சொற்களினால், உண்மையை மூடி மறைக்கின்ற புறச்செயல் கருவிகளத்தனையையும் தாக்கினார். இந்திய மக்களைப்பிரித்து வைக்கும் கொள்கைகளைக் கண்டித்தார். இந்த விஷயத்தில் இந்துவையும் விட்டுவைக்கவில்லை, முஸல்மானையும் விட்டு வைக்கவில்லை.

'புத்தர் முதலான சீர்திருத்தவாதிகள் எவைகளை விட்டுவிடும்படியாகக் கூறினார்களோ அவைகளை விட்டொழிக்கும்படி கபீரும் வற்புறுத்தினார். அவையாவன :—மதச் சடங்குகள், பலியிடுதல், மந்திர சக்திகளில் மோகம், வாய் வேதாந்தம், அனுஷ்டானங்கள், தீர்த்த யாத்திரைகள், பட்டினிகள், சிலை வணக்கம், சாமிகள், அம்மன்கள், பிராமண ஆதிக்கம், ஜாதி வித்தியாசங்கள், தீண்டாமை, உணவுகளைப் பற்றிய ஆசாரதோஷங்கள்......முஸ்லீம்களுடைய ஒட்டாத தன்மை, ஒரே நபியிடத்திலும் ஒரே நூலிலும் உள்ள குருட்டு நம்பிக்கை, வெளிக் காரியங்களான மெக்கா யாத்திரை, பட்டினிகள், வேளாவேளைத் தொழுகைகள், அவுலியா, பீர் முதலிய சாது வணக்கம், (பைகம்பர்) தீர்க்கதரிசி வணக்கம் முதலியவைகளைக் கண்டிக்கிறார்.

'எல்லா உயிர்களையும் மதிக்கும்படியும், கொலை செய்யாதிருக்கும்படியும் இந்துக்களையும் முஸ்லீம்களையும் அவர் கேட்டுக்கொள்கிறார். பிறவி அல்லது பதவியினால் வரும் செருக்கறுக்க வேண்டுகிறார். துறவிலாயினும் உலகவாழ்விலாயினும் எல்லை மிஞ்சிப் போவதை விட்டுவிடும்படி கூறுகிறார். வாழ்வை அர்ப்பணமாகக் கருதவேண்டுகிறார்...........இந்துக்களும் முஸ்லீம்களும் ஒரே குலத்தவர், ஒரே இறைவனைத்தான் வணங்குகிறார்கள், ஒரே தந்தையின் மைந்தர்கள், அவர்கள் ஒரே இரத்தத்தால் ஆனவர்கள் என்பதை அவர் திரும்பத் திரும்பக் கூறுகிறார்.'[9]

குரு நானக்கின் முழு உபதேசங்களும், இரண்டு மதங்களின் அடிப்படைக் கொள்கைகளின் சாராம்சம்தான் என்பதை யாவரும் அறிவர்.

7. Tarachand, op. cit., p. 158. 8. *ibid.*, p. 176. 9. *ibid.*, pp. 163-5.

'இந்துவையும் முஸ்லீமையும் ஒன்றுபடுத்துவதே நானக்கின் சேவையாக இருந்தது. சமூகத்தின் காயங்களை ஆற்றுவதற்கு மதப் போராட்டங்களை நிறுத்த வேண்டுமென்பதை உணர்ந்தார்.'[10] 'நானக், தனக்கும் இரக்கங் காட்டுவதில்லை. பிறத்தியாரிடமும் அவர் மென்மையாக நடந்து கொள்பவரல்ல. உறுதியும் தெளிவும் கொண்ட மனத்தோடு, நன்மை தீமைகளை நுணுக்கமாக உணர்ந்து, இந்து இஸ்லாம் மதங்களிலுள்ள மூடநம்பிக்கைகள், வெளி ஆசாரங்கள் முதலியவைகளை வன்மையாகக் கண்டிக்கிருர்.'[11] கபீர், பிறப்பில் முஸ்லீம்; நானக், பிறப்பில் இந்து. இந்து இஸ்லாம் மதங்கள் பிரிந்து நிற்பவை, விலகியொதுங்கி நிற்பவை என வெளித் தோற்றத்திலிருப்பினும், இவ்விருமதங்களும் ஒன்றுபட்டதின் விளைவாக முளைத்தவர்களே கபீரும் நானக்கும்.

தத்துவ ஞானத்துறையிலும் மத எண்ணங்களிலும் மாத்திரம் இந்த **ஒற்றுமை** தொடங்கவில்லை. முஸ்லீம் மன்னர்கள் கோயில்களுக்கும் மடங்களுக்கும் மானியம் அளித்ததற்கும், இந்துப் பக்தர்களுக்கும் பண்டிதர்களுக்கும் ஜாகிர்கள் அளித்ததற்கும் எண்ணற்ற உதாரணங்கள் காணலாம். முஸ்லீம் அரசர்கள் இந்துக் கோயில்களையும் மதஸ்தாபனங்களையும் அழித்ததாகக் கணக்கிடப்படுவதைப்போல, அவைகளுக்கு மானியங் கொடுத்து ஆதரித்ததற்கு ஒரு விரிவான கணக்கெடுத்து யாரேனும் ஓர் அறிஞர் தொகுத்தால், அது நல்லதொரு சேவையாகும்.

'வழக்கமாகக் கலாசாரக் கூட்டுறவு இல்லாவிட்டால், முஸ்லீம் அரசர்கள் ஏன் இந்துக்களுடைய தேவாலயங்களுக்கும், வித்தியாலயங்களுக்கும் மானியம் அளிக்கவேண்டும்? இந்து அரசர்கள், முஸ்லீம் மசூதிகளுக்கும் மதர்சாக்களுக்கும் ஏன் மான்யங்கள் அளிக்கவேண்டும்? அடில்ஷாஹி, குதுப்ஷாஹி, ஆசப்ஷாஹி வமிசத்தார் பிராமணர்களுக்கு இத்தகைய மானியங்களை அளித்ததைத் தென்னிந்தியச் சரித்திரம் உணர்ந்தவர்கள் நன்கு அறிவார்கள். இதைப்போன்ற மானியங்கள் மகாராஷ்டிர அரசர்களால் முஸ்லீம் தொழுகை ஸ்தலங்களுக்கு, தாங்கள் டில்லி சக்கரவர்த்தியோடு சண்டையிட்டதற் கப்புறமும் அளிக்கப்பட்டன.'[12] பீஹாரில் இத்தகைய இரண்டு உதாரணங்களை நான் தரமுடியும். புத்த கயாவின் மகந்துவினுடைய ஜமீன்தாரியிலிருந்து கிடைக்கிற வருஷ வருமானம் லட்சக் கணக்கிலிருக்கிறது. இவ் வருமானம், நான்காவது மகந்து லால்கிர் என்பவருக்கு டில்லி மகம்மதுஷா, முஸ்தீபுர் தாராதி என்ற கிராமத்தை மானியமாகக் கொடுத்ததிலிருந்தே பெருகியதாகும். இதைப்போன்று, இந்தியாவிலேயே மிகப் பெரிய தர்பாங்கா ஜமீன்தாரியானது, முகலாயச் சக்ரவர்த்தி அக்பரால் இப்பொழுதுள்ள மகாராஜாதி ராஜப் பிராமணரின் மூதாதைக்கு, அவருடைய படிப்பையும் பக்தியையும் வியந்து, நன்கொடையாக அளிக்கப்பட்டதாகும். 'இந்துக் குடிகளிடைக் கல்வியைப் பரப்புவதற்கு ஷெர்ஷா **வாக்ப்கள்** அளித்து, அவைகளை இந்துக்களிஷ்டப்படி நிர்வகிக்க விட்டுவிட்டார். அவருடைய இத் தாராளச் செய்கையால் அவர்மீது எல்லா மதத்தாரும் அன்பு கொண்டார்கள்.'[13]

10. Tarachand, op. cit., p. 168. 11. *ibid.*, p. 172.
12. Atulananda Chakravarti: *Call it Politics?* p. 44.
13. Ishwari Prasad: *History of Muslim Rule in India*, p. 339.

டாக்டர் சையது மகமது எனக்களித்த சில உதாரணங்கள் இங்கு குறிப்பிடத்தக்கவை :

காஷ்மீர் சுல்தான் ஜைனுலாப்தீன், சாரநாதம் சாரதாதேவி ஆலயங்களுக்குச் சென்று அடிக்கடி தரிசிப்பதுண்டு. யாத்ரீகருக்கு அங்கு சத்திரங்கள் கட்டினார்.

நாஜிபாபாத்தின் பட்டாணியர்கள் ஹரித்துவாரை சுமார் 1780 ல் ஆண்டார்கள். நாஜிபாபாத் நவாப், இந்து யாத்ரீகர்களுக்காகப் பெரிய சத்திரங்கள் கட்டினார். அவை இன்னும் இந்துக்கள் கைவசமிருந்து வருகின்றன.

1588 ல், குரு அர்ஜுன தேவர் அமிர்தசரஸில் ஒரு குளம் வெட்டினார். அதே வருஷத்தில் ஒரு கோயிலையும் அங்கு கட்டத் தீர்மானித்தார். அதற்குப் பாலாபீர் அல்லது மியான்பீர் எனப்பட்ட ஒரு முஸ்லீம் பக்தரால் அடிகோலும்படி செய்யப்பட்டது.

—சர்தார் உத்தமசிங் எழுதிய **அமிருதசரஸ் தர்பாரின் சரித்திரம்.**

ஆலம்கீர் காலத்திய புகழ்பெற்ற பாடாலா முன்ஷி சுஜன் ராய் தன்னுடைய **குலாஸ்துல்-தவாரிக்** என்ற நூலில், காலானுருக்குப் பக்கத்திலுள்ள தீபாளிவால் என்ற கிராமத்தைக் குறிப்பிடுகிறார். அங்கு ஷா ஷாம்சுதீன் தார்யாயினுடைய சமாது இருக்கிறது. இதைத் தரிசிக்க ஏராளமான ஜனங்கள் செல்கிறார்கள். 'இந்துக்களும் முஸல்மான்களும், ஷா ஷாம்சுதீன்மீது ஆழ்ந்த பக்தி விசுவாசம் உள்ளவர்களாக இருக்கிறார்கள். ஆனால், தீபாளி என்ற இந்து, மற்ற இந்துக்கள் முஸ்லீம்களைக் காட்டிலும் மிகுந்த பக்திமானென்பதை நிரூபித்துக்கொண்டார். ஷாதார்யாயின் மரணத்திற்குப் பிறகு, இந்துக்களும் முஸ்லீம்களும் சேர்ந்து ஏகமனதாக அவருடைய சமாதுக்கு முதல் தர்மகர்த்தாவாகவும், நிர்வாகியாகவும் தீபாளியை நியமித்தார்கள். அவர் ஒரு முஸ்லீம் என்பது தெரிந்திருந்தும் அவ்வாறு நியமித்தார்கள்............சில வருஷங்களுக்கு முன்பு முஸ்லீம்கள் இந்து நிர்வாகிகளை மதக் காரணங்களால் விலக்கத் தீர்மானித்தார்கள். ஆனால் ஆலம்கீர் ஆட்சி, இந்தக் கிளர்ச்சி பலனடைய விடவில்லை. ஆலம்கீருடைய ஆட்சியின் மூன்றாவது ஆண்டில், இப்புத்தகம் எழுதப்பட்டபோது இந்துக்களே இச்சமாதின் தர்மகர்த்தாக்கள்.' இன்றுங்கூட ஹைதராபாத்தில் (தக்காணம்), புகழ் வாய்ந்த ஒரு புஸுர்க்கின் தர்காவுக்கு மடாதிபதியாக இருப்பது ஒரு பிராமணக் குடும்பமே. நைஜாம் இந்த தர்காவுக்குப் பெரிய ஜாகீர் ஒன்று அளித்திருக்கிறார். பொதுமக்களும் இதற்குத் தருமம் செய்கிறார்கள். முஸல்மான்கள் இந்த மடாதிபதியை விலக்கப்பார்த்தார்கள். ஆனால், நைஜாம் அதற்கு இடங்கொடுக்கவில்லை. இன்றுங்கூட ஹைதராபாத்திலுள்ள சீதாராமர் கோவிலுக்கும், மோஹரி (அடிலாபாத்) லுள்ள மற்றொரு கோவிலுக்கும் நைஜாமின் பெயரால் மானியம் அளிக்கப்பட்டிருக்கிறது. அதன் வருட வருமானம் 50 அல்லது 60 ஆயிரமாகும். நைஜாமால் நாந்தரிலுள்ள சீக்கிய குருத்துவாரத்துக் களிக்கப்பட்ட ஜாகீர், இருபதாயிர ரூபாய்க்குமேல் வருடவருமானமுள்ளது.

ஒரு மான்யத்தைப்பற்றிய பாரசீக மொழியில் உள்ள சில சன்னதுகளை இங்கு எடுத்துக் காட்டலாம். அவைகளில் ஒன்று, அகமது ஷா பகதூர் காஜியால் 1167 ஹிஜ்ரியில் அளிக்கப்பட்டது :

'ஸ்ரீ தாகுர்ஜியின் நிவேதனத்திற்கும், அநுபோகத்திற்குமாக சீதால் தாஸ் பைராகிக்கு 17 பைகாக்கள் மூவாபி நிலம் (மானியம்) விடப்பட்டிருக்கிறது. இந்த மானியத்தின் மாசூலிலிருந்து, ஸ்ரீ தாகுர்ஜிக்குப் பூசை முதலான காரியங்களை நிறைவேற்ற வேண்டியது. அக்பராபாத் ஜில்லா கஸ்பா அச்சநேரா ஜமீன்தார்களும் குடிகளும் இதை அறிந்துகொள்வார்களாக.'

'ஸ்ரீ தாகுர்ஜிக்கு இருபது பார் (நாழி) தானியம் அச்சநேரா பஜார் சௌத்ரி கொடுக்கவேண்டு மென்பதை அறிவாராக. மேற்படி பைராகி அதை இழக்கும்படி விடக்கூடாது. ரம்ஜான் 3-ம்நாள், 1139-ம் பசலி.'

மற்ருென்று சிஞ்ச்வாதிலுள்ள புகழ்பெற்ற கணேசர் கோவில் செலவுகளுக்காக ஷாஷாபுத்தீன் கான் ஒரு ஜாகீர் அளித்தது.

### குவால் நாமா (உறுதிமொழிப் பத்திரம்)

பூஞ பர்காஞவைச் சேர்ந்த சிஞ்ச்வாதிலுள்ள மூராத் கோசேன் பேருக்கு குவால் நாமா (உறுதிமொழிப் பத்திரம்). கான்-இ-ஹிக்மத் நிஷான் நாகர்கான் அவருக்கு **குவால்** (உறுதிமொழி) வேண்டுமென்று தெரியப்படுத்தி இருக்கிருர். அவர் அந்த ஊர் மக்களோடு வாழ்ந்து, தொடர்புகொண்டு, நாட்டைச் செழிப்பாகவும், வளமாகவும் ஆக்கவேண்டுமென்று இவ் உறுதிமொழி எழுத்துமூலம் கொடுக்கப்படுகிறது. அல்லாவின் அருளால் அவருக்கு யாதொரு ஆபத்தும் நேராதிருக்குமாக. இந்தக் குவாலியத் நாமாவின் தேதி: ஜெக்காத் 12, 1326 ஹிஜ்ரி.

அலகாபாத்திலும் இதைப்போன்ற இரண்டு மான்யங்களின் பிர்மன்கள் (இந்தியச் சக்கிரவர்த்திகளின் ஆதார பூர்வமான உத்தரவுகள்) இருக்கின்றன. ஒன்று, புகழ்பெற்ற மகேஸ்வர நாதன் கோயில் பூசாரிகளுக்குக் கொடுக்கப்பட்டது. அது ஔரங்கசீப்பால் அளிக்கப்பட்டது.

காசி ஜில்லாவிலுள்ள ஸகின் மௌஸா பஸ்த்தி (கிராமத்தில்) ஜகஜீவன் மகன் கிர்தரர், மகேசபுரம் பர்காஞ ஹாவெலியிலுள்ள ஜாதுமிஸ்ரா, பண்டிதபாலபத்ர மிஸ்ரா ஆகிய மூவரும் பூசாரிகள். அவர்களுக்கு ஔரங்கசீப் மான்யங்கள் அளித்திருக்கிருர்.

ஔரங்கசீப், மூல்தானில் தூத்லமாயி கோவிலுக்காக மிஸ்ரா கல்யாணதாஸுக்கு நூறு ரூபாய் படி கொடுத்தார்—எக்ஸ்ட்ரு அஸிஸ்டண்ட் கமிஷனர் உத்தரவுப்படி—மூல்தான் ஜில்லா செட்டில்மெண்டு ரிப்போர்ட்.

மகாகாளிகோவில் திருவிளக்குக்காக ஒவ்வொரு நாளும் நாலு சேர் நெய் உஜ்ஜயினி சர்க்கார் உக்கிராணத்திலிருந்து கொடுக்கப்படவேண்டுமென்று 1153 ஹிஜ்ரியில் சுல்தான் மகம்மது மூராது உத்தரவிட்டார்.

முஸ்லீம் மன்னர்களும் அரசாங்கத்தோரும் கல்வியை மிகவும் ஆதரித்தார்களென்றும், பாரசீகபாஷை, அரபி தவிர, சமஸ்கிருதத்தையும், இந்திய இலக்கியங்களையும் வெகுவாக ஆதரித்தார்களென்றும் பொதுப்படக் கூறலாகும். இந்தியாவில், கல்வி அபிவிருத்திக்காக அவர்கள் செய்தததனையும் சுருக்கிக் கூறுதல் இயலாது. 'சக்ரவர்த்தியின் ஆதரவில், அநேகம் பொருள்பற்றிய வடமொழி நூல்கள் பாரசீகத்திலும், அரபியிலும் மொழிபெயர்க்கப்பட்டன. தவிர, அநேக முஸ்லீம் தலைவர்கள் தாங்களே சமஸ்கிருதத்தைப் படித்தார்கள்; கூசாமல் ஆதரித்தார்கள். முஸ்லீம் உலகத்திற்கு எளிதில் கிட்டும்படியாக, அரிய சமஸ்கிருத நூல்களை அவர்கள் பாரசீகத்தில்

மொழிபெயர்த்தார்கள். பிறரையும் அக்காரியங்களில் ஊக்கினார்கள். இந்து மாணவர்களுடைய கல்வித்திட்டத்தில் சமஸ்கிருத நூல்கள் சேர்க்கப் பட்டன. சுருங்கக் கூறின், சமஸ்கிருதம் எல்லாவகையிலும் ஆதரிக்கப் பட்டது.'[14] முஸ்லீம் இந்தியாவின் கல்வியைப்பற்றி எழுதும்போது, டாக்டர் ஜேம்ஸ். ஹெச். கஸின்ஸ் கூறுகிறார்: 'முஸ்லீம் அரசர்களும், இளவரசு களும் மாணவர்களாகித் தங்களுடைய அறிவு நூற்பயிற்சிக்கு இந்து நூல் களைக் கற்றார்கள். மொகலாய ஓவிய முறை ரஜபுத்திர ஓவிய முறையோடு கலந்ததுபோல, முஸ்லீம் இலக்கியக் கல்வி இந்து இலக்கியங்களோடு கலப் புற்றது. இந்து இலக்கியங்கள் பாரசீகத்தில் மொழிபெயர்க்கப்பட்டன. அது காரணமாக, பாரசீக நாகரிகம் இந்து நாகரிகத்தையும் உருமாற்றியது.'[15]

தர்கா அல்லது ஒரு முஸ்லீம் சாதுவினுடைய சமாதியில் விழாக் காலங்களில், இந்தியா முழுதிருந்தும் முஸ்லீம்கள் எவ்வளவு கூடுகிறார்களோ அவ்வளவு இந்துக்களும் கூடுகிறார்கள். ஆஜ்மீர் ஷாரீப், பீஹார் மாகாணத் தில் பீஹார் ஷாரீப், மானெர்ஷாரீப், புல்வாரி ஷாரீப் உற்சவங்கள் இவ்வா றானவை. முஸ்லீம் பெரியார்களிடத்தில் அநேக இந்துக்கள் உண்மையாகவே குரு சிஷ்ய முறையில் நடந்துகொள்ளுகிறார்கள்.

வட இந்தியா முழுதும், முஸ்லீம்களுடைய மொகர்ரம் கொண்டாட்டங் களில் இந்துப் பொதுமக்கள் கலந்து கொள்வதென்பது யாவருமறிந்தது. இந்துக்கள் முஸ்லீம்களைக் காட்டிலும் ஜனத்தொகையில் அதிகமான கார ணத்தால், இவைகளில் முஸ்லீம்களைக் காட்டிலும் இந்துக்கள் அதிகமாகக் கலந்துகொண்டார்கள். இது நெடுங்காலத்திற்கு முன்பல்ல. ஊர்வலங்களில் மாத்திரம் இந்துக்கள் கலந்துகொள்ளவில்லை. முஸ்லீம்களைப் போல, இந் துக்களும் வீடுகளில் அதை துக்கத்திற்கும் வணக்கத்திற்கும் உரிய நாளாக அநுஷ்டித்தார்கள். அப்பொழுது கலியாணம், கிரஹப்பிரவேசம் முதலிய நற்காரியங்களெதுவும் கொண்டாடுவதில்லை. அநேக இந்துக்கள் தங்களுடைய **தாஜியாக்கள், சேப்பர்கள்** வைத்திருந்தார்கள். இந்துப் பையன்கள் பச்சை ஆடை அடையாளங்களணிந்து கொண்டு முழுதும் **பைக்குகள், பாஹிஷ்டிகள்** ஆடுவிடுவார்கள்; தண்ணீர் **மாஷாக்குகளும்** தாங்கிச் செல்வார்கள். வாள், ஈட்டி, சிலம்பம் முதலிய கருவிகளைக் கொண்டு அதிசயச் செயல்கள் புரிவதில் முஸ்லீம் **அகார்களுடன்** இந்து **அகார்கள்** போட்டி யிடுவார்கள். இன்னும் மேலாக, இந்த **அகார்கள்** இந்து முஸ்லீம் என்று தனித்தனியாக இராமல் இருவரும் கலந்ததாகவும் பெரும்பாலும் இருப்பார்கள்.

மசூதிகளுக்கு முன்பு இந்து மேளத்தினால் இப்பொழுது மண்டைகள் உடைபடுவதுபோல், அக்காலத்தில் மொகர்ரம் ஊர்வலத்தின் மேள இரைச் சலுக்கு ஒருவிதத் தடையும் இருந்ததில்லை. முஸ்லீம்கள் தடை செய்கின்ற சில இடங்களில், இந்து ஊர்வலத்தில் மேளம் வாசிப்பது பெரும்பாலும் முஸ்லீம் வாத்திய கோஷ்டியினரே என்பது வேடிக்கையான விஷயமாகும். அதைப் போன்றதே பசுக் கொலை விஷயமும், பக்ரீத் நாளன்று முஸ்லீம், பசுவைக் கொல்வது இந்துக்களிடையே பரபரப்பை உண்டுபண்ணுகிறதே. அந்தப் பசு பெரும்பாலும் ஓர் இந்துவால் ஒரு முஸ்லீமுக்கு விற்கப்பட்ட தாயிருக்கும். அந்த முஸ்லீம் அதை எப்படி உபயோகப்படுத்துவார் என் பதும் அந்த இந்துவுக்கு நன்றாகத் தெரிந்தேயிருக்கும். (முக்கியமான ஒவ்

14. S. M. Jaffar: *Education in Muslim India*, p. 15.
15. *ibid.*, p. 15, quoted from *Eastern times* dated 7-6-1935.

வொரு நகரத்திலும், சிறப்பாகக் கண்டோன்மெண்டுகளிலும் பசுக்கள் கறிக்கும் தோலுக்குமாகக் கொல்லப்படுவதை இந்த இந்துக்கள் பொறுத்துக் கொள்வார்கள்) முன்காலத்தைக் கவனித்தாலோ, பாபர் காலத்திலிருந்து வரிசையாக ஆண்ட முஸ்லீம் மன்னர்கள், முழுதும் பசுக்கொலையைத் தடுக்கா விட்டாலும், இந்துக்களுடைய மத உணர்ச்சிகளை மதிக்க வேண்டுமென்பதை வற்புறுத்தி வந்ததைக் காண்கிறோம். பக்கத்து வீட்டு இந்துக்களுடைய உணர்ச்சிகளை மதித்துப் பசு மாமிசம் சாப்பிடாத எத்தனையோ உயர் குடும்பங்கள் இருக்கின்றன. 'ஈத்' சமயத்தில் பசு கொல்லப்படவில்லை. ஏனெனில், "அந்த நாளில் (ஈத்), சக்தியுள்ளவன் தன் வீட்டில் வெள்ளாட்டைப் பலியிட்டு, அந்நாளைப் பண்டிகையாகக் கொண்டாடுவான்" என்று நாம் அறிகிறோம்.'[16]

ஸாஹிருத்தீன் மகமது பாதுஷா காஜி (பாபர்), இளவரசர் நாஸருத்தீன் மகமது ஹுமாயூனுக்கு எழுதிய ரகசிய உயில் கவனிக்கத் தகுந்தது;

'மகனே! இந்திய ராஜ்யம் வித்தியாசமுள்ள மதங்கள் நிரம்பியது. அதன் ராஜ்யாதிகாரத்தை உனக்களித்த இறைவன் போற்றப்படுவாராக. உன்னுடைய இதயத்திலிருந்து மதக் குரோதங்களெல்லாவற்றையும் களைந்தொழிப்பது உன் பொறுப்பாகுமாக. ஒவ்வொருமதத்தினுடைய வழிகளையுமறிந்து நீதி வழங்குவாயாக. முக்கியமாக, பசுக்கொலையை விலக்கிவிடுவதன் மூலம் இந்திய ஜனங்களின் மனத்தைக் கவர முடியும். இந்த தேசத்தின் ஜனங்களை அரசன் தன் நற்காரியங்களால் வசப்படுத்தி விடலாம்.

'சர்க்காரின் சட்டதிட்டங்களை அனுசரிக்கிற—எவ் வகுப்பாயினும் சரி—வகுப்பாரின் கோயில்களையும், குளங்களையும் இடிக்காதே. அரசரும் குடி ஜனங்களும், ஒருவர்மீதொருவர் அன்பாக இருக்கும்படியாக நீதி வழங்குவாயாக. கொடுங்கோன்மையால் இஸ்லாம் முன்னேறுவதைக் காட்டிலும் சேவையின் மூலமே இஸ்லாம் அதிகம் பரவும்.

'ஷியாக்கள், சூனிகளுக்குள்ள தகராறுகளைக் கவனிக்காதே; இஸ்லாத்தின் பலஹீனம் வெளிப்பட்டுவிடும்.

'பல மதங்களைச் சேர்ந்த குடி ஜனங்களும் நான்கு இயற்கைப் பொருள்களோடு (மனித உடலாக அமைந்திருக்கிற நான்கு இயற்கைப் பொருள்கள்) ஒன்றுபட்டிருப்பார்களாக. அப்பொழுதுதான் நாட்டில் தகராறுகள் இல்லாமலிருக்கும். ஒற்றுமைப் படுத்துவதில் வல்லவனுன தைமூரின் வாழ்க்கை யனுபவங்களை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள். அதனுல் நிர்வாகக் காரியங்களில் அனுபவம் பெறுவாய். ஜமெய்தியுல் அவ்வல் முதல் தேதி, 935'[17]

முஸ்லீம்களுடைய தாராள மனேபாவத்திற்குச் சில உதாரணங்கள் குறிப்பிடலாம். இவை டாக்டர் சையது முகமதுவால் எனக்களிக்கப் பட்டவை;

புகழ்வாய்ந்த போர்ச்சுகீசிய சரித்திராசிரியர் பரிசௌஸா, தன்னுடைய **தக்கர்ன்-கி-ஹாலத்** எனும் நூலில் எழுதுகிறுர்: 'இந்துக்களும் முஸ்

16. Ishwari Prasad: *A short History of Muslim Rule in India*, p. 738, quoting Pelsaert-p. 74.

17. Translation of the will of Babar, a copy of which used to be in possession of the late, Dr. Balakrishna, Principal, Rajaram College, Kolhapur; Pnblished in *the Searchlight* dated 30-5-1926.

லிம்களும் ஒருவரிடம் ஒருவர் வேலை பார்த்தார்கள். முஸ்லீம் அரசர்கள், இந்துக்களை உயர்ந்த பதவியிலமர்த்தி சிறந்த பட்டங்களளித்தார்கள்.' இந்துக்கள் வேற்றுமையாக நடத்தப்படவில்லை. அவர்கள் தங்களுடைய மதானுஷ்டானங்களையும், சடங்குகளையும் யாதொரு தடையுமின்றி நடத்தி வந்தார்கள். இந்துக்களுடைய மத உணர்ச்சிகளுக்கு முஸ்லீம்கள் மிகுந்த மதிப்புச் செலுத்தி வந்தார்கள்.

**ஏஷியாடிக் ஸ்டடீஸ்** எனும் நூலில், பக்கம் 289ல் சர். ஆல்பிரட் லையால் எழுதுகிருர்: 'இந்தியாவை மதமாற்றுவதென்பது முஸ்லீம் அரசர்கள் மனத்தில் சிறிதும் கிடையாது. நிர்வாகத்தில் உயர்ந்த பதவிகள் அவர்களுடைய மதத்தைச் சேர்ந்தவர்களுக்குத்தான் என்றிருக்கவில்லை.'

ஔரங்கசீப், ஷாஜஹானிடமும் அவருடைய மந்திரியிடமும் திறமையுள்ள அநேக இந்துக்களை வேலைக்கமர்த்தச் சிபாரிசு செய்தார்; உதாரணமாக, எல்லிச்பூர் திவானிப்பதவி காலியானபொழுது, ராம்கரன் என்ற ரஜபுத்ர அதிகாரி யொருவரைப் பலமாகச் சிபாரிசு செய்தார். ஆனுல், ஏதோ சில காரணங்களுக்காக ஷாஜஹான் அந்தச் சிபாரிசை ஏற்றுக்கொள்ளவில்லை. வேறு ஒரு நல்ல மனிதன் கிடைப்பதரிது என்று ஔரங்கசீப் இரண்டாவது தடவையும் எழுதினுர். (**ருக் ஆத்-ஆலம்**கிரி, வால்யூம், 1, p. 114) **ருக் ஆத் -ஆலம் கிரி, ஆதப் - ஏ - ஆலம் கிரி** எனும் நூல்களிலும் இத்தகைய உதாரணங்களை ஏராளமாகக் காணலாம்.

ஔரங்கசீப் இந்துக்களை வலுவந்தமாக மதம் மாற்றினுரென்று பொதுவாக நம்பப்படுகிறது. ஆனுல், அவருடைய மனப்போக்கைக் காட்டக்கூடிய ஓர் அதிசயச் சம்பவத்தை இங்கு விளக்கலாம். வாங்தேராவின் ராஜா இந்திர சோமன் திரும்பத் திரும்ப உத்தரவுகளை மீறியதால் அவனை ஷாஜஹான் சிறைப்படுத்தி யிருந்தார். ஔரங்கசீப் தக்ஷணத்தின் சுபேதாராக நியமிக்கப்பட்டதும், அவனை விடுதலை செய்யுமாறு பலமாகச் சிபாரிசு செய்தார். ஷாஜஹான் அவ்வரசன்மீது வெறுப்புக்கொண் டிருந்தபடியால் ஔரங்கசீப்பின் சிபாரிசைப் புறக்கணித்தார். இந்திர சோமன் திரும்பத் திரும்ப மனவெறுப்பைத் தந்ததால் அவனை விடுவிக்க முடியாதென்றும், ஆனுல், அவன் முஸல்மானுகும் பட்சத்தில் அவனை விடுதலை செய்யலாமென்றும் எழுதினுர். ஔரங்கசீப் இதைக் கடுமையாக எதிர்த்தார். 'இந்த நிபந்தனையை நிறைவேற்றமுடியாது. அது விவேகமற்றது, அற்பத்தனமானது. அவனை விடுவிக்க வேண்டுமென்ருல், அவனுடைய நிபந்தனைகளின்பேரிலேயே விடுவிக்கவேண்டும்' என்று ஷாஜஹானுக்கு எழுதினுர். இது சம்பந்தமாக ஔரங்கசீப், பிரதம மந்திரி ஷாபாயுல்லாகானுக்கு எழுதிய கடிதத்தை **ஆதப்--ஏ ஆலம்கிரி**யில் காணலாம்.

## II. சமூக வாழ்வு

இந்துக்களும் முஸ்லீம்களும், ஒருவர் மற்றவருடைய வாழ்வையும், பழக்கங்களையும் பரஸ்பரம் மாற்றியிருப்பது கொஞ்சநஞ்சமல்ல. மனித வாழ்வில் நேரும் மிக முக்கியமானதும் குறிப்பிடத் தக்கதுமான மூன்று சம்பவங்கள் பிறப்பு, திருமணம், இறப்பு என்பவையாம். அவற்றை யொட்டிய சடங்குகள், விசேஷங்கள் எப்படி நடைபெறுகின்றன என்று காண்பதன் மூலம் இதை விளக்கலாம். பீஹாரில் மத்தியதர வகுப்பினரான இந்து

முஸ்லீம்களுடைய சில சாதாரணச் சடங்குகளையும், வழக்கங்களையும் இங்கு குறிப்பிடுகிறேன்.

ஒரு குழந்தை பிறந்த சமயத்தில், அதுவும் முக்கியமாக ஆணாக இருக்குமானால், **சோகர்** என்று சொல்லப்படும் பாட்டுக்களைப் பாடுவது சாதாரண வழக்கம். அடுத்த வீட்டுப் பெண்கள்கூட இப் பாட்டுக்களிலும் இதர கொண்டாட்டங்களிலும் கலந்துகொள்வார்கள். பேய் பிசாசு நுழையா வண்ணம் பிரசவ அறையின் கதவருகில் தீ வளர்க்கப்படுகிறது. ஓர் இரும்புத் துண்டு, **முத்தியாசிஜ்** என்ற ஒருவகை முட்செடி, இன்னும் சில சாமான்கள் அங்கு வைக்கப்படுகின்றன. ஆருவது நாளில் தாயும் சேயும் நீராட்டப் படுகின்றனர். இதற்குச் **சாத்தி** அல்லது ஆரும் நாள் சடங்கு என்பார்கள். அன்று தாய் குழந்தையைக் கையில் எடுத்துக்கொண்டு வானத்தைப் பார்த்து நட்சத்திரங்களை எண்ணுவாள். இருபதாம் நாள், ஐம்பதாம் நாட்களிலும் **பிஸ்தௌரி, சீளா** எனப்படும் சடங்குகள் வேறு இருக்கின்றன. ஆரும் நாள் வரையும், தாய் தீட்டானவள் என்று கருதப்படுகிருள். பிறத்தியார் சாப்பாட்டை அவள் தொடக்கூடாது. பேய் பிசாசுகள் வருவது, உணவுத்தீட்டு, குறிப்பிட்ட நாட்களில் குளிப்பதான காரியங்கள் வைதிக இஸ்லாமைச் சேர்ந்தவையல்ல. இருந்தாலும், அவை சதாரணமாய் முஸ்லீம் வீடுகளில் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றன.

இந்து முஸ்லீம்களிடையே, பிறந்தநாள் முடியெடுப்பதென்பது ஒரு முக்கியமான சடங்கு ஆகும். அதற்கு இந்துக்களிடையே **முண்டன்** என்றும், முஸல்மான்களிடையே **அக்கிகா** என்றும் பெயர் உண்டு. இச் சடங்குக்கு ஏதாவது மத சம்பந்தமான முக்கியத்துவமிருக்கலாம். ஆனல், இவைகளை ஒரே மாதிரி அனுஷ்டிப்பது குறிப்பிடத் தக்கது.

இஸ்லாமில், திருமணம் என்பது சட்ட ரீதியாக ஓர் ஒப்பந்தம் ஆகும். மாப்பிள்ளையும் பெண்ணும், கணவன் மனைவியராகக் கூடிவாழ ஒப்புக்கொள்கிருர்கள். மற்ற ஒப்பந்தங்கள்போல இதுவும் யோசனை செய்து தீர்மானிக்கப்படவேண்டியதே; சாட்சிகளும் அத்தாட்சியிடவேண்டியது. இவ்வொப்பந்தத்திலிருந்து பிரிந்துகொள்ளலாம். பிரிவின்போது நஷ்ட ஈடு செலுத்த வேண்டும். கல்யாணத்தின்போதே அதாவது ஒப்பந்தத்தின் போதே நஷ்ட ஈட்டுத்தொகை நிர்ணயம் செய்யப்பட்டுவிடும். கல்யாண ரத்து காலத்தில் தான் அது செலுத்தப்படும். திருமணத்தின் முக்கியச் சடங்கு சுருக்கமான காரியமே. மாப்பிள்ளை பெண் வீட்டார்கள், சாட்சிகள் முன்பாகக் கூடிச் சம்மதமளிக்க வேண்டியது. இதற்குச் சில நிமிஷங்களே பிடிக்கும். இதற்கு **நிக்காஹ்** என்று பெயர். கொண்டாட்டமாக நடத்துகிற பகுதிக்கு **ஷாதி** எனப்படும். இதைத் தனியாக நடத்தலாம். இந்து மதத்தில், திருமணம் ஒரு தனிச்சடங்கு. மதக்கோட்பாட்டின்படி பிரிவு செய்யமுடியாதது. மணமக்கள் எடுத்துக்கொள்வது மதவிரதம். இத்திருமணத்திற்கு மனிதர்கள் மாத்திரமன்றி சூரியன், சந்திரன், நெருப்பு, பூமி, நீர், கல் இவைகளெல்லாம் சாட்சிகளாக அமைகின்றன. பிரிந்திருக்கும் மனித ஆன்மா யுகமுடிவில் நித்தியப் பரம்பொருளில் சேர்ந்தொன்ருகும் வரை இவ்வியற்கைகள் நிலைத்திருப்பன எனக்கருதப்படும். திருமணச் சடங்கை முறையாக, முழுதும் நடத்துவதற்கு நெடுநேரமாகும். இவ்வாறு இவைகள் அடிப்படையில், வேறுபடுவதாகத் தோன்றும். ஆனல் நடைமுறையில், இந்து முஸ்லீம்கள் முக்கியமான சடங்குகளைத் தங்களது மாதானுசாரப்படி நடத்தினுலும்,

இதர சில்லறைச் சடங்குகளைப் பெரும்பாலும் ஒன்றுபோலவே நடத்துகிறார்கள். ஆடம்பரம், ஊர்வலம், விருந்துகள், கொண்டாட்டங்கள், பெண்கள் பாடும் பாட்டுக்கள், வெகுமதிகள், தமாஷ்கள், விளையாட்டுச் செயல்கள் எல்லாம் ஒன்றுபோல இருக்கின்றன. இஸ்லாம் எல்லா ஆடம்பரத்தையும் தடுக்கிறது. இந்து மதம் அதை விதிக்கவுமில்லை, விலக்கவுமில்லை. ஆனால், இவ்விரு வகுப்பாருடைய கலியாணக் காரியங்களையும் கவனிப்பவர், ஒரு வித்தியாசமும் கண்டுபிடிக்க முடியாது.

இவைகளின் விரிவான வருணனைகள் சுவையூட்டுவதாயிருக்கும்.

பீஹாரிலுள்ள முஸல்மான்களிடையே கல்யாணத்தில் நடைபெறும் சடங்குகள் கொண்டாட்டங்கள் எல்லாம், இந்துக்களுக்குப் பொதுவான அனுஷ்டானங்கள், சடங்குகள், கொண்டாட்டங்களால் உருப்பெற்றவை. முன் கூறியபடி முஸ்லீம் திருமணத்தில், **நிக்காஹ்**தான் முக்கியப் பகுதி. வைபவப்பகுதி **ஷாதி** எனப்படும். அநேகமாய் இரண்டும் ஒரே சமயத்தில் நடைபெறுவதுண்டு. சில சமயங்களில், **ஷாதி** வேறு சமயத்திலும் வேறு இடத்திலும் நடைபெறும். **ஷாதி**யின்போது மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டுக்குச் செல்வார்கள். வழக்கமாய்ப் பெண்வீட்டில் தங்குவதில்லை. வேறு வாடகை வீட்டில் தங்குவார்கள். அவரவர்களுடைய செல்வத்துக்கும் சமூக அந்தஸ்துக்கும் தக்கபடி அவர்களுடைய சிறப்பு, ஆடம்பரம், பரிவாரம் முதலியன அமைந்திருக்கும். மாப்பிள்ளை வீட்டார் வருவதற்குமுன் மாப்பிள்ளை வீட்டிலும் பெண்வீட்டிலும் சில சடங்குகள் நடைபெறும். இவைகளிலொன்று **ரத்ஜாகா** எனப்படும். பெண்கள் இரவில் விழித்திருந்து ஒரு வகை உணவு சமைப்பார்கள். இன்னொரு நாளில் **மண்டவ** என்னும் சடங்கு நடைபெறும். அப்பொழுது நீண்ட மூங்கில் கழிகளால் உள்முற்றத்தில் மணவறை போடப்படும். மூன்றாவதொரு நாள், சாதம் சமைத்து இறந்தவர்கள் பெயரால் ஏழைகளுக்கு உணவளிக்கப்படும். **கந்தூரி** நடைபெறும். இந்த உணவை சையதுப் பெண்கள் மாத்திரம் உண்ணலாம். குறித்த நாளில் மாப்பிள்ளை வீட்டார் அல்லது **பரத்** புறப்பட்டுப் பெண்வீட்டுக்கு வருவார்கள். திருமணத்திற்கு முன்பு பெண் **மாயுன்** அல்லது **மஞ்சா** என்பதைக் கடைப்பிடிக்க வேண்டும். அப்பொழுது அவள் வீட்டைவிட்டு வெளியேறக்கூடாது. யாராவது—தெரிந்தெடுத்த சில பெண்களே—அக்காலத்தில் அவளைக் காணலாம். அவளுக்கு **உபதான்** (மஞ்சளும் மற்றுஞ் சில சரக்குகளும் சேர்ந்த ஒருவகைத் தயாரிப்பு) தேய்க்கப்படும். திருமணத்தன்று தான் வெளியே வருவாள்.

இந்துக்களுடைய **மண்டவம்** அல்லது **மண்டபத்தை** கலியாணத்திற்கு ஒருநாள் அல்லது இரண்டு நாள் முந்தி ஒரு நல்ல நாளில் செய்வதுண்டு. அதில்தான் கலியாணம் நடைபெறும். காலஞ்சென்ற மூதாதையரை வரவழைத்து, அவர்கள் மணமக்களைக் கண்டு களித்துத் திருமணத்தை வாழ்த்தி மணமக்களைத் தங்களுடைய உறவினத்தில் ஏற்றுக்கொள்ளச் செய்வதற்காக ஒரு சடங்கு உண்டு. பெண்ணுக்கு மஞ்சள் தேய்க்கப்படும். இது ஒரு முக்கியச் சடங்கு. மஞ்சள் ஒரு பெண்ணுக்கு இரண்டு தடவை தேய்க்கப்படமாட்டாது என்று ஒரு பழமொழி வழங்கப்படுகிறது; அதாவது ஒரு கணவன் இறந்தாலும் அப்பெண்ணுக்கு மறுமணம் கிடையாதென்பதாம். திருமணத்திற்கு முன்பு யாரையும் பார்க்க முடியாதபடி தனியாக வைக்கப்படுகிறாள். அப்பொழுது மஞ்சட் பூச்சினாலும், குளிக்காததினாலும் மெலிந்து அழுக்கடைந்து தென்படுவாள். கலியாணத்திற்கு ஒரு நாள் அல்லது இரண்டு

நாட்களுக்கு முன்பே ஒரு சடங்கோடு நீராடுவாள். ஒவ்வொரு முக்கிய சந்தர்ப்பத்திலும் பிராமணர்களுக்கு உணவிடுதல் இந்தியா முழுதுமுள்ள ஒரு சாதாரண வழக்கம். இந்து முஸ்லீம்களுடைய கலியாண ஊர்வலம் அல்லது **பரத்**, ஆடம்பரத்திலே ஒன்று போல இருக்கும்; வித்தியாசம் காண முடியாது. யானைகள், குதிரைகள், தற்காலங்களில் மோட்டார் கார்கள், இரவாயிருப்பின் எல்லாவித விளக்குகள், மேள தாளங்கள் எல்லாம் தடபுடலாயிருக்கும். இந்துக்கள் முஸ்லீம்களிடையே மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டில் தங்குவதில்லை. அவ்வளவு பெரிய கூட்டத்திற்குப் பெண் வீட்டில் இடம் இருக்காது.

பீஹாரில் இந்துக்கள் வீடுகளில் ஊர்வலம் பெண் வீட்டிற்குச் செல்லும். அங்கு மாப்பிள்ளையைப் பெண்வீட்டார் நீர் தெளித்து, அரிசி தூவி, நெற்றியில் திலகமிட்டு விளக்கு ஆரத்தி யெடுத்து வரவேற்பார்கள். பெண்ணின் தகப்பனும் மாப்பிள்ளையைச் சடங்கு பூர்வமாக வரவேற்றுச் சில இனும்கள் அளிப்பார். இதர விருந்தினர்களும் வரவேற்கப்பட்டு, பானமும், சிற்றுண்டியும் அளிக்கப்படுவர். மாப்பிள்ளை வீட்டார் பின்பு தங்கள் ஜாகைக்குச் செல்வர். இதற்குப் **பரிச்சவான்** என்று பெயர். உடனே பெண் வீட்டார் சில பெண்களோடு உணவும் நீரும் எடுத்துக்கொண்டு மாப்பிள்ளை வீட்டார் ஜாகைக்குச் சென்று அவர்களைச் சாப்பாட்டிற்கழைப்பர்; மாப்பிள்ளை வீட்டாரின் பெரியோர்களுக்குச் சன்மானம் அளிப்பார்கள். இதற்கு **தூர்ச்சாக்** என்று பெயர்.

சிறிது சென்ற பிறகு மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டிற்குச் செல்வார்கள். பெண், **மண்டபத்**திலமர்ந்திருப்பாள். மாப்பிள்ளையின் அண்ணன் அவளுக்கு ஆடையணிகள், தின்பண்டங்கள், வாசனைப் பொருள்களை அளிப்பான். கோபுரம் போன்று அடி பெருத்து நுனி சிறுத்த ஒரு பெட்டியில் அவைகள் கொண்டு வரப்படும். இந்த ஒரு சந்தர்ப்பத்தில்தான் மாப்பிள்ளையின் அண்ணன் பெண்ணைப் பார்க்கவோ தொடவோ கூடுமென்று கருதப்படுகிறது. இதற்குக் **கன்னியா நிரீக்ஷன்** (பெண்ணைப் பார்ப்பது) என்று பெயர். அதற்கப்புறம் தான் முக்கியத் திருமணச் சடங்கு. மணமக்கள் **மண்டபத்**திற்குக் கொண்டு வரப்படுவார்கள். மாப்பிள்ளை வீட்டார் அளித்த ஆடையணிகளைப் பெண் புனைந்தும், பெண் வீட்டார் அளித்த ஆடைகளை மாப்பிள்ளை அணிந்தும் இருப்பர். கடவுளை வணங்கியபின் பெண்ணின் பெற்றோர்கள் பெண்ணை மணமகனுக்கு முறைப்படி தானம் செய்வர். இரு சாராரின் நெருங்கிய உறவினரும் அங்கிருப்பர். பீஹாரில் கோஷா வழக்கம் மிகக் கடுமையானது. ஆகவே அப்பொழுது மாப்பிள்ளை வீட்டு ஆண்களில் சடங்குக் காரியங்களில் ஈடுபட்டுள்ளவர்களும், நடத்திவைக்கும் ஐயரும் தவிர வேறு யாரும் அனுமதிக்கப்பட மாட்டார்கள். பெண்வீட்டாரைச் சேர்ந்த பெண்கள் இருப்பார்கள். அங்கிருப்பவர்களெல்லாம் சாட்சிகளாகக் கருதப்படுகிறார்கள். கடவுள், சூரியன், சந்திரன், தீ, நீர், மண், கல் ஆகியவைகளுக்கெல்லாம் இவ்வைபவத்தைப் பார்த்துக் களித்து வாழ்த்துமாறு பிரார்த்தனை செய்யப்படும். தாங்கள் ஒருவர்க்கொருவர் உண்மையாக, விசுவாசமாக இருப்பதாக மணமக்கள் சில மந்திரங்களைச் சொல்லி உறுதி கூறுவர். மணமக்கள் நெருப்பை வலம் வருவர். மணமகன் மணமகள் நெற்றியில் **சிந்தூர**மிடுவான். அதற்குச் **சிந்தூரதான**மென்று பெயர். இதோடு இச்சடங்கு முடிவுறும். இச் **சிந்தூரம்** மணப்பெண்ணின் நற்காலத்திற்கறிகுறி. கணவன் உயிரோடிருக்கும்வரை அவள் அதை அணிந்துகொள்வாள்.

முஸ்லீம்களுக்கிடையில் மாப்பிள்ளை வீட்டார் வந்த பிறகு பாரி என்ற சடங்கு நடைபெறும். அவர்கள், தங்களுடைய ஜாகையிலிருந்து பெண் வீட்டிற்கு ஆடைகள், எண்ணெய், இனிப்புத் தின்பண்டங்கள், பழங்கள் முதலியன கொண்டு மேளசகிதம் செல்வார்கள். இக்கூட்டத்தில் முதலில் அடிபெருத்து நுனிசிறுத்த ஒரு கூடையில்-இதன் பெயர் சோஹபுரா-வாசனைப் பொருள்கள் பழங்கள், இனிப்புணவுகள், சாயமேற்றிய நூல் சிட்டங்கள், அரிசி இன்னும் மற்றவையும் இந்துக்களைப்போன்றே கொண்டுபோகப்படும். பெண்வீட்டார் இவைகளை வாங்கிக்கொண்டபின் அவர்களும் மாப்பிள்ளைக்கு ஆடை முதலியவைகளைக் கொடுப்பார்கள். இதற்கு கிலாத் என்று பெயர். மாப்பிள்ளை இந்த ஆடைகளை அணிந்துகொள்வான். அதுவரை நிக்காஹ் ஆகிய முக்கியச்சடங்கு நடைபெருவிட்டால் அது இப்பொழுது நடைபெறும். இந்துக்களிடையில் மாப்பிள்ளை பெண் நெற்றியில் சிந்தூரமிடுவதுபோல இவர்களில் மாப்பிள்ளை பெண் தலையில் சந்தனமிடுவான். இதற்கு மங்கபாரி என்று பெயர். இச்சந்தர்ப்பத்தில் பொருத்தமுள்ள செய்யுட்கள் சொல்லப்படும்; பாட்டுக்கள் பாடப்படும். இந்துக்களுக்குள்ளும் துர்ச்சக், கன்னியானிரீக்ஷன் முதலிய சமயங்களில் படித்த புலவர்களும் சிறுமியர் சிறுவரும் சிரத்தையோடும் தேலியாகவும் பாட்டுக்கள் பாடுவதுண்டு. தர்க்கப் பேச்சுக்கள் நடத்துவதுமுண்டு. ஒவ்வொரு சமய சந்தர்ப்பங்களிலும் இந்து முஸ்லீம் பெண்கள் பொருத்தமான பாட்டுக்களைப் பாடுவார்கள். இவைகள் ராகத்திலும் பொருளிலும் ஒன்ருகவே யிருக்கும்.

இந்தக் கலியாணக் கூட்டம் பொதுவாக பெண் வீட்டிலிருந்து ஒரு நாள் தாமதித்துப் பிறகு புறப்படும். இரண்டாவதாக மணமகன் மண்டபத்திற்கிட்டுச் செல்லப்படுவான். பெண்களாகக் கூடிச் சில சடங்குகள் செய்வார்கள். அதற்கு மதவிசேஷமொன்றுங் கிடையாது; வெறும் வழக்கம். இச்சடங்கு இடத்திற்கிடம் மாறுபடும். இந்துக்களில் மணமகன் மஞ்சள் நீராட்டப்படுவான். இதற்குச் சன்மானம் கொடுத்தாலன்றி இணங்க மாட்டான். இதற்கு உபதான் என்று பெயர். மாலையில் பெண்கள் அவனை மணமகளின் அறைக்கு இட்டுச்சென்று கோஹ்பார் என்ற சடங்கைச் செய்வார்கள். கலியாணக் கூட்டத்தினர் யாவரும் புறப்படுமுன் முஹ்தேகிச் சடங்கு நடைபெறும். மணமக்கள் ஒருங்கே அமர்ந்திருக்க மணமகன் வீட்டார் மணப்பெண்ணின் முகத்தை அப்பொழுதுதான் பார்ப்பார்கள்; அன்பளிப்புகளும் செய்வர்; கடைசியில் பிதாய் அல்லது விடைபெற்றுச் செல்லுதல். இடையில் மாப்பிள்ளை வீட்டாருக்கு உணவேற்பாடு செய்வது பெண்வீட்டார். முஸல்மான்களிடையேயும் மணமகன் மண்டவத்திற்கு இட்டுச் செல்லப்படுகிருன். அப்பொழுது ருனுமாய் சடங்கு - அதாவது மாப்பிள்ளையும் பெண்ணும் ஒருவரை யொருவர் கண்ணுடிகளில் பார்த்துக் கொள்வர். மாப்பிள்ளை வீட்டுக்கு மணமக்கள் போகும்போது மாப்பிள்ளைக்குச் சீர்செய்வது இந்து முஸ்லீம் இருபாலாரின் வழக்கம். இப்பொருள்கள் பெரும்பாலும் வீட்டுக்குரிய பண்ட பாத்திரங்கள், படுக்கைகள், பெண் ஏறிச்செல்லுவதற்குப் பல்லக்கு முதலியனவாகும். இந்துக்களிடையே அநேகமாய் ஒரு பசுவைக் கொடுப்பார்கள். நிதிமிகுத்தவர்கள், குதிரையோ, யானையோ அல்லது தற்காலத்தில் ஒரு மோட்டார்காரோ சீர் செய்வார்கள்.

முஸ்லீம்களுக்குள், பெண் வந்த உடன் நேராக மாப்பிள்ளையின் வீட்டுக்கு இட்டுச்செல்லப்படுவதில்லை. இடையில் தர்காபோன்ற ஓர்

இடத்தில் நிறுத்தி மணமகன் வீட்டுப் பெண்கள் தண்ணீரும் மாஞ்சுள்ளியும் கொண்டுவந்து சில சடங்குகளைச் செய்வார்கள். மணமகன் வீட்டிற்கு வந்ததும் அவனுடைய சகோதரி அவர்களை உள் நுழையவிடாது தடுத்து அவனுக்கு வெகுமதி கொடுத்தாலன்றி விடமாட்டாள். இந்துக்களில், இம் மாதிரித் தடுப்பதை நிறுத்த சகோதரியின் கணவனுக்கு நன்கொடை செய்யப் படுகிறது. பையனும் பெண்ணும் **காளியாஸ்தானுக்கோ** அல்லது ஒரு கோயிலுக்கோ அழைத்துச் செல்லப்படுவர்.

இவ்விதமாக இந்து முஸ்லீம்களுக்கிடையே நடைபெறும் சடங்குகள், அனுஷ்டானங்கள் அநேகமாக ஒன்றுபோலவே இருக்கும். இஸ்லாம் இவை களை விதிக்காதபோதே இவ்வாறு இருக்கிறது. மதநூல் விதிபிறழாத தூய முஸல்மான்களுக்கு இவைகளெல்லாம் மதவிரோதமாகக்கூடத் தென்படக் கூடும்.

யாவரும் பொதுவாக அறிந்துள்ளபடி இந்துமதம் விவாகப் பிரிவினையை அனுமதிக்கவில்லை. இம்மையில் மட்டுமன்றி மறுமையிலும் அப்படியே. ஆகவே மறுமணம் என்ற பேச்சுக்கே இடமில்லை. இஸ்லாம் இம்மாதிரி யொன்றும் வைத்துக்கொள்ளவில்லை. விதவை மணத்திற்கு நபிகளின் அனு மதியே இருக்கிறது. அவரே விதவைகளை மணம் புரிந்தவர். இருப்பினும் இந்துக்களின் பழக்கங்களும் சூழ்நிலையும் முஸ்லீம்களை எவ்வளவு தூரம் பாதித்திருக்கிறதென்ருல், வட நாட்டிலுள்ள முஸ்லீம் உயர் குடும்பங்களில் சமூக முறைமையாகவோ, மதநெறியாகவோ விதவை மணம் விலக்கப்படா விட்டாலும், அது சிலாக்கியமானதாகக் கருதப்படவில்லை.

இந்து முஸ்லீம்கள் முக்கிய ஈமச்சடங்குகளைத் தங்களுடைய மத நெறிப்பிரகாரம் செய்கிருர்கள். முஸ்லீம்கள், புதைப்பதற்கு முன் தொழு கிருர்கள்; பின்பும் தொழுகிருர்கள்; மூன்ருவது அல்லது நான்காவது நாளி லும், மறுபடி பத்தாவது, நாற்பதாவது நாளிலும் இறந்த ஆன்மாவின் நலத்திற்காக ஏழைகளுக்கு உணவளிக்கிருர்கள். சாவுக்குப்பின், குறிப்பிட்ட தேதிகளில் இவ்வாறு அனுஷ்டிப்பது இஸ்லாமில் ஏற்பட்டிருக்கிறதா என்பது எனக்குத் தெரியாது. ஆனல் அவர்களின் செயல்கள் இந்துக்களின் செயல் களைப்போலவே இருக்கின்றன. இந்துக்கள் இரண்டு, ஏழு, பத்து, பன்னி ரண்டு, பதின்மூன்று அல்லது முப்பதாவது நாளில் இறந்த ஆன்மாவுக்கு நீரும் பிண்டமும் அளித்துவிட்டு ஏழைகளுக்கு உணவிடுகின்றனர்; இரப்ப வர்க்குப் பிச்சையிடுகின்றனர்.

ஜாதி வித்தியாசமும் இந்திய முஸல்மான்களைப் பாதிக்காமலிருக்க வில்லை. முஸல்மான்களிடையே ஜாதிகளைக் குறிக்கும் சொற்கள் ஏராளமாக இருக்கின்றன. சையது, ஷேக், பட்டாணி, மாலிக், மோமீன், மன்சூர், ராயீன், காசாப், ராகி, ஹஜ்ஜாம், தோபி என்பன அவைகளிற் சில ; சில பெயர்கள் தொழிலைக் குறிப்பன ; சில, பரம்பரைப் பெயர்கள். ஒரு பிரிவினருக்கும் இதர பிரிவினருக்கும் கொள்வன கொடுப்பன சமூக முறையாக அல்லது மத விஷயமாகத் தடுக்கப்படாவிட்டாலும், ஒரு பிரிவைச் சேர்ந்தவர்களுக்குள் ளேயே சம்பந்தம் அடிக்கடி நடக்கும். அதற்கு மேலாக மற்றென்று, இந்துக் களிடையே உள்ள பல்வேறு ஜாதியார்களுக்குள்ளும் காணப்படும் ஒட்டாத் தன்மையையும், தெளிவாகச் சொல்லமுடியாத ஒரு வேறுபாட்டுணர்ச்சியை யும் இவர்களும் குறிப்பிடத்தக்க அளவில் பெற்றிருக்கிருர்கள் என்பது

இவர்களிடையே மிக நெருங்கிப் பழகுவோர்க்குப் புலனுகும். முஸ்லீம் சமூகத்தில் உள்ள முஸ்லீம் பங்கிக்கு இந்துக்களிடைத் தீண்டாதாருக்குள்ள அந்தஸ்தைக் காட்டிலும் அதிகமாக ஒன்றும் இல்லையென்பதைக் குறித்தால் மாத்திரம் போதுமானது. இஸ்லாம் இவைகளிலெதையும் அனுமதிக்கவில்லை. எனினும் அது சூழ்நிலையின் வேலையாம். அதை இந்திய முஸ்லீம்கள் எதிர்க்க முடியவில்லை.

இந்துக்களிலிருந்து ஏராளமாக முஸ்லீமாக மாற்றப்பட்டவர்கள் தங்களுடன் இந்து மதப் பழக்க வழக்கங்களைக் கொண்டு சென்ருர்களென்பதும், நெடுங்காலமாகியும் அவைகளை விடாமல் கடைப்பிடிக்கிருர்கள் என்பதும் இது சம்பந்தமாகக் குறிப்பிடவேண்டியது அவசியமாகும். மால்கான ரஜபுத்திரர்களைப்பற்றி மாத்திரம் இங்குக் குறிப்பிட்டால் போதுமானது. இருபது வருஷத்திற்கு முன்னல் இவர்களை மறுபடியும் இந்துக்களாக மாற்ற வீணுக முயற்சி செய்யப்பட்டது. இதனுல் மிகவும் வெறுப்பு ஏற்பட்டதேயொழிய வேறொன்றுமில்லை. இந்துக்களாக இருந்த காலத்தில் அனுஷ்டித்த ஆசாரங்களையும் சடங்குகளையும் இவர்கள் இன்னும் அனுஷ்டிக்கிருர்கள். இதைப் போன்று பழக்க வழக்கங்களைக் கைவிடாத அநேக கூட்டத்தார்கள் சந்தேகமில்லாமல் இருக்கிருர்கள்.

இஸ்லாம் பிரத்தியேக தாயபாக விதிகளைக் கொண்டிருந்தாலும் முஸ்லீம் வகுப்பாரில் அநேக கூட்டத்தார் சமீப காலம் வரையும் முஸ்லீம்களாக மாறுவதற்கு முன் அனுசரித்த தாயபாகச் சட்டங்களையே அனுசரித்து வந்தார்கள். சிந்து, குஜராத், பம்பாய் முதலிய இடங்களிலுள்ள கோஜாக்கள், கச்சி மெமான்கள், பொஹராக்கள்: பணம் படைத்த முஸ்லீம் வகுப்பார். இவர்கள் இந்தியாவின் மற்றப் பாகங்களில் மட்டுமின்றித் தெற்கு, கிழக்கு ஆப்பிரிக்கா, அரேபியா, பாரசீகம், மலேயா முதலிய நாடுகளிலும் வியாபாரமும் தொழிலும் உடையவர்களாக இருக்கிருர்கள். அவர்களில் அநேகர் 1937-வரையும் இந்துப் பழக்க வழக்கங்களை மட்டுமன்றி இந்து தாயபாகச் சட்டத்தையும் அனுசரித்து வந்தார்கள். அதைப் போன்றே பலுச்சிகளும் சில பஞ்சாபியரும் தங்களுடைய சொந்தப் பழக்க வழக்கங்களை அனுசரித்து வந்தனர். மாப்பிள்ளைமார்களை மறுமக்கத்தாயம் முறை கட்டுப்படுத்தி வந்தது. சட்டத்திற்கு விரோதமான பழக்க வழக்கங்களிருப்பினும், ஷாரியத் எல்லா முஸல்மான்களுக்கும் செல்லுபடியானது என்று ஒரு சட்டம் 1937-ல் தான் இயற்றப்பட்டது.

சந்தேகமில்லாமல் இந்துக்கள் முஸல்மான்களோடு உடனமர்ந்துண்ண எப்பொழுதும் மறுத்து வந்திருக்கிருர்கள். இன்றுவரை இந்தத் தடை இந்து முஸ்லீம்களுக்கிடை மட்டும்தான் இருந்துவருகிறது என்று சொல்வதற்கில்லை; இந்து ஜாதிகளில் பெரும் பிரிவுகளுக்குள்ளும் உட்பிரிவுகளுக்குள்ளும் இருந்துதான் வருகிறது. இவ்விதமாக ஒரு பிராமணர் ஒரு ரஜபுத்திரனேடு உண்பதில்லை. ஒரு ரஜபுத்திரன், ஒரு பனியா அல்லது காயஸ்தனேடு உண்பதில்லை. பிராமணர்களுக்குள்ளும் சாகதவிபி பிராமணன் சார்ஜுபரி பிராமணனேடு உண்பதில்லை. தென்னட்டுப் பிராமணன், வங்காள அல்லது மைத்திலிப் பிராமணன் இவர்களுக்குள் சமபந்திச் சாப்பாடு கிடையாது. உறவினராயிருந்தாலொழிய சார்ஜுபரி பிராமணர்கள் தங்களவரோடு உண்பதில்லை. ஸ்ரீவாஸ்தவா காயஸ்தன், அம்பாஸ்தன் அல்லது கர்ண காயஸ்தனேடு உண்ப

தில்லை. இந்துவல்லாதவன் இந்தத் தடைவிதிகளை நுணுகி ஆராயப் புகுந் தால் கண்ணைக் கட்டிக் காட்டில் விடப்பட்டது போல் திகைப்பான். ஒரு ஜாதிக்கும் இன்னொரு ஜாதிக்கும் இடையில் மாத்திரம் இவ்வித்தியாசங்கள் இல்லை; உட்பிரிவுகளுக்குள் மாத்திரமும் இல்லை; அதற்கப்பால் உணவு வகைக்கும், சமைக்கப்படுகிற விதத்துக்கும்கூட எட்டிப்போகிறது. பீஹாரில் சுடப்பட்டிருந்தால் சாப்பிடக்கூடாது. நெய்யில் பொரிக்கப்பட்டிருந்தால் அயல் ஜாதிக்காரர்களிடமிருந்தும் உண்ணலாம். ஆனால், வங்காளத்தில் அப்படியில்லை. சில காய்கறிகளை உப்புப் போடாமல் சமைத்திருந்தால் உண்ணலாம். உப்புப் போட்டிருந்தால் உண்ணக்கூடாது. இந்த வேறு பாடுகள் மாகாணத்துக்கு மாகாணம், ஜாதிக்கு ஜாதி, பொருளுக்குப் பொருள் வித்தியாசப்படுகிறது. இந்த ஜாதி முறையிலே பிறந்து வளர்ந்த ஒருவருக்குத் தவிர மற்றவர்களுக்கு இது ஏன்? எதற்கு? என்பதொன்றும் புரியாது. ஒரு காயஸ்தன் தொட்ட உணவை ரஜபுத்திரன் மறுத்தால் அல்லது ரஜபுத்திரன் தொட்ட உணவைக் காயஸ்தன் மறுத்தால், உணவளித்தவன் மனம் வருந்து வதோ அவமானப்படுத்தப்பட்டதாக நினைப்பதோ கிடையாது என்பதில் ஆச்சரியப்படுவதற்கில்லை. இதைச் சகஜமாகக் கருதுகிறார்கள். இதில் தாழ்வோ அவமானமோ ஒன்றும் நினைத்துக் கொள்வதில்லை. தீண்டப்படாத வர்களென்பவர்கள்கூடத் தங்களுடைய விதியைக் கடுகடுப்பும் வெறுப்பு மின்றி ஏற்று வந்திருக்கிறார்கள். நான் மேலே கூறியது இந்துக்களிலுள்ள பொதுமக்களைக் குறிக்குமேயல்லாது தற்காலப் படிப்புள்ளவர்களுக்குப் பொருந்தாது. பிரம சமாஜம், ஆரிய சமாஜம் போன்ற சீர்திருத்த இயக்கச் சார்புள்ளவர்களுக்கும் அல்லது மகாத்மா காந்தியின் சமன் செய்யும் சக்தி வசமானவர்களுக்கும் பொருந்தாது. படித்த அல்லது சீர்திருந்திய இவர்கள் அநேகமாய் இந்தத் தடைகளை விட்டுவிட்டார்கள், அல்லது தங்கள் வாழ்வில் விலக்கிவிட்டார்கள். அவைகளைப் பழக்கத்தில் வைத்திருப்பவர்களும் அவை களைச் சிறந்த அறிவுடைமை என்று கருதவில்லை.

இந்துக்களோடு நெருங்கிப் பழகி அவர்களுடைய சாதி முறைச் சமூக அமைப்பைத் தெரிந்துகொண்ட முஸல்மான்கள் இந்தத் தடைகளை நேசப் பான்மையில் உணரத் தவறியதில்லை; வெறுத்ததுமில்லை. இந்துக்களில் இவை ஏற்றத் தாழ்வைக் குறிக்கவில்லை; தொன்று தொட்ட வழக்கம். அப்படித் தான் இந்துக்களும் அதை எடுத்துக் கொள்கிறார்களென்று அவர்கள் நன்கறி வார்கள். ஆகையால் அழைக்கப்பட்டபோது இந்துக்களுடைய வீட்டு விசேஷங்களான திருமணம், பிறந்த நாட் கொண்டாட்டங்களில் அவர்கள் தாராளமாகக் கலந்து கொண்டார்கள்; தங்கள் வீட்டு விசேஷங்களுக்கும் இந்துக்களை அழைத்திருக்கிறார்கள். மனம் விட்டுப் பிரியமாக உறவாடு வதற்கு உணவு விஷயம் குறுக்கே நிற்கவில்லை. இந்து தன்னுடைய ஜாதி யாசாரத்தைக் கைவிடாமல் முஸ்லீம் நண்பர்களுக்கு விருந்தளித்திருக்கிறான். இந்து ஜாதி யாசாரத்திற்குக் கேடு வராதபடி முஸ்லீமும் அவர்களுக்கு விருந் தளித்திருக்கிறான். முன்போல இங்கும் நான் சொல்வது, குயுக்தி யறியாத சாதாரண முஸல்மானுக்குப் பொருந்துமே தவிர இக்காலத்திய படிப்புள்ள எல்லா முஸ்லீம்களுக்கும் பொருந்தாது. நான் மேலே கூறியவை ஜாதிமுறை யைச் சரியென்று கூறுவதற்குமல்ல; அல்லது அதைக் கொஞ்சம் குறைக்க வேண்டுமென்பதற்குமல்ல. உள்ள நடப்பை உள்ளபடி கூறியிருக்கிறேன்.

காலம் மாறிவிட்டது. அத்துடன் நோக்கங்களும் மனப்போக்குகளும் மாறி விட்டன. இப்பாகுபாடுகளிலும் வேறுபாடுகளிலும் எவ்வளவு அதிகத்தைச் சீக்கிரம் ஒழிக்க முடியுமோ அவ்வளவைச் சீக்கிரத்தில் ஒழிப்பது விரும்பத் தகுந்ததென்ருலும்—அதுவும் இந்து முஸ்லீம்களில் பெரும்பாலோர் அவைகளை வெறுக்க ஆரம்பித்த இக்காலத்தில்—இவைகள் முற்காலத்திலோ அல்லது தற்காலத்திலோ இவ்விரு வகுப்பாருக்குமிடையே இணக்கம், நல்லெண்ணம், நட்புணர்ச்சி ஏற்படுவதற்கு இடையூறுகளாக இருந்தன என்று பிரமாதப் படுத்துவது தவறு.

முஸ்லீம்கள் மிகுந்துள்ள மாகாணங்களிலாயினும் சரி, இந்துக்கள் மிகுந்துள்ள மாகாணங்களிலாயினும் சரி, எண்ணற்ற கிராமங்களில் இந்து முஸ்லீம் இரு சாராரும் வாழ்கிருர்கள். எந்தக் கிராமத்திலும் அவர்க ளிடையே உண்மையான நட்பும் அளவளாவுதலும் நிலவுவதைக் காண்பது சாதாரண அனுபவம். இந்து தனக்கு அண்டையிலிருக்கிற முஸ்லீமை **பாயி, சாச்சா, காக்கா** என்று ஏதாவதொரு முறை வைத்துக் கூசாமல் கூப்பிடுவதை யும், அவ்வாறே ஒரு முஸ்லீம் தனக்கடுத்த வீட்டு இந்துவை அழைப்பதையும் காண்கிருேம். உண்மையாக இரு வகுப்பாரைச் சேர்ந்தவர்களுக்கும் பொது வான அநேகம் பெயர்கள் இருக்கின்றன. சமூகத்தில் தாழ்ந்த படியில் உள்ளவர்களில் இது அதிகம். இந்துப் பெயர்களை முஸ்லீம்கள் வைத்து வழங்குவதுண்டு; முஸ்லீம் பெயர்களையும் இந்துக்கள் வைத்துக்கொள் கிருர்கள். பட்டம் பதவி, அலுவல்களைக் குறிக்கும் பெயர்களன்றி மனி தர்களின் சொந்தப் பெயர்களின் விஷயத்திலும் இது உண்மையாகும். மனிதர்களுக்கு மட்டுமன்றிக் கிராமங்கள், நகரங்கள், குளங்கள் இன்னும் வேறென்னென்ன பொருள்களுக்குப் பெயர் சூட்டலாமோ அவையத்தனையும், ஒன்று, இந்துப்பெயர் அல்லது முஸ்லீம் பெயர், அல்லது இது பாதி அது பாதியாகக்கொண்டு விளங்குகின்றன. அந்த இடங்களில் குடியிருப்பது அல்லது அவைகளுக்குச் சொந்தக்காரராயிருப்பது இந்துக்களா முஸ்லீம்களா அல்லது இருவருமா என்பதற்கும் அவைகளின் பெயர்களுக்கும் சம்பந்த மில்லை.

ஆதிகாலக் கிராம வாழ்க்கை மெதுவாகச் சிதறுண்டு வருகிறது. பீஹாரில் ஒரு கிராமத்தில் வளர்ந்து அதனுடன் கொண்டுள்ள பிடிப்புகளை அறுத்துக்கொள்ளாத நான், அங்கிருந்த பொதுவாழ்வை விளக்கிக் கூறு கிறேன். நான் வாலிபனாக இருந்தபோது இத்தகைய நிலைமை இருந்தது; இப் பொழுதும் அது மறைந்துவிட.வில்லை. ஒவ்வொரு கிராமமும் அநேக விஷயங் களில் கிட்டத்தட்டச் சுய தேவையைப் பூர்த்தி செய்வதாக இருந்தது; அதற்கு வேண்டிய சாகுபடி நிலம், மேய்ச்சல் தரை, வேலையாட்கள், தொழிலாளிகள், சகலவிதமான அந்தஸ்தும், அலுவலுமுள்ளவர்கள் எல்லோரும் அங்கிருப்பார் கள். இவ்விதமாகச் சரியானதொரு கிராமத்தில் உழவர்கள், பாட்டாளிகள், ஜமீன்தார்கள், பிராமணர்கள், அநேக இடங்களில் இந்துக்கள் முஸ்லீம்கள் அத்தனை பேரையும் காணலாம். ஒவ்வொரு கிராமத்திலும் அதற்கேற்பட்ட தச்சன், கொல்லன், நாவிதன், வண்ணுன், குயவன், வளையற்காரன், பொரி செய்பவன், செக்கான் இருப்பார்கள். அங்கே தோட்டி, சாமார், தோம் முதலியோரும் இருப்பார்கள். கிராமத்தின் சமூக, பொருளாதார வாழ்வில் இவர்களால் பயனுண்டு. அறுவடைக் காலத்தில் உழவர்கள் இவர்களுக்குத்

தானியமளிப்பார்கள். வீடுகளில் ஏற்படும் பேறுகாலம், திருமணம், இழவு முதலிய விசேஷங்களில் இவர்களில் பெரும்பாலாருக்கு, ஏற்பட்ட ஊழியம் உண்டு. அந்தந்த வீட்டாரின் அந்தஸ்து நிலைமைக்குத் தகுந்தபடி இவர்கள் ஊதியம் பெறுவதுண்டு. இந்த வேலைக்காரர்களிற் பலர் முஸ்லீம்களாக இருப்பார்கள்; இருப்பினும் இந்துத் தொழிலாளிகள் போல வேலையைச் செய்து ஊதியம் பெறுவார்கள். உதாரணமாக, இந்துக்களின் வீட்டு விசேஷங்களில் நாவிதன் முக்கியமான பேர்வழி. பிறந்த முடி யெடுப்பதில் இவனே முக்கிய காரியஸ்தன். இந்துக்களில் உயர்தர வகுப்பார் பூணூல் போடுவதும் இந்தச் சந்தர்ப்பத்தில்தான். கல்யாண சந்தர்ப்பத்திலும் இன்னும் அநேக மாய் எல்லாச் சடங்குகளிலும் இவனுக்கு ஏதாவது அலுவலிருந்தே தீரும். கருமாதி காரியங்களிலும் எல்லா வகுப்பு இந்துக்களிடையேயும் முடியெடுப் பது முக்கிய காரியம். சிராத்த காலத்திலும் அவனுக்கு நிறைய வேலைகள் இருக்கின்றன. இந்து நாவிதன் இல்லாத கிராமங்கள் ஏராளமாக இருக் கின்றன. பிண்டமும் தண்ணீரும் அளிப்பது தவிர மற்ற எல்லாக் காரியங் களையும் முஸ்லீம் நாவிதனே செய்கிறுன். தனது வழக்கத்திற்கும் மதத் திற்கும் விரோதமென்று சொல்லி முஸ்லீம் நாவிதனுடைய ஊழியத்தை ஏற்றுக்கொள்ள இந்து மறுப்பதில்லை; முஸ்லீம் நாவிதனும் கிட்டத்தட்ட மதச்சார்பான இவ்வூழியங்களைச் செய்ய மறுப்பதில்லை. இஸ்லாமின் கண் டிப்பான சட்டங்களுக்கு இது வெறுக்கத் தக்கதாக இருக்கலாம். இந்துக் களிடையே ஒவ்வொரு வாழ்வரசியும் வளையலணிந்து கொள்வது இன்றியமை யாததெனக் கருதப்படுகிறது. கல்யாண சந்தர்ப்பத்திலும், இதர நன்மை நடக்கும்போதும் அல்லது சாதாரண நாட்களிலும் வளையல் போட வருவது எப்பொழுதும் முஸ்லீம்களே. இந்துக்களில் பர்தாவைக் கண்டிப்பாக அனுஷ் டிக்கிற வீடுகளுக்கு முஸ்லீம் பெண்கள் வளையல் போடச் செல்ல அனுமதி உண்டு. இதைப் போலவே வண்ணன் அல்லது தோட்டி, ஓர் இந்து அல்லது முஸ்லீமாக இருக்கக்கூடும்; இருந்தாலும், தான் இந்து அல்லது முஸ்லீம் என்பதைக் கருதாது சாதாரணத் தினசரி வேலைகளையும், விசேஷ நாள் காரி யங்களையும் அவன் செய்துவிடுகிறுன். இன்னெரு ஜாதி, **மாலிகள்**; இவர்கள் திறமை வாய்ந்த பூந்தோட்டக்காரர்கள்; விசேஷங்களுக்கு மாத்திரம் பூக்கள் அளிப்பதில்லை. தினசரிப் பூசைக்கும், மதானுஷ்டான காரியங்களுக்கும் அவர்கள் மலர்கள் அளிக்கவேண்டும். மாலியும், தான் இந்து அல்லது முஸ் லீம் என்பதைக் கருதாது இக்காரியத்தைச் செய்கிறுன். தன்னுடைய தெய் வத்திற்குச் சாத்துவதற்கு முஸ்லீம் அளித்த மலரை இந்து வாங்க மறுப்ப தில்லை. கோயிலிலோ அல்லது விசேஷங்களிலோ விக்கிரகத்திற்கு மலர் அளிக்க முஸ்லீம் மாலியும் மறுப்பதில்லை. இவ்வாறு இவைகளெல்லாம் நூற்றுக்கணக்கான வருஷங்களாக நடந்து வந்திருக்கின்றன; இரு வகுப் பாரின் நெருங்கிய தொடர்பு காரணமாகவே இப்படி ஆகியிருக்க வேண்டும்.

## உடை

உடை யென்பது மற்றக் காரணங்களைக் காட்டிலும் அணிகிறவர்கள் வசிக்குமிடத்தின் சீதோஷ்ணத்தைப் பொறுத்தே அமைகிறது. ஆகவே இந்தி யாவில் மாகாணத்துக்கு மாகாணம் உடை வேறுபடுகிறதென்பதில் ஆச்சரிய மில்லை. அணிகிறவர்களின் வருவாயைப் பொறுத்தும் உடை அதிகமாக வித்தியாசப்படும். சமூகத்தில் கீழ்ப்படியிலுள்ளவர்களுக்குள்ளும் ஏழை

களுக்குள்ளும் அதிக வித்தியாசம் கிடையாது. சமூகத்தில் உயர்படியில் உள்ளவர்களுக்குள்ளும் கிட்டத்தட்ட அதேமாதிரிதான். அதிக வேறுபாடு கிடையாது. உண்மையில் வித்தியாசம் பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும் தான். பண்டித மோதிலால் நேரு, சர் தேஜ் பகதூர் சப்ரு, டாக்டர் சச்சிதானந்த சின்ஹா, பண்டித ஜவாஹர்லால் நேரு அல்லது பீஹார் மாகாண இந்து மகாசபைத் தலைவர் குமார கங்காநாத சின்ஹா, முஸ்லீம் லீகின் மின்னெளிகளான நவாப் மகம்மது இஸ்மாயில், செளதுரி கலிக்குஸ்மான், சர் அலி இமாம், அல்லது காய்தே ஆஜம் ஜின்னு இவர்களிடையே வெளிநாட்டான் யாரும் இந்திய உடையில் யாதொரு வித்தியாசமும் இலேசில் கண்டுகொள்ள முடியாது. அதேபோலச் சீக்கியர்களான சர்தார் சார்துல் சிங் கவீஷர் அல்லது சர்தார் மங்கள சிங்குக்கும் மௌலானு ஸாபர் அலி அல்லது மௌலானு அபுல்கலாம் ஆஸாதுக்கும் தலைப்பாகையில் தவிர வேறு எவ்வகை வித்தியாசமும் அவன் காணமுடியாது. அவன் பீஹாரிலோ, வங்காளத்திலோ, பஞ்சாபிலோ, அல்லது ஐக்கிய மாகாணத்திலோ ஒரு கிராமத்திற்குள் சென்றுல் அங்கு மும்முரமாக உழுதுகொண்டிருக்கிற ஒரு முஸ்லீம் விவசாயி அதே தொழில் செய்துகொண்டிருக்கும் இந்துவிலிருந்து தன்னை அலாதியாகப் பிரித்துக் காட்டுகிற உடுப்பணிந்துகொண்டிருப்பதாகக் காணமாட்டான். பெஸ் குல்லாயைப்பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. அது இந்திய மயமற்றது; சமீபத்தில்தான் இந்நாட்டில் நுழைக்கப்பட்டது. படித்தவர்களிற் சிலர் துருக்கியரைப் பின்பற்றி அதை அணியலானுர்கள். துருக்கியரோ அதை இப்பொழுது கைவிட்டு விட்டார்கள்.

இந்துக்களைக் காட்டிலும் முஸ்லீம்கள் அதிகமாகப் பைஜாமாக்களை அணிகிருர்கள். ஆகவே சில இடங்களில் அது அவர்களுடைய தனி உடை என்று கருதப்படக்கூடும். ஆனுல் உண்மை அப்படியல்ல. பைஜாமா அணிகிற இந்துக்கள் கொஞ்சப் பேரல்ல. முஸல்மான்களில் பெரும்பாலார் அதை அணிகிறதுமில்லை. இந்துக்களுடைய தனி உடுப்பு தோத்தி. அந்தச் சொல் சமஸ்கிருதத்திலிருந்து தோன்றியது. அதைத்தான் உண்மையாக இந்திய முஸ்லீம்களில் பெரும்பாலார் ஏதாவதொரு தினுசில் உடுத்துக்கொள்கிருர்கள். கிராமங்களை நன்கறிந்த யாரும், அதிகமாகக் கிராமங்களில் உள்ள முஸ்லீம் பொதுமக்களை நன்கறிந்த யாரும், இதைச் சுலபமாக ஒப்புக்கொள்வர்.

ஆபரணங்களின் ஒற்றுமை பர்தாவைத் தாண்டி, அந்தப்புரத்திற்குள்ளும் சென்றிருக்கிறது. பெண்கள் அணியும் அநேக ஆபரணங்கள் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் பொது. அவைகளின் பெயர்களும் இந்து அல்லது முஸ்லீம் ஆதாரத்திலிருந்து தோன்றியவை. அவைகளை அணிவது இந்துப் பெண்களா அல்லது முஸ்லீம் பெண்களா என்பதைப் பொறுத்து அவைகளுக்குப் பெயர் வழங்கப்படவில்லை. அதைப்போல இந்தியா முழுதும் மாதர்களுக்குப் பொதுவான ஆடை சேலை. அதை இந்து மாதரும் முஸ்லீம் மாதரும் உடுத்துகிருர்கள். வடமேற்குப் பகுதியிற் சில பாகங்களிற்போல, சில இடங்களில் மாதர் பைஜாமா அணிகிருர்களென்றுல் அதை முஸ்லீம் மாதர் மாத்திரம் அணிவதில்லை. சீக்கிய இந்துப் பெண்களும்தான் அவைகளை அணிகிருர்கள். குன்றுப் பிரதேசங்களில் கடுங் குளிர் காரணமாக எல்லோருமே பைஜாமாக்கள் அணிகிருர்கள்.

**பர்தா**

இந்தியாவுக்கு வரும் வெளிநாட்டான் யாருக்கும் திடீரெனப் புலப் படுகிற ஒரு சமூக வழக்கம் பர்தா அல்லது கோஷா. இந்தியாவில் அது ஒரு புது அமைப்பை ஏற்படுத்திக்கொண்டாலும் சுத்தமாக அது ஓர் இஸ்லாமிய வழக்கம். இஸ்லாமிய **ஷாரியத்**தின் பிரகாரம், மாதர் வீட்டுக்கு வெளியே போவது தடுக்கப்படவில்லை என்று அறிகிறேன். உடம்பை மூடுவதைப்போல் பர்தாவால் முகத்தையும் மூடிக்கொள்ள வேண்டும். இந்தியாவில் பொதுவாக மாதர்கள் வெளியே செல்ல அனுமதிக்கப்படுவதில்லை. பணக்காரர்களால் மாதரை வீட்டுக்குள் வைத்திருக்க முடியும். அது முடியாத ஏழைகள் பலவித அலுவலாகவும் வெளியே போக வேண்டியதாக இருக்கிறது.

பழைய இந்து வழக்கம் பர்தாவை ஏற்கவுமில்லை; போற்றவுமில்லை. மணாளனோடு நின்று செயலாற்றக்கூடிய எல்லாக் காரியங்களிலும் பெண் வெளிவந்து பங்கெடுத்திருக்கிருளென்பதற்கு வடமொழி இலக்கியங்களில் நிறையச் சான்றுகளிருக்கின்றன. தற்காலத்திய பர்தா வழக்கம் முஸல்மான் களிடமிருந்து முழுதும் கடன் வாங்கப்பட்டது. முஸ்லீம் ஆதிக்கத்தின் கீழ் வந்த இடங்களிலே இது கடுமையாக மேற்கொள்ளப்படுவதைக் காணலாம். வடநாட்டிற் போலத் தென்னுட்டில் முஸ்லீம் ஆதிக்கம் அதிகம் நுழையாத தால் அங்கு இது அவ்வளவாகக் காணப்படவில்லை. முஸ்லீம் அரசாங்கத் தாரைப் பின்பற்றிய சில குடும்பங்களில்தான் இதைக் காணலாம். இதை ஒழிக்கத் தோன்றிய சீர்திருத்தம், இந்துக்களிடையே வெகுவாக முன்னேறு கிறது. முஸ்லீம்களிடை அவ்வளவாக முன்னேருததற்கு, இஸ்லாமில் ஏதோ அதற்குச் சிறிது அனுமதி இருக்கிறது; இந்து மதத்தில் அவ்விதம் இல்லை.

இவ்விதமாக இரு வகுப்புக்களும் ஒன்றையொன்று பாதித்திருக் கின்றன என்பது மேலே கூறிய உண்மைகளினின்று தெரியவரும். இவ் வகுப்புகளுக்குள் மத வேறுபாடுகள் இருக்கின்றன. அவ்வேறுபாடுகள் அவர்களுடைய சமூகப்பழக்க வழக்கங்களை வேறுவேறு வகையில் உருப்படுத்தி யிருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. என்ருலும், இவ்விரு வகுப்பைச் சேர்ந்தவர்கள் சமாதானமாகவும் ஒற்றுமையாகவும் வாழ்ந்து வந்திருக்கின் றனர். இவ்வகுப்புக்கள் தம்முள் கலந்தொன்ருகவில்லை என்பது உண்மை; ஒன்றையொன்று முழுதும் உட்கொள்ள முடியவில்லை; இது ஏற்படும் என்று எதிர்பார்ப்பதற்குமில்லை. இஸ்லாம் வெளி நாட்டிற் பிறந்தது. அதைத் தழுவியவர்களின் வாழ்வை அடக்கியாண்டு செந்நிறப்படுத்தும் சட்டங்கள் முழுதும் அதில் உண்டு. அச்சட்டங்கள், வேறு பின்னமைப்பில் தோன் றியவை. ஆகவே அது இந்து மதத்தால் உட்கொள்ளப்படுவது முடியாத காரியமில்லை யென்ருலும் அந்நிகழ்வைக் கடினமாக்குகிறது. இஸ்லாமும் இந்து மதத்தை உட்கொள்ள இயலவில்லை. இந்து இலக்கியம், ஆன்மஞானம், சமயம் முதலியன சிறந்த நிலைக்குக் கொண்டுவரப்பட்டவை; கோடிக்கணக் கான மக்களால் போற்றி வழங்கப்படுபவை. இந்து மதம், இந்திய மண்ணிற் பிறந்து வளர்ந்து தன்னை எதிர்த்த பிரிவுகளையெல்லாம் நாளடைவில் உட் கொண்டு விட்டது. இந்து, புத்த மதங்களின் உறவை எழுதப் புகுந்த ரைஸ் டேவிட்ஸ் கூறுகிருர்: 'இந்து மதம் இதுவரையும் உலகம் காணுதபடி கருத்துக்கும் பேச்சுக்கும் முழுச் சுதந்திரத்தை அனுமதிக்கிறது.'[18]

18. Rhys Davids: *Buddhist India*, p. 258.

வேதங்கள் உபநிஷத்துக்கள் தோன்றிய ஆதி நாட்களிலிருந்தே இந்தப் போக்கு இருந்துவந்திருக்கிறது. பலப்பட்ட சித்தாந்தங்களும் ஆன்மஞானமும் தோன்றுவதற்கு இதுவே காரணமாகும். ஆகையால் ஓர் இந்து கண்டிப்பாகக் கடைப்பிடிக்க வேண்டிய சமயவரம்பு கிடையாது. ஆனால் இந்து மதம், ஒரு மனிதன் தன் மட்டில் எப்படி நடக்கவேண்டும், சமூகத்தில் எப்படி நடக்கவேண்டும் என்று சில விதிகளை வற்புறுத்துகிறது. இவ்விதிகள் இடத்துக்கு இடம், காலத்திற்கேற்ப, சமய சந்தர்ப்பங்களை யொட்டி மாறுபட்டிருக்கின்றன. ஆகவே இந்துக்களிடையே சமூக சீர்திருத்தத்திற்கு விரிவான இடம் இருக்கிறது. வளையக்கூடிய மென் கொம்புபோன்ற இத்தன்மையே மாறிவரும் நிலைமைகளை யொட்டி இதுவும் திருந்துவதற்கு உதவுகிறது. அது மட்டுமல்ல. இதைப்போன்று நெடுநாளைய சமய, ஆன்மஞானத் துறையற்ற கணக்கில்லாத மதங்களைத் தனக்குள்ளாக்கி விட்டதற்கும் இதுவே காரணம். சமூக நிலைக்கேற்றபடி மாறிக்கொள்ளும் தன்மையும், கருத்துச் சுதந்திரமும் இதற்கெதிரியாக முளைத்த கிளைகளை உட்கொள்ளப் பெரிதும் உதவின; புத்தனையாக்கியதுபோல, தன்னை எதிர்க்கின்ற கிளை மதத்தலைவர்களைத் தெய்வமாக்கவும் தயங்கவில்லை. புத்தமதக் கண்டனங்களை நூல்களில் காண முடியுமென்றாலும், புத்தன் ஓர் அவதாரமாக ஏற்றுக்கொள்ளப்பட்டான். இம்முரண்பாடு, இந்து, புத்தமதக் கலப்புக் காலத்தில் தோன்றிய கருத்துப் போராட்டத்தின் அறிகுறியாகும். இன்று மதத்தையும் அதனுடைய அறவொழுக்க நெறிகளத்தனையையும் இந்து மதம் தனதாக்கிக் கொண்டுவிட்டது. புத்தமதம் பிறந்த நாட்டில் புத்தமதத்தினன் ஒருவனுமில்லை. இந்து மதத்திலிருந்து கிளைத்து வெடித்தது புத்தமதம். அதனுடைய சித்தாந்தம் கருவிலும் உருவிலும் இந்துமதப் பின்னமைப்புக் கொண்டது. ஆகவே அது இந்தியாவில் இந்துமதத்தில் சீக்கிரம் கரைந்துவிட்டது. ஆனால் வேறு மதத்தையோ, தத்துவத்தையோ இது உட்கொள்ளவும் அல்லது இதை வேறு மதமோ, தத்துவமோ உட்கொள்ளவும் சந்தர்ப்பமில்லாத வெளி நாடுகளில், இது ஒரு தனி மதமாகச் செழித்தது. ஆகவே இத்தகைய பின்னமைப்பில் இந்துமதம் இஸ்லாமை உட்கொள்ளவில்லை, உட்கொள்ளப்படவுமில்லை. இவை முடியவும் முடியாது. இவ்விரு வகுப்பாரும் பக்கத்தில் பக்கத்தில் வாழ்ந்து வளர்ந்தது இரு சாராருக்கும் நன்மையளித்திருக்கிறதென்று நான் நம்புகிறேன். அவர்களுடைய நெடுங்காலச் சரித்திரத் தொடர்பில் ஏற்பட்ட பழைய, மறந்துபோன சம்பவங்களையும் கதைகளையும் கிண்டுவது அவ்விரு சாரரும் வேறு வேறானவர்கள் என்பதைக் காட்டுவதற்காகவும், வேறு வகையில் சொல்லப்போனால், அவர்களிடையில் போட்டியையும் கெடுதல் புத்தியையும் உண்டாக்குவதற்காகவுமே. இவ்வாறு கிண்டுவது அவர்களுக்குச் சேவை செய்வதாகாது. மனம் நெருங்கிய நட்பு முறையிலும் நல்லெண்ணத்துடனும் நூற்றுக்கணக்கான ஆண்டுகள் இவர்கள் வாழ்ந்துவந்திருக்கிறார்கள் என்ற உண்மையை அறிய முன்வருதல் நலம் தரும்; கண்டிப்பாகப் பெருமையும் அளிக்கும். இதற்கெல்லாம் மேலாக இன்னொரு விஷயமென்னவென்றால் வருங்காலத்தில் இத்தொடர்பிலிருந்து யாரும் விடுபட்டுக்கொள்ள முடியாதென்பதேயாம்.

இரண்டு சரித்திரப் பேராசிரியர்களிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக் காட்டி இப்பகுதியை முடிப்பதைக் காட்டிலும் நான் சிறப்பாக ஒன்றும் செய்துவிட முடியாது. இவர்களில் ஒருவர் இந்து. டாக்டர் தாராசந்த்

என்பவர். இவருடைய சொற்களை இதற்கு முந்தியும் அடிக்கடி மேற் கோள் காட்டியிருக்கிறோம். மற்றவர் ஒரு முஸ்லீம்; கல்கத்தா சர்வகலா சாலையில் சட்டம், இஸ்லாமியச் சரித்திரமாகியவற்றின் பேராசிரியர் திரு. சலாஹுதின் கோதாபக்ஷ்.

டாக்டர் தாராசந்த் எழுதுகிறார் :—

'இந்திய வாழ்வின் எல்லாத் துறைகளிலும் முஸ்லீம் செல்வாக்கு எவ்வளவு தூரம் நுழைந்திருக்கிறதென்பதை மிகைப்படுத்திக் கூற முடியாது. பழக்கங்கள், வீட்டு வாழ்வின் சின்னஞ் சிறு அம்சங்கள், இசை, உடைமுறை, சமையல் முறை, கலியாணச் சடங்கு, திருவிழாக்கள், பொருட்காட்சிகள், மாரத, ரஜபுத்திர, சீக்கிய அரசவைச் சம்பிரதாயங்கள் இவைகளில் தவிர வேறெங்கும் அதை அவ்வளவு தெளிவாகக் காணமுடியாது. பாபர், இந்துக் களும் முஸ்லீம்களும் ஒரே மாதிரி வாழ்வதையும் நினைப்பதையும் கண்டார். அவர்களிடை ஒரு தனியான "இந்துஸ்தானி முறை" இருப்பதைக் கண்டார். அவரது பின் சந்ததியார் இந்தச் சொத்தைப் புகழுறஅணி செய்து அற்புதமாக வளப்படுத்தினார்கள். அவர்கள் வைத்துவிட்டுச் சென்ற இப்பூர்விகச் சொத்தினால் இந்தியா பெருமை கொள்ளலாம்.'[19]

திரு. சலாஹுதீன் கோதாபக்ஷ் எழுதுகிறார் :

'மகமதியர்கள் ஒரு தனி ஜாதியென்று நமக்கு அடிக்கடி கூறப்படு கிறது. மேலும், ஆரியரும் செமித்தியரும் வேறாக இருப்பது போல இந்துக் களும் மகமதியர்களும் வெவ்வேறானவர்கள். இவர்களிடையே வாழ்க்கையின் அடிவேரிலிருந்தே வேறுபாடுகள் இருக்கின்றன: பழக்கங்கள், குணம், சமூக வழக்கங்கள், இனவகை இத்தனையிலும் வேறுபாடுகள்; இவ்விரு இனமும் ஒன்றாகக் கலக்க முடியாதபடி வேறுபாடுகள் அவ்வளவு முக்கிய மாகவும் பெரிதாகவும் இருக்கின்றன. இவைகள் ஒன்றுவது நடக்கிற காரிய மில்லை; கிட்டாதது; நடைமுறைக்கு ஒத்துவராத வெறுங்கனவு என்றெல் லாம் கூறப்படுகிறது. இந்த விவகாரம் ஒழுங்கானதென்று நான் கூற முடியாது. இந்துக்களுக்கும் மகமதியர்களுக்கும் ஆங்கிலேயர் எப்படியோ, அப்படியே இந்துக்களுக்கு முகமதியர்கள் வேறுபட்டவர்கள்; வெளியிலிருந்து வந்து நாடு பிடித்தவர்கள். சரி, இதை நாம் ஒப்புக்கொள்கிறோம். ஆனால் அவர்கள் நூற்றுக்கணக்கான வருஷங்களாகப் பக்கத்தில் பக்கத்தில் வாழ்ந்து வந்திருக்கிறார்கள்; இந்நாட்டு மக்களுடன் தாராளமாகப் பழகி வந்திருக் கிறார்கள். ஒருவர் வாழ்வை ஒருவர் மாற்றியமைத்திருக்கின்றனர். இஸ் லாமியர் இந்திய மாதரில் பெண் கொண்டிருக்கின்றனர். ஆங்காங்குள்ள பழக்கங்களை அனுசரித்திருக்கின்றனர்; சுருங்கக் கூறின் இந்நாட்டுக்கே உரிய குணாதிசயங்களிலும் சிறப்பியல்புகளிலும் ஊறிப் போய்விட்டார்கள். இவ் விஷயங்களை நாம் மறக்க இயலாது. இதற்கு அசைக்க முடியாத ஆதாரங் கள் இருக்கின்றன. இவர்களது கல்யாணச் சடங்குகள் இந்து மயமானவை. பெண்களின் பழக்கங்களிற் பலவும் அப்படியே. மண வாழ்க்கையின் அடை யாளமான சிந்தூரப் பொட்டு, கைம்மை காரணமாக உணவிலும் உடை யிலும் கடும் நியதி, மறுமணத்தை மறுப்பதோடன்றிக் கண்டித்தல், ஜெனன விலுள்ள இன்னும் எத்தனையோ சின்னஞ் சிறு பழக்கங்கள் இதற்கு ஆதாரங்

19. Tarachand, op. cit., pp. 141-2

ளாம். இந்திய ஜனத்தொகையில் இரு பிரிவாயிருக்கின்ற இவர்களிடையே இத்தனை காரியமும் மேலெழுந்த வாரியான உறவைக் காட்டவில்லை. மொழி யொன்றாக இருப்பதும், உடை ஒரே மாதிரியிருப்பதும் இதற்குச் சரியான சான்றாகும். மேலும், நீங்கள் என்ன வேண்டுமென்றாலும் கூறிக் கொள் ளுங்கள். மகமதிய ஜனத்தொகையில் பெரும்பகுதியினர் மதம் மாறிய இந்துக் களே. இந்து மகமதிய மதங்கள் ஒன்றையொன்று பாதித்திருக்கின்றன; சமூகப் பழக்கங்களை மாற்றி யமைத்திருக்கின்றன. பரஸ்பரம் ஒரு மதச் சாயம் இன்னொன்றில் கலந்திருக்கிறது. முஸ்லீம்கள் இந்நாட்டைக் கைப் பற்றியதிலிருந்து இந்து மதம், இஸ்லாம் மதம் என்ற இரண்டு ஆறுகளும் இந்தியாவில் பக்கத்தில் பக்கத்தில் நெடுகப் பாய்ந்தோடி ஒன்று கலந்தன என்பதை இவை தெளிவாய் எடுத்துக் காட்டுகின்றன.'[20]

தற்போதைய நமது சமூக வாழ்வு மென்மையும் எழிலும் நிறைந்த ஆடைக்கொப்பாகும். இவ்வாடையை இந்து முஸ்லீம்களாகிய இரு வகுப் பாரைச் சேர்ந்த ஆடவர் பெண்டிரனைவரும் அனேக நூற்றாண்டுகளாக நெய்தமைத்திருக்கிறார்கள்; வேண்டுமென்று கருதியோ அல்லது தன்னிச்சை யாகவோ அமைத்துவிட்டார்கள். இவ்வரிய சமூகத்தினுடைய ஊடுபாவு களை, விளங்காத்தனமான அரசியலின் கொடிய, விவேகமற்ற கைகள் பிய்த் தெறிவதா?

## III. மொழி

வட இந்தியாவில் தற்காலம் எல்லோரும் பேசி விளங்கிக் கொள்ளுகிற மொழி, எப்பெயரால் வழங்கினாலும் சரி, அது இந்து முஸ்லீம்களின் கூட்டு முயற்சியின் விளைவாக இல்லாவிட்டாலும் சரி, அக் கூட்டு முயற்சியால் பெரி தும் பாதிக்கப்பட்டிருக்கிறதென்பதில் ஐயமில்லை. சமஸ்கிருதம், பேச்சு வழக்கொழிந்த பிறகு அதன் வழித்தோன்றல்களாகிப் பேச்சு வழக்கில் விளங்கிய பிராகிருதம், பாலி முதலிய மொழிகளிலிருந்தும், இது தோன்றிய தாகும். முஸ்லீம் படையெடுப்பாளர், நாடு பிடித்தவர்களுடைய மொழிகள் அவர்கள் எந்த இனத்தைச் சேர்ந்தவர்களோ அதை யொட்டி வேறுபட் டிருந்தன. அம்மொழிகள், அராபியாலும் அதிகமாகப் பாரசீகத்தாலும் பாதிக்கப்பட்டிருந்தன. முஸ்லீம் ஆட்சிக் காலத்தில் பாரசீகம் அரசியல் மொழியாயிற்று. இந்துக்களால், அதுவும் குறிப்பாக அரசாங்கத்தாரோடு பெரிதும் தொடர்புடையவர்களால் அது பழக்கப்பட்டு வந்தது. ஆனால் அது பொது மக்களின் மொழி ஆக முடியவில்லை; ஆகவும் முடியாது. இந்திய முஸல்மான்களில் பெரும்பகுதியினர் பிறப்பில் இந்தியரானதால் பாரசீகம் முஸல்மான்களின் மொழியாகவில்லை. ஒரு பக்கம் இந்தியப் பொதுமக்களான இந்து முஸ்லீம்கள்; மறுபக்கம் அன்னியரான முஸ்லீம் மன்னர்கள். இவர்க ளிடையே பொதுவான மொழியொன்று வேண்டியதாயிற்று. ஆகவே இரு பாலாரும் இம்மொழியை நன்கு வளரச் செய்தனர். அமீர் குஸ்ரோ காலத் திலேயே இது அவரால் பாட்டுக்கள் பாடுவதற்குகந்த செம்மொழியாகி விட்டது. அவரது பாடல்கள் இன்றும் பிரசித்தமாக இருக்கின்றன. உருது, இந்தி இரண்டும் தனிமொழிகளாகக் கருதப்படுமாயின், இரண்டின் இலக்கி

20. Quoted by Dr. Sachchidananda Sinha in his *Some Eminent Bihar Contemporaries*, pp. 185-6.

யங்களுக்கும் இந்து முஸ்லீம் இரு வகுப்பாரும் பெரிதும் உதவியிருக்கின்றனர் என்பதை இவ்விரு மொழியபிமானிகளும் ஒப்புக்கொள்கின்றனர். இந்துக்கள் தங்களது சமய ஆர்வத்தை வடமொழி இலக்கியங்களிலிருந்து பெற்ருர்கள் ; முஸ்லீம்கள் அரபி, பாரசீக நூல்களிலிருந்து பெற்றனர். ஆகையால் பாஷையின் உடலமைப்பை அப்படியே விட்டுவிட்டு, சமஸ்கிருத, அரபி, பாரசீகச் சொற்களைக் கையாண்டிருப்பார்கள் என்பது எதிர்பார்க்கத் தகுந்ததே. இந்தி, உருது எனும் இரண்டு மொழிகளுக்கும் உடலமைப்பு ஒன்றேயாம் ; சொற்கள் சம்பந்தப்பட்டவரை சிறிது வேறுபாடு இருக்கிறது. ஆகவே வட இந்தியாவில் இந்து முஸ்லீம்கள் பேசியறிகின்ற மொழி, ஒன்று தான். படித்தவர்கள், அவர்களுடைய படிப்புக்கும் பயிற்சிக்கும் தகுந்தபடி அதில் சமஸ்கிருத, பாரசீக, அரபிச் சொற்களை உபயோகப்படுத்துவார்கள். இந்து முஸ்லீம்களுக்குப் பொதுச் சொத்தென்று நியாயமாகப் பாராட்டக் கூடிய, பாராட்டவேண்டிய இந்த மொழியில் தகராறு கிளம்பியிருப்பது துர்பாக்கியமானதே.

அமீர் குஸ்ரோ காலத்திலிருந்து இன்றுவரை இந்த மொழியின் வளர்ச்சிக்கு முஸல்மான்களுடைய அரிய சேவையை இந்தி ஆதரவாளர்கள் மறக்கவோ புறக்கணிக்கவோ முடியாது. பண்டித ராமநரேஷ் திரிபாடியவர்களால் தொகுக்கப்பட்ட கபிதா கௌமுதி என்ற பாடல் தொகுதிகளை ஒருவர் கண்ணுற்ருல் போதும். அவ்வக் காலங்களில் மகமதியக் கவிகள் இயற்றிய பாடல்களை அவர் தொகுத்திருக்கின்ருர். இந்தி எழுத்தாளர்கள் இந்தியென்று கூறும் அந்தப் பாஷையை மாத்திரம் அவர்கள் கையாளவில்லை. அவர்களுடைய பக்திரஸப் பாடல்களின் தன்மையும் இந்து மயமாக இருக்கின்றது. இந்துக்களுடைய பாடல்களின் அதி தேவதைகள் முக்கியமாகச் சீதாராமனும் ராதாகிருஷ்ணனுமாவர். கோரகபுரம் கீதா பதிப்பகம் வெளியிட்ட பக்திப்பாடற் புத்தகங்கள் ஐந்தில் ஒன்று, முஸ்லீம் பக்தர்கள் மட்டும் பாடிய பாடல்கள் கொண்டதாக அடங்கி இருக்கின்றது. எந்தப் பக்தனும் அவைகளால் பரவசமடையாமலிருக்க முடியாது. ரஹிமானுடைய **தோஹாக்கள்**, கிரிதருடைய **சவைய்யாக்களைப்**போல வட இந்தியா முழுவதும் ஒவ்வொரு வீட்டிலும் காணப்படும். அறிவும் அனுபவமும் செறிந்துள்ளனவாகையால் அவை போற்றப்படுகின்றன. கபீர் சிறந்த பக்தர், ஆத்மஞானி என்பதை ஏற்கெனவே தெரிவித்துள்ளோம் ; எட்டாக் கையிலிருந்த உபநிஷத்துகள், வேதாந்தங்களுடைய உயர்ந்த போதனைகளையும் தத்துவங்களையும் சாதாரண கிராமவாசிக்கும் விளங்கும் வண்ணம் கொண்டு வந்தார். பொதுஜனங்கள் எளிதில் உட்புக முடியாத மடங்கள், காடுகள், யோகிகளுடைய ஆசிரமங்கள் முதலியவைகளிலிருந்து ஏழைக் குடியானவனுடைய பட்டிக்காட்டுக்கும், குடிசைக்கும் அவைகளைக் கொண்டுவந்து சேர்த்தார். வட இந்தியாவில் துளசிதாசர் பக்தி சாதனத்தைப் பரப்பியதுபோல, வங்காளம் ஒரிஸாவில் மகாப்பிரபு சைதன்யர் பக்தி சாதனத்தைப் பரப்பியதுபோல, வட இந்தியாவில் கபீர் யோகசாதனத்தையும் வேதாந்த சாஸ்திரத்தையும் பரப்ப முயன்ருர்.

அதுபோல உருது இலக்கியத்திற்கு இந்துக்கள் செய்த சேவையை யார் மறுக்கமுடியும் ? இன்றும்கூட உருதுமொழியிலும் அதன் இலக்கியத்திலும் ஈடுபட்டு அதில் கண்ணுங் கருத்துமாயிருப்பவர்களிற் பெருவாரியான பேர்

இந்துக்களில்லை என்று யார் கூறமுடியும்? இந்து முஸ்லீம் தகராறுகளுக்கு மொழிப் பிரசினையைக் காரணமாக்குவது சரித்திர உண்மைகளுக்கு மாறு படுவதோடல்லாமல் தினசரி வாழ்வுச் சம்பவங்களையும் மறுப்பதாகும்.

தன்னுடைய வளர்ச்சிக்கும் வளத்துக்கும் இந்தி அல்லது உருது மாத்திரம் மகமதிய மன்னர்களுக்குக் கடமைப்பட்டிருக்கவில்லை. இதர மாகாண மொழிகளும் ஆதரவு பெற்றன. அவை முஸ்லீம் மன்னர்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளன. 'வடக்கில் இந்தி, மேற்கில் மராத்தி, கிழக்கில் வங்காளம் முதலியன சிறந்த இலக்கிய மொழிகளாயின. அவ்வா ருக்கிய பெருமையில் இந்து முஸ்லீம் இருபாலாருக்கும் பங்கு உண்டு. இதற் கெல்லாம் மேலாக, புதியதொரு மொழி யமையும்படி நேர்ந்தது. முஸ்லீம் தனது துருக்கி பாரசீக மொழிகளை விடுத்து இந்து மொழியை எடுத்துக் கொள்கிறுன். தனது சிற்பம், ஓவியக் கலைகளைச் சிறிது மாற்றிக் கொள்வது போலத் தனது மொழிகளைச் சிறிது மாற்றி உருது என்னும் புதிய மொழி யொன்றினை அமைக்கிறுன். மேலும் முஸல்மான்களும் இந்துக்களும் அதைத் தங்களதாகக் கொள்கிறுர்கள். இதன் பின்னர் அதிசயமான இயற்கை நிகழ்ந்தது. இலக்கியத்தில் ஒரு துறைக்கு இந்தியும் இன்னெரு துறைக்கு உருதுவும் உபயோகப்பட்டு வருகின்றன. இந்து அல்லது முஸ்லீமினுடைய மனத்தில் ஆக்கவெழுச்சி ஒரு துறையில் பாயும்போது அவன் இந்தியையும், மற்ளெரு துறையில் பாயும்போது அவன் உருதுவையும் உபயோகப்படுத்து கிறுன். இந்தி மொழியில் முஸ்லீம் செல்வாக்கு ஆழமாகப் பதிந்திருக்கிறது. அதனுடைய சொற்கள், இலக்கணம், உருவகம், யாப்பு, நடை எல்லா வற்றிலும் அதைக் காணலாம். இந்தி விஷயத்தில் எது உண்மையோ, அது மராத்தி, வங்கம், இன்னும் அதிகமாகப் பஞ்சாபி, சிந்தி விஷயத்திலும் உண்மையாகும்.'[21]

'வங்க மன்னர்களின் முயற்சிகள் மகமதியக் கல்வியை உயர்த்துவ தோடு மட்டும் நின்றுவிடவில்லை. கல்வி வளர்ச்சியின் ஒரு புதிய துறையில் அவர்கள் பேராதரவு செலுத்தினுர்கள். வங்காளிகளுக்கு இது பெரிதும் உகந்தது. வங்கமொழி இலக்கிய அந்தஸ்து உயர்வடையக் காரணமாயிருந்த வர்கள் மகம்மதியர்களன்றித் தாங்கள் அல்ல என்னும் உண்மை அவர்களுக்கு விபரீதமாகத் தோன்றலாம்............வங்காளத்தின் மகமதிய அரசர்களின் கவனத்தை முதன் முதலில் இழுத்தவை இராமாயண, பாரத இதிகாசங்கள். இவைகளை வங்கத்தில் மொழிபெயர்க்கச் செய்தார்கள். வங்காள அரசர் நாஜிர்ஷா (கி. பி. 1282-1385) மகாபாரதத்தை முதன் முதலில் வங்கத்தில் கொணரச் செய்தார். அவர் வங்கத்தின் பேராதரவாளர். சிறந்த கவிஞனை வித்யாபதியும் அவரைத் தனது பாட்டு ஒன்றினுல் அழியாப்புகழெய்துமாறு செய்திருக்கிறுர். கீர்த்தி பாஸரால் இராமாயணத்தை வங்கத்தில் மொழி பெயர்க்கச் செய்தது வங்காள முஸ்லீம் மன்னனு அல்லது இந்து ராஜா கான்ஸ் நாராயணரா என்பது சந்தேகமாக இருக்கின்றது. ஒருகால் நாராயணர் என்பது உண்மையாக இருப்பினும் அவரும் முஸ்லீம் மன்னர்க ளேற்படுத்திய முன் மாதிரியைப் பின்பற்றினுரென்பதில் ஐயமில்லை............ ஹுசேன் ஷா சக்கரவர்த்தி வங்கத்தின் பேராதரவாளர். பாகவத புராணத்தை வங்கத்தில் மொழிபெயர்க்கும்படி ஹஸ்தார்பாசு அவரால் அமர்த்தப்பட்டார்...........ஹுசேன் ஷாவின் தளபதி பராகல்கானும்,

21. Tarachand, op. cit., pp. 139-40.

அவனுடைய மகன் சுட்டிகானும் மகாபாரதத்தினுடைய மொழிபெயர்ப்பின் ஒரு பகுதியோடு தங்களுடைய பெயரை இணைத்துக்கொண்டதால் அழியாப் புகழெய்தியுள்ளார்கள்.'[22]

மொழிப் பிரசினையை மற்றெரு கண்ணேட்டத்திலும் கவனிக்க வேண்டியிருக்கின்றது. இரு சமுதாயக் கொள்கை சம்பந்தப்பட்டவரை மொழிப் பிரசினை பிரிவினைக்காரர்களுக்கு எள்ளளவும் பயன்படுவதில்லை. இடத்துக்கு இடம், இனத்துக்கு இனம் மொழி வேறுபடுகிறது. இவ்விதமாக வங்காளத்தின் இந்து முஸ்லீம் இருசாராருக்கும் வங்காளி பொதுமொழியாக இருக்கிறது; குஜராத்தில் குஜராத்தியும், பஞ்சாப்பில் பஞ்சாபியும் அப்படியே. வட இந்தியாவில் பஞ்சாப்பின் எல்லையிலிருந்து வங்காளத்தின் எல்லைவரையும், தெற்கே மத்திய தென்னுடுகளில் மராத்தி தெலுங்கு மாகாணங்கள் வரையிலும் இடையிட்ட நாட்டில் இந்தி, உருது அல்லது இந்துஸ்தானி அல்லது வேறு எந்தப் பெயர் கொண்டாவது அழைக்கப் படுகிற மொழி பொதுவாக இருக்கிறது. இவைகள் தென் மொழிகளான தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளத்தோடு வேறுபட்டிருக்கின்றன. பொது மக்களால் பேசப்படும் இவை, ஆங்காங்குச் சிறிது வேறுபாடுடையன வாக இருக்கின்றன. மொழிவாரியாகவும் மதவாரியாகவும் பிரிவினை செய் வதற்கு ஒத்து வருவதற்கேற்றபடி இந்தியாவின் எந்தப் பாகத்திலும் மக்கட் பிரிவு கிடையாது. மொழிப்பிரிவு பிரதேசவாரியாக இருக்கிறதேயொழிய இனவாரியாகவோ மதவாரியாகவோ இல்லை. வடகிழக்குப் பகுதியில் முஸல் மான்களுக்கும் முஸல்மான்களல்லாதாருக்கும் (அவர்களில் பெரும்பாலார் முஸல்மான்களே) பொதுமொழி வங்காளியாய் இருக்குமானுல், பஞ்சாப்பி லுள்ள இந்துக்களுக்கும் சீக்கியருக்கும் பஞ்சாபி பொதுமொழியாக இருக்கு மானுல், வடமேற்குப் பகுதியில் சேர்க்கப்படவேண்டுமென்று சொல்லப் படுகிற நாலைந்து பிரிவுகளிலுள்ள மக்களுக்குப் பொதுவான மொழியொன்றும் கிடையாது. இந்திக்கும் வங்காளிக்கும் எவ்வளவு வேறுபாடோ அவ்வளவு வேறுபாடு ஒருபுறம் பஞ்சாபிக்கும், மறுபுறம் புஷ்டு, சிந்தி, பலுச்சி மொழி களுக்கும் உண்டு. அதுபோலப் பஞ்சாபியானது இந்தி, சிந்தி, காஷ்மீரி மொழிகளினின்று வேறுபட்டது. சமுதாயக் கட்டுப் பிரசினையை மொழி யடிப்படையில் வைத்துத் தீர்ப்பதுண்டானுல் வங்காள முஸ்லீம்களோ அல்லது இந்துக்களோ ஒன்றுசேர்ந்து போகவேண்டும். ஏனெனில் அவர் களுக்குப் பொதுமொழியொன்ருக இருக்கிறது. அதே போலப் பஞ்சாபியர், சிந்தியர், பட்டாணியர், பலுச்சியர் ஒரு சமுதாயத்தைச் சேர்ந்தவர்களாகார். அவர்களது மொழிக்கும் வங்காளிக்கும் எவ்வளவு வேறுபாடுண்டோ அவ் வளவு வேறுபாடு அவரவர் மொழிகளுக்குள்ளும் இருக்கின்றன.

இந்து முஸ்லீம்களுடைய சமயச் சார்பான இலக்கியங்கள் முறையே சமஸ்கிருதம், அரபி ஆகிய ஊற்றுக் கண்களிலிருந்து ஊட்டம் பெறுகின்றன. தமிழ் அல்லது இந்தி பேசும் இந்துவைப்போன்று வங்காளி பேசும் இந்துவும் சமஸ்கிருதத்திலிருந்து உணர்ச்சி பெறுகிருன். தெற்கு அல்லது கிழக்கிலுள்ள முஸல்மானைப்போல பஞ்சாபியைப் பேசும் முஸல்மானும் அதே அரபி ஊற்றுக் கண்ணிடமே செல்கிருன். இவ்விதமாக முஸ்லீம்களும் இந்துக் களும் தங்கள் தங்களுடைய மத உணர்ச்சிக்கும் இலட்சியங்களுக்கும் வெவ்

22. N. N. Law: *Promotion of learning in India during Mohammedan Rule*, pp. 107-110.

வேறு துறைகளை நாடிச் செல்லவேண்டி யிருப்பினும், அத்துறைகள் இத் தேசத்தின் எந்தப் பாகத்திலும் வழங்கப்படுகிற அல்லது பொதுவாக இருக்கிற மொழிகளாக இருக்கவில்லை. இந்து முஸ்லீம்கள் தங்களிடையே பேசி வழங்குவதற்குப் பொதுமொழிகள் பெற்றிருக்கின்றனர். அம்மொழிகள் மாகாணத்துக்கு மாகாணம் வேறுபட்டிருக்கின்றன. இருப்பினும் நாட்டின் சில பாகங்களிலுள்ள பொதுமொழிகள் சிறந்த விரிவான இலக்கியங்களைப் பெற்றிருக்கின்றன. அவைகளுக்கும் மதத்திற்கும் சம்பந்தம் கிடையாது.

இந்தியும் உருதுவும் வெவ்வேறு மொழிகளாமாயின், ஒன்று இந்துக் களையும் மற்றொன்று முஸ்லீம்களையும் சேர்ந்ததாமாயின், இந்தியாவை இந்துப் பிராந்தியம் முஸ்லீம் பிராந்தியம் எனப் பிரிவினை செய்த பிறகு, அவ்வப் பிராந்தியங்களிலுள்ள சிறுபான்மையோருக்கு அவர்களுடைய மொழியுள்படச் சகல பாதுகாப்புரிமைகள் வழங்கப்பட்ட பிறகு-உருதுமொழி விரிவான உணர்ச்சி வேகமுள்ள எதிர் காலத்தைப் பெற்றதாக இருக்க முடியுமா? அது எந்த முஸ்லீம் பகுதியிலும் பொதுமொழியாக இருக்க முடியாது. வடமேற்கு, வடகிழக்குப் பிராந்தியங்களில் அதை வம்படியாகப் புகுத்த வேண்டியிருக்கும்; அல்லது வெளிநாட்டுச் சரக்கைப்போல ஆதரவோடு கண்காணித்து வளர்க்கவேண்டியிருக்கும். அல்லது மத்தியப் பிராந்தியத்தில் முஸ்லீம் அல்லாதார் பெருவாரியாக வாழும் பிரதேசத்தில் அது சிறுபான்மையரின் மொழியாகக் காப்பாற்றப்பட வேண்டியிருக்கும்.

அவை இரண்டும் வெவ்வேறு மொழிகளாக இருப்பின் அவைகள் தமக்குரிய சுயேச்சையான வழிகளில் வளரட்டும். சுத்தமான சமஸ்கிருதம், அரபி அல்லது பாரசீகச் சொற்களைப் பெரிதும் சுமந்து நிற்காத பொது மொழி யொன்று தேசம் முழுவதற்கும் தேசிய மொழியாக உண்டாவதற்கு அவைகள் குறுக்கிடாமல் இருக்குமாக.

## IV. கலை

கலைகளில் மிகவும் முக்கியமானவை கட்டிடம், சிற்பம், ஓவியம், இசை, நாட்டியம் என்பன. இக்கலைகளொவ்வொன்றும் சமஸ்கிருதத்தைப் போல வும், மற்றுஞ் சில மாகாண இலக்கியங்களைப் போலவும் முஸல்மான்கள் இந்தியாவுக்கு வருமுன்பே சிறப்பாகத் தேர்ச்சி பெற்றவை. ஆகையால் இவை முஸ்லீம்களுடைய இத்தகைய கலைகளால் உட்கொள்ளப்படும் என எதிர்பார்க்க முடியாது. அப்படி நடைபெறவும் இல்லை. முஸ்லீம் கலைகளில் எந்த அம்சங்கள் எடுத்தாளத் தகுதி வாய்ந்தனவாக, எடுத்தாளக் கூடியன வாக இருந்தனவோ அவைகளை இந்துக் கலைகள் எடுத்துக்கொண்டன. வட இந்திய மொழியைப் போன்று ஒரு புதிய கலையமைப்பை ஆக்கின. உண்மை யாகவே சில அம்சங்களில் இஸ்லாமியக் கலாசாரத்தையும் மாற்றி யமைத்தன.

### கட்டிடக் கலை

இந்திய சரித்திரத்தில் இந்து ஆட்சிக்காலம் அல்லது பௌத்த ஆட்சிக் காலத்திய கட்டிடங்களினின்றும் முஸ்லீம் ஆட்சிக் காலத்திய கட்டிடங்கள் பெரிதும் வேறுபடுகின்றன. ஆனல் இக் கட்டிடங்கள் முழுதும் அன்னிய நாட்டு முறையென்றும், அன்னியச் சூழ்நிலையில் நிறுவப்பட்டன என்றும்

கூறிவிட முடியாது. தாஜ்மஹல் கட்டும்போது இந்துக் கட்டிடச் சிற்பி களும், தொழிலாளிகளும் அதில் சேர்ந்திருக்க முடியாது என்பது நினைக்கக் கூட முடியாத விஷயமாக இருக்கிறது. மகமதியர் காலத்தில் இந்துக் கோயில் களைக் கட்டுவதில் மகமதியத் தொழிலாளிகள் ஈடுபட்டிருக்க மாட்டார்கள் என்பது நினைக்க முடியாத விஷயம். வட இந்தியாவில் இன்று இந்துக் களுடைய வீடுகளைக் கட்டுவதற்கு மாத்திரமன்றி, கோயில்களைக் கட்டு வதற்கும் மகமதியக் கொற்றர்களும், வேலைக்காரர்களும் அமர்த்தப்படு கிருர்கள். முஸ்லீம் காலத்தில் கட்டப்பட்டுப் புகழ் வாய்ந்த கட்டிடங்களிற் சிலவற்றுள் இந்து-மகமதியக் கலைகளின் கூறுபாடுகள் ஒருங்கு சேர்ந்திருப் பதை நிபுணர்களும், கட்டிட வல்லுநரும் எடுத்துக் காட்டுகின்றனர்.

'தெய்வ வழிபாட்டிற்கும், வாழ்க்கை வசதிகளுக்கும், ராணுவக்காரியங் களுக்கும் கட்டப்பட்ட கட்டிடங்கள், சிரியா, எகிப்து, பாரசீகம் அல்லது மத்திய ஆசியா முதலிய நாடுகளின் சுத்தமான முஸ்லீம் கலையைக் கொண்ட தாக இருக்கவில்லை, அல்லது இந்துக் கட்டிடங்கள், கோயில்கள், அரண் மனைகள், ஞாபகார்த்தக் கட்டிடங்கள் முதலியன சுத்தமான இந்துக் கலையைக் கொண்டதாக இல்லை. முஸ்லீம் கட்டிடக் கலையின் அழகற்ற தன்மையும் அதன் கடுமையும் குறைக்கப்பட்டது. இந்துக் கலையின் அளவுக்கு மிஞ்சிய பதுமைச் சிங்காரமும் குறைக்கப்பட்டது. வேலைப்பாடு, அலங்காரச் செழிப்பு, பொது அமைப்பு முதலியன இந்து மயமாக இருந்தன. கமான் வளைவுகள், சுத்தமான டூம் கோபுரங்கள், வழுவழுப்பான சுவர்கள், விசாலமான உள் ளிடங்கள் எல்லாம் முஸ்லீம் கலையிலிருந்து புதிதாகப் புகுத்தப்பட்டவை. பதின்மூன்ருவது நூற்ருண்டிலிருந்து கட்டப்பட்ட கட்டிடங்கள்—இந்துக்கள் அல்லது முஸ்லீம்களால் கட்டப்பட்டவை—கலையளவில் ஒன்று போலவே இருந்தன ; நோக்கத்திற்கும் உபயோகத்திற்கும் தகுந்த மாதிரி வேறுபாடுகள் பெற்றிருந்தன. அவ்வப் பிரதேசங்களுக்குரிய மாதிரியையும் பரம்பரைப் பழக்கத்தை யொட்டியும் கட்டிடத்தின் போக்குகள் மாறுபட்டிருக்கலாம்.

'"இந்திய மகமதியக் கட்டிட அமைப்பு முறைகளைப் படித்தறிய வசதி யாக பெர்கூசன் பிரித்திருக்கிருர். இக்கட்டிட முறைகள் டில்லி, ஆஜ்மீர், ஆக்ரா, கௌர், மாளவம், குஜராத், ஜான்பூர், பீஜப்பூர் முதலிய நகரங்களில் இருக்கின்றன. அவ்விடத்திய அரசர்கள், அரபியர், பட்டாணியர், துருக் கியர், பாரசீகர், மங்கோலியர் அல்லது இந்தியர் யாராகவும் இருந்திருக்கலாம். அங்குள்ள மசூதிகளின் டூம் கோபுரங்கள், சமாதிக் கட்டிடங்கள், அரண் மனைகள் முதலியவற்றின் உருவமும் அமைப்பும், அவைகளுக்குச் சிகரமாக அமைந்திருக்கும். இந்துச் சின்னங்களும், இந்துக் கோயில்களைப் போலக் கட்டப்பட்ட மிஹ்ராபுகளும், உருவத்திலும் அமைப்பிலும் இந்து மயமாக்கப் பட்ட ஆர்ச்சு வளைவுகளும், அலங்கார அமைப்புக்களுக்கும் கட்டிட அமைப் புக்களுக்கும் அடிப்படையாக இருக்கின்ற அர்த்தம் எல்லாம் ஒரு விஷயத்தை நமக்குத் தெளிவாக்குகின்றன. அதாவது இந்தியக் கட்டிடக்காரர்களுக்கு மெக்காவின் தீர்க்கதரிசி இந்து மதத்தைப் பூர்த்தி செய்ய வந்தவர்களில் ஒருவ ராவர். இவர்கள் இந்துக்களாக இருந்துகொண்டே நல்ல மகமதியர்களாகவும் இருக்க முடியும்.''[23] இந்தியக் கலையைப் பற்றிய நூலில் ஹாவெல் தம் முடைய இந்தக் கோட்பாட்டை மிக விளக்கமாக நிறுவியிருக்கிருர். அதற்கு மேலும் விரிப்பது இயலாது.'[24] 'இந்த அமைப்பு முறையின் செல்வாக்கு

23. Havell : *Indian Architecture*, p. 101.

பதினெட்டாவது நூற்றூண்டில் இந்தியாவின் எல்லாப் பாகங்களிலும் பரவியது. நெடுந்தூரத்திலுள்ள நேபாளமும் இந்தத் தொத்து நோயிலிருந்து விடுபடவில்லை.'[25] 'பத்தொன்பதாம் நூற்றூண்டின் அரண்மனைகள், நினைவுக் கட்டிடங்கள், கோயில்கள் யாவும் மேற்கில் ஜாம் நகரிலோ, கிழக்கில் கல்கத்தாவிலோ அல்லது பஞ்சாபில் சீக்கியராலோ அல்லது மத்திய இந்தியாவில் ஜைனர்களாலோ எங்குக் கட்டப்பட்டிருப்பினும் யாவும் இந்து-முஸ்லீம் கட்டிட அமைப்பு முறையிலேயே இருந்தன.'[26] 'இந்தியாவில் ஞாபகார்த்தக் கட்டிடக் கலைகளில் மாத்திரம் இந்து முஸ்லீம் அமைப்பு மேலோங்கி நிற்கவில்லை. வாழ்க்கை வசதிகளுக்கு உபயோகப்படும் எல்லாக் கட்டிடங்களிலும் அதாவது வீடுகள், தெருக்கள், படகுத்துறைகள், நீராடு துறைகள் எல்லாவற்றிலும் அவ்வமைப்பு நிலைநிற்க ஆரம்பித்தது.'[27] மனையமைப்புக்கள் பொதுவாகத் தட்பவெப்பம் காரணமாக மாகாணத்துக்கு மாகாணம் வேறுபடுவதுண்டு. ஆனால் ஓர் இந்து வசிக்கும் வீட்டிற்கும் முஸ்லீம் வசிக்கும் வீட்டிற்கும் திட்டத்திலும் கட்டிடத்திலும் வேறுபாடே கிடையாது.

### சிலைச் சிற்பம்

இந்துக் கோயில்களில் உருவங்களும் சிலைகளும் முக்கியமாக இருப்பதால் இந்தியாவில் சிற்பக்கலை பெரிதும் வளர்ச்சியடைந்தது. உருவங்களையும் சிலைகளையும் வணங்குவது இஸ்லாமில் கண்டிக்கப்படுகிறது. ஆகையால் இஸ்லாமிய நாடுகளில் அவைகள் விருத்தியாக்கப்படவில்லை. இஸ்லாமும் இந்தியச் சிற்பக்கலையை எவ்விதத்திலும் பாதிக்கவில்லை. 'பாரசீக மன்னர்களைப் பின்பற்றி இந்திய முஸ்லீம் அரசர்கள், முக்கியமாக மொகலாயச் சக்கரவர்த்திகள் தங்களுடைய கட்டிடங்கள், அரண்மனைகள், இன்பவிலாசங்கள் முதலியவைகளை அழகுபடுத்த ஓவியர்கள் துணையை நாடியதுபோலச் சிற்பிகளுடைய துணையை நாடினூர்கள்.'[28]

### ஓவியம்

மனித உருவங்களை வரைதலும், இசையும் முக்கியமாகக் கருவியிசையும், நாட்டியமும் இஸ்லாமால் வெறுக்கப்படாவிட்டாலும் வெகுவாக ஆதரிக்கப்படவில்லை. இஸ்லாம் இசைக்கலைகளை ஆதரிக்கவில்லை; ஏறிட்டுக்கூடப் பார்ப்பதில்லை. அப்படியிருப்பினும், ஓவியத்திலும் இசையிலும் இந்து முஸ்லீம்கள் வாழ்க்கை ஒன்றையொன்று தழுவி வளர்ந்தன. 'ஆதியில் ஆண்ட முஸ்லீம் அரசர்களால், மற்றக்கலைகளைப்போன்று ஓவியக்கலை கவனிக்கப்படவுமில்லை; ஆதரிக்கப்படவுமில்லை. ஓவியம் சிலைகளோடு தொடர்புள்ளதால் ஆதிகாலத்தில் இஸ்லாம் ஓவியத்தைத் தீச்செயலெனத் தள்ளி வைத்திருந்த காரணத்தால் ஓவியம் வளரவில்லை. இந்தப் பொது வழக்கத்தை மீறி ஏக தேசம் முஸ்லீம் அரசர்களும் பிரபுக்களும் இக்கலையைப் பயின்றூர்கள். ஓவியக்கலையில் நன்கு பழகிய ஏராளமான இந்துக்கள் இஸ்லாமைத் தழுவியதும் தங்களுடைய பழைய பழக்க வழக்கங்களை விட்டுவிட்டிருக்க மாட்டார்கள். ஆகையால் அப்போதைய முஸ்லீம்களால் ஓவியம் புறக்கணிக்கப்பட்டது என்று பெரும்பாலும் சொல்லுகிறபடி, இருந்திருக்காது என்று நாம் கொள்ளலாம். புதிய முஸ்லீம்களில் பெரும்பான்மையோரும்

24. Tarachand, op. cit., pp.243-4. 25. *ibid.*, p. 255.
26. *ibid.*, p. 256. 27. *ibid.*, p. 257.
28. S. M. Jaffar: *Cultural Aspects of Muslim Rule in India*, p. 110.

அவர்களுடைய சந்ததியாரும் தங்களுடைய பழைய கலைகளுக்கு மீண்டும் திரும்பியிருக்கலாம். பாரசீகக் கருத்துக்களையும் எழுச்சியையும் கொண்டு இங்கு வந்த முஸ்லீம்களும் இதைப் பயின்ருர்கள். அக்காலத்திய இந்துக்களைப் போல அவ்வளவு ஆர்வமாகவும் அதே நோக்கத்துடனும் இக்கலைகளைப் பயிலா விட்டாலும், ஓரளவு இக்கலையைப் பயின்று வந்தார்கள். இவ்விதமாக அரசர் கள் இவைகளை உண்மையாக வெறுக்காவிட்டாலும், கருதவுமில்லையென்பதும், ஆனுல் பொதுமக்கள் அதை மிகுதியும் பயின்ருர்கள் என்பதும் விளங்குகிறது.

'மொகலாயர்களின் நிலையோ வேறு. கலைகளைப்பற்றி அவர்கள் வேறு கருத்துக்களைக்கொண்டிருந்தார்கள். அவர்கள் அவைகளில் பற்றுள்ளவர்கள்; எல்லாக் கலைகளையும் எல்லா அம்சங்களிலும் ஆதரித்தார்கள். பாபரின் மூதாதையர்—தைமூர் மரபினர்—ஓவியக் கலையில் சிறந்தவர்களெனவும் பற்றுள்ளவர்களெனவும் பெயர் பெற்றவர்கள். அவர்களது நூல் நிலையத்தி லிருந்து ஆய்ந்தெடுத்த ஓவியங்களைப் பாபர் கொண்டுவர முடிந்தது. இவ் வோவியங்களை அரிய பொக்கிஷமெனப் பெருமையோடு இந்திய மொகலாயப் பேரரசர்கள் போற்றி வந்தார்கள்.'[29]

'முஸ்லீம்களுக்கு முந்திய கால ஓவியங்கள்—இந்து, ஜைன, புத்த ஓவியங்கள்—தனி அம்சங்கள் உடையனவாயிருந்தன. அவைகளில் விளங்கும் மெய்ப்பொலிவு இந்து, ஜைன, புத்த மதத்தினருக்குச் சொந்தம். அவைகளி னமைப்பில் பொதிந்துள்ள பொருளும் அவர்களுடையதே. பல இனத்தாரின் அனுபவங்களினின்றும் திரட்டப்பட்ட நாகரிகத்தின் அழகுணர்ச்சியை அவை வெளிப்படுத்துகின்றன. மாறுபடும் இருமைகளான—உவகை வருத்தம், இன்ப துன்பம், வெற்றி தோல்வி, இம்மை மறுமை, பற்று துறவு, ஐம்பொறிக் கடிமை ஐம்பொறியாட்சி, ஆசை அமைதி, இயக்கம் அசைவின்மை, காமம் சாந்தம் இவைகளினுல் அவதியுருது நடுநிலை வகித்துவரும் அனுபவ முதிர்ச்சி யின் பயனை அவை வெளிக்காட்டுகின்றன.........ஆதி காலத்திய இந்திய ஓவியங்களில் எஞ்சியிருப்பன அஜந்தாச் சித்திரங்களே.........கிறிஸ்து சகாப் தத்திற்கு முந்திய இலக்கியங்களில், அதாவது வினயபிதாகாவிலும் பின் காலத்திய இராமாயணம், சாகுந்தலம் முதலியவற்றிலும் ஓவியங்களைப் பற்றிய குறிப்புக்களிருக்கின்றன. பழங்காலத்திய ஓவியங்களின் உண்மை யான துண்டு துணுக்குகள் அநேக குகைகளில் இருக்கின்றன. ஆனுல், இந்தியா முழுதும் ஒரு காலத்தில் பரவியிருந்த கலையின் சிறப்பை விளக்கு கின்ற ஓவியங்களின் எஞ்சிய பகுதிகளில் வனப்பு, வளம் நிறைந்தவை, அஜந்தாவில் காணப்படுகின்றன. கல்லைக் குடைந்து செதுக்கப்பட்ட கோயில் களின் சுவர்களையும், கூரையுட்புறங்களையும் அழகுபடுத்துகின்றன அவ் வோவியங்கள்...........கிறிஸ்து சகாப்தத்தின் முதலாறு நூற்ருண்டுகளில் அவை செதுக்கப்பட்டவை. ஆர்வத்தீயையும் பக்தித்தாகத்தையும் தணிக்க வல்ல உயிர் ஓவியங்களைப் படைப்பதற்கு நிலமன்னர் நிதியும், வணிக மன்னர் பணமும் அள்ளிச் சொரியப்பட்டன.'[30]

'பாபர் இந்தியாவைக் கைப்பற்றியபோது பிஹ்ஸாது உன்னத நிலையி லிருந்தான். அவனுடைய ஓவிய நடையே அழகுக்கு எடுத்துக்காட்டாக நிலவியது. அருங்கலை விநோதனுன பாபரும் அவனது தோழர்களும், பின்

29. S. M. Jaffar, op. cit., pp. 125-6.
30. Tarachand, op. cit., pp. 258-9.

காலத்தில், பாரசீகத்தில் ஒளிந்திருந்து இந்தியாவுக்கு ஓடிவந்த ஹுமாயூனும் சாகதாய்ப் பிரபுக்களும் பிஹ்ஸாதைச் சிறந்தவனெனக் கொண்டாடினர்கள். இந்திய ஓவியர்களால் பின்பற்றத் தகுந்த ஓவியன் என அவனை மதித்தார்கள். பிஹ்சாதும் அவனுடைய முறையும் இந்திய ஓவியர்களுக்கு முன்மாதிரி யாயின. தைமூரிய ஓவிய முறை அஜாந்தா முறையோடு கலக்கப்பட்டது. இந்தக் கலையின் சிறப்பான அம்சம் என்னவெனில் இது மிகுதியும் தனி நபரைப்பற்றி யிருக்கும். பொதுமக்களைப்பற்றியும், கூட்டத்தைப்பற்றியும் இக்கலையில் அக்கறை காட்டப்படவில்லை. மனோ சிருஷ்டியில் அதற்கு விருப்பமே யிருந்ததில்லை. பொருள்களை வெட்ட வெளிச்சத்தில் அது காண்கிறது; தெளிவான வெளிக் கோடுடையதாக இருக்கிறது. தனி உருவத்தின் ஒவ்வோர் அம்சத்தையும் நன்கு கவனிக்கிறது. உயிர்த் துடிப்பை மிகுந்த உன்னிப்போடு உணர்கிறது. அதன் வரைவுகளில் மிகுதியான ஆற்றலைக் காட்டுகிறது.'[31] 'அஜாந்தாச் சித்திரங்களிற்போல இங்கும் கோடுகளே கருத்தைத் தெரிவிப்பன. எனினும் இவ்விருவகைக் கோடுகளுள்ளும் எவ்வளவு வேறுபாடு!..................இச்சித்திரங்களை உருவாக்கும் ஆதார அம்சங்கள், அஜாந்தச் சித்கிரங்களின் ஆதார அம்சங்களோடு மிகவும் மாறுபட்டவை.'[32] 'மொகலாயப் பேரரசர்களுடைய ஆதரவில் இவ்விருவகைக் கலையுணர்வுகளும் கூடி இப்புதிய முறையை உண்டாக்கின. அஜாந்தாச் சித்திரத்தில் மேலோங்கிக் காணும் வளைவுத் தன்மையுடன் சமர்க்கண்டு, ஹீரட்டிலிருந்து கொணர்ந்த புதிய ஓவிய விதிகளான அங்கப் பொருத்தம், விகிதம், இடைவெளி முதலியன சேர்க்கப்பட்டன; பழைய படாடோபத்தோடு புதிய ஒளிகள் சேர்க்கப்பட்டன; அனுயாசமான எளிய வாழ்வோடு கடுமையான அரண்மனைச் சட்டதிட்டங்கள், சம்பிரதாயங்கள் சேர்க்கப்பட்டன. இதன் விளைவாய் இந்து முஸ்லீம்களுடைய சக்தியும் ஆற்றலும் ஓரளவு தியாகம் செய்யப்பட்டன. கர்வமும் கண்ணியமும் சம்பாதிக்கப்பட்டன. அத்துடன் அதிசயமான வர்ணச் செழிப்பும் நுட்பமான கோடும் பெறப்பட்டன. புதிய முறையின் வளர்ச்சி வெகு விரைவில் கிடைத்தது. ஒருக்கால் பாபர் ஆக்ராவிலுள்ள இந்தியக் கலைஞர்களாகிய இந்து முஸ்லீம்களுக்கு ஆக்ராவில் தைமூரது ஓவிய மாதிரிகளை அறிமுகப்படுத்தினர் போலும்.............. இந்த ஆதிகால முறையில்கூட, கிளார்க் என்பவரால் ஹுமாயூன் முறையெனக் கூறப்படுவதில், இந்திய உணர்ச்சி தவருது தென்படுவது மகிழ்ச்சி தரும் விஷயமே.......பின் வந்த அக்பர் காலத்திய கலைஞர்கள், அபுல்பாஸலால் குறிப்பிடப்பட்டுள்ள நான்கு முகமதியக் கலைஞர்கள்—புருக் க்வால்மக், ஷீராஸைச் சேர்ந்த சாமாத், தாப்பிஸைச் சேர்ந்த மீர்சையது அலி, மிஸ்கின் ஆகியோர் இம்முறையில் பயின்றவர்களாக இருக்கக்கூடும். இவர்களிடம் பயிற்சி பெற வந்த இந்துக்கள் பரம்பரையாக வந்த ஓவியக் கலையில் திறமை வாய்ந்தவர்களாகவும், பேரரசனுடைய சபைக்கு அழைக்கப்படத் தக்க புகழ் பெற்றவர்களாகவும் இருந்திருக்கவேண்டும். இவர்கள் தங்களுடைய திறமைகளை இந்தப் புதிய எஜமானர்களுடைய சேவையில் மாற்றினர்கள். இம்மன்னர்களுக்குத் திருப்தியளிக்கக்கூடிய படங்களை வரையலாயினர். அக்பரது காலமாகிய அந்நாளிலேயே இந்த ஓவியத்தில் இந்து முஸ்லீம் முறை நல்ல அபிவிருத்தியுடன் தோன்றியதற் கிதுவே காரணம். அயின்-இ-அக்பரியில்,

31. Tarachand, op. cit., pp. 265-6. 32. *ibid*., p. 268.

தஸ்வஸ்த், பாஸவன், கெசோலால், முகுந்தன், மாதவன், ஜகந்நாதன், மஹேசன், கேம்கரான், தாரா, சேனுவாலா, ஹரிபான்ஸ், ராம் போன்றவர்களுடைய பெயர்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. அக்காலத்திய ஓவியங்களிற் பலவற்றுள் இன்னும் அனேக இந்துப் பெயர்கள் காணப்படுகின்றன...........பாங்கிபுரத்தில் குதாபக்ஷ் நூல் நிலையத்தில் போற்றி வைக்கப்பட்டிருக்கிற கையெழுத்துப் படங்களில் துளசி, சூர்ஜன், சூரதாஸர், ஈஸர், சங்கர், ராம்ஆஸர், பான்வாலி, நந்தா, நான்கா, ஜகஜீவன், தர்மதாஸர், நாராயணன், சாதார்மன், சூரஜ், தியோஜீவன், சாரான், கங்கா சிங், பரஸ், தன்னு, பீமன் முதலிய பல பெயர்கள் காணப்படுகின்றன. சில படங்களில் இவ்வோவியர்களுடைய சொந்த நாடுகளும் குறிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் குவாலியர், குஜராத், காஷ்மீரம் மாத்திரம் காணப்படுவது விநோதமான விஷயமாகும். ஆகவே இவைகள் தான் மத்திய காலங்களின் முற்பகுதியில் இந்துக் கலைகளுக்கு மிகவும் பிரசித்தமான இடங்களாக இருந்திருக்கவேண்டும். அக்பருடைய ஓவியர்கள் இவ்விடங்களிலிருந்து வந்தார்களென்ற விஷயம், அஜந்தாவிற்குப் பிறகும் இந்துக்கலை செழித்ததென்று கூறப்படுவதை உறுதிப்படுத்துகிறது. மொகலாய காலத்திய கலையானது மத்திய ஆசியா அல்லது பாரசீகக் கலையின் முழு வாரிசாகச் தோன்றியதல்ல; ஆனுல் புது மனத் துடிப்புகளால் தோன்றியதும், அபிவிருத்தி செய்யப்பட்டதுமான பழைய கலையே.'[33]

'ஒரு புறம் அஜந்தாச் சுவர் சித்திரங்களோடும், மறுபுறம் சமர்க்கண்டு, ஹீரட்டிலிருந்து சிறியதாக வரையப்பட்டு உண்மையான அளவிலுள்ள சித்திரங்களோடும் இந்த இந்து முஸ்லீம் முறை தொடர்புடையதாக இருந்தாலும், இவைகளிலும் அனேக வகை வழித்தோன்றல்களிருந்தனவெனக் கூறலாம். இந்து முஸ்லீம் முறைச் சித்திரங்களில் ஒரு சில, அஜந்தாக் கலையையும், மற்றுஞ் சில, சமர்க்கண்டு, ஹீரட் கலையையும் ஒட்டியிருந்தன. ஜெயப்பூர், கந்தா, இன்னும் இமயமலைக் குன்றுகளிலுள்ள ராஜ்யங்களில் காணும் ரஜபுத்திர, பஹாதி முறைகள் புராதன இந்து முறையைப் பெரிதும் ஒட்டியிருந்தன. தக்காணம், லக்ஷ்மணபுரி, காஷ்மீரம், பாட்னு முதலிய இடங்களைச் சேர்ந்த குவாலாம்கள் முஸ்லீம் முறையைப் பெரிதும் ஒட்டியிருந்தன. சீக்கிய குவாலாம் இருவகைக்கும் இடைப்பட்டதாக இருந்தது. இவையெல்லாம் டில்லி அல்லது ஆக்ரா அரசவை முறையின் அடியாகப் பிறந்த வழி முறைகளே.'[34]

பாட்னுவைச் சேர்ந்த திரு. பி. ஸி. மானுக் இந்திய ஓவியங்களில் மிகச் சிறந்தவற்றைத் தம்மிடம் வைத்துள்ளார்; கலை ஆய்வில் தேர்ச்சியுள்ளவர். இந்திய ஓவியக் கலைபற்றித் தம்முடைய ஆராய்ச்சி யொன்றில் மொகலாய காலத்திய ஓவிய அபிவிருத்தியை விளக்கிக் கூறிய பிறகு சொல்கிருர்: 'கடுமையான மதானுஷ்டானமுள்ள முஸ்லீமுக்கு மனித உருவத்தையோ வேறு உயிருள்ள எந்த உருவத்தையுமோ வரைவது அவனுடைய மதக்கட்டளைகளின்படி "ஹராம்" அல்லது விலக்கப்பட்ட செயலாகும். "செதுக்கப்பட்ட எந்த உருவத்தையும் உனக்குச் செய்து கொள்ளாதே" என்ற மோஸஸின் பழைய சட்டம் கடுமையான எல்லைவரையும் அனுஷ்டிக்கப்பட்டது. பண்பாடு பெற்ற பாரசீக ஷா அப்பாஸ்கள் காலத்திலும், தாராள மனுேபாவமுள்ள

33. Tarachand, op. cit., pp. 268-71. 34. *ibid.*, p. 272.

ஆதி மொகலாயர்கள் காலத்திலும் மகமதியர்கள் மேற்கூறிய கட்டளைகளை மீறினார்கள். அவர்களுடைய படங்கள் கண்ணுக்கும் புலன்களுக்கும் அற்புதமாக இருக்கின்றன எனினும் இதயத்தைத் தொடுவதில்லை. இவ்வகைத் தடை விதிகள் அவ்வோவியர்களுடைய இந்து மாணுக்கர்களுக்கோ நண்பர்களுக்கோ இருந்ததில்லை. அவர்களுடைய தேவர்கள் தேவதைகள் இதிகாச புராணங்களில் கூறிய உருவங்களோடு உலவக்கூடிய பேசுந் தெய்வங்களாக, மனிதர்களைக் கருதினான் இந்து; தன்னுடைய படங்களின் மூலமாக மனித இதயத்தைக் கவர்ந்துவிடுவதற்குக் காரணம் இதுவே. உயர்ந்த கலையின் சிறந்த அம்சமும் இதுவே. பல்லாண்டுகளாகக் கலையும் சமயமும் கைகோத்து வந்திருக்கின்றன என்பதைச் சிந்தையிற் கொள்ளல் வேண்டும். ஐரோப்பிய மறுமலர்ச்சிக் காலத்திய ஒப்பிலா ஓவியங்கள் எல்லாம் பண்டைக் காலத்திய கிரேக்க ரோமக் கதைகளைச் சித்திரிக்கக் கூடியனவாகவும் மதச் சார்புடையனவாகவும் இருக்கும்.'[35]

## இசை

இசை இந்தியாவில் ஏற்கெனவே மிகவும் அபிவிருத்தி செய்யப்பட்ட அறிவியற் கலையாகவும் இருந்தது. கடுமையான இஸ்லாம் அதை ஆதரிக்கவில்லை. எனினும் தற்காலத்திய இந்திய இசை இஸ்லாமியச் செல்வாக்குக்கும் எழுச்சிக்கும் மிகவும் கடமைப்பட்டுள்ளது. தற்காலத்திய இந்திய இசைக் கலையின் அடித்தளம் இந்து மயம்; மேலலங்காரங்கள், இந்து முஸ்லீம் கூட்டால் ஏற்பட்டதாகும். இக்காலத்திய ஏராளமான இசைக் கருவிகள் தோன்றி வளர்ந்த வரலாறுகள் எழுதப்படுவதுண்டானால், இந்து முஸ்லீம்களுடைய கூட்டு முயற்சியின் பயனால் இக்கருவிகள் பல சிறந்த அமைப்புக்களுடன் பூர்த்தி செய்யப்பட்டன என்பதும், அதில் முஸ்லீம்களின் முயற்சி குறிப்பிடத்தக்கதென்பதும், சில கருவிகளின் அமைப்பில் அவர்களே முழுப் பங்கும் எடுத்துள்ளார்கள் என்பதும் காணப்படும் என்பதில் எனக்கு ஐயமில்லை. இதைப் போலவே தற்காலத்திய ராகங்களையும் ராகினிகளையும் உருவாக்க முஸ்லீம் இசைவாணர்கள் நாளா வட்டத்தில் பெரிதும் உதவியிருக்கிறார்கள்.

'இஸ்லாம் வந்த ஆதிகாலத்தில் ஓவியத்தைப் போல இசையும் பெரிதும் நலிவுற்றது. ஆனல் அது அதே காரணத்தினல் அன்று; வேறு எதையும் சிந்தை செய்ய விடாதபடி இதுவே முழுமனத்தையும் கவர்ந்து ஆட்டி வைத்ததாலிருக்கலாம்..............யாரையும் தன்பாலிழுக்கக்கூடிய இச்சக்தி காரணமாக இசை வெறுக்கப்பட்டிருக்கலாம். வெறுக்கப்பட்டிருப்பினும் மனித இயற்கையை எத்தனை நாளுக்கு அடக்கி வைத்திருப்பது? ஓவியத்தைப் போலவே இக்கலையையும் மெதுவாகப் பயில ஆரம்பித்தார்கள். வேண்டுமென்றால் ஓவியத்தின் மீது கொண்ட ஆர்வத்தை விட இதன்மீது கொண்ட ஆர்வம் தணிவாயிருக்கலாம். இசைப் பயிற்சி மிகுதியும் விரும்பப்பட்ட ஈரான் நாடு இஸ்லாமைத் தழுவியவுடன் முஸல்மான்கள் இக்கலையின்மீது கொண்ட மனப்போக்கில் பெரிதும் மாறுதல் ஏற்பட்டது. தவிர முஸ்லீம் ஞானியரான சூபிகளின் செல்வாக்கும் இக்கலையைப் பற்றிய கருத்தை மாற்றியது. இசை ஆன்மாவை உயர்வழியில் செலுத்தும் சக்தி வாய்ந்தது என்றும், ஆன்ம சாதனைக்கு அனுசரணையானதென்றும் அவர்கள் நம்பி

35. *The Searchlight*, Patna—Anniversary Number, 1926, p. 15.

ஞர்கள். இவ்விதமாக இசைக்கலை மீதிருந்த தீண்டாமை நெடுந்தூரம் விலகியது. முஸல்மான்கள் இந்தியாவில் குடியேறி வாழத் தலைப்படவும் நிலைமை மிக மிகத் தெளிவாயிற்று. இந்துக்களுடைய சமூக, மத வாழ்வுத் திட்டத்தில் இசை உயர்ந்த இடம் பெற்றிருப்பதைக் கண்டார்கள். இதன் விளைவாக இசைக்கலை பெரிதும் பரவலாயிற்று. பாடகர்கள் இல்லாத கொண்டாட்டங்களில்லையென்று கூடச் சொல்லும்படியான நிலைமை வந்தது. மசூதிகளில் நடைபெறும் தொழுகை மாத்திரம் எப்போதும் போல கண்டிப்பான மதப்போக்கில் வாய்ப்பாட்டோ வேறு கருவி இசையோ ஒன்றுமின்றி நடந்தது. ஆனுல் மத சம்பந்தமான சில கூட்டங்களில் குவால்ஸ் எனப்படும் பாடகர்களால் குவாலிஸ் எனப்படும் தெய்வக் காதற் பாட்டுக்கள் பாடுவது வழக்கமாகி வந்தது. இசைமீது சூபிகள் கொண்டுள்ள பற்றுதலே இதற்குக் காரணம்.'[36] 'சுருங்கக் கூறின் நாம் சாதாரணமாகக் கேள்விப்படுகிற அளவுக்கு மேலாகவே முஸ்லீம் இந்தியாவில் இசை மிகவும் விரும்பப்பட்டது. இதற்கொரு காரணம், இந்திய முஸ்லீம்களிற் பெரும்பாலோர் ஆதியில் இந்துக்களாகவோ அல்லது இந்துக்கிளையில் தோன்றியவர்களாகவோ இருந்தனர் என்பதாகும். அவர்கள் இஸ்லாமைத் தழுவிய பிறகும் இசைக் கலையைவிட்டு விடாதபடி அதில் அவ்வளவு மோகம்கொண்டவர்கள். இதன் விளைவாக இக்கலை முஸ்லீம்களிடையே மெதுவாகப் பரவியது; எங்கும் விரும்பப்பட்டது. இதர அருங்கலைகளைப்போல இசைக் கலையும் இந்து முஸ்லீம்களிடை நெருங்கிய பழக்கமேற்படுவதற்குப் புதியதொரு வழி கோலிற்று என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். முஸ்லீம்கள் இந்தியாவுக்கு வந்த நாளிலிருந்தே கூட்டுறவும் கலப்பும் ஏற்படலாயிற்றென்பது, எப்படி இவ்விரு சமூகத்தாரும் தம்மிடமுள்ள அரு நிதியங்களைக் கொண்டும் கொடுத்தும் உதவுவதன்மூலம் ஒருவரை யொருவர் வளப்படுத்திஞர்கள் என்பதிலிருந்து தெளிவாகத் தெரிகிறது.'[37]

'இசையாகிய சகோதரக் கலையும் சக்கரவர்த்தியால் பெரிதும் ஆதரிக்கப்பட்டது. அவரது ஆட்சியில் இசை மேன்மைபெற்றது; உயர்நிலை எய்தியது. அவருடைய சபையில் ஏராளமான இசைவாணர்கள் இருந்தார்கள்—இந்துக்கள், ஈரானியர், துரானியர், காஷ்மீரிகள், ஆண் பெண் இருபாலாரும் அங்கிருந்தனர்............உலகப் புகழ்பெற்ற மியான்தான்சேன் அக்பரது அரசவைப் பாடகர்; இஸ்லாமுக்கு மதம் மாறிய இந்து. குவாலியரில் உள்ள அவருடைய சமாது இன்றும் இந்திய இசை வாணர்க்குப் புண்ணியஸ்தலமாக விளங்குகிறது. அக்காலத்தேதான் புகழ் வாய்ந்த இசை வல்லுநர் ஹரிதாஸும் விளங்கினுர். அவர் தான்சேனுக்கு ஆசிரியர்; இரண்டாவது தான்சேன் எனப்படும் ராமதாஸுக்கும் ஆசிரியர். இந்த ராமதாஸ் லக்ஷ்மணபுரியிலிருந்து வந்தவர்; ஒரு சமயம் கான்-இ-கானனிடம் ஒரு லட்ச ரூபாய் சன்மானம் பெற்றவர்.........அக்பர் காலத்தில் இசை சிறந்து விளங்கியது. குரலிசையில் எத்தனையோ ராகங்கள், ராகினிகள். அவைகள் யாவும் நன்கு பயிலப்பட்டன. அவைகளில் அநேகம் போற்றிப் பயில்வாரின்றி மறைந்தொழிந்தன. குரலிசைபோன்று கருவிகளும் கருவியிசையும் நன்கு பயிலப்பட்டன. இசைக்கலைத் துறையில் இந்து முஸ்லீம்கள் தத்தம் அருநிதியைக் கொண்டும் கொடுத்தும் உதவிக் கலையை வளப்படுத்திஞர்கள் என்பது தெளி

36. Jaffar, op. cit., pp. 155-6. 37. *ibid.*, pp. 164-5.

வாகப் புலனாகும். இக்கலைக் கலப்பு அக்பர் காலத்தில் புதிதாக ஏற்பட்டதல்ல; அதற்கு முன்பே நெடுங்காலந்தொட்டு நடைபெற்று வந்தது. மகமதியர்களின் வருகைக்குப் பிறகு இந்திய இசையின் சரித்திரம் இவ்விரு வகுப்பாரிடையே சமூக வாழ்விலும் அரசியல் வாழ்விலும் நெருங்கிய பழக்கத்தையும், கூட்டுறவையும் எடுத்துக் காட்டுகிறது. உதாரணமாக **கேயால்** என்பது ஜான்பூரின் சுல்தான் ஹுசேன் ஷார்குவியால் கண்டுபிடிக்கப்பட்டதென்று சொல்லப்படுகிறது. இந்து இசையில் அது ஓர் உறுப்பாக அமைந்திருக்கிறது. அதேபோல **துருபாது** மகமதிய இசையில் சென்றடைந்திருக்கிறது. இந்து இசையின் முன் காலத்திய நிலைமை, எங்கிருந்தும் நல்ல அம்சங்களைத் தாராளமாக எடுத்துக்கொள்கிற இன்றைய நிலைமை போல, நூற்றாண்டுகளாக நடைபெற்று வந்த இசைக் கலப்பையே தெளிவாக எடுத்துக்காட்டுகிறது............பேரரசர்களும் மாகாணத் தலைவர்களும் மாத்திரம் இவ்வருங் கலையைக் கவனித்தார்களென்பதில்லை. பிரபுக்களும் இசையமுது பருகினார்கள். தங்களுடைய குடும்பத்தினருக்கும் இசைவிருந்தளித்தார்கள்.'[38] 'ஷாஜஹான் இசையாதரவில் பெருந்தகையன். அவனும் இனிமையாகப் பாடுவானெனத் தெரிகிறது. ராமதாஸரும், மஹா பட்டரும் அவனுடைய இரண்டு சிறந்த பாடகராவர்.'[39]

இன்றுள்ளவர்களில் கலை நுணுக்கத்தைத் தெளிவாய் உணர்த்த வல்லவர்களது பெயர்களை எண்ணிப் பார்த்தால், சந்தேகமில்லாமல் அதில் முஸல்மான்களிருப்பார்கள். மொத்த ஜனத்தொகையில், அவர்களுடைய விகிதத்துக்கும் அதிகமாக இருப்பார்கள். சட்டசபைகளில் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் ஸ்தானங்களுக்கும் அதிகமாக ஒருக்கால் இருப்பார்கள். இந்தியாவிலுள்ள இசைவாணர்களில் இசை பற்றிக் கொஞ்ச நஞ்சம் தெரிந்தவர்களுமாகக் கூடியிருக்கும் கூட்டத்திற்கு யாரேனும் தற்செயலாய்ச் சென்று பார்த்தால், எந்தச் சந்தேகப் பேர்வழியும் இசைக் கலப்புக்கு அசைக்க முடியாத ஆதாரத்தை நேருக்கு நேர் காண்பான். இந்த இசைக் கலப்பை, சுருங்கக் கூறின் இந்திய இசைக்கலை காட்டும் இந்தியப் பண்பாடு எனக் கூறலாகும். வகுப்புவாரி அல்லது அவ்வவ்விடத்திய இசை இந்தியாவின் எந்தப் பாகத்திலும் இருக்குமானால் அது இந்தியப் பண்பாடு ஆகாது.

'**இந்தியாவில் முஸ்லீம் ஆட்சியில் கலா நிலை**' என்ற தம் புத்தகத்தில் திரு. S. M. ஜாபர் இந்து முஸ்லீம்களிடை ஏற்பட்ட உறவைச் சுருக்கமாகக் கூறுகிறார் :

'இந்தியாவுக்கு வந்த முஸல்மான்கள் இந்தியாவைத் தமது சொந்த நாடாகக் கொண்டு தாங்களும் இந்தியரானார்கள். அவர்களால் இந்துக்களுடைய நாட்டில், என்றென்றும் பகைமையில் வாழ்வது முடியாத காரியம். இரு சாராரும் கூடி வாழ்ந்ததால் நெருங்கிய உறவுக்கும், ஒருவரை யொருவர் நன்கு அறிவதற்கும் வழி யேற்பட்டது. நேசமுள்ள அயல் வீட்டார்களாக இவர்கள் வாழுவதற் கேற்ற பொதுவழியைக் கண்டு பிடிக்கும்படி சந்தர்ப்பங்கள் இவர்களை நாளடைவில் நெருக்கின; பாரசீகம், சமஸ்கிருதம் என்ற ஊடு பாவுகளிலிருந்து புதிய மொழியை உருவாக்கினார்கள். இந்து முஸ்லீம்களுடைய பொதுக்கலாசார ஆறு தன்னுடைய பழைய படுகைகளை விடுத்து

38. N. N. Law: *Promotion of Learning in India during Mohammedan Rule*, pp. 158-8. 38. *ibid.*, p. 183.

உருது என்னும் புதிய வாய்க்கால் வழியாகப் பாய ஆரம்பித்தது. இவ்வாறு உருவாக்கப்பட்ட கலாசாரம் இந்து அல்லது முஸ்லீம் மயமானதல்ல. அது இரண்டின் மனமிசைந்த சேர்க்கையால் ஏற்பட்டதாகும். முஸ்லீம் அரசர்களும் தலைவர்களும் இந்துக் கலைகளையும், இலக்கியங்களையும், அறிவு நூல்களையும், தத்துவத்தையும் ஆதரித்தார்கள். தங்களுடைய பள்ளிக்கூடங்களையும் சமயப் பாடசாலைகளையும் யாவரும் சாதிமத பேதமின்றிப் பயிலும் வண்ணம் திறந்து வைத்தார்கள். சாதுக்களும் முனிவர்களும் செய்ததுபோல இவர்களும் தங்களுக்குரிய துறைகளின் மூலமாக இந்து முஸ்லீம் உறவை ஏற்படுத்த முயன்றார்கள். இதன் பயனாக இரு சமூகத்தாரிடையே நல்ல இணக்கம் நிலவியது. ஆகவே, இந்துக்கள் முஸ்லீம் ஆலயங்களில் தின்பண்டங்கள் அளித்தால், திருவுளத்தை அறிவதற்குக் குரானை உபயோகித்தால், துரதிருஷ்டங்களை விரட்டுவதற்குக் குரானை தம்மோடு வைத்துக் கொண்டால், முஸ்லீம்களுக்கு விருந்தளித்தால், முஸ்லீம்களும் இந்துக்களிடம் இவ்வாறு பரஸ்பரம் நடந்து கொண்டால் இதிலொன்றும் ஆச்சரியப் படுவதற்கில்லை.................. இந்திய முஸ்லீம்களிற் பெரும்பாலோர் இந்துப் பொதுமக்களிலிருந்து வந்தவர்கள். இவர்கள் சந்தேகமில்லாமல் பல வழிகளில் திருந்தினார்களென்றாலும் அவர்களுடைய சமூக நிலைமையும் கலாசாரமும் உடனே மாறி விடவில்லை. தங்களுடைய மதத்தை அவர்கள் மாற்றிக் கொண்டார்கள். வாஸ்தவம்தான். ஆனால் தங்களுடைய பழைய பழக்க வழக்கங்கள், பொழுது போக்குகள், பயிற்சிகள் எல்லாவற்றையும் அப்படியே வைத்துக்கொண்டார்கள். மதமாற்றம் அவர்களுடைய சுற்றப் புறங்களையும் சூழ்நிலைகளையும் மாற்றிவிடவில்லை. அவைகளோ முழுக்க முழுக்க சமூகத் தீண்டாமை, சாதிவேற்றுமைகள் நிறைந்தனவாக இருந்தன. இதன் விளைவாக இந்து சமூகத்தின் அம்சங்களைக்கொண்ட இந்தோ-முஸ்லீம் சமூகம் ஏற்பட்டது.'[40]

கலாசாரம் என்பது சிக்கலான விஷயம். ஒரு சமுதாயத்தின் அம்சங்களை விளக்குவது கடினமாவது போல கலாசாரத்தின் அம்சங்களை விளக்குவதும் கடினமானதாகும். ஆனால் ஒரு கலாசாரத்தில் பிறந்து வளர்ந்தவன் வேறொன்றிலிருந்து அதைப் பிரித்துக் காணத் தவறமாட்டான். ஒரே கலாசாரப்பிரிவு அல்லது கூட்டத்திலும் அனேக உட்பிரிவுகளிருக்கக்கூடும்.

வேறுபட்ட அல்லது ஒன்றுக் கொன்று நேர் எதிரிடையான சமூக சமய சக்திகள் ஒன்று பட்டதாலேற்பட்ட கலாசாரத்தில் இத்தகைய உட்பிரிவுகளும் கூட்டங்களும் இல்லாமலிரா. அதனால் இந்தச் சகல உட்பிரிவுகள், கூட்டங்களுக்கெல்லாம் சேர்த்து மொத்தமாக ஒரு பொதுக் கலாசாரம் இருப்பது ஒழிந்து விடாது. ஒரு கலாசாரத்தோடு இன்னொரு கலாசாரத்தை ஒப்பிட்டுப் பார்க்கும் சரியான முறை என்ன வென்றால், ஒரு கூட்டம் அல்லது பிரிவின் மொத்தக் கலாசாரத்தோடு இன்னொரு கூட்டத்தின் கலாசாரத்தையொப்பிடுவதே யன்றி, ஒரு பெருங் கூட்டத்திலுள்ள உட்பிரிவுகளின் கலாசாரங்களை ஒப்பிட்டுக் கொண்டிருப்பதல்ல. அவைகளுக்குள் வேறுபாடுகள் இருப்பினும் பொதுவான அம்சங்களையும் நிறையக் கொண்டிருக்கும். இவ்விதமாக இந்தியாவிலுள்ள இந்துக்கள், முஸ்லீம்கள், கிறிஸ்வர்கள், பார்சிகள் சீக்கியர்கள் ஆகியோர் தங்களுக்குள் வித்தியாசம் கொண்டிருந்தாலும் பொது

40. Jaffar, op. cit., pp. 206-7.

வான அம்சங்களும் உடையவர்களாக இருக்கிறார்கள். அவை காரணமாக அவர்களிடையே காணப்படும் ஓர் ஐரோப்பியனைத் தனியாகப் பிரித்து விட லாம். இதைச் சந்தேகிக்கிறவர்கள் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளிலோ அல்லது பாதுகாப்பு நாடுகளிலோ அல்லது டொமினியன்களிலோ வாழும் இந்தியரின் நிலையைச் சற்றுக் கவனிப்பாராக. இந்திய இந்துக்களும் முஸ்லீம் களும் தனித்தனியான இரு கலாசாரங்களைச் சேர்ந்தவர்கள் என்றவர்களின் வாயடைக்கும்படியாக நிலைமை அங்கிருக்கிறது. தென் ஆப்ரிக்கனுக்கு அல்லது ஆஸ்திரேலியனுக்கு அல்லது கானடிய ஐரோப்பியனுக்கு அல்லது கென்யா விலுள்ள ஐரோப்பியனுக்கு இந்தியன் எவ்வாறு தோன்றுகிறான்? அவன் இந்துவாயினும், முஸல்மானாயினும், சிக்கியனாயினும், பார்சி, கிறிஸ்தவனா யினும் யாராக இருப்பினும் சரி, ஐரோப்பியக் கலாசாரத்துக்கு ஊன மிழைக்க விடாதபடியும், வாழ்க்கைத் தரத்தைக் குறைக்க விடாதபடியும் எந்த இந்தியனும் அவனுக்குரிய இடத்தில் வைக்கப்பட வேண்டியவனாகிறான். இந்த நிலைமை அடிமை நாட்டைச் சேர்ந்த இந்தியனுக்கு மட்டுமல்ல. ஆகவே அவனைக் கீழ்மகனாக நடத்தலாமென்பதல்ல. சுதந்திர நாட்டினரான சீன ரும் இத்தகைய கண்காணிப்பிலிருந்து தப்ப முடியாது. ஜப்பானியர் சமீப யுத்தம்வரையும் மதிக்கப்படாவிட்டாலும் மிகவும் கவனிக்கப்பட்டவர்கள். அவர்களும் ஐரோப்பியக் கலாசாரக் காவற்காரர்களிடமிருந்து தப்ப முடியாது, மேற்குக் கோளத்திலும் சரி, கிழக்குக் கோளத்திலும் சரி, வாழ்க் கைத் தரத்தைக் குறைக்க இவர்கள் அனுமதிக்கப்படமாட்டார்கள். ஆசிய ஐரோப்பியக் கலாசார வேற்றுமைகளை அடிப்படையாகக் கொண்டே இவ்வாறு வித்தியாசம் பாராட்டப்படுகிறது. இந்துக்களும் முஸ்லீம்களும் கூடி அரும் பாடுபட்டு, அதற்கென வாழ்ந்து ஒரு கூட்டுக் கலாசாரத்தை உண்டாக்கி யிருக்கிறார்கள். அது இந்தியக் காலாசார மெனப்படும் என் பதை மறுப்பதெல்லாம் வெறும் உதவாக்கரைத்தனமே. இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் வித்தியாசம் இருக்கலாம். இருந்தாலும் அவர்களுக்குப் பொதுவான இந்தியக் கலாசாரம் உண்டு. வெளி நாட்டானையும் இந்தியனை யும் பிரித்துக்காட்டுவது இந்தக் கலாசாரமே. அந்த வெளிநாட்டான், மேற்கி லிருந்தோ அல்லது கிழக்கிலிருந்தோ, புது உலகத்திலிருந்தோ அல்லது பழைய உலகத்திலிருந்தோ, எந்த நாடு அல்லது கண்டங்களிலிருந்து வரினும் இந்தியக் கலாசாரம் அவனைத் துண்டாகக் காட்டி விடும். இந்து முஸ்லீம்கள் ஒன்றுக் குள் ஒன்றாகி வாழ்ந்து வந்த நெடுங்காலச் சரித்திரத்தாலும், போரிலும் சமாதான காலத்திலும் ஒன்று கூடிச்செய்த முயற்சிகளாலும் இப்படித் தான் வந்து நேருமேயொழிய வேறுவிதமாக நிகழ்ந்திருக்க முடியாது. இரண்டு மாங்கன்றுகளை ஒட்டவைத்தால்—அல்லது ஒரு மாங்கன்றை மற் றொரு மரக்கிளையோடு ஒட்டுப்போட்டால், ஒட்டு மரத்திலிருந்து நல்ல ஜாதிப் பழம் கிடைக்கும். அவைகளைப் பிரிப்பது தவறு; கொடுமையுங்கூட. எவ் வளவோ புயல்களைச் சமாளித்து, ஒன்றுசேர்ந்து வைரம் பாய்ந்து இவ்வளவு காலமான பிறகு அந்தமாதிரி பிரிப்பதற்கும் அவை கிள்ளுக்கீரையல்ல என்பதை மனத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். ஒருக்கால் அம்முயற்சி வெற்றியடையுமானால் இருசாராருக்கும் அழிவு, வலுக்குறைவு. மேலும் நாலாபக்கங்களிலிருந்து கிளம்பும் எதிர்ப்புக்கும் தாக்குதலுக்கும் அவர்கள் இரையாகவும் நேரிடும்.

## V. ஒரே தேசம்

வடக்கே பனிமுடி தரித்த இமயத் தொடரிலிருந்து தெற்கில் பூமத்தியக் கோடுவரைப் பரவியுள்ள இந்திய நாட்டில் விதவிதமான சீதோஷ்ண நிலையும் இயற்கையமைப்பும் இருக்கின்றன. கடலோடு சம்பந்தமில்லாத பரந்த உள் நாட்டுப் பெரும்பகுதியிருக்கிறது. நாலாயிரம் மைல் நீளமுள்ள கடற்கரையும் இருக்கிறது. ஒருபுறம் ராஜபுதனம் சிந்து ஆகிய பாலைவனங்களும், மறு புறம் என்றும் செழிப்பான வங்காளம் அஸ்ஸாமும் இருக்கின்றன. வருஷாந் திரத்தில் மிகுதியும் மழையுள்ள வடகிழக்கு மாகாணமான அஸ்ஸாமும் தென்மேற்கு மலைத்தொடர்ப் பகுதியும் இருக்கின்றன. இதற்கெதிரிடையாக மழையென்ற பெயருங் கிடையாத ராஜபுதனம், சிந்து, ஆந்திராவில் சீடட் ஜில்லாக்களாகிய பாலைவனங்கள் இருக்கின்றன. உள்நாட்டுப் பிரதேசங் களில்—சிறப்பாக, பஞ்சாப், வடமேற்குப் பிரதேசங்களில்—கொடுமையான உஷ்ணமுள்ள இடங்களையும், குளிர் அதிகமான இடங்களையும் பெற்றிருக் கிறோம். தீபகற்பத்தின் தெற்குப் பகுதியிலும், கடற்கரைப் பிரதேசங் களிலும் சரியான கோடையும் கிடையாது, சரியான குளிரும் கிடையாது. மற்ற விஷயங்களில் இருப்பதுபோல இந்தப் பலவகைச் சீதோஷ்ணத்திலும் இயற்கையமைப்பிலும் காணப்படுகின்ற வேறுபாடு, ஜனங்களுடைய சமய சம்பந்தமான அல்லது வகுப்புவாரியான பிரிவுகளுக் கிணங்கினாற்போலிருக்க வில்லை. குளிரும் வறட்சியும் மிகுந்த வடமேற்கும், மழையும் புயலும் வளமும் மிகுந்த வடகிழக்கும் தட்பவெப்ப நிலையிலும் இயற்கையமைப்பிலும் எல்லா வகையிலும் வித்தியாசப்படுகின்றன. ஆனால் அவையிரண்டும் முஸ்லீம் ஜனத்தொகையைப் பெரும்பான்மையாகக் கொண்டுள்ளன. இது ஒன்று தான் வகுப்புவாரியாக இந்தியாவைத் துண்டாடும் கோரிக்கையை எழுப்ப இடமளிக்கிறது.

வெவ்வேறு பகுதிகளில் வசிக்கும் ஜனங்களுடைய வாழ்க் கையை அவ்விடத்திய சீதோஷ்ணமும் இயற்கையமைப்பும் பாதித்திருக் கின்றன. அவர்களுடைய உடை, குடியிருக்கும் வீடுகள், சமூக வழக்கங்கள், பொதுவாக அவர்களுடைய வாழ்க்கை, எல்லாம் மாறியிருக்கின்றன. இத்தனை வேறுபாடுகள் இருந்தாலும் இந்தியா ஒரே நாடாக இயற்கையால் அமைக்கப் பட்டிருக்கிறது; பிறநாடுகளிலிருந்து தாண்டிவர முடியாத இயற்கையரண்க ளான மலைகளாலும் கடல்களாலும் சூழப்பட்டிருக்கிறது. படையெடுத்த ஒவ்வொருவனும், நாடு பிடித்த ஒவ்வொருவனும், சக்கரவர்த்தியாயிருந்த ஒவ்வொருவனும் இந்துக் காலத்திலாயினும் சரி, முஸ்லீம் காலத்திலாயினும் சரி, இந்தியா முழுவதிலும் தனது ஆட்சியை நிறுவத் தன் தன் வலிமைக்கேற்ப முயன்றிருக்கிறான். இந்நாடு முழுவதும் தனது நேர் ஆட்சியில் வராவிட்டாலும் தனது மேலதிகாரத்தையாவது ஒப்புக்கொள்ள வேண்டும் என்று ஒவ்வொரு மன்னனும் ஆசைப்பட்டிருக்கிறான். வடமேற்கு மூலைப்பகுதியில் சில பகுதி எப்போதும் யாருக்கும் சொந்தமில்லாமலே இருந்து வந்திருக்கிறது; ஒரு சமயம் இந்திய அரசன் ஆட்சியிலும், மறுசமயம் அன்னியன் ஆட்சியிலும் அல்லது இந்தியனல்லாதவன் கையிலுமாக, மன்னர் களை மாற்றிக்கொண்டே வந்திருக்கிறது. பண்டைக்கால இந்துச் சக்கரவர்த்தி கள் அல்லது முஸ்லீம் பாதுஷாக்களுடைய வழக்கத்தைத்தான் பிரிட்டிஷ் அரசாங்கமும் பின்பற்றியிருக்கிறது. இப்பொழுது மாகாணங்கள் இருப்பது

போல அக்காலத்தில் தம்முள் சண்டையிட்டுக்கொண்டிருந்த சிற்றரசுகள் பல இருந்தன. ஆனால் இங்கு வாழ்ந்த எவனும், ஆண்ட எந்த அரசனும், தன்னை இந்தியன் என்பதொழிய வேறு விதமாகக் கருதியதற்கு அத்தாட்சியொன்றும் கிடையாது. இந்தியாவின் ஒரு பகுதியில், தான் பிறந்து வளர்ந்து வாழ்ந்ததாகக் கருதினானேயொழிய வேறு (சைனா, பாரசீகம், துருக்கிஸ்தானம், அரேபியா, அல்லது பர்மா இவைகளைப்போல தனி நாடான) எங்கோ வாழ்ந்ததாக அவன் கருதியதில்லை. அதுமாத்திரமன்றி சந்தியாவந்தனம் செய்யும் ஒவ்வொரு இந்துவும் சங்கல்பம் பண்ணும்போது ஒரு சுலோகத்தைச் சொல்லுகிறான். அப்பொழுது பாரதத்தை ஒரு நாடாகவே எடுத்துக்கொள்கிறான். தனது சிறிய பாத்திரத்திலுள்ள தண்ணீரில் சிந்து, கங்கை, காவேரி தீர்த்தங்கள் வந்து கலக்கிறதாகக் கருதுகிறான். இந்துக்காலத்தில் யாரோ ஒரு சக்கரவர்த்தி இந்தியா முழுவதையும் தனது அதிகாரத்தின் கீழ் கொண்டு வந்தபொழுதுதான் இப்படி நடந்ததென்பதில்லை. டில்லியில் முஸ்லீம் பாதுஷாக்கள் ஆண்ட காலத்திலும், நாட்டின் பல பாகங்களிலும் ஆங்காங்கு சிறுசிறு முஸ்லீம் ராஜ்யங்கள் நிறுவப்பட்ட காலத்திலும் இவ்வாறே நடந்து வந்தது. பிரிட்டிஷ் ஆதிக்கம் பரவியுள்ள இக்காலத்திலும் இந்தச் சுலோகம் சொல்லப்பட்டுதான் வருகிறது. நான்கு **தாம்கள்** என்று சொல்லப்படுகிற நான்கு புண்ணியஸ்தலங்கள் இருக்கின்றன. அங்கு போவதால் ஓர் இந்து பெரும் புண்ணியத்தைச் சம்பாதிக்கிறதாகச் சொல்லப்படுகிறது. அவைகள் தெற்கு மூலையிலுள்ள இராமேஸ்வரம், வடகரையில் 15000 அடி உயரத்திலுள்ள பத்ரிகாஸ்ரமம், கீழ்கோடிக்கரையில் ஒரிஸாவிலுள்ள பூரிஜகந்நாதம், மேல்கோடிக்கரையில் கத்தியவாரிலுள்ள துவாரகையாகும். யார் ஆண்டபோதிலும், நாட்டின் நிர்வாக அரசியல் பிரிவுகள் எப்படி இருந்தபோதிலும் இப்பொழுது எதெல்லாம் சேர்ந்து இந்தியாவென்று கருதுகிறோமோ, அதைத்தான் இந்தியாவென்று அந்நாளிலும் இந்துக்கள் கருதி வந்தார்கள். இந்துக்கள் இந்நாட்டுக்குத் தொன்று தொட்டு வகுத்து வந்த எல்லையினையே முஸ்லீம் மன்னர்களும் பிரிட்டிஷாரும், அப்படியே ஏற்றுக்கொண்டார்கள்.

கொஞ்சநாட்களுக்கு முன்னரே இரு தேசிய இனக்கொள்கை விளம்பரப்படுத்தப்பட்டது. இதுவரையும் முஸல்மான்கள் தற்போதைய இந்தியாவின் எந்தப் பாகத்தையும் இந்தியாவின் பாகமாகக் கருதி நடந்து கொண்டார்களேயொழிய, வேறுவிதமாக அவர்கள் கருதவில்லை; நடந்துகொள்ளவும் இல்லை. இங்கு படையெடுத்த எந்த முஸ்லீம் வெற்றிவேந்தனும் இந்தியாவின் எந்தப் பாகத்தையும் தன் தாய்நாட்டோடு சேர்க்க நினைத்ததேயில்லை. யார் யாரால் முடிந்ததோ, அவர்கள் எல்லாம் இந்தியாவில் தங்கிவிட்டார்கள். தமது ஆதிக்கத்தை ஒப்புக்கொள்ளாத இந்தியப்பகுதிகளைத் தம்வசத்திலாக்க முயன்றனர். எல்லைப்புறத்தை யடுத்துள்ள பகுதி, ஒருசமயம் இந்தப்பக்கம், மறுசமயம் அந்தப்பக்கமாகக் கைமாறியிருக்கலாம். அதனால் மேலேகூறிய விஷயங்கள் ஒன்றும் பொய்யாகிப் போய்விடா.

முஸ்லீம் அரசர்கள் ஆண்டபோதுமட்டுமல்ல; பிரிட்டிஷாரின் ஆட்சியின் கீழும் பிரிட்டிஷ் இந்தியாவில் வாழும் முஸல்மான்களேயன்றி, இந்திய சமஸ்தானங்களில் வாழும் முஸல்மான்களும், நேற்றுவரை இந்தியாவின் எந்தப் பாகத்தையும் இந்தியாவின் பாகமாக அன்றி வேறுவிதமாகக் கருதவுமில்லை, உரிமை கொண்டாடவுமில்லை. வடமேற்கு வடகிழக்குப் பகுதிகளைத் தனி நாடாக அமைக்கவேண்டுமென்று முஸ்லீம்லீக் விரும்புகிறதே, அந்தப் பகுதி

களையும் இந்தியாவிற்கு வெளியிலிருப்பனவாகக் கருதுகிறதா அல்லது இந்தியாவின் பாகங்களல்ல என்று கருதுகிறதா என்பது எனக்குத் தெரியவில்லை. எனக்குத் தெரிந்தவரை பாகிஸ்தான் தேசீய இயக்கத்தின் ஸ்தாபகத் தலைவரான சி. ரஹமத்அலி தான் வெளிப்படையாக ' "இந்தியா"வின் 'பிரதேச ஒருமைப்பாட்டை ஒப்புக்கொள்வது, "மில்லத்"தின்மீது "இந்தியத்தை"த் திணிப்பதாகும்' என்று கூறியவர். அவர்தான், ' "இந்தியா"வோடு எல்லாத் தொடர்புகளையும் அறுத்துக்கொள்வதற்காக வாழ வேண்டுமென்றும் "மில்லத்"தை "இந்தியத்திலிருந்து" காப்பாற்றவேண்டுமென்றும், "பாக்ஸ்—இஸ்லாமிகா"வுக்காகப் பாடுபடவேண்டுமென்றும்,' தன் மதத்தினரை அழைத்திருக்கிறார்.[41] அகில இந்தியமுஸ்லீம்லீக்குடன் அதனுடைய பேர்பற்றிச் சண்டை போடுகிறார்—'ஏனெனில் அதனுடைய பேரே "இந்திய"த்தின் முத்திரையிடப்பட்டதாக இருக்கிறது. நாம் "இந்திய"த்தின் மீது தொடுக்கும் போராட்டத்தை வெறும் கேலிக்கூத்தாக்கி விடுகிறது. பெயர்களின் சக்தியையும் முக்கியத்தையும் நாம் குறைவாக மதித்துவிடவேண்டாம். அவைகள் தாம் துண்டுபடுத்திக் காட்டும் சின்னங்கள். சூட்டிக்கொண்டவர்களை அடையாளம் காட்டுபவை. மேலும், அவை தார்மீகச் சின்னங்கள். ஆகவே பெயர்கள், எழுச்சிக்கும் ஊற்றுக்கண்ணுயிருப்பன..............நாம் செய்த தவறு நமக்குக் கேடு பல விளைத்துவிட்டது; நமது சமுதாயக்கட்டை விட்டுக்கொடுத்துவிட்டது. நம்மை "இந்தியர்"எனப் பேர் சூட்டிவிட்டது. "இந்தியன்" என்ற பெயரில் ஏதோ தவறு இருப்பதாகக் கருதி நான் இவ்வாறு கூறவில்லை. இதர எல்லாப் பெயரையும்போல இதுவும் மரியாதைக்குரிய பெயரே. ஆனல் நாமோ "இந்திய"ரில்லை. ஆகையால் நம்மையும் நமது ஸ்தாபனங்களையும் "இந்திய" என்றழைப்பது துரோகச்செயலன்றி வேறில்லை.'[42] இதை உணர்ந்த உடனே திரு. ரஹமத் அலி இஸ்லாமின் 'வடமேற்கத்திய ஐந்து கோட்டைகளு'க்கு 1933-ல் பாகிஸ்தான் என்று பெயரிட்டார். வங்காளம் அஸ்ஸாமுக்கு 1937ல் பாங்—இ—இஸ்லாம் என்றும், ஹைதாபாத் தக்காணத்திற்கு உஸ்மானிஸ்தான் என்றும் பெயரிட்டார். இவைகள் மில்லியின் மூன்று கோட்டைகளென்றும்' இருதேச உபகண்டமான 'இந்தியா'வில் நிர்ப்பந்தமாக இக்கோட்டைகள் உட்படுத்தப்பட்டிருக்கின்றன என்பதும் அவர் கருத்து.[43] ஆக 1933லிருந்துதான் இந்தியா அனேக நாடுகளைக்கொண்ட உபகண்டம் என்று ரஹமத் அலியாலும், பாகிஸ்தான் தேசிய இயக்கத்தாலும் கருதப்படலாயிற்று. குறிப்பிடத்தக்க எந்த சபையும், மனிதரும் இந்த வகையில் இவரை இன்றுவரைப் பின்பற்றியதுண்டா என்பது எனக்குத் தெரியாது. நிர்வாக காரியத்திற்காகப் பிரிவினை செய்யலாம். ஆனல் மனிதர்களால் இந்தவிதமாக நாடுகள் இவ்வாறு நடத்தப்பட்டிருக்கின்றனவா, நடத்த முடியுமா என்பது எனக்குத் தெரியவில்லை. ஐரோப்பாவில் ஏதாவதொரு நாட்டைத் துண்டுபோட முயன்றபொழுதெல்லாம் பகைமையும் கடுகடுப்புமே மிஞ்சியிருக்கின்றன. சமீபத்தில் உலகநாசம் செய்த மஹாயுத்தம் உள்பட ஏராளமான கொடிய யுத்தங்களுக்கு அதுதான் காரணம். நமக்கு இது ஒரு படிப்பினையாகுமாக. அதைக்கண்டு நாம் எச்சரிக்கையாயிருப்போம்.

41. 'The Millat of Islam and the Menace of "Indianism'—being a letter addressed by C. Rahmat Ali to the Supreme Council of the Pakistan National Movement, p. 7.

42. *ibid.*, p. 15. 43. *ibid.*, pp. 1 and 16.

## VI. ஒரு சரித்திரம்

கி. பி. ஒன்பதாவது நூற்ருண்டில் மகமது பின் காசிம் சிந்துக் கரைகளில் காலடி எடுத்து வைத்தது முதல், இந்தியாவில் மகமதியப் படையெடுப்புக்கள் தொடங்கின. பின்னுல் பதினெட்டாம் நூற்ருண்டில் அகமது ஷா அப்தாலி கடைசியாகப் படையெடுத்தது வரை இம்மகமதியப் படையெடுப்புக்கள் நடைபெற்று வந்தன. சுமார் எட்டு அல்லது ஒன்பது நூற்ருண்டுகள் வரை நடைபெற்ற இப்படையெடுப்புக்களில், ஒன்ருகிலும் முழுவதும் மதச்சார்புடையதா, மத வெறியாளர் அல்லது மத ஆர்வங் கொண்டவர்களால் நடத்தப்பட்டதா என்பதெல்லாம் சந்தேகந்தான். எல்லாப் படையெடுப்புக்களையும் போல இவைகளும் இகலன்மையையும் பொருள் நோக்கத்தையும் கொண்டதன்றி மதப்பற்றுக் காரணமாக நிகழ்ந்தவையல்ல. ஆதியில் இந்துக்கள் மாத்திரம், இந்த நாட்டில் குடியிருந்ததால், அவர்கள் இங்கு நுழைந்த முஸல்மான்களை எதிர்த்தார்கள். ஆகவே அப்பொழுது ஏற்பட்ட சண்டைகள், இந்து முஸ்லீம் போராட்டங்களாக இருந்தன. ஆனுல், ஆதி நாளில் இருந்து இந்தியாமீது படையெடுத்தோர்களின் ஆசை, இந்தியாவில் தங்கி வாழவேண்டும் என்பதே. பதினேராவது நூற்ருண்டில் ஷாஹாபுதீன் கோரியின் காலந்தொட்டு, வெளியிலிருந்து படையெடுத்து வந்த முஸ்லீம்கள், பட்டாணியரோ, தார்த்தாரியரோ, துருக்கியரோ, முகலாயரோ, ஆப்கானியரோ, யாராக இருந்தாலும் நாளடைவில் இந்தியாவின் பல பாகங்களிலும் தங்களது அதிகாரத்தை நிலை நாட்டினுர்கள். அவர்களது ராஜ்யம் விரிவடைய விரிவடைய, தலைநகரமான டில்லியிலிருந்து நாலா பக்கங்களிலும் அதிகாரம் செலுத்த முடியாதென்ப தில்லாவிட்டாலும், கஷ்டமாகத் தானிருந்தது. தொலைவிலுள்ள பகுதிகளில் கவர்னர்களை நியமித்தார்கள். மத்திய அரசாங்கம் சிறிது பலக் குறைவை அடைந்தால், இக்கவர்னர்கள் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு சுதந்திர அரசர்களாக மாறி விடுவார்கள். இந்தியாவில், முஸ்லீம் ஆட்சிகாலச் சரித்திரத்தில் இரண்டு வகையான சண்டைகளைக் காண்கிருேம். முதன் முதலில் இச்சண்டைகள் வெளியிலிருந்து வந்த முகம்மதியர்களுக்கும் இந்தியாவின் பல பகுதிகளை ஆண்டு வந்த இந்துக்களுக்கும் நடைபெற்றவை. ஆனுல், வெகு சீக்கிரமாகவே இந்தியாவில் சுதந்திர முஸ்லீம் ராஜ்யங்கள் ஆங்காங்கு ஏற்பட்டு விட்டன. டில்லிச் சக்கரவர்த்திகள் இட்ட சண்டைகள் பெரும்பாலும் இந்து மன்னர்களோடு அல்ல ; இந்தியாவில் நிலையாக ராஜ்யங்களை ஏற்படுத்திய முஸ்லீம் மன்னர்களோடோ அல்லது கலகம் செய்த தங்களுடைய கவர்னர்களோடோ தான். இந்தச் சண்டைகளில் இந்துக்கள் இரண்டு பக்கமும் சேர்ந்திருந்தார்கள். கோரிகளுக்கப்புறம் வடமேற்கில் இருந்து வந்த முஸ்லீம் படையெடுப்பாளர்கள் அத்தனை பேரும், இந்தியாவில் ஏதாவது ஒரு முஸ்லீம் ராஜ்யத்தின்மீது தான் படையெடுக்க வேண்டியிருந்தது; அப்படித்தான் செய்தார்கள். டில்லிச் சிம்மாசனத்தில் அமர்ந்த ஏதாவது ஒரு முஸ்லீம் அரசனேடு தான் சண்டையிட வேண்டியிருந்தது. முஸ்லீம் அரசனேடு சண்டையிட்டு அவனைத் தோற்கடித்தார்கள். தைமூரும் நாதிர்ஷாவும் படையெடுத்தது, இந்து மன்னர்கள் மீது அல்ல; டில்லியின் முஸ்லீம் மன்னர்கள் மீதே. டில்லி அரசர்களும் அவர்களை எதிர்த்தார்கள். பாபர் தனது முகலாய சாம்ராஜ்யத்தை நிறுவுமுன் பானிபட்டில் தோற்கடித்தது இப்ரஹிம்

லோடி என்ற ஒரு முஸ்லீம் மன்னனையே யன்றி ஓர் இந்து மன்னனையல்ல. பாபர் மீவார் அரசன் ராணுசங்கனேடு சண்டையிட்டபொழுது, ராணு சங்கனுக்கு ரஜபுத்திரர்கள் மட்டும் உதவி புரியவில்லை. மேவாடு அரசன் ஹாசன்கானும், சிக்கந்தர் லோடி மகன் சுல்தான் முகமது லோடியும் அவனுக்கு உதவினுர்கள். மகம்மது லோடி டில்லி அரசன் என்று சங்கனுல் ஏற்றுக்கொள்ளப்பட்டவன். ரஜபுத்திரர்கள், முஸல்மான்கள் ஆகியோரின் கூட்டுப் படைகளை, 1527-ல் 'கான்வா' என்ற இடத்தில் தோற்கடித்த பிறகு தான், பாபரின் ராஜ்யம் நிலைபெற்றது. பாபரின் மகன் ஹுமாயூன் சிறிது காலம் தனது ராஜ்யத்தை ஷெர்ஷா என்ற பட்டாணியனிடம் இழந்து நின்ருன். ஷெர்ஷா இறந்தபின் அந்த ராஜ்யம் கிடைத்தபொழுது, அக்பர் தனது சாம்ராஜ்யத்தை ஸ்திரப்படுத்த முஸ்லீம் அரசர்களோடு போராடவேண்டியிருந்தன. அக்பர் முதற்கொண்டு ஔரங்கசீப் வரை மொகலாய அரசர்களது காலமும் சக்தியும் கலகஞ்செய்த முஸ்லீம் கவர்னர்களை அடக்குவதிலோ அல்லது சுதந்திரம் பாராட்டிய முஸ்லீம் அரசர்களை ஜெயிப்பதிலோ பெரும்பாலும் கழிந்தன. தெற்கில் பீஜப்பூர், கோல்கொண்டா ராஜ்யங்களை ஜெயிப்பதற்காக எவ்வாறு ஔரங்கசீப் அநேக ஆண்டுகளைக் கழித்தார் என்பதும், அங்கேயே அவர் இறந்தார் என்பதும் யாவரும் அறிந்த விஷயமே. இந்தச் சண்டைகளில் பெரும்பாலானவை, டில்லிச் சக்கரவர்த்திகளால் இந்து சேனுதிபதிகளைக் கொண்டு நடத்தப்பெற்றவை. அக்பர் காலத்தில், மானசிம்மனும், பகவன் தாஸும், ஔரங்கசீப் காலத்தில் ஜஸ்வந்தசிங்கும், ஜெயசிங்கும் சேனுபதிகள். இவர்கள் முஸ்லீம் அரசர்களையும், கவர்னர்களையும் மாத்திரம் ஜெயித்து அடக்கவில்லை. நாட்டின் பல பகுதிகளில் ஆண்ட இந்து மன்னர்களையும் ஜெயித்தார்கள். முஸ்லீம் ஆட்சியின் நீண்ட காலத்தில் நடந்த இந்தியப் படையெடுப்புக்களும், இந்தியாவிற்குள் நடந்த போர்களும், எல்லாப் போர்களையும்போல, மண்ணுசை, பொன்னுசை முதலிய இலௌகிகக் காரணங்களால் தான் தூண்டப்பட்டவை. சுயநலப்பற்று, வம்சங்களுக்குள் போட்டி, சாம்ராஜ்ய விஸ்தரிப்பு ஆசை, நாடுகளை வென்று சாம்ராஜ்யத்தை நிறுவுவதால் பெருமையும், புகழும் கிடைக்கும் என்ற நினைப்பு முதலியவைகளே போரைத் தூண்டின.

பதின்மூன்ருவது நூற்ருண்டின் ஆரம்பத்தில் 1206-ல் குத்புதீன்ஐபக் தனது ஆதிபத்தியத்தை நிறுவியதிலிருந்து, பதினெட்டாவது நூற்ருண்டின் இறுதியில் பிரிட்டிஷார் இந்நாட்டில் வேரூன்றிய காலம்வரை—சுமார் 600 வருஷங்களாக,—இந்தியாவின் சரித்திரம், இந்துக்கள் ஒரு கட்சியாகவும், முஸ்லீம்கள் எதிர்க்கட்சியாகவும் நிலையாகச் சண்டையிட்ட சரித்திரமல்ல. இந்தக்காலத்தில் முஸ்லீம்களுக்கும் இந்துக்களுக்கும் நடந்த சண்டைகளைக் காட்டிலும் அதிகமான சண்டைகள் முஸ்லீம்களுக்குள்ளேயே நடந்தன என்பதைக் காட்டுவது இங்கே பொருத்தமில்லை; இடமும் இல்லை. சுருக்கமாக மாத்திரம் அதைக் கவனிப்போம்.

இக்காலத்தை இரண்டுவகையாகப் பிரிக்கலாம்: ஒன்று சுல்தான்கள் டில்லியில் ஆண்டகாலம்; மற்ருென்று மொகலாயர்கள் ஆண்ட காலம். முன்னர்க் கூறிய காலப்பகுதியில் இந்தியாவின் எல்லாப் பாகங்களிலும் வடக்கே இமயத்திலிருந்து தெற்கே இராமேஸ்வரம் வரையும், மேற்கெல்லைப் பிரதேசத்திலிருந்து கிழக்கே ஒரிஸா, வங்காளம்வரையும் முஸ்லீம் ஆட்சி

ஏற்பட்டுப் பரவியதன்றி ஆங்காங்கே முஸ்லீம் அரசர்களால் ஆளப்பட்ட சிறுசிறு ராஜ்யங்களும் தோன்றின. டில்லியில் அரசாண்ட ராஜ வம்சங் களும் மாறின. டில்லி சுல்தான்கள் இந்துக்களிடமிருந்து இந்தியாவின் பகுதி களைக் கைப்பற்றியதோடல்லாமல் தங்களை எதிரிட்டுக் கலகம்செய்த தங்களது சேனுவீரர்களை அடக்குவதிலும், அவர்கள் வசப்படுத்திக்கொண்ட நாட்டை மீட்பதிலும் பெருங்கவனத்தையும் காலத்தையும் செலவழித்தார்கள். 1193க்கும் 1526க்கும் இருந்த இடைக்காலத்தில் டில்லிச் சிம்மாசனத்தில் அமர்ந்த சுல்தான்களின் எண்ணிக்கை 35-க்குக் குறையாது. இவர்கள் சுமார் ஐந்து வம்சங்களைச் சேர்ந்தவர்கள். ஒவ்வொரு வம்சமும் இஸ்லாமைச் சேர்ந்ததே. ஒன்றை விரட்டிவிட்டுவந்து உட்கார்ந்த மற்ற வம்சமும் இஸ்லாமைச் சேர்ந்ததுதான். சிம்மாசனத்தில் அமர்ந்து ஆண்ட 35 மன்னர் களில் 19 அல்லது அதற்கு மேற்பட்டவர்கள் கொலையுண்டு முடிவெய்தினர். அவர்கள் முடிவு இந்துக்களாலல்ல ; முஸ்லீம்களால்தான் என்பது கவனிக்கத் தக்கது.

சுதந்திரம் பூண்ட அல்லது அரைகுறைச் சுதந்திரம் பூண்ட நாடுகளில் வங்காளம், ஜான்பூர், குஜராத், மாளவம், காண்டேஷ், பாமினி முதலியவை களைக் குறிப்பிடலாம். பாமினி, சிலகாலம் கழித்து, பீரார், ஆமதுநகர், பீஜப்பூர், கோல்கொண்டா, பீடார் என்ற ஐந்து ராஜ்யங்களாகப் பிரிந்தது. இவை ஒவ்வொன்றும் தனித்தனிச் சரித்திரம் பெற்றிருக்கின்றன. அச்சரித் திரங்கள், சுற்றியுள்ள முஸ்லீம் அரசர்களோடும் டில்லி அரசர்களோடும் இந்நாடுகளிட்ட போர்களின் சரித்திரங்களாகவே யிருக்கும். ஒருக்கால் எங்கேனும் ஒரு பகுதியை ஆண்ட இந்து அரசனோடு புரிந்த போரின் வரலா றும் அதில் இருக்கக்கூடும்.

இந்திய முஸ்லீம் அரசர்கள் வடமேற்கிலிருந்து அடிக்கடி தாக்கிய முஸல்மான்களோடு போரிடவேண்டி யிருந்தது. அல்லாவுதீன் காலத்தி லிருந்து, மேற்கிலிருந்து வரக்கூடிய படையெடுப்புக்களைச் சமாளிப்பதற் கென்றே அரண்களும் மற்ற ஏற்பாடுகளும் செய்து எப்பொழுதும் தயாராக இருக்கவேண்டிய திருந்தது.

1526-ல் பானிபட்டில் பாபர், இப்ரஹீம் லோடியை வென்று மொகலாய சாம்ராஜ்யத்திற்கு அடிகோலிய பிறகு, அவனுடைய சந்ததியார்களுக்கு டில்லிச் சிம்மாசனம் மலர்ப் படுக்கையாக இருக்கவில்லை. அவன் மகன் ஹுமாயூன் தன் சகோதரனை காம்ரானோடு சண்டைபோட வேண்டி யிருந்தது. காம்ரான் தனக்குரிய காபூல், காண்டஹார் போதாதென்று லாகூரைக் கைப்பற்றிப் பஞ்சாப் முழுவதையும் தன் வசப்படுத்திக் கொண் டான். ஹுமாயூன் தனது மற்றச் சகோதரர்களான ஹிந்தால், மிர்ஸா அஸ்காரியோடு சண்டையிட வேண்டியிருந்தது. சண்டையில் ஹிந்தால் கொல்லப்பட்டான். காம்ரான் கைதியாக்கப்பட்டான். அவனது கண் பார்வை போக்கப்பட்டது. அஸ்காரி பிடிபட்டான் ; மெக்காவுக்குப் போக அனுமதிக்கப்பட்டான்.

வட இந்தியாவில் தனது நிலைமையைக் காப்பாற்றிக்கொள்வதற்காக ஹுமாயூன் அடிக்கடி சண்டைபோட வேண்டியிருந்தது. குஜராத் அரசன் பகதூர் ஷாவை அடக்குவதற்குச் சேனையை நடத்திச்செல்ல வேண்டியிருந் தது. ஆனால், பிஹாரிலுள்ள ஆப்கானியத்தலைவன் ஷெர்கான் கலகஞ் செய்த

தால் குஜராத்தை வசப்படுத்த முடியவில்லை. கடைசியாக ஷெர்கானிடம் டில்லிச் சிம்மாசனத்தை யிழந்துவிட்டு இந்தியாவுக்கு அப்பால் பாரசீக மன்னனிடம் உதவிநாடி அலைந்தான் ஹுமாயூன்.

ஷெர்ஷாவுக்குப்பின் அவன் மகன் சாலிம்ஷா பட்டத்துக்கு வந்தான். அவனால் ஆப்கானியப்பிரபுக்களை அடக்க முடியாததால் அவர்களைச் சிறையில் தள்ளவோ அல்லது அவர்களில் அநேகரைக் கொல்லவோ வேண்டியிருந்தது. பஞ்சாபின் கவர்னர் கலகஞ்செய்தான். ஆனால், தோற்கடிக்கப்பட்டுக் காஷ்மீருக்கு ஓடினான்; அங்கு கொலையுண்டான்.

ஸாலிம்ஷாவுக்குப் பிறகு அவனுடைய மகன் பிரோஸ்கான் பட்டத்துக்கு வந்தான். அவனுடைய தாய்மாமன் முபாரிஸ்கான் அவனைக்கொன்றுவிட்டு மகமதுஷா என்ற பட்டத்துடன் சிம்மாசனம் ஏறினான். அவனுடைய காரியங்களை ஹெமு என்ற இந்து மேற்பார்த்து வந்தான். பிரபுக்கள் கலகம் செய்தார்கள். டில்லியையும் ஆக்ராவையும் இப்ரஹீம்சூர் பிடித்துக்கொண்டான். அவனைச் சிக்கந்தர்சூர் தோற்கடித்தான். இவ்வளவுக்கும் கொக்கைப்போல் காத்துக்கொண்டிருந்த ஹுமாயூன், இந்துஸ்தானத்தின் குழப்ப நிலைமையைத் தனக்குச் சாதகமாக்கிக்கொண்டு ஒரு படையோடு வந்து சிக்கந்தர் சூரை வென்று, 1555ல் தனது சிம்மாசனத்தை மீண்டும் அடைந்தான். ஆனால், பாவம் சீக்கிரம் மாண்டான்.

ஹுமாயூனுக்குப்பின் அக்பர் வந்தான். அவன் தம்பி ஹக்கீம் காபூலை ஆட்சி செய்தான். காபூல் ஹிந்துஸ்தானத்தின் ஒருபாகமாகக் கருதப்பட்டு வந்தது. அக்பர் வாலிபன். பைராம்கானுடைய பராமரிப்பில் இருந்து வந்தான். அவனுக்கு ஏற்பட்ட முதல் பெரிய ஆபத்து சூர்களால் ஏற்பட்டது. சூர்களுடைய இந்துமந்திரி ஹெமு டில்லியின்மீது படையெடுத்து மொகலாயச் சேனாதிபதி பரீத்பெக் என்பவனைத் தோற்கடித்தான். திறமையற்றவன் என்ற காரணத்திற்காக பரீத்பெக் பைராம்கானால் கொல்லப்பட்டான். தனது வெற்றிக்கப்புறம் ஹெமு விக்ரமாதித்தன் என்று பட்டம் சூட்டிக்கொண்டு சாம்ராஜ்யத்தை ஒருகை பார்க்கலாமென்று துணிந்தான்; பானிப்பட்டில் பைராம்கானால் தோல்வியுற்றுக் கைதியாக்கிக் கொல்லப்பட்டான். அதன் பிறகு சிக்கந்தர் சூரும் அடிபணிந்தான். சூர்வமிசம் 1556ல் முடிவுற்றது.

பைராம்கானின் மேற்பார்வையிலிருப்பது அக்பருக்குப் பிடிக்கவில்லை. இது விஷயத்தில் அவனுடைய தாய் ஹமீதாபீகமும், அவனுடைய செவிலித்தாய் மாஹம் அங்காவும், அவள்மகன் ஆதம்கானும் அவனுக்கு ஒத்தாசையாக இருந்தனர். அக்பர் 1560ல் பைராம்கானை வேலையைவிட்டு நீக்கினான். அவனும் கீழ்ப்படிந்து மெக்காவுக்குப் பிரயாணமானான். அவன்மீது ஐயுறவு கொண்ட அக்பர் அவனை நாட்டைவிட்டுச் சீக்கிரம் கிளப்புவதற்காகப் பீர்முகமதுவின் கீழ் ஒரு படையை அனுப்பினான். இது பைராம்கானுக்கு வெறுப்பூட்டியது; கலகம் செய்தான். அக்பர் பின்தொடரப் பஞ்சாபுக்குச் சென்றான். இறுதியில் பைராம்கான் பணிந்தான். அக்பர் அவனது பழைய சேவைகளுக்காக அவனை மன்னித்து மெக்காவுக்குப் போக அனுமதியளித்தான். ஆனால் பாதையில், குஜராத்தில், தன் எதிரியான பட்டாணியன் ஒருவனால் கொல்லப்பட்டான்.

அக்பருடைய சேனுதிபதிகள் பீர்முகமதும் ஆதம்கானும் மாளவ தேசத்தை ஒரு முஸ்லீம் அரசனிடமிருந்து மிகக் கொடுமைப்படுத்திக் கைப் பற்றினர்கள்.

அக்பர் அடிக்கடி கலகக்காரர்களை அடக்கவேண்டியிருந்தது. அவர் களில் ஒருவன் மாளவத்தில் பீர் முகம்மதுவை விரட்டியடித்த அப்துல்லாகான் உஸ்பெக். மற்ருருவன் ஜான்பூரில் கலகம் செய்த கான்ஜாமன். மற்றவன் அவனுடைய தம்பி மிர்ஸா ஹக்கீம். இவன் உஸ்பெக்குகளால் தூண்டப் பட்டுச் சிம்மாசனத்திற்கு உரிமை கொண்டாடினன். அக்பர் பஞ்சாபை நோக்கிப் படையெடுக்கவும் ஹக்கீம் அவசரம் அவசரமாகப் பின்வாங்கினன். கான்ஜாமன் சண்டையில் தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டான். அவ னுடைய சகோதரன் சிறைபிடிக்கப்பட்டுச் சிரச்சேதம் செய்யப்பட்டான். மற்றக் கலகக்காரர்கள் கடுமையாக நடத்தப்பட்டார்கள்.

1573-ல் அக்பர் முஸபர்ஷா விடமிருந்து குஜராத் முழுதையும் ஜெயித் துத் தன் சாம்ராஜ்யத்தோடு சேர்த்தான். அக்பரின் சரித்திரத்தில் இது ஒரு முக்கியமான கட்டமாகும்.

ஷெர்ஷா காலத்தில் வங்காளம் ஆப்கானியத் தலைவர்கள் வசம் இருந் தது. ஆனல், 1564-ல் பீஹாரைச்சேர்ந்த சுலைமான் கான் கௌரைக் கைப் பற்றி இரு மாகாணங்களுக்கும் தலைவனுன். அவனிறந்தபின் அவனுடைய மகன் பையாசித் அரசனுனன். அவனுடைய மந்திரிகள் அவனைக் கொன்று அவனுடைய இளையதம்பி தாவூதைச் சிம்மாசனத்தில் வைத்தார்கள். தாவூது ஸாமனியாக் கோட்டையைப் பிடித்ததால் சக்கரவர்த்தியின் கோபத்திற் காளானன். அக்பர் தனது சேனுதிபதியை அனுப்பியதோடு தானும் தாவூதை எதிர்த்துச்சென்று தோற்கடித்து, 1576-ல் அவனைக் கொன்ருன். வங்காளமும் பீஹாரும் சாம்ராஜ்யத்தில் சேர்ந்தன. பின்னல் 1592-ல் ஒரிஸாவும் சேர்க்கப் பட்டது.

முஸபர்கான் துர்ப்பாதி வங்காள கவர்னராக்கப்பட்டான். அவனுடைய கொடுமையான சட்டங்களும் அநியாய வரியும் அங்குள்ள பிரபுக்களுக்கு ஆத்திர மூட்டின. அக்பர் மதவிஷயங்களில் **சல்ஹ்-இ-குல்** என்ற சமரஸ மனப்பான்மை உடையவர். இது உலாமாக்களுக்குப் பிடிக்கவில்லை. ஜான்பூர் காஜியின் ஆதரவில் அவர்கள் சக்கரவர்த்தியை எதிர்ப்பது சட்டரீதியான செய்கை யென்று பிரகடனம் செய்தனர். இதை அனுசரித்துச் சாக்தாய் ஜாதியைச் சேர்ந்த காக்ஷால்கள், பாபாகான் என்ற தலைவன் கீழ் கௌரை நோக்கிச் சென்றனர். நிலைமையைச் சீர்படுத்த அக்பர், தோடர்மல் என்ற இந்துவை அனுப்பினன். முஸபர்கான் கொல்லப்பட்டான். வங்காளமும் பீஹாரும் காக்ஷால்கள் கைக்ருச் சென்றன; எனினும் கடைசியில் கலகம் அடக்கப்பட்டு விட்டது.

ஹக்கீம் மீண்டும் பஞ்சாப்புக்குள் நுழைந்தான். அக்பர் அவனைத் தோற்கடித்தான். 1585-ல் அவன் இறந்த உடன் காபூல் டில்லியோடு சேர்க்கப்பட்டது. அதை ஆளும் பொறுப்பு ராஜாமான்சிங் என்ற இந்து வசம் ஒப்புவிக்கப்பட்டது. எல்லைப்புற மலை ஜாதியினர் அடக்கப்பட்டனர். காஷ்மீரின் முஸ்லீம் அரசன் கீழ்ப்படிய வைக்கப்பட்டான். காஷ்மீரம் சாம்ராஜ்யத்தோடு சேர்க்கப்பட்டது. மிர்ஸா ஜானியிடமிருந்து சிந்துவும் சேர்க்கப்பட்டது. 1595-ல் காண்டஹார் சேர்க்கப்பட்டது.

இந்துஸ்தானம் முழுவதுக்கும், ஹிந்துகுஷ் மலைக்கப்பாலுள்ள ஆப்கன் பிரதேசங்களுக்கும் தான் அதிபதியான பிறகு அக்பர் தக்காணப் பக்கம் திரும்பினான். பர்ஹாம் நைஜாம்ஷாவின் சகோதரி சாந்த்பீபீ வெகு வீரத்துடன் ஆமதுநகரைப் பாதுகாத்தாள். எனினும் அக்பர் ஆமதுநகரை 1600-ல் சேர்த்துக் கொண்டான். பின்பு அவன் பர்ஹான்பூரைத் தாக்கி காண்டேஷ் அரசர் மிரான்பகதூரிடமிருந்து 1601-ல் அசிர்காரைக் கைப்பற்றினான்.

அக்பர் தக்காணத்துக்குப் புறப்பட்ட பொழுது தன் மகன் சலீமைத் தலைநகரத்துக்குப் பொறுப்பாக வைத்துவிட்டுச் சென்றான். மானசிங், ஷாகுலிகான் இருவருடனும் சேர்ந்து கொண்டு மேவார்மீது படையெடுக்கும்படியும் சொல்லி யிருந்தான். ஆனால் இளவரசனே கலகம் செய்து சுதந்திரப் பிரகடனம் செய்தான். அக்பர் தெற்கே யிருந்து திரும்பிவந்தான். சலீம் அலகாபாத்தில் சுதந்திர ராஜ்யத்தை ஸ்தாபித்தான். ஆனால் உடனே அக்பரிடம் மன்னிப்புக் கோரினான். சமாதானம் ஏற்பட்டது. சலீமை அரசாட்சிக்கு வரவொட்டாதபடி அவனுடைய மூத்தமகன் குஸ்ரூவைச் சிம்மாசனத்தில் வைப்பதென்று ஒரு சூழ்ச்சி கிளம்பித் தோல்வியுற்றது. 1605-ல் அக்பர் இறக்கவும் சலீம் ஜஹாங்கீர் என்ற பெயரோடு சக்கரவர்த்தியானான்.

ஜஹாங்கீர் பட்டத்துக்கு வந்தவுடன், அவன் மகனை நடுநாயகமாகக் கொண்டு கிளம்பிய கலகத்தை அடக்க வேண்டியதாயிற்று. குஸ்ரூ ஆக்ராவிலிருந்து தப்பிச் சில பிரபுக்களுடைய உதவியைக்கொண்டு கலகம்செய்தான். பின்னர் தோல்வி யடைந்து, கைதியாகி, கைவிலங்கிடப்பட்டுச் சக்கரவர்த்தி முன் நிறுத்தப்பட்டான்; சிறையில் தள்ளப்பட்டான். அவனைச் சூழ்ந்தவர்கள் கடுமையாகத் தண்டிக்கப்பட்டார்கள். அவனுடைய இனிய சுபாவம், அவனை இன்னொரு சூழ்ச்சிக்கு நடுநாயகமாக்கிற்று. சக்கரவர்த்தியைக் கொன்று இவனைச் சக்கரவர்த்தியாக்குவதற்கு முயற்சிகள் கிளம்பின. ஆனால் இச் சூழ்ச்சி கண்டுபிடிக்கப்பட்டுவிட்டது. குஸ்ரூ குருடாக்கப்பட்டான். தனி இருட்டறையில் அநேக வருடங்கள் அடைபட்டுக் கிடந்தான். 1616-ல் அவனுடைய கொடிய எதிரியான ஆசப்கானிடம் ஒப்படைக்கப்பட்டான். ஆசப்கான் அவனை அவனுக்குப் போட்டியான சகோதரன் ஷாஜஹானிடம் ஒப்படைத்தான். ஷாஜகான் அவனை 1622-ல் கொன்றான். அவன் இறந்த பிறகு அவனுடைய தகப்பன் வருந்தினான். அவனது சவம் இரண்டாம் தடவையாக அலகாபாத்தில் புதைக்கப்பட்டது. இப்பொழுது அந்த இடம் குஸ்ரூ பாக் என்று அழைக்கப்படுகிறது. நூர்ஜஹானுடைய மருமகன் ஷாஹ்ரியர், ஷாஜஹானோடு போட்டியிடும் எதிரியாக இருந்தான். ஷாஜஹானும் தன் தகப்பனுக்கு விரோதமாகக் கலகம் செய்தான். 1622-ல் தன் தகப்பன் சாகுமளவும் அவ்வாறே யிருந்தான். பலவிதமாக அநேக வருஷங்களைக் கழித்த பிறகு கடைசியில் சரணடைந்தான். தாராவையும் ஔரங்கசீப்பையும் டில்லியில் பணயமாக வைத்தான். ஜஹாங்கீர் வங்காளத்திலுள்ள ஆப்கானியப் பிரபுக்களையும் அடக்க வேண்டியிருந்தது. ஒருசமயம் தன்னையும் நூர்ஜஹானையும் கைதியாக்கிய மஹாபத்கான் போன்ற இதர பிரபுக்களையும் அடக்க வேண்டியிருந்தது. இரண்டு சமயங்களில் ஜஹாங்கீர் இந்துக்களையெதிர்த்துச் சண்டையிட்டான். அதில் ஒன்று 1620-ல் காங்ராவைச் சேர்த்துக் கொண்டதாகும். மற்றொன்று அக்பர் காலத்திலிருந்து மொகலாய சாம்

ராஜ்யத்தை எதிர்த்து வந்த மேவாரைப் பணிய வைத்தது. பர்ரசீகர் முற்றுகையிட்டுக் கைப்பற்ற சாம்ராஜ்யம் காண்டஹாரை இழந்தது.

ஜஹாங்கீர் இறக்கவும் ஷாஹ்ரியர் சிம்மாசனத்திலேற முயன்று தோல்வியுற்றுன். அவன் கைதியாக்கப்பட்டுக் குருடாக்கப்பட்டான். தனக்குப் போட்டியாக வந்தவர்களை 'வானுலகத்துக்கு அனுப்பிவிட்டு' ஷாஜஹான் சக்கரவர்த்தியானுன். அவனுடைய மாமன் ராஜ வமிசத்து இளவரசர்களத்தனை பேரையும் இரக்கமில்லாமல் கொன்று குவித்தான். அனேக பெண்கள் தற்கொலை செய்துகொண்டார்கள். ஷாஜஹானுடைய முதற்பெயர் குர்ரம் என்பது. தக்காணத்து முஸ்லீம் ராஜ்யங்களின்மீது போர் தொடுத்து வென்றதனுல் ஷாஜஹான் என்ற பட்டம் அவன் தந்தையால் அளிக்கப்பட்டது. 1628-ல் சிம்மாசனத்துக்கு வரவும் பண்டேலாத் தலைவனுடைய கலகத்தை அடக்க வேண்டியிருந்தது. 1629-ல் தக்காண கவர்னர் கான் ஜாஹன் லோடி கலகஞ் செய்ததால் அவனை அடக்கித் தோற்கடித்தான். அவனும் அவனைச் சூழ்ந்து நின்ற நூறு பேரும் சிரச்சேதம் செய்யப்பட்டார்கள்.

அக்பர் காண்டேஷையும் (1599) ஆமது நகரையும் (1600) ஜெயித்து சாம்ராஜ்யத்தோடு சேர்த்துக்கொண்டான். ஆனுல் ஆமது நகரம் அவனுடைய முழு ஆதிக்கத்திற்குள் கொண்டுவரப்படவில்லை. மாலிக் ஆம்பருடைய எதிர்ப்பினுல் ஜஹாங்கீர் காலத்திலும் சரியான முன்னேற்றம் கிடையாது. ஷாஜஹானுடைய வெற்றியும் நீடித்து நிற்கவில்லை. தக்காணத்துச் சுல்தான்கள் அடக்கப் படவில்லை. ஆமது நகர ராஜ்யம் 1633-ல் கடைசியாக முடிவு பெற்றது. பீஜப்பூரும் கோல்கொண்டாவும் ஜெயிக்கப்படாமலிருந்தன. பீஜப்பூர், ஆமதுநகருக்கு உதவி செய்ததாலும் ஷாஹ்ஜி ஒரு நைஜாம் ஷாஹிப் பையனை ஆமதுநகருக்கு அரசனுக்கியதாலும் சக்கரவர்த்திக்குக் கோபம் மூண்டது. அவர்களைத் தண்டிக்கச் சக்கரவர்த்தி தனது சேனுதிபதிகளை அனுப்பினுன்; கோல்கொண்டா அரசனைப் பணியவைத்தான். பீஜப்பூரும் சக்கரவர்த்தியின் மேலதிகாரத்தை ஒப்புக்கொண்டது. இதற்குப் பிறகு ஔரங்கசீப் தக்காண ராஜப்பிரதிநிதியாக நியமிக்கப்பட்டான். சில காலம் வரையே சமாதானம் நிலைத்தது. மீண்டும் சில வருஷங்களில் சண்டைகள் தொடங்கி விட்டன. பீடார் கைப்பற்றப்பட்டது. குல்பர்கா என்னுமிடத்தில் பீஜப்பூரிகள் தோற்கடிக்கப்பட்டார்கள். 1658-ல் கல்யாணிக் கோட்டையும் கைப்பற்றப்பட்டது. அரசியல் காரணங்கள் ஒரு பக்கம் இருக்க, தென்னுட்டு இருவரசர்களும் ஷியா வகுப்பைச் சேர்ந்தவர்களென்றதனுல் சன்னி வகுப்பைச் சேர்ந்த சக்கரவர்த்தி அவர்களை அடக்க முற்பட்டான்.

ஜஹாங்கீர் காலத்தில் காண்டஹார் பாரசீகர்களால் கைப்பற்றப்பட்டது. ஷாஜஹான் காலத்தில் அதைப்பெற மீண்டும் மீண்டும் முயற்சிகள் செய்யப்பட்டன. 1639-ல் அதை அலி மார்தான் கான் என்ற பாரசீக கவர்னர் ஆண்டுவந்தான். பாரசீக மன்னன் தன்மீது ஐயுறவு கொண்டிருப்பதால் தன்னைத் துன்புறுத்தக் கூடுமென்று பயந்து அவன் டில்லிச் சக்கரவர்த்திக்குச் சொல்லி அனுப்பினுன். டில்லிப்படைகள் காண்டஹாரை வெகு எளிதாகக் கைப்பற்றின. ஆனுல் பாரசீகர்கள் விட்டு விடவில்லை. 1649-ல் அதைத் திருப்பிப் பிடித்துக் கொண்டார்கள். அதன் பிறகு டில்லிச் சக்கரவர்த்தி அதைப் பிடிப்பதற்கு அனேகந்தடவை முயன்றும் 12 கோடி ரூபாய் செலவோடு முயற்சிகள் கைவிடப்பட்டன.

பால்க்கையும் பாதாக்ஷாணயும் ஜெயிப்பதற்கு ஷாஜஹான் முயன்றார். மூராது இளவரசன் ஒரு பெரிய சைனியத்தோடு அனுப்பப்பட்டான். பொக்காரா அரசர் நாஸ் முகம்மதுகானுக்கும் அவருடைய மகனுக்கும் தகராறு நடந்துகொண் டிருந்தபடியால் மூராது யாதொரு எதிர்ப்பு மின்றி 1646-ல் பால்க்கில் நுழைந்தான். நாஸ் முகம்மது ஓடி விட்டான். மூராது இந்துஸ்தானத்துக்குத் திரும்பிவிட்டதால் ஔரங்கசீப்பின் கீழ் ஒரு படை சென்றது. ஒழுங்காகச் சண்டை நடைபெறவில்லை. ராஜபுத்திரர்களும் மொகலாயர்களும் சேர்ந்து சுட ஆரம்பிக்கவும் உஸ்பெக்குகள் போர்க்களத்தை விட்டு ஓடலானார்கள். ஔரங்கசீப் பால்க்கினுள் வெற்றி வீரனாய் நுழைந்தான். அதற்கு மாதுசிங் ஹாதா என்ற ராஜபுத்திரனைத் தலைவனாக்கினான். ஔரங்கசீப் மேலும் செல்ல யத்தனிக்கையில் மிகவும் சங்கடப்பட்டுத் தோல்வியைக் கண்டான். திரும்பும்பொழுது அவனுடைய சேனைகள் மிகவும் கஷ்டமடைந்தன. அங்கு நிறுத்தப்பட்டிருந்த ராஜபுத்திரர்கள் உண்ண உணவும் ஒதுங்க நிழலுமின்றி மாண்டார்கள். இம்முயற்சியும் சுமார் 4 கோடி ரூபாய்ச் செலவோடு முடிவடைந்தது.

1657 செப்டம்பரில் ஷாஜஹான் நோய் வாய்ப்பட்டார். இது பலவித வதந்திகளைக் கிளப்பிவிட்டது; பொது ஜனங்களிடைப் பரபரப்புண்டாக்கியது. பட்டத்திற்கு யார் வருவதென்ற போட்டாப் போட்டிச் சண்டைகள் ஏற்பட்டன. தன்னுடைய சகோதரர்களான தாதா, ஷுஜா, மூராது என்பவர்களைக் கொன்று ஔரங்கசீப் எவ்வாறு பட்டத்திற்கு வந்தான் என்பது யாவரும் அறிந்ததே. பீஜப்பூர், கோல்கொண்டா ராஜ்யங்களை எதிர்த்து எவ்வாறு நெடுநாள் சண்டை செய்தான் என்பதும் ஏற்கெனவே சொல்லியாகி விட்டது. 250 வருஷக் கடும் நடவடிக்கைகளுக்கப்புறம் இவைகள் சாம்ராஜ்யத்தோடு சேர்க்கப்பட்டன.

ஔரங்கசீப் தன்னிடம் இந்துச் சேனாதிபதிகளை வைத்திருந்தானென்றால் அவனுடைய இந்து எதிரியான 'சிவாஜியும் தன் கீழ் ஏராளமான முஸ்லீம் படை வீரர்களை வைத்திருந்தான். அவர்களில் தளபதி சித்தி ஹல்லால், நூர்கான் போன்ற சிலர் உயர்ந்த பதவிகளையும் வகித்து வந்தார்கள். சிவாஜியின் கடற்படையில் சித்தி சம்பால், சித்தி மிஸ்ரி, தௌலத் கான் என்ற கப்பற்படைத் தலைவர்களிருந்தனர்.'[44]

நான் இதுகாறும் சரித்திர ஆராய்ச்சியில் சுற்றி யலைந்த நோக்கம் இந்திய முஸ்லீம் அரசர்கள் தங்களுக்குள் சண்டையிடுவதைத் தவிர வேறொன்றும் செய்யவில்லை என்பதைக் காட்டுவதற்காகவல்ல. உண்மையில் அவர்கள் அரும்பெருங் காரியங்களைச் சாதித்திருக்கிறார்கள். அவர்கள் ஒரு சாம்ராஜ்யத்தை உருவாக்கினார்கள்; அச் சாம்ராஜ்யம் சிறப்பின் சிகரத்தையடைந்தது. அவர்கள் கலைகளுக்கு ஆக்கம் அளித்தார்கள். இந்திய தேசிய ராஜ்யமொன்று மெள்ள மெள்ளத் தோன்றுவதற்கு அவர்களே காரணம். அக்காலங்களில் எங்கும் இருந்த தேசீய ராஜ்யங்கள் போன்றே இதுவும் ஏற்பட்டது. முஸ்லீம்கள் இந்துக்களோடு சண்டை போட்டதைக் காட்டிலும் முஸ்லீம்களே முஸ்லீம்களோடு அதிகமாகச் சண்டை போட்டார்கள் என்பதைக் காட்டவே மேற்கூறிய உதாரணங்களை எடுத்துக் காட்டினேன். சென்ற அறுநூறு வருஷ காலமாக முஸ்லீம்கள் இடைவிடாது இந்துக்களோடு போராடி அவர்களைக் கொடுமைப்படுத்தினார்கள் என்றும் அதன்

44. Mehta & Patwardhan: *The Communal Triangle*, p. 18.

பயனுக ஒரே வெறுப்பும் கடுகடுப்பும்தான் மிஞ்சியிருக்கின்றன என்றும் அவைகளை மனத்தினின்று துடைப்பதோ மறப்பதோ இயலாதென்றும் சிலர் நினைப்பதெல்லாம் சரித்திர உண்மைகளைத் தவருக உணருவதன் பலன்; ஒரு தலைச் சார்பான பார்வையின் கோளாறு.

சமீப காலங்களில் பிரிட்டிஷ் படைகளில் சேர்ந்த இந்திய வீரர்கள் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்காகக் கிழக்கே சைனு, மலாயா, பர்மாவுக்கும், மேற்கே அரேபியா, பாரசீகம், ஆப்கானிஸ்தானம், எகிப்து, துருக்கி, சிரேனெய்க்கா, திரிப்போலி, இன்னும் ஐரோப்பா முதலிய இடங்களுக்கும் அனுப்பப்பட்டிருக்கின்றனர். துருக்கி சாம்ராஜ்யத்தை அழிப்பதற்கு முஸ்லீம் வீரர்கள் சண்டை போட்டு உதவியிருக்கிருர்கள். தாங்கள் சண்டை தொடுத்த ராஜ்யங்களும் நாடுகளும் இஸ்லாமைச் சேர்ந்தவையல்லவா என்ற விஷயம் இவர்களைச் சிறிதும் தடுத்ததாகத் தெரியவில்லை. இதில் வியப்பதற்கொன்றுமில்லை. இந்தியாவுக்கு வெளியிலுள்ள இஸ்லாமின் சரித்திரத்தைப் புரட்டிப் பார்த்தோமானுல் முஸ்லீம்கள் முஸ்லீம்களோடு சண்டையிட்டதையும் ஒரு முஸ்லீம் நாடோ அல்லது அரசனே மற்ருெரு முஸ்லீம் நாடு அல்லது அரசனைத் தோற்கடித்து வென்றதையும் ஏராளமாய்க் காணலாம்.

முஸ்லீம்கள் முஸ்லீம்களைக் கொல்லக்கூடாதென்று நபிகள் நாயகம் விதித்திருக்கிருர். அவர் உயிரோடிருக்கும்போதே இது விஷயமாக ஒரு கேள்வி எழுப்பப்பட்டது. அதாவது ஒருவன் சண்டை போட்டுக்கொண்டிருக்கும்போதே தான் முஸ்லீம் என்று சொல்லுகிருன். ஆனுல் அவன் வார்த்தைகளை நம்புவதற்கில்லை. இந்த நிலைமையில் அவனை விட்டு விடுவதா என்பதே அக்கேள்வி. அதற்கு நபிகள் நாயகம் 'எப்பொழுது ஒரு மனிதன் தன்னை ஒரு முஸ்லீம் என்று கூறுகிருனே அப்போதவனைக் கொல்லக்கூடாது, காப்பாற்ற வேண்டும்' என்று கூறினுர். அவர் இறந்த உடனே அவரோடு கூடப் பழகியவர்களாலும் அவரது நேர் சிஷ்யர்களாலும்கூட இந்தக் கட்டளை மறக்கப்பட்டதாகவும் மீறப்பட்டதாகவும் தெரிகிறது. ஹஸ்ரத் உஸ்மான் மூன்ருவது கலிபா. அதுமட்டுமல்ல, நபி நாயகத்தின் இரு பெண்களை மணந்துகொண்டதால் அவருக்கு நெருங்கியவருமாவர். அவருக்கு எதிராகக் கலகஞ்செய்த முஸல்மான்களால் அவர் கொல்லப்பட்டார். நாலாவது கலிபா ஹஸரத் அலி, நபி நாயகத்திற்கு மற்ருெரு மருமகன். இவர் நபி நாயகத்தின் விதவை ஹஸரத் ஆய்ஷாவோடு போரிட வேண்டியிருந்தது. இவரும் ஹஸரத் உஸ்மானைப் போல முஸல்மான்களால் கொல்லப்பட்டார். ஓமய்யாது ஏசிதுவைக் கலிபாவாக்க முயன்ற முஸல்மான்களால் ஹஸரத் அலியின் குமாரர்கள் கொல்லப்பட்டனர். தீர்க்கதரிசி இறந்த சில வருஷங்களுக்குள்ளேயே நிலைமை இப்படி இருந்ததென்ருல், அதுவும் முதன் முதலில் முஸ்லிமானவர்களுக்குள்ளும்—ஹஸரத் அலிதான் தீர்க்கதரிசியிடம் நேராக இஸ்லாமை ஏற்றுக்கொண்ட முதல் வாலிபர்—அவருடன் கடைசிவரையிருந்தவர்களுக்குள்ளும் நிலைமை இப்படி யிருக்குமானுல், பிந்திய முஸ்லீம்கள், முஸ்லீம்களோடு சண்டை போடலாம் என்பது புரிவதற்கு எளிதான விஷயமே.

ஆதிகாலத்திய முஸ்லீம்களுக்குள் ஏற்பட்ட சண்டைகளை விட்டு விடுவோம். பிந்திய முஸ்லீம்களுக்குள் ஏற்பட்ட சண்டைகளுக்குக் காரணம் இஸ்லாமைப் பரப்புவதோ அல்லது காப்பாற்றுவதோ அல்ல. இஸ்லாம் ஒரு மதம் என்ற முறையில் அச்சண்டைகளுக்கு அது ஒரு தூண்டுகோலாயிருக்க

வில்லை. இந்தியாவின்மீது படையெடுத்து இந்தியாவினுள் அவர்கள் சண்டையிட்டுக் கொண்டதற்கும் இஸ்லாம் மதம் காரணமல்ல. நாடு பிடித்த ஒவ்வொருவனும், அரசனான ஒவ்வொருவனும், சக்கரவர்த்தியான ஒவ்வொருவனும் தான் ஆளப்புகுந்த நாட்டின் நிலைமைகளுக்கும் அங்குள்ள பொது மக்களுக்கும் ஏற்ற முறையில் எப்படி நிர்வாகம் செய்தால் நல்லது என்று நினைத்தானோ அந்த முறையில்தான் அரசு புரிந்தான். நிர்வாகத்தையும் பொதுமக்களுடைய வாழ்வையும் இஸ்லாம் சந்தேகமில்லாமல் பாதித்தது; அரசனுடைய வாழ்வையும் குடிகளுடைய வாழ்வையும் ஒருங்கே பாதித்தது. இந்தியாவிலும் சரி, வெளியிலும் சரி, மண்ணாசை பிடித்த இந்த வேந்தர்களின் நோக்கம் இஸ்லாமைப் பரப்புவதென்பதோ அல்லது காப்பாற்றுவதென்பதோ அல்ல. குறிப்பாக இந்தியாவில் முஸ்லீம் அரசர்களும், பொதுவாக எல்லா முஸ்லீம்களும் சிறுசிறு தீவுகளைப்போல அமைந்திருந்தார்கள். இத் தீவுகள் சிறிது சிறிதாகச் சுற்றிலும் வளர்ந்து விட்டன. இந்தியாவிற்குள் படையெடுக்கவும் நாடு பிடிக்கவும் வந்த அன்னியர்களின் எண்ணிக்கை, முஸ்லீம் அல்லாதாரோடு ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து, மிகக் குறைவே. தற்காலத்தில் முஸ்லீம் ஜனத்தொகையிலுள்ள பெரும்பான்மையோர்—உண்மையில் மிகவும் அதிகமான பேர்—இஸ்லாமைத் தழுவிய இந்தியர்கள்; இந்துக்களாயிருந்து மதம் மாறியவர்களின் சந்ததியார்கள்.

இராணுவ விஷயங்களில் இவ்வளவு நம்பிக்கையும் தோழமையும் ஒத்துழைப்பும் காணும்போது, உள்நாட்டு நிர்வாகத்திலும் தினசரி வாழ்க்கையிலும் பொதுமக்களிடையே இன்னும் எவ்வளவோ அளவளாவுதலை எதிர்பார்க்கலாம்; இதற்குச் சரித்திர உண்மைகள் சான்று பகர்கின்றன.

‘அவர்களுடைய ஆட்சியில் இந்துக்களை வேலைக்கு வைத்துக்கொள்வது அவசியமாயிற்று. மகமது கஜினி இந்துத் துருப்புகளை ஏராளமாக வைத்திருந்தான். மத்திய ஆசியாவிலும் சென்று அவர்கள் போர் புரிந்தார்கள். அவனுடைய இந்துச் சேனாபதி திலகர், மற்றொரு படைத்தலைவனான நியால்டிஜின் என்ற முஸ்லீமை அடக்கினான். குத்புதீன் இந்தியாவில் தங்குவது என்று தீர்மானித்ததும் உள்நாட்டு நிர்வாகம் செய்துவந்த இந்து உத்தியோகஸ்தர்களை அப்படியே வைத்துக் கொண்டான். அவர்களில்லாமல், வரி வசூல் உள்பட ராஜ்ய நிர்வாகம் ஒன்றும் நடைபெறாது. முஸ்லீம்கள் இந்தியாவிற்கு வெளியிலிருந்து தொழிலாளிகளையும் கணக்குப்பிள்ளைகளையும் குமாஸ்தாக்களையும் தங்களுடன் கொண்டு வரவில்லை. அவர்களுடைய கட்டிடங்கள் இந்துக்களால் கட்டப்பட்டவை. இக்கொற்றர்கள் பழைய விதிகளைப் புதிய நிலைமைகளுக் கேற்றவண்ணம் மாற்றிக் கொண்டார்கள். முஸ்லீம் அரசர்களுடைய நாணயங்களை இந்துப் பொற்கொல்லர்கள் செய்தார்கள். அவர்களுடைய கணக்குகள் இந்து அதிகாரிகள் கையிலிருந்தன. இந்துச் சட்ட விஷயங்களைப் பிராமணச் சட்ட அறிஞர்கள் எடுத்துக் கூறினார்கள். அவர்களுடைய எல்லாக் காரியங்களிலும் பிராமண ஜோஸியர்கள் உதவி செய்தார்கள்.’[45] ‘முதல் இப்ரஹீம் அடில்ஷாவின் (கி. பி. 1534—1557) ஆட்சியில் குறிப்பிடத் தகுந்த காரியம் என்னவென்றால் சர்க்கார் கணக்குகள் யாவும் பாரசீகத்தில் எழுதப்படாமல் இந்தியிலேயே எழுதப்பட்டன. கணக்கு வேலைக்கு அநேக பிராமணர்கள் அமர்த்தப்பட்

45. Tarachand: *Influence of Islam on Indian Culture*, pp. 136-7.

டார்கள். அவர்களுக்கு அரசாங்க நிர்வாகத்தில் மிகுந்த செல்வாக்கு இருந்தது. யூசுப் அடில் ஷா ஆட்சி புரியும்போது வரி வசூல் இலாகாவில் இந்துக்கள் மிகுந்த அதிகாரமுள்ளவர்களாக இருந்தார்கள்.'[46]

சுல்தான் முகமது துக்ளக் 'தன்னிடம் அனேக இந்துக்களை உத்தியோகத்தில் அமர்த்தியிருந்தான். நிதி இலாகாவில் ரத்தன் என்ற ஒரு ஹிந்து உயர்ந்த உத்தியோகத்திலிருந்தார். அக்பருடைய நிதி வருமான இலாகா மந்திரி புகழ்பெற்ற ராஜாதோடர்மால் தமது நிர்வாகத்தில், நீடித்து நிற்கும் பல மாறுதல்களைச் செய்தார்; அரசாங்க உத்தியோகஸ்தர்களில் மிக மேலானவர்களில் ஒருவராகக் கருதப்பட்டார். ஔரங்கசீப்பினுடைய நிதி மந்திரி ராகநாதன் என்ற இந்துவாவார்.'[47]

தற்காலத்திலும் இந்திய சமஸ்தானங்களில் இந்துக்களும் முஸல்மான்களும் உயர்ந்த உத்தியோகங்களில் நியமிக்கப்படுகிறார்கள். அவர்களுடைய மதத்தைப் பற்றிய பேச்சே கிடையாது. ஹைதராபாத்தில் உள்ள மகாராஜா சர் கிஷன் பிரசாதையும் முன்பு மைசூரிலிருந்து இப்பொழுது ஜெயப்பூரில் இருப்பவருமான சர் மகமது இஸ்மாயிலையும் குறிப்பிட்டால் போதுமானது.

1857-ல் பிரிட்டிஷாருக்கு எதிராகத் தோன்றிய கலகம் இந்து முஸ்லீம்களின் கூட்டு முயற்சியேயாகும். பேரளவில் டில்லிச் சக்கரவர்த்தியான பகதூர்ஷாவுக்கு ஆதரவாக இருசாராரும் திரண்டு சூழ்ந்தனர். அக்கலகம் வெற்றியடைந்திருக்குமானால் — அம்முயற்சி — பகதூர்ஷாவின் சாம்ராஜ்யத்தை ஏற்படுத்தி அதைப் பலப்படுத்தியிருக்கும். அதனுடைய தோல்வியால் அவர் கைதியாகி நாடுகடத்தப்பட்டதும், இந்தியச் சக்கரவர்த்திகளான மொகலாயரின் வமிசம் அத்துடன் ஒழிக்கப்பட்டதும் எவ்வளவு தூரம் உண்மையோ அவ்வளவு நிச்சயமாக அதனுடைய வெற்றியால் அவரது சாம்ராஜ்யமும் நிலைத்திருக்கக்கூடும்.

1857க்குப் பிந்திய ஆண்டுகளில் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் முஸ்லீம்கள் மிகக் கடுமையாக நடத்தப்பட்டார்கள். குறிப்பாக, உலாமாக்கள் பிரிட்டிஷாருடைய ஆட்சிக்கு முழுமனதுடன் என்றுமே பணிந்தது கிடையாது. ஆளும் வர்க்கமாக இருந்த நெடுங்காலச் சரித்திர அமைப்பைப் பெற்ற முஸல்மான்களுக்கு வெளியிலிருந்துவந்த பிரிட்டிஷாரின் தலையீடு வெறுப்பை உண்டாக்கியது. ஜூலியன் ஹக்ஸிலியின் வார்த்தைகள் மீண்டும் நினைப்பதற்குரியன. இத்தகைய 'வெளி நெருக்குதலே தேசீயத்தை உருவாக்குவதில் மிகப் பெரிய அம்சமாக இருக்கிறது.'[48] ஆகவே இவைகளெல்லாம் சேர்ந்து இந்திய சமுதாயத்தை உருப்படுத்தியதில் ஆச்சரியமொன்றுமில்லை. இந்துக்களும் முஸ்லீம்களும் முழு ஜனத்தொகையில் அதிகமான ஜனங்களால் பின்பற்றப்படுகிற இரண்டு வெவ்வேறு மதங்களைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், இவ்விருபாலாரும் சேர்ந்து, ஒரே இந்திய தேசீய இனமாக அமைந்திருக்கிறார்கள். இதை இந்துக்கள் எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். அது போன்று முஸ்லீம் அறிஞர்களும் இதை அழுத்தமாகக் கூறியிருக்கிறார்கள். முஸல்மான்கள் காங்கிரஸில் ஏராளமாகச் சேருவதை சர் சையது அகமதுகான் தடுத்தாரென்று நம்பப்படுகிறது. இவரும்கூட ஆதியில் இந்தியா ஒரு தேசீய

46. N. N. Law: *Promotion of Learning in India during Muhammedan Rule*, p. 93.

47. Mehta & Patwardhan, op. cit., p. 19.

48. Julian Huxley: *Race in Europe*, p. 3.

சமுதாயத்தைக் கொண்டதென்ற நம்பிக்கையுடனிருந்தார். இந்துக்களும் முஸ்லீம்களும் ஒரு கன்னிப்பெண்ணின் இரு கண்களென்றும் ஒன்றைத் துன்புறுத்தாமல் இன்னொன்றைத் துன்புறுத்த முடியாது என்றும் கருதினர். இந்திய தேசிய காங்கிரஸைச் சேர்ந்த முஸல்மான்களுடைய பேச்சுக்கள், எழுத்துக்களினின்றும் மேற்கோள் காட்டுவது அனுவசியமாகும்.

புகழ்வாய்ந்த வேறு இந்திய முஸல்மான்களுடைய பேச்சுக்களிலிருந்து மேற்கோள் எடுத்துக்காட்டி இந்த இரு தேச விவகாரப் பேச்சை முடிக்கிறேன். முதன் முதலில் சர் சையது அகமதுகானுடைய பேச்சுக்களிலிருந்து இரண்டு இடங்களை எடுத்துக்காட்டுகிறேன். பிறகு நம்மிடையே வாழ்ந்து வரும் பெயர்பெற்ற முஸ்லீம்கள் இருவருடைய பேச்சிலிருந்தும் மேற்கோள் காட்டுகிறேன். 1885-ல் குருதாஸ்பூரில் ஒரு கூட்டத்தில் சர் சையது பின்வருமாறு கூறினர் :

'பண்டைய நாட்களிலிருந்து தேசம் என்ற சொல் ஒரு நாட்டில் வாழ்கிறவர்களுக்கே சொல்லப்பட்டிருக்கிறது. அவர்கள் சில சிறப்பியல்புகளில் வேறுபட்டிருக்கலாம். இந்து முகமதியச் சகோதரர்களே! நீங்கள் இந்துஸ்தானத்திலில்லாமல் வேறு நாட்டிலா வாழ்கிறீர்கள்? நீங்கள் ஒரே நாட்டில் வாழவில்லையா? நீங்கள் எரிக்கப்படுவதும் புதைக்கப்படுவதும் ஒரே மண்ணிலல்லவா? "இந்து", "மகம்மதியன்" என்ற சொற்கள் மத வேற்றுமையை மாத்திரம் குறிப்பன என்பதை மனத்தில் வைத்துக்கொள்ளுங்கள்; மற்றப்படி இந்த நாட்டில் வாழ்கிற இந்து, மகமதியன், அல்லது கிறிஸ்தவன் முதலிய யாவரும் ஒரு தேசத்தைச் சேர்ந்தவர்களே. அப்படியானல் இந்தப் பல்வேறு வகுப்புங்களை ஒரு தேச சமுதாயமென்றுதான் கூறவேண்டும். இந்நாடு நமக்கெல்லோருக்கும் பொது உடைமை. ஆகையால் இதன் நன்மைக்கு நாம் யாவரும் ஒத்துழைக்க வேண்டும்.'[49]

மற்ருெரு சந்தர்ப்பத்தில் லாகூரில் இதே விஷயத்தை எடுத்துச் சொன்னர் :

'தேசம் என்று சொல்லும்போது இந்துக்களையும் மகம்மதியர்களையும் சேர்த்தே சொல்லுகிறேன். ஏனென்றல் அச்சொல்லுக்கு நான் கொடுக்கும் பொருள் அதுதான். நான் அவர்களுடைய மத நம்பிக்கை என்ன என்று பார்த்துக்கொண்டிருக்க வேண்டியதில்லை. அச்சொல்லில் மதத்தொடர்பு ஏதும் காண்கிருேமா? இல்லை. நாம் ஒரே நாட்டில் வாழ்கிருேம்; ஒரே அரசாங்கத்துக்கு அடிமைப்பட்டிருக்கிருேம். நன்மை பெருகினல் எல்லோர்க்கும் ஒன்றுபோல் நன்மை பெருகுகிறது. பஞ்சக்கொடுமை வந்தால் எல்லோரும் ஒன்றுபோல் பஞ்சத்துக்காளாகிருேம். இந்த எல்லாவிதக் காரணங்களாலும் இந்தியாவிலுள்ள எல்லா இனத்தாரையும் ஒரே பெயரால் அதாவது இந்து என்று அழைக்கிறேன். இந்து என்றல் இந்துஸ்தானத்தில் இருப்பவன் என்று அர்த்தம். சட்டசபையில் இருக்கும்பொழுது இந்தத் தேசத்தின் செழிப்பின்மீதே கண்ணுங் கருத்துமாகயிருந்தேன்.' (*Indian Nation Builders—Sir Syed Ahmad Khan*, pp. 41-42)[49]

ஸ்ரீஜத் அதுலானந்தா சக்ரவர்த்தியின் **இந்திய இந்துக்களும் முஸ்லீம்களும்** என்ற புத்தகத்திற்கு முகவுரை எழுதிய ஸர் ஷாபத் அகமதுகான் பெரிய சரித்திர ஆசிரியர். பல்லாண்டுகளாக இந்தியாவில் ஏற்பட்ட இந்திய சமூகக் கலாசார அபிவிருத்தியைச் சுருக்கமாகக் கூறிவிட்டுப் பின் கண்ட முடிவுகளைத் தெரிவிக்கிருர் :

49. Quoted in *Pakistan Examined*, by Rezaul Karim, p. 117.

'தேசீய காரியங்களின் ஒவ்வொரு துறையிலும் இருவகுப்பாரிடையே மிகுந்த ஒத்துழைப்பும் நெருங்கிய உறவும் இருந்தன. பொதுவாக நாம் நம்புவதைக் காட்டிலும் அதிகமாகவே இவை அமைந்திருந்தன. இந்த இரு வகுப்பாரிடையேயும், இவ்விரு வகுப்பைச் சேர்ந்த பல பிரிவினரிடையேயும் பரஸ்பர உணர்ச்சியும் ஒருமித்த கருத்தும் இருந்து வந்ததை இந்தியக் கலாசாரம் கூறுகிறது. ஆசியாவில் வேறு எந்த நாட்டிலும் உள்ளதற் கதிகமாக இந்தியாவில் தேசிய உணர்ச்சி பூரணமாக அமைந்திருப்பதை இந்திய மொழிகளிலுள்ள காவியங்கள் எடுத்துக்காட்டுகின்றன. மேல் வகுப்பார், பொது மக்கள், இவர்களுடைய விருப்பங்களையும் சுபாவங்களையும் தூயதாக்கிய இந்தத் தேசிய உணர்ச்சி தேசம் முழுதும் பரவிப் பண்படுத்தியிருக்கிறது. நம்மிடையே அரசியல் வித்தியாசங்கள் இருக்கலாம். அதை நான் ஒன்றும் அசட்டை செய்யவில்லை. இருப்பினும் வாழ்க்கை வளமைகளிலும், பழக்கங்களிலும் எண்ணச் சுழலிலும் பலமான ஒற்றுமை வழிவழியாக வந்துள்ளது. சுமார் ஆயிரம் வருஷங்களாகப் பல நிலைமைகளிலும், தீயிலும், குளிரிலும் உருவாக்கப்பட்டது இவ்வொற்றுமை. இது அழிக்க முடியாதது, நித்தியமானது.'[50] இப்பொழுது நமக்குத் தேவையென்ன? ஸர் ஷாபத் மேலும் கூறுகிறார்: 'சமூக உண்மையை அரசியல் உண்மையாகக் கருதுவதும், தேசிய அமைப்பில் காணும் நோய்களை அரசியல் சீர்குலைவு எனக் கருதுவதுமான குறுகிய எண்ணத்தை, இந்து முஸ்லீம் கலாசாரத்தை வேரூன்றிப் படிப்பதன்மூலம், திருத்திக்கொள்ளவேண்டும். சிறப்புற்றோங்கிய முன்னாளில் இந்திய எண்ணங்களையும் ஆர்வங்களையும் அமைத்த சக்திகளை நன்கு உணர வேண்டும்.'[51]

சர் சுல்தான் அகமதும் தம் அபிப்பிராயத்தை அழுத்தமாகவே கூறியிருக்கிறார்: 'இந்து முஸ்லீம்களுடைய தோழமை சரித்திர சம்பந்தமானது. மொகலாயர்கள் காலம் தொடங்கி நூற்றாண்டுகளாக இருந்து வந்திருக்கிறது. இப்போதைய வகுப்பு வேற்றுமைகள் நெடுங்காலத்திய தோழமையைக் கெடுக்கப் பார்க்கின்றன. இந்துஸ்தானத்தின் ஒற்றுமையைக் குலைப்பவர்கள், இந்நாட்டில் முஸ்லீம் ஆட்சியால் ஏற்பட்ட ஓர் ஆக்கவேலையைச் சீரழிப்பதாகும் என்பதை உணருகிறார்களில்லை. இன்றைய இந்தியர்கள் அவர்களது முன்னோரைக் காட்டிலும் மிகுந்த அறிவு பெற்றிருக்கிறார்கள். ஆனால் ஆரியப் போக்கிலும், மகமதிய சாரசன் போக்கிலும் ஒற்றுமைக்கு என்ன பொருள் என்பதை இவர்கள் மனத்தில் பிரித்தறிய ஆரம்பித்துவிட்டால் அப்புறம் இவர்களுடைய உயர்ந்த கருத்துக்களெல்லாம், மங்கி மறைந்துவிடுகின்றன. நெடுங்காலத்திற்கு முன்பே இந்தியத் தலைவர்களும் அறிஞர்களும் இரு மதங்களிடையே ஒற்றுமையை நிறுவ முயன்றனர். இளவரசர் தாராஷெக்கா இவைகளை ஒன்று சேரும் இரு நதிகள், **மஜ்மா-உல்-பாஹ்ரீன்** எனக் கூறினர். கபீரும் நானக்கும் இவைகளை ஒன்றுபடுத்த முயன்றார்கள். தங்களுடைய தோத்திரப் பாக்களில் "கருணைவள்ளலாம் அல்லா, ராமன்" என இருவரின் நாமங்களையும் சேர்த்துக்கொண்டனர். இந்து முஸ்லீம் கலைஞர்கள் பொதுக்கலைகளையும், தொழில்களையும் உண்டுபண்ண முனைந்தார்கள். இக்கலைகள் இந்து முஸ்லீம் இருசாராருடைய இதயத்தையும் ஒருங்கே கவர்ந்தன. இத்தொழில்கள் இவ்விரு வகுப்பாருக்கும் உபயோகமாயின. எது

50. Atulananda Chakravarti: *Hindus and Musalmans of India*, pp. xix-xx. 51. *ibid.*, p. xvi.

மகிழ்ச்சி? எது அழகு? என்பது பற்றி இவர்களிடையே ஒரேவிதக் கருத்துக் கள் தோன்றலாயின. சரித்திரத்தின் வாயிலாகத் தனக்கென்று கட்டப் பட்ட தேசவரலாறு என்ற மாளிகையை இன்றைய இந்தியன் இடிக்கப் புறப் பட்டிருக்கிறான். சரித்திரத்தை மதிக்கத்தெரியாத இவன் அதற்குக் கெட்ட பெயரைச் சூட்டுகிறான்.

'இந்துமுஸ்லீம்களுக்கிடையே எத்தனையோ பொது அம்சங்களிருப் பினும் அவர்களுக்கிடையே காணப்படும் ஒற்றுமை சிதறுவதானது ஆச்சரிய மாகவே யிருக்கிறது. இப்பொது அம்சங்களை வைத்துக் கொண்டு ஒற்றுமை யின் அடிப்படையை விரிவாகச் செய்வது நமது கடமையாக இருக்க வேண் டும். பொதுக் கலாசாரச் சொத்தான இசை, இலக்கியம், ஓவியம், சிற்பம், இவைகள் மாத்திரம் நம் முந்தையர் நமக்களித்துவிட்டுச் சென்ற அருநிதி யங்கள் அல்ல. இந்துக்களும், முஸ்லீம்களும் எத்தனையோ சண்டைகளில் தோளோடு தோள் நின்று போர்புரிந்ததனால் ஒரு பொது அரசியல் விதியும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. சமூக வாழ்விலோ இவர்களுடைய தொன்று தொட்ட மரபுகளும் பழக்கங்களும் ஒன்றுக்கொன்று பின்னிக் கிடக்கின்றன. பாபர் காலத்தைப் போன்ற அந்தக் காலத்திலேயே இருசாராருக்கும் பொது வான வாழ்க்கை முறைகள் தெள்ளத் தெளிவாக அமைந்து கிடந்தன. பாபர் சக்கரவர்த்தி தமாஷாக இவைகளை "இந்துஸ்தானி முறைகள்" எனக் கூறினார். இந்துஸ்தானி வழக்கங்களில் இந்து முஸ்லீம் இருசாராருடைய தன்மைகளும் கலந்திருந்தன. பிறகு உருது தோன்றியது. ராணுவத்தி லிருந்து அது தொடங்கியது. எல்லாவற்றிலும் மேலாகப் போற்றப்பட்ட மதத்திலும் கூட ஒன்றையொன்று பாதித்தன. முஸ்லீம் இந்துமதத்தைப் புதிய போக்கில் திருப்பினான். அதற்குப் புதிய சாயம் கொடுத்தான். அவ னுடைய மதமும் இந்தியச் சாயலை அடைந்தது. இமயமலைக் கப்பாலுள்ள முஸ்லீம்கள் இதைத் தெற்றெனக் கண்டார்கள்.

'இந்தியாவிலுள்ள முஸ்லீம் இந்திய மகனாகி விட்டான். டில்லி சுல்தனத் தையும், கஜினி சாம்ராஜ்யத்தையும் குத்புதீன் பிரித்த பொழுதே இந்தப் பாதை மாற்ற முடியாதபடி வகுக்கப்பட்டுவிட்டது. ஒரு முஸ்லீம் அரசன் தன் குடிகளில் எந்தப் பகுதியினரையும் வித்தியாசமாகப் பாராட்டக் கூடாது என்பது ஒரு கட்டளை. அது தெளிவாக வரையறுக்கப்பட்ட சட்டம். "எல்லா மதத்தினரையும் ஆதரவோடு கவனிக்க வேண்டும். சில பகுதி யினரைத் தன் பிள்ளையாகவும் சிலரைச் சக்களத்தியின் பிள்ளையாகவும் நடத்தக்கூடாது" என்று ஆணையிடப்பட் டிருக்கிறது. பாபருடைய வாழ்க் கைக் குறிப்புகளோடு அபுல் பாஸலுடைய **அயினி-அக்பாரியை** ஒப்பிடும் போது இந்தியாவைத் தாய்நாடாகக் கருதுவதும் அதன்மீது அன்பு செலுத்து வதும் எவ்வாறு தோன்றி வளர்ந்தன என்பதைக் கவனிக்க மகிழ்ச்சி யூறு கிறது. சாம்ராஜ்யத்தைத் தோற்றியவர்—"இந்துஸ்தானத்தைப் போற் றும்படியாக அதில் இன்பங்கள் ஒன்றும் இல்லை" என்று குறை கூறுகிறார். அக்பர் பட்டத்திற்கு வருவதற்குள்ளாக இந்த அபிப்பிராயம் மலையேறி விட் டது. அக்பரது சரித்திர ஆசிரியன் "இந்துஸ்தானத்தின் அழகுகளில்" பர வசமடைகிறான். "தன்னுடைய சொந்த நாட்டின் மீதுள்ள பாசத்தால்" அவன் மனப் போக்கு மாறியதற்காக மன்னிப்புக் கோருகிறான்.'[52]

52. Sir Sultan Ahmad: *A Treaty between India and the United Kingdom*, pp. 60-1.

## 6. முன்னுரை

இந்தியாவோடு முஸ்லீம் சம்பந்தம் பெற்றிருந்த நீண்ட காலத்தில், எவ்வாறு முஸ்லீம் அரசர்களும், கலைஞர்களும், பக்கிரிகளும், இதரரும் இந்துக் கலாசாரத்தை எவ்வளவு தூரம் தமதாக்கிக்கொண்டார்களென்பதைக் கண்டோம். இந்துக்களும், குறிப்பிடத்தகுந்த அளவு அவர்களது கலாசாரத்தைக் கைக்கொண்டார்கள். இரு சாராரும் கலந்தொன்ருகாவிட்டாலும், அவர்களிடையே ஒருவர்க்கொருவர் நெருங்கிப் பழகவேண்டிய சந்தர்ப்பங்களும், பொதுநலக் காரியங்களும் நாளுக்குநாள் விருத்தியாகிக்கொண்டே வந்தன. இதன் பலனுக நாளடைவில் இந்துஸ்தானிக் கலாசாரம் வளர்ந்தோங்கியது. அரசியலில்—தற்கால அர்த்தப்படி—இது ஒரு தேசத்தைச் சிருஷ்டிக்கக்கூடும். இந்துக்களும் முஸ்லீம்களும் ஒருசேர அடிமைப்பட்ட பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் அப்படித்தான் ஏற்பட்டது. இந்துக்கள், இந்து முஸ்லீம்களை ஒரு தேசீய சமுதாயமாகக் கருதினுர்கள். முஸ்லீம்களும் அவ்வாறுதான் கருதி வந்தார்களென்பதற்கு முஸ்லீம் தலைவர்களுடைய அபிப்பிராயத்தை எடுத்துக் காட்டியிருக்கிறேம். அதே சமயத்தில், அகில இந்திய முஸ்லீம் லீகும் அதன் தலைவர்களும், முஸ்லீம்கள் இந்துக்களினின்று வேறுபட்ட தனித் தேசீய சமுதாயத்தினர் என்று இன்று அழுத்தமாகக் கூறி வருகிருர்களென்பதையும் நாம் அறிவோம். இந்த நிலைமைக்குக் காரணம் என்ன? இதற்குப் பதில் கூறுமிடத்து நாம் சரித்திர உண்மைகளைச் சிறிது கூர்ந்து நோக்கவேண்டியிருக்கிறது.

முஸ்லீம் மன்னர்களின் போக்குப் பொதுவாகக் குடிமக்கள் யாவரிடத்தும் சமரசமாக இருந்தது. ஒவ்வொரு சமயம் சில மன்னர்கள் மதவெறியர்களாக நடந்துகொண்ட போதிலும், இந்துக்கள் நியாயமாக நடத்தப்படவேண்டுமென்ற முயற்சியும் ஆதியிலிருந்து நீடித்திருந்தது என்று திண்ணமாகக்கூறலாம். பழங்காலச் சம்பவமொன்றை இங்குச் சொல்லலாம்: மகம்மது பின் காசிம் பிராம்மணுபாத்தை ஜெயித்தவுடன் அங்குள்ளவர்கள் தங்களுக்குத் தங்கள் கடவுளை வணங்குவதற்குச் சுதந்திரம் வேண்டுமென்று கேட்டார்கள். அவன் அது விஷயத்தை இராக் கவர்னர் ஹஜ்ஜாஜிடம் தெரிவித்தான். அவனும் பின் கண்ட பதிலை அனுப்பினுன்: 'அவர்கள் (இந்துக்கள்) பணிந்து விட்டதாலும், வரிகள் செலுத்துவதற்கு இணங்கி விட்டதாலும், அவர்களிடம் வேறெதையும் எதிர்பார்க்கக்கூடாது. நமது பாதுகாப்புக்குள் அவர்கள் வந்து விட்டபடியால், அவர்களுடைய உயிர்கள் மீதோ சொத்துக்கள் மீதோ, நாம் கைவைக்கக்கூடாது. அவர்களுடைய தேவதைகளை வணங்க அவர்களுக்கு அனுமதிகள் வழங்கப்பட்டிருக்கின்றன. அவரவர் மதத்தைக் கடைப்பிடிப்பதை யாரும் தடுக்கக்கூடாது. அவர்களுடைய வீட்டில் அவர்களுடைய இஷ்டம்போல வாழலாம்.'[1] இது நபிகள் நாயகத்தின் மத போதனைக்கு ஒத்ததாக இருந்தது. ஆதி நாட்களில் கலிபாக்களும், தங்களுக்கு அடங்கி, **ஜெஸியா** வரி செலுத்த ஒப்புக்கொண்ட முஸ்லீம் அல்லாதாரை இவ்வாறுதான் நடத்தி வந்தார்கள்.

முஸ்லீம் அரசர்கள் தங்களுக்குச் சரியென்று தோன்றியபடி ஆட்சி செய்யப் பின் வாங்கியதில்லை; முஸ்லீம் மத குருக்கள் அவசியமென்றேே சரி

1. Ishwari Prasad: *A Short History of Muslim Rule in India*, p. 46.

யென்றே கருதினாலும், கருதாவிட்டாலும் அரசர்கள் அதைப் பொருட்படுத்த வில்லை; அரசாட்சியில் மதம் தலையிடாமல் செய்து விட்டார்கள். வட, தென் இந்தியா முழுவதையும் ஆண்ட அல்லாவுதீன் கில்ஜி, அரசாட்சி விஷயங்களில் உலாமாக்கள் தலையிடுவதை எதிர்த்தான்; அரசாங்கச் சட்டம் அரசனுடைய ஆணைக்குக் கட்டுப்பட்டிருக்க வேண்டும்; நபிகளின் சட்டத்திற்கும் அதற்கும் தொடர்பேயில்லை என்று விதித்தான். குற்றவாளிகளைத் தண்டிப்பதும், நேர்மையற்ற அதிகாரிகள் அல்லது லஞ்சம் வாங்கிய அதிகாரிகளை அங்க ஹீனப்படுத்துவதும் நியாயம் என்று நிலைநாட்டினான். இவைகளெல்லாம் பொதுச் சட்டத்திற்கு விரோதமானவை என்று காஜி கூறியதை இவன் அசட்டை செய்தான்; அரசனது முறைமை என்ன என்பதைக் காஜிக்குத் தெளிவுற விளக்கினான்: 'ஆயிரக்கணக்கான மக்களை நாசப்படுத்தக்கூடிய கலகங்களை அடக்குவதற்கு நான் இத்தகைய உத்தரவுகள் போடுகிறேன். ராஜ்யத்திற்கும், ஜனங்களுக்கும் இது நன்மை யளிக்குமென்று நான் கருது கிறேன். மனிதர்கள் முன்பின் யோசிக்காமல், மதிக்காமல், எனது ஆணை களுக்குக் கட்டுப்படாமல் திரிகிறார்கள். அவர்களை அடக்குவதற்கு நான் கடு மையான சட்டங்களைப் போடவேண்டியவனாக இருக்கிறேன். இது சட்டரீதி யானதோ, அல்லதோ, அது எனக்குத் தெரியாது. எது ராஜ்யத்துக்கு நல்லது என்று நினைக்கிறேனோ, எது அவசர நிலைமைக் கேற்றது என்று நினைக் கிறேனோ அதை நான் விதிக்கிறேன். தீர்ப்பு நாளில் எனக்கென்ன கிடைக்கு மென்பது பற்றி எனக்கொன்றும் தெரியாது.'[2] நன்மையை விரும்பிக் கண்டிப் பான ஆட்சி நடத்திய அரசர்கள் யாவரும் இவ்வாறே சொல்லி வந்திருக் கிறார்கள். ஒரு குறிப்பிட்ட மதத்தைச் சார்ந்தவன் என்ற முறையிலும் அனேக மதங்களையும் பழக்க வழக்கங்களையும் கொண்ட ஜனங்களை ஆள்கிற அரசன் என்ற முறையிலும், அவனுடைய காரியங்கள் வெவ்வேறு வகை யாக இருக்கின்றன.

பாபர் எழுதி வைத்துச் சென்ற—முன்னமேயே எடுத்துக் காட்டிய தாகிய—ஆணைகளை மொகலாயச் சக்கரவர்த்திகள் பின்பற்றியதால், அவர் களது ராஜ்யம் விரிவடைந்தது. அதை விட்டு விலகியதும், குழப்ப நிலைமை கள் ஏற்பட்டு ராஜ்யம் சீர்குலைந்தது. இந்துக்களுடைய எண்ணங்களைக் கண்ணியமாகக் கருதியதை வெளி நாட்டாரும் கண்டிருக்கிறார்கள். 'ஈத் சந்தர்ப்பத்தில் பசுக்கொலை செய்யப்படவில்லை என்று தெரிய வருகிறது. "அன்று (ஈத்) வெள்ளாடு வாங்கக் கூடியவன் அதைக் கொன்று அன்றையத் தினத்தைக் கொண்டாடுவான்" என்று நமக்குச் சொல்லப்படுகிறது.'[3] பல இனத்தாரும் கலந்தொன்றாகாவிட்டாலும் அவர்கள் அளவளாவி வாழ்ந் தார்களென்பதில் ஆச்சரிய மொன்று மில்லை.

திரு. எப். கே. துரானி, இந்த நிலைமையைச் சுருக்கிக் கூறுகிறார். அவர் கூறியதை அப்படியே எடுத்துக் காட்டுவதைக் காட்டிலும் நான் அதிக மாக ஒன்றும் செய்ய முடியாது:

'புராதன இந்துக்கள் ஒரு தேசீய இனத்தாரல்ல; சமுதாயக்கட்டு அற்ற ஜனங்கள்; வெறும்மந்தை.

'இந்திய முஸ்லீம்களும் அப்படித்தான்; எவ்வகையிலும் சிறந்தவர் களல்ல. இஸ்லாம், அதன் ஸ்தாபகர் காலத்திலேயே ஒரு ராஜ்யமாயிற்று.

2. Ishwari Prasad, op. cit., p. 126.
3. *ibid.*, p. 698, quoting Pelsaert, p. 74.

இஸ்லாம், சரியாக வரையறுக்கப்பட்ட அரசியல் சித்தாந்தத்தை உடையது. இஸ்லாத்தை ஓர் அரசியல் சித்தாந்தம் என்று கூடச் சொல்லுவேன்......... இஸ்லாம் ஒரு ஜனநாயக ராஜ்யம். ஒவ்வொரு முஸ்லீமுக்கும் அதைக் காப்பாற்றும் பொறுப்பு உண்டு. **"லா இஸ்லாமா-இல்லா பேஜாமேத்-ஹு :** கட்டுப்பாடுற்ற சமூக மில்லாமல் இஸ்லாம் கிடையாது" என்று பேரரசர் ஓமர் கூறுகிருர். துரதிர்ஷ்டவசமாக, இஸ்லாமிய ராஜ்யம் நீடித்திருக்கவில்லை. ஓமய்யாத்துகளும் அப்பாசித்துகளும் அதை அழித்து விட்டார்கள். அதை **முல்க்** அல்லது கொடுங்கோலான, பரம்பரை முடியாட்சியாக்கி விட்டார்கள்.[4]

'முஸ்லீம்கள் இந்தியாவைக் கைப்பற்றிய காலத்தில், மதமும் அரசாட்சியும் வெவ்வேறு விஷயங்களென்பது, உலகெங்குமுள்ள முஸ்லீம்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட கொள்கையாகி விட்டது. இந்தியாவை ஜெயித்த மனிதர்கள் ஏதாவதொரு முஸ்லீம் ராஜ்யத்தைச் சேர்ந்த தேசிய ராணுவத்தினரா? இல்லை. சாம்ராஜ்யப் பைத்தியம் கொண்ட ஏதோ ஒரு கொடுங்கோலனின் கூலிப்படைகளாவர். அவர்கள் இந்தியாவில் நிறுவிய ராஜ்யமும் முஸ்லீம் தேசிய ராஜ்யமல்ல; ஒரு கொடுங்கோலன் அல்லது அவனுடைய சகாக்களுக்காகக் காக்கப்பட்டுச் சுரண்டப்பட்டதாகும். இந்தியாவில் ஏற்பட்ட முஸ்லீம் சாம்ராஜ்யம் எந்தஅளவில் முஸ்லீம் சாம்ராஜ்யமாய் இருந்ததெனில் அதன் அரசனு யிருந்தவன் தன்னை ஒரு முஸ்லீம் என்று கூறிக்கொண்ட அளவிற்கே; முஸ்லீம்கள் இந்தியாவை ஆண்ட நெடுங்காலத்தில் தேசீய உணர்ச்சியை வளர்க்கவில்லை. ஆதியிலிருந்து அந்தம்வரை தேசீய உணர்ச்சிக்கு ஏகாதிபத்தியக் கொள்கை எதிரியாக இருந்தது.........[5]

'இருவினத்தாரை—அக்கம் பக்கத்தில் வாழ்ந்து, ஏகாதிபத்தியக் கொடுமைக்கு ஒருங்கே அடிமைப்பட்டுத் தேசீய உணர்ச்சியோ, ஆர்வமோ அற்றவர்களாக இருந்த இந்து முஸ்லீம்களை நாம் காண்கிருேம்.........

'இந்து முஸ்லீம்களுடைய மதக் கருத்துக்கள், நம்பிக்கைகள், பழக்கங்கள் ஆகியவை ஒன்றுக்கொன்று இணங்கி வராதவை என்பதாக எவ்வளவோ எழுதப்பட்டிருக்கின்றன......அவையெல்லாம் இருந்தும்கூட இவ்விரு இனத்தாருடைய மதங்களிலும் உள்ள ஒரு சிறப்பியல்பு இவர்களை அனேக நூற்றுண்டுகளாக அளவளாவி வாழச்செய்திருக்கிறது. பிரிட்டிஷாருடைய ஆட்சியில், தாங்கள் கற்ற கல்வியையும் பட்ட கஷ்டத்தையும் இவர்கள் துடைத்தெறிவார்களாஞல், பழைய இனிய மனேபாவங்கள்—ஒரு நூற்றுண்டுக்குமுன் இவர்களது முன்னேர்களிட மிருந்த நல்ல மனேபாவங்கள்—மீண்டும் தொடங்கி, முன்போல நல்ல அயலார்களாகவும், ஒரு ராஜ்யத்தின் நல்ல குடிகளாகவும் இவர்கள் வாழமுடியும். இவ்விரு மதங்களிலு முள்ள அச்சிறப்பியல்பு என்ன? அதுதான் சமரசத்தன்மை.'[6]

இப்பொழுது, ***பிரித்து ஆட்சி செய்*** என்ற பழஞ் சொல்லைப் பார்ப்போம். இது மிகமிகப் பழஞ் சொல். இது எல்லா நாடுகளிலும், எல்லாக் காலங்களிலும், எல்லா ஏகாதிபத்தியத் தலைவர்களாலும் கையாளப்பட்ட முறை. எப்பொழுது அன்னிய ஆட்சி சரியென்று ஒப்புக்கொள்ளப்பட்டு விட்டதோ,

4 F. K. Khan Durrani: *The Meaning of Pakistan*, pp. 34-5.
5. *ibid.*, pp. 35-6.
6. *ibid.*, pp. 36-7.

அப்பொழுது, இந்தப் பிரித்தாளும் சூழ்ச்சியைப் பின்பற்றுவதற்காக அவ் அன்னியனைப் பெரிய குற்றவாளி என்று சொல்ல முடியாது. பழைய ஏகாதிபத்தியங்களைக் காட்டிலும் பிரிட்டிஷார் எத்தகைய சிறப்பான பாதையிலும் செல்லவில்லை என்றால், அதற்காக அவர்களைக் குறைகூறுவதில் பயனில்லை. மௌண்ட் ஸ்டுவார்டு சொன்ன புத்திமதியை அவர்கள் பின்பற்றினார்கள்: '**பிரித்து ஆட்சி செய்** என்பது ரோமானியரின் நல்வாக்கு. நமக்கும் அதுவே நல்வாக்காக இருக்கவேண்டும்.' இந்தியாவில் அவர்கள் எதைச் செய்தாலும் மிகப் பெரிய லட்சியத்தினாலும், கலப்பற்ற பரோபகாரத்தாலும் தூண்டப் பட்டே அதைச் செய்வதாகச் சொல்லுவது நமக்கு எரிச்சலைக் கிளப்புகிறது. இன்று, இந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்றுபட முடியாதபடி வேறுபட்டிருப்ப தாகத் தோன்றுவதற்குப் பிரித்தாளும் சூழ்ச்சியே பெரிதும் காரணம். கிழக் கிந்தியக் கம்பெனியின் நாட்களில், பிரிட்டிஷார் இந்தியாவை ஆளத் தொடங் கிய உடனேயே இச் சூழ்ச்சியும் ஆரம்பிக்கப்பட்டது. மாஜி இந்தியா மந்திரி எல். எஸ். அமெரியினுடைய பேச்சுக்களிலும், இந்திய சர்க்காரோடு சம்பந்தப் பட்ட உயர்தர பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களுடைய பேச்சுக்களிலும், இச் சூழ்ச்சியின் வேலைத் திறத்தை நாம் காணக்கூடும். 'இந்துக்களும் முஸ்லீம் களும் அளவளாவி, அண்டை வீட்டுக்காரர்களைப் போல நல்ல குடிகளாக வாழும்' மனோபாவத்தை மீண்டும் ஏற்படுத்துவதற்கு இச்சூழ்ச்சி குறுக்கே நிற்கிறது.

இவ்விதமாக இந்தியாவில் காணப்படும் வகுப்புவாதப் பிரசினை, இந்து முஸ்லீம் இவ்விரு சாராரிடையேயுள்ள பிரசினையாக மட்டும் இருக்கவில்லை. இவர்கள் நினைத்தால், இவர்கள் இஷ்டம்போல இதைத் தீர்த்துக் கொள்ளலா மென்பதில்லை; மூன்றாவது கட்சி யொன்று இருக்கிறது. சில விஷயங்களைக் கவனித்தால் இது மிக முக்கியமான கட்சியாகவும் இருக்கிறது. இக் கட்சி தான் பிரிட்டிஷ் அரசாங்கம். இவ்வாறாக ஒரு வகுப்புவாத முக்கோணம் ஏற்படுகிறது? இந்து முஸ்லீம் கட்சிகள் இரண்டு பக்கங்களாகவும், பிரிட்டிஷ் சர்க்கார் அடிக்கோடாகவும் கொண்டு அமைந்திருக்கிறது. அடிக்கோடு நீளு வதற்குத் தகுந்தபடி இந்து முஸ்லீம்களிடையே வேறுபாடும் விரிவடைகிறது.

## 7. பிரித்தாளும் சூழ்ச்சியும் கிழக்கிந்தியக் கம்பெனியும்

மொகலாய சாம்ராஜ்யம் நலிந்துகொண்டிருக்கும்போது, ஏராளமான அரசர்கள் சுதந்திரம் பாராட்டித் தங்களுக்குள் அடிபிடி நடத்திக்கொண் டிருந்தார்கள். நாடு குழப்பமடைந்திருந்தது. இச்சந்தர்ப்பத்தில், கிழக் கிந்தியக் கம்பெனி இந்தியாவில் ஒரு சாம்ராஜ்யத்தைச் சிறிது சிறிதாக அமைக்க ஆரம்பித்தது. அக்காலம் கம்பெனியின் கவர்னர்களாக வந்த வர்கள் கடைப்பிடித்த கொள்கை என்ன? இந்தக் குழப்ப நிலைமையைத் தங்க ளுக்குச் சாதகமாக முழுதும் பயன்படுத்திக்கொண்டதே. இந்தியர்கள் ஒன்று கூடிப் பிரிட்டிஷாரை எதிர்க்க வராதபடி தந்திரம் பண்ணுவதும், மராட்டி யர்கள், நிஜாம், கர்னாடக நவாபு, இவர்கள் ஒருங்கு கூடாதபடி செய்வதும், பிற்காலத்தில், ஹைதராபாது அரசரும் திப்புசுல்தானும் ஒன்று சேராதபடி தடுப்பதும் கம்பெனி அதிகாரிகளின் நோக்கங்களில் ஒன்றாக இருந்தது. W. M. டாரென்ஸ் சொல்லுகிறார்: 'மால்காம் சொல்லுவதைப்போல

"அதன் மக்களே நமக்கு உதவி செய்திராவிட்டால், இந்துஸ்தானத்தை நாம் அடக்கியிருக்க முடியாது." முதலில், நைஜாமை ஆற்காட்டுக் கெதிராகவும், ஆற்காட்டை நைஜாமுக் கெதிராகவும் கிளப்பிவிட்டார்கள். பிறகு, மராட்டியர்களை முஸ்லீம்களுக் கெதிராகவும், ஆப்கானியரை இந்துக்களுக் கெதிராகவும் தூண்டினர்கள்.'[1] மராட்டியர்களிடையே ஏற்பட்ட வேற்றுமைகளுக்குக் காரணம், மராட்டிய அரசவையில் பிரிட்டிஷார் செய்த சூழ்ச்சிகளே. 'மராட்டியச் சரித்திரத்தில், மராட்டிய சாம்ராஜ்யத்தின் எழுச்சிக்கும் வீழ்ச்சிக்கும் காரணமான இரு பிரமுகர்கள் இருக்கிறார்கள். சிவாஜியின் வீரமும் அறிவொளியும் சாம்ராஜ்யத்திற்கு அடிகோலின; ரகுநாத ராவின் விவேகமின்மையும் சூழ்ச்சியும் வீழ்ச்சியைத் துரிதப்படுத்தின.'[2]

கிரான்ட் டப் எழுதுகிறார்: 'மராட்டியர்களிடை மன வேற்றுமைகளைக் கிளப்பவும், ஹைதர் அலி அல்லது நைஜாமோடு மராட்டியர்கள் சேர்ந்து விடாதபடி தடுக்க வேண்டிய காரியத்திற்காகவுமே மாஸ்டின் பம்பாய் அரசாங்கத்தால் பூனவிற்கு அனுப்பப்பட்டான்.'[3] தன் கைப்பாவையான ரகோபாவுக்கு அவன் உதவினன்; நைஜாம், ஹைதரலி ஆகியோரோடு சண்டையிடச் செய்தான். இதனல் மராட்டிய சாம்ராஜ்யத்திற்குப் பலனென்றும் இல்லை. பம்பாய் அரசாங்கத்தின் கைப்பாவையாக ரகோபா இருப்பதை நானுபர்னுவிஸ் கண்டு கொண்டார். ரகோபா பீஷ்வாவாக இருந்தால், மராட்டிய சாம்ராஜ்யத்தின் கேடு நெடுந்தூரத்திலிருக்காது என்பதை அறிந்தார். நானுபர்னுவிஸும் அவருடைய மந்திரிகளும் தனக்கு எதிரிகளாக இருப்பதைக் கண்ட ரகோபா குஜராத்துக்கு ஓடிவிட்டான்; பம்பாய்க் கௌன்சிலையும், அதன் தலைவரையும் தனக்கு உதவுமாறு கேட்டான். மராட்டிய சாம்ராஜ்யத்தின் வலுவைக் குறைக்கலாம், கிழக்கிந்தியக் கம்பெனிக்கு மேற்குக் கடற்கரையில் சாதகங்கள் கிடைக்கும்படி, குறிப்பாக, சால்செட்டும் பேசினும் கிடைக்கும்படி செய்யலாம் என அவர்கள் மகிழ்ச்சியுடன் உதவ முன் வந்தனர்.

'இந்தக் கொள்கையில், இந்து முஸ்லீம் என்ற மத அடிப்படையில் எவ்வித வித்தியாசமும் பாராட்டப்படவில்லை. முஸல்மான்களுக்கெதிராக, முஸல்மான்களும் இந்துக்களும் தூண்டப்பட்டார்கள். இந்துக்களுக்கெதிராக, இந்துக்களும் முஸல்மான்களும் தூண்டப்பட்டார்கள். எதிர் நோக்கிய பலன் யாது? ஒருவனைக் கொண்டு மற்றவனை ஒழிப்பதே. வாரன் ஹேஸ்டிங்ஸ் காலத்தில் ரோஹில்லர்கள் எப்படி நடத்தப்பட்டார்கள் என்பதைப் பார்த்தால் இது நன்கு விளங்கும். அயோத்தி நாட்டை யொட்டி ரோஹில்லர்கள் வசித்தார்கள். ரோஹில் நாட்டை, ரோஹில் தலைவர்களும் மாஜிஸ்டிரேட்டுகளும் ஆண்டு வந்தார்கள். அதிகமான சுதந்திரத்தை அனுபவித்து வந்ததனல் மற்றவர்களைக் காட்டிலும் மிகுந்த செழிப்புடன் வாழ்ந்தார்கள். சுவிஸ் ஜாதியார்களைப்போல இவர்களும் சமாதானத்தைக் கண்ணும் கருத்துமாகக் காப்பாற்றினர்கள். இவர்களுடைய நாட்டின் ஓர் எல்லை மராட்டியரிடமிருந்தது; இன்னொர் எல்லை அயோத்தி. அயோத்தியின்மீது படை யெடுப்பதற்கு ரோஹில்லரை வழி விடும்படி மராட்டியர்கள் கேட்டார்கள். அப்படிச்

1. W. M. Torrens: *Empire in Asia*, p. 19.
2. B. D. Basu: *Rise of Christian Power in India*, p. 209.
3. Grant Duff: *History of the Mahrattas*, p. 340.

செய்தால் நிறையச் சாதகங்கள் செய்வதாகவும் கூறினார்கள். ஆங்கிலேயரின் தூண்டுதலால், அவர்களுடைய உத்தரவாதத்தின்மீது ரோஹில்லர்கள் ஏற்கெனவே அயோத்தியுடன் நேச உடன்படிக்கை செய்துகொண் டிருந்ததால், மராட்டியருக்கு வழிவிட மறுத்தார்கள். மராட்டியருடைய கொள்ளைகள் கொடுமைகளுக்கும் ஆளானார்கள். மராட்டியர்கள் விரட்டி யடிக்கப்பட்டவுடன், அயோத்தி விசியரும் கவர்னர் ஜெனரலும் ரோஹில் நாட்டைச் சேர்த்துக்கொள்வதற்குச் சதிசெய்தார்கள். அயோத்தி விசியர் தனது நாட்டின் பாதுகாப்புக்காக ஆங்கிலச் சேனையை உதவிக்காக வைத்துக்கொள்ள வேண்டுமென்று ஹேஸ்டிங்ஸ் தூண்டினான். ஆனால் அந்தச் சேனை கம்பெனியாரால் நடத்தப்படவேண்டும். இதற்காக அயோத்தி விசியர் குறிப்பிட்ட பெருந்தொகையைக் கம்பெனிக்குக் கொடுக்க வேண்டும். அது கம்பெனிக்குப் பெரிதும் லாபமாக இருந்தது. தங்களுடைய லாபத்தை அதிகப்படுத்துவதற்காக ரோஹில்கண்டை ஆக்கிரமித்து வசப்படுத்தி விற்பதென்று தீர்மானித்தார்கள்......சுபேதாரும் கவர்னர் ஜெனரலும் ரகசிய ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். அதன் பிரகாரம், சந்தர்ப்பம் வாய்த்த போதெல்லாம் "சருக்கினது சாக்கென்று" ரோஹில் கண்டை நசுக்க வேண்டும்; உதவிக்கு அயோத்தித் துருப்புகளை வைத்துக்கொள்ள வேண்டும்; பிடித்ததும் விசியரின் நாட்டோடு சேர்த்துவிட வேண்டும். இந்தப் படையெடுப்புச் செலவையும், மேலும் 40 லட்ச ரூபாயையும் அயோத்தி விசியர் கம்பெனிக்குக் கொடுத்துவிடவேண்டும்.'[4] பல விதமான சாக்குப் போக்குகள் கண்டு பிடிக்கப்பட்டன. ரோஹில்கண்டின் மீது படையெடுக்கப்பட்டது. ரோஹில்லர்கள் வெகு வீரமாக எதிர்த்தும் தோல்வியுற்றார்கள். 'வெற்றியின் உரிமைகள் இவ்வளவு கேவலமாக எங்குமே கொண்டாடப்பட வில்லை. "ரோஹில்லன் என்ற ஒவ்வொருவனும் கொல்லப்பட்டான், அல்லது நாட்டை விட்டு ஓடும்படி செய்யப்பட்டான்." இக்கொடுமை ஒப்பந்தத்தை மீறியதாகாது. ஏனெனில் அவசியமானல் "ரோஹில்லர்களை ஒழித்துவிட வேண்டும்" என்பது ஹேஸ்டிங்ஸின் கடிதத்தில் தெளிவான ஒப்பந்த ஷரத்தாக இருக்கிறது. அந்த வார்த்தைகள் அவருடையதே.'[5] இதன் பலன், ஒப்பந்தத்திற்காக ஹேஸ்டிங்ஸ் வெகுமதியாக இருபதினாயிரம் பவுன் பெற்றதே. கம்பெனி கஜானாவிலும் 4 லக்ஷம் பவுன் வந்து குவிந்தது.

நவாப் விசியருக்கும் சீக்கிரமாகவே சனியன் பிடித்தது. கம்பெனிக்கு இன்னும் அதிகப்பணம் தேவையாக இருந்தது. நவாபோ, 'ஐயோ நான் தரித்திரன்' என்று முறையிட்டான், 'பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாயின. லக்ஷ்மணபுரி கஜானாவை வற்றடிக்காமலே கல்கத்தா கஜானாவை நிரப்புவதற்கு உபாயம் கண்டு பிடிக்கப்பட்டது. அதென்ன உபாயம்? மெக்காலே சொல்லுகிறார்: "உபாயம் இவ்வளவுதான்: கவர்னர் ஜெனரலும் நவாப் விசியரும் சேர்ந்து மூன்றாவது கட்சியொன்றைக் கொள்ளையடிக்க வேண்டியது. இவர்கள் கொள்ளையடிப்பதென்று நிச்சயம் பண்ணின மூன்றாவது கட்சி, கொள்ளைக் கட்சியொன்றினுடைய பெற்றோராயிருந்தது.'"[6] காலஞ் சென்ற நவாப் விசியருடைய தாயையும் மனைவியையும் கொள்ளையடிக்கத் தீர்மானித்

4. Adapted from Torrens, op. cit., pp. 100-101.
5. *ibid.*, p. 102.
6. *ibid.*, p. 116.

தார்கள். அவர்கள் கையில் நிரம்பப் பணம் இருக்கக் கூடுமெனக் கருதப் பட்டது. 1,200,000 பவுன் கொள்ளையடிக்கப்படலாமெனக் கணக்குப் போட்டார்கள்.

'இந்துஸ்தானத்து அரசர்களிடம் பிரிட்டிஷ் சேனைகளை வாடகைக்கு விட்டு வைப்பதென்று ஹேஸ்டிங்ஸ் ஒரு புதிய வழக்கத்தைப் புகுத்தினன். இதன் மூலம் அவ்வரசர்களுடைய அதிகாரத்தையும் சுதந்திரத்தையும் உறிஞ்ச வழி கிடைத்தது. இத்தகைய சேனையை அயோத்தியில் வைத்த தன் நோக்கம், அங்குள்ள அரசாங்கத்தை ஒடித்து, அதைப் பிரிட்டிஷாருக்குக் கீழ்ப்பட்டதாக ஆக்குவதே என்று வாரன் ஹேஸ்டிங்ஸ் ஒப்புக் கொள் கிறன்; இவனோடு கூட்டுக்கள்ளனுக இருந்த விசியர், சிறிது காலத்தில் தான் வேட்டையாடிய விலங்கோடு தானும் ஒருங்கே இரையானதைக் கண் டான் என்பது பின் நடந்த காரியங்களால் தெளிவாகிறது.'[7]

ஓர் இந்திய அரசனோடு இன்னொருவனைப் பொருதச்செய்து, பின்பு, வென்றவனைக் கொன்றழிக்கும் பிரிட்டிஷாரின் கொள்கை எவ்வாறு நடை பெற்று வந்ததென்பதற்கு, மேலும் உதாரணங்கள் காட்டுவது அனுவசிய மாகும். இக்கொள்கை இந்தியாவில் மாத்திரம் அநுஷ்டிக்கப்பட வில்லை; மற்ற நாடுகளிலும் இதே கொடிய பலன் கிட்டும்படி அநுஷ்டிக்கப்பட்டது.

பத்தொன்பதாவது நூற்றுண்டின் ஆரம்பத்தில், மொகலாயச் சக்கர வர்த்தியின் அதிகாரம் மாத்திரம் அழிக்கப்படவில்லை; மொகலாய சாம்ராஜ் யம் சிதறுண்டதால் தோன்றிய அனேக சுதந்திர ராஜ்யங்களும் பூர்ணமாக அழிக்கப்பட்டன, அல்லது பலவீனப் படுத்தப்பட்டன. இந்தியா முழுவதற் கும் கிழக்கிந்தியக் கம்பெனி தனியரசு செலுத்தும் வண்ணம் இவ்வளவும் செய்யப்பட்டது. சில ராஜ்யங்கள்—உண்மையாகவோ, பெயரளவிலோ—சுதந்திரமாயிருந்தன. அவைகள் அழியும் வரை அதே கொள்கைகள் கை யாளப்பட்டன. இவ்விதமாக, பத்தொன்பதாம் நூற்றுண்டின் முதலிருபத் தைந்து வருஷங்களுக்குள்ளாகவே, மராட்டிய சாம்ராஜ்யம் முற்றிலும் ஒழிக் கப்பட்டு விட்டது. அங்கங்கே விட்டு வைக்கப்பட்ட மகாராஷ்டிர மன்னர் களும் பிரிட்டிஷாருக்கு உதவி செய்யும் குறுநிலத் தலைவர்களானுர்கள். அயோத்தி ராஜ்யம் பெயரளவில் சுதந்திரமாக இருந்தது. ஆனுல், பிரிட்டி ஷார் தாக்கினுல் எதிர்த்து நிற்க அதற்கு வலுக்கிடையாது. சில வருஷங் களில் அதுவும் நேர்ந்தது. அயோத்தி சேர்க்கப்பட்டு விட்டது. ஏற்கெனவே, திப்பு சுல்தான் தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டா னுதலால், அவனது ராஜ்யமும் சேர்க்கப்பட்டிருந்தது. நைஜாம் நேசனுகி விட்டார். பிரிட்டிஷா ருக்கு இவரால் ஆபத்தோ கவலையோ கிடையாது. சீக்கியர்கள், பஞ்சாபிலும் வடமேற்கிலும் தங்கள் ராஜ்யத்தை ஏற்படுத்தி இருந்தார்கள். அவர்கள் மீதும் பிரிட்டிஷாருக்குச் சந்தேகமில்லாமலில்லை. மொகலாயச் சக்கரவர்த்தி, பெயரளவில்தான் சக்கரவர்த்தி. நாட்டின் பெரும் பகுதி ஏதும் அவருடைய ஆளுகையிலில்லை.

7. Torrens, op. cit., p. 101.

# 8. வாஹாபி இயக்கம்

முஸல்மான்கள் தங்களுடைய பெரும் அரசியல் அந்தஸ்தை இழந்தன ராஞலும், அவர்கள் மீதிருந்த சந்தேகப்பார்வை ஒழிந்தபாடில்லே. அவர்களி டையிலும் மத ஆர்வம் கொழுந்துவிட்டெரியும் வண்ணம் சிலர் தோன்றினர். இஸ்லாத்தின் லட்சியங்களிலிருந்து நழுவியதே தங்களுடைய அரசியல் வீழ்ச் சிக்குக் காரணம் என்ருர்கள் இவர்கள். ஆகவே, மீண்டும் இஸ்லாத்தின் ஆதிபோதனேகளே நாடிச்செல்ல வேண்டும்; நாளடைவில் இடையிற் புகுந்த பழக்க வழக்கங்களே விட்டொழிக்க வேண்டும்; இவைகள் இஸ்லாத்தில் அனுமதிக்கப்படவில்லே: என்றெல்லாம் இவர்கள் எடுத்துரைத்தார்கள். இந்தச் சீர்திருத்தக்கார ஆதி மனிதர்களில் ஒருவர் மௌல்வி ஷாரி யாத்துல்லா; வங்காளத்தில், பரித்பூர் ஜில்லாவிலுள்ள பகதூர் புரத்தைச் சேர்ந்தவர்; அரேபியாவில் இருபது வருஷங்கள் வாழ்ந்தவர். அங்கிருந்து திரும்பியதும் அதாவது இருபதாவது நூற்ருண்டின் முதற்பத்து வருஷத்தில், 'பிரெய்ஸி' என்ற ஒரு மதப்பிரிவை உண்டாக்கிஞர். அவருக்குப்பின் அவருடைய மகன் தலேவஞஞன்; பகதூர் புரத்தைத் தனது இருப்பிடமாகக் கொண்டு விவசாயி களிடையே தனது மதச் சீர்திருத்தத்தை நடத்தி வந்தான்; ஜமீன்தார்களிட மிருந்தும் விவசாயிகளேக் காப்பாற்றிஞன்.

சில வருஷங்கள் கழித்து, ராய்பரெய்லியைச் சேர்ந்த சையது அகமது என்பவரால் ஓர் இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது. இதனுடைய கிளே இந்தியா வெங்கும் பரவி யிருந்தது. பத்தொன்பதாம் நூற்ருண்டின் முதற் பகுதியில் இது பெரிய காரியங்களேச் சாதித்தது. சையது அகமது, ராய் பரெய்லியில் பிறந்து டில்லியில் கல்வி கற்றவர். படிப்புக்கும் பக்திக்கும் பெயர் பெற்றவர். படித்த உலாமாக்களில் அனேகர் அவரைத் தங்களது தலேவராகக் கொண் டார்கள். மது விலக்கு, விபசார ஒழிப்புப் போன்ற சீர்திருத்தங்களில் தீவிர மாக உழைத்தார். ஹைதராபாத், தெற்குச்சீமை, வங்காளம் முதலிய நெடுந்தூரங்களுக்குத் தம்முடைய சீடர்களே அனுப்பிஞர். பஞ்சாபிலுள்ள சீக்கியர்கள், மகமதியர்களேக் கொடுமைப் படுத்திஞர்கள்; அவர்களுடைய மதக்காரியங்களேச் செய்ய விடாமல் தடுத்தார்கள். தொழுகையிடங்களே ஆபாசம் பண்ணிஞர்கள். சீக்கியர்களின் மீது ஜெகாது தொடுப்பதற்கு அவர் தலேவராஞர். அந்நாடுகளே தாருல் ஹார்ப் என்று பிரகடனப் படுத்தி ஞர். அவர்கள்மீது ஜெகாது நடத்தத் தீர்மானித்தார். மகாராஷ்டிரர்களும், தங்களுடைய ஆட்சியை ஏற்படுத்தி இருந்தும் முஸல்மான்களுடைய மத விஷயங்களில் குறுக்கிடவில்லே; அவர்களுடைய மதானுஷ்டானங்களேக் கடைப்பிடிக்க அனுமதித்தனர்; முஸ்லீம் காஜிகளேயும் வேலேபார்க்க அனு மதித்தனர். மகாராஷ்டிரத்தையும் ராஜபுத்ர ராஜ்யங்களேயும் முஸல்மான் கள் தாருல் இஸ்லாம் என்று கருதிஞர்கள்; தாருல் ஹார்ப் என்று கருதவில்லே. சீக்கியர்களுக் கெதிராக ஜெகாது நடத்தச் சையது அகமது பிரல்வி ஏற்பாடு கள் செய்தார். அவருடைய சீடர்கள் நாடு முழுதும் பணமும் ஆளும் சேர்க்கத் தொடங்கினர். அவருக்குப் போர் அனுபவம் உண்டு. ஜெகாதுப் படைக்கு அவர் தலேமை வகித்தார். பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கு இது விஷயம் நன்கு தெரியும். ஆஞலும் ஒன்றும் குறுக்கிடவில்லே. இவ்வியக்கம் சீக்கியருக் கெதிரானது. சீக்கியருடைய அதிகாரம் ஓங்கி வருவதைப் பொறுத்து வந் தார்கள்; உள்ளூர வெறுப்புதான். சர் சையது அகமதுகான் இந்த ஏற்பாடு களேப்பற்றிப் பின் வருமாறு எழுதுகிருர்:

'அந்த நாட்களில் முஸல்மான்கள் சீக்கியருக்கு எதிராக **ஜெகாது** எடுக்கும்படி முஸ்லீம் பொது மக்களைப் பகிரங்கமாகக் கேட்டுக் கொண்டார்கள். ஆயிரக்கணக்கான முஸ்லீம்கள் திரண்டார்கள். அளவிடற்கரிய ஆயுதங்கள் குவிந்தன. கமிஷனருக்கும் மாஜிஸ்டிரேட்டுக்கும் இவை தெரியப்படுத்தப்பட்டன. அவர்கள் அதைச் சர்க்காருக்குத் தெரிவித்தார்கள். இதில் குறுக்கிட வேண்டாம் என்று சர்க்கார் அவர்களுக்குத் தெளிவாக அறிவித்துவிட்டது. டில்லியைச் சேர்ந்த ஒரு மகாஜன் **ஜெகாதுப்** பணத்தைக் கையாடல் செய்த வழக்கில் டில்லி கமிஷனர் வில்லியம் பிரேசர் அதைக் கொடுக்கும்படி தீர்ப்பளித்தார். அந்தப்பணம், வசூல் செய்யப்பட்டு எல்லைப்புறத்திற்கு அனுப்பப்பட்டது.'[1] மகமது ஜாபர் சாஹப் தமது **சவனுத் அஹ்மதியா** என்ற புத்தகத்தில்(பக்கம்:139) சொல்லுகிறர்: 'சர்க்கார் (பிட்டிஷ்சர்க்கார்) சையது சாஹபுக்கு எதிராக இருந்திருக்குமானல், அவருக்கு இந்துஸ்தானத்திலிருந்து ஓர் உதவியும் போய்ச் சேர்ந்திராது. ஆனல் பிரிட்டிஷ் சர்க்கார் அந்தக் காலத்தில் சீக்கியர்களுடைய பலம் அழிய வேண்டுமென்று அந்தரங்கத்தில் ஆசைப்பட்டது.'[2] சிந்து, போலன் கணவாய் வழியாகச் சையது அகமது ஒரு படையை நடத்தி ஆப்கானிஸ்தானத்திற்குச் சென்றர். அங்கிருந்து கைபர் வழியாகப் பஞ்சாபை 1824-ல் தாக்கினர்; வெற்றியும் தோல்வியுமாகப் போராடி 1830-ல் பெஷாவரைக் கைப்பற்றினர். சீக்கியர்கள் சார்பாகச் சுல்தான் மகமது கான்—கவர்னராக இருந்தவர்—சையதுக்கு விசுவாசப்பிரமாணம் எடுத்துக் கொண்டார்; ஆகவே மீண்டும் தம்முடைய பதவிலேயே இருந்தார். மௌல்வி மஸ்ஹர் அலி, காஜியாக நியமிக்கப்பட்டார். இவ்விதமாத அவர் எல்லைப்புற மக்களுடைய மத சுதந்திரத்தை வாங்கிக் கொடுத்தார். ஆனல் சுல்தான் மகமது கானுக்கும் காஜி மஸ்ஹர் அலிக்கும், பழைய விரோதம் இருந்தது. சையது அகமது பெஷாவரை விட்டுக்கிளம்பவும், சுல்தான் மகமதுகான் தர்பார் நடக்கும்போதே காஜி மஸ்ஹர் அலியைக் கொல்லும்படி செய்து விட்டார். அங்குள்ள தலைவர்களோடு சூழ்ச்சி செய்து சையது சாஹெப் நியமித்த கலெக்டர்களையும் கொலை செய்யும்படி செய்து விட்டார். இது, சையது சாஹெபை மிகவும் கலக்கியது. எல்லைப்புறத்திற்கு 1830-ன் கடைசியில் அவர் தம்முடைய சில சிஷ்யர்களுடன் புறப்பட்டார்; 1831-ல் ஒரு சண்டையில் கொல்லப்பட்டார். அப்போது அவருக்கு வயது 45.

அவருடைய மரணத்திற்குப் பிறகு அவருடைய சேனை கலைந்ததும், **ஜெகாதுகள்** எல்லைப்புறத்தில் ஸ்வாட் பள்ளத்தாக்கில் உள்ள சிட்டானு என்ற இடத்தைத் தங்களுடைய இருப்பிடமாகக்கொண்டு சண்டையைத் தொடர்ந்து நடத்தினர்கள்; இந்துஸ்தானத்திலிருந்து உதவிபெற்றுர்கள். பஞ்சாப் ஜெயிக்கப்படும் வரையும் பிரிட்டிஷ் அரசாங்கம் இதைக் கண்டும் காணுததுபோல் இருந்துவிட்டது. வில்லியம் ஹண்டர் எழுதிய **இந்திய முஸல்மான்கள்** என்ற புத்தகத்திலிருந்து இது நன்ருகத் தெரிய வருகிறது: 'நாம் பஞ்சாபைச் சேர்த்துக் கொள்வதற்கு முன்பு அவர்கள் இந்துக்கள் மீது சொல்லுக்கடங்காத கொடுமைகளைச் செய்தார்கள்; கொள்ளையடித்தார்கள்; கொலை செய்தார்கள்; பிரிட்டிஷ் ஜில்லாக்களிலிருந்து வருஷா வருஷம் மக

1. Translation of an extract from an article of Sir Syed Ahmad Khan published in the Institute Gazette of 8th September 1871-Quoted by M. Tufail Ahmad in *Musalmanon Ka Roshan Mustaqbal*, p. 102.

2. *ibid.*, p. 103.

மதிய மத வெறியர்களைப் படைசேர்த்தார்கள். சீக்கியர்களின் மீது பாய்ந்து வந்த இந்த மத வெறிக் கூட்டத்தில் நமது குடிகள் சேருவதைத் தடுக்க நாம் ஒன்றும் நடவடிக்கை எடுக்கவில்லை. சீக்கியர்களோ சில சமயம் நமக்கு எதிரிகள்; சில சமயம் நமக்கு நண்பர்கள். வடமேற்கு மாகாணங்களில் பெரிய நீலச் சாயத் தொழிற்சாலை வைத்திருந்த ஓர் ஆங்கிலேயர் என்னிடம் சொல்லக் கேட்டிருக்கிறேன். தம்மிடத்தில் வேலை பார்த்த மதப்பற்றுள்ள சில முஸ்லீம்கள் தங்களுடைய சம்பளத்தில் ஒரு பகுதியைச் சிட்டானுப் படைக்கென்று ஒதுக்கி வைத்து விடுவார்களாம்; துணிகரமானவர்கள் அங்கேயே சிலகாலத்திற்குச் சேவை செய்யப் போவார்களாம். இந்து ஓவர்சீயர்கள் தங்கள் வீட்டில் சிரார்த்தத்துக்காக விடுமுறை கேட்பது போல, மகமதிய வேலைக்காரர்களும் சிட்டானுவுக்குச் செல்வதற்காகச் சில மாத விடுமுறை கேட்பது வழக்கமாம். இது 1830 லிருந்து 1846 வரை நடந்து வந்தது.'[3] சர் வில்லியம் ஹண்டர் மேலும் கூறுகிறார்: 'பஞ்சாபை நாம் சேர்க்கவும் சீக்கியர் மீது பாய்ந்த கோபம் நம்மீது பாய்ந்தது. சிட்டானுப் படைகளுக்கு இந்துக்களும் ஆங்கிலேயரும் ஒருங்கே மத விரோதிகளாகத் தென்பட்டார்கள். இவர்களை வாளுக்கிரையாக்க முடிவு செய்தார்கள். சீக்கிய எல்லைப்புறத்தில் நாம் கண்டும் காணாதது போலிருந்த கெடுதல்கள், நாம் அசட்டை செய்த அக்கிரமங்கள் நம்மீதே பாய ஆரம்பித்தன.'[4] அவர்களைச் சேர்ந்தவர்கள் நாலா பக்கங்களிலும் அரசாங்கத்துக்கு எதிர்ப் பிரசாரம் செய்தார்கள். வங்காளத்தில் ராஜஷாஹியிலும், பீஹாரில் பாட்ணுவிலும், பஞ்சாப் எல்லையிலும் இது நடந்தது. 'எல்லைப்புற ஜாதியினரை பிரிட்டிஷாருக்குத் தீராப்பகையாக ஆக்கினார்கள், இம்மத வெறியாளர்கள். ஒரு சின்ன உண்மை எவ்வளவோ விஷயங்களைத் தெளிவுபடுத்தும். அதாவது 1850 க்கும் 1857 க்கும் இடையே நாம் 16 தடவை குழப்பங்களை அடக்க வேண்டியிருந்தது. மொத்தம் 33000 நிரந்தரப் பட்டாளத்தை அனுப்ப வேண்டியிருந்தது. 1857 க்கும் 1863 க்கும் இடையில் இருபது முறை கலகங்கள் கிளம்பின. மொத்தம் 60,000 நிரந்தரப் பட்டாளத்தையும், இதோடு உதவிப் பட்டாளத்தையும், போலீசையும் அனுப்ப நேர்ந்தது.'[5]

முஜாஹித்துக்களுடைய வேலைகளை மேலும் விவரிப்பது அனுவசியம். சையது அகமது பரல்வியின் சீடர்கள் **ஜெஹாதுகளுக்கு** உதவிக்கொண்டிருந்தார்கள். அவருடைய முக்கிய சீடர்கள் இருவர், பாட்ணுவைச்சேர்ந்த சகோதரர்கள் மௌல்வி விலாயத் அலியும், மௌல்வி இனயத் அலியும் ஆவார்கள். பஞ்சாபைப் பிரிட்டிஷார் கைப்பற்றியவுடன் இந்திய முஜாஹித்துகளை இந்துஸ்தானத்திற்குத் திரும்பும்படி செய்தார்கள். மௌல்வி விலாயாத்அலி பாட்ணுவுக்குத் தம்முடைய சிஷ்யர்களுடன் வந்தார். சில வருஷங்கள்வரை தாம் அங்கு போவதில்லை யென்று எழுதிக் கொடுத்தார். அதன் பிறகு அவரும் அவருடைய சகோதரரும் தங்களுடைய சொத்துக்களை விற்றுவிட்டுச் சிட்டானுவுக்கு **ஹிஜ்ரத்** போனார்கள். இந்த இயக்கம் நெடுநாள் நடந்தது; 1857 கலகத்திற்குப்பிறகு தீவிரமாக நடந்தது. 1864-ல் பிரிட்டிஷார் தங்களுடைய முன்னேற்றக் கொள்கையை எல்லைப்புறத்தில் ஆரம்பித்தார்கள். அப்பொழுது இந்தியமக்களும் எல்லைப்புறத்தினரும் யாதொரு தொடர்பும் இல்லாதிருக்கவேண்

3. W. W. Hunter: *Indian Mussalmans*, p. 20, quoted in Tufail Ahmad, op. cit., p. 110.
4. *ibid*., pp. 21-2, quoted Do. 5. *ibid*., p. 24, quoted Do.

டியிருந்தது. 1864 க்கும் 1870 க்கும் இடைப்பட்ட காலத்தில் 5 கலகங்களைக் கிளப்பியதாக இந்தியர்மீது குற்றம் சாட்டப்பட்டது. இவர்களில் அனேகர் பாட்னு குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் அவர்களது சீடர்களைச் சேர்ந்தவர்களுமே. எல்லைப்புறத்தினரோடு கடிதப் போக்கு வைத்திருந்தார்கள், பணவுதவி செய்தார்களென்பது இவர்கள் மீது சாட்டப்பட்ட குற்றம். இவர்களில் சிலர் மரண தண்டனை விதிக்கப்பட்டுப் பின்பு தீவாந்தர சிட்சை விதிக்கப்பட்டார்கள். 1824 லிருந்து பிரிட்டிஷாருக்குத் தெரிந்தே செய்து வந்ததைத்தான் இப்பொழுதும் இவர்கள் செய்து வந்தார்கள்; கூடக்குறைய ஒன்றும் செய்துவிடவில்லை. இதற்குமுன் பிரிட்டிஷார் இவர்களை ஆதரித்தார்கள்; இவர்கள் சார்பாக இந்தியாவில் பணம் பெற்று எல்லைப்புறத்தில் கொடுத்தார்கள். சையது அகமது பிரல்வியால் ஆரம்பிக்கப்பட்டு அவருக்குப் பின்னும் அவருடைய சீடர்களால் தொடர்ந்து நடத்தப்பெற்ற இவ்வியக்கத்திற்கு வாஹாபி இயக்கம் என்று பெயர். சமூக, மத சீர்திருத்தங்களோடு **ஜெஹாதுக்** கொள்கையும் இவ்வியக்கத்தில் முக்கியமானது. கிருஸ்துவர்களான பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்டுவிட்டதால் இந்தியா **தாருல் ஹார்ப்** ஆகிவிட்டது. ஆகவே, இதை எதிர்த்து **ஜெகாது** நடத்துவது கடமையாகிறது. 'அவர்களுடைய மத நூல்களத்தனையிலும் இந்தக் கடமை முதற் கடமையாகப் பிரகாசிக்கிறது.'[6] **ஜெகாதில்** வெற்றி பெருவிட்டால் **ஹிஜ்ரத்** தொடங்க வேண்டும்.

வாஹாபி இயக்கத்தினுல் ஏற்பட்ட நிலைமையை இரண்டு விதத்தில் அரசாங்கம் அடக்கியது. ஒரு பக்கம் பெரிய அரசாங்க விசாரணைகள் இதைத் தொலைத்தன; மற்றொரு பக்கம் இதற்கு எதிர்ப் பிரசாரம் ஆரம்பிக்கப்பட்டது. இதற்கெதிராகப் **பட்வாக்கள்** பெற்றுப் பரப்பப்பட்டன. சர் வில்லியம் ஹண்டர் சொல்லுகிருர்: 'நல்ல திறமைசாலிகள் எப்பொழுதும் நமக்கு எதிராகவே இருந்து வந்திருக்கிருர்கள். அது நம்முடைய நிலைமையில் வெளியில் சொல்லிக்கொள்ள முடியாத அவ்வளவு வருந்தத்தக்க விஷயம் .......................................தீராப் பகைமை கொள்வது கண்டிப்பான கடமையாகும் என்பது நீக்கப்பட்டது. இது எளிதான காரியமல்ல.'[7]

இந்தக் கதை 'பிரித்தாளும்' தந்திரத்தை முழுதும் விளக்குகிறது. பிரிட்டிஷாருக்குச் சீக்கியர்கள் இடைறுகல்லாக இருந்த வரை முஸல்மான்களுடைய **ஜெகாது** ஊக்கமளிக்கப்பட்டது. சீக்கியரை வென்று பஞ்சாபும் சேர்க்கப்பட்ட பிறகு **ஜெகாதியர்கள்** பிரிட்டிஷாரின் கலகக்காரர்கள் என்று ஆயுள் தண்டனைக்கு உட்படுத்தப்பட்டார்கள். அந்த இயக்கம் முழுதும் ஒழிக்கப்பட்டது.

## 9. சர் சையது அகமதுகானின் இளமை நாட்கள்

1857-ம் வருஷத்திய கலகத்திற்குக் காரணங்கள் நெடுநாளாகவே இருந்து ஒன்றுகூடி வந்தன. அதனுடைய காரணங்களை ஆராய்வதும் எப்படி நடைபெற்றதென்பதைப் பார்ப்பதும் இங்கு அநாவசியம். ஒரு விஷயம் நிச்சயம். இந்து முஸ்லிம்கள் இரு சாராரும் அதில் சேர்ந்தனர்; டில்லிச் சக்கரவர்த்தியின் சார்பாகத் திரண்டு சூழ்ந்தனர். இரு வகுப்பாரும் பெரிதும் கஷ்டப்பட்டனர். முஸ்லீம்களிடமிருந்து நாட்டைக் கைப்பற்றிய பிரிட்

6. Hunter, op. cit., pp. 64-5. 7. *ibid.*, p. 144.

டிஷாருக்கு முஸல்மான்கள்மீது கொஞ்சம் கடுப்பு அதிகம். 1848-ல் எல்லன் பரோ பிரபு எழுதியுள்ளார்: 'பத்தில் ஒரு பங்கான மக்கள் நம்மீது பகை யாக இருக்கும்போது, பத்தில் ஒன்பது பங்கினரான விசுவாசமுள்ள ஜனங் களுடைய ஆதரவைத் தேடிக்கொள்ளாமல் இருப்பது மிகமிக மூடத்தனம் என்று எனக்குத் தோன்றுகிறது. இந்த ஜனங்கள் (முஸ்லீம்கள்) நம்மோடு பகையாக இருக்கிறார்கள் என்ற விஷயத்தை நான் கவனிக்காமலிருக்க முடி யாது. ஆகவே நாம் இந்துக்களை உறவாக்கிக் கொள்ளவேண்டும்.'[1] ஆனால், இந்தக் கொள்கை முழுதும் வெற்றியடையவில்லை; ஏனெனில் இந்துக்கள் முஸ்லீம்கள் இரு சாராரும் 1857 கலகத்தில் உற்சாகத்தோடு பங்கெடுத்துக் கொண்டவர்கள். இருந்தாலும் பிரிட்டிஷார் அக்கொள்கையில் நம்பிக்கை இழந்துவிடவில்லை. பின்கண்ட வாசகம் அதை விளக்கும்.

'கானிங் பிரபுமீது எல்லென்பரோ பிரபு குற்றஞ் சாட்டியதோடு கல்கத்தாவாசிகளான ஐரோப்பியர்களும் கானிங் பிரபுவை இங்கிலாந்துக்கு அழைத்துக்கொண்டுவிட வேண்டுமென்று இங்கிலாந்துக்கு மகஜர் அனுப்பி னார்கள். சிப்பாய்க் கலகத்திற்கப்புறம் முஸ்லீம்களுக்கெதிராக ஐரோப்பியர் கள் கிளப்பிய கூச்சலை அவர் ஆதரிக்கவில்லை என்பதுதான் அவர் மீதிருந்த குற்றச்சாட்டு.' இந்த எதிர்ப்புப் பலனளித்தது. சர் வில்லியம் ஹண்டர் எழுதினார்: 'சிப்பாய்க் கலகத்திற்குப் பிறகு பிரிட்டிஷார் முஸல்மான்களைத் தங்களது உண்மையான எதிரிகளாகக் கருதினார்கள்.' பழிக்குப்பழி வாங்கிய தால் செல்வமும் செல்வாக்குமுள்ள அனேக குடும்பங்கள் நாசமாயின. அர சாங்கத்தின் எல்லா இலாகாக்களிலும் அவர்களை ஒடுக்குவதென்ற கொள்கை கையாளப்பட்டது. நிர்வாகத்தின் உயர்ந்த பதவிகளில் முஸ்லீம்கள் இருந் தார்கள். ராணுவத்தில் மிக உயர்ந்த பதவிகள் அவர்களுடையதாக இருந் தன. சாதாரண நிர்வாகத்தில் அவர்களைக் குறையச் செய்வதற்கு இரண்டு காரணங்கள் ஒன்று சேர்ந்தன. ஒன்று சர்க்காரது கொள்கை அவர்களுக்கு எதிரிடையாக இருந்தது. மற்றொன்று முஸ்லீம்கள் தங்களுடைய துக்ககர மான அனுபவத்திற்குப் பிறகு எதற்கும் முன்வரவில்லை; ஆங்கிலக் கல்வியைப் பயிலவில்லை. அது இல்லாமல் சர்க்கார் உத்தியோகங்களைப் பெறு வது மிகமிகக் கடினமாயிற்று.

சர்க்காரின் கொள்கையில் மாறுதல் சுமார் 1870-ல் ஏற்பட்டது. சர் வில்லியம் ஹண்டருடைய மேற்கூறிய புத்தகம் வெளிவந்தபின் அந்த மாறுதல் ஏற்பட்டது. அவர் அப்புத்தகத்தைக் கீழ்க்கண்டவாறு முடிக்கிறார்:

'மேற்கூறிய இந்நூலதிகாரங்கள் இரண்டு பெரிய விஷயங்களைத் தெளிவாக்குகின்றன. எல்லைப்புறம் எதிரிகளின் பாசறை. சாம்ராஜ் யத்தினுள் ஓயாத சூழ்ச்சி. ஆயுதம் தாங்கிய துரோகிகளோடு ஆங்கில சர்க்கார் பேச்சு வார்த்தைகள் வைத்துக்கொள்ள முடியாது. வாளை எடுப் பவன் வாளால் மடியவேண்டும்.........ஆனால் நம்மீது மனக்கசப்பு உடையவர் களுக்கு நாம் சிறிதும் அசைந்து கொடுத்துவிடக்கூடாது. அதே சமயத்தில் அதிருப்திக்கு நியாயமான காரணம் எதுவுமில்லாதபடியும் பார்த்துக்கொள்ள வேண்டும்...................பிரிட்டிஷ் ஆட்சியில் தங்களுக்குத் தவறு இழைக்கப் பட்டதாக இருக்கும் நிரந்தர நினைப்பு முஸல்மான்கள் மனதை விட்டு அகன்றால்தான் இது நிகழும்.'[2]

1. Quoted by Atulananda Chakravarti in *Call it Politics?* p. 35.
2. W. W. Hunter: *Indian Mussalmans*, p. 147.

பிறகு அவர், முஸல்மான்கள் அதிலும் வங்காளத்தில் எப்படி பிரிட்டிஷாரால் நசுக்கப்பட்டார்கள் என்பதை விவரிக்கிறார். முஸல்மான்களுடைய பலத்தையும் பதவியையும் பறித்தது, அவர்களை வறிஞராக்கியது, கல்வி அளிக்காமலிருந்தது, அவர்களுடைய கல்விச் சொத்துக்களைப் பாழாக்கியது ஆகிய எல்லாவற்றையும் கூறுகிறார். அவர்களுக்கு நீதி வழங்குமாறு கேட்டுக் கொள்கிறார். அவர்களுக்கேற்ற கல்வித் திட்டம் அளிக்கக் கோருகிறார். 'நாம் போட்ட திட்டத்தில் மகமதிய இளைஞனைப் படிப்பிக்க வேண்டும். அவர்களுடைய மதத்தில் தலையிடக்கூடாது. அவர்களுடைய மதக்கடமைகளை அறியச் செய்யும் முறை, போலித்தனத்திற்கும் மதவெறிக்கும் இடங்கொடுக்காமலிருக்க வேண்டும். நெடுநாட்களுக்கு முன்பு மிகவும் மதவெறியர்களாக இருந்த இந்துக்கள் இப்பொழுது சமரசத்திற்கு வந்துள்ளார்கள். அதே பாதையில் வருங்கால முஸ்லிமும் நடப்பான்.'[3] இவ்வாசகங்கள் சர்க்காரது கொள்கை மாறுதலைக் கட்டியம் கூறுகின்றன. அலிகார் கல்வித் திட்டத்திற்கு அளித்த ஆதரவு இதிலிருந்து பிறந்தது. அலிகார் கல்லூரியின் பிரிட்டிஷ் பிரின்ஸிபால்கள் இக்கொள்கையிலிருந்து எழுச்சி பெற்றார்கள். கல்லூரியும் நன்மையடைந்தது.

1857-ம் வருஷத்திய புரட்சிக்கு முன் பிரிட்டிஷாரைச் சேர்ந்த இந்தியப்படை, இந்து, முஸ்லீம், சீக்கியர், பூர்பையாக்கள் யாவரும் கலந்ததாக இருந்தது. தேசிய ஒற்றுமை உணர்ச்சி வளர்ந்த காரணத்தால் இவர்கள் ஒன்று கூடி 1857-ம் வருடப் புரட்சியை நடத்திவிட்டார்கள். இது ஆள்பவர்களுடைய கண்ணைத் திறந்துவிட்டது. இந்த ஒற்றுமையைத் தகர்க்க வழி செய்தார்கள். சர் ஜான் லாரென்ஸ் எழுதினார்: 'சிப்பாய்க் கலகத்திற்கு முன்னர் இருந்த சேனையில், நமது உயிருக்கு உலை வைக்கக் கூடியதும், மிக மோசமானதுமான அம்சம் ஒன்று இருந்தது. அஃதென்னவெனில், வங்காளச் சேனையிலுள்ள சகோதரத்துவமும் ஒருமைப்பாடுமேயாம். இதற்கு மாற்று மருந்து ஐரோப்பியப் படைகளை அமைப்பதும் சுதேச ஜாதிவாரியாகப் படைகளமைப்பதுமாகும்.'[4]

இவ்வண்ணம் படை திருத்தியமைக்கப்பட்டது. ஜாதி, இனம், வகுப்புவாரியாகப் படைகள் அமைக்கப்பட்டன. வகுப்புவாத எண்ணங்களை இவர்கள் கைவிடாத முறையில் கவனம் செலுத்தப்பட்டது. 1857-ம் வருடப் புரட்சியில் பங்கெடுத்துக்கொண்ட வங்காளச் சேனையிலிருந்தவர்கள் தற்கால பீஹாரிலிருந்தும், ஐக்கிய மாகாணத்திலிருந்தும் பொறுக்கப்பட்டவர்கள். அப்போது பிரிட்டிஷாரைக் காப்பாற்றியது, புதிதாக ஐக்கப்பட்ட பஞ்சாபியர். ஆகவே ஐக்கிய மாகாணத்தவர்களும், பீஹாரிகளும் படையில் வரவரக் குறைக்கப்பட்டனர். பஞ்சாபியர் அதிகமாக்கப்பட்டனர். இங்குக் காணும் அட்டவணை இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் சேனையில் சேர்க்கப்பட்டவர்களின் விகிதத்தைக் காட்டுகிறது. மாடர்ன் ரெவ்யூவில் திரு. சௌத்ரி எழுதிய கட்டுரைகளிலிருந்து டாக்டர் அம்பேத்கார் மேற்கோள் காட்டுவதாவது: போர் ஜாதியார் என்றும், போர்ஜாதியார் அல்லாதார் என்றும் ஜாதிகள் இருப்பதாக நமக்குச் சொல்லப்படுகிறது. வடமேற்கி

3. Hunter, op. cit., p 214.
4. Quoted by Mehta & Patwardhan in *The Communal Triangle*. p. 54.

## அட்டவணை I

[இந்தியாவின் பலபாகங்களிலிருந்தும் இராணுவ வேலையில் ஈடுபட்டோர் எண்ணிக்கை நூற்றுக் கணக்கில்]

| ஆண்டு | வ. கி. இந்தியா, பஞ்சாப், வ. மே. எ. புறம், காஷ்மீர். | நேப்பாளம், கார்வால், கூமாம். | வ. மே. இந்தியா ஐ. மாகாணம், பீஹார். | தெ. இந்தியா | பர்மா |
|---|---|---|---|---|---|
| 1856 | 10-க்கும் குறைவு | மிகக் குறைவு | 90-க்கு அதிகம் | — | — |
| 1858 | 47 | 6 | 47 | — | — |
| 1883 | 48 | 17 | 35 | — | — |
| 1893 | 53 | 24 | 23 | — | — |
| 1905 | 47 | 15 | 22 | 16 | — |
| 1919 | 46 | 14·8 | 25·5 | 1·2 | 1·7 |
| 1930 | 58·5 | 22 | 11 | 5·5 | 3 |

லுள்ளவர்கள் போர் ஜாதியார் எனவும், ஐக்கிய மாகாணம், பீஹாரிலுள்ளவர்கள் போர்ஜாதியார் அல்லர் என்றும் சொல்லப்படுகிறது. ஐக்கிய மாகாணம், பீஹாரைச் சேர்ந்தவர்கள்தாம் பிரிட்டிஷாருக்குப் பஞ்சாபையும், வடமேற்கு எல்லைப்புறத்தையும் ஜயித்துக் கொடுத்தனர் என்பதும், 1858-லிருந்து வேண்டுமென்றே அவர்களைச் சேனையிலிருந்து குறைத்துவிட்டார்களென்பதும் மறக்கப்படுகிறது. 1857-க்குப் பிறகு கடைப்பிடித்த கொள்கையின் உடனடியான விளைவு ஐக்கிய மாகாணம், பீஹார் மக்களைச் சேனையில் சேர்க்காது, அவர்களுக்குப் பதிலாகச் சீக்கியர், கூர்க்கர், கார்வாலிகளைச் சேர்த்ததாகும்.

சர் சையது அகமதுகான் 1857-ல் கலகக்காரர்கள் கையில் மிகவும் கஷ்டப்பட்டார். அவர்களுக்கு எதிராகப் பிரிட்டிஷாருக்கு உதவினர். முஸல்மான்களுக்கு நேர்ந்த அவதி கண்டு மனம் நொந்தார். ஆங்கிலக் கல்வியற்ற காரணத்தால் அவர்களுக்கு வேலை கிடைக்கவில்லை என்பதைக் கண்டார். அவர் ஒரு தேசியவாதி. இந்துக்களும் முஸ்லீம்களும் ஒரு தேசத்தினர் என்றும், இரு சாராரும் இந்துஸ்தானத்தில் வாழ்ந்து வருவதால் இந்து சமுதாயத்தினர் என்றும் நம்பினர். ஆரம்பநாட்களில் பேச்சிலும் எழுத்திலும் தேசியவாதியாக இருந்தார். இந்து முஸ்லீம்கள் அவரை ஒரு தேசியத் தலைவரெனக் கருதினர்கள். முஸ்லீம்களுடைய நிலைமையை உயர்த்துவதில் அதிகக் கவனமாக இருந்தார். அவர்களுக்குக் கல்வியளிப்பதற்குரிய வசதிகளை அளிப்பதில் மிகுந்த சிரத்தை கொண்டிருந்தார். அவரை வேலைக்கு நியமித்த இடங்களில் எல்லாம் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தினர். அப்பள்ளிக்கூடங்கள் இன்றும் நிலைத்திருக்கின்றன. பிரிட்டிஷ் ஆட்சி பொது ஜனங்களின் நன்மைக்காக இருக்கிறதென்றும், அதிலுள்ள குற்றம் குறைகளை எடுத்துச் சொன்னால் அவைகள் நீக்கப்படும் என்றும் நம்பினர். இந்த வகையில் அந்தக் காலத்துத் தலைவர்களைப் போலவே இவரும் இருந்தார். இந்திய தேசீய காங்கிரஸை ஸ்தாபித்த தலைவர்களைப் போன்று அரசியல் முன்னேற்றத்தில் விருப்பம் கொண்டிருந்தார். சர்க்கார் உத்தியோகத்திலோ சமூக உறவுகளிலோ அல்லது அரசியல் சம உரிமைகளிலோ இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கும் எவ்விதப் பாகுபாடும் இருக்கக் கூடாதென்றார்.

வைசிராய் கௌன்சில் அங்கத்தினராக இருந்த பொழுது இல்பெர்ட் சட்டத்தை ஆதரித்தார். ஆக்ராவில் தர்பாரின்போது ஐரோப்பியருக்கு உயர்ந்த இடத்திலும் இந்தியருக்குத் தாழ்ந்த இடத்திலும் இருக்கைகள் போட்டிருந்ததைக் கண்டு தர்பாரை விட்டு வெளியேறினர். விஞ்ஞானச் சங்கம் ஒன்று ஏற்படுத்தினர். அதில் இந்து, முஸ்லீம், ஐரோப்பியர் யாவரும் அங்கத்தினர்கள். அதில் ஆராய்ச்சிக் கட்டுரைகள் வாசிக்கப்பட்டன. **தஹ்ஸிபுல் அக்லாக்கில்** இவ்வாறு எழுதினர் :

'ஆளும் வர்க்கத்தாரோடு சமத்துவம் அடையாத வரையும், சொந்த நாட்டு ஆட்சியில் பங்கு கொள்ளாத வரையும், எந்தத் தேசமும் மரியாதையும் கௌரவமும் அடையமுடியாது. குமாஸ்தாப் பதவி அல்லது மற்றக் கீழ்ப்பதவிகளை வகிப்பதனுல் இந்து முஸ்லீம்களை வேறெந்த நாட்டாரும் மதிக்கப் போவதில்லை. தன் குடி ஜனங்களை மதிக்காத எந்த அரசாங்கமும் மதிக்கப்படமாட்டாது. என்னுடைய நாட்டுமக்களும், ஆளும் வர்க்கத்தினருக்கொப்ப உயர் பதவிகளை வகித்தால்தான் மரியாதை பெறமுடியும். ஒவ்வொரு நாட்டிலும் அரசாங்கங்கள் உண்மையோடு, நல்லெண்ணத்தோடு, நீதியோடு தத்தம் பிரஜைகளுக்குச் சம அந்தஸ்துக் கொடுத்திருக்கின்றன. இந்தியர்களுக்கு எத்தனையோ கஷ்டங்களும் தடைகளும் இருக்கின்றன. நாம் மன உறுதியோடு சலியாது உழைக்க வேண்டும். எந்தத் துன்பமும் நேருமென்று பின்வாங்கக் கூடாது.'[5]

*1853*-ல் ஸ்தல ஸ்தாபன சுய ஆட்சிச் சட்டம் கௌன்சிலுக்கு வந்தது. இந்தியாவில் பல மதங்களையும் வழக்கங்களையும் உடையவர்கள் இருப்பதால் ஸ்தல ஸ்தாபனங்களில் சில ஸ்தானங்களுக்கு அங்கத்தினர்கள் நியமனம் செய்யப்பட வேண்டும் என்று கூறினர். மூன்றிலொரு ஸ்தானங்களுக்காவது அவ்வாறு செய்வது என்று தீர்மானிக்கப்பட்டது. ஜனங்களால் தேர்ந்தடுக்கப்படாத வகுப்பினருக்கு இவர்கள் பிரதிநிதியாக இருப்பார்கள். இதில் முஸல்மான்களுக்குப் பிரத்யேக ஸ்தானங்களோ தனித்தொகுதிகளோ அவர் கேட்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இந்துக்களும் முஸ்லீம்களும் ஒரு தேசிய இனத்தவர் என்ற கருத்துடையவராதலால் அப்படிக் கேட்டிருக்க மாட்டாரென்பதும் தெளிவு. பின்வரும் வாசகத்திலிருந்து தேசத்தைப் பற்றிய அவருடைய கருத்தைக் காண்போம் :

'சமுதாயம் என்னும்சொல் ஒரு தேசத்தில்வாழும் ஜனங்களைக் குறிப்பது. ......இந்து முஸ்லீம் என்பது மதத்தைக் குறிக்கும் சொற்களென்பதை ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். மற்றப்படி இந்துக்கள், முஸ்லீம்கள், கிறிஸ்தவர்களுங்கூட, இந்த நாட்டில் வாழ்கின்ற யாவரும் இந்தக் காரணத்தினுல் ஒரு தேசிய சமுதாயமாகிறுர்கள். எல்லாப் பிரிவினரும் ஒரு தேசிய சமுதாயத்தாராகும்போது, இந்த நாட்டுக்கு எது நன்மையளிக்கிறதோ அது இங்குள்ள எல்லோருக்கும் நன்மையாகும்.........மத வேறுபாடு காரணமாக ஒரு நாட்டிலுள்ள மக்கள் இருவேறு சமுதாயத்தைச் சேர்ந்தவர்களென்று கருதுகின்ற காலம் மலையேறிவிட்டது.'[6]

5. Translation of quotation given by M. Tufail Ahmad in *Musalmanon Ka Roshan Mustaqbal*, pp. 281-2.

6. Tufail Ahmad : *Musalmanon Ka Roshan Mustaqbal*, p. 283, quoted from *Majmua-i-Lectures Sir Syed Ahmad*, p. 167.

மற்ளுெரு சந்தர்ப்பத்தில் அவர் கூறினுர் : 'ஆரியர்களை இந்துக்களென்பது போல முஸல்மான்களையும் இந்துக்கள் அதாவது இந்துஸ்தான வாசிகள் எனக் கூறவேண்டும்.'[7]

மற்ளுெரு சந்தர்ப்பத்தில் பஞ்சாப் இந்துக்களைப் பார்த்துக் கூறினுர் : 'நீங்கள் இந்துக்களென்று உங்களை மாத்திரம் கூறிக் கொள்வது சரியல்ல. அது மதத்தின் பெயரல்ல என்பது எனது கருத்து. இந்துஸ்தானத்தில் வாழ்கின்ற ஒவ்வொருவனும் தன்னை இந்து என்று கூறிக்கொள்ளலாம். நான் இந்துஸ்தானத்தில் வாழ்கிறவனுக இருந்துங்கூட என்னை நீங்கள் இந்து என்று கருதாதது எனக்கு வருத்தத்தை யளிக்கிறது.'[8]

முஸ்லீம்களைப்போல இந்துக்களும் இவரைத் தலைவராக மதித்ததில் ஒன்றும் ஆச்சரியமில்லை. சிவில் உத்தியோகப் பரீட்சைகள் இங்கிலாந்தில் நடக்கும்போதே இந்த நாட்டிலும் பரீட்சைகள் நடத்த வேண்டுமென்பது பற்றிச் சுரேந்திரநாத் பானர்ஜி பேசுவதற்கு ஒரு கூட்டத்தைக் கூட்டி, அதற்குத் தாமே தலைமை வகித்தார். தேசிய இயக்கத்தில் முன்னிற்பவர்களாக இருந்த வங்காளிகளை இவர் எப்பொழுதும் பாராட்டியதில் புதுமை ஒன்றுமில்லை.

இத்தகைய கருத்துக்களையுடைய தலைவர் சில வருஷங்களில் எவ்வாறு மனம் மாறினுர் என்பது சுவாரஸ்யமான விஷயமல்லவா? அக்காலத்திலிருந்த ஏ. ஓ. ஹியூம் என்ற ஐரோப்பிய உத்தியோகஸ்தரின் உதவியால் ஆரம்பிக்கப்பட்ட தேசிய இயக்கம் இந்திய தேசிய காங்கிரஸாக 1885-ல் மலர்ந்தது. முஸல்மான்களை அதில் சேர வேண்டாமென்று இவர் கூறியதில் மர்மம் இருக்கிறதல்லவா? அலிகார் எம். ஏ. ஓ. கல்லூரியின் தலைமைப் பேராசிரியர்களான ஆங்கிலேயர்கள் அடைந்த செல்வாக்கு இதற்குத்தெளிவான பதிலளிக்கிறது. தொடர்ந்து பதினைந்து அல்லது இருபது வருஷ முஸ்லீம் அரசியல் சரித்திரம், இந்தத் திறமையான ஆங்கிலேயர்களுடைய நடவடிக்கைகளின் சரித்திரமே யன்றி வேறில்லை. இவர்களுக்குள் சிறிது சிறிதாகப் பிளவு ஏற்படுத்தினுர்கள். அன்றிலிருந்து இப்பிளவு விரிவடைந்துகொண்டே வந்திருக்கிறது.

## 10. அலிகார் கல்லூரியின் தலைமைப் பேராசிரியர்களான ஆங்கிலேயர்களும், அலிகார் அரசியலும்

முன் கூறியதுபோல, சர் சையது அகமது முஸல்மான்களுடைய ஆங்கிலக் கல்வியைப்பற்றி அதிக அக்கறைகொண் டிருந்தார். 1875-ல் ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்தினுர். அது நாளடைவில், மகமதிய ஆங்கில ஓரியண்டல் கல்லூரியாகிப் பின்பு அலிகார் முஸ்லீம் சர்வகலாசாலையாயிற்று. 1883-ல் பெக் என்னும் ஆங்கிலேயர் அதற்குப் பிரின்ஸிபாலாகித் தம் வாழ்நாள் முடியும்வரை அதாவது 1899 வரை அந்தப் பதவியிலிருந்தார். அவர் சரியான சந்தர்ப்பத்தில் வந்து புகுந்தார். ஆங்கிலம் இந்துக்களிடையே பரவி சுதந்திரம், ஜனநாயகம் என்ற கருத்துக்களை விதைத்துவிட்டது. அதை வெளிக்காட்டவும் மக்கள் ஆரம்பித்தனர். தேசியம் நாளொருமேனியாக வளரலாயிற்று. முஸ்லீம்களைத் தம் வசப்படுத்தத் தருணம் வந்துவிட்டதென்று பிரிட்

7. Tufail Ahmad op. cit., p. 283, quoted from *Sir Syed ke Akhri Mozamin*, p. 55.

8. *ibid.*, p. 283. quoted from *Safarnama Punjab—Sir Syed Ahmad*, p.139.

டிஷார் கருதினுர்கள். இதுவரையும் வேண்டா வெறுப்போடு ஒதுக்கி வந்த அவர்களைத் தம் பேராதரவில் அணைத்துக்கொள்ள ஆசைகொண்டார்கள். இவ்வளவும் எதற்காக? தேசீய மனப்பான்மைக்கு எதிர் மனப்பான்மை ஊட்டவே. பெக் துரை இவ்வேலையை பக்தி வினயமாகச் செய்தார். 'சர் சையது தேசீயத்திலிருந்து கொஞ்சங் கொஞ்சமாக விலகும்படி பெக் துரை விடாது முயன்ருர். பிரிட்டிஷ் மிதவாதிகளிடம் கொண்டிருந்த பற்றை நீக்கிக் கன்ஸர்வேடிவ்களிடம் பற்று உண்டாகும்படி செய்தார். அரசாங்கத்திற்கும் முஸல்மான்களுக்கும் நல்லுறவை ஏற்படுத்துவதில் ஊக்கம் கொள்ளும்படி செய்தார். அவருடைய நோக்கில் ஒப்பற்ற வெற்றியடைந்தார்.'[1]

சர் சையது வருஷக்கணக்காய் நடத்திவந்த இன்ஸ்டிடியூட் கெஜட்டின் ஆசிரிய அந்தஸ்தை நாளடைவில் கைப்பற்றியது அவர் செய்த முதல் வேலைகளிலொன்ருகும். இதற்கு முன்னிருந்த பேராசிரியர்களைப் போலல்லாமல் இந்த ஐரோப்பியர் முஸ்லீம்மாணவர்களோடு தாராளமாகப் பழகினுர். அவர்களால் பெரிதும் விரும்பப்பட்டார். மற்ற ஆங்கிலப் பேராசிரியர்களும் அவருடைய குறிப்பை அறிந்து அவரைப்போல நடக்க ஆரம்பித்தார்கள். கல்லூரியில் பலதிறப்பட்ட சங்கங்களையும், காரியங்களையும் தொடங்கினுர்கள். அவர்களுடைய செல்வாக்குக் காரணமாக ஜில்லா அதிகாரிகள் கல்லூரி விளையாட்டுகளிலும் மற்ற நடவடிக்கைகளிலும் கலந்துகொண்டனர். அந்த மாகாணத்தின் லெப்டினன்ட் கவர்னர் சர் ஆக்லண்ட காலின் அந்தக் கல்லூரி மாணவரை இங்கிலாந்திலுள்ள கல்லூரி மாணவர்களோடு ஒப்பிட்டார். சர் சையது அகமது ஆங்கிலவாழ்க்கை முறையைப் பெரிதும் போற்றுகிறவர். மாணுக்கர்களிடையே மேனுட்டு நாகரிகத்தைப் புகுத்த முயன்ருர். அவரோடு ஒத்துழைப்பவர்களும் ஆதரிக்கிறவர்களும் இந்த எளிய நாட்டுக்கு அவ்வாழ்க்கைமுறை மிக உயர்ந்த செலவுடையதாகுமெனக் கருதினுர்கள். ஆனுல் இந்தக் காரணமும், இதோடு அலிகார் கல்லூரித் தலைமை பேராசிரியரும் மற்றப் பேராசிரியர்களும் அரசாங்க அதிகாரிகளோடு வைத்திருந்த தொடர்பும், சர்க்கார் கொள்கையில் மாறுதலும், அலிகார் கல்லூரி மாணுக்கருக்குச் சர்க்கார் உத்தியோகங்கள் கிடைக்கும்படி செய்தன. இவ்வளவும் சர் சையது அகமதின் மனத்தை மாற்றி விட்டன.

இன்ஸ்டிடியூட் கெஜட்டுக்குச் சர் சையது அகமது பேரளவில் ஆசிரியராயிருந்தாலும் உண்மையில் ஆசிரியராயிருந்தவர் பெக் துரை யாதலால் அப்பத்திரிகையின் கொள்கை மாறியது. அந்த நாட்களில் சர் சையது வங்காளிகளைப் போற்றினுர். 'அதுவரையும் வங்காளிகளுடைய நல்லெண்ணத்தில் சர் சையது அகமது ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தார். அவர்களால் தான் கல்வி அபிவிருத்தியும், சுதந்திர எண்ணமும் தேச பக்தியும் நாட்டில் ஏற்பட்டதென்று நினைத்தார். அவர்கள் இந்நாட்டு மக்கள் யாவரினும் தலை சிறந்தவர்களென்று பெருமை கொண்டார்.'[2] 'வங்காளிகளையும் அவர்களது இயக்கங்களையும் குறைவுபடுத்திப் பெக் துரை, இன்ஸ்டியூட் கெஜட்டில் தலையங்கம் எழுத ஆரம்பித்தார். இவைகளை எழுதியவர் சர் சையது என்று எண்ணப்பட்டது. வங்காளிகள் சர் சையதைக் குறைகூறத் தொடங்கினர். இவ்விதமாக வங்காளிகளோடு வெளிப்படைச் சச்சரவு தொடங்கியது.'[3]

1. Mehta & Patwardhan, op. cit., p. 58.
2. Tufail Ahmad, op. cit., p. 291. 3. *ibid.*, p. 292.

வங்காளிகள்மீது வெறுப்பை உண்டாக்குவதில் பெக் வெற்றியடைந்த இச்சந்தர்ப்பத்தில்தான் முதலாவது இந்திய தேசீய காங்கிரஸின் கூட்டம் 1885 டிஸம்பரில் பம்பாயில் திரு. W. C. பானர்ஜி என்ற வங்காளியின் தலைமையில் கூடியது.

காங்கிரஸின் நோக்கங்களை ஓர் இந்தியன் எதிர்க்கும்படியாக அவைகளில் ஒன்றுமில்லை. முதல் காங்கிரஸ் மகா சபையில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள்: "இந்தியா மந்திரியின் கௌன்சிலுக்குத் தேர்தல் நடத்த வேண்டும். மாகாணச் சட்டசபைகளில் அங்கத்தினர்கள் அதிகமாகத் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். பஞ்சாபிலும் ஐக்கிய மாகாணத்திலும் இத்தகைய சபைகளை அமைக்கவேண்டும். இங்கிலாந்திலும் இந்தியாவிலும் ஒரேமாதிரியான சிவில் சர்வீஸ் பரீட்சைகள் நடத்தப்படவேண்டும். ராணுவச் செலவைக் குறைக்கவேண்டும். மேல் பர்மாவைச் சேர்க்கக்கூடாது" என்பனவாம். சிவில் சர்வீஸ் பரீட்சைகளைப் பற்றியதும், சட்டசபைப் பெருக்கமும் ஏற்கெனவே 1884-ல் சுரேந்திரநாத் பானர்ஜியால் அலிகாரில் பேசப்பட்டவை. அக்கூட்டத்தைக் கூட்டி அதற்குத் தலைமை வகித்தவர் சர் சையது அகமதுவே. இவ்விஷயங்கள் ஆங்கிலோ—இந்தியப் பத்திரிகைகளின் எதிர்ப்பை மூட்டின. அப்பத்திரிகைகளுக்குப் பெக் கட்டுரை வழங்கினுர். அந்தச் சமயத்தில் சர் சையது ஒன்றுங் கூருது, 1886-ல் மகமதியக் கல்விக் காங்கிரஸ் ஏற்படுத்தியபோது, முஸல்மான்கள் அரசியல் விஷயங்களில் ஈடுபடுவதால் முன்னேறுவார்கள் என்பதைத் தாம் ஒப்புக்கொள்ளவில்லை யென்றும், அவர்களுடைய முன்னேற்றத்துக்குக் கல்வியபிவிருத்திதான் ஒரேவழி என்றும் கூறினுர். இந்தக் கல்விக் காங்கிரஸ் பின்னுல் மகமதியக் கல்வி மகாநாடு என வழங்கலாயிற்று.

காங்கிரஸின் இரண்டாவது கூட்டம் 1886 டிஸம்பரில் கல்கத்தாவில் தாதாபாய் நௌரோஜியின் தலைமையில் கூடியது. ஜூரிகள் வைத்து விசாரணை நடத்தவேண்டுமென்றும், நீதியையும் நிர்வாகத்தையும் பிரிக்க வேண்டுமென்றும், பாதுகாப்புத் தொண்டர்களைச் சேர்க்கவேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. முதலிரண்டு காங்கிரஸ் கூட்டங்களில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் முஸ்லீம் நலன்களை எவ்விதத்திலும் பாதிப்பவையல்ல. சிவில் சர்வீஸ் பரீட்சைகள் இரண்டு நாடுகளிலும் நடத்தப்பட வேண்டுமென்பதைச் சர் சையதே ஆதரித்திருக்கிருர். நீதியையும் நிர்வாகத்தையும் பிரிக்கவேண்டு மென்ற கோரிக்கை, முஸ்லீம் ஆட்சியில் ஏற்கெனவே அமுலிலிருந்த வழக்கத்தைச் சேர்ந்ததாகும். கம்பெனி ஆட்சியில் இவை இரண்டும் ஒன்ருக்கப்பட்டன; இடையில் கொஞ்ச காலம் பிரிக்கப்பட்டு, புரட்சிக்கப்புறம் மீண்டும் 1858-ல ஒன்று சேர்க்கப்பட்டன. சட்டசபைகளில் அங்கத்தினர்களின் எண்ணிக்கையைப் பெருக்குவதும் சட்டசபையில்லாத மாகாணங்களில் சட்டசபைகளை ஏற்படுத்துவதும் அவர் ஆதியில் ஆதரித்த விஷயங்களே. தேர்ந்தெடுக்கும் முறை சரியில்லை என்றுதான் 1883-ல் கூறினுர். ஆகவே அவர் காங்கிரஸை எதிர்ப்பதற்குக் காரணமேயில்லை. சில அதிகாரிகள் காங்கிரஸைப் புரட்சிகரமான இயக்கம் என்று கருதினுர்கள். அவர் மனத்திலும் இக்கருத்தைப் பதிய வைத்தார்கள். இதில் முக்கிய பங்கு கொண்டவர் பெக். முஸல்மான்கள் அரசியல் கிளர்ச்சிகளில் ஈடுபடுகிற அளவுக்குக் கல்வித் தேர்ச்சி யடையவில்லை என்றும், இப்பொழுது அவர்களைத் தூண்டிவிட்டால் 1857-ல் ஏற்பட்டதைப் போன்ற புரட்சியை

ஆரம்பித்துவிடுவார்களென்றும் அவருக்குப் போதிக்கப்பட்டது. அரசியல் கிளர்ச்சிகளில் ஈடுபடுவது அவர்களுக்குக் கெடுதியாக முடியுமென்று அவர் மனத்தில் நன்ருகப் பதிந்துவிட்டது. 1887 டிசம்பர் 12-ல் திரு. ஏ. ஓ. ஹியூம், சர் சையது அகமதுக் கெழுதிய வெளிப்படைக் கடிதமும் அதற்குச் சர் சையது வின் பதிலும் இன்ஸ்டிடியூட் கெஜட்டில் வெளியாயின.

காங்கிரஸின் மூன்ருவது கூட்டம் 1887 டிஸம்பரில் சென்னையில் கூடியது. தலைவர் திரு. பத்ருதீன் தயாப்ஜி. முஸ்லீம்கள் ஏராளமாக வந்திருந்தனர். அரசாங்க உயர்தர உத்தியோகஸ்தர்கள் இதன்மீது பகைமை கொள்ளாத காலம். காங்கிரஸ் பிரதிநிதிகளுக்குச் சென்னை கவர்னர் விருந்தளித்தார். ராணுவத்தில் உயர்ந்த உத்தியோகங்கள் இந்தியர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்றும், இந்தியாவில் ராணுவக் கல்லூரி ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும், ஆயுதச் சட்டத்தைத் திருத்தவேண்டு மென்றும், ஆயிர ரூபாய்க்குக் குறைந்த வருட வருமானத்துக்கு வரி விலக்கு வேண்டுமென்றும், தொழிற்கல்வி வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இதே சமயத்தில்தான் லக்ஷ்மணபுரியில் மகமதியக் கல்விக் காங்கிரஸ் கூடியது. அப்பொழுது நடந்த பொதுக்கூட்டத்தில்தான் காங்கிரஸை எதிர்த்து முதன் முதலாக சர் சையது அகமது பேசினர். இந்தியர் களும் ஆங்கிலேயர்களும் சரிசமமாக நடத்தப்பட வேண்டுமெனக் கூறிய இவர், நெடுந்தூரம் மாறியது பெரும் வியப்பே. "சட்ட சபைகளுக்கு அங்கத் தினர்களைத் தேர்தல்மூலம் தேர்ந்தெடுக்கக் கூடாது. அப்படிச் செய்வதால் சாதாரண கூட்டத்திலிருந்து அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படக்கூடும். ராஜப்பிரதிநிதியால் 'கௌரவமான எனது தோழனே' என்று அழைக்கப் படுவதற்கு அவர்கள் தகுதியற்றவர்கள். அவர்கள் பி.ஏ., எம்.ஏ. படித்திருக்க லாம்; திறமையாளராக இருக்கலாம்; எனினும், சட்ட சபைகளிலும், விருந்துகளிலும், பெரிய பெரிய ஆங்கிலப் பிரபுக்களோடு ஒருங்கே அமர முடியாது. ஆகையால் சபைகளுக்கு உயர்தர வகுப்பாரை அரசாங்கம் நிய மனம் பண்ணுமானல் அதற்காகக் குற்றம் சாட்டக்கூடாது" என்று கூறினர். இங்கிலாந்தில் நடத்தும் சிவில் சர்வீஸ் பரீட்சையில் ஓர் ஆங்கிலேயன்—அவன் பிரபு மகனே அல்லது ஒரு தையல் தொழிலாளி மகனே—தேறி இந்தியா வுக்கு வந்து அதிகாரம் பண்ணினல் இங்குள்ள யாவரும் அவனுக்குப் பணி வார்கள். ஏனெனில் அவனுடைய உண்மை அந்தஸ்து இங்கு தெரியாது. ஆனல் இந்தியாவில் பிறந்த ஒரு கீழ்த்தர வகுப்பினன் அந்தப் பரீட்சையில் தேறி வருவானுனல் இங்குள்ள உயர்தர வகுப்பினர் அவன் அதிகாரத் துக்குப் பணிய மறுப்பார்கள். ஏனெனில் அவனுடைய சமூக அந்தஸ்து இவர்களுக்குத் தெரியும். ஆகையால் இந்தியாவில் சிவில் சர்வீஸ் பரீட்சை நடத்தக் கூடாதென்ருர்.

எந்த விஷயத்தை முஸ்லீம் பிரதிநிதிகள் எதிர்க்கிருர்களோ அவ் விஷயத்தைக் காங்கிரஸ் மேற்கொள்ளாது என்று திரு. பத்ருதீன் தயாப்ஜி சர் சையது அகமதுக்கு எழுதினர். காங்கிரஸ் ஓர் அரசியல் ஸ்தாபனமாகை யால் அது எடுத்துக்கொள்ளும் எந்தப் பிரசினையும் முஸ்லீம்களுக்கு விரோத மாகவே யிருக்கும் என்று அவர் பதில் எழுதிவிட்டார். சர் சையதை இவ் வளவு பூரணமாகப் பெக் மனம் மாற்றி, வழி மாற்றியது நமக்குப் புலனுகிறது. சர் சையதின் பேச்சின் காரணமாக அனேக முஸ்லீம்கள் காங்கிரஸை விட்டு விலகி இந்தியாவில் பிரதிநிதித்வ முறையைப் புகுத்தக் கூடாதென்று

கிளர்ச்சி செய்தார்கள் என்று அலிகார் கல்லூரிச் சரித்திரத்தை எழுதிய சர் தியோடர் மாரிசன் அழுத்தமாய்க் கூறுகிறார். 1888-மார்ச்சில் சர் ஆக்லண்ட் கால்வின் அலிகார் கல்லூரியைப் பார்வையிட்டார். அங்கு கொடுத்த வரவேற்புக்குப் பதிலளிக்கும்போது அக்கல்லூரியையும் மாணவர்களையும் வானளாவப் புகழ்ந்தார். அடுத்த ஏப்ரலில் மீரத்தில் சர் சையது இரண்டாவது முறையாகக் காங்கிரஸைத் தாக்கிப் பேசினர். 1888-டிசம்பரில் அலகாபாத்தில் காங்கிரஸ் கூடுவதாக இருந்தது. சர் ஆக்லண்ட் கால்வினும் அவருடைய அரசாங்கமும் கூட்டத்தைத் தடுக்க எவ்வளவோ முயன்றனர். ஆயினும் கூட்டம் நடந்தது. திரு. ஏ. ஓ. ஹியூமுக்குக் காங்கிரஸை நிறுவ ஆதரவளித்த டப்ரின் பிரபு இதற்குள்ளாக அதற்கெதிரானார்.

இந்தச் சமயத்தில் பசுக் கொலையைத் தடுக்க ஓர் இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது. சர்க்கார் சார்பிலுள்ள முஸல்மான்கள் இதைப் பயன்படுத்திக் கொண்டார்கள். அலகாபாத்தில் ஒரு கூட்டம் கூட்டினார்கள். இவ் வியக்கத்தை எதிர்த்தும், காங்கிரஸில் முஸ்லீம்கள் சேருவதை எதிர்த்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. முஸல்மான்கள் காங்கிரஸில் சேருவதை எதிர்த்துச் சிலர் ஒரு **பத்வா** வெளியிட்டார்கள். இதற்கெதிராக மௌல்வி அப்துல் காதிர் லுதியான்வி **பத்வாக்களைப்** பெற்றுப் பிரசாரம் செய்தார். அவைகளில் லூதியானா, ஜலந்தர், ஹோஷியார்பூர், கபூர்தலா, அமிர்தசரஸ், சாப்ரா, குஸ்ரத், ஜான்பூர், பெரோஸ்பூர், கசூர், முஸபர்நகர், டில்லி, ராம்பூர், பரீலி, மொராதாபாத் முதலிய ஊர்களிலுள்ள உலாமாக்கள் கையொப்பமிட்டிருந்தனர். இன்னும் மதினா மனோவரா, பாக்தாது ஷரீபு உலாமாக்களின் கையெழுத்துக்களும் அவைகளில் இடம் பெற்றிருந்தன. அவைகளில் கையொப்பமிட்டவர்கள் அக்காலத்தில் பெயர் பெற்ற உலாமாக்களும், மதகுருக்களுமாவர். லௌகிக விஷயங்களில் முஸ்லீம்கள் இந்துக்களுடன் சேர்ந்து காங்கிரஸில் வேலை செய்வது அனுமதிக்கத் தக்கதே என்று **இப்பத்வாக்கள்** கூறின. இப்படியாக ஒருபக்கம் பெரிய மனிதரான சையது அகமது காங்கிரஸுக்கு எதிராக இருக்க, மற்றொரு பக்கம் பம்பாய், சென்னையிலுள்ள முஸல்மான்கள், தயாப்ஜி அலிமகம்மது பீம்ஜி, ரஹமத்துல்லா சயானி போன்ற தலைவர்கள் சூழ்ந்து நின்று காங்கிரஸுக்கு ஆதரவளித்தார்கள். புகழ் பெற்ற உலாமாக்கள் முஸ்லீம்கள் அதில் சேருவதை அனுமதித்தனர்.

1888-ஆகஸ்டில் அலிகாரில் ஐக்கிய இந்திய தேசாபிமானச் சங்கம் ஒன்று ஏற்படுத்தப்பட்டது. அதில் இந்துக்களும் முஸ்லீம்களும் கலந்து கொண்டனர். அதன் நோக்கங்கள்; (1) இந்தியப் பிரபுக்களும் அரசர்களும் காங்கிரஸில் சேரவில்லையென்பதை இங்கிலாந்து மக்களுக்கும், பாராளுமன்றத்துக்கும் பத்திரிகைகள் மூலமாகவும் பிரசுரங்கள் மூலமாகவும் தெரிவிப்பது; காங்கிரஸ் அறிக்கைகளுக்கு மறுப்பு எழுதுவது. (2) காங்கிரஸுக்கு எதிரான இந்து முஸ்லீம் சங்கங்களுடைய அபிப்பிராயங்களை இங்கிலாந்து மக்களுக்கும் பாராளுமன்றத்துக்கும் அப்போதைக்கப்போது தெரிவிப்பது. (3) சட்டத்தையும், அமைதியையும் நிலை நாட்ட உதவியளிப்பது; இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியை வலுப்படுத்துவது; ஜனங்கள் காங்கிரஸை விட்டு விலகும்படி செய்வது. இந்தத் திட்டம் முழுதும் திரு. பெக்கினுடைய அரிய முயற்சியின் பலனாகும்; இத் திட்டத்தை செயலம்சத்தில் கொண்டுவரும் பொறுப்பு சர் சையதிடமும், பெக்கிடமும் ஒப்படைக்கப்பட்டது. ஐக்கிய இந்திய

தேசாபிமானச் சங்கத்தின் கிளையொன்று இங்கிலாந்தில் திரு. மாரிசன் வீட்டில் ஆரம்பிக்கப்பட்டது. திரு. பெக்குக்குப்பின் இவரே அலிகார் கல்லூரியின் தலைமைப்பேராசிரியரானார். சமஸ்தான அரசர்களை இதற்கு ஆதரவாளர்களாக நியமிப்பதென்று தீர்மானிக்கப்பட்டது. இந்து முஸ்லீம் வகுப்பைச் சேர்ந்த முதலாளிகளும், மிராசுதார்களும், சில ஐரோப்பியர்களும் இதில் சேர்ந்தார்கள். இந்திய ராஜாபிமானச் சங்கம் ஒன்று ஏற்படுத்த வேண்டுமென்று ராஜா ஷியோப்பிரசாத், அயோத்தி தாலுக்தார் சங்கத்தில் ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். தேசாபிமானச் சங்கம் இதற்குக் கிளையாக இருக்கவேண்டுமென்றும் கூறினார். கலகங்களையும் இடைஞ்சல்களையும் ஏற்படுத்தக்கூடிய பேச்சுக்களையோ, எழுத்துக்களையோ தடைசெய்ய வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ள வேண்டுமென்றும் ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். இவ்வளவுக்கும் அடிப்படை நோக்கம் காங்கிரஸை நசுக்குவதே. அரசாங்கமும், ஐக்கிய இந்திய தேசாபிமானச் சங்கமும், ராஜா ஷியோப்பிரசாத் போன்ற பெரிய பெரிய மனிதர்களும், ஒன்று கூடி எதிர்த்தும் அலகாபாத் காங்கிரஸ் அமோகமாகக் கூடியது. இதற்கு முந்திய கூட்டத்திற்கு வந்தவர்கள் 607 பிரதிநிதிகள். இந்தக் கூட்டத்திற்கு வந்தவர்கள் 1248 பிரதிநிதிகள். அலிகார் தலைவர்கள் எதிர்ப்பின் பலனாக அதிகமான முஸ்லீம்கள் வந்திருப்பதை முஸ்லீம் பிரதிநிதிகளே எடுத்துக் காட்டினார்கள். இந்த அலகாபாத் காங்கிரஸ் கூட்டத்தைக் கெடுக்க எவ்வளவோ தந்திரங்கள் செய்யப்பட்டன. அதில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் என்ன? மதுவிலக்கு, கல்விக்கு அதிக நிதியளிப்பது; நிரந்தர நிலவரியை விஸ்தரிப்பது, உப்பு வரி ஒழிப்பு என்பவையேயாம்.

1889ல் பாராளு மன்றத்தில் திரு. பிராட்லா ஒரு சட்டம் கொண்டு வந்தார். இந்தியாவில் ஜனநாயக ஸ்தாபனங்களை ஏற்படுத்த வேண்டுமென்பது அதன் நோக்கம். திரு. பெக் அதை எதிர்த்து ஒரு யாதாஸ்துத் தயார் செய்தார். இந்தியாவில் பலவித ஜாதியார்கள் இருப்பதால் ஜனநாயக ஸ்தாபனம் இந்தியாவுக்கு ஏற்றதல்ல என்பது அதன் வாசகக் கருத்து. அலிகார் கல்லூரி மாணாக்கரை படை படையாக அனுப்பி அந்த யாதாஸ்தில் கையொப்பங்கள் வாங்கினார். ஒரு மாணவர்படைக்குத் தாமே தலைமை வகித்து டில்லிக்குச் சென்றார். 'ஜும்மா மசூதி வாசற்படியில் அவரே உட்கார்ந்து கொண்டார். மாணாக்கர், தொழுகைக்கு வருபவர்களிடமிருந்து, கையெழுத்து வாங்கினர். இந்துக்கள் பசு வதையைத் தடுக்கிறார்கள், அதை எதிர்த்து இந்த யாதாஸ்து அரசாங்கத்துக்கு அனுப்பப்படவேண்டுமென்று அந்த ஜனங்களிடம் எடுத்துரைத்தார்கள். அலிகார் கான்பரன்ஸ் கெஜட்டில் வாலாய்ட் ஹுசேன் சாஹிப் இது விஷயத்தைச் சொல்லியிருக்கிறார். டில்லியில் மட்டும் 20,735 கையொப்பங்கள் வாங்கி, இந்த அதிசய விண்ணப்பம் 1890-ல் பாராளு மன்றத்துக்கு அனுப்பப்பட்டது.'[4]

ஐக்கிய இந்திய தேசாபிமானச் சங்கம், முஸ்லீம்களின் பேரால் காங்கிரஸைச் சில வருஷங்களுக்கு எதிர்த்து வந்தது. ஆனால் 1893-ல் புதியதொரு சங்கம் ஆரம்பிக்கப்பட்டது. அதன் திருநாமம், வட இந்திய மகமதிய ஆங்கிலோ-ஓரியண்டல் பாதுகாப்புச் சங்கம். அதன் நோக்கங்களாவன: (அ) ஆங்கில மக்களுக்கும் இந்திய அரசாங்கத்துக்கும் முஸல்மான்களுடைய

4. Tufail Ahmad, op. cit., pp. 311-12.

அபிப்பிராயத்தைத் தெரிவித்து அவர்களது அரசியல் உரிமைகளைப் பாது காப்பது. (ஆ) முஸல்மான்களிடையே அரசியல் கிளர்ச்சி பரவாதவாறு தடுப்பது. (இ) பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கைகளைப் பலப்படுத்துவதற்கு வேண்டிய காரியங்களை யெல்லாம் மேற்கொள்வது; சட்டத்தையும் அமைதி யையும் நிலைநாட்ட உதவுவது; மக்களிடையே ராஜாபிமானத்தை வளர்ப்பது. தேசாபிமானச் சங்கம் இந்து முஸ்லீம்களின் கூட்டுச் சங்கம்போலத் தோன்று கிறதல்லவா? பிரிட்டிஷ் ஆட்சியைப் பலப்படுத்துவதில்கூட இரு சமூகத் தாரும் ஒத்துழைப்பதைத் திரு. பெக் துரையால் காணச் சகிக்கவில்லை. ஆகவே, பாதுகாப்புச் சங்கம் ஏற்படுத்தினர். மற்ற இந்தியர்களிலிருந்து முஸல்மான்கள் பிரிக்கப்பட்டார்கள். ஆனால் பிற்போக்காளரான ஆங்கிலேயர் களுடன் சேர்ந்துகொண்டார்கள். அதற்குப் 'பாதுகாப்புச் சங்கம்' என்றும் பெயர் கொடுக்கப்பட்டது. 1883-ல் ரிப்பன் பிரபு காலத்தில் ஏற்பட்ட ஆங்கிலோ—இந்தியப் பாதுகாப்புச் சங்கத்திலிருந்து இதன் பெயர் கடன் வாங்கப்பட்டது. அந்த ஆங்கிலோ இந்தியச் சங்கத்தின் நோக்கம் நிறை வேறவும், அதுவும் நின்றுவிட்டது. இந்தப் புதிய பாதுகாப்புச் சங்கத்திற்கு திரு. பெக் காரியதரிசி ஆனர்.

பிராட்லா சட்டத்திற்கு எதிராகக் கையொப்பங்கள் வாங்கியனுப்பிய போதிலும் அதில் இரு பெருங்குறைகள் இருப்பதை, இந்தப் புதிய பாது காப்புச் சங்கத் திறப்பு விழாவில் திரு. பெக் எடுத்துக்காட்டினர். அது இந்து முஸ்லீம்களின் கூட்டு அமைப்பாக இருக்கிறது. அனேக கிளைச் சங்கங் களைச் சேர்த்துக்கொண்டிருக்கிறது. இரண்டாவதாக அது பொதுக் கூட் டங்களைக் கூட்டி அரசியல் கிளர்ச்சிகளை உண்டுபண்ணுகிறது. பாது காப்புச் சங்கம் முஸல்மான்களுடைய தனிச் சங்கமாக இருக்கும். அதில் இந்துக்கள் சேர்க்கப்படமாட்டார்கள். இச்சங்கம் பொதுக் கூட்டங்கள் போடாது; அரசியல் கிளர்ச்சி ஏற்படுத்தாது. இதர சங்கங்களையும் தன் னோடு இணைக்காது. அதற்கு ஒரு நிர்வாக சபை இருக்கும். பொது அங்கத் தினர்களிடம் வேலையை விட்டுவிடாது. எல்லா வேலைகளையும் சபையே கவனித்துக்கொள்ளும். திரு. பெக்கின் பேச்சிலிருந்து சிறப்பான பகுதிகளை மேற்கோளாகக் காட்டுவது நல்லது. 'கடந்த சில வருஷங்களாக நாட்டில் இருவிதக் கிளர்ச்சிகள் வலுவடைந்து வருகின்றன. ஒன்று தேசீய காங்கிரஸ். மற்றொன்று பசுக்கொலை எதிர்ப்புச் சங்கம். முதல் கிளர்ச்சி முழுதும் ஆங்கிலேயர்களுக் கெதிரானது; பின்னது முஸல்மான்களுக்கெதி ரானது. ஆங்கில அரசாங்கத்தின் அரசியல் அதிகாரத்தைப் பறித்துச் சில இந்துக் கூட்டத்தினரின் கையில் கொடுப்பதும், ஆளும் வர்க்கத்தினரின் பலத்தைக் குறைப்பதும், ஜனங்கள் கையில் ஆயுதங்களளிப்பதும், இராணு வத்தைக் குறைத்து அதன் செலவைக் குறைப்பதும் காங்கிரஸின் நோக்கம். இந்த நோக்கங்களுக்கு முஸல்மான்கள் ஆதரவளிக்க முடியாது. பசுக்கொலை எதிர்ப்பின் நோக்கம் முஸ்லீம்கள் பசுப் பலியிடுவதைத் தடுப்பதும், குறிப் பாக ஆங்கிலேயரும் முஸ்லீம்களும் உணவுக்குப் பசுக்கொலை செய்வதைத் தடுப்பதுமாகும். பசுக்கொலையைத் தடுக்கும்பொருட்டு எதிரிகளை பஹிஷ் காரம் செய்து பணியவைக்கிறார்கள். இதன் காரணமாகப் பம்பாய், அஸம் கார் முதலிய இடங்களில் கோரமான கலகங்கள் ஏற்பட்டன. இந்த இரு இயக்கங்களும் முஸல்மான்களையும் ஆங்கிலேயரையும் தாக்குவன. ஆகவே முஸல்மான்களும் ஆங்கிலேயரும் ஒன்று சேர்ந்து அவைகளை எதிர்க்கவேண்

டும். இந்த நாட்டுக்குப் பொருந்தாததாகையால் ஜனநாயக ஸ்தாபனங்களை ஏற்படுத்தக்கூடாது. ராஜ விசுவாசத்தையும் காரிய ஒற்றுமையையும் ஏற்படுத்தப் பிரசாரம் செய்யவேண்டும்.'[5]

பிராட்லா சட்டத்தை எதிர்த்து 50,000 கையொப்பம் கொண்ட யாதாஸ்தைத் திரு. பெக் அனுப்பினுரென்று ஏற்கெனவே கண்டோம். சிவில் சர்வீஸ் பரீட்சைகள் இந்தியாவில் நடத்தப்படுவதை எதிர்த்து முஸ்லீம்களின் கையொப்பங்களைக் கொண்ட மற்றொரு யாதாஸ்தையும் அனுப்பும்படி செய்தார். இந்த யாதாஸ்தின் கோரிக்கையை அரசாங்கம் அங்கீகாரம் செய்தது என்ற செய்தி கிடைக்கவும் உடனே பாதுகாப்புச் சங்கம் கூடி ஒரு வந்தனமளிப்புத் தீர்மானம் நிறைவேற்றியது. அத்தீர்மானத்தில், இந்தியாவிலும் பரீட்சையை நடத்துவதால் பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவில் ஆட்டம் கண்டுவிடுமென்றும், வலுக்குறைந்துவிடுமென்றும், உயிரையும் பொருளையும் காப்பாற்றுவது கஷ்டமாகிவிடுமென்றும், அதனுல் இந்தியாவின் அறம் பொருள் வளர்ச்சிகளுக்குக் கேடெய்தும் என்றும் சேர்க்கப்பட்டது.

அரசாங்க உத்தியோகங்களுக்கு இந்தியாவில் போட்டிப் பரீட்சைகள் நடத்துவதையும் எதிர்க்கும்படி திரு. பெக் வேலை செய்தார். அரசாங்க உத்தியோகங்களைப் பெறுவதற்கு முஸல்மான்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மீது தாங்கள் செலுத்தும் விசுவாசத்தை நம்பியிருக்க வேண்டுமென்று போதித்தார். பாதுகாப்புச் சங்கம் இங்கிலாந்திலும் பிரசாரம் நடத்தியது. 1895-ல் திரு. பெக் அங்கு சென்று பேசினுர். ஆங்கில-முஸ்லீம் ஒற்றுமை ஏற்பட முடியுமே தவிர, இந்து-முஸ்லீம் ஒற்றுமை ஏற்படுவது சாத்தியமல்ல என்பதும், பிரதிநிதித்துவ முறை இந்தியாவுக்கு முழுதும் ஏற்றதல்லவென்பதும் அவருடைய பேச்சின் கருத்து. அப்படி ஏற்படுத்துவதானுல் பெரும்பான்மையினரான இந்துக்கள், முஸ்லீம்களை அமுக்கிவிடுவார்கள் என்ருர். இந்தச் சொற்பொழிவில் சிலசமயம் முஸ்லீம்களை முதுகில் தட்டிக் கொடுத்தார். ஒழுங்காக நடந்துகொள்ளாவிட்டால், அதாவது இந்துக்களைப் பின்பற்றினுல் கொடிய விளைவுகள் ஏற்படும் என்றும் பயமுறுத்தினுர்.

இந்தச் சமயத்தில் பிரிட்டிஷ் சர்க்கார், எல்லைப்புறத்தில் தன் விஸ்தரிப்புக் கொள்கையை உக்ரமாக நடத்த எண்ணங்கொண்டது; இராணுவச் செலவை அதிகமாக்க விரும்பியது. ஆனுல் இதற்கோ காங்கிரஸ் எதிர்ப்பு இருந்தது. 1896-ல் பாதுகாப்புச் சங்கத்தின் வருஷாந்திர அறிக்கையில், தரைப்படை, கப்பற்படைகளை வலுப்படுத்தினுல்தான் அரசாங்கம் அசையாதென்று திரு. பெக் வற்புறுத்தினுர். ராணுவச் செலவைக் குறைக்கக் கூடாதென்று சர் சையது அகமதுவே அச்சங்கத்தில் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். இதுபற்றிப் பேசும்பொழுது தம்முடைய அபிப்பிராயத்தில் ஆங்கிலச் சிப்பாய்களின் எண்ணிக்கை குறைவாக இருப்பதாகவும், எல்லைப்புறப் பாதுகாப்புப் போதுமானதாக இல்லையென்று டப்ரின் பிரபுவிடம் தாம் கூறினதாகவும் சொன்னுர்.[6] இதற்கெதிராகக் காங்கிரஸ் எல்லைப்புறத்தில் சர்க்கார் கையாளும் விஸ்தரிப்புக் கொள்கையை எதிர்த்தும், எல்லைப்புறவாசிகளிடம் சிநேகமாக நடந்துகொள்ள வேண்டுமென்றும், ஸ்வாட் பள்ளத்தாக்கில் செலவிடப்படும் தொகையைக் குறைக்கவேண்டு மென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றியது. எல்லைப்புற விஸ்தரிப்பு நடவடிக்கைகள் ஏராளமான

5. Tufail Ahmad, op. cit., p. 315.
6. *ibid*., p. 330.

எல்லைப்புறவாசிகளின் சாவுக்குக் காரணமாயிருந்தது. அவர்கள் யாவரும் முஸல்மான்கள். அக்கொள்கையைக் காங்கிரஸ் எதிர்க்கும்போது மகமதியப் பாதுகாப்புச் சங்கம் அக்கொள்கையை உக்ரமாக நடத்தவேண்டுமென்றும் அதிகப் பணம் செலவிட வேண்டுமென்றும் கோரியது.

இவ்விஷயங்க ளெல்லாம் அனேக முஸ்லீம்கள் மனத்தில் ஆழ்ந்த சிந்தனையைக் கிளப்பிவிட்டன. ஒருபக்கம் சர் சையதுமீது விசுவாசம்; இன்னொரு பக்கம் முஸல்மான்களின் உண்மையான நலன்களைப் பாதுகாக்க வேண்டுமென்று ஆசை. இவைகளுக்கிடையே கிடந்து அல்லலுற்றூர்கள். சில வருஷங்கள் கழித்து 1907-ல் நவாப் வாக்கர்-உல்-மல்க் எழுதிய கடிதத்தி லிருந்து இது தெளிவாகிறது: 'இதை யெல்லாம் கண்ட சில தர்மகர்த்தாக்கள், சர் சையது அதிகாரமும், செல்வாக்கும், பெருமையும், ஒப்பில்லாத்தன்மையும் உடையவராக இருந்தாலும், முஸ்லீம்களின் நலத்தை மாத்திரம் கவனிப்பதே யொழிய தங்களுடைய மாபெருந் தலைவரென்பதற்காக அவரைப் பின்பற்றுவ தில்லை என்ற முடிவுக்கு வந்தார்கள். லாகூர் பத்திரிகை பைசா இக்பாரில் கட்டுரைகள் எழுதுவதெனத் தீர்மானித்தார்கள். இக்கட்டுரைகள் கையொப்பமில்லாமல் வருபவையல்ல; நவாப் மோஹ்ஸின்-உல்-மல்க், ஷாம்ஷுல்-உலேமா-மௌல்வி க்வாஜா அல்டாப் ஹுசேன் ஹாலி முதலியோர்களுடைய கையொப்பத்தோடு அடியேனுடைய கையொப்பமும் பெற்று வெளிவருவதாக இருந்தன. முதல் கட்டுரையை நான் எழுதி நவாப் மோஹ்சின்-உல்-மல்க் பகதூருக்கும்-ஷாம்ஷுல் உலேமாமௌல்வி ஹாலி சாகெப்புக்கும் கையொப்பத்திற்காக அனுப்பினேன். அவ்விருவரும் அலிகாரில்தான் அப்போது வசித்தார்கள் என்று நினைக்கிறேன். திடீரென்று தலைவருடைய மரணச்செய்தி எட்டியதும் உடனே நவாப் மோஹ்சின்-உல்-மல்குக்கு அக் கட்டுரைகளைத் திருப்பி அனுப்புமாறு தந்தி கொடுத்தேன். அவருடைய சாவுக்குப் பின் அவருடைய நற்குணத்தையும் நிகரற்ற திறமைகளையும் தவிர வேறொன்றையும் நினைப்பதற்கில்லை. அப்பொழுது அக்கட்டுரைகளை எழுதுவ தென்ற எண்ணத்தைக் கைவிட்டபடியால் எந்தவிதப் புகாரும் சொல்ல முடியாது. கல்லூரியின்நன்மைக்காக் இப்பொழுது இவ்விஷயங்களை வெளி யிடுகிறேன்.'[7]

1898-ல் சர் சையது இறந்த பிறகு திரு. பெக் அவருடைய கொள்கை யைப் பின்பற்றி வந்தார்; அவரும் அடுத்த வருஷம், 1899-ல் காலஞ்சென்றூர்.

உலகத்தின் பல பாகங்களிலும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைப் பெருக்கிய ஆங்கிலேயர்களில் இவரும் ஒருவர், கடமையை நிறைவேற்றுகையில் உயிரை இழக்கின்ற வீரனைப்போல இவரும் இறந்தார் என்று அலகாபாத் உயர் நீதி மன்றத்தின் தலைமை நீதிபதி சர் ஆர்தர் ஸ்ட்ராச்சி, திரு. பெக்கைப் பற்றிக் கூறியுள்ளார்.

திரு. பெக்குக்குப் பிறகு திரு. தியோடார் மாரிசன் கல்லூரியின் தலைமைப் பேராசிரியரானூர். இங்கிலாந்தில் இவருடைய வீட்டில்தான் தேசாபிமானச் சங்கத்தின் கிளை ஏற்படுத்தப்பட்டது என்பது ஞாபகமிருக்கும். இவர் திரு. பெக்கின் பதவியை மாத்திரம் வகித்ததோடல்லாமல் அவருடைய அரசியல் பிரதிநிதியாகவும் இருக்கவேண்டியது இயற்கையே. இந்துக்களினின்றும் முஸ்லீம்களைப் பிரிக்கக்கூடிய சில சம்பவங்கள் நடந்தன. இவை

7. Extract from *Waqar-i-Hayat*, p. 420, quoted by Moulvi Tufail Ahmad, op. cit., 334.

களில் அலிகார் கல்லூரிப் பேராசிரியர்களும் ஈடுபட்டிருந்தனர். ஏப்ரல் 1900-ல் ஐக்கிய மாகாண சர்க்கார் ஒரு தீர்மானம் கொண்டுவர, அதன் விளைவாக உருது நாகரிக் கிளர்ச்சி உண்டாயிற்று. நீதி மன்றங்களில் நாகரி லிபியை உபயோகிக்கலாமென்ற சர்க்கார் உத்தரவை இந்துக்கள் ஆதரிக்க, அதை முஸல்மான்கள் எதிர்த்தார்கள். நெடுங்காலமாக இந்துக்கள் நாகரியை உபயோகிக்க வேண்டுமென்று கிளர்ச்சி செய்தார்கள். சர் சையது அதற்குக் குறுக்கிட்டதால் அது வெற்றி பெறவில்லை. 1900-ல் பிளேக் நோய் அந்த மாகாணத்தில் பரவியது. நோயாளிகளை அப்புறப்படுத்த சர்க்கார் நடவடிக்கைகள் எடுத்ததால் சில இடங்களில் கலகங்கள் ஏற்பட்டன. இதில் இந்துக்களும் முஸ்லீம்களும் சேர்ந்துகொண்டனர். 1900 ஏப்ரல் முதல் தேதி இத்தகைய கலகம் ஒன்று கான்பூரில் நடந்தது; சர்க்காருக்குப் பீதி ஏற்பட்டது. இது நடந்த பதினைந்து நாட்களுக்கெல்லாம், நீதி மன்றங்களிலும் சர்க்கார் அலுவலகங்களிலும் நாகரி லிபியை உபயோகிக்கலாமென்ற தீர்மானம் வந்தது. இதன் விளைவாக இந்து முஸ்லீம் கலவரம் ஏற்பட்டது. 1900-ம் ஆண்டு மே மாதத்தில் சட்டாரி நவாப் தலைமையில் அலிகாரில் ஓர் எதிர்ப்புக் கூட்டம் நடந்தது. நவாப் மோஹ்சின்—உல்—மல்க் கடுமையாகப் பேசினார். நாகரித் தீர்மானத்தை வாபஸ் வாங்க வேண்டுமென்று ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட்டது; தலைவர் இதனால் சர்க்காரின் கோபத்துக்காளானார், தலைமைப் பதவியை ராஜிநாமா செய்தார். நவாப் மோஹ்சின்—உல்—மல்க் அதன் தலைவரானார். அது பற்றியும் சில சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். லெப்டினண்ட் கவர்னரே அலிகாருக்கு நேரில் சென்றார்; கல்லூரி தர்ம கர்த்தாக்களைக் கண்டு மோஹ்சின்—உல்—மல்க் ஒன்று உருது மாநாட்டின் தலைவராக இருக்கவேண்டும் அல்லது கல்லூரி அமைச்சராக இருக்க வேண்டுமென்று சொன்னார். கல்லூரி அமைச்சராக இருந்து கொண்டே அரசியல் கிளர்ச்சியும் செய்ய முடியாது. கல்லூரியின் முக்கியத்துவத்தினால் கல்லூரி தர்மகர்த்தாக்களின் பலமான வேண்டுகோளுக் கிணங்கி உருது மகாநாட்டுத் தலைமைப் பதவியினின்று அவர் விலகிக் கொண்டார். தேசாபிமானச் சங்கம், மகமதிய எதிர்ப்புச் சங்கம் ஆகியவைகளின் வேலை, காங்கிரஸை எதிர்ப்பதே. இந்தியாவில் பிரதிநிதித்துவ முறை, இந்தியாவில் சிவில் சர்வீஸ் பரீட்சை, ராணுவச் செலவைக் குறைப்பது, உப்புவரி ஒழிப்பு, ஆயுதச் சட்டத் திருத்தம் முதலானவைகளை யெல்லாம் எதிர்ப்பது அரசாங்கத்தின் வேலை. இவைகளெல்லாம் அரசியல் காரியம் என்று கருதப்படவில்லை. கல்லூரி அமைச்சர் சர். சையது அகமது மாத்திரமின்றி அதன் தலைமைப் பேராசிரியர் திரு. பெக்கும் இக்காரியங்களில் அனுமதிக்கப் பட்டதன்றி அரசாங்கத்தால் ஊக்கமளிக்கவும் பட்டனர். ஆனால் இப்பொழுது நவாப் மோஹ்சின்—உல்—மல்க் உருது மாநாட்டு வேலையைச் செய்ய அனுமதிக்கப்படவில்லை. ஏனெனில் அது அரசியல் எனப்பட்டது. காரணம் தெளிவானது. முந்திய காரியங்கள் சர்க்காருக்குச் சாதகமானவை, பிந்தியது அதற்குப் பாதகமானவை.

நாகரி லிபிக்கெதிரான கிளர்ச்சியை சங்கடப்பட்டு அடக்கி விடலாமென்று மாரிஸன் அறிந்து கொண்டார். ஒருவித அரசியல் கிளர்ச்சியும் விரும்பத்தக்கதல்ல என்று ஆலோசனை கூறினார். ஜனநாயக ஸ்தாபனங்களால் ஏற்படும் கெடுதிகளை எடுத்துக்காட்டினார். 1901-ல் இன்ஸ்டிடியூட் கெஜட்டில் அவருடைய கடிதமொன்று பிரசுரிக்கப்பட்டது. அதில் 'ஜன நாயக ஆட்சி சிறுபான்மையோரை மரம் வெட்டிகளாகவும், நீரிறைப்பவர்

களாகவும் ஆக்கிவிடுமெனக்'[8] கூறியிருந்தார். முஸல்மான்களுக்குத் தனி ஸ்தாபனம் வைத்திருப்பதும் விரும்பத்தகுந்த தல்ல; இவ்வகுப்பினரில் பெரும் பணக்காரர்கள் சர்க்காரின் கோபத்துக்குப் பெரிதும் அஞ்சுவதால் அதில் சேரமாட்டார்கள். முஸல்மான்களுக்குள்ளேயே இது வேறுபாட்டை உண்டாக்கிவிடும். ஆகவே அவர் கூறியதாவது: 'என்னுடைய அபிப்பிராயத்தில் அரசியல் ஸ்தாபனம் நன்மைக்குப்பதிலாக முஸல்மான்களுக்குத் தீமையையே விளைவிக்கும். ஏனெனில் கடந்த இருபது அல்லது இருபத்தைந்து வருடங்களாகச் சர்க்கார் அவர்களுக்குச் சலுகை காட்டியே வந்திருக்கிறது. காங்கிரஸைப் போல அவர்களும் ஒரு ஸ்தாபனத்தை ஆரம்பித்து உரிமைகளைக் கேட்பதனுல், பாராளுமன்றம் ஒரு கமிஷனரை ஏற்படுத்த வேண்டியிருக்கும். சர் அந்தோனி மாக்டானல் கையில் தங்களுடைய பாரத்தைப் போட்டு விட்டால் எவ்வளவு நன்மை கிடைக்குமோ அவ்வளவு நன்மையை அந்தக்கமிஷன் மூலமாக எதிர்பார்க்க முடியாது.'[9]

முஸல்மான்கள் அரசியல் உரிமைகளைக் கேட்பதால் அவர்களுக்குக் காட்டிவந்த சலுகைகள் நின்றுவிடுமென்பதையும் எடுத்துக்காட்டினர். அவர்களுக்கு ஒரு கௌன்சில் இருந்தால் போதுமென்று கூறினர். அக்கௌன்சிலில் உள்ளவர்கள் திறமைசாலிகளாகவும் அரசியல் இலக்கியங்களை நன்கு கற்றவர்களாகவுமிருந்து சட்டசபை அங்கத்தினர்களுக்கு ஆலோசனை கூற வேண்டும். முஸல்மான்கள் அரசியல் பிரசினையைக் கவனியாது பொருளாதார விஷயங்களையே மேன்மேலும் கவனிக்க வேண்டுமென்றுங் கூறினர்.

இந்தத் தீர்மானம் போதுமான பணம் இல்லாததால் உருவாக்கப்படவில்லை. மௌல்வி துபாயில் அகமது கூறுவதைப் போல அந்தச் சமயத்திற்கு முஸல்மான்களுடைய எல்லா அரசியல் இயக்கங்களும் புதைக்கப்பட்டன.

நாகரி உருதுத் தகராறில் கல்லூரி அமைச்சர் பங்கெடுத்துக் கொள்வதைச் சர்க்கார் எதிர்த்தாலும், அரசியல் காரியங்களுக்கு அக்கல்லூரி மாணக்கர்களை உபயோகப்படுத்தச் சர்க்கார் தயங்கவே இல்லை. அந்த நாட்களில் பாரசீகத்தின் நல்லெண்ணத்தைச் சம்பாதிப்பதற்கு ரஷ்யாவும் இங்கிலாந்தும் போட்டியிட்டன. பாரசீகத்திலிருந்து சில மாணவர்களைக் கொண்டு வந்து அலிகார் கல்லூரியில் படிக்கச்செய்வதென்று 1902-ல் கர்ஸன் பிரபு விரும்பினர். கல்லூரியிலிருந்து ஒரு கோஷ்டி பாரசீகம் செல்வது எனத் திரு. மாரிஸன் தீர்மானம் கொண்டு வந்தார். கல்லூரிப் பணத்திலிருந்து அதற்குச் செலவிடுவதை நவாப் மோஹ்சின்—உல்—மல்க் எதிர்த்தும் கடைசியாக மாரிஸன் விருப்பத்திற்கு இணங்க வேண்டியதாயிற்று. பாரசீகத்திற்கு ஒரு கோஷ்டி சென்றது. அந்நாட்டு உயர் குடும்பத்தாரின் பிள்ளைகளிற் சிலர் அலிகார் கல்லூரியின் மாணவராயினர்.

திரு. மாரிஸனுடைய தலைமையை எல்லா முஸல்மான்களும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. 1901-ல் நவாப் மோஹ்சின்—உல்—மல்க், மகமதிய ஸ்தாபனம் என்ற ஸ்தாபனத்தைத் தோற்றுவித்து, அதை வெற்றிகரமாக நடத்துவதற்காக அரும் பாடுபட்டார். அதன் நோக்கங்கள் மிகச் சாதாரணமானவை ஆயினும் சர்க்கார் அதிகாரிகள் அதை ஏற்றுக் கொள்ளாததால் அந்த ஸ்தாபனத்தின் முயற்சி யனைத்தும் வீணுயிற்று. முஸல்மான்களுடைய அரசியல் ஸ்தாபன மொன்றுவேண்டுமென்று அரசாங்கத்திற்கே தேவை ஏற்பட்டபொழுது, ஒரு சபையை ஆரம்பித்து வெற்றிகரமாக வேலை செய்ய முடிந்தது. அதை இப்பொழுது கவனிப்போம்.

8. Tufail Ahmad, op. cit., p. 349. 9. *ibid*, p. 350.

# 11. தனித் தொகுதிகளின் தோற்றம்

கிழக்கு இந்தியக் கம்பெனியின் ஆட்சியின் கீழ்வந்த முதல் மாகாணம் வங்காளம். அந்த மாகாணத்தில் தான் ஆங்கிலக்கல்வி முதலில் தோன்றியது. வங்காள இந்துக்கள் வெகு விரைவில் அதைப் பயின்ருர்கள். அக்காலத்திய கொள்கையின்படி முஸல்மான்கள் வேண்டுமென்றே சர்க்காரால் ஒதுக்கப் பட்டிருந்தார்கள். இந்துக்கள் எல்லா இலாகாக்களிலும் சர்க்கார் உத்தியோகங்களில் அமர்ந்ததோடல்லாமல் பல வகையிலும் சிறப்புற்றிருந்தார்கள். பெரிய சீர்திருத்தக்காரர்கள், பெரிய வக்கீல்கள், வைத்திய நிபுணர்கள், விஞ்ஞானிகள், நாவலர்கள், எழுத்தாளர்கள், ஆங்கில இலக்கியங்களில் ஆழ்ந்தவர்கள், பிரிட்டிஷாரின் ஸ்தாபனங்களையும் அமைப்புக்களையும் வெகுவாகப் போற்றுகிறவர்கள் யாவரும் இந்துக்களில் தோன்றினர்.

அரசாங்க உத்தியோகம் என்ற ஏணியில் இத்தகையவர்கள் கீழ்ப்படியிலே நெடு நாளைக்கு இருப்பார்களென்று எதிர்பார்க்க முடியாது. பிரிட்டனில் உள்ள முன்னேற்ற ஸ்தாபனங்களைப் போல இந்தியாவிலும் ஏற்படுத்த வேண்டுமென்று இவர்கள் மனத்தில் விருப்பம் வளரலாயிற்று, இந்நாடு முழுவதிலும் பல துறையிலும் கற்ருேரிடையே விழிப்பேற்படுவதற்கு இவர்கள் பெரிதும் உதவினுர்கள். இந்திய தேசிய காங்கிரஸை ஏற்படுத்துவதற்கு இவர்களது பொறுப்பு கொஞ்ச நஞ்சமல்ல. முதன் முதலாகக் கூடிய காங்கிரஸுக்கு திரு. W. C. பானர்ஜி என்ற ஒரு வங்காளியே தலைமை வகித்தார். முன்னேற்றக் கருத்துக்களைக் கொண்ட எல்லா மனிதர்களும் அவர்களை (வங்காளிகளை) மதித்துப் போற்றினுர்கள். சர் சையது அகமதும் அவர்களில் ஒருவர். அதே காரணத்தினுல் அவர்கள் பிரிட்டிஷ் அதிகாரிகளின் சந்தேகப் பார்வைக்குள்ளானுர்கள். பிரிட்டிஷ் அதிகாரிகள் அவர்கள்மீது வெறுப்பையோ அல்லது அவர்கள்பால் பயத்தையோ காட்டாமலிருக்கவில்லை. கல்கத்தா முனிஸிபாலிடியின் கமிஷனர்களாக வேலை பார்த்தபோது அவர்கள் காட்டிய திறமையையும் கடமைப்பற்றையும் கண்டு அப்பொழுது வங்காளத்தின் லெப்டினன்ட் கவர்னராக இருந்த சர் அந்தோணி மாக்டானல் அவர்களைப் பெரிதும் புகழ்ந்தார். பேராற்றல் மிக்க கர்ஸன் பிரபு வங்காளிகளுடைய செல்வாக்கு வளர்ந்து வருவதைச் சகிக்கவில்லை. ஆகவே முதன் முதலாகக் கல்கத்தா முனிஸிபாலிடியைத் தாக்க ஆரம்பித்தார். பிரதிநிதிகளின் எண்ணிக்கையைக் குறைத்தார். முனிஸிபாலிடிக்குத் தலைவராக ஓர் அதிகாரி நியமிக்கப்பட்டார். முனிஸிபாலிடி அரசாங்கத்தின் நேர் அதிகாரத்தின்கீழ்வந்தது. இந்தியாமுழுவதற்குமில்லாவிட்டாலும் இந்தியாவின் வடக்கு கிழக்குப் பகுதிகளுக்குச் சிறந்த நகரமாகவும், தேசிய உணர்ச்சிக்கு ஊற்றுக் கண்ணுகவுமிருந்த இந்த நகரத்தின்மீது இவ்வித நடவடிக்கைகள் எடுக்கப் பட்டது யாவராலும் வெறுக்கப்பட்டது. இதனுல் கர்ஸன் பிரபுவுக்கு மேலும் கோபமூண்டது. 1903 டிசம்பரில் கர்ஸன் பிரபு சிட்டகாங் டாக்காப் பகுதிகளை வங்காளத்திலிருந்து பிரித்து அஸ்ஸாமோடு சேர்ப்பதென்று ஒரு திட்டம் கொண்டுவந்தார். அதை எதிர்த்துப் பெரிய கிளர்ச்சி ஏற்பட்டது. டாக்காவைச் சேர்ந்த நவாப் சலிமுல்லாகான்கூட அதை ஒரு மிருகத்தனமான ஏற்பாடு என்று கூறினுர். இது போதாதென்று கல்கத்தா சர்வகலாசாலைப் பட்டமளிப்பு விழாச் சொற்பொழிவில், கீழை நாட்டார் உண்மையை மதிக்காதவர்கள் என்று கூறினுர். இதைக் கேட்டு இந்திய மக்கள் கொதித்தனர்.

இப்பேச்சுக்கு எல்லாப் பக்கங்களிலிருந்தும் எதிர்ப்புக்கள் கிளம்பின; அடிக்கடி தோன்றிய இவ்வெதிர்ப்புக்கள் கர்ஸன் பிரபுவுக்கு மேலும் கோப மூட்டின. அவர் டாக்காவிற்குச் சென்று முஸ்லீம்களின் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசினுர். லெப்டினண்ட் கவர்னர் பெரிய மாகாணத்தை ஆள வேண்டியிருப்பதால், அவருடைய சிரமத்தைக் குறைப்பதும், முஸ்லீம்கள் அதிகமாக உள்ள பிரதேசத்தைத் தனியாகப் பிரித்து அவர்களுடைய செல் வாக்கு ஓங்கியுள்ள ஒரு மாகாணத்தை உண்டாக்குவதும் தன்னுடைய நோக்கம் என்று கூறினுர். இவ்வலையில் அனேக முஸ்லீம்கள் விழுந்தனர். மாகாணப் பிரிவினையை எதிர்த்த டாக்கா நவாப் சலிமுல்லா, அதைப் பெரிதும் ஆதரிக்கின்றவர்களில் ஒருவரானுர். அவருடைய சகோதரர் குவாஜா அடிகுல்லாமட்டும் விட்டாமல் எதிர்த்தே வந்தார். பிரிவினையான வுடன், மிகக் குறைந்த வட்டிக்கு லக்ஷம் பவுனைக் கடன் கொடுத்து, டாக்கா நவாப் சலிமுல்லாவின் ஆதரவைப் பிரிட்டிஷார் வாங்கினுர்களென்று திரு. குரு முக்நிஹல் சிங்கால் சொல்லப்படுகிறது.[1] இந்துக்களும் மகமதியர்களும் வங் காளப் பிரிவினையை எதிர்த்தார்கள். திரு. எ. ரசூலும் குவாஜா அடிகுல்லாவும் முஸல்மான்களுக்குத் தலைமை வகித்துப் பிரிவினையை எதிர்த்தார்கள். அப்படி யிருந்தும் பிரிவினை நடத்தப்பட்டது. ‘இச்செய்கையின் நோக்கம், மாகாணத் தில் ஒற்றுமையைச் சிதறடிப்பதும் நிறுவப்பட்ட கட்டுப்பாட்டைக் குலைப் பதும் ஆகும்’ என்பது சர். ஹென்றி காட்டனின் வார்த்தைகள். இந்தத் திட்டத்தின் அடிப்படைக் காரணம் நிர்வாக சம்பந்தப்பட்டதல்ல; தேசீய உணர்ச்சி வேகத்திலெழும் அரசியல் எழுச்சிகளை அழிப்பதற்கும், வளர்கின்ற தேசீய சக்திகளின் பலத்தைக் குறைப்பதற்கும் கர்ஸன் பிரபு மேற்கொண்ட கொள்கையின் ஓர் அம்சமே மேற்கூறிய பிரிவினை.’ ஸ்டேட்ஸ்மனின் வார்த்தை களில், ‘இக்காரியத்தின் நோக்கம் கிழக்கு வங்காளத்தில் மகம்மதியர்களின் பலத்தை ஓங்குவிப்பதன்மூலம் விரைவாக வளர்ந்து வரும் இந்துக்களின் பலத்தைத் தடுப்பதாம்’[2] என்றிருக்கிறது.

கர்ஸன் பிரபு இந்தியாவில் பிரிவினைப் பிரசினையாகிய கடுமையான தகராறை வைத்துவிட்டுச் சென்றுர். இதில் வங்காளிகள் மாத்திரமன்றி இந்தியாவின் மற்றப் பகுதியிலுள்ளவர்களும் ஈடுபட்டனர். புல்லறிவாளர் கள் போடுகின்ற திட்டங்களெல்லாம் தாறுமாருகப் போவதியற்கையே. இந்தியாவிலும் அப்படித்தான் ஏற்பட்டது. அரசியல் வாழ்வை நசுக்க வேண்டுமென்று செய்த முயற்சிகள் ஆவேசத்தையே ஊட்டின. வங்காளப் பிரிவினை எதிர்ப்பியக்கம் நாடு முழுவதையும் தட்டி எழுப்பிற்று. 1857 லிருந்து வேறு எதுவும் இவ்விதம் விழிப்பை உண்டாக்கவில்லை.

கர்ஸன் பிரபுவுக்குப் பிறகு மிண்டோ பிரபு 1905 நவம்பரில் ராஜப் பிரதிநிதியானுர். ஒரு நெருக்கடியான நிலைமை அவரை எதிர் நோக்கி நின்றது. பதவி ஏற்ற சில மாதங்களுக்குள்ளே திரு. ஜான் மார்லிக்கு எழுதலானுர்: ‘காங்கிரஸை நாம் அங்கீகரிக்கவேண்டும். அதைச் சேர்ந்தவர்களில் முக்கிய மானவர்களை நண்பர்களாக்கிக்கொள்ள வேண்டும். இருந்தாலும் அந்த இயக்கத்தில் ராஜத்துரோகம் நிறைய இருக்கிறதென்று நினைக்கிறேன். வருங்

1. Gurumukh Nihal Singh: *Landmarks in Indian Constitutional and National development*, p. 319.

2. From *India in Transition* quoted by Mehta & Patwardhan in *Communal Triangle*, p. 64.

காலத்தில் அதனால் ஆபத்திருக்கிறது............சமீப காலமாக, காங்கிரஸின் நோக்கங்களுக்கு எதிர்ப்பை ஏற்படுத்த வழியுண்டா என்பதைப்பற்றி யோசித்துக்கொண்டு வருகிறேன். அதற்கு சுதேச மன்னர்களுடைய கௌன்சிலை ஏற்பாடு செய்யலாம், அல்லது அதையே இன்னும் கொஞ்சம் பெரிதாக்கிச் சில பெரிய மனிதர்களையும் சேர்த்துக்கொள்ளலாம். ஆண்டுக் கொருதடவை ஒரு வாரத்துக்கோ, பதினைந்து நாட்களுக்கோ டில்லியில் அவர்களது பிரிவி கௌன்சிலைக் கூடும்படி செய்யலாம். பேசவேண்டிய விஷயங்களையும், கூட்ட நிகழ்ச்சி முறைகளையும் முன்கூட்டியே தீர யோசனை செய்துவிடவேண்டும். இந்தியாவின் நல்ல அரசாங்கத்தின்மீது மிகுந்த சிரத்தையுள்ளவர்களைக் கூட்டிக் காங்கிரஸுக்கு நேர் எதிரான கருத்துக்களை அவர்கள் தெரிவிக்கச் செய்யவேண்டும்............'[3]

மின்டோ பிரபுவுக்கு மார்லி அடுத்த ஜூன் 6-ல் எழுதியது: 'இந்தியாவில் ஒரு புதிய உணர்ச்சி வளர்ந்து பரவிவருவதாக ஒவ்வொருவரும் எச்சரிக்கை செய்கிறார்கள். லாரன்ஸ், சிரால், சிட்னி லோ எல்லோரும் இதே பல்லவியைத்தான் பாடுகிறார்கள்: "இதே மனோபாவத்தில் நீ ஆண்டு கொண்டிருக்க முடியாது. காங்கிரசுக்கும் அதனுடைய கொள்கைகளுக்கும் ஏதாவது செய்தாகவேண்டும். உனக்கு எதிரிடையாக மகமதியர்களும் காங்கிரசுடன் சீக்கிரம் சேர்ந்துகொள்வது நிச்சயம் என்று நினைத்துக் கொள்............"'[4]

காங்கிரசுக்கும் பொதுவாக எந்தத் தேசிய எழுச்சிக்கும் எதிராக சுதேச அரசர்களடங்கிய ஒரு கௌன்சிலை ஏற்படுத்துவதென்ற எண்ணம் உடனே நிறைவேறவில்லை. ஆனால் அதைக்காட்டிலும் வேறு ஒரு சரியான முறை கண்டுபிடிக்கப்பட்டது. தன்னுடைய கௌன்சிலைக் கலந்துகொண்டு மின்டோ பிரபு சீர்திருத்தங்கள் செய்வதென்று திட்டமிட்டார். இச்சீர் திருத்தங்களால் மிதவாத மனப்போக்குக்கொண்ட சிலரையாவது திருப்திப் படுத்தலாம் என்று நம்பினார். இது சம்பந்தமாக ஒரு பக்கம் திட்டங்கள் நடந்துகொண்டிருக்க மறுபக்கம் முஸ்லீம்களை அரசியலை விட்டு விலகச்செய்ய முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டது. மௌல்வி சையது துபாயில் அகமது மங்கலோரி எழுதுகிறார்: 'அலிகாரைச் சேர்ந்த ஹாஜி மகமது இஸ்மாயில் கான் சாஹெப் நைனிதாலிலிருந்தார். அவர் அதிகாரிகளைச் சந்தித்துப் பேச முடியும். அவர் அலிகார் கல்லூரி கௌரவக் காரியதரிசி நவாப் மோஷ்சின் உல் மல்க் பகதூருக்கு 1906 ஜூலை 30-ல் விண்ணப்பம் ஒன்று தயாரித்து அனுப்பி யிருந்தார். முஸல்மான்களும் தங்களுடைய உரிமைகளைக் கேட்கவேண்டுமென்பது அதிலுள்ள கோரிக்கை. பொதுவாக, படித்த முஸல்மான்களின் கவனம் உரிமைகளின்மீது பாய்ந்தது. அந்த நாட்களில் கல்லூரித் தலைமைப் பேராசிரியர் ஆர்ச்பால்டு விடுமுறைக்காகச் சிம்லாவிலிருந்தார். உயர்தர உத்தியோகஸ்தர்களை அவர் அங்கே சந்திப்பது வழக்கம். தூதுகோஷ்டி யொன்று ராஜப் பிரதிநிதியைச் சந்திப்பது என்று தீர்மானித்திருந்ததைப்பற்றி ராஜப்பிரதிநிதியின் அந்தரங்கக் காரியதரிசியோடு பேசினார். அவர் கண்டு பேசியதற்குப் பிறகு காலஞ்சென்ற நவாப் மோஷ்சின் உல் மல்க்குக்கு 1906 ஆகஸ்டு 10-ல் அவர் எழுதிய கடிதம் அச்சடித்து, கோஷ்டி அங்கத்தினர்களுக்குக் கொடுக்கப்பட்டது. கடிதத்தின்

3. Lady Minto: *India Minto and Morley*, pp. 28-9.
4. *ibid*, p. 30.

சுருக்கம் கீழே தரப்பட்டிருக்கிறது. முஸல்மான்களுடைய அரசியல் காரியங்களை எவ்வாறு அலிகார் கல்லூரித் தலைமைப் பேராசிரியர்கள் வழி காட்டி நடத்தினர்கள் என்பது அதிலிருந்து தெரியவரும். அலிகாரில் அவர்கள் சர்க்காரின் ரெஸிடென்டு போலவே இருந்தார்கள். கீழே கொடுக்கப்பட்டிருக்கும் அக்கடிதத்தின் சுருக்கம் ஊன்றிக் கவனிக்கத் தக்கது :

' " முஸல்மான்களுடைய தூதுகோஷ்டி யொன்றைச் சந்திக்க ராஜப் பிரதிநிதி தயாராக இருப்பதாக அவருடைய அந்தரங்கக் காரியதரிசி கர்னல் டன்லப் ஸ்மித் எனக்கு எழுதுகிறார். அதற்குச் சாதாரணமாக ஒரு மனுச் செய்துகொள்ள வேண்டுமென்று கூறுகிறார். அது விஷயமாகக் கீழ்க்கண்ட விஷயங்கள் கவனிக்கத் தக்கவை.

' " முதல் விஷயம் மனு அனுப்புவதுபற்றியதாகும். முஸல்மான்களின் தலைவர்களிற் சிலர், தேர்ந்தெடுக்கப்படாதவர்களாக இருந்தாலும் அதில் அவர்கள் கையொப்பம் இடவேண்டும். அடுத்த விஷயம் யார் யார் தூது கோஷ்டியிலிருப்பது என்பது. எல்லா மாகாணங்களிலிருந்தும் பிரதிநிதிகள் இருக்கவேண்டும். அடுத்த விஷயம் மனுவின் கருத்தும் பொருளும். இது விஷயமாக என்னுடைய கருத்து என்னவென்றால் மனுவில் ராஜவிசுவாசமும் வந்தனமும் தெரிவிக்கப்படவேண்டும். ஏற்கெனவே முடிவு செய்யப்பட்ட கொள்கையின்படி சுய ஆட்சி வழங்கப்போவதற்கும் இந்தியர்களுக்கு உயர்தர உத்தியோகங்கள் வழங்கப்படுவதற்கும் வந்தனம் தெரிவிக்கப்பட வேண்டும். தேர்தல் முறைகளைப் புதிதாக ஏற்படுத்துவதன்மூலம் முஸ்லீம் சிறுபான்மையினருக்குக் கெடுதிகள் நேரிடக் கூடுமென்றும், நியமனத்தால் அல்லது மதத்தை அடிப்படையாகக் கொண்டு பிரதிநிதித்துவம் கொடுப்பதால் முஸல்மான்களுடைய அபிப்பிராயம் உரிய செல்வாக்கைப் பெறுமென்றும் கூறப்படவேண்டும். இந்தியாவைப்போன்ற பெரிய தேசங்களில் ஜமீன்தார்களுடைய அபிப்பிராயத்தையும் மதிக்கவேண்டும் என்றும் கூறப்பட வேண்டும்.

' " தேர்தல் முறை இன்னும் வரவில்லை யாதலால், நியமன முறையையே முஸல்மான்கள் கோருவது மிகவும் உசிதம் என்பது என் சொந்த அபிப்பிராயம். தேர்தல் ஏற்படுத்தப்பட்டால் தங்களுக்குரிய பங்கை அடைவது அவர்களுக்கு மிகுந்த சிரமமாகும்.

" 'ஆனல் இந்த விஷயங்களிலெல்லாம் நான் திரை மறைவிலேயே யிருக்கவேண்டும். முஸல்மான்களுடைய நலன்களில் எவ்வளவு அக்கறைகொண்டுள்ளவன் நான் என்பது உங்களுக்குத் தெரியும். உங்களுக்கு என்னலாகக் கூடிய தனைத்தையும் மிக மகிழ்ச்சியுடன் செய்கிறேன். உங்களுக்காக விண்ணப்பத்தை எழுதித் தருகிறேன். அது பம்பாயில் எழுதப்படுமானல், அதைத் திருப்பிச் சரிபார்த்துத் திருத்தித்தருகிறேன். நல்ல பாஷையில் மனு எழுத எனக்கு நன்ருகத் தெரியும். ஆனல் நவாப் ஸாஹெப் அவர்களே ! ஏதாவது சரியான பெரிய காரியத்தைச் செய்வதானல் வெகு சீக்கிரம் செய்து முடியுங்கள்." ' [5]

லேடி மின்டோவின் வார்த்தைகளிலேயே சொல்லப்போனல் நவாப் மோஹ்சின் உல்மல்க் மகமதியத் தூதுகோஷ்டியைத் 'தூண்டி விட்டார்.' [6] விண்ணப்பம் தயாராயிற்று. 1906 அக்டோபர் முதல் தேதியன்று ஆகா கானின் தலைமையின்கீழ் அக்கோஷ்டி ராஜப் பிரதிநிதியைக் கண்டு பேசியது.

---

5. M. Tufail Ahmad: *Roshan Mustaqbal*, pp. 360-I. 6. Minto, op. cit, p. 56.

லேடி மின்டோ தன்னுடைய நாட்குறிப்பில் அன்றைத் தேதியில் எழுதிய தாவது :

'இன்று ஒரு முக்கியமான நாள். ஒருவர் கூறியதுபோல, "இந்திய சரித்திரத்தில் புது சகாப்தம் பிறக்கிறது." இந்தியா முழுவதும் அமைதியற்றிருப்பதையும், எல்லா வகுப்பாரிடையே உள்ள அதிருப்தியையும் நாம் அறிவோம். எப்பொழுதும் மிகுந்த ராஜபக்தி உள்ளவர்களான 6 கோடி 20 லக்ஷம் முஸ்லீம்கள் போதுமான பிரதிநிதித்துவம் கொடுக்கப்படவில்லை யென்று கோபப்படுகிருர்கள். இந்துக்களுக்குச் சலுகைகள் காட்டப்பட்டதால் இவர்கள் பலவகையிலும் அவமரியாதை செய்யப்பட்டதாகக் கருதுகிருர்கள். கிளர்ச்சிக்காரர்கள் இந்த உணர்ச்சியைப் பாதுகாத்து வளர்த்திருக்கிருர்கள். இந்தப் பெரிய சமூகத்தினரின் ஆதரவையும் பெற பெருமுயற்சி எடுத்திருக்கிருர்கள். இளைஞர்கள் மனம் தயக்கத்தில் இருந்தது. காங்கிரஸ் கிளர்ச்சிக்காரர்களோடு சேரலாமா என்று யோசனை செய்துகொண்டிருந்தார்கள். ராஜ விசுவாசமுள்ள முஸல்மான்கள் கவனிக்கப்படமாட்டார்களென்றும் கிளர்ச்சி செய்பவர்களே தங்களது உரிமைகளைப் பெறுவார்களென்றும் எங்கும் கூப்பாடு கேட்டது. ஏதாவது காரியம் செய்வதற்குமுன் வைசிராயிடம் தங்களுடைய குறைகளை முறையிடுவதே சிறந்தது என மகமதியர்கள் தீர்மானித்தார்கள். இன்றைக்குக் கூடுவதென்று நிச்சயிக்கப்பட்டது. எல்லா மாகாணங்களிலிருந்தும் சுமார் எழுபது பிரதிநிதிகள் வந்திருக்கிருர்கள். நடனசபையில் சந்திப்பு நடைபெற்றது. நானும் பெண்களுமாகப் பக்கத்து வாசல் வழியாக நடவடிக்கைகளைக் கவனிக்கச் சென்ருேம். மின்டோ தன்னுடைய பரிவாரங்களுடன் வந்து மேடையில் அமர்ந்தார். ஆகாகான் கோஜா முஸ்லீம்களுடைய மதத்தலைவராவார். அவர் அலி வமிசத்தில் வந்ததாகச் சொல்லிக்கொள்கிருர். தெய்வீக உரிமையால் மகமதிய மன்னனுவார். நாடு இல்லாத அவர்தான் இந்த அழகான நீண்ட விண்ணப்பத்தை வாசிக்கத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர்களுடைய குறைகளும், ஆசைகளும் அதில் குறிக்கப்பட்டிருந்தன. பிறகு மின்டோ தன்னுடைய பதிலை வாசித்தார். அது மிக ஜாக்கிரதையாக எழுதப்பட்டிருந்தது. "'ஐரோப்பிய முறையில் ஜனநாயக ஸ்தாபனங்கள் இந்திய ஜனங்களுக்கு முற்றிலும் புதுமையானதென்பதையும்' அல்லது அவைகளை இந்நாட்டில் மிகுந்த கவனத்தோடுதான் புகுத்த வேண்டும் என்பதையும் கூறவேண்டியிருப்பதற்காக நீங்கள் என்னிடம் மன்னிப்புக் கோரவேண்டிய அவசியமில்லை. பரம்பரைப் பழக்கங்களையும் தனி இயல்புகளையும் கொண்ட கீழைய மக்களிடையே மேனுட்டு அரசியலமைப்புக்களைப் புகுத்துவதை நான் வரவேற்கவில்லை, முனிசிபாலிடியிலோ அல்லது ஜில்லா போர்டிலோ அல்லது சட்டசபையிலோ எதிலாயினும் இத்தகைய சபைகளில் மகமதியர்களின் இனப் பிரதிநிதிக்கு இடமொதுக்கப்பட வேண்டுமென்பது உங்களது கோரிக்கை என நினைக்கிறேன். இப்பொழுதுள்ளபடி பிரதிநிதித்துவ சபைகளில் முஸ்லீம் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட முடியாதென்று நீங்கள் நினைக்கிறீர்கள்.' அப்படியே வந்தாலும் தன்னுடைய கருத்துக்களின்படி நடக்க முடியாமல் பெரும்பான்மையினரான வேறு இனத்தவர்களுக்குத் தாளம்போடவேண்டிய நிலைமையில்தான் இருப்பார்கள் எனக் கூறுகின்றீர்கள். உங்களுடைய ஜனத்தொகை விகிதத்துக்குத் தக்கபடி பிரதிநிதித்துவமளிப்பது என்பதோடல்லாமல், உங்களினத்தின் அரசியல் முக்கியத்துவத்தையும், சாம்ராஜ்யத்துக்கு நீங்கள் அளித்துள்ள சேவையையும்

பொருட்படுத்தி மதிப்பளிக்க வேண்டுமெனச் சொல்லுகிறீர்கள். நீங்கள் சொல்லுவதை நான் அப்படியே ஒப்புக்கொள்கிறேன். தனி நபருக்கெல்லாம் வாக்குரிமை வழங்கி பிரதிநிதித்துவ ஆட்சி முறையை இந்தியாவில் ஏற்படுத்தினால் அது குறும்புத்தனமான தோல்வியடையும் என்று நீங்கள் நம்புவது சரியென்று எனக்கும் உறுதியாகப்படுகிறது. இந்தக் கண்டத்தில் வாழும் மக்களில் பல்வேறு இனத்தாரின் நம்பிக்கைகளையும் கொள்கைகளையும் புறக்கணிப்பதன் விளைவு படுதோல்வியே." '[7]

தன்னுடைய அந்தக் குறிப்பில் லேடி மின்டோ மேலும் எழுதுவதாவது: 'ஓர் அதிகாரியிடமிருந்து இன்று மாலை எனக்கு ஒரு கடிதம் கிடைத்திருக்கிறது: "இன்றைக்கு மிக மிகப் பெரிய காரியம் நடந்திருக்கிறதென்று உங்களுக்குச் சொல்வதற்காகவே இதை நான் எழுதுகிறேன். இது ஒரு பெரிய ராஜ தந்திர வேலை. இந்தியாவையும் இந்திய சரித்திரத்தையும் இது நெடுநாட்களுக்குப் பாதிக்கும். ராஜத்துரோகக் கும்பலில் 6,20,00,000 மக்கள் போய்ச் சேர்ந்து விடாமல் பின்னுக்கிழுப்பதன்றி இது வேறொன்றுமில்லை." ' லண்டனிலும் இப்படியேதான் அபிப்பிராயப்பட்டார்கள். இந்த நடவடிக்கைகளின் விவரத்தை அறிந்தபின் மார்லி எழுதினார்: 'மார்லியிடமிருந்து மின்டோவுக்கு—"அக்டோபர் 26உ—மகம்மதியர்களைப்பற்றி நீங்கள் சொல்லுவதனைத்தும் வியப்பூட்டுவதாக இருக்கிறது. அந்தக் கூட்டத்தில் யாரும் பார்க்க முடியாதபடி நானும் வந்து பார்க்கக் கொடுத்துவைக்கவில்லையே என்று மிகவும் வருந்துகிறேன். எல்லாக் காரியங்களும் எவ்வளவோ நன்றாக முடிந்திருக்கின்றன. உங்களுடைய பதவியையும் உங்கள் சொந்த அதிகாரத்தையும் திண்ணமாக இச்செயல்கள் உயர்த்துகின்றன. உங்களுடைய பேச்சின் பல நல்ல பலன்களில் ஒன்று இங்குள்ள சுயநலக்கட்சியின் திட்டங்களையும் தந்திரங்களையும் உருப்படாமற் செய்ததாகும். அதிகார வர்க்கமும் இந்திய மக்களும் சதா போராடிக்கொண்டிருக்கிறார்கள். இந்திய அரசாங்கம் இப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது என்று இனிமேலும் அவர்கள் சொல்லமாட்டார்கள். அடிப்படையிலிருந்து எல்லாவற்றையும் மாற்ற வேண்டுமென்று பிடிவாதம் செய்கிற எனது தீவிர வாத நண்பர்கள் கூட, இந்தப் பிரசினை அவ்வளவு எளிதல்ல என்பதை இப்பொழுது உணருவார்கள்." '[8].

மின்டோ பிரபுவின் சரித்திர ஆசிரியன் புச்சன் சொல்லுகிறார்: 'ராஜத்துரோகக் கும்பலில் முஸ்லீம்கள் போய்ச்சேருவதை இந்தப் பேச்சு வெகுவாகத் தடுத்தது. சுதந்திரம் கேட்பவர்கள் தொந்தரவுப்படுத்தும் இந்நாளில் முஸ்லிம்களும் அதில் சேராமல் தடுத்தது நமக்குப் பெரிய சாதகமாகும்.'[9] இதை புச்சன் இஸ்லாமிய உரிமைச் சாசனம் என்று கூறுகிறார்.

இங்கிலாந்துப் பத்திரிகைகளில் இந்தத் தூதுகோஷ்டி விஷயம் நன்றாகப் பிரசுரமாகும்படி எல்லா ஏற்பாடுகளும் முன்னதாகவே செய்யப்பட்டிருந்தன என்று மௌல்வி துபாயில் அகமது சொல்லுகிறார். 1906 அக்டோபர் முதல் தேதியில் தூதுகோஷ்டி வைசிராயைப் பார்ப்பதென்று இருந்தது. அதே தினத்தில் வெளியான லண்டன் டைம்ஸ் பத்திரிகை முஸல்மான்களின் அறிவைப் புகழ்ந்து பாராட்டியது. ஐரோப்பிய நாடுகளில் உள்ள மாதிரி பிரதிநிதித்துவ சபைகளின் மீது மகமதியர்களுக்கு எப்போதும் ஆசையிருந்ததில்லை யென்றும்,

7. Minto, op. cit., pp. 45-7. 8. *ibid.*, pp. 47-8.
9. Buchan : *Lord Minto*, p. 244, quoted by G. N. Singh, op. cit.

இங்கிலாந்தைப்போல இந்தியா ஒரு தேசீய இனத்தைக்கொண்ட நாடில்லை யென்றும், அநேக மதங்களிருக்கின்றன வென்றெல்லாம் சொல்லப்பட்டது. மற்றப் பத்திரிகைகளும் இதைப்போலவே எழுதின. 'இந்தியர்கள் ஒரே சமுதாயத்தினராவதைக்கண்டு ஆங்கிலப் பத்திரிகைகள் எவ்வளவு திகைப்பும் வயிற்றெரிச்சலும் கொண்டனவென்பதும், இந்தியர்கள் துண்டு துண்டாகப் பிரிந்து போவதைக் கண்டு எவ்வளவு குதூகலமடைந்தன வென்பதும், சாதி சமய வேறுபாடு காரணமாக அவர்களுக்குள்ளே தீராத சண்டையை மூட்டி விட்டதைக் கண்டு பெருமை கொண்டன வென்பதும் அக்கட்டுரைகளினின்று நன்கு விளங்கும்.'[10] இந்தத் திட்டத்தை உருவாக்க நீண்ட நாளாயிற்று. ராஜப்பிரதிநிதிக்கும் இந்தியா மந்திரிக்கும் ஏராளமான கடிதப் போக்குவரத்து நடந்து முடிவில் முஸல்மான்களுக்குத் தனித்தொகுதிகள் ஏற்படுத்தப்பட்டன.

## 12. முஸ்லீம் லீகின் பிறப்பும் லக்ஷ்மணபுரி ஒப்பந்தமும்

முஸ்லீம் தூது கோஷ்டி ராஜப் பிரதிநிதியைச் சந்தித்த பின்னர் தொடர்ந்தாற்போல, அகில இந்திய முஸ்லீம் லீக் ஏற்படுத்தப்பட்டது. 1906 நவம்பர் 9உ நவாப் சாலிமுல்லா, அகில இந்திய முஸ்லீம் கான்பெடரஸி என்று ஒரு சபையை ஏற்படுத்த வேண்டுமென்று ஒரு சுற்றறிக்கை அனுப்பி யிருந்தார். அப்படியே அடுத்த டிசம்பரில் டாக்காவில் ஒரு மாநாடு கூடியது. இந்தியாவின் நாலு பக்கங்களிலிருந்தும் பிரதிநிதிகளும் தலைவர்களும் வந்திருந் தார்கள். நவாப் வாக்கர்-உல்-மல்க் தலைமை வகித்தார். அகில இந்திய மூஸ்லிம் லீக் ஏற்படுத்தப்பட்டது. நவாப் வாக்கர்-உல்-மல்க் காரியதரிசியானார். நவாப் மோஹ்சின்-உல்-மல்க் துணைக் காரியதரிசியானார். ஆனால் இவர் சில நாட்களில் காலஞ்சென்றார். தீர்மானங்களிலொன்று வங்காளப் பிரிவினையை ஆதரித்தது; பஹிஷ்கார இயக்கத்தை எதிர்த்தது. லீக் ஏற்படுத்தப்பட்டதை லண்டன் டைம்ஸ் வரவேற்றது. இதே வருஷத்தில்தான் இந்து மஹா சபையும் ஏற்படுத்தப்பட்ட தென்பது அதிசயமான விஷயம். திரு. ராம்சே மாக்டனால்டு இந்தியாவின் விழிப்பு என்ற புத்தகம் எழுதியிருக்கிறார். அதிகார வர்க்கம் நடந்து கொண்ட விதத்தைப்பற்றி அவர் கூறுவதாவது: 'மகமதியத் தலைவர்கள் சில ஆங்கிலோ - இந்திய அதிகாரிகளால் தூண்டப்பட்டார்கள். இந்த அதிகாரிகள் சிம்லாவிலும் லண்டனிலும் இந்திய சர்க்காரை ஆட்டி வைத்துக் கொண் டிருந்தார்கள்; மகமதியர்களுக்குத் தனிச் சலுகை காட்டி இந்து முஸ்லீம்களுக்கிடையே சச்சரவுகளுக்கு அடிகோலினார்கள்.'[1] தனித்தொகுதி முறையை உண்டாக்கியதன் நோக்கம் இவர்களுக்கிடையே பிளவை உண்டாக்குவது மாத்திரமல்ல, நாளடைவில் அதைப் பெரிதாக்குவதும் ஆகும்.

முஸ்லீம் லீக் வருஷா வருஷம் கூட ஆரம்பித்தது. வங்காளப் பிரிவினை யையும், தனித் தொகுதியையும் ஆதரித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றியது. சட்டசபைகளில் மட்டுமன்றி ஸ்தல ஸ்தாபனங்களிலும் தனித்தொகுதி கோரியது. உத்தியோகங்களில் மட்டுமன்றி பிரிவி கௌன்சிலிலும் முஸ்லீம் களுக்குப் பிரதிநிதித்துவம் வேண்டுமென்று கோரியது. 1910 ஜனவரியில் டில்லியில் லீக் கூடியது. ஆகாகான் தலைமைவகித்தார். சீர்திருத்தங்களைக் கண்டு திருப்தி தெரிவித்தார். அவைகளை எதிர்த்தால் ஒருகால் அரசாங்கம்

10. M. Tufail Ahmad, op. cit., p. 363.
1. Quoted by Mehta and Patwardhan: *The Communal Triangle*, p. 66.

அவைகளை ரத்து செய்துவிடுமென எச்சரிக்கையும் செய்தார். இச்சமயத்தில் சர்க்காரின் கொள்கையை விளக்குகிற ஒரு சம்பவம் நடந்தது. சர் அந்தோனி மாக்டானல் காலத்தில் நவாப் மோஹ்சின்-உல்-மல்க் அலிகார் கல்லூரியின் அமைச்சராக இருந்தார். இந்தி - உருது தகராறு சம்பந்தமாக இவர் அஞ்சுமான் - இ - ஹிமாயத் உருது என்ற சங்கத்தின் தலைவராக இருந்தார். இது அரசியல் கிளர்ச்சியென்றும், கல்லூரி அமைச்சர் அரசியல் சங்கங்களில் சேரக்கூடாதென்றும் சொல்லி மேற்கூறிய கவர்னர் இவரை நெருக்கினார். நவாப் என்ற பட்டம் இவருக்குச் சர்க்காரால் அளிக்கப்பட்டது. அரசாங்கக் கடிதப் போக்குவரத்துகளில் இவருக்கு நவாப் என்ற பட்டத்தை உபயோகிக்கக் கூடாதென்றுகூட கவர்னர் உத்தரவிட்டார். இப்பொழுது அதே அரசாங்கம் கல்லூரி அமைச்சரா யிருக்கும்போதே இவர் முஸ்லீம் பிரதிநிதி கோஷ்டியை ஏற்படுத்துவதையும் அகில இந்திய முஸ்லீம் லீகின் துணை அமைச்சரா யிருப்பதையும் தடுக்கவில்லை. டாக்காவில் கூடிய முதல் லீக் மகாநாட்டிற்குத் தலைமைவகித்த நவாப் வாக்கர்-உல்-மல்க் அதன் பொதுக் காரியதரிசியானார். நவாப் மோஹ்சின்-உல்-மல்க் இறந்தபின் இவரே அலிகார் கல்லூரிக்கும் அமைச்சரானார். லீகின் தலைமை ஸ்தலம் 1910 வரை அலிகாராக இருந்தது. நவாப் வாக்கர்-உல்-மல்க் முஸ்லீம் லீக் காரியங்களில் பங்கெடுத்துக் கொண்டு வந்தார். அவருக்கும் கல்லூரியின் ஆங்கிலத் தலைமைப் பேராசிரியருக்கும் கொஞ்சம் தகராறு ஏற்பட்டது. கவர்னர் தலைமைப் பேராசிரியரோடு சேர்ந்துகொண்டார். நவாப் வாக்கர்-உல்-மல்க்கை ஆதரித்துப் பொதுஜனக் கிளர்ச்சி ஏற்பட்டது. லெப்டினன்ட் கவர்னர் தன்னுடைய உத்தரவுகளை ரத்து செய்யவேண்டிய தாயிற்று. இருந்தாலும் அவர் வேறுவகையில் பழி வாங்கிக்கொண்டார். லீகின் தலைவராயிருந்த ஆகாகான் லீகின் தலைமைக் காரியாலயத்தை அலிகாரிலிருந்து லக்ஷ்மணபுரிக்கு மாற்றினார். அலிகார் பிடிப்பிலிருந்து லீகை விடுவிப்பதற்காக இந்த யோசனை செய்யப்பட்டது. இச்செயலால் எதிர்பாராத விளைவு ஒன்று ஏற்பட்டது. இப்பொழுது லீகின் நடவடிக்கைகள் கல்லூரித் தலைமைப் பேராசிரியர்களின் மேற்பார்வையிலிருந்து விடுபட்டன.

வங்காளப் பிரிவினை ரத்தை 1911 டிசம்பரில் டில்லி தர்பாரில் அரசர் தெரிவித்தார். முஸல்மான்களுக்குப் பெரிய அதிர்ச்சி ஏற்பட்டது. நவாப் சாலி முல்லாவுக்கு இது பெரிதும் மனவேதனையளித்தது. 1912 மார்ச்சில் கல்கத்தாவில் கூடிய லீக் மாநாட்டுக்குத் தலைமை வகித்தபின், தான் எல்லாப் பொது காரியங்களிலிருந்தும் விலகிக்கொண்டதாகத் தெரிவித்தார். இதன்பின் சில நாட்களில் காலஞ்சென்றார்.

முஸல்மான்களின் போக்கை மாற்ற மற்றுஞ் சில காரியங்கள் நடைபெற்றன அக்காலத்தில் மௌல்வி ஷிப்லி நௌமனி முஸல்மான்களுக்குள் படித்தவர் எனப் பேர் வாங்கியவர். நபிகளின் வாழ்க்கை வரலாற்றைப்பற்றிச் சிறந்த புத்தகமொன்று எழுதியிருந்தார். சர் சையது அகமதுகானைப்பற்றியும் ஒரு புத்தகம் எழுதியிருந்தார். அவர் அஸம்காரில் ஒரு கல்விக்கழகத்தை ஏற்படுத்தினார். அவருக்குப்பின் மௌலானா சுலைமான் நாத்வி அதைக் கவனிக்கலானார். இக்கழகம் சரித்திர சம்பந்தமான பெரிய நூல்களை வெளியிட்டு வந்தது. மௌல்வி ஷிப்லி நௌமனி, சர் சையது அகமதுக்கு நெடுநாள் தோழராக இருந்தார். ஆனால் வரவர இவருக்கு சர் சையது அகமதுவின் கொள்கைகள் சரிதானா என்ற சந்தேகம் கிளம்பிக் காங்கிரஸ் மீது சையது

கொண்ட மனப்போக்கும் இவருக்குப் பிடிக்கவில்லை. அடிப்படை விஷயமான இந்திய சுதந்திரத்தின்மீது கவனம் செலுத்துமாறு இவர் முஸ்லீம்களைத் தூண்டிக்கொண் டிருந்தார். காங்கிரஸைக் குறை கூறுவதோடு திருப்தியடைய வேண்டாமென்று ஆலோசனை கூறினர். லக்ஷ்மணபுரியிலிருந்து வெளியான முஸ்லீம் கெஜட் பத்திரிகையில் 1917 அக்டோபர் 9-ல் முஸ்லீம் லீகின் அரசியலையும் நடவடிக்கைகளையும் அலசிவிட்டு இவ்வாறு கூறினர்: 'பழத்தைக்கொண்டு ஒரு மரத்தை மதிப்பிடுகிருர்கள். நம்முடைய அரசியல்கள் வெறும் கூத்தாக இல்லாமல் உண்மையானவைகளாக இருக்குமானல் போராட்டத்திற்கு ஆர்வத்தைக் கிளப்பியிருக்கும். ஒரு லட்சியத்திற்காக தியாகம் செய்யவும் துன்பத்தை மேற்கொள்ளவும் மக்களைத் தயார் செய்திருக்கும்.'[2]

முஸ்லீம்களின் மனத்தைப் பெரிதும் மாற்றிய இதர சம்பவங்கள் நடந்து கொண்டிருந்தன. 'சீர்திருத்தங்களின்படி ஏற்பட்ட கௌன்சில்களின் நடைமுறை எந்த வகுப்பு சுயநலமுள்ள தென்பதைக் காட்டியது. இந்தியர்களுக்குள்ள அடிப்படை ஒற்றுமையையும் காட்டியது. எல்லாவற்றிற்கும் மேலாக தூர தேசத்திய தேசீய இயக்கங்கள், சிறப்பாக துருக்கி, பாரசீக நாடுகளில் ஏற்பட்டவை இந்நாட்டின் முஸ்லீம் இளைஞர் மனத்தில் தேசீய உணர்ச்சியை ஊட்டின............திரிப்போலி, பால்கன் சண்டைகளில் கிரேட் பிரிட்டன் துருக்கியோடு நடந்துகொண்ட முறையில் பிரிட்டிஷாரின் சாயம் வெளுத்து விட்டது. பிரிட்டிஷார் இந்திய முஸல்மான்களுக்கு உற்ற நண்பர்களென்று சொன்னதெல்லாம் வெறும் பசப்பு வார்த்தைகளெனக் கண்டார்கள். ஐரோப்பிய நாடுகளால் துன்புறுத்தப்பட்ட துருக்கிமீது இந்திய தேசீய பத்திரிகைகள் ஆதரவும் பரிவும் காட்டின. இது முஸ்லீம்களின் இதயத்தை இளக்கியது.'[3] 1912-ல் டாக்டர் அன்சாரி துருக்கிக்கு ஒரு வைத்திய கோஷ்டியை அழைத்துச் சென்ருர். ஜமீன்தார் பத்திரிகையின் ஆசிரியர், மௌலானு ஜாபர்அலி துருக்கி செம்பிறைச் சங்கத்திற்குப் பணம் வசூல்செய்து கான்ஸ்டாண்டிநோபிள் விசியரிடம் நேரே கொடுக்கச் சென்ருர். மௌலானு அபுல்கலாம் ஆஸாத், அல்-ஹிலால் என்ற உயர்தர உருதுப் பத்திரிகையை ஆரம்பித்தார். அதன் ஆவேச நடையும், தேசீய சுதந்திர தியாக லட்சியங்களும் மக்களைத் தட்டி எழுப்பின. மௌலானு மகமதலி ஆங்கிலத்தில் காம்ரேட் என்ற பத்திரிகையையும் உருதுவில் ஹாம்டார்டு என்ற பத்திரிகையையும் நடத்தி வந்தார். இவைகளெல்லாம் தேசீய உணர்ச்சிப் பெருக்கை உண்டாக்கி விட்டன. இவைகளுக்கிடையில் லீக் பாதிக்கப்படாமலிருக்க முடியுமா? 1913 மார்ச்சில் லக்ஷ்மணபுரியில் நடந்த கூட்டத்தில் அதனுடைய அமைப்பு விதிகள் திருத்தப்பட்டன. சர் இப்ரஹீம் ரஹிம்துல்லா தலைமைவகித்தார். பிரிட்டனின் ஆதரவின்கீழ், சட்ட பூர்வமான முறைகளால் இந்தியாவுக்கேற்ற சுயஆட்சி பெறுவது லீகின் நோக்கம் என்று சொல்லப்பட்டது. நிர்வாக முறையைச் சிறிது சிறிதாகச் சீர்திருத்தியும், தேசீய ஒற்றுமையை வளர்த்தும், இந்திய மக்களிடையே பொதுநல ஆர்வத்தை உண்டாக்கியும், இதர எல்லா வகுப்பினரோடு ஒன்றுபட்டும் இந்நோக்கத்தை நிறைவேற்ற முயலுவதெனத் தீர்மானிக்கப்பட்டது. இவ்விதமாக லீகின் நோக்கம் இந்திய தேசீய

---

2. Tufail Ahmad: *Roshan Mustaqbal*, p. 389; and Mehta & Patwardhan, op cit., p. 30.

3. Gurumukh Nihal Singh: *Landmarks in Constitutional and National Development*, pp. 490-1.

காங்கிரஸின் நோக்கத்துடன் ஒன்றுபட்டது. வகுப்பு ஒற்றுமைக்கும் ஒருமுகமான செயலுக்கும் வழிசெய்தது.

1914 ஆகஸ்டில் முதல் உலக யுத்தம் தொடங்கியது. இந்திய ஜனங்களிடையே பரபரப்பு ஏற்பட்டது. இந்திய சுதந்திரக் குடியரசை ஏற்படுத்தத் துணிகரமான திட்டங்கள் போட்டார்கள். அதில் முக்கியமானவர்கள் முஸல்மான்கள். ஷேக்குல்-ஹிந்த் மௌலானா மகமூதுல் ஹாசன், அவருடைய சகாக்கள் மௌலானா ஹுஸேன் அகமது நாத்வி, மௌலானா அசிஸ்குல் ஆகியோர் கைது செய்யப்பட்டு மால்டாவில் சிறை வைக்கப்பட்டார்கள். நேச நாடுகளுக்கெதிராக யுத்தத்தில் சேர்ந்துள்ள துருக்கிக்குப் பரிவுகாட்டினமைக்காகவும் தேசீய உணர்ச்சியுள்ளவர்களாக யிருப்பதை வெளிப்படுத்தினமைக்காகவும் மௌலானா மகமதலி, ஷௌக்கத்தலி, ஆஸாத், ஹஸரத்மோஹனி சிறை வைக்கப்பட்டார்கள். 1915 டிசம்பரில் லீகும் காங்கிரஸும் பம்பாயில் கூடின. பண்டித மதன்மோஹன் மாளவியா, ஸ்ரீமதி சரோஜனி நாயுடு, மகாத்மா காந்தி இன்னும் அனேக காங்கிரஸ் தலைவர்கள் லீக் கூட்டத்திற்குச் சென்றார்கள். ஆகாகான் லீகின் நிரந்தரத் தலைமையினின்று விலகிக் கொண்டார். காங்கிரஸைக் கலந்து இந்தியாவுக்குத் திட்டமொன்று போடுவதற்கு லீக் ஒரு கமிட்டியை ஏற்படுத்தியது. மறு வருஷம் லீகும் காங்கிரஸும் லக்ஷ்மணபுரியில் ஒரே இடத்தில் ஒரே சமயத்தில் கூடின. பம்பாய்க் கூட்டத்திற்கும் லக்ஷ்மணபுரிக் கூட்டத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் அந்தக் கமிட்டி திட்டத்தைத் தயாரித்துவிட்டது. காங்கிரஸ் மிதவாதிகளுக்கும் முற்போக்காளர்களுக்கும் இடையிலிருந்த பிளவுகள் அதாவது ஒன்பது வருஷங்களுக்கு முன்னால் சூரத்தில் ஏற்பட்ட பிளவுகள் நீங்கிவிட்டன. அந்தக் காங்கிரஸுக்கு சர் சுரேந்திரநாத் பானர்ஜி, பண்டித மதன்மோஹன் மாளவியா போன்ற மிதவாதத் தலைவர்கள்மட்டுமன்றி லோகமான்ய திலகரும் வந்திருந்தார். காங்கிரஸுக்கும் லீகுக்கும் ஓர் ஒப்பந்தம் ஏற்படுத்தப்பட்டது. லீகுக்குத் தனித்தொகுதிமுறை யளிக்கப்பட்டது. பஞ்சாப்பிலும் வங்காளத்திலும் தவிர மற்ற மாகாணங்களில் மகமதிய ஜனத்தொகை விகிதாசாரத்துக்கும் அதிகமாகவே பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டது. மேலும் ஒரு சட்டத்தையோ அல்லது அதன் ஒரு ஷரத்தையோ அல்லது ஒரு தீர்மானத்தையோ, ஒரு சட்டசபையிலுள்ள ஒரு தனிப்பட்ட வகுப்பினரில் முக்கால் வாசிப்பேர் எதிர்த்தால் அவைகள் நிறுத்தப்பட வேண்டுமென்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது. இந்த ஒப்பந்தம் தவிரக் காங்கிரஸும் லீகும் கூடிச் சீர்திருத்தங்களுக்கு ஒரு திட்டம் வகுத்தன. அந்தத் திட்டத்தில் வகுக்கப்பட்ட சீர்திருத்தங்களை வழங்கி சுய ஆட்சியை நோக்கி உறுதியாக வழிகோல வேண்டும் என்று கோரிக்கை விடுத்தன. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் அடிமை நாடாக இருக்காமல் சுய ஆட்சியுள்ள டொமினியன் நாடுகளைப்போல இந்தியாவும் உயர்த்தப்பட வேண்டுமென்று கோரப்பட்டது. லீகின் தலைவர் திரு. எம். ஏ. ஜின்னா, காங்கிரஸ் தலைவர்கள் லோகமான்ய திலகர் உட்பட எல்லோரும் ஒப்பந்தத்தை ஏற்றுக்கொண்டார்கள். மற்றத் தீர்மானங்களும் காங்கிரஸ் தீர்மானங்களை ஒட்டியே யிருந்தன. காங்கிரஸும் லீகும் ஒன்றாகி விட்டதுபோல் தோன்றிற்று.

காங்கிரஸ் மேற்கொண்ட அரசியல் திட்டங்களை முஸ்லீம் லீக் ஆர்வத்துடன் ஆதரிக்க ஆரம்பித்தது. அடுத்த வருஷம் மாநாட்டுத் தலைவராகச் சிறையிலிருந்த மௌலானா மகமதலியைத் தேர்ந்தெடுத்தது. இதற்கு முந்திய

வருஷங்களிற்போல இந்த வருஷம் லீகின் கூட்டமும் காங்கிரஸ் கூடிய அதே இடத்தில், அதே சமயத்தில் அதாவது கல்கத்தாவில் 1917 டிசம்பரில் கூடியது. மகாத்மா காந்தியும் ஸ்ரீமதி நாயுடுவும் லீகின் கூட்டத்திற்குச் சென்று கலந்து கொண்டார்கள். அலி சகோதரர்களை விடுதலை செய்ய வேண்டுமென்ற தீர்மானத்தை ஆதரித்தார்கள்.

## 13. கிலாபத் இயக்கமும் அதன் பின்னும்

மறு வருஷம் 1918 டிசம்பரில் லீக் கூட்டம் டில்லியில் கூடிற்று. காங்கிரஸும் அங்குதான் கூடியது. இந்த ஒரு வருஷத்திற்குள் உள்நாட்டிலும் வெளி உலகத்திலும் எவ்வளவோ காரியங்கள் நடந்து விட்டன. திரு. மாண்டேகு இந்தியாவுக்கு வந்து பார்வையிட்டார். 1917 ஆகஸ்டில் பிரிட்டிஷார் வெளியிட்ட கொள்கைப் பிரகாரம் செய்யவேண்டிய சீர்திருத்தங்களைப்பற்றி அவரும் அப்போதிருந்த ராஜப்பிரதிநிதி செம்ஸ்போர்டுப் பிரபுவுமாகக் கலந்து ஓர் அறிக்கை தயார் செய்தார்கள். நேச நாடுகளுக்கு அனுகூலமாகவும் ஜெர்மனிக்கும் துருக்கிக்கும் எதிராகவும் சண்டை முடிந்தது. துருக்கியின் தோல்வி இந்திய முஸல்மான்களைப் பாதித்த சில பிரசினைகளை முன்னணிக்குக் கொண்டுவந்தது. சண்டைக்குப் பின்னால் துருக்கி நன்றாக நடத்தப்படுமென்றும் அரேபியாவிலும் துருக்கியிலுமுள்ள முஸ்லீம் புண்ணிய ஸ்தலங்களைப் பாதிக்கும் வண்ணம் எந்தக் காரியமும் செய்யப்படமாட்டாது என்றும் சண்டை நடந்துகொண்டிருக்கும்பொழுது பிரிட்டிஷ் பிரமுகர்கள் கூறியிருந்தனர். துருக்கியின் மீது எவ்வித நிபந்தனைகள் விதிக்கப்படுமென்று இன்னும் தெளிவாகத் தெரியவில்லை. இருந்தாலும் பிரிட்டிஷாரின் தூண்டுதலின்பேரில் அரபுகள் துருக்கியினின்று விடுதலை பெறக் கிளர்ச்சி செய்வதைக் கண்டு முஸல்மான்கள் திகிலடைந்தார்கள். கான்பூர் கலகத்தைக் கடுமையாக அடக்கியதும், டில்லி லீக் மாநாட்டு வரவேற்புத் தலைவர் டாக்டர் எம். ஏ. அன்சாரியின் வரவேற்புச் சொற்பொழிவைத் தடை செய்ததும் முஸ்லீம்களுக்கு மேலும் ஆத்திரத்தை மூட்டின. இந்திய முஸல்மான்களின் அரசியல் அரங்கத்தில் உலாமாக்கள் மறுபடியும் தோன்றி அவர்களுடைய அரசியலியக்கத்தை முன்னின்று நடத்த ஆரம்பித்தனர். இந்தியாவுக்கு சுயநிர்ணய உரிமையை வழங்கவேண்டுமென்று லீக் கோரியது.

கலிபா, அவருடைய நாடுகள், அவருடைய அதிகாரம் ஆகியவற்றைப் பற்றி பிரிட்டிஷார் இந்திய முஸல்மான்களுக்குக் கொடுத்திருந்த வாக்குறுதிகளை, சமாதானப் பேச்சுக்கள் பொய்யாக்கின. இஸ்லாம் புண்ணிய ஸ்தலங்கள் முஸ்லீமல்லாதாரின் அதிகாரத்தின்கீழ் கொண்டுவரப்படும் போலிருந்தன. காரணம் கிலாபத் பலஹீனமானதால் தான். இந்தியாவில் ஏற்பட்ட கிலாபத் இயக்கம் நேசநாட்டினருக்கெதிராக அதிலும் முக்கியமாக பிரிட்டிஷாருக்கெதிராக கலிபாவை ஆதரிக்கத் தோன்றியதாகும். மகாத்மா காந்தியின் தலைமையில் இந்துக்கள் கிலாபத் இயக்கத்துக்குத் தங்கள் முழு ஆதரவையும் காட்டினர். பிரிட்டிஷாரின் துருக்கிக்கு விரோதமான செயல்கள் இந்தியா மந்திரி திரு. மாண்டேகுவைக்கூடத் திடுக்கிடச் செய்தன. கான்ஸ்டாண்டிநோபிளைக் காலி செய்யவும், புண்ணிய ஸ்தலங்களை சுல்தான் அதிகாரத்தின் கீழ் ஒப்புவிக்கவும் ஆட்டமன் திரேஸ், ஸ்மிர்னு முதலிய இடங்களை திருப்பிக் கொடுக்கும்படியும் ராஜப்பிரதிநிதி ரீடிங் தந்தியடித்தார். பேச்சு வார்த்தைகள் நடந்து

கொண்டிருக்கும்போது இத்தந்தியை வெளியிட்டதால் திரு. மாண்டேகு ராஜிநாமா செய்யவேண்டி ஏற்பட்டது. இந்தியாவில் வர வர உணர்ச்சி பொங்கியது. இது விஷயமாகக் கவனத்தை ஒருமுகப் படுத்தும்பொருட்டு மத்திய கிலாபத் கமிட்டியும் நாடெங்கும் கிளைகளும் ஏற்படலாயின. மௌலானா மகமதுல் ஹாசன் ஷேக்குல் ஹிந்த் அவரின் தலைமையில் உலாமாக்கள் ஜமயத்-உல்-உலாமா-யி-ஹிந்த் ஏற்படுத்தினார்கள். கிலாபத்துக்கு ஆதரவாக முஸ்லீம்கள் எவ்வளவு தூரம் கொதிப்படைந் திருக்கிறார்களென்பதை அரசாங்கத்துக்கு உணர்த்துவதற்காகவும், இஸ்லாமின் புண்ணிய ஸ்தலங்களைக் காக்கின்ற கிலாபத்தைச் சிதறடிக்காமலிருக்கவும் வேண்டிக்கொள்வதற்காக இங்கிலாந்துக்குத் தூது கோஷ்டிகள் அனுப்பப்பட்டன. இவைகள் தோல்வியுற்றன. சமாதானப் பேச்சு வார்த்தைகள் நடைபெற்று வந்தன. முஸ்லீம்களின் உணர்ச்சியைப் பொருட்படுத்தாமலும், முன்பளித்த வாக்குறுதிகளுக்கு எதிராகவும், துருக்கிமீது கடுமையான நிபந்தனைகளை விதிக்க நேசநாடுகள் திடம்கொண்டிருந்தன. இது இந்நாடு முழுதும் பெருங்கொந்தளிப்பை உண்டாக்கியது. பிறகு கிலாபத் மகாநாடும், ஜமயத்-உல்-உலாமா-யி-ஹிந்தும் முஸல்மான்களின் தீவிர, செல்வாக்குள்ள ஸ்தாபனங்களாயின. சில வருஷங்கள்வரை இவை முஸ்லீம்களுக்குத் தலைமை தாங்கி வந்தன. லீகும் காங்கிரசும் பக்கத்தில் பக்கத்தில் கூடிவந்தன. முஸ்லீம்களில் முற்போக்குடைய தேசபக்தர்களான ஹக்கீம் அஜ்மல்கான், டாக்டர் எம். ஏ. அன்ஸாரி, மௌலானா ஹஸரத் மோஹனி, அலி சோதரர்கள் ஆகியோர் இவைகளின் தலைவர்களாயிருந்தார்கள்.

பின்னர் ரௌலட் சட்டங்களை எதிர்த்துப் பெருங்கிளர்ச்சிகள் ஏற்பட்டன. கிலாபத் கிளர்ச்சி இதோடு சேர்ந்துகொண்டது. இந்தச் சட்டங்கள் எல்லா வகுப்பாராலும் கடுமையாக எதிர்க்கப்பட்டன. சட்டங்களை நுணுக்கமாக இப்பொழுது ஆராயத் தேவையில்லை. ஸர். சிட்னி ரௌலட்டைத் தலைவராகக்கொண்ட ராஜத்துரோக விசாரணைக் கமிட்டியின் சிபார்சுகளே இச்சட்டங்கள். யுத்தகாலத்தில் அமுலிலிருந்த இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் கொடிய ஷரத்துகளே மறு உருவம்பெற்று இவ்வாறு வந்தன. இக்கிளர்ச்சி இதற்குமுன் கண்டிராதபடி நாட்டிலெங்கணும் எழுச்சியை உண்டாக்கிவிட்டது. பஞ்சாப், பம்பாய் மாகாணங்களிலும் டில்லியிலும், மற்றுஞ் சில இடங்களிலும் கலகங்கள் தோன்றின. கடுமையான அடக்கு முறைகள் கையாளப்பட்டன. அமிருத சரஸில் ஜாலியன் வாலாபாக் படுகொலை நிகழ்த்தப்பட்டது. பஞ்சாப்பில் ராணுவ ஆட்சி அமுலுக்கு வந்தது. ராணுவ ஆட்சியில் நடந்த அட்டூழியங்கள் சிலகாலம் கழித்தே வெளியே தெரிந்தன. அவைகளை விசாரிக்க ஹண்ட்டர் பிரபுவைத் தலைவராகக் கொண்ட ஒரு கமிட்டியை அரசாங்கம் ஏற்படுத்தியது. காங்கிரஸும் ஒரு தனி விசாரணைக் கமிட்டியை ஏற்படுத்தியது. இக்கமிட்டிகளின் அறிக்கைகள் வெளிவரவும் நாடெங்கும் கொதிப்பு ஏற்பட்டது. கிலாபத் காரணமாக முஸ்லீம்களுக்கு ஏற்கெனவே கோபம். ஆகவே காங்கிரஸும் முஸ்லீம் சபைகளும் ஒன்றுகூடிச் செயலாற்றத் தொடங்கின. சாத்வீக ஒத்துழையாமைத்திட்டத்தை மேற்கொண்டன. ஜமயத்-உல்-உலாமா சாத்வீக ஒத்துழையாமையை அனுமதித்து ஒரு பத்வா வெளியிட்டது. அதில் 925 முஸ்லீம் மதத்தலைவர்கள் கையெழுத்திட்டனர். உலாமாக்களில் அனேகர் சிறைக்குள் தள்ளப்பட்டனர். முஸ்லீம்களின் உணர்ச்சி பெருகியது. அனேகர் ஹிஜரத் மேற்கொண்டு சொல்லொணுத் துன்பங்களை அனுபவித்தனர்.

1920 செப்டம்பரில் கல்கத்தாவில் காங்கிரஸின் விசேஷக் கூட்ட மொன்று கூடிச் சாத்வீக ஒத்துழையாமையை ஆதரித்துத் தீர்மானம் செய்தது. அடுத்த டிசம்பரில் நாகபுரியில் கூடிய மகா சபை இத்தீர்மானத்தை ஊர்ஜிதம் செய்தது. 1921-ம் வருஷத்தில் இயக்கம் உக்ரமாக இருந்தது. எல்லா வகுப்பாரிடையிலும் என்றுமில்லாத ஒற்றுமை நிலவியது. சுயராஜ்யம் அடைவதற்கும் பஞ்சாப், கிலாபத் கொடுமைகளுக்கு நிவாரணம் தேடவும் யாவரும் ஒன்றுபோல் உழைத்தார்கள். சட்டமறுப்பும் வரிகொடா இயக்கமும் ஆரம்பிப்பதற்கு முன்பே எல்லா வகுப்பினரையும் சேர்ந்த ஆயிரக்கணக்கான ஆண் பெண்கள் சிறையில் தள்ளப்பட்டார்கள். மௌலானா மகமதலி, ஷௌகத் அலி, ஹுசேன் அகமது, அபுல்கலாம் ஆஸாது, தேசபந்துதாஸ், பண்டித மோதிலால் நேரு, லாலா லஜபதிராய், இன்னும் அனேக தலைவர்களும், காங்கிரஸ் கிலாபத் அங்கத்தினர்கள், தொண்டர்கள், யாவரும் அந்த வருஷ முடிவில் சிறை வைக்கப்பட்டார்கள். ஆனால் இம் மகாசபைகளின் வருடாந்தர மகா சபைகள் ஆமதாபாத்தில் அளவற்ற ஆர்வத்தோடு நடத்தப்பட்டன. வரிகொடா இயக்கமும் சாத்வீகச் சட்டமறுப்புத் திட்டமும் ஏற்றுக்கொள்ளப் பட்டன. இத்திட்டங்களை அமுலுக்குக் கொண்டுவருமுன்பே சௌரி சாராவில் பெருங் கலவரங்கள் ஏற்பட்டதால் இவ்வியக்கங்கள் நிறுத்தப்பட்டன. மகாத்மா காந்தி கைது செய்யப்பட்டு ஆறு வருடச் சிறைவாசத் தண்டனை அடைந்தார். இயக்கம் நின்றுவிட்டது. திரும்ப நடத்துவதற்கு முயற்சிகள் நடைபெற்றன. ஆனால் பலனில்லை.

1921 டிசம்பரில் ஆமதாபாத்தில் கூடிய லீக் கூட்டமே காங்கிரஸோடு ஒரே இடத்தில் ஒரே சமயத்தில் கூடிய கடைசிக் கூட்டமாகும். மௌலானா ஹஸரத் மோஹனிதான் அதன் தலைவராக இருந்தாலும், காங்கிரஸ் அல்லது கிலாபத் கமிட்டி, அல்லது ஜமயத்-உல்-உலாமா சபைகளோடு சரியாக லீகினால் தீவிரமாகச் செல்ல இயலாதென்பது வெளிப்பட்டது. மற்றச் சபைகளைப்போல இது சட்டமறுப்புத் தீர்மானம் செய்யவில்லை. ஏழு வருட காலமாக காங்கிரஸோடு சேர்ந்துவந்தது. அதனுடைய அமைப்பை மாற்றிக்கொண்டது. ஆனால் சட்டமறுப்பைக் காணவும் காங்கிரஸ், கிலாபத் கமிட்டி, ஜமயத்-உல்-உலாமா இவைகளோடு ஒரே இடத்தில் கூடுவதை நிறுத்திக்கொண்டது.

மௌல்வி சையது துபாயில் அகமது எழுதுகிறார்: ‘உடன் வாழும் சபைக்கு முஸ்லீம் லீக் பிற்படுவானேன் என்பதுதான் இப்போது கேள்வி? இதற்குப் பதில் மௌலானா ஷிப்ளியின் வாசகங்களில் காணலாம்: “சிம்லா தூது கோஷ்டிதான் லீகுக்கு அடிப்படை. இந்த அடிப்படைக்கு மேலே எந்தவிதமான அமைப்பைக் கட்டிவைத்தாலும் அதில் சிம்லா தூது கோஷ்டியின் உணர்ச்சி தொடர்ந்தே நிற்கும். லீகின் அடிப்படைக்கல் முதற் கோணல். அதன்மேற் கட்டப்பட்ட எவ்வகைக் கட்டிடமும் முற்றிலும் கோணலாகவே முடியும். லீகின் அரசியல் நடவடிக்கைகள் இவ்வளவுதான்—இந்துக்கள் எந்தெந்த உரிமைகளையும் பதவிகளையும் பெற்றார்களோ அதில் தன் பங்கும் நிச்சயிக்கப்படவேண்டும். இது சரியான அரசியலல்ல. அரசாங்கத்திற்கெதிராக நின்று பொது மக்களுடைய உரிமைகளுக்குப் போராடுவதே உண்மையான அரசியலாகும். இந்த விஷயத்தில் மதத்தைப்போல அரசியலும் சக்திவாய்ந்தது. இவ்வாறு பலம் அற்ற காரணத்தினால் முஸ்லீம் லீக் அங்கத்தினர் எந்தத் துன்பத்தையும் அனுபவிக்கத் தயாராக இரார். அவரிடத்தில் சிறந்த வைராக்கியமும் துணிவும் இருப்பதில்லை.’ ”[1].

[1] M. Tufail Ahmad : *Roshan Mustaqbal*, p. 410.

ஆர்வத்தீ நீண்ட காலத்துக்கு ஒரே மாதிரியாகக் கொழுந்து விட்டெரிந்து கொண்டிருக்க முடியாது. சாத்வீகச் சட்டமறுப்பை நிறுத்திய பின் மகாத்மா காந்தி சிறையில் வைக்கப்பட்டார். பின் நாட்டில் தளர்ச்சியும் மக்கள் மனதில் ஏமாற்றமும் குடிகொண்டின. மற்றெந்த ஸ்தாபனத்தையும்விட முஸ்லிம் லீக் பெரிதும் இடருற்றது. 1923-ல் லக்ஷ்மணபுரியில் கூடிய கூட்டம், போதுமான அங்கத்தினரில்லாததால் கலைக்கப்பட வேண்டியிருந்தது. 1924, 1925, 1926-ல் கூடிய கூட்டங்கள் லீகுக்கும் காங்கிரஸுக்கும் இடையே வேற்றுமைகள் வளர்ந்து வருவதைக் காட்டின.

1921-ல் இந்துக்களுக்கும் மகமதியர்களுக்கும் இடையில் நல்லுறவுகள் நிலவின. அவ்வருடம் பக்ரீதில் முஸல்மான்களே பசுக்கொலையைத் தாங்களாகவே அநேக இடங்களில் நிறுத்திவிட்டார்கள். கிலாபத் இயக்கத்தில் இந்துக்கள் பங்கெடுத்துக்கொண்டதால் இந்து—முஸ்லீம் ஒற்றுமை உறுதியாக அமைந்துவிட்டது என்று தோன்றியபொழுது இதற்கு ஊனம் விளைவிக்கக்கூடிய சம்பவங்கள் சில நடந்தன. மாப்பிள்ளைமார் என்னும் முஸ்லீம் வகுப்பினர் மலையாளத்தில் அதிகம். அவர்களிடையே கிலாபத் இயக்கம் மும்முரமாக இருந்தது. எங்கும்போல அங்கும் இந்துக்கள் அவ்வியக்கத்தில் கலந்துகொண்டனர். மற்ற இடங்களில் பரவியிருந்த அளவுக்கு அங்கு அஹிம்சை பரவவில்லை. இயக்கம் பலாத்கார தோரணையில் சற்று இறங்கியது. மௌலானா மகமதலி மலையாளத்துக்குச் சென்றுகொண்டிருந்தார். அவர் அங்கு போக அனுமதிக்கப்பட்டிருந்தால் அவர் நிலைமையை கட்டுக்குக் கொண்டு வந்திருப்பார். ஆனால் அரசாங்கம் அவரைப் பாதிவழியில் கைது செய்தது; மற்றத் தலைவர்களையும் அங்குப் போகவொட்டாமல் தடை செய்தது. பொதுமக்கள் கட்டு மீறினார்கள். இத்தகைய சந்தர்ப்பங்களில் வழக்கம்போல் சர்க்கார் கண்மூடித்தனமான அடக்குமுறைகளைக் கையாண்டது. இந்துக்களும் மகமதியர்களைப்போலக் கடுந் தண்டனை யடைந்தார்கள். எனினும் அரசாங்கத்தோடு சேர்ந்துவிட்டார்களென்று நினைத்தோ அல்லது நம்மோடு சேராமலிருக்கிறார்களென்று நினைத்தோ மாப்பிள்ளைமார் இந்துக்களைக் கொடுமைப்படுத்தினார்களென்ற செய்திகள் வந்தன. பலவந்தமாக இஸ்லாத்துக்கு மதமாற்றியதாகவும் குற்றம் சாட்டப்பட்டது. இவையெல்லாம் இந்துக்களிடையே வட இந்தியாவில்கூட, கடுஞ் சீற்றத்தை உண்டாக்கியது. இச்செய்திகள் சந்தேகமின்றி மிகைப்படுத்தப்பட்டவையே. ஆனால் தலைவர்கள் அதிலும் முக்கியமாக மகாத்மா காந்தி சிறைக்கு வெளியிலுள்ளவரை நிலைமை கட்டுக்கடங்கியிருந்தது. ஒத்துழையாமை இயக்கத்தில் ஒரு தலைவராக இருந்த சுவாமி சிரத்தானந்தரை மேற்கூறிய விஷயங்கள் திடுக்குறச் செய்தன. தம்முடைய துணிவினாலும் வீரச் செய்கைகளினாலும் முஸல்மான்களுடைய நம்பிக்கையையும், மதிப்பையும் பெற்றவர் இவர். மகமதியர்களுடைய அழைப்பிற்கிணங்கி டில்லி ஜம்மா மசூதியில் சென்று ஒரு சமயம் சொற்பொழிவாற்றினார். விடுதலையடைந்ததும் சுத்தி இயக்கத்தைத் தொடங்கினார்.

தேசியவாதிகளும் முஸல்மான்களும், சுவாமி சிரத்தானந்தரது சுத்தி இயக்கத்தை நிறையக் குறை கூறினார்கள். அது தொடங்கப்பட்ட சமயா சமயத்தைப் பற்றி யாரும் ஏதும் சொல்லுவதற்கிருக்கலாம். ஆனால் கிறிஸ்தவர்களும் முஸல்மான்களும் அது முறையற்ற செயலென்று கூறித் தடை சொல்லுவதன் காரணம் விளங்கவில்லை. இந்துக்களைத் தங்கள் மதத்திற்கு மாற்றுகின்ற வேலையில் இவர்கள் எப்பொழுதும் ஈடுபட்டிருக்

கிருர்கள். இந்துக்களும் இந்துவல்லாதவர்களைத் தங்கள் மதத்திற்கு மதமாற்றம் செய்யப் புறப்பட்டால்—இந்த இந்துவல்லாதவர்கள், தாங்களே மதமாற்றத்திலீடுபட்ட இவர்கள், அதைத் தடை சொல்லுவதற்கு என்ன தகுதியிருக்கிறது? மற்றவர்களைப்போல இந்துக்களுக்கும் மதத்தைப் பரப்பும் உரிமையிருக்க வேண்டும். ஆனுல் மனிதர்கள் எப்பொழுதும் காரண காரிய முறையையோ அல்லது நியாய ஒழுங்குகளையோ கடைப்பிடித்துச் செல்கிருர்களென்று சொல்வதற்கில்லை. சுத்தி இயக்கத்தின்மீது முஸல்மான்களுக்கு கடுங்குரோதம் ஏற்பட்டது. சுவாமி சிரத்தானந்தர்மீது வெறுப்பு உண்டாயிற்று. அவரும் சில நாட்களில் ஒரு முஸ்லிம் கொலைகாரனுல் முடிவெய்தினர். முஸல்மான்களும் தப்லீக், தன்ஸீம் இயக்கங்களைத் தொடங்கினர்.

1922-ன் பிற்பகுதியில் முல்தானில் கொடுமையான கலவரங்கள் தோன்றின. இந்து ஆலயங்கள் அனுசாரப்படுத்தப்பட்டன. அனேக இந்துக்கள் கொல்லப்பட்டனர். இந்துக்களுடைய வீடுகள் கொள்ளையிடப்பட்டுத் தீ வைக்கப்பட்டன. இதுதான் ஆரம்பம். இதிலிருந்து கிட்டத்தட்ட நாட்டில் எல்லாப் பாகங்களிலும் வகுப்புக்கலவரங்கள் அநேக ஆண்டுகள் வரை தொடர்ந்து நடந்தன. காங்கிரஸ்காரர்கள், கிலாபத்காரர்கள், தேசியவாதிகள், அவர்கள் முஸ்லீம்களாயினும் சரி, இந்துக்களாயினும் சரி, இப்புகைச்சல்களை அணைக்க எவ்வளவோ முயன்றும் பயனில்லை. இப்புகைச்சல்கள், கலவரங்களுக்கெல்லாம் சில சக்திகள் திரை மறைவில் தூபம்போட்டுக் கொண்டிருந்தன என்பதற்கு ஐயமில்லை. இந்துக்களுடைய வரம்பு மீறிய செயல்கள்தான் இக்கலவரங்களுக்குக் காரணமென்று சில பாகிஸ்தான் பிரமுகர்கள் குறை கூறினுர்கள். இந்துத் தலைவர்கள்தான் இவைகளை உண்மையாக நடத்துகிருர்கள் என்றுகூடச் சிலர் சொல்லுகிற அளவுக்குப் போய்விட்டார்கள். இதனுல் வேறெதுவும் பிரமாதமாகக் கிடைக்காவிட்டாலும், முஸல்மான்களுக்கு முன்னுல் கேவலம் ஆடுகளைப்போல பயந்து ஒளியும் இந்துக்களுக்கு மகமதியர்களை எதிர்த்து நிற்கும் பயிற்சியாவது கிடைக்கட்டுமே யென்றுதான் இவ்வாறு செய்தார்களாம். கலவரங்களுக்கு இதைக் காரணமாகப் புகல்வது பிரசினையை மெத்தச் சிறிதாக்குவதாகும். பாகிஸ்தானுக்குச் சாதகமான வாதத்துக்குப் பயன்படவே இவ்விதக் காரணங்கள் சொல்லப்பட்டன. உண்மையில் காரியங்கள் இவ்வாறு நடக்கவில்லை. கடந்த முப்பது வருஷங்களில் வகுப்புக் கலவரங்கள் எப்போதெப்போது நடந்து வந்திருக்கின்றன வென்பதைச் சற்று நிதானமாக உள் வெறுப்பின்றி ஆராய்ந்து பார்த்தால், இந்நாட்டின் அரசியல் சரித்திரம் நெருக்கடியான கட்டங்களை அணுகும்போதுதான் இவை தலைதூக்கும் வழக்கம் பெற்றிருந்தன என்பது தெரியவரும். பிரிட்டிஷாரிடமிருந்து இந்தியர்கள் கைக்கு ஆட்சி மாற்றப்பட வேண்டுமென்று இடைவிடாத, பெரும் கோரிக்கைகள் ஏற்பட்ட காலங்களிலும், இரு பெரிய வகுப்புகளும் ஒருமித்த லட்சியத்தோடு ஒருங்கே செயலில் புகுந்தபோதும் இவைகள் கிளம்பியிருந்ததைக் காண்கிருேம். 1916 டிசம்பரில் லீகுக்கும் காங்கிரஸுக்கும் நெருங்கிய இணக்கம் ஏற்பட்டதைக் கண்டோம். அதையொட்டி 1917-ல் சுயாட்சிக் கிளர்ச்சி மும்முரமாக நடைபெற்றது. 1917ன் பிற்பகுதியில் கொடுங் கலவரங்கள் பீஹாரில் ஷஹாபாத்தில் தோன்றின. இந்துக்கள் முஸல்மான்களை வாட்டினுர்கள். இந்துக்களை அரசாங்கம் இன்னும் கொடுமையாக வாட்டிற்று.

அடுத்த ஆண்டு ஐக்கிய மாகாணத்தில் காட்டர்பூரில் இதைப்போன்ற கொடுங் கலவரங்கள் தோன்றின. பலன்களும் அதேபோல்தான். கிலாபத் அநீதியும் பஞ்சாப் படுகொலையும் இரு சமூகத்தாரையும் 1919லிருந்து 1922 வரை முழுதும் ஒன்றுபடுத்தின. பழையபடியும் 1922ல் இந்து முஸ்லீம் பிணக்குகள் தோன்றிச் சில காலம் நீடித்தன.

1924-ல் தம்முடைய சிறை தண்டனைக்காலம் முடியு முன்பே, கடும் நோய் காரணமாக மகாத்மா காந்தி விடுதலையடைந்தார். வகுப்புக்கலவர வெறியாட்டங்கள் நாடெங்கும் தோன்றி உயிரையும் பொருளையும் கொள்ளை கொள்வதைக் கண்டு நெஞ்சு புண்ணுனர். அவருடைய வழக்கப்படி இருபத் தொரு நாள் உண்ணாவிரதம் மேற்கொண்டார். சகோதரக் கொலைபாதகச் செயல்கள் வகுப்பு நிலைமையை நாளுக்கு நாள் மோசமாக்கிக்கொண்டே வந்தன. இதை நிறுத்துமாறு இந்து முஸ்லீம்களிடம் முறையிட்டுக் கொள்வதே இவ்விரதத்தின் நோக்கம். அச்சமயம் காங்கிரஸ் தலைவராக இருந்த மௌலானா மகமதலி நாடெங்கணுமுள்ள தலைவர்களையும் எல்லா வகுப்பினரைச் சேர்ந்த பிரதிநிதிகளையும் அவசரமாகக் கூட்டினுர். கலவரங் களுக்கு ஏதுவான நிலைமைகளில் எப்படி எப்படி நடந்துகொள்ளவேண்டு மென்று சில விதிகளை அம்மகாநாடு வகுத்தது. மதவினங்களுக்குள்ள உரிமை களையும் பொறுப்புக்களையும் வரையறுத்து விளக்கி நியாயமும் நேர்மையு மான சில தீர்மானங்களை அந்த மகாநாடு நிறைவேற்றியது. அம்மட்டு அம்மகாநாடு வெற்றியடைந்த தெனக் கூறலாகும். இவ்வளவும் கூடி நிலைமையைச் சீர்திருத்தும் என்று நம்பப்பட்டது. அந்த மகாநாட்டின் நடவடிக்கைகளையும், தீர்மானங்களையும் வேண்டிய அளவு பொதுமக்களுக்கு அறிவித்து அவைகளை மக்கள் செவ்வையாகக் கடைப்பிடித்திருந்தால் நிலைமை கட்டுக்கடங்கி யிருக்கும். ஏதாவது ஓர் இனத்தாரையே பிரித்தெடுத்து அவர் களைக் குற்றம்சாட்டிக்கொண்டிருப்பதில் பலனில்லை. வகுப்புக் கலவரங்களை மதவெறியர்கள் நடத்துவதாக வெளியில் தோன்றினுலும் உண்மையில் அவைகள் அரசியல் மறைமுகத்தைக் கொண்டவை. எப்பொழுது ஒரு தடவை கலவரம் ஏற்பட்டுவிடுகிறதோ அது ஓய்ந்தபின், மனக்கசப்பும், சந்தேகமும் மிச்சமாகின்றன. இவைகளே அடுத்த தகராறுகளுக்கு விதைக ளாகின்றன. சூழ்நிலை ஒரேயடியாகக் கெட்டுவிடுகிறது. மற்றப்படி மன உறுதியும் அமைதியும் உடையவர்கள்கூட இச்சமயங்களில் சமநிலை யிழந்து விடுகின்றனர். காரணங்களென்ன, நடந்ததென்ன, சமாதான வழிகள் யாவை என அறிவதும் அவர்களுக்குக் கஷ்டமாகிவிடுகிறது. இந்தக் கலவரங் களுக்குப்பின் நிலைமை சூழ்நிலையை நிரம்பவும் நாசமாக்கிவிடுகிறது. சமா தானப்படுத்த ஏதேனும் முயற்சி செய்யப்புகுந்தால் தவருகக் கருதப்படு கின்றது. கெட்ட எண்ணங்கள் கற்பிக்கப்படுகின்றன. வகுப்புக்கலவரப் பிரசினையை நன்கு ஆராய்ந்தவர்களுக்கு இவைகள் பற்றிய விவாதங்களைக் கிளப்பிக்கொண்டிருப்பதும், அல்லது சம்பவங்களை 'நினையாதொருபோது மிருந்தறியேன்' என்றிருப்பதும் வீணத்தனம் என்பது நன்கு தெரியும். போலீஸூம் கோர்ட்டுகளும் இவ்வழக்குகளை வருஷக்கணக்கில் இழுத்தடிப் பதன் பலனுகத் தகராறுத்தணல் அணைக்காமல் போற்றப்படுகிறது. ஏனெனில் கட்சிகளும் சாட்சிகளும் வகுப்புவாரியாகப் பிரிக்கப்பட்டு விடுகிருர்கள். தங்கள் தங்கள் வகுப்புகளுக்காகக் கச்சை கட்டிவரும் முன்னேர்களின் எண்ணிக்கையில் எப்போதும் குறைச்சல் இருந்ததில்லை. ஆனுல் பிறத்தியார்

தலையிட்டுச் சமரசம் செய்ய முயன்றால், சமரசம் செய்துவைப்பதற்காக வழக்குகள் மேற்கொண்டு நடைபெறுவதை நிறுத்த முயன்றால், இம்முயற்சிக ளனைத்தும் கலவரக் காலிகளைக் காப்பாற்றுவதற்குச் செய்யப்படும் தந்தி ரங்கள் எனக் கண்டிக்கப்படுகின்றன. ஆனால் உண்மையென்ன தெரியுமோ? காலிகளில் அநேகர், அதிலும் பகைமைச் சூழ்நிலையை உண்டாக்கி, மத வெறி யைத் தூண்டிவிடும் காலிகள் இக்கலவரச் சந்தர்ப்பங்களில் அடிவிழாமல் தந்திரமாய்த் தப்பித்துவிடுகிறார்கள்; போலீஸ் தொந்தரவு, கோர்ட்டுத் தொல்லைகளிலிருந்து எப்படியோ சமாளித்துவிடுகிறார்கள். பாவம், அப்பாவி களும் கள்ளங் கபடமற்றவர்களும் ஆத்திரத்தில் ஏதோ தலையிட்டுவிட்டு அதன்பின் வருந்துவதுண்டு. இத்தகையவர்களைக் காப்பாற்ற முயலுவது அறநெறி பிறழ்ந்ததாகாது; வேறு எவ்வழியிலும் குற்றமானதுமல்ல. மேலும் அது பகைநிலையை ஒழித்து சகோதர உணர்ச்சியையும் நல்லெண்ணத்தையும் வளர்க்கத்தானே உதவும்? இருந்தாலும் இந்துக்கள் தங்களைக் காப்பாற்று வதற்குச் செய்யும் தந்திரங்கள் என இவை பறைசாற்றப்படுகின்றன. இத்தகைய சமரசக் காரியங்களில் ஈடுபடுகிறவர்கள் ஏதாவதொரு இனத் தாரைச் சேர்ந்தவர்களுக்காக வக்காலத்து மேற்கொள்ளவில்லை. இருவினத் தாரின் நன்மைக்காகவே பாடுபடுகிறார்கள் என்பது சொல்லாமலே விளங்கும். வகுப்புக்கலவர சம்பந்தமாக வழக்குகள் கிளம்பும். பின் எதிர் வழக்குகள் முளைக்கும். வாதி, பிரதிவாதியாவார். குற்றஞ் சாட்டுகிறவர் குற்றவாளியாவார், குற்றவாளி குற்றஞ் சாட்டுபவராவார். பிறகு எல்லோருக்கும் சாதகமான முடிவேற்படும். இக்கலவரங்களின் காரணங்களைக் கண்டு பிடித்துச்சொன்ன விசாரணைக் கமிட்டிகளின் அறிக்கைகளில் ஒரு விஷயம் காணக்கிடக்கின்றது. அதாவது அரசாங்கம் நிலைமைக்கேற்ற நடவடிக்கைகளில் உறுதியாக இருந்திருந்தால் கலவரத்தைத் தடுத்திருக்கலாம். அல்லது ஆரம்பித்த கலவரம் அங்கேயே அப்போதே நின்றிருக்கலாம். பம்பாயில் கொடுங் கலவரங்கள் நிகழ்ந்தன. 89 இந்துக்கள், 54 மகமதியர்கள், 1 ஐரோப்பியர், 1 பார்சி மாண்டனர். 643-பேர் காயமுற்றனர். விசாரணைக்கு ஏற்பாடாகியது. கலவர விசாரணைக் கமிட்டி எழுதியதாவது: 'நிலைமையைச் சமாளிக்க போலிஸ் கமிஷனர் இன்னும் சீக்கிரமாகவே ராணுவத்தை அழைத்திருக்க வேண்டுமென்பதில் சரியான நியாயம் இருக்கின்றது. எப்படி யிருந்தாலும் ஆரம்பத்திலேயே ராணுவ பலத்தை அழைத்துக் கடுமையான முறைகளைக் கையாளுவது விரும்பத்தக்க தென்பதைச் சமீபகாலத்திய அனுபவம் காட்டி யிருக்கிறது............'

1931-ல் கான்பூரில் கொடுங்கலவரங்கள் ஏற்பட்டன. 'கான்பூர் கலவர விசாரணைக் கமிஷனின் அறிக்கை கூறுவதாவது: "காங்கிரஸ் நடவடிக்கைக ளுக்கு ஆதரவளித்து வந்ததால் ஸ்தல அதிகாரிகள் வர்த்தகர்கள் மீது கோபங் கொண்டிருந்தனர். அதிகாரிகளுடைய ஒத்தாசையில்லாதபடி சொத்து சுகங்களைக் காப்பாற்ற முடியாது என்பதைக் காண்பிப்பதற்காக அவர்கள் உடனடியாகச் சரியான முறைகளைக் கையாண்டு கலகத்தை அடக்கவில்லை யென்று பொதுவாக ஜனங்கள் நினைப்பதாக" ஒரு சாட்சி கூறினர். போலிஸின் இத்தகைய போக்கு கண்டிக்கத்தக்கது; மன்னிக்க முடியாதது. கலவரச் சம்பவங்கள் நடந்துகொண்டிருந்த சமயத்தில் போலிஸ் அசிரத்தையாக அசையாமலிருந்தது என்ற விஷயத்தை எல்லாவிதமான சாட்சிகளும் ஒரு முகமாக ஒப்புக்கொள்கிறார்கள். இந்தச் சாட்சிகளில் ஐரோப்பிய வர்த்தகர்கள்,

முஸ்லீம்கள், எல்லாவித அப்பிராயமுள்ள இந்துக்கள், ராணுவ அதிகாரிகள், வடஇந்திய வர்த்தக சபைக் காரியதரி, இந்தியக்கிறிஸ்தவர்களின் பிரதிநிதிகள், இந்திய அதிகாரிகள் யாவருமுளர். இவ்வித ஒருமுகமான சாட்சியத்தைப் புறக்கணிக்க முடியாது......................கலவரம் நடந்த முதல் மூன்று நாட்களில் போலிஸ் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யவில்லை என்பதில் எங்களுக்குச் சிறிதும் சந்தேகமில்லை.................போலிஸ் கண் காண அட்டூழியங்கள் நடந்தும் போலிஸ் சிறிதும் பரபரப்படையாமல் சும்மா இருப்பது சுகமென்றிருந்த தென்று ஏராளமான சாட்சிகள் கூறி யிருக்கிறார்கள்.........போலிஸ் ஒருவிதக் காரியமும் செய்யாமல் அசட்டையாக இருக்கிறதென்று மேலதிகாரிகளுக்குப் புகார் செய்யப்பட்டன என்று அனேக சாட்சிகளும் கூறினார்கள். ஜில்லா மாஜிஸ்டிரேட்டும் அவ்விதமே கூறி யிருக்கிறார். இப்புகார்களைப்பற்றியும் ஒன்றும் கவனிக்கவில்லை என்பதும் மிகவும் வருந்தத்தக்கது.'[2]

## 14. முக்கோண அடித்தளம் நீளுகிறது

1926 டிசம்பரில் கௌகத்தி காங்கிரசுக்குச் சற்று முன்பு டில்லியில் தன் வீட்டில் சுவாமி சிரத்தானந்தர் நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையில் கிடந்தார். ஒரு முஸ்லீம் மத வெறியன் அவரைக்காண அனுமதிபெற்று உள்ளே சென்று எமனாய் அவரைக் கொன்றான். இக்கொடுஞ்செயல் நாடு முழுவதையும் பயத்திலாழ்த்தியது. இந்து முஸ்லீம்களுக்கிடையே அரசியல், சமூக, சமய வேறுபாடுகளைத் தீர்க்க மேலும் முயற்சிகள் செய்ய வேண்டு மெனத் தோன்றியது 1920-ம் வருடத்திய மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களைக் காங்கிரஸும் கிலாபத் கமிட்டியும் பஹிஷ்கரித்து 1920 தேர்தல்களில் கலந்துகொள்ளவில்லை என்பதைக் கவனித்திருக்கலாம். 1922-ல் சாத்வீகச் சட்டமறுப்பு இயக்கத்தை நிறுத்திய உடனே இருசபைத் தலைவர்க ளிடையேயும் வித்தியாசங்கள் தோன்றினவாகையால் பகிஷ்காரம் நிறுத்தப் பட்டது. 1923-ம் வருஷ முடிவிலும் அதற்குப் பின்பும் நடைபெற்ற தேர்தல்களில் காங்கிரஸ், கிலாபத் தொண்டர்கள் கலந்துகொண்டார்கள். சுயராஜ்யக் கட்சியின் மூலமாகக் காங்கிரஸ் சட்ட சபைகளில் வேலை செய்தது. சுயராஜ்யக்கட்சி சீர்திருத்தங்களை நடத்திவைப்பதற்குச் செல்லவில்லை. ஆனால் சட்ட சபைகளின் மூலமாக அரசாங்கத்துடன் ஒத்துழையாமைப் போர் புரியவே அங்கு சென்றது. ஆகவே மத்திய சட்டசபையில் காங்கிரஸ் அங்கத்தினர்கள் அரசியலமைப்பை மாற்ற வேண்டுமென்று தீர்மானம் கொண்டுவந்தார்கள். நிதி மசோதாவை நிராகரித்தார்கள். சட்டசபையின் அங்கீகாரம் பெற முடியாமல் கவர்னர் ஜனரலே தனது விசேஷ அதிகாரத்தின் மூலம் மான்யங்கள் பெறவேண்டியிருந்தது. காங்கிரஸில் சேராத முஸ்லீம் சட்டசபை அங்கத்தினர்கள் இச்செயலின்போது காங்கிரஸோடு சேர்ந்து கொண்டார்கள். நாட்டில் பகை நிலைமையிருந்தாலும் மத்திய சட்டசபை இந்து முஸ்லீம் அங்கத்தினர்களுக்குள் ஒரு சிறிது ஒத்துழைப்பு இருந்த தென்பதை இது தெளிவாக்குகிறது.

அரசியலமைப்பு விஷயங்களில் எவ்வித முன்னேற்றமும் செய்யமுடியா தென்று பிரிட்டிஷ் அரசாங்கம் எல்லாவித பிரேரணைகளையும் திடமாக

2. K.B. Krishnan : *The Problem of Minorities*, pp. 272-3.

எதிர்த்து வந்திருக்கிறது. ஆனால் அரசாங்கம் நெடுநாளைக்கு இப்படியே எதிர்த்துக் கொண்டிருக்க முடியாது என்று புலப்பட்டது. எந்தவிதமான வகுப்பு சமரசமும் இல்லாமல் அரசியல் முன்னேற்றமும் சாத்தியமில்லை என்பதும் தெரிந்தது. இந்து முஸ்லிம்களுக்கிடையே நிலவிய வருந்தத்தக்க மன வேற்றுமைகளை ஒருவழியாகத் தீர்ப்பதற்கு இந்து முஸ்லிம் தலைவர்களை ஒன்று கூட்டி வேண்டிய வழிகாண, உடனே மேற்கொள்ள கௌகத்தி காங்கிரஸ் தனது காரியக்கமிட்டிக்கு அதிகாரமளித்தது. காங்கிரஸ் தலைவராக இருந்த திரு. சீனிவாஸய்யங்கார், மத்திய சட்டசபை அங்கத்தினர்களோடும் இந்து முஸ்லிம் தலைவர்களோடும் சில சாதாரணக் கூட்டங்கள் நடத்தினர். 1927 மார்ச் முடிவில் சில முஸ்லிம் பிரமுகர்கள் டில்லியில் கூடிச் சில பிரேரணைகளைக் கொண்டு வந்தார்கள். இவைகள் முஸ்லிம் பிரேரணைகள் எனப் பெயர் பெற்றன. சில நிபந்தனைகளின் பேரில் மத்திய, மாகாண சட்டசபைகளில் கூட்டுத்தொகுதிகளை ஏற்க இசைந்தனர். அந்நிபந்தனைகளாவன: (அ) சிந்து தனி மாகாணம் ஆக்கப்படல் வேண்டும். (ஆ) மற்ற மாகாணங்களுக்குச் சமமாகவே எல்லைப்புற மாகாணத்தையும் பலுச்சிஸ்தானத்தையும் நடத்த வேண்டும். (இ) பஞ்சாப்பிலும் வங்காளத்திலும் ஜனத்தொகை விகிதா சாரப்படி முஸ்லீம்களுக்குப் பிரதிநிதித்துவ மளிக்கப்படல் வேண்டும். (ஈ) மத்திய சட்டசபையில் மொத்தத்தில் மூன்றிலொருபங்குக்குக் குறையாது முஸ்லீம் பிரதிநிதிகள் இருத்தல்வேண்டும். தொடர்ந்த மே, அக்டோபர் மாதங்களில் கூடிய கூட்டங்களில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி இந்தப் பிரேரணைகளை உருப்படியாக அப்படியே ஏற்றுக்கொண்டு தீர் மானங்கள் நிறைவேற்றியது. மத, சமூகச் சார்பான விஷயங்களைக் குறித்தும் சில விதிகளை வகுத்தது. காங்கிரஸின் அடுத்த வருடாந்தரக் கூட்டம் சென்னையில் கூடியது. அவ்வருட ஆரம்பத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தை யொட்டி ஒரு தீர்மானத்தை நிறை வேற்றியது. இதர ஸ்தாபனங்கள் ஏற்படுத்தக்கூடிய கமிட்டிகளோடு காரியக் கமிட்டியும் சேர்ந்து உரிமைப் பிரகடன அடிப்படையில் இந்தி யாவுக்கு ஒரு சுயராஜ்ய அரசியலமைப்பை உருவாக்குவதற்குக் காரியக்கமிட் டிக்கு அதிகாரமும் அளித்தது. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி, இதர ஸ்தா பனங்களின் தலைவர்கள், பிரதிநிதிகள், மத்திய, மாகாணசட்டசபைகளின் தேர்ந் தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் முதலிய யாவரும் கூடிய கன்வென்ஷனில் மேற்கூறிய அரசியலமைப்பை ஆலோசனைக்கு வைப்பதென்றும் தீர்மானம் செய்யப்பட்டது. அதே வாரத்தில் முஸ்லிம் லீக் கல்கத்தாவில் கூடியது. காங்கிரஸ் காரியக்கமிட்டியோடும் இதர ஸ்தாபனங்களோடும் கூடி இந்தியா வுக்கு ஓர் அரசியல் திட்டத்தைத் தயாரிப்பதென ஒரு சப் கமிட்டியை நியமிக்கக் காரியக்கமிட்டிக்கு அதிகாரம்கொடுத்து ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. அந்த சப்கமிட்டி காங்கிரஸ் கூறியதுபோல தேசிய கன்வென்ஷனில் கலந்து கொள்ளவும் உரிமையளித்தது. முன்கூறிய முஸ்லிம் பிரேரணைகளின் அம்சங்களை உறுதிசெய்தது. இதர கோரிக்கைகளை நிறைவேற்றுவதானல் முஸல்மான்கள் தனித்தொகுதியைக் கைவிடுவதாகவும் உறுதியாகக் கூறியது. நினைப்புச் சுதந்திரம், சமயச் சட்டமியற்றல், பசு, மேளவாத்தியப் பிரசினைகள், மதமாற்றம் இவைகள் சம்பந்தமாக சென்னை காங்கிரஸ் ஏற்பாட்டையும், அந்தத் தீர்மானத்தில் இணைத்துக்கொண்டது. அகில இந்திய முஸ்லிம் லீகில் பிளவு ஏற்பட்டிருந்தது என்பது கவனிக்கத் தகுந்தது. ஒரு பிரிவினரின் லீகுக்

கூட்டம் கல்கத்தாவில் கூடியது. இன்னொன்று லாகூரில் சர் மியான் மகமது ஷாபியின் தலைமையில் கூடியது. மேற்கூறிய தீர்மானம் கல்கத்தாக் கூட்டத்தில் மௌல்வி மகமது யாகுப் தலைமையில் நிறைவேறியது. திரு. ஜின்னாதான் அதன் வழிகாட்டியும் முன்னணியுமாயிருந்தார்.

ஒரு பக்கம் லீகுக்குள்ளே பிளவு ஏற்பட்டது. மற்றொரு பக்கம் லீகின் ஒரு பிரிவுக்கும் காங்கிரஸுக்கும் நல்லுறவு தொடங்க ஆரம்பித்தது. இதன் காரணங்கள் இங்கு குறிப்பிடத் தக்கன. அரசியல் முன்னேற்றத்திற்கான எல்லாவகைப் பிரேரணைகளையும் அரசாங்கம் உறுதியாக எதிர்த்து வந்திருக்கிறது என்று முன் கூறப்பட்டிருக்கிறது. அப்பொழுது பர்க்கன்ஹெட் பிரபு இந்தியா மந்திரியாயிருந்தார். 1925 டிசம்பர் 10-ல் அவர் ராஜப்பிரதிநிதி ரீடிங் பிரபுவுக்கு ஒரு கடிதம் எழுதினர். 1920-ம் வருடத்திய இந்திய அரசாங்கச் சட்டப்படி அச்சீர்திருத்தங்கள் எவ்வாறு அமுலிலிருக்கின்றன என்பதை அறிய அச்சீர்திருத்தங்கள் தொடங்கிய பத்து வருஷத்திலோ அல்லது அதற்கு முன்போ ஒரு சட்டபூர்வமான கமிஷன் ஏற்படுத்துவது எனக் கண்டிருந்தது. அந்தக் கமிஷனை ஏற்படுத்தும் தேதியை முன்கூட்டியே ஏற்பாடு செய்வது பற்றி அக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். அவர் எழுதியதாவது :

'கீழ்க்கண்ட விஷயமாக உங்களது யோசனையைக் கேட்க விரும்புகிறேன். இந்தச் சட்ட நியமனக் கமிஷனை எந்தச் சந்தர்ப்பத்தில் ஏற்படுத்தினல் நமக்கு இது ஒரு சாதகமான பேரமாகும் அல்லது சுயராஜ்யக் கட்சியை மேலும் சிதறடிக்கும் என்பதைத் தீரயோசித்துச் சொல்லவும்.......சீக்கிரத்தில் இத்தேதியைக் குறிப்பிடுவதானல் நமக்குச் சாதகம் அதிகமென்று தெரிந்தால் உடனே முழுமூச்சாகத் தொடங்கவும். அரசாங்கம் உங்களுக்கு முழு ஆதரவளிக்குமென்பதையும் அறிந்தே செய்யவும்.'[1]

ஆனல் இங்கிலாந்தில் 1927-ல் இருந்த அரசியல் நிலைமை அவர் ஒன்றும் செய்ய முடியாதபடி ஆக்கிவிட்டது. 'அங்கு நடக்கப்போகும் பொதுத் தேர்தல்களின் முன் அறிகுறிகள் பயங்கரமாக ஒரு தொழிற்கட்சி சர்க்கார் ஏற்படப்போவதை அறிவித்தன. "1928-ம் வருஷத்திய கமிஷனை நியமனம் செய்வதைத் தமக்குப் பின்வரும் அரசியல் கட்சியின்—கர்னல் வெட்ஜ்வுட், அவருடைய நண்பர்கள்—கையில் ஒப்படைக்கும் ஆபத்திற்குச் சிறிதேனும்" அவர் இடங்கொடுக்கத் தயாராக இல்லை. அடுத்துவரும் அரசியல் கட்சிக்கு அக்காரியத்தை விட்டுவிட்டுச் சென்ருல் "சுயராஜ்யக் கட்சியைச் சிதறடிக்கும்," அவருடைய மனக்கோட்டை இடிந்துவிடும்.'[2] 1927 நவம்பரில் சட்டபூர்வமான கமிஷன் நியமனத்தைத் தெரிவித்தார். இக்கமிஷன் சர் ஜான் சைமனைத் தலைவராகக்கொண்ட ஏழு பேர் அடங்கியது. அதில் இந்திய அங்கத்தினர்களுக்கிடமில்லை. மத்திய சட்டசபை, ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட கூட்டுக் கமிட்டியை ஏற்படுத்துமாறு கேட்டுக்கொள்ளப்பட்டது.அந்தக் கூட்டுக்கமிட்டி கமிஷனின் பரிசீலனைக்குத் தனது கருத்துக்களைத் தெரிவிக்கும். அக்கமிஷனினின்று இந்தியர்களை விலக்கியதன் மூலம் இந்தியர் மனத்தைப் புண்படுத்தி இழிவாக நடத்தினர்கள் என்று கருதப்பட்டது. கமிஷனைப் பஹிஷ்கரிப்பதென்று தீர்மானிக்கப்பட்டது. காங்கிரஸ் மட்டுமின்றிக் காங்கிரஸில் சேராத

1. *Birkenhead—The Last Phase*, Vol. II, p. 25 quoted by K. B. Krishnan in his *Problem of Minorities*, p. 307.

2. *ibid.*, pp. 250-1, quoted by Atulanand Chakrawarty in his *Call it Politics*, p. 58.

ஏராளமான முஸ்லீம்களும் பஹிஷ்கரித்தனர். கிலாபத் கமிட்டியும் பஹிஷ்கரித்தது. அரசியல் விஷயங்களில் தீவிரக் கருத்துக்கள் உடையவர்கள் இல்லை என்று பொதுவாக நம்பப்படுகிற மிதவாதிகள் மான்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களைக் காங்கிரஸ் எதிர்த்தபொழுது அவைகளை நடத்திவைக்க முயன்றார்கள். அவர்களும்கூட இக்கமிஷனைப் பகிஷ்கரித்தார்கள். சைமன் கமிஷனோடு ஒத்துழைப்பது, தனித்தொகுதிகள் ஆகிய இரு பிரசினைகளின் பேரில்தான் அகில இந்திய முஸ்லீம் லீகில் பிளவு ஏற்பட்டது. இந்தியாவிலுள்ள பல்வேறு வகுப்புகளிடையே பகைமை இருப்பதனால் ஏற்படும் சாதகத்தை பர்க்கன்ஹெட் பிரபு நன்குணர்ந்திருந்தார். 'இந்தியா மந்திரி என்ற தோரணையில் ராஜப்பிரதிநிதியாக இருந்த ரீடிங் பிரபுவுக்கு அவர் ஆலோசனை கூறினர்: "முரண்பாடுள்ள வகுப்புகளுக்குள்ளும் பெரும்பாலான மக்களுள்ளும் எவ்வளவு தூரம் பகைமை ஆழமாக வேரூன்றிப் பரவுகின்றதோ அவ்வளவுக் கவ்வளவு நாம்தான் அங்கு மத்தியஸ்தராக இருக்கமுடியும் என்ற உண்மை தெற்றென விளங்கும்' "[3] இந்தியாவில் கமிஷன் பஹிஷ்கரிக்கப்பட்டபொழுது ராஜப்பிரதிநிதி இர்வின் பிரபுவுக்கு அவர் எழுதினர்: 'பஹிஷ்கார மனப்பான்மையை உடைத்தெறிவதற்கு பஹிஷ்காரம் செய்யாத முஸ்லீம்களையும் தாழ்ந்த வகுப்பினரையும் வர்த்தகர்களையும் இன்னும் அனேகரையும் நாம் எப்பொழுதும் நம்பி வந்திருக்கிறோம். இந்தியாவில் கமிஷன் வந்திருக்கும் இச்சமயத்திலும் அந்த வழியிலேயே சென்று நமக்கிருக்கும் எதிர்ப்பில் பிளவு ஏற்படுத்துவது முடியுமா எனத் தீர ஆராய்வது நீங்களும் சைமனும் செய்யவேண்டிய வேலையாகும்.'[4]

சில நாட்கள் கழித்து 1928 பிப்ரவரியில் ராஜப்பிரதிநிதிக்கு மறுபடியும் அவர் எழுதினர்: 'கமிஷனைப் பஹிஷ்கரிக்காத முக்கியமான மனிதர்களை, குறிப்பாக முஸ்லீம்களையும் தாழ்ந்த வகுப்பினரையும் எல்லாக் கட்டங்களிலும் பார்க்கும்படி சைமனுக்கு நான் ஆலோசனை கூறுவேன். முஸ்லீம் பிரதிநிதிகள் அவரைப் பேட்டி கண்ட செய்தியை நாலா பக்கமும் விளம்பரப்படுத்துவேன். நம்முடைய கொள்கை தெளிவானது. முஸ்லீம்களால் கைவசப்படுத்தப்பட்ட கமிஷன் ஹிந்துக்களுடைய நிலைமைக்கு நாசம் விளைவிப்பதான அறிக்கையை சமர்ப்பித்துவிடுமோ என்ற பயத்தை ஏற்படுத்திப் பெருவாரியான இந்து ஜனத்தொகையை நடுக்குறச் செய்வதே நமது கொள்கையாகும். இதன்மூலம் முஸ்லீம்களின் திடமான ஆதரவு கிடைக்கும். ஜின்னாவையும் அந்தரத்தில் பறக்கவிடலாம்.'[5]

கல்கத்தாவில் 1927 டிசம்பரில் சட்டபூர்வமான லீகுக்கு வழிகாட்டும் படியாகத் திரு. ஜின்னா 'அந்தரத்தில்' விடப்பட்ட அதே சமயத்தில் லாகூரில் ஷாபி லீக் என்ற மற்றொரு லீக் கூட்டத்தை சர் மகமத் ஷாபி அமைத்ததில் வியப்பொன்றுமில்லை.

சைமன் கமிஷனை ஏற்படுத்தி இந்தியர்களை இழிவுபடுத்தப்பட்டது. மேலும் பர்க்கன்ஹெட் பிரபு எல்லோராலும் ஏற்கத்தக்க அரசியலமைப்பை இந்தியர்களால் ஆக்கமுடியுமா என்று அறைகூவினர். இவை காரணமாகக் காங்கிரஸும் அகில இந்திய முஸ்லீம் லீகும் இதர ஸ்தாபனங்களும் 1928—ன்

---

3. *Birkenhead*, op. cit., pp. 245-6 quoted by Atulanand Chakravarthi in his *Call it Politics*, p. 57.

4. *ibid.*, p. 254, quoted Do.

5. *ibid.*, p. 255, quoted by Krishnan, op cit., p. 308.

ஆரம்பத்தில் இந்திய அரசியல் அமைப்பை வகுக்க ஒன்றுகூடின. மேற் குறிப்பிட்டபடி கூடிய சர்வகட்சி மகாநாடு அரசியலை வகுக்க ஆரம்பித்தது. முக்கியமான பகுதியை முடித்துவிட்டு, பண்டித மோதிலால் நேருவைத் தலைவராகக்கொண்ட கமிட்டியிடம் காரியத்தை ஒப்படைத்தது. அக்கமிட்டி ஓர் அறிக்கையை வெளிக்கொணர்ந்தது. அது நேரு கமிட்டி அறிக்கை என அழைக்கப்படலாயிற்று. லக்ஷ்மணபுரியில் கூடிய சர்வகட்சி மகாநாடு அதை ஆராய்ந்து சிறிது திருத்தங்களுடன் ஏற்றுக்கொண்டு 1928 டிசம்பர் கடைசி வாரத்தில் கல்கத்தாவில் கூடிய சர்வகட்சி கன்வென்ஷனில் சமர்ப்பித்தது. இதற்குள்ளாகக் கட்சிகளிடையே மறைமுகச் சக்திகள் வேலை செய்ய ஆரம்பித்தன. அகில இந்திய முஸ்லீம் லீக் பிரதிநிதிகளோடு மனவேற்றுமைகள் கிளம்பிவிட்டன. அவ்வேறுபாடுகள் மூன்று விஷயங்களைக் கிளப்பின. 1. மத்திய சட்டசபையில் முஸ்லீம் பிரதிநிதித்துவம் மூன்றிலொரு பங்குக்குக் குறையக்கூடாது. 2. நேரு அறிக்கையின்படி வயது வந்தோர் வாக்குரிமை வழங்கப்படாவிட்டால் பஞ்சாபிலும் வங்காளத்திலும் ஜனத்தொகை விகிதப்படி ஸ்தானங்கள் கொடுக்கப்பட வேண்டும்; அதிகமாகக்கூடாது. 10 வருஷத்தில் இதைத் திரும்பப் பரிசீலனை செய்யவேண்டும். 3. மிச்ச அதிகாரங்கள் மாகாணங்களிடமே இருக்கவேண்டும். மத்திய அரசாங்கத்தில் இருக்கக் கூடாது. கன்வென்ஷனில் திரு. ஜின்னு இவைகளை ஒரு தீர்மானமாகக் கொண்டுவந்தார். இதை ஆராய்வதற்கென்று ஏற்படுத்தப்பட்ட கமிட்டி இரவெல்லாம் விழித்துச் சர்ச்சை செய்தது. சமரசம் ஏற்படவில்லை. இதைக் கன்வென்ஷன் நிராகரித்தது. ஆகையால் கன்வென்ஷனிலிருந்து லீக் விலகிக் கொண்டது. அதே சமயத்தில் கல்கத்தாவில் நடைபெற்ற அதன் கூட்டமும் நிலைமையை ஆராய்வதற்காகப் பின்னால் ஒத்திவைக்கப்பட்டது.

இதற்கு முன் வருஷத்தில் லாகூரில் கூடிய லீகின் மற்றொரு கட்சி சும்மா இருந்துகொண் டிருக்கவில்லை. சென்னையில் காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானத்தை அது நிராகரித்தது. லாகூர் கூட்டத்தில் முடிவுசெய்த கொள்கையின்படி இதர கட்சிகளோடு சேர்ந்து ஓர் அரசியலை வகுப்பதென்றும் அதைச் சட்டபூர்வமான கமிஷனுக்குச் சமர்ப்பிப்பதென்றும் தீர்மானித்தது. முஸ்லீம்களிடையே உள்ள பல்வேறு கட்சிகளையும் ஒன்றுபடுத்துவதற்கென்று முஸ்லீம் வட்டமேஜை மகாநாடு ஒன்று கூட்டுவதற்கு அதன் தலைவருக்கு அதிகாரமளித்தது. அவ்விதமே 1928 டிசம்பர் 31-ல் டில்லியில் ஒரு முஸ்லீம் சர்வகட்சி மகாநாடு கூட்டப்பட்டது. 1906-ல் மின்டோ பிரபுவினிடம் முஸ்லீம் தூது கோஷ்டியை நடத்திச் சென்ற ஆகாகானை இதற்குத் தலைமைதாங்க அழைக்கவும், அவரும் மனமிசைந்தார். கல்கத்தாவில் கூடிய சர்வகட்சிகள் கன்வென்ஷன் சில முஸல்மான்களுக்கு மனக்கசப்பை ஊட்டியிருந்தது. அவர்களில் முக்கியமானவர்களான மௌலானு மகமத்அலி, மௌல்வி ஷாபிதௌவ்தி இவ்விருவரும் இம்மாநாட்டுக்கு வந்திருந்தார்கள். இந்த முஸ்லீம் சர்வகட்சி மாநாட்டுக்குக் கல்கத்தாவில்கூடிய அகில இந்திய முஸ்லீம் லீக் வர மறுத்தது. இந்த மாநாடு ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. அதன் சாராம்சமாவது: (அ) இந்திய நிலைமைகளுக்கேற்ற அரசியல் அமைப்பு சமஷ்டி முறை ஒன்றே. அதன் பகுதியான ராஜ்யங்களில் அரசியல் அமைப்பில் ஒதுக்கப்பட்ட பொதுநல விஷயங்களைத் தவிர சுயாட்சியும் மிச்ச அதிகாரங்களும் இருக்கவேண்டும். (ஆ) ஒரு வகுப்பைச் சேர்ந்தவர்களில் முக்கால் பங்கினரின் எதிர்ப்பு இருந்தால் வகுப்பு சம்பந்தமான ஒரு சட்டமோ, தீர்மானமோ, திருத்தமோ, மத்திய

அல்லது மாகாண சட்டசபைகளில் எடுத்துக்கொள்ளவும் அல்லது விவாதிக்கவும் அல்லது நிறைவேற்றவும் கூடாது. (இ) சட்டசபைகளிலும் மற்ற ஸ்தல ஸ்தாபனங்களிலும் முஸல்மான்கள் தங்களுடைய தனித்தொகுதிகளின் மூலமாகவே தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். அவர்களது சம்மதமின்றித் தனித்தொகுதிகளை எடுத்துவிடக்கூடாது ; மத்திய, மாகாண மந்திரி சபைகளில் உரிய பங்குகள் அளிக்கப்பட வேண்டும். அவர்கள் பெரும்பான்மையினராக இருக்கக்கூடிய மாகாண சட்டசபைகளில் அவர்களுடைய பெரும்பான்மையைக் குறைக்கக்கூடாது. அவர்கள் சிறுபான்மையினராக இருக்கும் மாகாண சட்டசபைகளில் தற்போது அவர்களுக்கு இருக்கும் பிரதிநிதித்துவத்தை எவ்விதமும் குறைக்கலாகாது. மத்திய சட்டசபையில் அவர்களுடைய பிரதிநிதித்வம் $33\frac{1}{3}$ சத வீதம் இருக்கவேண்டும். (ஈ) சிந்து தனி மாகாணமாக்கப்படவேண்டும். (உ) இதர மாகாணங்களைப்போல வடமேற்கு எல்லைப்புற மாகாணமும் பலுசிஸ்தானமும் அரசியல் சீர்திருத்தங்களைப் பெறவேண்டும். முஸ்லிம்களுடைய கலாசாரத்தைக் காப்பாற்றவும், முஸ்லிம் கல்வி, மொழி, மதம், தனிநபர்ச் சட்டம், தர்ம ஸ்தாபனங்கள் ஆகியவைகளை வளர்க்கவும் சர்க்கார் மானியங்களில் உரிய பங்கைப் பெறுவதற்கும் போதுமான பாதுகாப்புகள் இருக்கவேண்டும். சர்க்கார் உத்தியோகங்களில் சரியான பிரதிநிதித்வம் அளிக்கப்பட வேண்டும்.

இந்தத் தீர்மானத்தின் கொள்கைகளுக்குப் பொருந்திவராத எந்த அரசியல் அமைப்பையும் அதை யார் கொண்டுவந்தாலும், அல்லது வகுத்தாலும் சரி, அது இந்திய முஸல்மான்களால் ஏற்றுக்கொள்ளப் படமாட்டாது என்று அந்தத் தீர்மானம் அழுத்தமாகக் கூறியது.

முஸ்லிம் லீகின் இரண்டு பிரிவினருக்கும் முஸ்லிம் சர்வகட்சி மகாநாட்டுக்கும் சமரஸத்தை ஏற்படுத்தத் திரு. ஜின்னு முயன்ருர். முக்கிய தலைவர்களைக் கலந்து ஒரு தீர்மான நகல் தயாரித்தார். அதை வைத்துச் சமரசம் ஏற்படுத்தலாம் என்று நம்பினுர். இந்தத் தீர்மான நகலில்தான் முஸ்லிம்களுடைய உரிமைகளையும், நலன்களையும் பாதுகாப்பதற்கு அவசியமான தமது பதினுன்கு அம்சங்களை வெளியிட்டார். அவைகளின் சுருக்கம் :

1. வருங்கால அரசியல் உருவம் சமஷ்டியாக இருக்கவேண்டும். மிச்ச அதிகாரம் மாகாணங்களில் இருக்கவேண்டும்.

2. எல்லா மாகாணங்களுக்கும் ஒரே விதமான பொறுப்பாட்சி.

3. ஒவ்வொரு மாகாணத்திலும் உள்ள சிறுபான்மையினருக்குப் போதுமானதும் உருப்படியானதுமான பிரதிநிதித்வம் அமையக்கூடிய முறையில் சட்டசபைகளும் ஸ்தலஸ்தாபனங்களும் அமைக்கப்பட வேண்டும். இதனுல் பெரும்பான்மையினர் சிறுபான்மை ஆகவோ, சமநிலைக்குக் வரவோ கூடாது.

4. மத்திய சட்டசபையில் முஸ்லீம் பிரதிநிதித்வம் மூன்றிலொரு பங்குக்குக் குறையக்கூடாது.

5. வகுப்புகள் தனித் தொகுதிகள் மூலமாகப் பிரதிநிதித்வம் பெற வேண்டும். எப்பொழுது வேண்டுமானுலும் அவை கூட்டுத் தொகுதியில் சேர்வதற்கு வசதி யிருக்கவேண்டும்.

6. பஞ்சாப், வங்காளம், வடமேற்கு எல்லைப்புற மாகாணங்களினுடைய முஸ்லீம் பெரும்பான்மையைப் பாதிக்கக்கூடிய அளவில் பிரதேசத்தை மாற்றியமைக்கக் கூடாது.

7. மத சுதந்திரம், மத ஆசார உரிமைகள், மதத்தைப் பரப்புதல், சங்கங்களை நிறுவுதல், கல்வி இவைகளில் எல்லா வகுப்பினருக்கும் முழுச் சுதந்திரம் அளிக்கப்படவேண்டும்

8. எந்தச் சட்டசபை அல்லது பிரதிநிதித்துவ சபையிலாவது ஒரு வகுப்பைச் சேர்ந்த அங்கத்தினர்களில் முக்கால் பங்கினர் தங்களுக்குப் பாதகமென்று எதிர்க்கக்கூடிய எந்தச் சட்டமும் தீர்மானமும் அல்லது அதன் பகுதியும் நிறைவேற்றப்படக் கூடாது.

9. பம்பாய் மாகாணத்திலிருந்து சிந்து பிரிக்கப்படவேண்டும்.

10. இதர மாகாணங்களில்போல எல்லை மாகாணத்திலும் பலுசிஸ்தானத்திலும் சீர்திருத்தங்கள் வழங்கப்பட வேண்டும்.

11. திறமையைப் பொறுத்து முஸல்மான்களுக்கு எல்லா உத்தியோகங்களிலும் போதுமான பங்கு அளிக்க வேண்டும்.

12. முஸ்லிம் கலாசாரம், கல்வி, மொழி, சமயம், தனி மனிதச் சட்டங்கள், அறநிலையங்கள் ஆகியவற்றைப் போற்றி வளர்ப்பதற்கும் அரசாங்க மானியங்களைப் பெறுவதற்கும் போதுமான பாதுகாப்புகள் அளிக்கப்பட வேண்டும்.

13. மத்திய, மாகாண மந்திரிசபைகளில் குறைந்தது மூன்றிலொரு பங்கினர் முஸ்லிம்களாக இருக்கவேண்டும்.

14. இந்திய சமஷ்டியில் சேர்ந்துள்ள மாகாணங்கள் ஒப்புக்கொண்டாலொழிய மத்திய சட்டசபை அரசாங்க அமைப்பை மாற்றக்கூடாது.

திரு. ஜின்னுவைத் தலைவராகக் கொண்ட லீகில் தேசிய முஸ்லிம்களே செல்வாக்குடையவர்கள். ஷாபி லீக் தனது லாகூர் தீர்மானத்தையே விடாப்பிடியாகக் கொண்டிருந்தது. அது முஸ்லிம் சர்வ கட்சி மகாநாட்டின் ஒரு பாகமாகி விட்டது. தேசியக் கூட்டத்திற்கு வெளியிலுள்ள முஸ்லிம்கள் ஜின்னுவின் பதிநான்கு அம்சங்களைத் தங்கள் கோரிக்கைகளாகக் கொள்ளலானுர்கள். இந்தப் பதினுன்கு அம்சங்களுக்கும் ஒரு வகையில் முக்கியத்துவம் உண்டு. திரு. மாக்டனுல்டு அளித்த வகுப்புத் தீர்ப்பில் இவையத்தனையும் அப்படியே எடுத்துக்கொள்ளப்பட்டன. தேசிய முஸ்லிம்கள் நேரு அறிக்கையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ருர்கள். அந்த விஷயத்தில்தான்தேசிய முஸ்லிம்களுக்கும் முஸ்லிம் சர்வகட்சி மாநாட்டுக்கும் வேற்றுமை இருந்தது.

1928 டிசம்பரில் கல்கத்தா காங்கிரஸ் கூடியது. பிரிட்டிஷ் அரசாங்கம் நேரு அறிக்கையை ஏற்றுக்கொண்டு அதில் கூறியபடி ஓர் ஆண்டிற்குள், 1929 டிசம்பர் 31-க்குள் டொமினியன் அந்தஸ்துக் கொடுக்காவிட்டால் அவ்வறிக்கையை விட்டுவிட்டுச் சுதந்திரத்தைக் கோருவதென்று காங்கிரஸ் தீர்மானம் செய்தது. 1929–ல் நாட்டில் மகத்தான விழிப்பு ஏற்பட்டது. ராஜப் பிரதிநிதி இர்வின் பிரபு நிலைமைபற்றிக் கலந்தாலோசிக்க இங்கிலாந்துக்குச் சென்று மீண்டார். 1929 அக்டோபர் 31-ல் ஒரு பிரகடனம் — சைமன் கமிஷன் பிரகடனம் — செய்தார். சைமன் கமிஷன் தனது அறிக்கையை அளித்தபின், பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள வெவ்வேறு கட்சிகளின் பிரதிநிதிகளையும் இந்திய சமஸ்தானங்களையும் வரவழைத்து இந்தியப்பிரசினையை ஆராய பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு வட்டமேஜை மகாநாட்டை நடத்தும் என அறிவித்தார். அச்செய்தி மேலும் கூறியதாவது: 'இந்திய அரசியல் முன்னேற்றத்தின் லட்சியம் டொமினியன் அந்தஸ்து என்ற பொருள் 1917-ம் வருஷத்திய பிரகடனத்தில் அடங்கியிருக்கிறதென்று சொல்லுவதற்கு எனக்கு அதிகாரமளிக்கப்பட் டிருக்கிறது.'

பிரகடனத்தின் இந்தப் பகுதி ஒரு சந்தேகத்தைக் கிளப்பியது. அந்த மாநாட்டின் வேலை இந்தியாவிற்கு டொமினியன் அரசியல் அமைப்பை வகுப்பதா என்பது தெரியவில்லை. இதை ஆராய டில்லியில் கூடிய தலைவர்கள் மகாநாடு விளக்கம் கோரியது. லாகூரில் இந்திய தேசிய காங்கிரஸ் கூடுவதற்குச் சற்று முன்னால் டில்லியில் மகாத்மா காந்தி, பண்டித மோதிலால் நேரு, தலைவர் படேல், சர் தேஜ் பகதூர் சாப்ரூ, திரு. ஜின்னா ஆகியவர்கள் ராஜப் பிரதிநிதியை டிசம்பர் 23-ல் சந்தித்தார்கள். மாநாட்டின் வேலை டொமினியன் திட்டத்தை அமைப்பதுதான் என்று உறுதி கூற ராஜப் பிரதிநிதி தயாராக இல்லை. கல்கத்தா காங்கிரஸில் தீர்மானித்தபடி காங்கிரஸ் விதிகளில் சுயராஜ்யம் என்ற சொல் பூரண விடுதலையைக் குறிக்கும் என்றும், நேரு கமிட்டி அறிக்கைத் திட்டம் முழுவதும் காலாவதியாய் விட்டதென்றும் காங்கிரஸ் கூறியது. சாத்வீகச் சட்டமறுப்பையும் வரிகொடா இயக்கத்தையும் தொடங்குவதற்கு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு அதிகாரமளித்தது. அடுத்த மார்ச்சில் சாத்வீகச் சட்டமறுப்பு இயக்கம் தொடங்கி ஓராண்டு நடைபெற்றது. 1930-ன் மத்தியில் சைமன் கமிஷன் அறிக்கை வெளிவந்தது. அடுத்த இலையுதிர்காலத்தில் லண்டனில்வட்டமேஜை மகாநாடு கூட்டப்பட்டது. காங்கிரஸ் கலந்துகொள்ளவில்லை. பிரிட்டிஷ் இந்தியப் பிரதிநிதிகளும், இந்திய சமஸ்தானப் பிரதிநிதிகளும் அதன் பிரதிநிதிகளா யிருந்தனர். பிரிட்டிஷ் மாகாணங்களும், விரும்பிய சமஸ்தானங்களோ, அல்லது சமஸ்தானக் கூட்டங்களோ சேர்ந்த இந்திய சமஷ்டி அமைப்பை அது ஆதரித்தது. சிந்துவைத் தனி மாகாணமாக்கவும் எல்லைப்புற மாகாணத்தில் சீர்திருத்தங்களைப் புகுத்தவும் தீர்மானித்தது. தனித்தொகுதிகளை அப்படியே வைத்துக் கொள்வதென்றும் அதை அனுபவிக்கும் கட்சிகளின் விருப்பமில்லாமல் அவைகளை நீக்கக்கூடாதென்றும் அபிப்பிராயங்கள் தெரிவிக்கப்பட்டன. சமஷ்டி அரசாங்கமும் அதன் பகுதிகளும் வகிக்கவேண்டிய அதிகாரங்கள் தனித்தனியாகப் பரிசீலனை செய்யப்பட்டுப் பிரிக்கப்பட்டன. மிச்ச அதிகாரங்கள் யார் கையிலிருப்பது என்பது பற்றியும், சமஷ்டி சட்டசபையில் முஸ்லிம் பிரதிநிதிகளின் எண்ணிக்கை பற்றியும் ஒரு முடிவுக்கு வரவில்லை.

முதல் வட்டமேஜை மகாநாட்டிற்குப் பிறகு ஒப்பந்தம் ஏற்பட்டது. இந்திய அரசாங்கத்தின் பிரதிநிதியான இர்வின் பிரபுவிற்கும் காங்கிரஸின் சார்பில் மகாத்மா காந்திக்கும் ஒப்பந்தம் ஏற்பட்டதின் விளைவாக காங்கிரஸ் 1931 இலையுதிர் காலத்தில் கூடவிருந்த இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டில் கலந்துகொள்ள வழியேற்பட்டது. இந்தச் சமயத்தில் காசி, கான்பூர், இன்னும் இதர இடங்களில் இந்து முஸ்லிம் கலவரங்கள் ஏற்படலாயின. தேசிய முஸ்லிம்கள் தங்களுக்கு ஒரு ஸ்தாபனம் அமைத்துக் கொண்டார்கள். முஸ்லீம் சர்வகட்சி மகாநாடு, அதனுடைய வேலைத் திட்டத்தைப் பொறுத்த மட்டில் அகில இந்திய முஸ்லிம் லீகையும் கிலாபத் மகாநாட்டையும் தன்பாற் கொண்டதென்றே சொல்லலாம். தேசிய முஸ்லிம் மகாநாடு கூட்டுத் தொகுதியை ஆதரித்தது. முஸ்லிம் சர்வகட்சி மாநாடோ தனித்தொகுதியையே வற்புறுத்தி வந்தது. அதுவே அவைகளுக்குள்ள வேறுபாடு. 1931 ஏப்ரலில் லக்ஷ்மணபுரி முஸ்லிம் தேசிய மாநாடு சர். அலி இமாம் தலைமையில் கூடியது. தனித்தொகுதியை வலியுறுத்திவந்த அரசியல் கொள்கையில் ஒரு காலத்தில் தான் சேர்ந்திருப்பினும் உண்மையில் மின்டோ பிரபுவினிடம் நாடிச்சென்ற தூது கோஷ்டியில் அங்கத்தினராய் இருந்தும் கூட அக்கறையோடு ஊன்றி அறிந்த

பின்னர், தனித்தொகுதி இந்திய தேசீயத்திற்கு விரோதமாக இருப்பதுமன்றி முஸ்லிம்களுக்குத் தீங்கிழைப்பதுமாகும் என்ற முடிவுக்குத் தாம் வந்திருப்ப தாகத் தலைவர் கூறினர். அம்மாநாடு கலாசாரம், மொழி, தனி மனிதச் சட்டங் கள் ஆகியவற்றைக் காப்பாற்றுவதாக உத்தரவாதம் அளிக்கக்கூடிய ஜீவாதார உரிமைச்சாசனம் ஆகியவை அரசியலமைப்பில் இருக்கவேண்டுமென்று கோரி யது. மேலும் அதன் கோரிக்கைகளாவன : ராஜ்யப்பகுதிகளில் மிச்ச அதிகாரங் களைக்கொண்டதான சமஷ்டி அமைப்பு இருக்கவேண்டும். அரசாங்க உத்தியோ கக் கமிஷன் மூலமாக உத்யோகங்களுக்கு நபர்களைத் தயாரிக்கவேண்டும். குறிப் பிட்ட குறைந்தபட்சத் திறமையை எதிர்பார்ப்பதாகவும் எந்த வகுப்புக்கும் அதற்குரிய பங்கைக் கொடுப்பதாகவும் இருக்கவேண்டும். சிந்து தனி மாகாணம் ஆக்கப்படவேண்டும். வடமேற்கு எல்லையும், பலுசிஸ்தானமும் இதர மாகாணங்களில் உள்ளதைப் போன்ற ஆட்சியைப் பெறவேண்டும். சமஷ்டி, மாகாண சட்டசபைகளுக்குப் பிரதிநிதித்வ முறையையும் அளவையும் கூறுமிடத்து பொதுஜன வாக்குரிமையும், கூட்டுத் தொகுதியும் கோரியது. 30 சத விகிதத்திற்குக் குறைந்த சிறுபான்மைக்கு ஜனத்தொகை விகிதப்படி ஸ்தானங்கள் ஒதுக்கிவைக்கப்பட வேண்டும். மற்ற ஸ்தானங்களுக்கும் போட்டியிட உரிமையுண்டு. முஸ்லிம் சர்வகட்சி மாநாட்டுக்கும் முஸ்லிம் தேசிய மாநாட்டுக்கும் சமரசம் ஏற்படுத்த ஒரு முயற்சி எடுக்கப்பட்டுத் தோல்வியுற்றது. 1931 ஜூன் 22-ல் சமரசத்திற்குரிய வெவ்வேறு பிரேரணை களை ஆராய ஒரு கூட்டு மாநாடு சிம்லாவில் கூடுவதாக இருந்தது. அதுபற்றி டாக்டர் எம். ஏ. அன்சாரி பொது மக்களுக்கு ஓர் அறிக்கை வெளியிட்டார். 'சிம்லாவுக்கு வந்ததும் சமரசத்திற்கு அபசகுனமான சூழ்நிலை யிருப் பதைக் கண்டோம். எங்களுடைய பயங்களும் உண்மையாகவே மாறின. சிம்லாவின் துர்ப்பாக்கியச் சுற்றுப்புறங்களும் சூழ்நிலைகளும் யாவை என்று சொல்லத் தேவை இல்லை. அவை வெகு பிரசித்தமானவை. ஒற்றுமைக்கு உழைக்கும் சக்திகள் அவைமுன் வலுவிழந்தன. இரு கட்சிகளும் ஒன்றுபடக்கூடிய அடிப்படையைக் கண்டுபிடிப்பதற்குச் செய்த முயற்சிகள் சிதறடிக்கப்பட்டன'[6].

இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டிற்குக் காங்கிரஸின் தனிப் பெரும் பிரதிநிதியாக மகாத்மா காந்தி அனுப்பப்பட்டார். பிரிட்டிஷ் இந்தி யாவிலிருந்து அனேக இந்தியர்களை இந்திய அரசாங்கம் அம்மாநாட்டிற்கு நியமித்திருந்தது. அவர்களில் அனேக முஸ்லிம்களும் இருந்தனர். எனினும் டாக்டர் அன்ஸாரியை அழைக்கவேண்டுமென்று மகாத்மா காந்தி யோசனை கூறியதை பிரிட்டிஷ் அரசாங்கம் நிராகரித்தது. சிறுபான்மையர் பிரசினை யைப் பரிசீலனை செய்யச் சிறுபான்மையர் கமிட்டி ஒன்று வட்டமேஜை மாநாட் டில் நியமிக்கப்பட்டது. அக்கமிட்டி ஒருமித்த முடிவுக்கு வரமுடியவில்லை. இவ்விஷயத்திலும் இன்னும் பல்வேறு விஷயங்களிலும் எவ்வித முடிவுக்கும் வராமலே இம்மகாநாடு முடிந்தது. இத்தோல்வி கண்டு எந்த இந்தியரும் ஆச்சரியப்படவில்லை. ஒருமுகமுடிவுக்கு வரவிடக் கூடாதென்று மறைமுகச் சக்திகள் பல கச்சை கட்டித் திரிந்தன. திரு. எட்வர்டு தாம்ஸன் எழுதுகிறார்: 'வட்டமேஜை மகாநாட்டின்போது ஜனநாயகத்திற்கு விரோதமான சில பிரிட் டிஷ் அரசியல் வட்டாரங்களுக்கும் பிடிவாத குணம் நிறைந்த சில முஸ்லிம் களுக்குமிடையே வெளிப்படையான ஒப்பந்தமும், நேச உறவும் இருந்ததென

6. Annual Register for 1931, p. 305.

லாம். அந்நேச உறவு, முன்னேற்றத்திற்கு உண்மையான தடை என இந்தியாவில் அடிக்கடி அழுத்தமாகச் சொல்லப்பட்டு வந்திருக்கிறது. இது மிகவும் உண்மையென்பதை நான் நிரூபிக்க முடியுமென்று நம்புகிறேன். முன்னாளில் நாம் வெளிப்படையாக "பிரித்தாளும்" முறையைக் கையாண்டோம் என்பதில் சந்தேகமே இல்லை. வாரன் ஹேஸ்டிங்ஸ் காலத்திலிருந்து நம்மவர் ஹிந்து முஸ்லிம் பிணக்குகளால் குதூகலப்படுவதற்குத் தயங்கினார்களில்லை. எல்பிங்ஸ்டன், மால்காம், மெட்காப் போன்றவர்கள் கூட இந்து முஸ்லிம் பிணக்குகள் பிரிட்டிஷாருக்கு நன்மை யளிப்பன என்று ஒப்புக்கொண்டார்கள்.'[7]

இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டை முடிக்கும்பொழுது பிரதமர் திரு. ராம்சே மாக்டனால்டு கூறியவை: பிரிட்டிஷ் அரசாங்கம் பொறுப்புள்ள சமஷ்டி அரசியல் தத்துவத்தை ஏற்றுக்கொண்டது. இடைக்காலத்தில் சில அதிகாரங்கள் மாற்றப்படா. பாதுகாப்புகளும் இருக்கும். கவர்னரது மாகாணங்கள் வருங்காலத்தில் நிறைய சுதந்திரம் பெற்றிருக்கும். வெளியிடத்துக் குறுக்கீடும், மேலதிகாரமும் இரா. வடமேற்கு எல்லை மாகாணம் மற்ற மாகாணங்களைப்போல அமைக்கப்படும். வரவு செலவைச் சரிப்படுத்த முடியுமானால் சிந்துவும் தனி மாகாணமாக்கப்படும். வகுப்புப் பிரசினையைப் பற்றி அவர் கூறும்பொழுது முன்னேற்றப் பாதையில் வகுப்புப் பிரசினை பெரும் தடைக்கல்லாக இருந்ததென்று குறிப்பிட்டார். 'ஆனால் இந்தக் குறைபாடும் முன்னேற்றத்தை வழிமறிப்பதற்கு இடங்கொடுக்கப் போவதில்லை என்ற உறுதியை பிரிட்டிஷ் அரசாங்கம் கொண்டிருக்கிறது. அதாவது உங்களுடைய பிரசினையான பிரதிநிதித்வத்தை உங்களுக்காக மன்னரது அரசாங்கம் தீர்த்துவைக்கும். ஜனநாயக தத்துவம் பெரும்பான்மையின் ஆட்சி மூலமாகவே வெளிப்படும். ஜனநாயக தத்துவத்தைச் சிறுபான்மையர் மீது வரம்புமீறிக் கொடுமையாகக் கையாளுவதைத் தடுப்பதற்கு வேண்டிய தங்கு தடைகளை மன்னர் அரசாங்கம் கூடிய அளவு சாமர்த்தியமாகவும் நேர்மையாகவும் தீர்மானிக்கும்.'[8]

இப்பிரகடனத்திற்குப் பிறகு வகுப்புத்தீர்ப்புத் தோன்றுவது இயற்கை. 1932-ம் ஆண்டில் வகுப்புத் தீர்ப்பு அளிக்கப்பட்டது. பிரிட்டிஷ் இந்திய வகுப்புகளின் பிரதிநிதித்வ ஏற்பாட்டை மாகாண சட்டசபைகளுக்கு மாத்திரம் நிர்ணயித்துவிட்டு, மத்திய அரசாங்கச் சட்டசபையின் பிரதிநிதித்வ விஷயங்களைத் தற்சமயத்திற்குத் தள்ளிவைத்துவிட்டது. ஏனெனில், இந்திய சமஸ்தானங்களின் பிரதிநிதித்வ விஷயம் இன்னும் விவாதிக்கப்படவில்லை. வகுப்புகளின் பிரதிநிதித்வத்தைப் பற்றிய அளவு முறைகள் ஆகிய அடிப்படைப் பிரசினைகளைப்பற்றி எப்பொழுது ஒரு பிரகடனம் செய்யப்பட்டுவிட்டதோ அதற்கப்புறம் அப்பிரசினைகளில் சம்பந்தப்பட்ட வகுப்புகள் ஒரு முடிவுக்கு வரக்கூடும் என்ற நம்பிக்கை தெரிவிக்கப்பட்டது. இந்திய அரசாங்க மசோதா சட்டமாக்கப்படுவதற்கு முன்பு சம்பந்தப்பட்ட வகுப்புகள் தாங்களாகவே வேறொரு சமரசமான முடிவுக்கு வந்துவிட்டன என்று பிரிட்டிஷ் அரசாங்கம் ஐயமற அறியுமானால், அவர்கள் மனத்திற்கும் பிடித்திருந்தால், தாங்களளித்த வகுப்புத் தீர்ப்புக்குப் பதிலாக இந்திய வகுப்பு சமரசத் திட்டத்தைப் பார்லிமெண்டுக்குச் சிபாரிசு செய்யத் தயாராக இருப்பதாகவும்

7. Edward Thompson: *Enlist India for Freedom*, p. 50.
8. Annual Register, Vol, II, 1931, p. 446.

தெரிவித்தார்கள். வகுப்புத் தீர்ப்பில் மகமதியர்கள், ஐரோப்பியர்கள், சீக்கியர்கள் ஆகியோர் தனித்தொகுதி மூலமாகத் தங்களது பிரதிநிதிகளை அனுப்பும் உரிமை பெற்றார்கள். பம்பாயில் சில தேர்ந்தெடுக்கப்பட்ட பொதுத் தொகுதிகளில் மராட்டியருக்கு ஸ்தானங்கள் ஒதுக்கி வைக்கப்பட்டன. தாழ்த்தப்பட்ட வகுப்பினரை அவ்வினத்தார் மாத்திரம் தேர்ந்தெடுத்து அனுப்பும்படியாகவும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பொதுத் தொகுதிகளிலும் அவர்கள் வாக்களிக்கலாம். இந்தியக் கிறிஸ்தவர்களுக்கும் ஸ்தானங்கள் அளிக்கப்பட்டன. இந்தியக் கிறிஸ்தவரும், ஆங்கிலோ இந்தியரும் தத்தம் இனத்தாரிடமே வாக்குகள் பெறலாம். மாதருக்குத் தனியாக ஸ்தானங்கள் அளிக்கப்பட்டன. அவைகளும் பல வகுப்புகளுக்குமாகப் பிரிக்கப்பட்டிருந்தன. தொழிலாளருக்கு பிரத்யேக ஸ்தானம் கொடுக்கப்பட்டது. வர்த்தகசபை மூலமாகவும் பிற சங்கங்களின் மூலமாகவும் தேர்ந்தெடுக்கும்படியாக வர்த்தகம், ஆலை, சுரங்கம், தோட்டம் இவைகளுக்கும் பிரத்யேக ஸ்தானங்கள் அளிக்கப்பட்டன. நிலச்சுவான்தார்களுக்கும் தனித் தொகுதி ஏற்படுத்தப்பட்டு ஸ்தானங்களும் ஒதுக்கப்பட்டன. ஜனங்களை வகுப்புக்களாகப் பிரித்து வைக்கவேண்டும் என்று மின்டோ மார்லி சீர்திருத்தங்களில் தொடங்கிய தத்துவம் இப்பொழுது வெகுவாக விஸ்தரிக்கப் பட்டுள்ளதைக் காண்கிறோம். '1919-ல் வாக்காளர்கள் பத்துப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட் டிருந்தனர். இப்பொழுதோ 17 ஏற்றத் தாழ்வுள்ள பாகங்களாகச் சின்னுபின்னப் படுத்தப்பட் டிருக்கின்றனர். மாதரும் இந்தியக் கிறிஸ்தவரும் தனித்தொகுதியை வேண்டவில்லை. வேண்டாதவர் மீதும் தனித் தொகுதிகள் திணிக்கப்பட்டன. தாழ்ந்த வகுப்பினருக்குத் தனிப் பிரதிநிதித்வம் கொடுத்ததன் மூலமாக இந்துக்களின் பலம் இன்னும் குறைக்கப்பட்டது. மத அடிப்படையிலும், தொழில் அடிப்படையிலும், உத்தியோக அடிப்படையிலும் பிரிவுகள் ஏற்படுத்தப்பட்டன. முரண்பாடுள்ள ஒவ்வொரு பிரிவும் ஏற்படுத்தப்பட்டது.'[9]

பல்வேறு வகுப்பினரிடையே ஸ்தானங்கள் அளித்திருந்த விதமும் குறிப்பிடத்தகாதது அல்ல. வகுப்புப் பிரசினை விவாதத்தில் வங்காளமும் பஞ்சாபும் மிகுந்த கஷ்டத்தை விளைவித்தன. இவ்விரு மாகாணங்களிலும் முஸல்மான்கள் பெரும்பான்மையினர். தொகை வித்தியாசம் கொஞ்சந்தான். அதாவது சுமார் 55 சத விகிதம். இவ்விரு மாகாணங்களிலும் முஸல்மான்கள் பெரும்பான்மையராக இருப்பினும் அவர்களுக்குத் தனித்தொகுதிகளும், ஒதுக்கி வைக்கப்பட்ட ஸ்தானங்களும் வேண்டுமென்று அவர்கள் சார்பாகக் கோரப்பட்டது. பிரிட்டிஷ் அரசாங்கம் ஐரோப்பியர்களுக்கு அதிக ஸ்தானங்கள் கொடுக்க விரும்பியதால் வங்காளப் பிரசினை இன்னும் சிக்கலாகிவிட்டது. பஞ்சாபிலோ மகமதியரல்லாதார் ஹிந்துக்கள் சீக்கியர்கள் என இருவகையாகப் பிரிக்கப்பட்டார்கள். யாருக்காவது தனித்தொகுதிகளும் ஸ்தானங்களும் ஒதுக்கப்படுவது உண்டானுல் ஒரு முக்கிய சிறுபான்மை வகுப்பினராகிய தங்களுக்கும் இதர மாகாணங்களில் முஸல்மான்களுக்கு அளிக்கப்பட் டிருப்பதைப் போல அதிகப்படி ஸ்தானங்கள் கொடுக்க வேண்டுமென்று சீக்கியர்கள் வற்புறுத்தினர்கள். வங்காளத்திலும் பஞ்சாபிலும் தவிர மற்ற மாகாணங்களில், மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தினல் முஸ்லிம்களுக்கு அளிக்கப்பட்ட ஸ்தானங்களையே வகுப்புத் தீர்ப்பும் சிறு சிறு மாறுதல்களோடு வைத்துக்கொண்டது. வங்காளத்தில் இந்துக்கள் மொத்த ஜனத்தொகையில்

9. Mehta & Patwardhan: *The Communal Triangle*, p. 72.

44·8 சதவிகித.முள்ளனர். மொத்தம் 250 ஸ்தானங்களில் அவர்களுக்கு 80 ஸ்தானங்கள் அதாவது 32 சத வீதம் அளிக்கப்பட்டன. முஸல்மான்கள் ஜனத்தொகையில் 54·8 சத விகிதத்தினர். அவர்களுக்கு 47·6 சத விகித ஸ்தானங்கள் அதாவது 119 அளிக்கப்பட்டன. மொத்த ஜனத்தொகையில் நூற்றில் ஒரு பங்கினரான ஐரோப்பியர்களுக்கு, மொத்த ஸ்தானங்களில் 10 சத விகிதம் அதாவது 25 ஸ்தானங்கள் அளிக்கப்பட்டன. ஐரோப்பியர்களுக்கு 2,50,000 மடங்கு அதிகப்படியான ஸ்தானங்கள் அளிப்பதற்காகப் பெரும்பான்மையராக இருந்த முஸல்மான்கள் பிரதிநிதித்துவத்தில் சிறுபான்மையாக ஆக்கப்பட்டிருப்பதும் சிறுபான்மையரான இந்துக்களுடைய விகிதாசாரத்தைக் குறைத்திருப்பதும் நன்கு தெரியவரும். இதில் சிறப்பாகக் கவனிக்கத்தகுந்த தென்னவெனில் இந்து முஸ்லிம்களாகிய இரு சாராரின் பிரதிநிதித்துவத்தையும் குறைத்தார்களென்றாலும் இந்துக்களுடைய ஸ்தானங்களில் அதிகமாகக் கை வைத்துவிட்டார்கள். மிகச் சிறுபான்மையான ஐரோப்பிய வகுப்புக்கு ஸ்தானங்கள் கொடுப்பதற்காகப் பெரும்பான்மையான முஸ்லிம்களின் பிரதிநிதித்வத்தில் இருந்து ஈடு செய்யப்பட்டதோடல்லாமல் மற்றொரு சிறுபான்மையான இந்து வகுப்பின் ஸ்தானங்களிலிருந்தும் ஈடு செய்யப்பட்டது. ஒரு சிறுபான்மை என்ற காரணத்தினால் ஹிந்து வகுப்பிற்கே அதிகப்படி ஸ்தானங்கள் கொடுக்கவேண்டியதிருக்க அப்படியும் கொடுக்கப்படவில்லை. அது மட்டுமன்றி அவ்வகுப்பும் தியாகம் செய்யும்படி ஏற்படுத்தப்பட்டது. அத்தியாகமும் பெரும்பான்மை வகுப்பு எவ்வளவு தியாகம் செய்ததோ அதைக் காட்டிலும் அதிகமாகச் செய்யும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. பஞ்சாபிலும் இதே கதைதான். அங்கே சீக்கியர்களுக்கு அதிகப்படி ஸ்தானங்கள் கொடுப்பதற்காகச் சிறுபான்மையான இந்து வகுப்பு தன்னுடைய பிரதிநிதித்வத்தை இழக்கும்படி செய்யப்பட்டது. சாதாரண விதிகளின்படி நோக்குமிடத்து இச்சிறுபான்மையான இந்து வகுப்புக்கு அதிகப்படி ஸ்தானங்கள் கொடுத்தலே நேர்மையும் நீதியும் ஆகும். தனித் தொகுதிகளின் மூலம் ஸ்தானங்கள் ஒதுக்கப்பட்டுச் சட்டசபைகளில் பெரும்பான்மைக் கட்சியாக முஸ்லிம்கள் இருந்தபோதிலும், முஸ்லிம் பிரதிநிதித்வத்தை இவ்விரு மாகாணங்களிலும் மொத்தத்தில் சிறுபான்மையாக வகுப்புத் தீர்ப்பு செய்திருப்பது கவனிக்கத்தக்கது.

இந்துக்கள் பெரும்பான்மையராக இருக்கின்ற மாகாணங்களிலும் சரி, சிறுபான்மையராக இருக்கின்ற மாகாணங்களிலும் சரி, எங்கிருப்பினும் இவர்கள் மாத்திரம் அதிகமாக இழக்கும்படி செய்யப்பட்டதால் இவர்கள் வகுப்புத்தீர்ப்பை வெகுண்டு எதிர்த்தார்கள் என்றால் அது இயல்பே. வங்காளத்தில் பெரும்பான்மைக் கட்சி எவ்வளவு விட்டுக் கொடுக்கவேண்டியது ஏற்பட்டதோ அதைப்போன்று இரண்டு மடங்கு இந்து வகுப்பு விட்டுக் கொடுக்கும்படி செய்யப்பட்டது. அரசாங்கமும் எதிர்ப்பை எதிர்பார்த்து ஓர் அறிக்கை வெளியிட்டது. அவ்வறிக்கையின் வாசகம்:

'ஒவ்வொரு கட்சியும், மற்றக் கட்சிகள் ஒப்புக்கொள்ளாத அளவிற்கு தனக்குத்தானே அதிகப்படி பிரதிநிதித்வம் வேண்டுமென்று கேட்டதால் அக்கட்சிகள் கேட்ட அளவிற்கு இவ்வகுப்புத்தீர்ப்பில் பிரதிநிதித்வம் கொடுக்கப்பட்டிராது. உண்மையாகப் பார்க்கப்போனால் எவ்வளவுக்கெவ்வளவு ஒழுங்காக இருக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு அத்தீர்ப்பு கட்சிகளுக்கு ஏமாற்றத்தையே அளிக்கும். ஆனால் இதில் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கோ எள்ளளவும் சுயநலம் கிடையாது. இந்த வகுப்புத் தீர்ப்பை அளித்ததன்மூலம் தன்னால் எவ்

வளவுதூரம் சாத்தியமாகுமோ அவ்வளவுதூரம் எல்லோருடைய நன்மையின் பொருட்டும் இப்பிரசினையைத் தீர்த்து வைத்திருக்கின்றது. இது எந்த நல்லுணர்ச்சியில் அளிக்கப்பட்டதோ அந்த நல்லுணர்ச்சி கொண்டு இந்தியர்கள் இதை ஏற்றுக்கொள்வார்கள் என்றும் இதை உண்மையோடு நிறைவேற்ற முயலுவார்கள் என்றும் நம்பப்படுகின்றது. கடைசியாக இந்தியா மந்திரி கொடுத்த வாக்குறுதியையும் குறிப்பிடவேண்டும். அதாவது இப்புதிய அரசாங்க மசோதா சட்டமாக்கப்படுவதற்கு முன்பு பல்வேறு இந்திய வகுப்பினரும் ஒன்றுகூடி இந்தியா மந்திரியின் வகுப்புத் தீர்ப்புக்கு வேறுபட்டதொரு சமரசத்தைக் கொண்டுவரின் அதையே ஏற்றுக்கொள்வார்.'

பிரிட்டிஷ் அரசாங்கம் 'எள்ளளவும் சுயநலமற்றது' என்ன அற்புதமான உண்மை! இதன் இந்த சுயநலமற்ற தன்மையே இதைத் தூண்டிய இந்துக்களை எங்கும் தண்டிக்கும்படி செய்தது. வங்காளத்தில் இந்துக்கள் சிறுபான்மையராக இருந்தபோதிலும் ஐரோப்பியருக்கு 2,50,000 மடங்கு அதிகப்படி ஸ்தானங்கள் கொடுப்பதற்காக முஸ்லிம்களின் பிரதிநிதித்வத்தை எவ்வளவு குறைத்ததோ அதைக்காட்டிலும் அதிகமான அளவிற்குக் குறைக்கும்படி செய்தது! அவர்களிடத்து உள்ள இந்தச் சுயநலமற்ற தன்மையே முஸல்மான்களுக்கு அதிகப்படி ஸ்தானங்கள் கொடுத்து, அவர்கள் பெரும்பான்மையராக இருக்கக்கூடிய மாகாணங்களிலும் தனித்தொகுதியும் ஒதுக்கிய ஸ்தானங்களும் கொடுத்துவிட்டுப் பஞ்சாபில் சீக்கியர்களுக்குமட்டும் அதிகப்படி ஸ்தானங்கள் கொடுப்பதற்கு மறுக்கச்செய்தது. வகுப்பு சமரசம் ஏற்படவிடாதபடி நிலைமைகளைச் சிருஷ்டி செய்தபின்பு வகுப்புக்கள் தாங்களாகவே ஒரு சமரசத்திற்கு வந்தால் அதையும் மனமிசைந்து ஏற்றுக்கொள்வதாக அரசாங்கம் வாக்குறுதியளித்தது.

பிரிட்டிஷ் இந்தியாவுக்கும், சமஸ்தானங்களுக்கும் உள்ள ஏற்பாட்டைக் கவனித்தாலோ 1935-ம் வருஷத்திய சட்டம் பிரிட்டிஷ் இந்தியாவிற்குப் பாதகம் ஏற்படக்கூடிய முறையில் சுதேச ராஜ்யங்களுக்கு தாராளமாக இருக்கின்றது. சமஸ்தானங்களின் ஜனத்தொகை இந்திய ஜனத்தொகையில் 23 சத விகிதம். ஆனால் சுதேச மன்னர்களுக்கோ சமஷ்டி கீழ் சபையில் 33 சதவிகித வாக்குரிமையும் மேல்சபையில் 40 சதவிகித வாக்குரிமையும் அளிக்கப்பட்டது. சமஷ்டிசட்டசபைகளுக்கும் பிரதிநிதிகளை அனுப்பும் உரிமை சமஸ்தான மக்களுக்குக் கொடுக்கப்படாமல் அரசர்களுக்கே கொடுக்கப்பட்டிருந்த தென்பதை ஞாபகம் வைத்துக்கொள்ளவேண்டும். இந்த விதமாக நியமனம் செய்யும் முறை சமஷ்டியிலும் பாதுகாக்கப்பட்டிருந்தது. கீழ்சபை 33 சதவிகிதத்திற்கு சமஸ்தானங்களின் மூலமாக நியமனம் செய்ய இடமிருந்தது. ஒரு கையால் கொடுத்ததை மறு கையால் தட்டிப் பறிக்கின்ற இதைப்போன்ற வேறொரு சாமர்த்தியமான முறையைக் கற்பனை செய்வதும் அரிது.

இவ்வகுப்புத் தீர்ப்புக் கப்புறமும் இந்தியாவில் வகுப்புச் சமரசத்திற்கொரு முயற்சி யெடுக்கப்பட்டது. அநேகமாக வெற்றி கிட்டும் சமயம் இம்முறையும் பிரிட்டிஷ் அரசாங்கம் குறுக்கிட்டு சமரசம் ஏற்படாதவாறு செய்தது. விவரமாக இதைப் பார்ப்போம். 1932 ஆகஸ்டு 16-ல் வகுப்புத் தீர்ப்புச் சொல்லப்பட்டது. மகாத்மா காந்தி உண்ணு விரதத்தினல் பூனு ஒப்பந்தத்தின்படி வகுப்புத் தீர்ப்பில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரைப் பற்றிய விஷயத்தில் திருத்தம் செய்தபிறகு பண்டித மாளவியாவும், மௌலானு

ஷவுகத் அலியும் சேர்ந்து வகுப்புத் தீர்ப்புக்குப் பதிலாக வேறொரு திட்டம் காணப் பேச்சு வார்த்தைகள் தொடங்கினார்கள். ஆரம்பப் பேச்சுக்கள் சாதகம் தெரிவித்தன. பேச்சு வார்த்தைகளுக்கு உதவும் வண்ணம் மகாத்மா காந்தியை விடுதலை செய்யவேண்டும் அல்லது அவருடன் பேச வசதி தரவேண்டுமென 1932 அக்டோபர் 6-ல் மௌலானா ஷவுகத் அலி ராஜப் பிரதிநிதியைக் கேட்டுக்கொண்டார். 1932 அக்டோபர் 7-ல் முஸ்லிம் சர்வ கட்சி மாநாட்டின் தலைவரின் பேரால் ஓர் அறிக்கை வெளியிடப்பட்டது. தனித்தொகுதி கூட்டுத்தொகுதி விஷயங்களைத் திரும்பவும் ஆராய்வதற்குச் சந்தர்ப்பம் சரியில்லை என்றும் முஸ்லிம் வகுப்பு தனக்கு அளிக்கப்பட்ட பாதுகாப்பை விட்டுவிடத் தயாராயில்லை என்றும் அவ்வறிக்கையில் கண்டிருந்தது. ஆனால் பெரும்பான்மைச் சமூகம் முக்கியமான எல்லாப் பிரசினைகளைப்பற்றிய உருப்படியான பிரேரணைகளைக்கொண்டு வருமாயின் அதைக் கவனிப்பதற்கு ஆயத்தமாக இருப்பதாகவும் அதில் கூறப்பட்டிருந்தது. இந்த அறிக்கை ஸிம்லாவில் இருந்து வெளிவந்தது. அக்டோபர் 9உ ராஜப் பிரதிநிதியின் அந்தரங்கக் காரியதரிசி யிடமிருந்து மௌலானா ஷவுகத் அலிக்குத் தந்தி வந்தது: "நீங்கள் மேற்கொண்ட இந்தக் காரியத்தில் முதலில் எடுத்துக் கொள்ள வேண்டிய நடவடிக்கை முஸ்லிம் பொதுஜன ஆதரவு உங்களுக்கு இருக்கிறதா என்பதை உறுதி செய்து கொள்வதாகும். இது சம்பந்தமாக முஸ்லிம் சர்வகட்சி மாநாட்டின் தலைவரும் மற்றவர்களும் பத்திரிகைகளுக்கு அக்டோபர் 7-ல் விடுத்துள்ள அறிக்கையைக் கவனிக்கவும்." [10] மௌலானா ஷவுகத் அலி அக்டோபர் 6-ம் தேதி அனுப்பிய தந்திக்கு வைஸ்ராயின் அந்தரங்கக் காரியதரிசி அன்றே பதிலனுப்பாமல் முஸ்லீம் சர்வகட்சி மாநாட்டின் அறிக்கை 7-ம் தேதி வெளியாகும்வரை காத்திருந்துவிட்டு 9-ம் தேதி பதில் அனுப்பியதையும் அவ்வறிக்கையைத் தமது பதிலில் குறிப்பிட்டதையும் வாசகர்களுக்குச் சுட்டிக் காட்டவேண்டும் என்பது அவசியமில்லை. மறுபடியும் அக்டோபர் 26-ம் தேதி மௌலானா ஷவுகத் அலி தமது வேண்டுகோளை விடுத்து, எல்லோருக்கும் நன்மை செய்யக்கூடிய சமாதானத்திற்குத் தமது செல்வாக்கை உபயோகப்படுத்துமாறு ராஜப்பிரதி நிதியைக் கேட்டுக்கொண்டபொழுது 27-ம் தேதி உடனே பதில் வந்துவிட்டது. காந்தி சாத்வீகச் சட்ட மறுப்பைக் கைவிடாதவரை வேண்டுகோளுக் கிணங்க முடியாது என்பது அந்த பதில். காந்தியைப் பேட்டிகாண அனுமதி தரவேண்டு மென்று மறுபடி கேட்டபொழுதும் அனுமதி தர முடியாதென்றே பதில்வந்தது.

அரசாங்கத்தின் போக்கினால் சிறிதேனும் தளர்வுறாது ஒரு சர்வ கட்சி முஸ்லிம் மகாநாடு அக்டோபர் 16-ம் தேதி லக்ஷ்மணபுரியில் கூட்டப்பட்டது. இந்து, சீக்கியப் பிரதிநிதிகளைச் சந்திப்பதற்காக அந்த மகாநாட்டில் ஒரு கமிட்டி ஏற்படுத்தவேண்டும் என்ற மதன்மோகன மாளவியாவின் யோசனை ஏற்றுக்கொள்ளப்பட்டது. அவ்வாறே வகுப்புப் பிரசினையைச் சமரசமாகத் தீர்க்க ஒரு கமிட்டியும் ஏற்படுத்தப்பட்டது. 1932 நவம்பர் 3-ம் தேதி அலகாபாத்தில் ஒற்றுமை மகாநாடு கூடியது. அதற்கு 63 இந்துக்கள், 11 சீக்கியர்கள், 39 முஸ்லிம்கள், 8 இந்தியக் கிறிஸ்தவர்கள் வந்திருந்தனர். ஓர் ஒப்பந்தத்தைக் கண்டுபிடித்து அறிக்கையைச் சமர்ப்பிக்க 10-பேர் அடங்கிய ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. இக்கமிட்டியும் நாள் தவறாது கூடி தகராறு ஏற்பட்ட அல்லது ஏற்படக்கூடிய பெரும்பாலான விஷயங்களைத்

---

10. Annual Register 1932, Vol. II, p. 281-2.

தீர்த்துத் தீர்மானங்கள் நிறைவேற்றியது. அதிகமாக அலைக்கழித்த வங்காள, பஞ்சாப் பிரசினைகளுக்குக்கூட இந்துக்களையும், முஸ்லிம்களையும் பொறுத்த மட்டில் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. கூட்டுத்தொகுதியின் மூலமாக முஸ்லிம்களுக்கு 51-சதவிகித ஸ்தானங்கள் அளிப்பதற்கு இந்துக்கள் ஒத்துக்கொண்டார்கள். மிச்ச அதிகாரங்கள் மத்தியிலிருப்பதா சமஷ்டிப் பகுதிகளிடம் இருப்பதா என்பதுபற்றிக்கூட எல்லாக் கட்சிகளுக்கும் திருப்தியளிக்கிற ஒரு திட்டம் கொண்டுவரப்பட்டது. மற்றொரு திட்டமும் கூட்டுத்தொகுதியை ஏற்றுக் கொண்டது. ஆனால் ஓர் அபேட்சகர் தன் வகுப்பின் வாக்குகளில் 30-சதவிகிதம் பெற்றிருக்கவேண்டும், அது தவறினால் தன் வகுப்பாரின் வாக்குகளை அதிகமாகப் பெற்றவர் சட்டசபைக்குப் போகலாம் என்று அனுமதித்தது. மத்ய சட்டசபையிலும் முஸ்லிம்களுக்கு 32-சதவிகித ஸ்தானங்கள் அளிப்பதென்ற முடிவு எல்லோருக்கும் ஏற்றதாக இருந்தது. இரு கட்சிகளும் சில விஷயங்களில் விட்டுக்கொடுத்து வேறு சில விஷயங்களில் இலாபமடைந்திருக்கின்றன.

ஆனால் வங்காளப் பிரசினையில் இந்துக்களும், முஸ்லிம்களும் மாத்திரம் ஒன்றுபட்டால் போதாது. அங்கு ஐரோப்பியர்களுக்கு மிகவும் அதிகப்படி ஸ்தானங்கள் அளிக்கப்பட்டிருந்தன. இப்புதிய கமிட்டியின் முடிவின்படி ஹிந்து முஸ்லிம் பிரதிநிதிகள் 95. 7-சதவிகித ஸ்தானங்களைத் தங்களுக்குள் எடுத்துக்கொள்வார்கள். ஐரோப்பியர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த 10-சதவிகித ஸ்தானங்களை இதன்மூலம் பெற இயலாது. ஆகவே இந்துக்களும், முஸ்லிம்களும் கல்கத்தாவிலுள்ள ஐரோப்பியரோடு இதுபற்றி விவாதிப்பதென்று முடிவு செய்யப்பட்டது. ஆகவே மாநாடும் அலஹாபாத் கூட்டத்துக்குப்பிறகு ஒத்திப்போடப்பட்டது.

மத்திய சட்டசபையில் முஸ்லிம்களின் பிரதிநிதித்வத்தைப் பற்றிப் பின்னால் பார்த்துக்கொள்ளலாம் என்று வகுப்புத் தீர்ப்பு விட்டுவிட்டது ஞாபகமிருக்கலாம். நிர்வகிக்கப் போதுமான வருவாய் கிடைத்தால் சிந்துவைப் பிரிக்கலாமெனவும் அத்தீர்ப்புக் கூறி இருந்தது. ஐரோப்பியர்களுடன் அவர்களுடைய அதிகப்படியான ஸ்தானங்களைப் பற்றிப் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கப் பண்டித மாளவியா முஸ்லிம் பிரதிநிதிகளுடன் கல்கத்தா சென்று கொண்டிருந்தார். அப்பொழுது ஸர். ஸாமுவேல் ஹோர் ஓர் அறிக்கை வெளியிட்டு அவரைத் தடுத்துவிட்டார் என்ற செய்தியைப் பத்திரிகைகள் பிரசுரித்தன. மத்திய சட்டசபையில் முஸ்லிம்களுக்கு பிரிட்டிஷ் இந்திய ஸ்தானங்களில் $33\frac{1}{3}$-சதவிகித ஸ்தானங்கள் கொடுப்பதென்றும், சிந்துவைப் பிரித்து மத்திய அரசாங்கத்திலிருந்து உதவித்தொகை அளித்து நிர்வகிப்பதென்றும் பிரிட்டிஷ் அரசாங்கம் தீர்மானித்திருக்கிறதாக ஸர். ஸாமுவேல் ஹோர் பிரகடனம் செய்தார். ஒற்றுமை மகாநாடு பல வாரங்களாகக் கூடி மிகுந்த பிரயாசையுடன் இந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்கள், கிறிஸ்தவர்கள் இன்னும் மற்ற இந்திய சமூகங்களிடையே அநேக விஷயங்களில் இச் சமரசமான முடிவுக்கு வந்திருந்தது. வெண்ணெய் திரண்டுவரும் இச்சமயத்தில் ஸர். ஸாமுவேல் ஹோர் தாழியை உடைத்துவிட்டார். எவ்வளவு நியாயமான சமரச முடிவையும் எதிர்ப்பதென்று சில கட்சிகள் இருக்கும்பொழுது எல்லாக் கட்சிகளிடையேயும் சமரசம் உண்டுபண்ணுவதென்பது எதிர்பார்க்க முடியாத காரியம். அதிலும் உரிய பங்குக்குக்குமேல் அதிகம் பெறுவதற்குக் கை நீட்டுகிற கட்சிக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் சலுகைகள் காட்டத் தயாராக இருக்கும்பொழுது சமரசம் எவ்வாறு இயலும் ?

## 15. வித்தியாசங்கள் விரிவடைகின்றன

தனித் தொகுதியை வகுப்புத்தீர்ப்பு உண்டு பண்ணியது, அதோடு தாழ்த் தப்பட்டவர்களுக்கு ஸ்தானங்களை ஒதுக்கியது என்பதைக் கண்டோம். தாழ்த் தப்பட்டவர்களுக்கு ஸ்தானங்களை ஒதுக்கும்படியாக வகுப்புத்தீர்ப்பைத் திருத் தினர்கள். மகாத்மாவின் உண்ணு விரதத்தால் ஏற்பட்ட பூனு ஒப்பந்தமே இதற்குக் காரணம். வகுப்புத் தீர்ப்பால் கிடைத்ததைக் காட்டி லும் தாழ்த்தப்பட்டவர்களுக்கு அதிகமான ஸ்தானங்கள் கிடைத்தன. புதிய அரசாங்க மசோதா சட்டமாக்கப்படுவதற்கு முன்பு சம்பந்தப்பட்ட கட்சிகள் கொண்டுவரக் கூடிய ஒப்பந்தத்தை தான் ஏற்றுக்கொள்ளு மென்று அரசாங்கம் கூறிய உறுதிமொழிக் கிணங்க இம்மாறுதல் ஏற்பட்டது. முஸல்மான்களுக்கும் மற்றவர்களுக்கு மிடையே அரசாங்கம் அளித்த அத்தீர்ப்பினும் சிறந்ததாக புதியதொரு சமரசத்தைக் காண வேண்டும் என்ற நம்பிக்கையோடுதான் அலகாபாத் ஒற்றுமை மகாநாடு முயன்றது. வெற்றி காணப்போகும் தருவாயில் சர். சாமுவேல்ஹோரால் எப்படி இடித்துத் தகர்க்கப்பட்டது என்பதைக்கண்டோம்; ஆனல் இச்செயல் இந்துக்கள் சீக்கியர்களுடைய வாயை அடைத்துவிடவில்லை. குருடனுக்கு ஒரே மதி என்பதுபோல சீர்திருத்தங்கள் வழி பிசகாமல் சென்றுகொண் டிருந்தன. எதிர்ப்பும் நாளுக்குநாள் பரவி வலுவடைந்துவந்தது. வகுப்புக்க ளிடையே ஒற்றுமை யில்லாத காரணத்தினல் பிரிட்டிஷ் அரசாங்கம் சீர்திருத்தங்களை நிறுத்திவிடப் போவதில்லை என்று கூறியிருந்தது. அதன் பிரகாரம் 1932 ஆகஸ்டில் வகுப்புத் தீர்ப்பை வெளியிட்டார்கள். ஆனல் அதைச் சட்டமாக்குவதற்கு 1935 ஜூன் வரையும் ஆயிற்று. இதற்குள்ளாக காங்கிரஸ் மற்ருெரு போர் நெருப்பில் குதித்து மீண்டது. வகுப்புத் தீர்ப்பைப் பற்றித் தன் அபிப்பிராயத்தைத் தடையின்றிச் சொல்லும் நிலைமை ஏற்பட்ட பொழுது அது சொல்ல மறுத்தது; இந்து முஸ்லீம்களிடையே தீர்ப்பைப்பற்றி மாறுபட்ட அபிப்பிராயங்கள் இருந்ததால் அதை ஏற்கவோ மறுக்கவோ இல்லை என்று பம்பாயில் 1934 அக்டோபரில் கூடிய கூட்டத்தில் கூறியது. சில வாரங்கள் கழித்து மத்திய சட்டசபைக்குத் தேர்தல்கள் நடந்தன. வகுப்புத் தீர்ப்பைப்பற்றிக் காங்கிரஸ் நடுநிலைமை வகித்தது ஒரு குற்றமாக எடுத்துக் கொள்ளப்பட்டது. அநேகமாக எல்லா மாகாணங்களிலும் காங்கிரஸ் வெற்றி யடைந்தது. வங்காளத்தில் தேர்ந்தெடுக்கப்பெற்ற அங்கத்தினர்கள் காங்கிரஸ் வேலைத் திட்டத்தை ஒப்புக்கொண்டாலும் வகுப்புத் தீர்ப்பு சம்பந்தமாக சுயேச்சையாக நடந்துகொள்ளலாம். வகுப்புத் தீர்ப்புக்கும் பிரிட்டிஷாரின் கொள்கைக்கும் எதிராகக் கிளம்பிய தகராறுகள் நாட்டில் பிளவையுண்டு பண்ணின. 1935 ஆரம்பத்தில் காங்கிரஸ் லீக் தலைவர்களிடையே செய்யப்பட்ட ஒப்பந்த முயற்சி தோல்வியுற்றது.

இந்திய அரசாங்கச் சட்டம் 1935 ஜூன் மாதத்தில் நிறைவேற்றப்பட் டது. புதிய சட்டத்தின் கீழ் தேர்தல்கள் 1936-37 மாரிக்காலத்தில் ஆரம்பித்தன. 1936 ஏப்ரலில் அகில இந்திய முஸ்லிம் லீக் பம்பாயில் கூடி இந்திய ஜனங்கள் மீது ஓர் அரசியலைத் திணிப்பதை வன்மையாக எதிர்த்துத் தீர்மானம் நிறை வேற்றியது; ஆனல் மாகாணங்களுக்களித்த திட்டத்தில் எதிர்ப்புக்குரிய பல அம்சங்களிருப்பினும், மந்திரிகளுக்கும் சட்டசபைகளுக்கும் கொடுக்கப்பட்ட அதிகாரங்கள் உருப்படி யற்றவையாக இருப்பினும் அதைப் பிரயோசனமுள்ள

வரை பயன்படுத்திக் கொள்வது என்றும் தீர்மானித்தது ; அகில இந்திய சமஷ்டித் திட்டம் அதிகப் பிற்போக்காகவும், இந்திய சமஸ்தானங்களுக்குச் சாதகம் செய்கின்ற முறையில் பிரிட்டிஷ் இந்தியாவின் நன்மைகளுக்குப் பெருந் தீங்கு இழைப்பதாகவும், இந்தியாவின் சிறந்த லட்சியமான முழுப் பொறுப் பாட்சியைக் கொடுக்காமல் காலந்தாழ்த்தி ஏமாற்றுவதாக இருக்கிறதென்றும் கூறியது. இந்திய நன்மைக் கேற்றவண்ணம் இத்திட்டத்தை நடத்த முடியா தென்றும் கூறியது. இங்கு ஒரு விஷயத்தை நன்கு கவனிக்கவேண்டும். சமஷ்டித் திட்டம் லீகினால் கண்டிக்கப்பட்டது. இந்தியாவின் மிகச் சிறந்த லட்சியமான முழுப்பொறுப்பாட்சியை அடைய முடியாதபடி காலங்கடத்தி ஏமாற்றுவதற்கு ஏற்பட்டதாலும், இந்திய நன்மைக்கு உகந்த வண்ணம் இல்லாததாலும் அது எதிர்க்கப்பட்டதே ஒழிய சமஷ்டி அமைப்பைக் கொடுத்த தற்காகவோ முஸ்லிம் நலன்களுக்குத் தீங்கிழைத்ததற்காகவோ அல்ல லீக் ஒரு பார்லிமென்டரி போர்டு ஏற்படுத்தியது. பார்லிமென்டரி போர்டு வெளியிட்ட தேர்தல் அறிக்கை கூறியதாவது : 'எங்களது சட்டசபைப் பிரதிநிதிகள் நிறை வேற்றவேண்டிய காரியங்கள் என்று நாங்கள் எதிர்பார்ப்பவை :

1. இப்போதைய மாகாண அரசியலமைப்பும் மத்திய அரசியல் அமைப்பும் போக்கப்பட்டு ஜனநாயக முழு சுயஆட்சி நிறுவவேண்டும். 2. அதற் குள்ளாகப் பல சட்டசபைகளிலுமுள்ள முஸ்லிம் லீக் பிரதிநிதிகள், தேசீய வாழ்வின் பல துறையிலும் ஜனங்களை உயர்த்த இந்த அரசியல் அமைப்பின் மூலமாக எவ்வளவு நன்மை செய்ய முடியுமோ அவ்வளவு நன்மையைச் செய்ய முயலுதல். தனித்தொகுதிகள் உள்ளவரை அதன் விளைவாக லீக் கட்சியும் இருந்துவரும். லீக் கட்சியின் நோக்கங்கள், லட்சியங்களோடு நெருங்கிய எந்தக் கட்சி அல்லது கட்சிகளோடும் லீக் கட்சி ஒத்துழைக்கும்.' தேர்தல் அறிக்கையில் முஸ்லிம்கள் சம்பந்தப்பட்ட ஷரத்துக்கள் இரண்டே இருந்தன : (அ) முஸ்லிம்க ளுடைய மதஉரிமைகளைக் காப்பாற்றுவது. (ஆ) முஸ்லிம்களுடைய பொது நிலைமையைச் சீர்ப்படுத்துவதற்கு உரிய வழிகளைக் காணுதல். அறிக்கையில் கண்ட மற்ற விஷயங்கள் எல்லாம் பொதுவானவை. உதாரண மாக அடக்குமுறைச்சட்டங்களை ரத்துசெய்தல், இந்திய நலனுக்குப் பாதகமான சட்டங்கள், ஜனங்களின் அடிப்படைச் சுதந்திரத்தைப் பறிக்கும் சட்டங்கள், நாட்டின் பொருளாதாரச் சுரண்டலுக்கு வசதியளிக்கும் சட்டங்கள் ஆகியவைகளை நிராகரித்தது. ராணுவத்தின் நிர்வாகச் செலவைக் குறைப்பது, தேசத்தின் ஆக்கத்திற்குரிய துறைகளுக்குத் தொகையளிப்பது, ஆலை அபிவிருத்தி, நாட்டின் நலனுக்கேற்றவாறு நாணயமாற்றைச் சீர்திருத்தல் என்பன அவற்றுள் சிலவாம். எல்லா மாகாணங்களிலுமே தேர்தல்களில் முஸ்லிம் லீக் அபேட்சர்களை நிறுத்தவோ அல்லது போட்டி போட்ட இடங் களில் பூர்ணமாக ஜெயிக்கவோ இல்லை. காங்கிரஸோ மகமதியரல்லாத பொதுத் தொகுதிக்கு அபேட்சகர்களை நிறுத்தியது ; முஸ்லிம் ஸ்தானங் களுக்கும் சில அபேட்சகர்களை நிறுத்தியது. தேர்தல் முடிவு பின்வருமாறு :

அட்டவணை II

| மாகாணங்கள் | மொத்த ஸ்தானம் | காங்கிரஸ் வெற்றி பெற்றவை | மொத்த முஸ்லீம் ஸ்தானம் | லீக் வெற்றி பெற்றவை | லீக் அல்லாத முஸ்லீம்கள் வெற்றி பெற்றவை |
|---|---|---|---|---|---|
| சென்னை | 215 | 159 | 28 | 11 | 17 |
| பம்பாய் | 175 | 86 | 29 | 20 | 9 |
| வங்காளம் | 250 | 54 | 117 | 40 | 77 |
| ஐ. மாகாணம் | 228 | 134 | 64 | 27 | 37 |
| பஞ்சாப் | 175 | 18 | 84 | 1 | 83 |
| பீஹார் | 152 | 98 | 39 | — | 39 |
| ம. மாகாணம் | 112 | 70 | 14 | — | 14 |
| எல்லைப்புறம் | 50 | 19 | 36 | — | 36 |
| அஸ்ஸாம் | 108 | 33 | 34 | 9 | 25 |
| ஒரிஸ்ஸா | 60 | 36 | 4 | — | 4 |
| சிந்து | 60 | 7 | 36 | — | 36 |
| மொத்தம் | 1585 | 714 | 485 | 108 | 377 |

5 மாகாணங்களில் காங்கிரஸ் பெரும்பான்மை ஸ்தானங்கள் பெற்றிருந்ததைக் கவனிக்கலாம். பம்பாயிலும் வடமேற்கு எல்லை மாகாணத்திலும் சுயேச்சை அங்கத்தினர்களும் காங்கிரசோடு சேர்ந்துகொண்டதால் அங்கு காங்கிரஸ் மந்திரிசபை அமைக்கும் நிலைமையில் இருந்தது. முஸ்லிம்கள் அதிகமாக உள்ள மாகாணங்களில்கூட—அதாவது வங்காளம், பஞ்சாப், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், சிந்து இவைகளில் முஸ்லீம் ஸ்தானங்களில் பெரும்பான்மையை முஸ்லிம் லீக் பெற முடியவில்லை; மற்ற முஸ்லிம்களுடனோ அல்லது முஸ்லிம் அல்லாதவர்களுடனோ சேர்ந்தாலன்றி மந்திரிசபை அமைக்க முடியாது; 4 மாகாணங்களில் அது ஒரு ஸ்தானத்தைக்கூடக் கைப்பற்றவில்லை; பஞ்சாபில் ஒரே ஒரு ஸ்தானத்தை ஜெயித்தது. மந்திரிசபை அமைக்கும் தருணம் வந்தது. 'சட்டபூர்வமான காரியங்களில் மந்திரிகளது ஆலோசனையை நிராகரிப்பதில்லை அல்லது தமது விசேஷாதிகாரங்களை கவர்னர் உபயோகப்படுத்தமாட்டார் என்பதைச் சட்டசபையிலுள்ள காங்கிரஸ் கட்சித் தலைவர் நம்பகமாகத் தெரிந்து ஜனங்களுக்கும் சொல்லக்கூடிய நிலைமையில் இருந்தால் ஒழிய' காங்கிரஸ், மந்திரிசபையை அமைக்க மறுத்தது. கவர்னர்கள் அவசியமான வாக்குறுதியைக் கொடுக்காததால் காங்கிரஸ் பதவி ஏற்கவில்லை. மந்திரிகளைக் கலக்காமலே தன் யோசனையின்படி கவர்னர் நடத்தக்கூடிய காரியங்களும், மந்திரிகளைக் கலந்த பின்பு தன் சொந்தத் தீர்மானத்தின்படி நடத்தக்கூடிய காரியங்களும் உள்ளன. இவைகளே கவர்னரின் விசேஷப் பொறுப்புக்கள். இவை சம்பந்தமாகவே காங்கிரஸ் உறுதிமொழி கேட்டது. 'விசேஷப் பொறுப்புக்களின் வரிசைக் கிரமத்தைக் கவனித்தால், அவை நிர்வாகத்தின் எல்லாத் துறைகளிலும் கை வைக்கின்றன என்று சர். சாமுவேல் ஹோர் சொன்ன சொல்லை மெய்ப்படுத்தும். மாகாணத்தின் சமாதானத்திற்கும் அமைதிக்கும் கேடு வராமல் காப்பது, சிறுபான்மையின் சட்டபூர்வமான நலன்களைப் பாதுகாப்பது, உத்யோகஸ்தர்கள், அவர்களை நம்பி வாழ்பவர்

களுடைய நியாயமான உரிமைகளையும் நலன்களையும் பாதுகாப்பது, பிரிட்டிஷார்களுக்கும் அவர்களது வியாபாரங்களுக்கும் பாதகமான நிர்வாகச் செயல்களைத் தடுப்பது, ஒதுக்கப்பட்ட இடங்களில் அமைதியும் நல்லரசாட்சியும் கவனிப்பது, சமஸ்தானங்கள் சுதேச அரசர்களுடைய உரிமைகளைக் காப்பது, கவர்னர் ஜெனரலுடைய உத்தரவுகளையும் ஆணைகளையும் தம் உசிதப்படி நிறைவேற்றுதல் ஆகிய காரியங்கள் கவர்னரது விசேஷப் பொறுப்பிலுள்ளவை.'[1]

நிர்வாக முழுதும் பரவியிருக்கக்கூடிய விசேஷப் பொறுப்புக் காரியங்களில் சிறுபான்மைப் பாதுகாப்பு ஒரு சின்ன விஷயம். 'சிறுபான்மைகள்' என்பது முஸ்லிம்கள் மட்டுமன்றி இன்னும் எத்தனையோ சிறுபான்மைகள் சேர்ந்ததாகும். இந்தியாவிலுள்ள பிரிட்டிஷாரும் அதில் சேர்ந்தவர்கள். அப்பொழுது இந்தியா மந்திரியாயிருந்த ஜெட்லண்டு பிரபு, காங்கிரஸ் கேட்கும் வாக்குறுதியை, அரசியல் அமைப்பை மாற்றினாலொழியக் கொடுக்க முடியாது என்று கூறினார். காங்கிரஸ் மந்திரிசபை சிறுபான்மைக்கு எதிராகக் காரியங்கள் தொடங்கினால் என்ன நிலைமை ஏற்படும் என்பதை விளக்க வந்தவர் பின்வருமாறு கூறினார்: 'சிறுபான்மை வகுப்பினருக்குரிய பள்ளிக்கூடங்களைக் குறைப்பது காங்கிரஸ் திட்டத்தில் சந்தேகமில்லாமல் இடம் பெற்றிருக்கலாம். அது சட்டபூர்வமானதே. விதி, முறையற்ற செய்கை என்று சொல்ல முடியாது. அத்தகைய சந்தர்ப்பத்தில் கவர்னர் சிறுபான்மையைக் காப்பாற்றமுடியாத நிலைமையில் இருப்பார். இவ்வரசியல் அமைப்பில், இத்தகைய நிலைமைகளும் ஏற்படக்கூடும் என்பதை முன்கூட்டியே அறிந்துதான் பார்லிமென்ட் பாதுகாப்புகளை அதில் சேர்த்திருக்கிறது.'[2] சிறுபான்மை வகுப்பை இங்கு குறிப்பிடவேண்டிய நோக்கம் என்ன என்பது தெளிவாகிறது. அந்நோக்கமும் பரிபூர்ணமாக நிறைவேறியது.

தனது மந்திரி சபைகளுக்காக மாத்திரம் காங்கிரஸ் இந்த உறுதிமொழிகளைக் கேட்கவில்லை. மற்ற மாகாணங்களில் உள்ள பெரும்பான்மைக் கட்சியும் காங்கிரசோடு சேர்ந்துகொண்டு இவ்வாக்குறுதி அளிக்குமாறு கேட்டிருக்கலாம். இதன்மூலம் மந்திரிகளின் சட்டபூர்வமான செய்கைகளில் கவர்னர் குறுக்கிடுவதினின்றும் விடுதலை பெறலாம். ஆனால் அவர்கள் அப்படிச் செய்யவில்லை. இத்தகைய எவ்வித உறுதிமொழியுமின்றி அவைகள் மந்திரிசபை அமைத்தன. காங்கிரஸ் காத்திருந்து கவனித்தது. காங்கிரஸ் மந்திரிகளுடைய சட்டபூர்வமான காரியங்களில் கவர்னர்கள் தலையிடுவது எளிதுமல்ல அல்லது அடிக்கடி நிகழுவதுமல்ல என்பது பின்னால் ஏற்பட்ட விவாதங்களிலிருந்து தெரிய வந்தது.

அரசியலில் அவிவேகமும் வெகுதூரம் ஆட்டம் போடுகிறது. அரசியலில் ஏற்படும் பலவித அதிசய அனுபவங்களில் இதுவும் ஒன்று. எல்லா மந்திரிகளுக்குமாக இவ்வாக்குறுதி கோரப்பட்டதென்றாலும், இது காங்கிரஸ் மந்திரிகளுக்கு மாத்திரம் நன்மை செய்யுமென்று கூறப்பட்டது. காங்கிரஸ் மந்திரிசபை சிறுபான்மைக்கு எதிராகத் தன் சக்தியை உபயோகிக்கக்கூடும் என்று இந்தியா மந்திரி மறை முகமாகச் சொல்லிக் காட்டினார். முஸ்லிம் லீகும் அதை உண்மை என்று ஏற்றுக்கொண்டது. அன்றி, அதற்கு மேலும் செல்ல ஆரம்பித்தது. முஸ்லிம் சிறுபான்மையை ஒடுக்குவதற்காகத்தான் இவ்வாக்குறுதியைக் கேட்கிறார்களென்று அதன் பிரமுகர்கள் கூறினார்கள்.

1. Chintamani and Masani: *India's Constitution at work*, pp. 91-2.
2. *ibid.*, p. 106.

விசேஷ அதிகாரம் பாயக்கூடிய நிர்வாகப் பரப்பு முழுவதையும் பார்க்க, மறுத்துவிட்டார்கள். லீகின் பிரசாரகர்கள் சிறுபான்மை விஷயத்தை மாத்திரம் பெரிதாக்கிக் காட்டினுர்கள். நடைமுறையில் காங்கிரஸ் மந்திரிகள் ராஜீநாமா மூலமாகவும் அல்லது ராஜீநாமா செய்வோம் என்ற பயமுறுத்தல் மூலமாகவும் தங்களது யோசனைகளை நிறைவேற்றுமாறு கவர்னரை நிர்ப்பந்தப்படுத்தியதுண்டு. ஆனுல் எந்தக் காங்கிரஸ் மந்திரிசபையிலும் சிறுபான்மையின் உரிமையைப் பாதிக்கக்கூடிய காரியங்களைச் செய்யுமாறு கவர்னரை நிர்ப்பந்தித்ததாக ஒரு சந்தர்ப்பம்கூட நிகழவில்லை.

பின்னுல் ஏற்பட்ட விவாதங்களின் பலனுக 1937 ஜூலையில் காங்கிரஸ் மந்திரிசபை அமைப்பதென்று தீர்மானித்தது. முஸ்லிம் லீகோடு கூட்டு மந்திரிசபை அமைப்பதா என்ற கேள்வி பிறந்தது. லீகின் அங்கத்தினரே இல்லாத பீஹார், ஒரிஸ்ஸா, மத்திய மாகாணங்களில் இந்தக் கேள்விக்கு இடமேயில்லை. ஐக்கிய மாகாணத்திலும் பம்பாயிலும் செய்த முயற்சிகள் பலனளிக்கவில்லை. ஒரு குறிப்பிட்ட வேலைத் திட்டத்தோடு ஒரு குறிப்பிட்ட கொள்கையை நிறைவேற்றவே காங்கிரஸ் சட்டசபைகளுக்குச் சென்றது. தன்னுடைய வாக்காளர்களுக்கு மோசம் செய்வதாயிருந்தாலொழிய இந்த வேலைத் திட்டத்தையும் கொள்கையையும் ஒப்புக்கொள்ளாத மனிதர்களை அது மந்திரிகளாக்க முடியாது. காங்கிரஸ் வேலைத் திட்டமும் ஜாதி காரண மாக எதிர்க்கக்கூடியதன்று. சில வகுப்பினர் அதிலுள்ள சில அம்சங்களுக்குக் கோளாறு சொல்லலாம். ஆனுலும் அது ஒரு வகுப்புத் திட்டமல்ல. ஆகவே முஸ்லிம்கள் அதை வகுப்புத் திட்டம் என்று வேறுபட வேண்டியிராது. அது ஓர் அரசியல் பொருளாதாரத் திட்டம். அதை ஏற்றுக்கொண்ட முஸல் மான்கள் அதை ஏற்றுக்கொண்டதனுல் முஸல்மான்களல்லாமற் போய் விட மாட்டார்கள். தனது வேலைத்திட்டத்தில் ஏற்றுக்கொண்ட முஸ்லிம்களை காங்கிரஸ் தன் மந்திரிசபையில் நியமிப்பது இயற்கையே. ஆகவே காங்கிரஸ் கட்சியிலுள்ள அங்கத்தினர்களையே அது முஸ்லிம் மந்திரிகளாகத் தேர்ந் தெடுத்துக் கொண்டது. ஜெட்லண்டு பிரபு கொடுத்த குறிப்பு, லீக் பிரசாரக் காரியத்திற்கு முழுதும் உபயோகப்படுத்தப்பட்டது.

'மந்திரி நியமன விஷயத்தில் முஸ்லிம்களும் சரி இதர சிறுபான்மை யினரும் சரி அவர்களுக்குரிய விகிதத்துக்கு அதிகமாகவே இடம் பெற்ருர்கள். பதினெரு மாகாணங்களில் உள்ள எழுபத்தோரு மந்திரிகளில் 26 பேர் முஸ்லிம் கள். 10 பேர் இதர சிறுபான்மையினர். 35 பேர் இந்துக்கள். இந்து காங்கிரஸ் மாகாணங்களில் உள்ள 35 மந்திரிகளில் அறுவர் முஸ்லிம்கள். ஐவர் இதர வகுப்பினர். சில நாள் சென்ற பிறகு வடமேற்கு எல்லை மாகாணத் திலும் அஸ்ஸாமிலும் காங்கிரஸ், கூட்டு மந்திரி சபை அமைத்தது. அதனுல் முஸ்லிம் மந்திரிகளின் எண்ணிக்கை இன்னும் அதிகமாயிற்று. வடமேற்கு எல்லை மாகாணத்தில் உள்ள 4 மந்திரிகளில் மூவர் முஸ்லிம்கள். அவர்களில் பிரதமர் டாக்டர் கான் சாகிபும் ஒருவர். அஸ்ஸாமில் 3 முஸ்லிம்களும் 5 முஸ்லி மல்லாதாரும் மந்திரிகள். லீகின் வீரர்கள் கூறிய அபாண்டமான வார்த்தை களையும் வேடிக்கையான கூற்றுக்களையும் இப்புள்ளி விவரங்கள் எளிதில் பொய்யாக்குகின்றன.' [3]

1937 ஜூலை மத்தியில் காங்கிரஸ் பதவி யேற்றது. பதவியில் எட்டு மாதங்கள்கூட இருக்கவில்லை. அதற்குள் காங்கிரஸ் ஆட்சி மாகாணங்களில்

3. Mehta & Patwardhan : *The Communal Triangle*, p. 114.

உள்ள முஸ்லிம்களையும் முக்கியமாக முஸ்லிம் லீக் ஊழியர்களையும் அங்கத்தினர்களையும் கொடுமைக்குள்ளாக்கியதாக ஏராளமான புகார்கள் வந்திருப்பதாகவும் அதுபற்றிய எல்லா விவரங்களையும் சேகரித்துத் தகுந்த நடவடிக்கைகள் எடுக்க ஒரு கமிட்டி ஏற்படுத்துவதென்றும் அகில இந்திய முஸ்லிம்லீக் தீர்மானித்தது. கமிட்டியின் தலைவர் பீர்ப்பூர் ராஜா. அக்கமிட்டியும் 1938 நவம்பர் 15-ல் தன் அறிக்கையை வெளியிட்டது. அதில் குறிப்பிட்டிருந்த விவரங்களைக் காணுவது இங்கு சாத்தியமல்ல. அது வெளியான பிறகு காங்கிரஸ் மந்திரி சபைகள் விசாரணை செய்து அதற்கு விவரமான பதில் அளித்தன. அந்தந்த மாகாண சட்ட சபைகளிலும் அக் குற்றச்சாட்டுகளைப் பற்றிய விவாதங்கள் எழுந்தன. அக் குற்றச்சாட்டுகள் பாரபட்சமற்ற விசாரணைக்கு உட்படுத்தப்படவே யில்லை. அப்பொழுது லீகின் முக்ய அங்கத்தினராயிருந்த திரு. பஸ்லுல் ஹக், பண்டித நேருவுக்கு சவால் விடுத்தார். பஸ்லுல் ஹக் யோசனை கூறிய வண்ணம், தாமும் சுற்றி வந்து உண்மையைக் கண்டுபிடிக்கத் தயார் என்று நேரு கூறியும் பஸ்லுல் ஹக் அக்காரியத்தை நிறைவேற்றவில்லை. அச்சமயம் காங்கிரஸ் தலைவராயிருந்த இந்நூலாசிரியர், புகார்களைப் பாரபட்சமற்ற அதிகாரியிடம் விசாரணைக்கு ஒப்படைக்கலாம், அதற்கு பெடரல் கோர்ட்டின் தலைமை நீதிபதியின் பெயரைக் குறிப்பிட்டு திரு. ஜின்னுவுக்கு எழுதினர். திரு. ஜின்னு இந்த யோசனையை ஏற்றுக்கொள்ள மறுத்தார். அவருடைய பதில்: ‘அந்த விஷயம் ராஜப்பிரதிநிதியின் யோசனையில் இருக்கிறது. காங்கிரஸ் ஆட்சி செய்யும் மாகாணங்களில் முழு பாதுகாப்பு உணர்ச்சியை முஸ்லிம்களிடையே ஏற்படுத்துவதற்குத் தக்க நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டிய அதிகாரம் படைத்தவர் அவரே.’ ராஜப் பிரதிநிதியோ, அல்லது காங்கிரஸ் ஆட்சியிலுள்ள கவர்னர்களோ, அல்லது காங்கிரஸ் ஆட்சி காலமுழுவதிலும் இந்தியா மந்திரிப்பதவி தாங்கிய ஜெட்லண்ட் பிரபுவோ, முஸல்மான்களை அல்லது மற்றச் சிறுபான்மையினரைக் காங்கிரஸ் கொடுமைப் படுத்தியதாக ஒரு வார்த்தைகூடச் சொன்னதில்லை. திரு. ஜின்னுவின் விண்ணப்பத்தின்பேரில் ராஜப்பிரதிநிதி ஏதாவது நடவடிக்கை எடுத்தாரா அல்லது திரு. ஜின்னு மேற்கொண்டு அவ்விஷயத்தைத் தொடர்ந்தாரா என்பது நமக்குத் தெரியாது. சில நாள் கழித்து, குற்றச்சாட்டுகளை விசாரிக்க ஒரு கமிஷனை ஏற்படுத்த வேண்டுமென்று கோரினுர். ஆனுல் அரசாங்கம் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. காங்கிரஸ் மந்திரிகள் ராஜிநாமா செய்வதற்கு முன்னுல் தாங்கள் சிறுபான்மையினருக் கெதிராக அதிலும் சிறப்பாக முஸ்லிம்களுக் கெதிராக ஏதாவது காரியங்கள் செய்திருந்தால் அதைக் காட்டும்படி கவர்னர்களைக் கேட்டுக்கொண்டார்கள். இவ்வாறு கேட்குமாறு காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு சொல்லியிருந்தது. ஒரு கவர்னராவது ஓர் உதாரணம் காட்ட முடியவில்லை. ஐக்கிய மாகாணத்தின் கவர்னர் ஸர். ஹாரிஹெய்க் காங்கிரஸின் மீது ஈவிரக்கமுள்ளவர் என்ற அபவாதமில்லாத மனிதர். அவர்கூடக் காங்கிரஸ் மந்திரிகள் வெகு அக்கறையோடு முஸ்லிம்களிடம் நேர்மையாகவும் நீதியாகவும் நடந்துகொண்டார்கள் என்று பதவியிலிருந்து விலகியபின் கூறினுர். அக்கிரமங்கள் என்று சொல்லப்பட்டவை நிரூபிக்கப்படாத குற்றச்சாட்டுகளாகவே யிருந்துவிட்டன. இருந்தாலும் லீகின் வேலைத்திட்டத்தில் அவைகளுக்கு முக்கிய ஸ்தானம் அளிக்கப்பட்டது. பிரசார காரியங்களுக்கு உபயோகப் படுத்தப்பட்டன.

குற்றச்சாட்டுகளில் முக்கியமானவற்றைப் பற்றிச் சிறிது கூறுகிறேன்.

இரண்டு பெரிய வகுப்பினரிடையே சச்சரவுக்குக் காரணங்களில் ஒன்ருக வந்தேமாதரப் பாட்டு கருதப்பட்டது. சென்ற நூற்ருண்டின் கடைசிப் பகுதியில் அது பிறந்தது என்பதையும் இந்த நூற்ருண்டின் ஆரம்பத்திலிருந்து வங்காளத்தில் மட்டுமன்றி எல்லா மாகாணங்களிலும் பாடப்பட்டு வந்ததென் பதையும் சொல்லலாம். அன்று தொட்டு காங்கிரஸிலும் மற்றக்கூட்டங்களிலும் அது பாடப்பட்டு வந்திருக்கிறது. சுமார் 15 வருஷ காலம் திரு. ஜின்னுவும் காங்கிரஸின் முக்கிய அங்கத்தினராக இருந்தார். அக்காலத்தில் முஸ்லீம்கள் தடைசொல்லும்படியாக அதில் ஒன்றும் அவருக்குத் தென்படவில்லே. காங்கிர ஸின் போராட்டத்திற்கு முஸ்லீம்கள் பெரிதும் ஆதரவளித்த கிலாபத் நாட் களில்,கிலாபத்கிளர்ச்சிக்காலத்தில்,எண்ணற்ற கூட்டங்களில் இப்பாட்டுபாடப் பட்டது. அப்பொழுது இதைக் குறை சொல்வார் ஒருவருமில்லே. இருந்தாலும் காங்கிரஸ் மந்திரிகள் பதவி ஏற்ற பிறகு அது ஒரு பெரிய குறையாகவும் கலகங்களுக்குக் காரணமாகவும் பீர்ப்பூர் அறிக்கையில் முதலாவதாகக் குறிப் பிடப்பட்டிருந்தது. கூடுமானவரை எல்லா எதிர்ப்புக்களேயும் விலக்குவதற்காக வும் மனஸ்தாபங்களே நீக்குவதற்காகவும் அந்தப்பாட்டின் முதலிரண்டு செய்யுட் களேயே பாடவேண்டுமென்று காங்கிரஸ் காரியக்கமிட்டி சொல்லியது. மத சம் பந்தமான குறைபாடு இவ்வாறு நீக்கப்பட்டது. அதன் பின்பு அப்பாட்டு பிறந்த வரலாற்றை மறக்கமுடியாது என்ருர்கள். இப்பாட்டை எதிர்ப்பதற்குக் காரணமாக அக்கதையைப் பற்றிப் பிரஸ்தாபிப்பதற்கு முன்பு வங்காளத்துக்கு வெளியில் ஆயிரத்திலொருவருக்குக்கூட இதைப்பற்றி ஒன்றும் தெரியாது.

இரண்டாவது குற்றச்சாட்டு தேசியக்கொடி. கிலாபத் கிளர்ச்சிக் காலத்தில் முஸல்மான்கள் காங்கிரஸை ஆதரித்தபொழுது இக்கொடி பிரசித்தி யடைந்தது. அக்காலத்தில் இந்து முஸ்லிம்களால் தேசியக் கொடி என்று ஏற்றுக்கொள்ளப் பட்டது. பிரிட்டிஷ் அரசாங்கம் வந்தேமாதரப் பாட்டால் வெகுண்டதுபோல இக்கொடியைக் கண்டும் வெகுண்டதுண்டு. இந்தப் பாடலேயும் கொடியையும் புரட்சியின் சின்னங்களென்று நினேத்து அவைகளே ஒழிக்கப் பார்த்தது. அநேக இந்து முஸ்லிம்கள் சிறைசென்றும் தடியடி தாங்கியும் உயிர் கொடுத்தும் பாதுகாக்கப்பட்ட சிறப்பு வாய்ந்தது இக்கொடி. காங்கிரஸ் மந்திரி சபை ஏற்படும்வரையும் முஸ்லிம்கள் இதை எதிர்த்ததில்லே. இது ஓர் இந்துக் கொடி அல்ல என்பதையும் குறிப்பிட வேண்டும்.

பொதுஜனத் தொடர்பியக்கம் முஸ்லிம்களுக்கு விரோதமான காங்கிரஸ் வேலேத் திட்டத்தின் மற்ருெரு அம்சம் என்று கருதப்பட்டது. கடந்த 25 ஆண்டுகளாகக் காங்கிரஸ் பொதுஜன இயக்கமாக மாறியிருக்கிறது. எத் தனேயோ சத்யாக்கிரகங்கள் இதை நிரூபித்திருக்கின்றன. அதன் முரசொலி கேட்டுப் பொது ஜனங்கள் ஆர்த்தெழுந்து விடுதலேக்காக முன்வந்திருக்கின் றனர். அந்த இயக்கங்களேப் பற்றிய விவரங்களே விவரிப்பது அவசியமல்ல. முஸ்லிம்கள் இவ்வியக்கங்களில் கலந்து இன்னல் அடைந்திருக்கின்றனர். முஸ்லிம் லீகுக்கு மாத்திரம்தான், ஒரு முஸ்லிமிடம் பேசுவதற்கு உரிமையிருக் கிறது, வேறு யாரும்—இந்துவோ, வேறு கட்சியைச் சேர்ந்த முஸ்லிமோ, வேறு யாருமோ—அவர்களே அணுகி அவர்களிடம் அரசியல் சமூக, பொதுநல விஷயங் களேப் பற்றிப் பேசுவதற்கு உரிமையில்லே என்று வைத்துக்கொண்டாலொழிய காங்கிரஸ், முஸ்லிம் பொது மக்களே அணுகிஞல் அது எவ்வாறு குற்றமாகிறது என்பது விளங்கவில்லே. ஒவ்வொரு சுதந்திர நாட்டிலும் ஒவ்வொரு மனித னுக்கும் அல்லது கூட்டத்திற்கும் தனது லட்சியங்களேயும் வேலேத் திட்டத்

தையும் பொது ஜனங்களிடம் சொல்லுவதற்கு உரிமை யிருக்கிறது, அல்லது இருக்க வேண்டும். பாகிஸ்தானில்கூட அங்கு வாழும் மக்களுக்கு அந்த உரிமை மறுக்கப்படாதென்று எதிர்பார்க்கலாம். இந்த விஷயத்தில் காங்கிரஸோ அல்லது வேறு எந்த தேசிய, வகுப்புவாத, சமய, சமூக, அரசியல் அல்லது பொருளாதார ஸ்தாபனமோ தனது உரிமையை விட்டுக் கொடுக்காது. இதை எதிர்த்துக் கூக்குரலிடுவது பேச்சு சுதந்திரம், உறவு சுதந்திரத்தின் உரிமையை மதிக்காத தன்மையையே காட்டுகிறது. வகுப்புவாரித் தனித்தொகுதிகள், மக்களை ஜாதிமத அடிப்படையில் பிரித்துவிட்டன. ஜாதிமத வித்தியாசங்களே சதமென்று வற்புறுத்துவது அவைகளின் விளைவாயிற்று. இதை முஸல்மான்களும் ஒப்புக்கொண்டிருக்கின்றார்கள். லீகிலும்கூட இந்தப் பிரசினை காரணமாகப் பிளவு ஏற்பட்டது. திரு. ஜின்னா தனித்தொகுதிகளை எதிர்த்த கட்சியின் தலைவராக இருந்தார். ஆனால் மற்றவர்கள் அவரது தலைமையை ஏற்க மறுத்ததால் அவர் விட்டுக்கொடுக்க வேண்டியதாயிற்று. வகுப்புவாரித் தொகுதிகள் கொள்கை முறையில் கெடுதலானது, நடை முறையில் கயமை ஆனது என்று காங்கிரஸ் கருதுமானால் அதை எவ்வாறு ஒருவர் குற்றஞ் சாட்ட முடியும்? தனித்தொகுதிகள் இப்படியே நீடித்திருக்க வேண்டும், வாக்காளர்கள் இதர வகுப்பினருக்கு வாக்குரிமை அளிப்பதைத் தடுக்க வேண்டும், அபேட்சகர்கள் வேறு மதத்தினரிடம் வாக்குகளைக் கேட்டடையவும் கூடாது என்று இதுவரையும் கோரப்பட்டது. ஆனால் இப்பொழுதோ அதிகாரபூர்வமற்ற இதர ஸ்தாபனங்கள் முஸ்லிம் பொதுமக்களை அணுகவே கூடாது என்று கோரப்படுகிறது. தேர்தல் சம்பந்தமான காரியங்களில் தனித்தொகுதிகள் செய்துவந்த தீங்கு இங்கு விரிவாக்கப்பட்டு முஸல்மான்கள் பிற வகுப்பினரிடம் உறவாடுவதையும் தடுக்கின்ற அளவுக்கு வந்து விட்டது. இந்த நிலைமையை ஒரேயடியாக ஒழிக்கவேண்டுமே தவிர வேறொன்றும் செய்வதற்கில்லை.

முஸ்லிம் லீகினால் பெரிதும் தாக்கப்பட்ட மற்றொரு அம்சம் அடிப்படைக் கல்வி பற்றிய வார்தா திட்டம். புத்தகங்கள் மூலமாக இல்லாமல் தொழில் மூலமாகவே கற்பிக்க வேண்டுமென்பது இத்திட்டத்தின் அடிப்படைத் தத்துவம். மேனாட்டு உள நூல்வல்லுநரும், கல்விப் பயிற்சி ஆய்வாளரும் இம்முறையை ஏற்றுக்கொண்டிருக்கின்றனர். சார்ஜண்ட் திட்டமும் இந்த அடிப்படையில் ஏற்கப்பட்டதே. வார்தாவில் இத்திட்டத்தை வகுத்தவர் கமிட்டியின் தலைவர் டாக்டர் ஜாகிர் ஹுஸேன். இவர் கல்விப்பயிற்சி ஆய்வாளர்களில் புகழ்பெற்றவர். இவருக்கு இவ்வேலையில் உதவி புரிந்தவர் க்வாஜா. ஜி. சையதைன் இவர் ஒரு சமயம் அலிகார் சர்வகலாசாலையில் இருந்து பின்பு காஷ்மீரத்தில் கல்வி யிலாகா டைரக்டராக இருந்தவர். புகழ்பெற்ற இரண்டு முஸ்லிம் கல்விப் பயிற்சி ஆய்வாளர்களால் அமைக்கப்பட்ட இந்தத் திட்டம் முஸ்லிம் நலன்களுக்குத் தீங்கிழைக்க வேண்டி ஹிந்துக்களால் உற்பத்தி செய்யப்பட்ட திட்டத்தில் எவ்வாறு ஒரு பாகமாக ஆகும்? முதன் முதலில் இக்கருத்தைப் பொது ஜனங்களின் முன்பு சமர்ப்பித்து அதற்காக ஒருமகாநாட்டைக்கூட்டினவர் மகாத்மாகாந்திதான் என்பது இத்திட்டத்தின் ஒரே குற்றம். இத்திட்டம் எவ்வாறு பலனளிக்கிறது என்று டாக்டர் ஜாகிர்ஹுஸேனின் நேர்பார்வையில் டில்லி ஜாமியா—மிலியாவில் பரீட்சை செய்து பார்க்கப்பட்டது. இந்த நாட்டில் வேறு எங்கும் இவ்வளவு வெற்றிகரமாக இத்திட்டம் கையாளப்பட்டதா என்பது எனக்குத் தெரியாது.

இருப்பினும் காங்கிரஸ் அட்டூழியங்களில் அதுவும் ஒன்ருக வைக்கப்பட்டிருந்தது. மத்திய மாகாணத்தில் வித்தியாமந்திர் திட்டம் என்ற இயக்கத்திற்கு வேண்டுமென்றே எதிர்ப்பு இருந்தது என்பதைக் குறிப்பிடவேண்டும். 1939 பிப்ரவரி 7-ம் தேதி முஸ்லிம் சட்டசபை அங்கத்தினர்களைப் பிரதமர் வரவழைத்து ஒரு மகாநாடு கூட்டினுர். அதற்கு அகில இந்திய முஸ்லிம் லீக் அமைச்சர் நவாப்ஜாடா லியாகத் அலிகானும் வந்திருந்தார். பிரதமர் வித்தியா மந்திர் திட்டத்தை விவரித்தார். ஜாதிமத வித்யாசமின்றி நாட்டில் எழுத்தறிவைப் பரப்புவதற்காக இத்திட்டம் ஏற்பட்டதென்றும் தனி மனிதர்களால் நன்கொடையாக அளிக்கப்பட்ட நிலத்தையும் பணத்தையும் கொண்டு நடத்தப்படுமென்றும் கூறினுர். இதற்கென்று ஒரு தனிச்சபை ரிஜிஸ்தர் செய்யப்பட்டது. அரசாங்கம் இதற்கு உதவிசெய்யுமென்றும் சொல்லப்பட்டது. முஸ்லிம்களும் இதைப் போன்று தனியாக ஒரு சபையை அமைப்பதுண்டானுல், தான் அதை வரவேற்பதாகவும் கூறினுர். நவாப்ஜாடா இந்தத் திட்டத்தை மதிஞ-துல்-இல்ம் திட்டமென்று அழைப்பதாகக் கூறினுர். பிரதமர் இந்தச் சபைக்கும், திட்டத்திற்கும் ஆதரவு தருவதாக வாக்குறுதியளித்தார். வித்தியா மந்திர் திட்டத்தைப் பற்றிய புகார்களையும் இதர காங்கிரஸ் திட்டங்களைப் பற்றிய புகார்களையும் பிரதமரும் சட்டசபை முஸ்லிம் அங்கத்தினர்களும் அகில இந்திய முஸ்லிம்லீக் அமைச்சரும் யாவரும் கூடி ஒவ்வொன்ருகக் கவனித்தார்கள். ஓர் ஒப்பந்தமும் செய்யப்பட்டது. அதில் பிரதமரும் நவாப்ஜாடா லியாகத் அலிகானும் கையெழுத்திட்டனர். அதற்கெதிராகத் தொடங்கிய சத்தியாக்கிரகங்களும் வழக்குகளும் வாபஸ் வாங்கப்பட்டன. 1939 பிப்ரவரி 19-ல் அரசாங்கம் இதுபற்றி ஓர் அறிக்கை வெளியிட்டது. இருந்தாலும் காங்கிரஸ் அட்டூழியங்களின் வரிசையில் வித்யாமந்திர் திட்டமும் ஒன்ருக இருந்து வரலாயிற்று ;திரு. பஸ்லுல்ஹக் இத்தகராறைக் கிளப்பவும் நவாப் ஜாடா லியாகத் அலிகானும் பிரதமர் பண்டித சுக்லாவும் செய்துகொண்ட கண்ய ஒப்பந்தம், நவாப் ஜாடாவின் அனுமதியோடு அரசாங்கத்தாரால் 1939 டிஸம்பரில் அதாவது காங்கிரஸ் மந்திரிசபை ராஜிநாமா செய்து சுமார் ஒரு மாதகாலத்திற்குப் பின்பு வெளியிடப்பட்டது. 1939 டிஸம்பர் 22-ம் தேதி வெளியான நாகப்பூர் ஹிதவாதா பத்திரிகையில் இதைக் காணலாம்.

ஆங்காங்கு இந்து முஸ்லிம் கலகங்கள் நிகழ்ந்தனவென்பது காங்கிரஸ் மீது சுமத்திய மற்ருெரு முக்கிய குற்றச்சாட்டாகும். துரதிருஷ்டவசமாக இவை நடைபெறுகின்றன. காங்கிரஸ் மந்திரிசபை அமைப்புக்கு முன்னுமிருந்தன, பின்னும் கிளம்பின. மின்டோ மார்லி சீர்திருத்தங்களின் மூலம் தனித்தொகுதிகள் புகுத்தப்பட்ட பின்பே இக்கலவரங்கள், நெடுகலும் பரவி அடிக்கடி தோன்றியிருக்கின்றன என்பதை மறுக்க முடியாது. குறிப்பிட்ட சில சம்பவங்களைப்பற்றி நடவடிக்கை யெடுப்பது சாத்தியமல்ல. நியாய மன்றங்களுக்குச் சென்ற சம்பவங்களின்மீது நியாயமன்றங்கள் தகுந்த நடவடிக்கை எடுத்திருக்கும். இருப்பினும் திரு. துரானி பீராரில் நடந்த ஒரு சம்பவத்தைப் பெரிதாக்கி, உயர்நீதி மன்றத்தின் தீர்ப்பிலிருந்து மேற்கோள் எடுத்துக்காட்டி, அம்மாகாணப் பிரதமரை 'ஒன்று தற்கொலை செய்துகொள்ள வேண்டும் அல்லது பொது வாழ்விலிருந்து விலகிக்கொள்ள வேண்டு' மென்று கூறுகிருர். அவ்வழக்கு சம்பந்தமாக சில விஷயங்களைச் சொல்லவேண்டும். ஓர் இந்துப் பிரமுகர் கொல்லப்பட்டார். மற்றும் சிலர் காயமடைந்தனர். போலிஸ் டி. ஐ. ஜியாக இருந்த பி. ஜி. டெய்லர் என்ற ஐரோப்பியர் மேற்

பார்வையில் புலன் விசாரிப்பு நடந்தது. குற்றம் சாட்டப்பட்டவரது விருப்பத் திற்கிணங்க கலகம் நடந்த ஜில்லாவில் வழக்கு விசாரணை செய்யப்படாமல் நாகபுரியில் வழக்கு விசாரிக்கப்பட்டது. இந்திய ஸிவில் சர்வீஸைச் சேர்ந்த ஐரோப்பியரான திரு. எம். என். கிளார்க் இதை விசாரணை செய்த செஷன்ஸ் ஜட்ஜு, நாகபுரி ஹைகோர்ட்டுக்கு மாற்றப்பட்டாராதலால் இவரை அனுபவ முள்ளவரென்று கொள்ளவேண்டும். வழக்கு விசாரணை மந்திரி சபைகள் ராஜிநாமா செய்ததன் பின்பு நடந்தது. காங்கிரஸ் மந்திரிசபை ராஜிநாமா செய்த அநேக மாதங்களுக்குப் பிறகு தீர்ப்பு அளிக் கப்பட்டது. ஒரு நீதிபதியின் தீர்ப்பு அப்பீலில் மற்றொரு நீதிபதியால் தள்ளப் படுவது நீதிமன்றங்களில் தினசரி நடக்கும் சம்பவமாகும். அப்படி இவ் வழக்கிலும் நடந்தது. இதில் பிரதமரைத் தாக்கியதொரு விஷயம் இருக்கிறது. அவர் ஒரு சமயம் பேசினார்; அப்பேச்சு புலன்விசாரணையைப் பாதித்ததாகச் சொல்லப்படுகிறது. அப்பேச்சு சட்டசபையில் கொண்டுவந்த ஒத்தி வைப்புப் பிரேரணையின் போது பேசப்பட்டது என்பதை ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும் 'கிடைத்த தகவல்களின்படி நடந்த விஷயத்தை நடந்தவாறு சொல் வதாகத்தான் அப்பேச்சு எழுந்தது. சம்பவம் நடந்த மூன்றே நாட்களுக்குப் பின் னர் இவ்விவாதம் நடந்தது நீதிமன்றத்திலும் வழக்கு இன்னும் எடுத்துக்கொள் ளப்படவில்லை. வகுப்புப் பகைமை கொடியதாக இருப்பது கண்டு பிரதமரும் சம்பவம் நடந்த இடத்திற்குச் சென்றார். தம்முடன் முன்னெச்சரிக்கையாக சட்டசபை அங்கத்தினர்களான மூன்று முஸ்லீம்களை அழைத்துக் கொண்டு சென்றிருந்தார். அவர்களில் ஒருவர் மாகாண முஸ்லீம்லீகின் அமைச்சர் கே. எஸ். அப்துல் ரஹ்மான்கான், கம்கான் என்ற இடத்தில் பொது மேடையிலும் பேசியிருக்கிறார். பிரதமர்மீது சுமத்திய குற்றம் என்னவென்றால் கோர்ட்டில் வழக்கு விசாரணையில் இருக்கும் போதே பிரதமர் சட்டசபை விவாதத்தில் இச்சம்பவத்தை முன்கூட்டியே திட்டமிட்டு ஈவிரக்க மின்றி செய்யப்பட்ட கொலையென்று வர்ணித்தாரென்பதே. கொலைச் செய்தி புலன் விசாரணையில் இருக்கும்பொழுதே இவ்வாறு சொல்லிவிட்டாராம். விவாதத்தின்போது முஸ்லிம் அங்கத்தினர்களும் இக்குற்றத்தைக் கொலை என்று கூறி மேலும் கடுமையான வார்த்தைகளில் கண்டித்தார்கள். அவ்விவாதத்தின் போதே கே. எஸ். அப்துர் ரஹ்மான்கான், பிரதமருடைய இது சம்பந்தமான நடத்தையை உயர்வாக மதித்துப் பேசினார்: 'கம்கானில் பிரதமரது பேச்சைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்தேன். அவருடைய உயர்ந்த கருத்துக்களைப் பின்பற்றி என்னுடைய நண்பர்களும் நடந்து இருந்தால் நன்றாக இருந்திருக்குமே என்று நினைக்கிறேன்.'[4] உயர் நீதிமன்றம் புலன் விசாரணையைக் குறைகூறியதால் பம்பாய் உயர் நீதிமன்றத்தின் நீதிபதி ஏ. எஸ். ஆர். மெக்லின் என்பவரை சர்க்கார் நியமித்து, போலிஸ் புலன் விசாரணை நடந்த விதத்தையும் வழக்குத் தயாரித்த முறையையும் பரிசிலனை செய்து அதில் ஏதாவது குறைபாடுக ளிருந்தால் அதைக் கண்டுபிடித்துக் குறைபாடுகளுக்குப் பொறுப்பாளிகளை எடுத்துச் சொல்லுமாறு கூறியது. முஸ்லிம்களைக் கொடுமைப்படுத்தியதாகக் குற்றச் சாட்டுகள் செய்யப்பட்டது என்ற தெரிகிறது. உடனே மத்ய மாகாண அரசாங்கம் அதைப்பற்றி விசாரிக்க ஜில்லா மாஜிஸ்திரேட் திரு. ஹில் என்பவரை நியமித்தது என்றும், அக் குற்றச்சாட்டுகள் ஆதாரமற்றவை என்று அவர் சொன்னதாகவும் நீதிபதி மெக்லின் சொல்லுகிறார். கொடுமைப்

4. C. P. Legislative Assembly Proceedings, 1939, pp. 307-8.

படுத்தியதாகக் கூறிய புகார்கள் உண்மையல்ல என்பது நீதிபதி மெக்லின் பரிசீலனைசெய்து கண்ட உண்மை. பொய்ச்சாட்சி கொண்டுவருவதற்கு போலீஸ் பொறுப்பாளியல்ல என அறிந்து போலீஸ்மீதிருந்த குற்றச்சாட்டைப் போக்கினர். முதல் நீதிமன்றத்தில் ஜயித்து அடுத்த நீதிமன்றத்தில் தோல்வி யுறும் ஒவ்வொரு வழக்குக்கும் பிரதமரைக் குற்றம் சாட்டுவதென்றால் நிர்வாகம் நடந்தமாதிரிதான். பிரதமர் ராஜிநாமா செய்துவிட்டு சாதாரண பிரஜை ஆனபிறகு அவருடைய செல்வாக்கு செஷன்ஸ் நீதிபதியைப் பாதித்திருக்கும் என்று சொல்லமுடியாது.

காங்கிரஸ் அட்டூழியங்களுக்கு ஹிந்தி-உருதுத் தகராறு இன்னொரு உதாரணமாகக் கொண்டுவரப்பட்டது. அத்தகராறு முற்றும்படி காங்கிரஸ் மந்திரிசபை ஒன்றுஞ் செய்துவிடவில்லை. உண்மையில் சமரசத்திற்குண்டான எல்லாக் காரியங்களையும் மந்திரிகள் மேற்கொண்டார்கள். சரியான காரியம் எதுவும் செய்வதற்குமுன் அவர்கள் ராஜிநாமா செய்துவிட்டார்கள்.

1937-லிருந்து நாளதுவரை வகுப்புப் பிரசினையின் வரலாற்றைக் கவனிப்போம். காங்கிரஸ் திரும்பத் திரும்ப சமரசத்திற்கு முன்வந்து முயன் றிருக்கிறது. முஸ்லீம் லீகோ, கோரிக்கைகளை உயர்த்திக்கொண்டே வந்திருக் கிறது. இடைநிற்கும் பிரிட்டிஷ் அரசாங்கம், அக் கோரிக்கைகளைச் சில சமயம் மறைமுகமாக ஆதரிப்பதும், சிலசமயம் கைவிடுவதுமாக நாட்டை மனவேதனையிலாழ்த்தி வந்திருக்கிறது. அட்டூழிய பீதியை எவ்வாறு உண்டாக்கி வளர்த்தார்கள் என்பதைக் கண்டோம். 1938-ல் மகாத்மா காந்தியும், அப்போது காங்கிரஸ் தலைவராயிருந்த சுபாஷ் சந்திரபோஸும், லீகின் தேவைகளென்ன என்பதை அறிய முயன்றார்கள். அறிந்துகொண்டால், அத்தேவைகளை நாட்டு மக்களும், காங்கிரஸும் ஆராய்ந்து கூடுமானல் அவைகளுக்கு உடன்படலாம். ஏனெனில், திரு. ஜின்னு கூறிவந்த 14 அம்ச திட்டத்தை பிரிட்டிஷ் சர்க்கார் தம் 1935-ம் வருஷத்திய அரசியல் சட்டத்தில் அநேகமாக அப்படியே சேர்த்துக்கொண்டு விட்டார்கள். 1935 ஆரம்பத்தில் காங்கிரஸ் தலைவரும் (இந்நூலாசிரியர்) திரு ஜின்னுவும் பேச்சுவார்த்தைகள் தொடங்கினர்கள். அப்பொழுது 1935-ம் வருஷத்திய சட்டம் நிறைவேற்றப் படவில்லை. கூட்டுத் தொகுதியின் அடிப்படையில் பேச்சு வார்த்தைகள் நடந்தன. சட்டம் நிறைவேற்றப்பட்டது. தனித்தொகுதிகள் மாத்திரமன்றி மற்ற அம்சங்களும் விட்டுக் கொடுக்கப்பட்டன. தனித் தொகுதி களையும் இதர அம்சங்களையும் லீக் விட்டுவிடுமென்று எதிர்பார்க்க முடியாது. தான் கோரிய பாதுகாப்புகள் எல்லாம் பெற்றிருந்தும் முஸ்லிம் பெரும்பான்மை மாகாணங்களில் அதாவது பஞ்சாப், சிந்து, எல்லைப்புறம் வங்காளம், மேலும் அஸ்ஸாம் இவைகளில் முஸ்லிம் மந்திரிசபைகள் ஆட்சி செய்தும்கூட, முஸ்லிம்கள் அடக்கி ஒடுக்கப்படுகிறார்கள் என்ற முடிவுக்கு லீக் வந்தது. அதற்கு மேலாக கவர்னருடைய விசேஷ அதிகாரம் மூலமாக அவர்களைப் பாதுகாக்கிறோம் என்று கூறிய வாக்குறுதிகளும், பாதுகாப்புகளும் பயனற்றவை, நம்பத்தகாதவை என்ற முடிவுக்கு லீக் வந்துவிட்டது. ஒன்று சரியானதாக இருக்கவேண்டும் இந்த முடிவு. அல்லது அவநம்பிக்கையினாலும் பயத்தினாலும் எழுந்த கற்பனைத் தோற்றமாக இருக்கவேண்டும். இந்த முடிவு சரியானதாக இருக்குமானல் முஸ்லிம் பெரும்பான்மையான மாகாணங்களைத் தனியாகப் பிரித்து சுதந்திர ராஜ்யங்களை ஏற்படுத்தினாலும்கூட அதுவும் முஸ்லீம்களுக்குப் போதுமான பாதுகாப்பு அளிக்காது. பின்னர் முஸ்லிம்

சிறுபான்மை மாகாணங்களைக் கவனிப்பது அப்புறமிருக்கட்டும். லீகின் முடிவுக்குக் காரணம் அவநம்பிக்கையும் பயமுமானுல் அவைகளைப் போக்கக் கூடியவன் காலதேவனன்றி வேறு யாருமில்லை. ஆனுல் லீகோ கோரிக்கை களுக்குமேல் கோரிக்கைகளாக அடுக்கிக்கொண்டே வந்திருக்கிறது. சமரசம் ஏற்படாதவாறு செய்திருக்கின்றது. மகாத்மா காந்தி, திரு. சுபாஷ் சந்திர போஸ், பண்டித ஜவாஹர்லால் ஆகிய தலைவர்கள் நீண்ட கடிதப் போக்கு வரத்தும் பேச்சுவார்த்தைகளும் திரு. ஜின்னுவுடன் நடத்தினுர்கள். ஆனுல் பலனைப் பார்த்தால், இரு சாராரும் இரு கட்சியின் பிரதிநித்துவ பலத்தைப் பற்றித்தான் பேசிக்கொண்டு இருந்தார்களே ஒழிய மேற் கொண்டு முன்னேற வில்லை என்பது தெரிய வரும். பேச்சுவார்த்தைகள் நடத்தும் தலைவர்களின் யோக்யதாம்சக் கணக்குப் பார்த்தார்கள். இந்திய முஸ்லிம்கள் அனைவரின் சார்பாகப் பேசுவதற்கு உரிமையுள்ளது முஸ்லிம் லீக் என்றும், காங்கிரஸ் இந்துக்கள் சார்பாகமட்டும் பேசவேண்டு மென்றும் திரு. ஜின்னு வற்புறுத்திவந்தார். காங்கிரஸ் இவைகளை ஒப்புக்கொள்ளும் நிலைமையில் இல்லை; அது முடியவும் முடியாது. பேச்சுவார்த்தைகளால் முஸ்லிம் லீகின் கோரிக்கைகள் இன்னின்ன என்பதைக் கூட ஓர் ஒழுங்கில் அறிய முடியவில்லை.

நாட்டில் இதர முஸ்லிம் ஸ்தாபனங்கள் இருக்கின்றன என்பதையும் அவைகள் லீகின் உரிமையை மறுக்கின்றன என்பதையும் மறந்துவிடக்கூடாது. அவ்வப்பொழுது பல பேர்களால் தோற்றுவிக்கப்பட்ட தேசிய முஸ்லிம் ஸ்தாபனங்களை நான் சொல்லக்கூடும்: ஊக்கமும் தியாகமும் காட்டிய அஹ்ரார்கள்; ஜமியத்-உல்-உலாமா தேசிய சுதந்திரத்திற்காகப் போரிட்டு இன்னலுற்றோர்கள், மத குருக்களென்றும் கல்விமான்களென்றும் மதிப்பிற் குரியோர்கள்; ஷியாக்கள் தங்களுக்கென்று தனி மாநாடு உடையவர்கள், லீகிற்கும் எதிராகத் தங்களது உரிமைகளைக் காப்பாற்றப் பாதுகாப்புக்கள் கோருகிறவர்கள்—திரு. ஜின்னுவும் லீகின் இதரத் தலைவர்களும் ஷியாக்களாக இருந்தும்கூட. மோமின்கள், முஸ்லிம்களில் பெரும்பான்மையாக இல்லா விட்டாலும் தங்களுக்கென்று ஒரு தனி ஜமியத் அமைத்திருக்கிறுர்கள்; வெளிப்படையாகவும் அடிக்கடியும் லீகின் உரிமையை மறுத்திருக்கின் றுர்கள்; குதம் ஏ ஏ வதன் (தாய்நாட்டின் சேவகர்கள்) என்று அமைந் துள்ள பலுசிஸ்தான தேசியவாதிகள்; வடமேற்கு எல்லை மாகாணத் தின் குதாய் கித்மத்கார்; வங்காள கிரிஷக் பிரஜா கட்சியினர்; அல்லாமா மஷ்ரூகியைத் தலைவராகக்கொண்ட காக்ஸார்கள் முதலியோர் பல பிரசினை களில் ஸ்கோடு உடன்பாடு கொண்டிருக்கவில்லை. இக்கட்சிகளின் பலம் பலவிதமாகச் சொல்லப்படுகிறது. இக்கட்சிகளைச் சேர்ந்தோர்கள், தாங்களே பெரும்பான்மை முஸ்லிம்களுக்குப் பிரதிநிதிகள் என்று கூறுகிறுர்கள். இதை லீக் மறுக்கிறது.

காங்கிரஸ் தன்னை ஓர் இந்து ஸ்தாபனமென்று ஒத்துக்கொள்ள முடியாது. அப்படிச் செய்வது தன் பிறப்பு வளர்ப்பை மறுப்பதாகும்; தன் வரலாற்றைப் பொய்யாக்குவதாகும்; எதிர்காலத்தை மோசம் செய்வதாகும். அரசியல் பொருளாதார சுதந்திரம் பொறுத்தமட்டில் இந்நாட்டின் எல்லா ஜாதிமதத்தைச் சேர்ந்த இந்தியர்களுக்கும் பிரதிநிதியாகவே தன்னைக் கூறி வந்திருக்கிறது. இந்துக்கள், தாங்கள் இந்துக்கள் என்ற தோரணையில் முஸ்லிம்கள் அல்லது வேறு ஜாதிமதத்தைச் சேர்ந்தவர்களோடு பொதுவாகச் சேர்ந்துகொள்ள முடியாத தனி நலன்களை உடையவர்களாக இருக்கலாம்.

அந்த நிலைமையில் இந்துக்களின் பிரதிநிதியாக காங்கிரஸ் இல்லை. இதர ஜாதி மதத்தினருக்கு காங்கிரஸ் பிரதிநிதியாக இருப்பதுபோல இந்தியர்கள் என்ற முறையில் இந்துக்களுக்கும் அது பிரதிநிதி. ஆகவேதான் 'ஓர் இந்துக்களுடைய ஸ்தாபனம்' என்ற வகுப்பு நிலைமையை அது ஏற்றுக்கொள்ள முடியாது. லீகின் கருத்தை காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளவில்லை என்றால் அது உண்மையைத்தான் கூறியது. இருந்தாலும் முஸ்லிம் லீகோடு வகுப்புப் பிரசினையைத் தீர்ப்பதற்குரிய வழிகளைக்காண ஆயத்தமாகவே அது இருந்ததெனினும் திரு. ஜின்னா அதை ஏற்றுக்கொள்ளவில்லை. ஆகவே பேச்சுவார்த்தைகள் ஆரம்பத்திலேயே தடைப்பட்டுவிட்டன.

மேற்கூறிய வாதத்திற் காதாரமாகச் சில மேற்கோள்கள் காட்டினால் போதும். திரு. ஜின்னா 1938 மார்ச்சு 3-ல் மகாத்மா காந்திக்கு எழுதுகிறார்: 'நாம் வந்திருக்கும் இந்தக் கட்டத்தில் ஒரு சந்தேகத்துக்கும் இடம் வைத்துக் கொள்ளக்கூடாது. நீங்கள் அகில இந்திய முஸ்லிம் லீகை, இந்திய முஸல்மான்களின் அதிகாரம்பெற்ற ஏகப் பிரதிநிதியாக ஒப்புக்கொள்கின்றீர்கள். மேலும் நீங்கள் காங்கிரசுக்கும் நாட்டில் உள்ள எல்லா இந்துக்களுக்கும் சார்பாக பிரதிநிதியாக இருக்கின்றீர்கள். இந்த அடிப்படையில்தான் நாம் மேலும் பேச்சுவார்த்தைகளைத் துவக்கி சமரஸத்துக்கு வழி காணவேண்டும்.'[5] திரு. சுபாஷ் சந்திரபோசுடன் பேசும் போது திரு. ஜின்னா சமரஸத்துக்குக் கூறிய திட்டமாவது: 'இந்திய முஸ்லிம்களின் அதிகாரம்பெற்ற ஸ்தாபனமான முஸ்லிம் லீகும், எல்லா இந்து அபிப்பிராயத்துக்கும் அதிகாரம்பெற்ற பிரதிநிதித்வ ஸ்தாபனமான காங்கிரசும் கீழ்க்கண்ட ஒப்பந்த ஷரத்துக்களுக்கு உடன்படுகின்றன. இதன்மூலம் இரண்டு பெரிய சமூகங்களும் இந்து முஸ்லிம் பிரசினையைத் தீர்க்கும்.' மேலும் ஆராய்ந்தபிறகு இந்தத் திட்டம் கீழ்க்கண்டவாறு அவரால் மாற்றப்பட்டது.

'காங்கிரசும் இந்திய முஸல்மான்களின் அதிகாரம் பெற்ற பிரதிநிதித்வ சபையான அகில இந்திய முஸ்லிம் லீகும் கீழ்க்காணும் இந்து முஸ்லிம் ஒப்பந்த ஷரத்துக்களை ஒப்புக்கொள்ளுகின்றன.' அகில இந்திய முஸ்லிம் லீகின் நிர்வாகக் கமிட்டி பின்கண்டவாறு ஒரு தீர்மானம் செய்தது: 'இந்திய முஸல்மான்களின் அதிகாரம் பெற்ற பிரதிநிதி என்ற முறையில்தான் முஸ்லிம் லீக் காங்கிரஸோடு இந்து முஸ்லிம் வகுப்பு சமரசத்தைப் பேசலாமே தவிர மற்றபடி சாத்தியமில்லை.' 1938 ஆகஸ்ட் 2-ல் திரு. சுபாஷ் சந்திரபோசுக்கு ஜின்னா எழுதியதில் இன்னும் சிறிது மேலே செல்கிறார்: 'கமிட்டி இந்து முஸ்லிம் பிரசினையைத் தீர்த்து சமரசம் செய்யப் போவதால் அதில் காங்கிரஸால் நியமிக்கப்பட்ட முஸ்லிம்களைச் சேர்த்துக்கொள்வது விரும்பத்தக்கது அல்ல என்று கவுன்ஸில் சுட்டிக் காட்டுகிறது.' ஜின்னாவும் மகாத்மா காந்தியும் சந்தித்துப் பேசி இந்து முஸ்லிம் பிணக்குகளைத் தீர்க்கவேண்டும் என்று சர். தேஜ்பகதூர் சாப்ரு 1941 பிப்ரவரியில் ஜின்னாவுக்கு யோசனை கூறியபோது அவருக்கு பிப்ரவரி 19உ எழுதிய பதில்: 'இந்து வகுப்பினர் சார்பாக திரு. காந்தியையோ அல்லது வேறு எந்த இந்துத் தலைவரையோ பார்ப்பதற்கு நான் எப்பொழுதுமே ஆயத்தமாக இணங்கி வந்திருக்கிறேன். ஹிந்து முஸ்லிம் பிரசினையைத் தீர்ப்பதற்கு என்னால் ஆன உதவி எல்லாம் செய்கிறேன்.'

இந்தக் கோரிக்கை புதியதென்று, பார்த்த உடனே தெரிந்துவிடும். ஏனென்றால் இவ்விதக் கோரிக்கை இதற்குமுன் வந்ததில்லை. லக்ஷ்மணபுரி

5. *Unity Talks*, p. 28.

ஒப்பந்தம் நடந்தபோது முஸ்லிம்களின் ஏகப் பிரதிநிதி லீக் ஒன்றுதான் என்ற அந்தஸ்து அதற்குக் கொடுக்கப்படவில்லை. இந்துக்களின் பிரதிநிதி காங்கிரஸ் என்ற அந்தஸ்தும் அதற்குக் கொடுக்கப்படவில்லை. காங்கிரஸ் தலைவர் ஜின்னாவோடு 1935-ல் பேச்சுக்கள் நடத்தியபொழுது இப்புதிய கோரிக்கை எழுப்பப்படவேயில்லை. காங்கிரசோடு செய்துகொள்ளும் ஒப்பந்தத்திற்கு ஹிந்து மகாசபையின் சார்பாக பண்டித மாளவியாவும் ஒப்புக்கொண்டால் தான் காங்கிரஸோடு ஒப்பந்தம்செய்ய முடியுமென்று ஜின்னா சொல்லி யிருந் தார். ஹிந்து மகாசபையின் சம்மதத்திற்குத் தாம் உத்தரவாதமளிக்க முடியாது என்று காங்கிரஸ் தலைவர் கூறியதால் அப்பேச்சு வார்த்தைகள் நின்றன.

மேலும் லீக் தன்னுடைய அந்தஸ்தை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தியது. காங்கிரசுக்கு இந்துஸ்தாபன அந்தஸ்தைச் சுமத்தக் கட்டாயப் படுத்தியது. அவ்வளவோடு இல்லாமல் இந்து முஸ்லிம் பிணக்குகளைத் தீர்ப்ப தற்குரிய மாநாட்டில் தன்னுடைய பிரதிநிதிகளோடு காங்கிரஸின் சார்பில் யார்தான் பேசலாம் என்று நிர்ணயிக்கக்கூடிய உரிமையும் தனக்கே வேண்டு மென்று கோரியது மேற்கண்ட வாசகங்களிலிருந்து தெளிவாய்ப் புலனாகும். தன்னுடன் பேச்சுவார்த்தைகளுக்கு உதவியாக மௌலானா அபுல்கலாம் ஆஸாதை மகாத்மா காந்தி விரும்பியபொழுது, திரு. ஜின்னா அதுகூடாது என்று சொல்லிவிட்டார்.

முஸ்லிம் லீக் எந்த விஷயங்களை ஆராய்ந்து முடிவு கட்டவேண்டும் என்று விரும்புகிறது என்பதை அறிந்துகொள்ளத் திரு. ஜின்னாவோடு பேச்சு வார்த்தைகளின், மூலமாகவும் கடிதப்போக்கு மூலமாகவும் பண்டித ஜவாஹர் லால் பலமுறை முயன்றார். எனினும் கண்டது தோல்வியே. எவ்விஷயங்கள் சம்பந்தமாக விவாதமும், முடிவும் வேண்டுமென்று தமக்குத் தெரிவிக்கும்படி பண்டித ஜவாஹர்லால் ஜின்னாவிடம் கேட்டுக் கொண்டபொழுது 1938 மார்ச்சு 17-ல் திரு. ஜின்னா தம் பதிலில் கூறியதாவது: 'ஒருகால் நீங்கள் பதினான்கு அம்சங்களைக் கேள்விப்பட்டிருக்கலாம்.' மேலும் 1938 ஜூலை 12-ம் தேதியில் ஸ்டேட்ஸ்மன் பத்திரிகையில் 'முஸ்லிம்களுக்குத் தோன்றுவது' என்ற தலைப்பில் வந்த கட்டுரையையும் 1938 மார்ச்சு 1௨ நியூடைம்ஸ் பத்திரிகையில் வந்த மற்றொரு கட்டுரையையும் குறிப்பிட்டிருந்தார். பண்டித ஜவாஹர்லால் நேரு அக்கட் டுரைகளை ஆராய்ந்து அதில் குறிப்பிட்டிருந்த விஷயங்கள் பற்றி காங்கிரசின் நிலைமை என்னவென்று எடுத்துக்காட்டி 1938 ஏப்ரல் 6-ந்தேதி கடிதம் எழுதினார். அதற்கு, 'நீங்களாகச் சில விஷயங்களை வகுத்துக் கொண்டீர் கள். அவைகளை என்னுடைய பிரேரணைகள் என்று என்மீதும் திணிக்கப் பார்க்கிறீர்கள்' என்று திரு. ஜின்னா திரும்பிப் பாய்கின்ற தோரணையில் 1938 ஏப்ரல் 12-ந் தேதி பதில் எழுதினார். லீக், காங்கிரசினிடம் எதை விரும்பு கிறது, எந்த விஷயங்களைப்பற்றி ஆராயவிரும்புகிறது என்பதுபற்றி ஒருவருக்குமே தெளிவாகத் தெரியாது.

1939 ஸெப்டம்பரில் யுத்தம் தொடங்கியபொழுது மகாத்மா காந்தியும் பண்டித ஜவாஹர்லால் நேருவும் மற்றொரு முயற்சி எடுத்தனர். பலனேதும் இல்லை. நம்பிக்கை யிழந்தவராய் பண்டித நேரு 1939 டிசம்பர் 16-ல் இவ்வாறு எழுதலானார்: 'துரதிர்ஷ்டவசமாக இந்தப் பிரசினைகளின் சரியான விவாதத்தின் ஆரம்பத்தைக்கூட நாம் எட்டியதாகத் தோன்றவில்லை. முன் நிபந்தனைகள் என்ற உருவத்தில் எத்தனையோ தங்கு தடைகள் குறுக்கிடு கின்றன........ இத் தங்கு தடைகள் தொடர்ந்துகொண்டே யிருப்பதால்,

அவைகளோடு புத்தம் புதியவைகளும் முளைத்துக்கொண்டிருப்பதால் அரசியல் நோக்கிலும் லட்சியங்களிலும் நம்மிடையில் உள்ள வேறுபாடுகளே தொல்லையின் உண்மையான காரணம் என்று நான் நினைக்கவேண்டியிருக்கின்றது.'

வேறுபாட்டு அம்சங்கள் இவைதாம் என்று விவாதத்திற்குக் குறிப்பிட்டு காங்கிரசிடம் சொல்லத் தயாராக இல்லாத லீகும் அதனுடைய தலைவரும், அதே விஷயங்களை ராஜப்பிரதிநிதியிடம் அவ்வப்பொழுது சொல்ல மனம் தயங்கவில்லை. இருக்கின்ற பிணக்குகளைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள பிரிட்டிஷ் அரசாங்கமும் பின்வாங்கத் தயங்கவில்லை. இந்நாட்டில் தனது நிலைமையை வலுப்படுத்துவதற்காக பிரிட்டிஷ் அரசாங்கமும் லீகுக்கு உதவவேண்டியிருந்தது. முஸ்லிம் சர்வகட்சி மகாநாடுதான், சமஷ்டித் திட்டத்தை வற்புறுத்தியது என்பது ஞாபகமிருக்கும். அத்தகைய திட்டம் 1935-ம் வருஷத்திய சட்டத்தில் அமைந்தபொழுது லீகும் முக்யமாக திரு. ஜின்னுவும் தங்களுடைய நோக்கில் முற்றிலும் மாறுபட்டுவிட்டார்கள். அரசியல் அமைப்பில் சமஷ்டிப்பகுதியைத்தான் மும்முரமாகத் தாக்கலானுர்கள். யுத்தகாலத்தில் சமஷ்டி அமைப்புமுறை நிறுத்திவைக்கப்படுமென்று ராஜப்பிரதிநிதி செப்டம்பர் 11-ல் கூறினுர். அகில இந்திய முஸ்லிம் லீகின் காரியக்கமிட்டி அச்செயலைப் பாராட்டியும் சமஷ்டித் திட்டத்தை முழுதும் கைவிடவேண்டுமென்றும் ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. இந்திய எதிர்கால அரசியல் அமைப்புப் பிரசினையை முழுதும் மறுபடியும் புதிதாக அலசி ஆராய்ந்து முடிவு கட்ட வேண்டுமென்று பிரிட்டிஷ் அரசாங்கத்தை வேண்டியது. 'மேலும் அகில இந்திய முஸ்லிம் லீகின் சம்மதமும் அங்கீகாரமும் இல்லாமல் இந்திய அரசியல் அமைப்பு முன்னேற்றம் சம்பந்தமாக எந்தவிதப் பிரகடனமும் செய்யக்கூடாது என்றும், லீகின் சம்மதமும் அங்கீகாரமும் இல்லாமல் பிரிட்டிஷ் அரசாங்கமும், பார்லிமென்டும் அரசியல் அமைப்பை முடிவாகத் தீர்மானிக்கக் கூடாது' எனவும் கேட்டுக்கொண்டது.

1939 டிசம்பர் 23-ல் லின்லித்கோ பிரபு அதற்குப் பதில் எழுதினுர்: 'இந்திய அரசியல் வளர்ச்சியின் வெற்றிக்கும், உறுதிக்கும் முஸ்லிம் வகுப்பின் திருப்தி எவ்வளவு அவசியமானது என்பதைப்பற்றி அரசாங்கம் தவறுதலாக ஒன்றும் நிதானித்துவிடவில்லை. இந்தியாவில் உங்களுடைய வகுப்பின் நிலைமையே உங்களுடைய கருத்துக்களுக்கு மிகுந்த செல்வாக்குக் கொடுத்திருக்கிறது. உங்களுடைய கருத்துக்கள் அலட்சியப்படுத்தப்படும் என்ற பயமே உங்களுக்குத் தேவையில்லை.' ராஜப்பிரதிநிதியைத் திரு. ஜின்ன 1940 பிப்ரவரி 6-ல் பேட்டிகண்டார். அதுபற்றி வெளிவந்த அரசாங்க அறிக்கை கூறியது: 'எல்லாச் சிறுபான்மைகளின் சட்டபூர்வமான நலன்களைக் காப்பாற்றவேண்டிய அவசியத்தை அரசாங்கம் நன்கு உணர்ந்திருக்கிறது. இவ்விஷயங்களின் முக்யத்துவம் கவனிக்கப்படாதோ என்ற பயம் வேண்டாமென்று அவருக்கு வைஸ்ராய் வாக்குறுதியளித்தார்.' எனினும் இதுவும் முஸ்லிம் லீகைத் திருப்தி செய்யவில்லை. மேற்கண்ட அறிக்கையை எடுத்துக்காட்டி லீக் காரியக்கமிட்டியின் நோக்கத்தைத் தெளிவுபடுத்தித் திரு. ஜின்ன ராஜப்பிரதிநிதிக்கு 1940 பிப்ரவரி 23-ல் கடிதம் எழுதினுர்: 'முஸ்லிம் லீகின் வேண்டுகோளுக்கு உங்கள் பதில் திருப்தியளிக்கவில்லை என்று நான் வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன். இந்தியாவில் உள்ள 9-கோடி மக்களைக் கலந்துகொள்வது, ஆலோசனை கேட்பது என்ற நிலைமையில்

தான் வைத்திருக்கிறீர்கள். பிரிட்டிஷ் இந்தியாவின் வருங்காலத்தையும் விதியையும் நிர்ணயிக்கக்கூடிய அதிகாரத்தை கிரேட் பிரிட்டன் தன் கையிலேயே வைத்துக் கொண்டு விட்டது. இந்த நிலைமையை நாங்கள் ஏற்றுக் கொள்ளமுடியாது என்று கூறுகிறோம்.' 'தங்களுடைய அங்கீகாரமும் சம்மதமும் இல்லாமல் எந்தக் கட்சியோடும் இந்தியாவின் வருங்கால அரசியலையாவது இடைக்கால ஏற்பாட்டையாவது செய்வதாகச் சொல்லமாட்டோம்' என்று தெளிவான உறுதியளிக்கவேண்டும் என்று அவர் வற்புறுத்தினர். பிரிட்டிஷ் அரசாங்கம் ராஜப் பிரதிநிதி மூலம் மற்றொரு முயற்சி செய்தது. இந்தியா மந்திரி பிரபுக்கள் சபையில் 1940 ஏப்ரல் 1-ம் தேதி ஓர் அறிக்கை வெளியிட்டார். அதை ராஜப் பிரதிநிதி இன்னொரு கடிதத்தின் மூலமாக ஜின்னாவுக்குத் தெரிவித்தார். அதாவது 'இந்தியாவிலுள்ள எல்லாக் கட்சிகளோடும் நலன்களோடும் கலந்து அரசியல் அமைப்பைக் கவனிப்பது என்று மன்னரது அரசாங்கம் கொடுத்த வாக்குறுதிக்கு பேச்சு வார்த்தைகள் மூலமாகக் காரியத்தை முடிப்பது என்பது அர்த்தமே ஒழிய சர்வாதிகாரத்தினால் அல்ல. எத்தனையோ இந்தியர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் ஆர்வத்தை மூட்டிய ஒன்றுபட்ட இந்தியா என்ற லட்சியம் கைகூட வேண்டுமென்றால் எல்லா வகுப்பினரிடையேயும் போதுமான அளவில் அதற்குச் சம்மதம் வேண்டுமென்பது தெளிவு. இந்த நாட்டில் உள்ள எந்த அரசாங்கமோ பார்லிமெண்டோ வம்படியாக மன்னரின் 8-கோடி இந்தியப் பிரஜைகளின்மீது, அவர்கள் சமாதானத்தோடும் திருப்தியோடும் வாழமுடியாத ஓர் அரசியலைச் சுமத்த முயலும் என்று என்னால் நம்பமுடியவில்லை.' இவ்விளக்கத்தினாலும் முஸ்லிம் லீகின் காரியக் கமிட்டியும் திருப்தியுறவில்லை. திரு. ஜின்னா 1940 ஜூன் 25-ம் தேதி மறுபடி ராஜப் பிரதிநிதியைக் கண்டு பேசினர். 1940 ஜூலை 1உ, தான் அவரோடு விவாதித்த விஷயங்களைப் பற்றிய ஒரு குறிப்பும் கொடுத்தார். அக்குறிப்பிலடங்கிய விஷயங்கள் :

1. இந்தியப் பிரிவினையைப்பற்றியும் வடமேற்கு வடகிழக்குப் பகுதிகளில் முஸ்லிம் ராஜ்யங்கள் அமைப்பது பற்றியும் லாகூர் தீர்மானம் வகுத்த ஆதாரமான தத்துவங்களைப் பாதிக்கக்கூடிய முறையில் ஒருவித பிரகடனமோ அறிக்கையோ மன்னரது சர்க்காரால் வெளியிடப்படக்கூடாது.

2. முஸ்லிம் இந்தியாவின் அங்கீகாரமும் சம்மதமும் இல்லாத இடைக்கால ஏற்பாடோ முடிவான அரசியல் அமைப்போ ஏற்படுத்த மாட்டோமென்று திண்ணமான, தெளிவான வாக்குறுதி அளிக்கவேண்டும்.

3. முஸ்லிம் தலைமையோடு உறவு கொண்டு மத்திய, மாகாண அரசாங்கங்களில் சம பங்காளியாக நடத்துவதற்கு பிரிட்டிஷ் அரசாங்கம் தயாராக இருந்தால் ஒழிய யுத்த முயற்சிகளைத் துரிதப்படுத்துவதும் இந்திய மூல பலங்களை ஒன்று திரட்டுவதும் இயலாத காரியம். சுருங்கச் சொல்லுமிடத்து முஸ்லிம் இந்தியாவின் தலைமையை சம பங்காளியாக முழுதும் நம்பவேண்டும். மத்திய, மாகாண அரசாங்கங்களில் முஸ்லிம் இந்தியத் தலைமைக்கு அதிகாரத்திலும் ஆட்சியிலும் சமபங்கு இருக்கவேண்டும்.

4. யுத்த காலத்தில் தற்காலிகமாகக் கீழ்க்கண்ட நடவடிக்கைகள் எடுக்கவேண்டும்.

(அ) தற்கால அரசியல் அமைப்புக்குள்ளாகவே ராஜப்பிரதிநிதியின் நிர்வாக சபையை விஸ்தரிக்க வேண்டும். காங்கிரஸ் அதில் வருமானால் இந்துப் பிரதிநிதிகளின் எண்ணிக்கைக்குச் சமமாக முஸ்லிம் பிரதிநிதிகளின்

எண்ணிக்கை இருக்கவேண்டும். காங்கிரஸ் வராவிட்டால் அதிகப்படியான அங்கத்தினர்களில் முஸ்லிம்கள் பெரும்பான்மையோராக இருக்கவேண்டும். ஏனெனில் முழுக் காரியத்தையும் பொறுப்பையும் முஸ்லிம்கள் வகிக்க வேண்டியது ஏற்படும்.

(ஆ) ராஜப் பிரதிநிதியைத் தலைவராகக் கொண்ட 15 பேர்களுக்குக் குறையாத அங்கத்தினர்களைக் கொண்ட யுத்த கவுன்சிலை ஏற்படுத்த வேண்டும். காங்கிரஸ் அதில் கலந்துகொள்ளுமானால் இந்துக்களுக்குச் சமமான ஸ்தானங்கள் முஸ்லிம்களுக்குக் கொடுக்கப்படவேண்டும். இல்லாதுபோனால் முஸ்லிம்கள் பெரும்பான்மையோராக இருக்கவேண்டும்.

(இ) கடைசியாக, உத்தேசிக்கப்பட்டிருக்கிற யுத்த கவுன்ஸிலிலும், கவர்னர் ஜெனரலின் நிர்வாகக் கவுன்ஸிலிலும் நியமிக்கப்படும் முஸல்மான் பிரதிநிதிகளும் கவர்னர்களுடைய ஆலோசகர்களும் முஸ்லிம் லீகால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக இருக்கவேண்டும்.

முஸ்லிம் லீக் தன்னிடம் அதிகாரத்தை மாற்றவேண்டுமென்று கோரியிருப்பதை ராஜப்பிரதிநிதி உணராமலிருக்கமுடியாது. 1940 ஜூலை 6-ம் தேதி அவருக்கு எழுதிய பதிலில் முஸ்லிம்களின் நலன்களைப் பாதுகாக்கக்கூடிய போதுமான அளவு பிரதிநிதித்வம் இருக்கவேண்டும் என்பதை ஒப்புக்கொண்டார். ஆனால் 'பொறுப்பு' அதிகமாகவோ குறைவாகவோ ஒரு குறிப்பிட்ட வகுப்பைத்தான் சார்ந்ததாகும் என்ற வார்த்தைக்கு இடமேயில்லை என்று கூறினர். 'கவுன்சிலோடு கூடிய கவர்னர் ஜெனரலுக்குத்தான் பொறுப்பு முழுதும் உண்டு. மேலும் கவர்னர் ஜெனரலின் கவுன்ஸிலுக்கு அங்கத்தினர்களை நியமிக்கவேண்டிய அதிகாரம் இந்தியா மந்திரியைச் சேர்ந்ததாகும். கவர்னர் ஜெனரலைக் கலந்துகொண்டு (யான் யாரை நியமிப்பது என்று) மன்னருக்குச் சிபாரிசு செய்வது சட்டத்தினுலும் வழக்கத்தினுலும் ஏற்பட்ட சம்பிரதாயமாகும். கவர்னர் ஜெனரலது கவுன்ஸிலின் அங்கத்தினர்கள் எந்தக் கட்சியினுலும் நியமிக்கப்பட்டவர்களாக இருக்க முடியாது. என்னுடைய நிர்வாகக் கவுன்சிலுக்கு முஸ்லிம் அங்கத்தினர்களை நியமிக்கின்ற பொறுப்பை முஸ்லிம் லீகுக்கு விடமுடியாது. ஆனல் நீங்கள் குறிப்பிட்டுள்ள நிலைமையில் நீங்கள் கொடுக்கும் எந்த யோசனையும் நன்கு கவனிக்கப்படமாட்டாதென்று பயப்படவேண்டாம்.'

1940 ஆகஸ்ட் 7-ல் ராஜப்பிரதிநிதி சர்க்காரின் கொள்கையை விளக்கி ஓர் அறிக்கை வெளியிட்டார். 1931-ம் வருஷத்திய இந்திய அரசாங்கச் சட்டத்தைப் பரிசீலனை செய்வது பற்றி இதற்கு முன்பு சர்க்கார் விடுத்த அறிக்கைகள் அதில் குறிப்பிடப்பட்டிருந்தன. இந்திய தேசீய வாழ்க்கையைச் சேர்ந்த பலம் பொருந்திய பெரிய கட்சிகள் எதிர்க்கக்கூடிய எந்த அரசாங்க முறையையும் ஏற்படுத்தி அதனிடம் இந்திய நன்மையையும் சமாதானத்தையும் காக்கும்பொருட்டு அரசாங்கம் விடமுடியாது. எந்தக் கட்சியையும் கட்டாயப்படுத்தி எந்த அரசாங்கத்திற்கும் அடங்கியிருக்கச் செய்ய முடியாது என்று கூறியிருந்தார். சண்டைக்குப் பிறகு இந்தியப் பிரதிநிதிகளை வரவழைத்துப் புதிய அரசியல் அமைப்பை ஏற்படுத்த ஒரு கழகம் ஏற்படுத்தவும் வாக்குறுதி அளித்தார். கவர்னர் ஜெனரலின் நிர்வாகக் கவுன்ஸிலுக்கு இந்தியப் பிரதிநிதிகளை அழைக்கப்போவதாகவும் யுத்த ஆலோசனை சபை ஒன்று ஏற்படுத்தப் போவதாகவும் கூறினர். பார்லிமெண்ட் காமன்ஸ் சபையில் இந்திய விவாதத்தின்போது அமெரி பேசியதாவது: 'இந்திய அரசியலில் ஏற்பட்ட

முட்டுக்கட்டை ஒரு பக்கம் அரசாங்கத்துக்கும் மறுபக்கம் ஒன்றுபட்ட இந்திய மக்களுக்கும் இடையில் ஏற்பட்டதல்ல. ஆகவே மன்னரது அரசாங்கமும் இந்தியப் பிரதிநிதிகளும் கூடித் தீர்த்துக்கொள்ளக்கூடிய எளிய பிரசினை அல்ல. இது பல கட்சிகளும்கூடி ஒரு முடிவுக்கு வரவேண்டிய விஷயம். பல கட்சிகளில் மன்னரது சர்க்காரும் ஒன்ருகும்.' முஸ்லிம்களும் தாழ்த்தப் பட்டோரும் இந்திய மன்னர்களும் இதரக் கட்சிகளைச் சேர்ந்தோர் என்று குறிப்பிட்டார். அதே சமயத்தில் இந்தியா உலகத்தில் தனிப்பட்ட தேச மென்றும் மக்களுக்கெல்லாம் பொதுவான வரலாற்றையும் புராதன நாகரிகத்தையும் உடையதென்றும் கூறினர். இவ்விதமாக வகுப்பு முக் கோணத்தின் மூன்ருவது பக்கம் மெதுவாக—ஆனுல் உறுதியாக விரிவதைக் காண்கிருேம். ஒரு பக்கம் ஜனநாயகக் கொள்கைகளுக்கு உதட்டளவு விசுவாசம் காட்டப்படுகிறது. மறுபக்கம் 'இந்திய தேசீய வாழ்விலுள்ள கட்சிகள்' அரசாங்கத்தின் சௌகரியத்திற்குத் தகுந்தபடி முதுகில் தட்டிக் கொடுக்கப்படுகின்றன. அல்லது முகத்தில் பார்த்து அறையப்படுகின்றன. அரசியல் முன்னேற்றத்திற்குச் சரியான அளவு ஒற்றுமை வேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறது. அரசியல் முட்டுக்கட்டை பிரிட்டனுக்கும் இந்தியா வுக்கும் ஏற்பட்டதாகச் சொல்லப்படாமல் பிரிட்டன் உள்பட பல கட்சிகளுக் கிடையே ஏற்பட்டதாகவும் சொல்லப்பட்டது. அரசியல் சீர்திருத்தம் செய் வதற்கு முன்னுல் தன்னுடைய அங்கீகாரமும் சம்மதமும் பெறவேண்டு மென்று முஸ்லிம் லீக் கோரும்பொழுது அதற்குப் பொதுப்படையான பிரகடனத்தை விடுத்து மழுப்புகிறது.

அரசாங்கச் சபைகளுக்கு முஸ்லீம் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் தனி அதிகாரம் தனக்கே வேண்டுமென்று முஸ்லீம் லீக் கேட்கும்பொழுது உடனே தெளிவாக மறுக்கப்படுகிறது. வடமேற்கு வடகிழக்குப் பகுதிகளைப் பிரித்துத் தனி ராஜ்யங்கள் அமைக்க வேண்டுமென்று முஸ்லிம் லீக் கேட்கும் பொழுது உலகத்தில் இந்தியா ஒன்றுபட்ட ஒரு முழு நாடு என்றும் இந்தியர் களின் சரித்திரம் பொதுவானது என்றும் புராதன பொது நாகரிகத்தை ஒட்டி வந்தது அந்தச் சரித்திரமென்றும் சொல்லப்படுகிறது. லீக் காரியக்கமிட்டி ராஜப்பிரதிநிதியின் அறிக்கையைப் பரிசீலனை செய்து, வருங்கால அரசியலைப் பொறுத்தமட்டில் அறிக்கை திருப்திகரமாக இருக்கிறதென்றும் நிர்வாகக் கவுன்ஸில் விஸ்தரிப்பு விஷயம்மட்டும் அதிக அதிருப்திகரமாக இருப்பதாகவும் கூறியது. லீக் தேர்ந்தெடுத்த நால்வரில் இருவரை நிர்வாகக் கவுன்சிலில் எடுத்துக்கொள்வதாக ராஜப்பிரதிநிதி கூறியது, அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அதே போன்றுதான் ஆலோசனை சபை விஷயத்திலும். மேலும் தொடர்ந்து நடத்திய பேச்சுவார்த்தைகள் பலனளிக்கவில்லை. 1940 செப்டம்பர் 29உ ஜின்னு அகில இந்திய முஸ்லிம் லீக் கூட்டத்தில், பிரிட்டிஷ் அரசாங்கம் அதிகாரத்தை மாற்ற விரும்பவில்லை என்று கூறினர். ஒரு தேசீய இனமான ஒன்பதுகோடி மக்களை பிரிட்டிஷ் அரசாங்கம் உதாசீனப்படுத்துகிறது என்றும் கூறினர். இவ்வாருக அரசாங்கத்துக்கும் முஸ்லிம் லீகுக்கும் இடையே ஏற்பட இருந்த "யுத்த காண்டிராக்டு" அந்தசமயம் நிறைவேருமற் போய் விட்டது.

அவ்வருஷக் கடைசியில் பேச்சு சுதந்திர உரிமையை நிலைநாட்ட காங்கிரஸ் தனி நபர் சாத்வீகச் சட்டமறுப்பைத் தொடங்கியது. இந்த இயக்கம் முஸ்லிம்களுக்கோ அல்லது லீகுக்கோ எதிராக இல்லை என்பது

வெளிப்படை. இவ்வியக்கத்தினுல் எல்லோருக்கும் நன்மை ஏற்படுவதுபோல முஸ்லிம்களுக்கும் நன்மை ஏற்படும். இருப்பினும் இவ்வியக்கம் முஸ்லிம் களுக்கு எதிரானதாக முஸ்லிம் லீக் கருதியது. அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்சில் கூட்டம் கூடி, 'சத்யாக்கிரக இயக்கத்தைத் தொடங்கி காந்தி மும்முரமாக நடத்துவதன் உண்மையான நோக்கத்தைப் பற்றியும் கருத்தைப் பற்றியும் எங்களுக்குச் சந்தேகமே இல்லை ; முஸ்லிம்களின் கோரிக்கையைப் பாதிக்கக்கூடிய அளவில் காங்கிரசுக்கு பிரிட்டிஷ் அரசாங்கம் சலுகை ஏதுவும் காட்டக்கூடுமானுல் அதை முஸ்லிம் லீக் தனது சர்வ சக்தியோடும் எதிர்க்கும்' என்று ஒரு தீர்மானத்தில் கூறியது. 'மேலும் இந்நாட்டு முஸல்மான்களின் நலன்களையும் உரிமைகளையும் பாதுகாக்க, போராட்டத்தில் கலந்துகொள்ள வேண்டிய நிலைமை ஏற்பட்டால் அப்போது முஸ்லிம் லீக் சிறிதும் தயங்காது' என்றும் பிரிட்டிஷ் சர்க்காருக்குத் தெரிவித்தது.

முஸ்லிம் லீகின் அடுத்த கூட்டம் 1941 ஏப்ரலில் சென்னையில் கூடியது. லீகின் லட்சியம் பாகிஸ்தானை அடைவது என்று அதன் விதிகள் மாற்றி அமைக்கப்பட்டன.

பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் லீகுக்கும் நடந்துவந்த பேரத்தின் அடுத்த கட்டம் கிரிப்ஸ் திட்டத்தின்போது காணப்படுகிறது. 1942 மார்ச்சில் பிரிட்டன் யுத்த மந்திரிசபையைச் சேர்ந்த சர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ், அரசாங்கத்தின் கொள்கைபற்றிய பிரகடனத்தையும் ஒரு கோரிக்கையையும் கொண்டுவந்தார். இதர டொமினியன்களோடு சம அந்தஸ்துப்பெற்ற ஓர் இந்திய யூனியனை ஏற்படுத்துவது பிரகடனத்தின் நோக்கம். அதில் இந்தியாவுக்குப் புதிய அரசியலை எப்படி ஏற்படுத்துவதென்பது வகுக்கப்பட்டிருந்தது. பிரிட்டிஷ் அரசாங்கமும் புதிய அரசியலை அமுலுக்குக் கொண்டுவருவதாக வாக்குறுதி அளித்தது. எந்த பிரிட்டிஷ் இந்திய மாகாணமும் புதிய அரசியலில் விரும்பி னுல் சேரலாம், விரும்பாவிட்டால் தன்னுடைய அரசியல் அந்தஸ்தோடு பிரிந்திருக்கலாம். இஷ்டப்பட்டபோது அவை யூனியனில் வந்து சேரலா மென்பதற்கும் இடம் விடப்பட்டிருந்தது. இந்திய யூனியனில் சேர விரும்பாத மாகாணங்களுக்கு வேருெரு புதிய அரசியல் அமைப்பை ஒப்புக்கொள்ளவும் பிரிட்டிஷ் அரசாங்கம் தயாராக இருந்தது. நாட்டின் ஆட்சியில் பங்கெடுத்துக் கொள்வதற்கு இந்தியத் தலைவர்கள் அழைக்கப்பட்டார்கள். ஆனுல் இந்தியப் பாதுகாப்பின்மீதுள்ள அதிகாரமும் பிடிப்பும் இந்திய அரசாங்கத்தின் கையிலேயே இருக்கும் என்றிருந்தது.

பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள எந்த மாகாணமும் அகில இந்திய யூனிய னில் இருந்து பிரிந்து போகக்கூடிய உரிமையை இப்பிரகடனம் அளித்தது. இந்திய யூனியனுக்குக் கட்டுப்படாத முஸ்லிம் ராஜ்யங்களை ஏற்படுத்துவது என்ற முஸ்லிம் லீகின் கோரிக்கையை அப்படியே ஏற்றுக்கொண்டது. இந்திய ஒற்றுமையைக் குலைக்கவந்த திட்டம் என்ற காரணத்தினுல் காங்கிரஸ் காரியக் கமிட்டி இத்திட்டத்தை நிராகரித்திருக்கலாம். ஆனுல் அவ்வாறு செய்யவில்லை. 'எந்த மக்களையும் அவர்களுடைய உறுதியான இச்சைக்கு விரோதமாக கஷ்டப்படுத்தி இந்திய யூனியனில் சேரச்சொல்வது நினைக்கக்கூட முடியாத விஷயமென்றும், ஆனுல் இந்திய ஒற்றுமையைச் சீர்குலைப்பது அனைவருக்கும் பெரும் தீங்கிழைப்பதாகும்' என்றும் அது கூறியது. இந்தியப் பாதுகாப்பை இந்தியர் பொறுப்பில் விட்டுவிட மறுப்பதால் கிரிப்ஸ் கொண்டுவந்த இத்

திட்டம் வெறும் செப்பிடுவித்தை என்று கூறி காங்கிரஸ் நிராகரித்தது. காங்கிரஸ் காரியக்கமிட்டி கிரிப்ஸ் திட்டத்தை நிராகரித்த விஷயம் வெளி வரும்வரை காத்திருந்த முஸ்லிம் லீக் காரியக்கமிட்டி, கிரிப்ஸ் திட்டம் அமைந் திருக்கும்விதம் தன்னுல் ஏற்றுக்கொள்ளத் தக்கதாக இல்லை என்று தீர்மானம் செய்தது; பாகிஸ்தான் அமைப்பது சாத்தியம் என்பதை உணர்ந்த தற்காக வந்தனம் தெரிவித்தது. ஆனுல் இந்துக்களும் முஸ்லிம்களுமாகிய இரு தேசீய சமுதாயங்களை ஓர் இந்திய யூனியனில் வற்புறுத்திவைப்பது அவ்விரு மக்களின் சமாதானத்துக்கும் சந்தோஷ வாழ்வுக்கும் உகந்ததல்ல, நேர்மையல்ல என்று தனது முடிவைத் தெரிவித்தது. ஒன்றுக்கு மேற்பட்ட பல யூனியன்களை அமைப்பதை இத்திட்டம் பகற்கனவாக்கி யிருக்கிறது என்றும் கூறியது. தனித் தொகுதிகளின் மூலம் தனது பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கக்கூடிய உரிமை கொண்டிருக்கும் முஸ்லிம் களுக்கு அவ்வுரிமையை அரசியல் நிர்ணயசபைத் தேர்தலில் வழங்கவில்லை என்றும் குற்றம் சாட்டியது. யூனியனில் சேருவதா இல்லையா என்பதை ஒரு மாகாணம் எந்த விதத்தில் தீர்மானிக்க வேண்டும் என்றிருக்கும் முறை சரியல்லவென்று கூறியது. முஸல்மான்கள் பெரும்பான்மையாக இருக்கக் கூடிய மாகாணங்களில் வயதுவந்த எல்லோரிடமும் பொதுஜன வாக்கு எடுக் காமல் முஸல்மான்களிடம் மாத்திரம் எடுக்க வேண்டுமென்று கோரியது. அப்படியில்லாவிட்டால் அவர்களுக்குரிய சுய நிர்ணய உரிமையை மறுப்ப தாகும். எந்த மாகாணமும் இந்திய யூனியனில் இருந்து பிரிந்துபோகும் உரிமையை பிரிட்டிஷ் அரசாங்கம் அளித்துவிட்டது. சட்டசபையில் உள்ள நூற்றுக்கு அறுபதுபேர் சம்மதமளித்தால் பிரிந்து செல்லலாம் என்றும் இத்தகைய பெரும்பான்மை கிடைக்காதபொழுது சிறுபான்மையின் வேண்டு கோளின்பேரில் ஆண் மக்களிடையே சர்வஜன வாக்கெடுத்து முடிவு செய்வ தென்றும் சொல்லப்பட்டிருந்தது. சட்டசபை வாக்குகளைக் கொண்டு முஸல் மான்களின் உண்மையான அபிப்ராயத்தை அறிய முடியாதென்றும் முஸல் மான்களுடைய சர்வஜன வாக்கு ஒன்றின் மூலமாகத்தான் தீர்மானிக்க வேண்டு மென்றும் லீக் வற்புறுத்திக் கூறியது. சிறுபான்மைகள், வங்காளத்திலும் பஞ்சாபிலும் உள்ளதுபோல 45 சத விகிதத்தினராய் இருந்தபோதிலும் அவர் களைப் புறக்கணிக்க வேண்டும்; இந்திய ஒற்றுமையைச் சிதறடிக்கக்கூடிய இந்த முக்யமான பிரசினையை முடிவு கட்டுவதில் அவர்களுடைய அபிப்ராயத் திற்கு ஒரு சிறிதும் செவி சாய்க்கக் கூடாது; நினைப்பிற்கும் எட்டாத அநாதி காலந்தொட்டுக் கூடி வாழ்ந்துவந்த நம் நாட்டிலுள்ள இதர மக்களிடமிருந்து சிறுபான்மைகளைத் தூரத் தள்ளிவைத்துவிட வேண்டும் என்று முஸ்லிம் லீக் வற்புறுத்தியது.

கிரிப்ஸ் தூது தோல்வியுற்றுவிட்டது; 1942 ஆகஸ்ட் 7, 8-ம் தேதிகளில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி சரித்திரப் புகழ்பெற்ற 'இந்தியாவை விட்டு வெளியேறு' என்ற தீர்மானத்தை நிறைவேற்றியது. தனக்காக அதிகாரம் வேண்டாமென்றும் இந்திய மக்களுக்கு அதிகாரத்தை அளிக்க வேண்டுமென்றும் உண்மையான அதிகாரத்தோடு முஸ்லிம் லீக் பதவி யேற்பி னும்கூடத் தனக்குச் சம்மதம் என்றும் இந்த பம்பாய்க் கூட்டத்துக்குச் சற்று முன்பு பன்முறை காங்கிரஸ் சொல்லியிருந்தது. ஆனுல் 1942 ஆகஸ்ட் 16 லிருந்து 20 வரை கூடிய முஸ்லிம் லீக் காரியக்கமிட்டி கீழ்க்கண்ட வாசகங் கள் அடங்கிய தீர்மானத்தை நிறைவேற்றியது.

'இந்துப் பிரமுகர்களிடம் அதிகாரத்தை மாற்றவேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கத்தை நிர்ப்பந்தப்படுத்துவதற் கென்றே இவ்வியக்கம் நடத்தப்படுகிற தென்பது லீக் காரியக்கமிட்டியின் முடிவான அபிப்ராயம். முஸல்மான்களுக்கும் மற்றவர்களுக்கும் பிரிட்டிஷ் அரசாங்கம் அப்போதைக் கப்போது கொடுத்த வாக்குறுதிகளையும் அவர்கள்பால் கொண்டிருக்கும் கடமை களையும் நிறைவேற்ற விடாதபடி செய்வதோடு காங்கிரசின் சர்வாதிகாரத் திற்கு முஸல்மான்களை அடக்கிச் சரணடையச் செய்வதும் இவ்வியக்கத்தின் நோக்கம்...' தன்னுடைய கோரிக்கைகள் நிறைவேற்றப்படுமானல் சம அந்தஸ் தில் நின்று எல்லாப் பொறுப்புக்களையும் மேற்கொள்ளத் தயார் என்று பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு லீக் தெரிவித்துக்கொண்டது. காங்கிரஸ் தொடங்கும் எவ்வியக்கத்திலும் சேராது விலகி நிற்க வேண்டுமென்று முஸ்லிம் களுக்குக் கட்டளையிட்டது. அதன்பிறகு இவ்வியக்கம் முஸ்லிம்களுக்கு எதிரானதென்றே சொல்லப்பட்டது. அரசியல் முட்டுக்கட்டையைத் தீர்ப்ப தற்கு காங்கிரஸோடு பேச்சுவார்த்தைகள் ஆரம்பிக்க வேண்டுமென்றால் முதலில், அதாவது காங்கிரஸ் தலைவர்கள் சிறையிலிருந்து விடுதலை ஆகாம லிருக்கும்போதே, அகில இந்திய காங்கிரஸின் ஆகஸ்ட் தீர்மானத்தை வாபஸ் வாங்க வேண்டுமென்று லீக் பிரசாரகர்கள் பிடிவாதமாக நிபந்தனைபோட்டு வந்தார்கள். பிரிட்டிஷ் அரசாங்கமே மறுத்தபின்னும்கூட காங்கிரஸ்காரர்கள் ஜப்பானியர்களோடு தொடர்பு வைத்திருந்தார்கள் என்று லீகர்கள் குற்றம் சாட்டிக்கொண்டே யிருந்தார்கள்.

1944 ஸெப்டம்பரில் மகாத்மா காந்தி திரு. ஜின்னுவோடு நீண்ட நாட்களாகப் பேச்சுவார்த்தைகள் நடத்தியும் பலன் கிடைக்கவில்லை. பாகிஸ் தானின் முழு அமைப்பு என்ன, அதன் எல்லைகள் எதுவரை இருக்கும்,அரசியல் அமைப்பின் தன்மை என்ன, அதில் சிறுபான்மையினருக்குப் பாதுகாப்பு எப்படி இருக்கும் என்பனபோன்ற கேள்விகளுக் கெல்லாம் மகாத்மாவால் ஜின்னுவிட மிருந்து பதில் பெற முடியவில்லை.

1945 ஜூன் மாதத்தில் வேவல் திட்டம் வெளியாகியது. வருங்கால அரசியலைப் பாதிக்காத முறையில் தற்காலிகமான இடைக்கால ஏற்பாடு செய்வ தென்பது இத்திட்டத்தின் நோக்கம். தாழ்த்தப்பட்ட மக்கள் நீங்கலாக உள்ள இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் ராஜப் பிரதிநிதியின் நிர்வாகக் கவுன்ஸிலில் சம பிரதிநிதித்துவம் இருக்கவேண்டு மென்பது இத்திட்டத்தின் அடிப்படை களில் ஒன்று. இடைக்கால அரசாங்கத்தில் இந்துக்களுக்குச் சமமான பிரதி நிதித்துவம் முஸ்லிம்களுக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்ற முஸ்லிம் லீகின் கோரிக்கை இவ்வாருக ஒப்புக்கொள்ளப்பட்டது. 1937-ல் இருந்து முஸ்லிம் லீகும் திரு. ஜின்னுவும் சிறுபான்மைகளின்மீது மிகுந்த அக்கறை காட்டலானுர் கள், அவைகளைப் பாதுகாக்கவும் புறப்பட்டார்கள். தங்களுடைய கோரிக்கை களை வற்புறுத்திவந்த சமயத்திலெல்லாம் இந்துக்கள், அதிலும் முக்கியமாக இந்துக்களின் அதிகாரம் பெற்ற ஏகப் பிரதிநிதியான காங்கிரஸ் இப்பொழுது 'சிறுபான்மைகளை நசுக்கிப் பிழியக் கிளம்பிவிட்டது' என்று வற்புறுத்தத் தவறியதில்லை. தாழ்த்தப்பட்டோர்களுக்கும் இந்துக்களுக்கும் சம்பந்தமில்லை என்றும், சிறுபான்மையினரான இந்தத் தாழ்த்தப்பட்டவர்களுக்குப் பாதுகாப்பு அவசியமென்றும் பிரசாரம் செய்துவந்தார்கள்.

இந்திய மக்களின் பிரதிநிதித்துவம் வாய்ந்த காங்கிரஸின் பலம் நாளுக்கு நாள் பெருகிவருவதைக் கண்ட பிரிட்டிஷ் அரசாங்கம் இதற்குப்

போட்டியாக லீகைத் தட்டிக்கொடுத்துவந்தது. தினத்துக்கு தினம் கோரிக்கைக் குமேல் கோரிக்கையாக சதா கேட்டுக்கொண்டுவரும் லீகுக்கு ஓயாமல் விட்டுக் கொடுத்துக்கொண்டும் வந்தது. இந்தமாதிரியான தாஜாப் படுத்துங் கொள்கை யின் கடைசிச் செய்கைதான் இடைக்கால சர்க்காரில் தாழ்த்தப்பட்டவர் நீங்கலான இந்துக்களோடு, முஸ்லிம்களுக்குச் சரிசம ஸ்தானங்கள் தருவதாகக் கூறியது. ஆனால் முந்திய சந்தர்ப்பங்களிற் நடந்ததுபோல இச்சந்தர்ப்பத் திலும், திரு. ஜின்னுவைத் திருப்திப்படுத்த முடியவில்லை. ஏனெனில் நிர்வாக சபைக்கு முஸ்லிம் அங்கத்தினர்களை லீக்தான் நியமிக்க வேண்டுமே தவிர வேறு யாரும் நியமிக்கக்கூடாது என்று ஜின்னு பிடிவாதம் பிடித்ததால் வேவல் திட்டம் தோல்வியுற்றது. எனினும், அத்தோல்விக்கு ராஜப் பிரதிநிதி தாமே பொறுப்பு என்று சொல்லிவிட்டார். உண்மையும் அதுதான். ஆனால் சிம்லா தோல்வியின் விளைவாக ஒரு புதிய விசித்திர நிலைமை ஏற்பட்டது. அதாவது முஸ்லிம் லீகிடமிருந்து ஒரு புது கோரிக்கை கிளம்பியது. தாழ்த்தப்பட்டோர் தவிர மற்ற இந்துக்களுக்குச் சமமாக சமத்துவம் கேட்டுக்கொண்டிருந்த முஸ்லிம் லீக், இந்துக்களும் மற்றச் சிறுபான்மைகளும் சேர்ந்த அளவிற்குச் சமமான பிரதிநிதித்வம் தனக்குத் தரவேண்டுமென்று இப்பொழுது கேட்க ஆரம்பித்ததுதான் அந்த விசித்திர நிலைமை. 1945 ஜூலை 14-ல் அதாவது சிம்லா மகாநாட்டிற்குப் பிறகு பத்திரிகை நிருபர்கள் மகாநாட்டில் திரு. ஜின்னு பேசியதாவது :

'உத்தேசிக்கப்பட்ட நிர்வாக சபையில் நாங்கள் மூன்றிலொரு பங்காக, சிறுபான்மை யாக்கப்படுவோம். தாழ்த்தப்பட்டோர், சீக்கியர்கள், கிறிஸ்தவர்கள் ஆகிய எல்லாச் சிறுபான்மையோரும் காங்கிரஸ் போன்ற லட்சிய முடையோர்கள். சிறுபான்மை என்ற முறையில் இவர்களுடைய குறைகளைத் தீர்க்கவேண்டியதே என்ருலும், லட்சியத்திலும் இறுதி நோக்கத்திலும் ஒன்று பட்ட இந்தியாவையே விரும்புவார்கள். வம்சாவழியிலும் கலாசாரத்திலும் இந்து சமூகத்தோடு இவர்கள் நெருங்கிய பிணைப்புள்ளவர்கள். சிறுபான்மை யினருக்கு நீதி வழங்குவதை நான் எதிர்க்கவில்லை. எங்கிருந்தாலும் அவர்கள் காப்பாற்றப்பட வேண்டும். ஆனால் நடைமுறையில் அவர்களுடைய வாக்குகள் எப்பொழுதும் எங்களுக்கு எதிராகவே இருக்கும். ராஜப் பிரதிநிதியின் ரத்து அதிகாரம் தவிர எங்களுக்கு வேறு புகல் இல்லை. சட்ட சபையிலும் நிர்வா கத்திலும் பெரும்பான்மையினர் நிறைவேற்றும் சட்டங்களின் கொள்கை யையும் முடிவுகளையும் எதிர்த்து இந்த ரத்து அதிகாரத்தை நாள்தோறும் சர்வ சாதாரணமாக உபயோகித்துக் கொண்டிருக்க முடியாது. இது எந்த அரசியல் வாதிக்கும் தெரிந்ததே. ஆகவே சிறுபான்மையைப் பெரும்பான்மையாக மாற்ற வேண்டும் அல்லது மற்றவைகளோடு சம நிலைக்காவது கொண்டுவர வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் சிறுபான்மைப் பாதுகாப்பு இல்லை என்பது தெளிவாகிறது. போகிற போக்கில் இதைக் கவனித்தால் இதரச் சிறுபான்மை யைக் காப்பதாகச் சொல்லிவந்த பாசாங்கைத் திரு. ஜின்னு கைவிடுகிருர் என்பது தோன்றும். அவர் தனி வகுப்பாக, சிறுபான்மையாகக் கருதுகின்ற தாழ்த்தப் பட்ட வகுப்பினர், சீக்கியர்கள், இவர்கள் தவிர கிறிஸ்தவர்கள் எல்லோருமே எப்பொழுதுமே லீகுக்கு எதிராக காங்கிரசுக்கே வாக்களிப்பார்கள் என்று பயப்படுகிருர். முஸ்லிம்களுக்குப் பாதுகாப்பாய் அமையக்கூடிய ராஜப் பிரதி நிதியின் ரத்து அதிகாரம் பலனற்றுப் பகற்கனவாய்ப் போய்விடுமென்றும் நம்பு கிருர். இந்தியாவில் யாரிடமிருந்தும் லீக் ஆதரவை எதிர்பார்க்க முடியா

தென்றால், தான் அனுப்பாத முஸ்லிம்களிட மிருந்தும்கூட ஆதரவு கிடைக்கா தென்றால், இது லீகினுடைய கொள்கையும் லட்சியமும் எவ்வளவு மோச மானவை யென்பதையே காட்டுகின்றது. இதைவிட வேறு சிறந்த கண்டனத் தைக் காண்பது முடியாத காரியம்.

## 16. இரண்டாம் பாகத்தின் சுருக்கம்

வகுப்புப் பிரசினையின் வரலாற்றை விரிவாக ஆராய்ந்தோம். முக்கிய மாக முஸ்லிம்கள் பிரசினைபற்றியும் பிரிட்டிஷ் அரசாங்கம் வகுப்புப் பிரசினை யில் நடந்துகொண்ட விதம் பற்றியும் ஆராய்ந்தோம். இந்த நீண்ட வரலாற் றைப் பல பகுதிகளாகப் பிரித்துச் சுருக்கிக் கூறலாம்.

முதன் முதலில் கிழக்கிந்தியக் கம்பெனி அதிகாரத்தைக் கைப்பற்றி இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியை நிறுவும் காலம். அதனுடைய கொள்கை மிகப் பழைய பிரித்தாளும் சூழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. ஓர் இந்திய மன்னனுக்கு எதிராக இன்னொருவனுடன் சேர்ந்துகொண்டு இரு மன்னர்களும் சேர்ந்து அயல்நாட்டுக் கம்பெனியை எதிர்க்கவிடாதபடி தடுக்கும் தந்திரத்தை செய்துவந்தது. 19-வது நூற்றாண்டின் முக்கால் பகுதி முடிவடை வதற்கு முன்பே எல்லாச் சுதந்திர மன்னரும் ஒன்று அடிமைப்படுத்தப்பட் டார்கள் அல்லது நேசர்களாக்கப்பட்டார்கள். முகலாயச் சக்கரவர்த்தி அதிகாரமற்ற பொம்மை அரசராகி டில்லியில் அமர்ந்திருந்தார். எஞ்சியவர் களையும் சீக்கிரம் தீர்த்தாகிவிட்டது.

அடுத்த கட்டத்தில் ஏதாவது ஒரு சாக்குப்போக்குச் சொல்லி ஒவ்வொரு பிரதேசமாக பிரிட்டிஷ் ஆட்சியில் சேர்க்கப்பட்டது. கம்பெனி ஆட்சி உறுதி யாக ஏற்பட்டுவிடுகின்றது. நாட்டில் அந்நிய ஆட்சிக்கு எதிராக நாலுபக்கங் களிலும் பரவிய ஆழ்ந்த அதிருப்தி கவிந்துகொண் டிருக்கின்றது. அதிகாரம், செல்வாக்கு ஆகியவைகளை இழந்ததோடல்லாமல் செல்வ வசதிகளையும் இழந்து நின்ற முஸல்மான்கள் மிகுதியும் வருந்தினர். அவர்களிடையே ஒரு சீர்திருத்த இயக்கம் தோன்றியது. ஆனல் அக்காலத்தில் பஞ்சாபில் ஆண்டுவந்த சீக்கியர் களுக்கு எதிரான ஒரு ஜெஹாத் (மதப் போர்) ஆக அது மாறியது. வடமேற்கில் பிரிட்டிஷ் பிரதேசத்திற்கு அருகில் சீக்கியர்கள் சுதந்திர ஆதிக்கம் செலுத்தி வந்தவரையும் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்த ஜெஹாதைக் கண்டுங் காணுததுபோல இருந்தது. ஆனல் உள்ளூர ஆதரித்தது. பஞ்சாபில் சீக்கியர்கள் அதிகாரம் அழிக்கப்படவும் ஜெஹாது இயக்கம் மிகக் குரூரமாக ஒடுக்கப்பட்டது.

புகைந்துகொண்டிருந்த அதிருப்தி 1857-ல் புரட்சியாக மூண்டது. இந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்றுகூடி டில்லி சக்கரவர்த்தியின் தலைமையில் திரண்டனர். புரட்சி தோல்வியுற்றது. மொகலாய சாம்ராஜ்யம் முடிவுற்றது. இந்திய ஆதிபத்தியம் ஆங்கிலேய ராணி கைக்கு மாறியது. புரட்சிக்குப் பின்பு கடும் அடக்குமுறைகள் கிளம்பினதில் முஸல்மான்கள் பெரிதும் அவதிப் பட்டனர். புரட்சிக்குப் பின்பு நடந்த கொடுங்கோல் அடக்குமுறையிலிருந்து தப்பச் சில வருடங்கள் ஆயின.

ஆங்கிலக் கல்வியை இந்துக்கள் நன்கு பயன்படுத்திக் கொண்டார்கள். முஸ்லிம்கள் அதை வெறுத்து ஒதுங்கி நின்றதில் பெரிதும் பின்னடைந்திருந் தார்கள். முஸல்மான்களின் கல்வி முன்னேற்றத்திற்காக ஓர் இயக்கத்தை சர். சையது அகமதுகான் ஆரம்பித்தார். அலிகார் கல்லூரி ஏற்படுத்தப்

பட்டது. அரசியல் துறையைப் பார்த்தோமானல் 1885-ல் இந்திய தேசீய காங்கிரஸ் தோன்றியது. எல்லா மாகாணங்களிலிருந்தும் ஆங்கிலம் படித்த பிரமுகர்கள் ஒன்றுகூடிப் பொது விஷயங்களை ஆராய்ந்து பொதுஜனக் குறைகளைத் தீர்ப்பதற்கு அரசாங்கத்திற்கு யோசனை கூற ஆரம்பித்தனர். பெக் என்ற ஆங்கிலேயர் அலிகார் கல்லூரிக்கு பிரன்ஸிபாலாக வந்தார். பையன்களை மாத்திரம் தம் பொறுப்பில் எடுத்துக்கொள்ளாமல் முஸ்லிம் அரசியலையும் தம் பொறுப்பில் எடுத்துக்கொண்டார். அவருடைய யோசனையின் பேரில் காங்கிரசைவிட்டு ஒதுங்கி யிருக்குமாறு சர். சையது அஹமதுகான் முஸ்லிம்களுக்குப் புத்தி கூறினர். இருப்பினும் அநேக முஸல்மான்கள் காங்கிரஸில் தொடர்பு வைத்துக்கொண் டிருந்தார்கள். இங்கிலாந்தில் உள்ள கன்ஸர்வேடிவ் கட்சியோடு நல்லுறவு கொள்ளும்படியும் தங்களுடைய முன்னேற்றத்திற்கு அதிகாரிகளை நம்பி வாழும்படியாகவும் அலிகார் கல்லூரி, முஸல்மான்களுக்குப் போதித்துக்கொண்டே வந்தது. திரு. பெக், அவருக்குப்பின் திரு. (பின்னல், ஸர்) தியோடர் மாரிஸன் போன்ற அலிகார் கல்லூரியின் பிரின்ஸிபால்களால் தேசாபிமானச் சங்கம், மகம்மதியப் பாதுகாப்புச் சங்கம் ஆகியவை ஏற்படுத்தப்பட்டு அவர்களால் ஊக்குவிக்கப்பட்டு அவர்களுடைய மேற்பார்வையில் நடைபெற்றுவந்தன.

இருபதாவது நூற்ருண்டின் முதல்பத்தாண்டில், முஸ்லிம் ஜனத்தொகை அதிகமாக இருக்கக்கூடிய மாகாணமொன்றை உண்டாக்க வேண்டுமென்றே கர்ஸன் பிரபு வங்காளத்தைப் பிரிவினை செய்தார். இதனுல் நாட்டில் வெறுப்பும் கிளர்ச்சியும் ஏற்பட்டது. பிரிவினையை எதிர்த்தவர்களில் பல முஸல்மான்கள் இருந்தார்கள் என்ருலும், வங்காள இந்துக்கள் முஸல்மான்களுக்கிடையே எதிர்பார்த்தபடி மனக்கசப்பு ஏற்பட்டது. கர்ஸன் பிரபு சென்ற பிறகு மின்டோ பிரபு ராஜப் பிரதிநிதியாக வந்தார். இந்தியா மந்திரியாக இருந்த மார்லியுடன் சேர்ந்து ஒரு சீர்திருத்தம் கொண்டுவந்தார். சீர்திருத்தங்கள் கொண்டுவரப்போகும் உத்தேசங்களை எதிர்பார்த்து அலிகார் கல்லூரி பிரின்ஸிபாலாக இருந்த ஆர்ச்பால்டின் ஆலோசனையின்பேரில் ஒரு முஸ்லிம் தூதுகோஷ்டி அமைக்கப்பட்டது. திரு. ஆர்ச்பால்டு ராஜப் பிரதிநிதியின் அந்தரங்கக் காரியதரிசியோடு தொடர்பு வைத்துக்கொண் டிருந்தார். தூதுகோஷ்டி ஆகாகானின் தலைமையில் சென்றது. முஸல்மான்களின் தனி உரிமைகளை ஏற்றுக்கொண்டு அவர்களுக்குத் தனித் தொகுதிகளின் மூலமாகச் சட்டசபையில் பிரதிநிதித்வம் கொடுத்தார். முஸல்மான்களைத் தேசபக்தக் கூட்டத்தில் சேர்ந்துவிடாதபடி செய்யத் தந்திரமாகச் செய்யப்பட்ட வேலையே இது. ராஜப் பிரதிநிதி சிறந்த சேவை செய்ததாக இங்கிலாந்திலும், இங்குள்ள அதிகாரிகளும் கருதினர்கள். இவ்வாருக விதை விதைக்கப்பட்டது, அது இன்று மரமாகி, அந்த மரம் இன்று ஆழமாக வேரூன்றி நாலா பக்கங்களிலும் கிளை பரப்பி ஓங்கி வளர்ந்து செழித்து நிற்கிறது. இந்தியாவின் பெருங் கேட்டுக்கும் இங்கிலாந்தின் நிரந்தர நன்மைக்கும் வளர்ந்த இந்த மரம் இந்திய சுதந்திரத்திற்கு முட்டுக்கட்டையாக நிற்பதில் வெற்றி பெற்றுவிட்டது.

காங்கிரஸ் தனித் தொகுதியை ஒருவாறு ஒப்புக்கொண்டதுமன்றி முஸ்லிம்கள் சிறுபான்மையாக இருக்கக்கூடிய மாகாணங்களில் அவர்களுடைய ஜன விகிதத்துக்கு அதிகமாகவே பிரதிநிதித்வம் கொடுக்கவும் ஒப்புக்கொண்டது. 1916 டிஸம்பரில் இந்திய தேசீய காங்கிரசும் அகில இந்திய முஸ்லிம் லீகும் சேர்ந்து லக்ஷ்மணபுரி ஒப்பந்தத்தைச் செய்தன. அவ்வொப்பந்தம் 2-பகுதிகளை

உடையது. ஒன்று சட்டசபைகளில் முஸல்மான்களுடைய பிரதிநிதித்வத்தைப் பற்றியும் தனித்தொகுதிகளைப்பற்றியும் கூறுவது. மற்றொன்று அரசாங்க அதிகாரத்தில் ஜனங்களுக்கும் ஒரு பங்கு இருக்கவேண்டுமென்ற மிதமான கோரிக்கை கொண்டது. இந்திய ஜனங்கள் நாளடைவில் சுயாட்சி பெற வேண்டுமென்பதை பிரிட்டிஷ் அரசாங்கம் ஆதரித்துச் சாதகமான அபிப்ராயத்தைத் தெரிவித்தது. மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தில், லக்ஷ்மணபுரி ஒப்பந்தத்தில் கண்டுள்ள கோரிக்கைகளில் ஒன்றான தனித் தொகுதிகள் ஏற்கப்பட்டன. ஆனால் இன்னொரு கோரிக்கையான ஜனங்களுக்கு ஆட்சியில் பங்கு கொடுக்கவேண்டுமென்ற கோரிக்கை கைவிடப்பெற்று மாகாணங்களில் இரட்டை ஆட்சி என்பது கொண்டுவரப்பட்டது.

ஐரோப்பாவிலும், இந்தியாவிலும் நடைபெற்ற சம்பவங்கள் இந்தியாவில் எல்லாவித மக்களிடையேயும் பெரிய விழிப்பை ஏற்படுத்தலாயின. பஞ்சாப் படுகொலையும், கிலாபத் அநீதிகளும் இந்து முஸல்மான்களை ஒன்றுகூட்டிப் பொதுஜனக் குரலைக் கிளப்பிவிட்டன. காங்கிரஸ், கிலாபத் கமிட்டி, ஜமியத் உல் உலாமா இன்னும் இதர சங்கங்கள் ஒரே வேலைத்திட்டத்தை அமைத்துச் செயலாற்ற ஆரம்பித்தன. லாய்டு பிரபுவின் வார்த்தைகளின்படி சொல்லப்போனால் அவைகள் வெற்றியை அடைந்துவிடும்போலிருந்தன. ராஜப்பிரதிநிதி திண்டாடித் திகைத்துப்போனார். இந்து முஸ்லிம் பிரபல தலைவர்கள் சிறையில் தள்ளப்பட்டார்கள். பொதுஜனங்கள் சில இடங்களில் போலீஸ்மீது பலாத்காரத்தில் இறங்கியதால் அந்தவிதச் சட்டமறுப்பு நிறுத்தப்பட்டது. உடனே நாடெங்கும் அநேக வருஷங்களுக்கு இந்து முஸ்லிம் கலகங்கள் தோன்றி நாட்டை ஆட்டிவந்தன. சகோதர ஒற்றுமையும், ஒத்துழைப்பும், ஆர்வமும் நிறைந்த நாட்கள் மறைந்து, சகோதரர் சண்டை சச்சரவு இடும் நாட்கள் தோன்றின. காங்கிரசும் முஸ்லிம் சபைகளும் சேர்ந்து நடத்திய சாத்வீக ஒத்துழையாமை இயக்கம் பலவீனமடைந்து மறைந்துவிட்டது.

இதற்குள்ளாக இந்து முஸ்லிம் பிரசினை என்பது தோன்றிவிட்டது. கௌகத்தி காங்கிரசுக்குப் பிறகு இந்து முஸ்லிம் பிரசினையைத் தீர்ப்பதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டது. 1927 ஆரம்பத்தில் இந்து முஸ்லிம் தலைவர்கள் தங்களுடைய கருத்துக்களைப் பரிமாறிக்கொண்டார்கள். சில முஸ்லிம் தலைவர்கள் நான்கு அம்சங்களையுடைய 'முஸ்லிம் பிரேரணைகள்' என்ற கோரிக்கையை அமைத்தார்கள். இந்திய அறிஞர்கள் தனித்தொகுதிகளினால் வரும் தீங்கை உணர்ந்தனர். தம் நான்கு கோரிக்கைகளை நிறைவேற்றிவிட்டால் தனித்தொகுதிகளை ஒழித்துவிடலாம் என்று முஸ்லிம் பிரேரணைகள் கூறின. அக்காரியங்களாவன: (1) சிந்துவைத் தனி மாகாணமாக்குவது. (2) வடமேற்கு எல்லை மாகாணத்திலும் பலுசிஸ்தானத்திலும் சீர்திருத்தங்களைக் கொண்டுவருவது. (3) வங்காளத்திலும் பஞ்சாபிலும் சட்டசபைகளில் முஸ்லிம்களுக்கு ஜனவிகிதப்படி பிரதிநிதித்வம் அளிப்பது. (4) மத்திய சட்டசபையில் முஸ்லிம்களின் பிரதிநிதித்வம் மொத்த ஸ்தானங்களில் மூன்றிலொரு பங்குக்குக் குறையாமல் இருப்பது.

அடுத்த காங்கிரஸ் 1927 டிசம்பர் மாதத்தில் சென்னையில் கூடியது. மேலும் யோசனை செய்ததன்பேரிலும் பேச்சுவார்த்தைகளை நடத்தியதனாலும் காங்கிரசுக்கும் லீகுக்கும் இடையே ஓர் ஒப்பந்தம் அநேகமாக ஏற்பட்டுவிட்டது என்று கூறும்படியான நிலைமை வந்தது.

1920-ல் வழங்கப்பட்ட சீர்திருத்தங்கள் காங்கிரஸ், முஸ்லிம் ஸ்தாபனங்கள் பலவற்றாலும் பகிஷ்கரிக்கப்பட்டன; மிதவாதிகள் தவிர வேறு யாரும் இவைகளை ஏற்று நடத்த முன்வரவில்லை; இச் சீர்திருத்தங்களை மாற்றி அமைக்கவேண்டுமென்று இந்தியர்கள் விடாப்பிடியாகக் கேட்டுவந்தார்கள். பிரிட்டிஷ் அரசாங்கமும் பிடிவாதமாக மறுத்து வந்தது. கடைசியாக 1927 முடிவில் இச்சீர்திருத்தங்கள் எவ்வாறு நடைபெறுகின்றன என்பதை நேரில் கண்டு அறிக்கை வெளியிடுமாறு சட்ட நியமனக் கமிஷனை சைமன் தலைமையில் ஏற்படுத்தியது. அக்கமிஷனில் இந்தியர்கள் கிடையாது. காங்கிரஸ், லீக், மிதவாதிகள் யாவருக்கும் இது சினத்தை மூட்டியது. காங்கிரசும் லீகர்களும் மிதவாதிகளும் கமிஷனைப் பகிஷ்கரிப்பதென்று முடிவு செய்தனர். தனித் தொகுதிகளை நீக்கிவிடுவதுபற்றியும் கமிஷனைப் பகிஷ்கரிப்பதுபற்றியும் ஏற்பட்ட தகராறு காரணமாக லீகில் பிளவு ஏற்பட்டது. சென்னை காங்கிரஸில் இதர ஸ்தாபனங்களின் பிரதிநிதிகளோடு சேர்ந்து ஒரு கமிட்டி ஏற்படுத்தி இந்தியாவுக்கு ஓர் அரசியலை வகுப்பதென்று தீர்மானித்திருந்தபடி ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. அதனுடைய அறிக்கையான நேரு கமிட்டி அறிக்கை கல்கத்தாவில் கூடிய சர்வ கட்சிகளும் சேர்ந்த அகில இந்திய கன்வென்ஷனில் விவாதத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. லீக் சில திருத்தங்கள் கொண்டு வந்தது. அவை யாவன: 'மத்திய சட்டசபையில் முஸ்லிம்களின் பிரதிநிதித்வம் மூன்றிலொரு பங்குக்குக் குறையக்கூடாது. பொதுஜன வாக்குரிமை அளிக்கப் படா விட்டால் வங்காளத்திலும் பஞ்சாபிலும் ஜனத்தொகை விகிதத்தின்படி ஸ்தானங்கள் கொடுக்கப்படவேண்டும். மிச்ச அதிகாரங்கள் மத்திய அரசாங் கத்தினிடம் இருக்கவேண்டும்.' இவைகளை ஒப்புக்கொள்ளாததினால் லீக் விலகிக்கொண்டது. முஸ்லிம் சர்வகட்சிகள் மகாநாடு தோன்றியது. லீகின் இரண்டு கிளைகளும் நாளடைவில் அம் மாநாட்டில் கலந்துவிட்டன. திரு. ஜின்னாவின் பதினான்கு அம்சங்கள் முஸ்லிம்களின் கோரிக்கையாயின.

முஸ்லிம்களின் கோரிக்கைப்படி இந்திய அரசியல் அமைப்பு சமஷ்டியாக இருக்கவேண்டும்; ஒவ்வொரு மாகாணத்திலும் உள்ள சட்டசபைகளிலும் இதர தேர்ந்தெடுக்கப்படும் சபைகளிலும் சிறுபான்மையினருக்கு உருப் படியான பிரதிநிதித்துவம், போதுமான அளவில் இருக்கும்படியாக அமைக்க வேண்டும்; அதற்காகப் பெரும்பான்மையைச் சிறுபான்மை ஆக்கவோ சம நிலைக்குக் கொண்டுவரவோ கூடாது. முதல் வட்டமேஜை மகாநாடு சமஷ்டியை ஏற்றுக்கொண்டது. வட்டமேஜை மகாநாட்டின் சிறுபான்மைக் கமிட்டி தோல்வியுற்ற காரணத்தால் திரு. மாக்டனால்ட் வகுப்புத் தீர்ப்பளித்தார். அத்தீர்ப்பில் பதினான்கு அம்சக் கோரிக்கைகள் பெரும்பாலும் அளிக்கப்பட்டு விட்டன. மத்திய அரசாங்கத்தில் முஸ்லிம்களின் பிரதிநிதித்வப் பிரசினை ஒத்திவைக்கப்பட்டது. நிர்வாகத்துக்குப் போதிய நிதி கிடைக்குமானால் சிந்துவைத் தனி மாகாணமாகப் பிரிப்பதாக இருந்தது. வகுப்புத்தீர்ப்பு இந்துக் களுக்கும் சீக்கியர்களுக்கும் அநீதி யிழைத்தது. முஸல்மான்கள் சிறுபான்மை யாக இருக்கக்கூடிய மாகாணங்களில் அவர்களுக்கு அதிகப்படியான பிரதி நிதித்வம் அளித்தது. வங்காளத்தில் இந்துக்கள் 44·8-சதவிகிதத்தினர். அவர் களுக்குச் சட்டசபை ஸ்தானங்களில் அதிகம் கொடுக்கவேண்டியதிருக்க 32-சத விகிதமே கொடுத்தது. ஜனத்தொகையில் 100-ல் ஒரு பங்கினராயிருந்த ஐரோப்பியருக்கு 10-சதவிகிதம் அதிகப்படி ஸ்தானங்கள் கொடுப்பதற்காக இந்துக்களுக்குரிய ஸ்தானங்கள் குறைக்கப்பட்டன. முஸல்மான்களுக்குக்

குறைத்ததைக் காட்டிலும் இந்துக்களுக்கு அதிகமாகக் குறைக்கப்பட்டது. பஞ்சாபிலும் சிறுபான்மையாக உள்ள இந்துக்களுக்கு அதிகப்படி ஸ்தானங்கள் கொடுக்கவேண்டியிருக்க சீக்கியர்களுக்குத் தருவதற்காக இந்த ஸ்தானங்களைக் குறைத்தனர். முஸல்மான்கள் மற்ற மாகாணங்களில் பெற்ற சாதகத்தை சீக்கியர்கள் பஞ்சாபில் பெறக் கூடவில்லை. வகுப்புத் தீர்ப்பை இந்துக்களும் சீக்கியர்களும் எதிர்த்தார்கள். எதிர்ப்பைப் பொருட்படுத்தாத வகுப்புத் தீர்ப்பு 1935-ம் வருஷத்திய சட்டத்தில் சேர்க்கப்பட்டது. அலஹாபாத் ஒற்றுமை மகாநாட்டில் வகுப்புத் தீர்ப்புக்குப் பதிலாக மற்றொன்றைக் கண்டு பிடிக்கச் செய்த முயற்சிகளும் செய்த ஒப்பந்தமும் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் உருக்குலைக்கப்பட்டுவிட்டன.

முஸ்லிம் சர்வகட்சி மகாநாட்டோடு சேர்ந்துகொண்டு விடாப்பிடியாக லீக் சமஷ்டி அரசியலமைப்புக் கோரிவந்தது; இதை பிரிட்டிஷ் அரசாங்கமும் 1935-ம் வருஷத்திய சட்டத்தில் ஏற்றுக்கொண்டது. ஆனால் சட்டம் வந்த பிறகு முஸ்லிம் லீக் சமஷ்டி அரசியல் அமைப்பைக் கடுமையாக எதிர்ப்பதாக பல்டி அடித்தது. 1935-ம் வருஷத்திய சட்டத்தின்படி நடந்த தேர்தல்களில் லீக் நான்கு மாகாணங்களில் ஒரு ஸ்தானத்தையும் கைப்பற்ற முடியவில்லை. முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ள மாகாண சட்டசபைகளிலும் பெரும் பான்மை ஸ்தானங்களையும் கைப்பற்ற முடியவில்லை. ஆகவே அதனால் மந்திரி சபை அமைக்க எந்த மாகாணத்திலும் இயலவில்லை. சில மாகாணங்களில் அதற்குப் பிரதிநிதியே கிடையாது. அம்மாகாணங்களில் அவர்களை காங் கிரஸ் மந்திரிசபையில் எவ்வாறு சேர்த்துக்கொள்வது? இந்நிலைமை லீகிற்கு வெகு ஆத்திரத்தை மூட்டியது. காங்கிரசின்மீது சினந்து சீறியது. காங்கிரஸ் பதவி ஏற்றதோ இல்லையோ உடனே காங்கிரஸ் மந்திரிசபைகள் முஸ்லிம்களைக் கொடுமைப் படுத்துவதாக ஜாபிதா தயாரிக்கப் புறப்பட்டுவிட்டது. சிறுபான் மையைக் காப்பாற்றவேண்டிய பொறுப்பை உடைய கவர்னர்களை, சிறுபான் மைக்கு காங்கிரஸ் மந்திரிசபைகள் தீங்கிழைத்தனவா என்று கேட்டபோது, அவர்கள் ஆம் என்று சொல்லவில்லை. மாறாக காங்கிரஸ் ஆட்சியை அவர்கள் காங்கிரஸ் பதவியிலிருந்தபோதும் இல்லாதபோதும் பாராட்டவே செய்திருக் கிறார்கள். பெடரல் கோர்ட் நீதிபதியைக் கொண்டு இக்குற்றச்சாட்டுகளை விசாரணை செய்யலாம் என்று காங்கிரஸ் சொன்னபொழுது திரு. ஜின்னா அதை நிராகரித்தார். கூடுமானால் காங்கிரசும் லீகும் சேர்ந்து கலந்து விவா தித்துப் பிணக்குகளைத் தீர்த்துக்கொள்ளலாம் என்று கூறியபொழுது இந்திய முஸ்லிம்களின் தனிப் பிரதிநிதியாக லீகை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றும் இந்துக்களின் ஏகப் பிரதிநிதியாக காங்கிரஸ் உள்ளது என்பதை ஏற்க வேண்டுமென்றும் லீக் வற்புறுத்தியதால் பேச்சுவார்த்தைகள் ஆரம்பத் திலேயே தடைப்பட்டுவிட்டன. இரண்டாவது உலகயுத்தம் மூளவும் காங்கிரஸ் மந்திரிசபைகள் பதவியைவிட்டு விலகின. அச்சம்பவத்தை விடுதலை நாளாக லீக் கொண்டாடியது. இந்தியாவைப் பொறுத்தமட்டில் யுத்த நோக்கங்கள் யாவை என காங்கிரஸ் பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கேட்டது. மேலும் யுத்த காலத்தில் தேசிய அரசாங்கத்தை ஏற்படுத்தவேண்டுமென்றும் யுத்தத்திற்குப் பிற்பாடு சுதந்திரம் தருவதாக வாக்குறுதி அளிக்கவேண்டுமென்றும் கோரியது. யுத்த நோக்கங்களை விளக்குதல், தேசிய அரசாங்கத்தை ஏற்படுத்துதல், சுதந்திர வாக்குறுதி அளித்தல் ஆகிய காங்கிரஸின் கோரிக்கைகளை அரசாங்கம் கவனிக்கவில்லை. ஆனால் முஸ்லிம் லீக் 1935-ம் வருஷத்துச் சட்டத்தின்

சமஷ்டிப்பகுதியை நிறுத்திவைக்கவேண்டுமென்று கோரியதும் அது நிறுத்தி வைக்கப்பட்டது. இந்திய தேசீய வாழ்வில் அமைந்து இருக்கும் முக்கிய கட்சிகளான மன்னர்கள், முஸல்மான்கள், தாழ்த்தப்பட்ட வகுப்பினர், இன்னும் இதரச் சிறுபான்மையினருடைய சம்மதமும் அங்கீகாரமும் இல்லாமல் எந்த அரசியல் சீர்திருத்தங்களும் செய்வதில்லை யென்றும் உறுதி யளித்தது. லீகின் பசி இதோடு தணியவில்லை. 1940 மார்ச்சில் லாகூர் கூட்டத்தில் பாகிஸ்தான் தீர்மானத்தை நிறைவேற்றியது. சென்னையில் கூடிய அடுத்த கூட்டத்தில் பாகிஸ்தானை அடைவதைத் தனது முதற்கொள்கையாகக் கொண்டது.

மற்ற முஸ்லிம் சபைகளைப்போல முஸ்லிம் லீகும் இதுவரை முஸ்லிம்களை இந்தியாவின் பாதுகாக்கப்படவேண்டிய ஒரு சிறுபான்மை வகுப்பாகக் கருதிவந்தது. அவர்களைப் பாதுகாப்பதற்காக எத்தனையோ யோசனைகள் திட்டங்கள், தனித்தொகுதிகள், அதிகப்படி பிரதிநிதித்வம் முதலியவைகளில் ஆரம்பித்துப் பதினன்கு அம்சங்கள்வரை ஒன்றன்பின் ஒன்ருகக் கோரப்பட்டு வந்தன. பிரிட்டிஷ் அரசாங்கமும் அவைகளை அவ்வப்பொழுது ஏற்றுக் கொண்டு வந்திருக்கிறது. இந்தக் கோரிக்கைகளில் மிக மிக முக்கியமானது இந்திய அரசாங்கம் சமஷ்டிமுறையில் இருக்கவேண்டும் என்பது. இதுவும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இவைகளெல்லாம் லீகிற்குத் திருப்தி அளிக்கவில்லை. முஸ்லிம்கள் அதிகமாக வாழும் வடமேற்கு வடகிழக்குப் பிராந்தியங்களில் சுதந்திர முஸ்லிம் ராஜ்யங்கள் வேண்டுமென்று தீர்மானித்தது. இரண்டாவது உலக யுத்தம் நடந்துகொண்டிருக்கும்பொழுது லீகிற்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் இடையே ஏற்பட்ட பேச்சுவார்த்தைகளில் லீக் கோரியவை: (1) பாகிஸ்தான் கொடுக்கப்படவேண்டும் இதற்கிடையில் பாகிஸ்தானைப் பாதிக்கக்கூடிய சொல்லோ செயலோ கிளப்பக்கூடாது. (2) இடைக்காலத்திற்கான நிர்வாகக் கவுன்ஸில் விஸ்தரிப்பில் காங்கிரஸ் கலந்துகொள்ளுமானல் இந்துக்களும் முஸ்லிம்களும் சம பிரதிநிதித்வம் உடையவர்களாக இருக்க வேண்டும். காங்கிரஸ் கலந்துகொள்ளவில்லை என்ருல் முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கவேண்டும். (3) முஸ்லிம் அங்கத்தினர்களை முஸ்லிம் லீக்தான் நியமிக்கவேண்டும். இந்துக்களும் காங்கிரசும் துன்புறுத்தாவண்ணம் சிறுபான்மைகளைப் பாதுகாக்கிற சூரனுக லீக் தன்னைக் காட்டிக்கொண்டது. இந்துக்களிலிருந்து புறம்பான வகுப்பாகத் தாழ்த்தப்பட்டோரைக் கருதியது. இந்திய யூனியனில் இருந்து பிரிந்துகொள்ளும் உரிமையைக் கொடுத்ததின் மூலமாக பிரிட்டிஷ் அரசாங்கம் லீகின் முதல் கோரிக்கையை நடைமுறையில் ஏற்றுவிட்டது. இரண்டாவது கோரிக்கையை ஏற்றுக்கொண்டதாகக் காட்டிக்கொள்ளவில்லையே தவிர செயலில் இந்துக்களையும் முஸல்மான்களையும் நிர்வாகக் கவுன்ஸிலில் சம எண்ணிக்கையில் நியமித்தது. இந்து மகாசபையும் இவ்வித நிலைமையில் தன் பிரதிநிதிகளைக் கவுன்ஸிலுக்கு அனுப்பியது ஆச்சரியமான விஷயமே. மூன்ருவது கோரிக்கையை பிரிட்டிஷ் அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவில்லை. தனக்கு இஷ்டமானவரை நியமிக்கும் உரிமையை அப்படியே வைத்துக்கொண்டது. இந்தியாவிற்குச் சுதந்திரம் அளிக்கப்படும் என்று உறுதிமொழி கூறுமாறு காங்கிரஸ் இடைவிடாது கேட்டுவந்தது. யுத்த நிர்வாகம் தவிர மற்ற எல்லாவித அதிகாரத்தையும் இந்தியர்கள் கைக்கு மாற்றவேண்டுமென்றும் கேட்டது. இதை பிரிட்டிஷ் அரசாங்கம் மறுத்தது. இதன் காரணமாக 1942 ஆகஸ்ட் 8-ல் பம்பாயில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி சட்டமறுப்பு இயக்கத்தை அனுமதித்தது. காங்கிரஸ்

தலைவர்கள் திடீரெனக் கைதுசெய்யப்பட்டார்கள். நாடெங்கும் கிளர்ச்சிகள் தோன்றின. ஆகஸ்ட் தீர்மானம் முஸ்லிம்களுக்கு விரோதமாகச் செய்யப்பட்டதென்று லீக் கூறியது. அத்தீர்மானத்தை வாபஸ் வாங்கவேண்டுமென்று விடாது வற்புறுத்திவந்தது. பிரிட்டிஷ் அரசாங்கமோ வேவல் திட்டம் என்ற புதிய பிரேரணைகளைக் கொண்டுவந்தது. காங்கிரஸ் தலைவர்கள் அதைப் பரிசீலனை செய்வதற்கு ஏற்றவாறு அவர்களை விடுதலை செய்தது. வேவல் பிரபு, காங்கிரஸ் லீக் தலைவர்களையும் மத்திய சட்டசபைக் கட்சித் தலைவர்களையும் மாகாணப் பிரதம மந்திரிகளையும் வரவழைத்து ஒரு மகாநாடு கூட்டினார். வேவல் திட்டத்தில் முக்கியமான அம்சம் என்னவென்றால் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் நீங்கலாக இந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்கும் சம பிரதிநிதித்வம் அளிப்பது என்பதாகும். ஏற்கெனவே கூறியபடி 1941-லிருந்து இச்சமத்துவம் செயலிலிருந்துவந்தது. இப்பொழுது பிரேரணைகளின் முக்கியப் பகுதியாக பிரிட்டிஷ் அரசாங்கத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. மகாநாடு தோல்வியுற்றது. தன்னால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களை நிர்வாக சபையில் முஸ்லிம் பிரதிநிதிகளாக நியமிக்கவேண்டுமென்று முஸ்லிம் லீக் வற்புறுத்தியது. உத்தேசிக்கப்பட்ட நிர்வாகக் கவுன்சிலில் 'தாழ்த்தப்பட்டோர், சீக்கியர், கிறிஸ்தவர்கள் எல்லோரும் காங்கிரசின் லட்சியத்தையே கொண்டிருப்பதனால் நடைமுறையில் எப்பொழும் அவர்களுடைய வாக்குகள் எங்களுக்கு (முஸ்லிம்களுக்கு) எதிராக இருக்குமாதலால், ராஜப் பிரதிநிதியின் ரத்து அதிகாரத்தைத் தவிர எங்களுக்கு வேறு பாதுகாப்புக் கிடையாது. ராஜப் பிரதிநிதியின் ரத்து அதிகாரத்தை சர்வ சாதாரணமாக உபயோகித்துக்கொண்டிருக்க முடியாது என்பதை எந்த அரசியல் அறிஞனும் நன்கு அறிவான்.' இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் சம பிரதிநிதித்வம் என்பதைச் சட்டமாக ஏற்றுக்கொண்டு, நடைமுறையிலும் நிறைவேற்றப்படும்பொழுது திரு. ஜின்னா, அது போதாது என்றும், இந்துக்களோடு மற்றச் சிறுபான்மையர் சேர்ந்தால் எவ்வளவு ஆகுமோ அவ்வளவு பிரதிநிதித்வம் முஸல்மான்களுக்குக் கொடுக்கவேண்டு மென்றும் வற்புறுத்தக்கூடும். இத்தகைய சமத்துவம்கூட போதுமான பாதுகாப்பாய் இல்லாமல் போனாலும் போகலாம். இந்துக்கள், இதரச் சிறுபான்மையர் இவர்களுக்கும் அதிகமாக முஸ்லிம்களுக்குப் பெரும்பான்மை அளிக்கவேண்டுமென்பது அடுத்த கோரிக்கையாகலாம்.

இவ்விதமாக 1930-லிருந்து முஸ்லிம் லீகின் கோரிக்கைகளிலும் பிரிட்டிஷாரின் இணங்குதல்களிலும் மூன்று கட்டங்களைக் காண்கின்றோம். சமஷ்டியும், சிறுபான்மையோருக்குச் சட்டசபைகளில் உருப்படியாக, போதுமான பிரதிநிதித்துவமும் கேட்கப்படுவதை முதல் கட்டத்தில் பார்க்கிறோம். சில மாகாணங்களில் முஸ்லிம்கள் பெரும்பான்மையோராகவும் இதர வகுப்பினர் சிறுபான்மையராகவும் அமைகிறார்கள். முஸ்லிம்கள் சிறுபான்மையாகவுள்ள மாகாணங்களில் அவர்களுக்கு எவ்வளவு அதிகப்படி ஸ்தானங்கள் கொடுக்கப்படுகின்றனவோ அதேமாதிரி தங்களுக்கும் கொடுக்கவேண்டுமென்று முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கக்கூடிய மாகாணங்களில் சிறுபான்மையாக அமைந்த இதர வகுப்பினர் கேட்கலாமல்லவா? அதற்காகவே பெரும்பான்மையை எந்த மாகாணத்திலும் சிறுபான்மையாக மாற்றக்கூடாது, அல்லது சம நிலைக்குக் கொண்டுவரக்கூடாது என்ற ஷரத்து கொண்டுவரப்படுகிறது. பிரிட்டிஷ் அரசாங்கம் சமஷ்டியை ஒப்புக்கொள்கிறது. முஸ்லிம்கள் சிறுபான்மையாக இருக்கக்கூடிய மாகாணங்களில் அவர்களுக்கு அதிகப்படியான ஸ்தா

னங்கள் கொடுக்கின்றது. வங்காளத்திலும் பஞ்சாபிலும் சிறுபான்மையாக இருக்கக்கூடிய இந்துக்களுக்கு அதிகப்படியான ஸ்தானத்தை மறுக்கிறது. வங்காளத்தில் அவர்களுடைய ஜனத்தொகை விகிதத்திற்கும் குறைவான ஸ்தானங்களே அளிக்கின்றது. ஐரோப்பியர்களுக்கு அதிகப்படியான ஸ்தானங்கள் கொடுப்பதற்காக முஸ்லிம்களுடைய பிரதிநிதித்வத்தை எவ்வளவு குறைக்கிறதோ அதைக்காட்டிலும் அதிகமாக இந்துக்களுடைய ஸ்தானங்களைக் குறைக்கிறது.

இரண்டாவது கட்டத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் சமஷ்டி அளிக்கப்பட்டு 1935-ம் வருஷத்திய சட்டத்தில் சேர்க்கப்பட்டவுடன் லீக் அதை மறுத்து,இந்தியாவின் வடமேற்கு, கிழக்குப் பகுதிகளில் சுதந்திர முஸ்லீம் ராஜ்யங்களை அமைக்க வேண்டும் என்று கோருகிறது. எக்காரணத்தைக் கொண்டும் பெரும்பான்மையைச் சிறுபான்மையாகக் குறைக்கவோ, அல்லது சமநிலைக்கு கொண்டுவரவோ கூடாது என்ற ஷரத்தை முஸ்லிமல்லாத பெரும்பான்மையினர் விஷயத்தில் வற்புறுத்தாது விட்டுவிடுகின்றது; காங்கிரஸ் ஒத்துழைத்தால் இந்துப் பெரும்பான்மையை முஸ்லிம் சிறுபான்மையுடன் சமநிலைப்படுத்தவும், காங்கிரஸ் ஒத்துழைக்காவிடில் இந்துப் பெரும்பான்மையைச் சிறுபான்மையாக்கி முஸ்லிம் சிறுபான்மையைப் பெரும்பான்மையாக்கவும் கோருகிறது. இந்நிலையில் பிரிட்டிஷ் அரசாங்கம் சமஷ்டியை அந்தரத்தில் விட்டுவிட்டு முஸ்லிம்களின் சம்மதத்தைப் பெருத எவ்வித அரசியலமைப்பையும் ஏற்பதில்லையென்று வாக்குறுதி அளிக்கிறது; நடைமுறையில் இந்து-முஸ்லிம் சம பிரதிநிதித்வத்தை ஏற்றுக் கொள்கிறது.

மூன்ருவது கட்டத்தில் இந்துக்களுக்கும் முஸல்மான்களுக்கும் சம பிரதிநிதித்வம் என்ற கொள்கையைத் தனது பிரேரணைகளில் முக்கியமான பாகமாக பிரிட்டிஷ் அரசாங்கம் ஏற்றுக்கொள்கிறது. முஸ்லிம் பிரதிநிதிகளை நியமிக்கும் அதிகாரத்தைத் தனக்களிக்கவில்லை என்றும், தாழ்த்தப்பட்டோர், சீக்கியர், கிறிஸ்தவர்கள் ஆகிய சிறுபான்மைகள் யாவும் பெரும்பான்மை வகுப்பான இந்துக்களோடு சேர்ந்துகொள்வார்களாகையால் முஸ்லிம்கள் சிறுபான்மையாகித் தங்களுடைய நலன்களைப் பாதுகாக்க முடியாமற் போகுமென்றும் கூறி வேவல் திட்டத்தை லீக் நிராகரிக்கிறது. இந்துப் பெரும்பான்மைக்கும் அதிகமாக முஸ்லிம் சிறுபான்மையைப் பெரும்பான்மையாக்கினுலும் முஸ்லிம்களின் நலன்களைப் பாதுகாக்கமுடியாது. இந்துக்களோடு இதரச் சிறுபான்மைகள் சேர்ந்தால் அவைகளுக்கும் அதிகமாக முஸ்லிம்களைப் பெரும்பான்மையாக்கவேண்டும்.

'நான் கேட்டுக்கொண்டேயிருக்கிறேன். நீ கொடுத்துக்கொண்டேயிரு. இந்தப் பந்தயத்தில் யார் முந்துகிருர்கள், பார்ப்போம்' என்று முஸ்லிம் லீகும் பிரிட்டிஷ் அரசாங்கமும் போட்டி போடும் பந்தயத்தில் முஸ்லிம் லீக் தான் எப்பொழுதும் கொஞ்சதூரம் முன்னுல் சென்றுக்கொண்டே வந்திருக்கிறது. இப்பந்தயத்தில் இந்துப் பெரும்பான்மையும் இதரச் சிறுபான்மைகளும் கலந்துகொள்ளுவதற்கு அனுமதிகூடக் கிடையாது. ஆகவே வகுப்பு முக்கோணத்தின் அடித்தளம் நீளுவதிலும் வகுப்பு வேற்றுமைகள் அதிகப்படுவதிலும் ஆச்சரியப்படுவதற்கொன்றுமில்லை.

---

இந்துக்களும் முஸ்லிம்களும் இரு தனித் தேசிய சமுதாயத்தினரா என்பதுபற்றி விரிவாக ஆராய்ந்தோம். இந்தியாவில் முஸ்லிம்களின் நீண்ட கால ஆட்சியில், ஒரு பொதுக் கலாசாரம் ஏற்பட்டது. அக்கலாசாரம் இந்துக் களுக்கோ அல்லது முஸ்லிம்களுக்கோ மட்டும் உரியதல்ல. அக்காலத்திய இந்து முஸ்லிம்களின் முயற்சியாலும், அப்பொழுது நிலவிய பொருளாதார, அரசியல், சமூக, சமயக் காரணங்களாலும் இக்கலாசாரம் தோன்றியதென்பதையும் கண்டோம். மேலும், இந்தியாவை, இந்து முஸ்லிம் ராஜ்யங்களாகப் பிரிக்க வேண்டுமென்பதற்காகவே சமீப வருஷங்களில் இந்த இரு சமுதாயக் கொள்கை பிறப்பிக்கப்பட்டது என்பதையும் கண்டோம். 1940 லிருந்து இப்பிரிவினையை அடைவதற்கு அகில இந்திய முஸ்லிம் லீக் பலமுறை தீர்மானம் செய்தது என்பதை மறுக்க முடியாது. அகில இந்திய முஸ்லிம் லீக் பெருவாரியான முஸல்மான்களுக்குப் பிரதிநிதியாக இருக்கிறதென்பதும் மறுக்கமுடியாத உண்மை. ஆகவே, இப்பிரிவினைத் திட்டத்திற்கு ஆதரவளிக்கும் வாதங்களை விட்டுவிட்டு, அதனுடைய சாதகபாதகங்களை மட்டும் கவனிப்பது நல்லது. இதை ஒட்டியும் வெட்டியும் பலவாருகப் பேசப்பட்டிருக்கிறது, எழுதப்பட் டிருக்கிறது. இரு பக்கங்களிலிருந்தும் தங்களது கட்சியை ஆதரித்து உணர்ச்சி முனைப்போடு பேச்சுக்கள் பேசப்பட்டிருக்கின்றன. இந்த வாதங்களில் கொண்டுவரப்பட்ட உணர்ச்சியாவேசம் கொஞ்சநஞ்சமல்ல. உணர்ச்சி யாவேசமும் வேண்டியதுதான். அதைப் பொருட்படுத்தாமலிருக்க முடியாது. ஆனால் அதைத் தடுத்து ஒழுங்கு படுத்தவேண்டும். உண்மை என்ன, நிலைமைகள் என்ன என்பதை அறிந்துகொண்டு உணர்ச்சியாவேசம் கொண் டால் பயன் உண்டு. உண்மையைக் கவனியாது கண்மூடித்தனமாகக் காரியங் களைச் செய்யப் புறப்பட்டுவிட்டால், அக்காரியங்கள் பழுதாவது நிச்சயம். நெருக்கடியான சந்தர்ப்பங்களில் நரசிம்மாவதாரம்போல உண்மைகள் தாமே வெளிப்பட்டு நிலைநிற்கும். ஆகவே ஆதரவாளரும் சரி, எதிர்ப்பாளரும் சரி, யாவரும் உய்த்துணர சில உண்மைகளைக் கூறலாமெனக் கருதுகிறேன். ஆனால் அதற்குமுன், இந்தியாவைத் து(தி)ண்டாடவைக்கும் சில திட்டங் களையும், எல்லைமாற்றுத் திட்டங்களையும் சுருக்கமாகக் கூறுகிறேன். இந்தியாவில் தனித்தனி ராஜ்யங்களைக் கலாசார நோக்கங்களுக்காகக் கலாசார அடிப்படையில் ஏற்படுத்துவதற்கு முன்வந்தவை இத்திட் டங்கள். அகில இந்திய முஸ்லிம் லீக் தன் சார்பில் ஒரு திட்டம் வெளி யிடாததால் இதுவரை வந்த மற்றைய திட்டங்களைக் கவனிப்பது அவசியமாகிறது. பிரிவினைக் கொள்கைகளை மட்டும் பொதுப்படையாகக் கூறிவிட்டு லீக் அதோடமைந்து விட்டது. 1940 மார்ச்சில், அகில இந்திய முஸ்லிம் லீக் இதுபற்றிய முதல் தீர்மானம் நிறைவேற்றுவதற்கு முன்பே, அநேக பிரிவினைத் திட்டங்கள் வெளியிடப்பட்டன. அவைகளில் எதையும் ஏற்றுக்கொள்ளாமலும், அல்லது தானுக ஒரு திட்டத்தை வகுக்கா மலும், லீக் வெறும் கொள்கைகளை உறுதி செய்துகொண்டே வந்தது. இது நிமிஷம்வரை அது ஒரு திட்டமும் வெளியிடவில்லை. பொதுக் கொள்கைகளை வெளியிட ஆரம்பித்தோ, ஐந்து வருடங்களாகின்றன. லீகின் சார்பில் பேசு வதற்குரிமையற்ற தனி நபரோ, சபைகளோ அவ்வப்பொழுது வெளியிட்ட திட்டங்களையே நாம் ஆராயவேண்டியதாக இருக்கிறது. லீகே ஒரு திட்டத்தை

வெளியிட்டிருந்தால் சங்கடமில்லாதிருக்கும். இப்பொழுது இன்னொரு விஷயத்தையும் குறிப்பிடவேண்டியிருக்கிறது. இத்திட்டங்களனைத்தும், லீக் தீர்மானத்தின் அடிப்படைக் கொள்கைகளை நிறைவேற்றுவனவாக இல்லை. இருந்தாலும் இவைகளை ஆராய்ந்து இவைகள் எந்த வகையில் லீகின் நோக்கத்தைப் பூர்த்தி செய்யவில்லை என்பதைக் கவனிப்பது நல்லது.

அவ்வப்பொழுது வெளியிடப்பட்ட திட்டங்கள் இருவகையிலடங்கும்: (1) முஸ்லிம் ராஜ்யங்களையும் முஸ்லிமல்லாத ராஜ்யங்களையும் உண்டாக்குவதற்காகப் போடப்பட்ட திட்டங்கள். (2) கலாசாரக் காரணங்களுக்காக, கலாசார அடிப்படையில் மாகாணங்களையும் சுதேச சமஸ்தானங்களையும் மாற்றியமைக்கும் திட்டங்கள். இந்த இருவகைத் திட்டங்களுக்குமுள்ள அடிப்படை வேறுபாடு யாதெனில், முந்தியவை, முழுவதும் சுதந்திரம்பெற்ற முஸ்லிம் ராஜ்யங்களையும், முஸ்லிமல்லாத ராஜ்யங்களையும் குறிக்கின்றன. அந்தராஜ்யங்கள், ஒரு பொது அதிகார அமைப்புக்குட்படாமல் தாமே தமக்குரிய பாதுகாப்பு, வெளிநாட்டுறவு, அபிவிருத்தி ஆகியவைகளைக் கவனிப்பதாக இத்திட்டங்கள் கூறுகின்றன. இரண்டாவது வகையிலடங்கிய ஒரு திட்டங்கள் மத்திய அரசாங்கத்தினுள்ளடங்கிய, போதுமான சுயேச்சை பெற்ற தனித்தனிப் பகுதிகளை வகுப்பன.

## 17. 'இந்தியாவின் மத்திய சமஷ்டி'க்கானதொரு திட்டம்

இத்திட்டம் 'ஒரு பஞ்சாபி'யால் வெளியிடப்பட்டது. அவரால் எழுதப்பட்ட 'இந்திய மத்திய சமஷ்டித் திட்டம்' என்ற புத்தகத்தில் இது விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. இத்திட்டத்தின்படி இந்திய உபகண்டத்தைக் கீழ்க்கண்டவிதமாகப் பல தேசங்களாகப் பிரித்து ஓர் இந்திய சமஷ்டியில் அவைகளை ஒன்றுசேர்க்கலாம்:

(i) சிந்து சமவெளிச் சமஷ்டி: இதில் அம்பாலா டிவிஷன், காங்ரா ஜில்லா, ஹோஷியார்பூர் ஜில்லாவின் உனு, கார்ஷங்கர் தாசில்கள் ஆகியவை நீங்கலாக பஞ்சாப், சிந்து, எல்லைப்புறம், பலுசிஸ்தான், பாஹல்பூர், ஆம்ப், தீர், சுவாத், சித்ரால், கைர்பூர், காலட், லாஸ்பேலா, கபூர்தலா, மாலர்கோட்லா ஆகியவைகள் சமஷ்டிப் பகுதிகளாகச் சேர்ந்திருக்கும். இச்சமஷ்டியை ஆசிரியர் இண்டஸ்தான் (சிந்துஸ்தான்) என அழைக்கிறார். இதன் விஸ்தீரணம் 3,98,838 ச. மைல்கள். ஜனத்தொகை 3,30,00,000. இதில் முஸ்லிம்கள் 82 சதவீதம். சீக்கியர் 6 சதவீதம். இந்துக்கள் 8 சதவீதம்.

(ii) இந்து இந்தியச் சமஷ்டி: இதிலடங்கிய பகுதிகள்—ஐக்கிய மாகாணம், மத்தியமாகாணம் பீஹார், வங்காளத்தின் சில பாகங்கள், ஒரிஸ்ஸா, அஸ்ஸாம், சென்னை, பம்பாய், ராஜிஸ்தான் தக்காண சமஸ்தானம் இவை நீங்கலான இந்திய சுதேச சமஸ்தானங்கள். இதன் விஸ்தீரணமும் ஜனத்தொகையும்:

| | |
|---|---|
| பரப்பு | 7,42,173 ச. மைல்கள். |
| ஜனத்தொகை | 21,60,41,541 |
| இந்துக்கள் சதவீதம் | 83·72 |
| முஸ்லிம்கள் சதவீதம் | 11.00 |

(iii) ராஜிஸ்தான் சமஷ்டி : ராஜபுதன சமஸ்தானங்களும் மத்திய இந்தியாவும் இதிலடங்கும். பரப்பும் ஜனத்தொகையும் :—

| | |
|---|---|
| பரப்பு | 1,80,656 ச. மைல்கள். |
| ஜனத்தொகை | 1,78,58,502 |
| இந்துக்கள் சதவீதம் | 86·39 |
| முஸ்லிம்கள் சதவீதம் | 8·09 |

(iv) தக்காண சமஸ்தானங்களின் சமஷ்டி : இதில் ஹைதராபாத், மைசூர், பாஸ்தார் அடங்கும். பரப்பும் ஜனத்தொகையும் :—

| | |
|---|---|
| பரப்பு | 1,25,086 ச. மைல்கள். |
| ஜனத்தொகை | 2,15,18,171 |
| இந்துக்கள் சதவீதம் | 85·28 |
| முஸ்லிம்கள் சதவீதம் | 8·90. |

(v) வங்காளச் சமஷ்டி : முஸ்லிம் பிராந்தியங்களான கிழக்கு வங்காளம், கோல்பாரா, சில்ஹட் ஜில்லாக்கள் இதிலடங்கும்; இந்து இந்தியாவிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட சமஸ்தானங்களும் திரிபுரமும் இதிலடங்கும். பரப்பும் ஜனத்தொகையும் வருமாறு :—

| | |
|---|---|
| பரப்பு | 70,000 ச. மைல்கள். |
| ஜனத்தொகை | 3,10,00,000 |
| முஸ்லிம்கள் | 2,05,00,000 அல்லது 66·1 சதவீதம் |
| இந்துக்கள் | 1,01,00,000 அல்லது 32·6 சதவீதம் |

இப்பகுதியிலுள்ள நிலைமைகள் தமக்குச் சரிவரத் தெரியாததால் இங்குள்ள முஸ்லிம்களின் விருப்பத்தின்படி இச்சமஷ்டியை மாற்றி யமைத்துக் கொள்ளலாம் என்று 'ஒரு பஞ்சாபி' கூறுகிறார். அவருடைய புள்ளி விவரங்களும் சரியானதாகத் தெரியவில்லை. இச்சமஷ்டியில் அவர் சேர்க்கும் வங்காள ஜில்லாக்கள் தினஜ்பூர், ரங்கபூர், மால்டா, போக்ரா, ராஜ்ஷாகி, மூர்ஷிதாபாது, பாப்னு, மைமன்சிங், நாதியா, ஜெஸ்ஸோர், பரித்பூர், டாக்கா, திப்பேரா, நோக்காலி, பக்கர்கஞ்ச், குல்னு, சிட்டகாங் முதலியனவாகும்.

இத்திட்டத்தின்படி இந்தியா ஐந்து சமஷ்டிகளாகப் பிரிக்கப்படும். இவைகளில் இரண்டு முஸ்லிம் பெரும்பான்மையுள்ளவை. மற்ற மூன்றும் இந்துப் பெரும்பான்மையைப் பெரிதும் உடையன. சிந்துஸ்தானில் இந்து ஜனத்தொகை 8 சதவிகிதமும், சீக்கியர் 6 சதவிகிதமும் ஆக முஸ்லிமல்லாத சிறுபான்மை 14 சதவிகிதம் இருக்கின்றது. வங்காளத்திலோ இந்துக்கள் 32·6 சதவீதத்திற்குக் குறைவில்லை. மூன்று இந்துச் சமஷ்டிகளில் முஸ்லிம் சிறுபான்மை முறையே, 11, 8·09, 8·9 சதவிகிதமாக இருக்கின்றது.

இவ்வைந்து சமஷ்டிகளும் ஒரு மத்திய சமஷ்டியில் சேரும். 'மேலே குறிப்பிட்டபடி ஏற்படுத்தப்படும் மத்திய சமஷ்டியில், அதில் சேரும் ஒவ்வொரு சமஷ்டியும் ஒவ்வொரு கவர்னர் ஜெனரலின்கீழ் இருக்கும். சமஷ்டியைச் சேர்ந்த யூனிட்டுகளில் (இனங்களில்) கவர்னர்கள் இருப்பர். இவைகள் யாவும் மத்திய சமஷ்டி விஷயங்களில் மத்திய சமஷ்டிக்குப் பொறுப்பாக இருக்கும். இந்திய சமஸ்தானங்களிடத்து மன்னர்பிரானுக்குள்ள உரிமை, கடமை ஆகிய விஷயங்களிலும், மத்திய சமஷ்டி அதிகாரிக்குப் பொறுப்புள்ளதாக இருக்கும். மத்திய சமஷ்டி அதிகாரத்தை ராஜப்பிரதிநிதியிடம் ஒப்படைக்கலாம். இந்திய சமஷ்டிகளிலிருந்து வந்த அங்கத்தினர்களைக் கொண்ட சமஷ்டி சபை

ராஜப்பிரதிநிதிக்கு உதவி செய்யலாம். ஒவ்வொரு சமஷ்டியிலிருந்தும் எத்தனை பேரை எடுத்துக்கொள்வதென்பது அந்தச் சமஷ்டியின் முக்கியத்துவத்தைப் பொறுத்திருக்கிறது. அந்தச் சமஷ்டியின் பூகோள இருப்பிடம், ஜனத்தொகை, பரப்பு, பொருளாதார நிலை, இவைகளைப் பொறுத்து அதன் அங்கத்தினர் தொகை இருக்கும். வெளிநாட்டுறவு, பாதுகாப்பு, இயற்கை நீர் நிலைகளிலிருந்து தண்ணீர் வசதியளித்தல், சமஸ்தானங்களிடத்து மன்னருடைய உரிமை, கடமைகள் முதலியவைகளை கவர்னர் ஜெனரல்களிடம் ஒப்படைக்கலாம். அவர்கள் ராஜப்பிரதிநிதிக்குப் பொறுப்புள்ளவர்களாக இருப்பார்கள். மத்திய சமஷ்டியில் சேரும் சமஷ்டிகள், தங்களுடைய வருமானத்திலிருந்து மத்திய சமஷ்டிக்கு நேரடியாகப் பணம் கொடுக்கலாம் அல்லது தங்களுடைய வருவாய் களிற் சிலவற்றை மத்திய சமஷ்டிக்கு ஒதுக்கலாம்.'[1] 'வடமேற்கு எல்லை தனது சுங்க வருமானத்தை எவ்விதக் காரணத்தைக்கொண்டும் மத்திய சமஷ்டிக்குக் கொடுத்துவிடலாகாது.'[1] இரண்டு விஷயங்களை எடுத்துக்காட்ட இவ்வாசிரியர் சிரமப்படுகிறார். முதலாவதாக இந்த ஐம் பிரிவுச் சமஷ்டியில் 'இந்திய பூகோள ஐக்கியத்தைக் கலாசாரப்படி உடைக்கக் கருதவில்லை. ஒரு பொதுக் குடும்பத்தினர் தங்களுக்குள் செய்துகொள்ளும் பிரிவினை போன்றதே இத்திட்டம். இந்த உபகண்டத்தைக் கலாசார ரீதியில் பிரித்து, அந்தக் கலாசாரத்தைச் சேர்ந்தவர்களிடம் கொடுப்பதோடு மீண்டும் ஒரு மத்திய சமஷ்டியில் ஒன்றுபடுத்துகிறது.'[2] இரண்டாவதாக—'பிரி வினையை விரும்பும் முஸ்லிம்களுக்கு ஒரு விஷயத்தைத் தெளிவாக்கி விட வேண்டும். அதாவது இந்தியாவுக்கு வெளியே உள்ள நாடுகளைக் கைப் பற்றவோ, சேர்க்கவோ ஆசை கொள்ளலாகாது. இப்பொழுது நாம் பிரிவினை யையும் மத்திய சமஷ்டியையும் கோருபவர்களாக மட்டும் இருக்கவேண்டும். இந்துக்கள் சமஷ்டியில் இருக்க விரும்பாவிட்டால், நாம் இந்து இந்தியாவோடு யாதொரு தொடர்பும்கொள்ளாமல் தனிச் சுதந்திரம் அமைப்போம்............... நம்மிடையே கிடக்கும் அன்னியப் பிரகிருதிகள் அற்பத்தொகையினர். அவர்களைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. இந்துக்கள் இந்நாட்டு மக்களா வதைப் போல நாமும் இந்நாட்டு மக்களே. நம்முடைய விதி இறுதியாக இந் நாட்டில் உளதேயன்றி இந்நாட்டுக்கு வெளியிலில்லை. இக்காரணங் கருதியே நாம் "பாகிஸ்தான்" என்ற சொல்லைப் பிரயோகிக்காமல் "சிந்துஸ்தான்" என்று வடமேற்கெல்லைப் பகுதியைக் கூறுகிறோம்.'[3] ஆனால் இதுவே அவருடைய கடைசி நோக்கமல்ல என்பது அப்புத்தகத்தின் கடைசிப் பக்கங்களிலிருந்து தெரியவரும்: 'இந்து இந்தியாவிலிருந்து பிரிவதோடு நமது குறிக்கோள் நின்று விடவில்லை. இலட்சிய இஸ்லாமிய அரசாங்கத்தை நிறுவுவதே நமது இறுதிலட்சியம் என்பதைத் தெளிவாக்கி விடவேண்டும். இத்திட்டம் கண்டிப்பாக நமக்கு இந்துக்களிடமிருந்து பொருளாதார விடுதலையளிக்கும். இலட்சிய இஸ்லாமிய அரசாங்கம் நமக்குப் பூரண விடுதலை அளிக்கும். விடுதலை அடைந்தபின், இஸ்லாமற்ற உலகில், இலட்சிய இஸ்லாமிய ராஜ் யத்தை நிறுவுதல் என்ற குறிக்கோளைப் பூண்டிருப்பதும் நமக்கு இயலாது. ஆகவே, இஸ்லாமிய முறையில் நாம் உலகப் புரட்சியைத் தூண்டவேண்டும். இவ்வாறாக இஸ்லாமிய முறையில் உலகப்புரட்சி செய்வதே நமது இறுதி லட்சியம். பிரிவினையால், இந்துக்களிடமிருந்து பொருளாதார விடுதலையும்,

1. *Confederacy of India*, by 'A Punjabi', pp. 12-13.
2. *ibid.*, p. 15. 3. *ibid.*, p. 17.

பிரிட்டிஷாரிடமிருந்து அரசியல் விடுதலையும் கிடைக்கும். இவைகளே மேற் கண்ட புரட்சிக்கு வழிகளாகும்.'[4] இவ்வாசிரியர் ஜனத்தொகை மாற்றத்தை விரும்பவில்லை. அவர் கூறுவதாவது: 'இந்து இந்தியாவிலுள்ள பிரதான முஸ்லிம் பகுதியை ஜனத்தொகை பரிவர்த்தனையின்றியே பிரித்துக்கொடுக்கும் படி சொல்லவேண்டும். அம்பாலா டிவிஷனும், பஞ்சாப்பிலுள்ள இதர இந்துப் பிரதேசங்களும் நீங்கலாக உள்ள சிந்து சமவெளியைத் தனி ராஜ்ய மாக்கலாம். சிட்டகாங், டாக்கா, ராஜ்ஷாகி, சோல்பாரா, ஸில்ஹெட் ஆகிய வைகளைச் சேர்த்து ஒரு ராஜ்யமாக்கலாம். இவ்விதமாகச் சிந்து சமவெளியி லுள்ள 2,57,14,657 முஸ்லிம்களும், வங்காளம், அஸ்ஸாமிலுள்ள 2,30,00,000 முஸ்லிம்களும், இந்து ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறுவார்கள். 2,89,63,343 முஸ்லிம்கள் இந்து மாகாணங்களிலிருப்பார்கள்.'[5] இவ்வாசிரியரின் வார்த்தை களில் சொல்லப்போனால் சுமார் 63 சதவிகித முஸ்லிம்கள் 'இந்து ஆதிக்கத்தி லிருந்து தப்புவார்கள்', 37 சதவிகிதத்திற்குச் சற்று அதிகமானவர்கள் அந்த ஆதிக்கத்தின் கீழிருப்பார்கள்.

இந்திய மத்திய சமஷ்டியைக் கருதுகின்ற வகையில் இது லீகின் பிரேரணையோடு அடிப்படையில் மாறுபட்டது. இத்திட்டத்தில் ஒரு மத்திய சமஷ்டி இருக்கும் 'வெளிநாட்டுறவுகள், பாதுகாப்பு, நீர்வசதி, சமஸ்தானங்க ளிடத்து மன்னர்பிரானுக்குள்ள உரிமைகள், கடமைகள் முதலியவை யாவும் அம்மத்திய சமஷ்டியினிடத்திருக்கும்.'[6] இத்திட்டத்தின்படி முஸ்லிம் ராஜ் யங்கள் பாதுகாப்பு, வெளிநாட்டுறவுகள், போக்குவரவு, சுங்கம் முதலியவை யற்று, முழுச் சுதந்திரமில்லாதனவாக இருக்கும். இது தனித்தனி முஸ்லிம் ராஜ்யங்களையும் முஸ்லிமல்லாத ராஜ்யங்களையும் ஏற்படுத்துகின்ற திட்ட மல்ல. உண்மையில் இது இந்தியாவை ஐந்து பெரும் பகுதிகளாகவும், ஒவ்வொரு பெரும் பகுதியையும் சிறுசிறு பகுதிகளாகவும் மாற்றியமைக்கும் திட்டமாகும். இச்சிறு பகுதிகள் சுயேச்சை பெற்று,சமஷ்டிகளாக அமையும். இச்சமஷ்டிகள் இந்நாடு பூராவுக்கும் பொதுவான மத்திய சமஷ்டியில் சேரும்.

முஸ்லிம் லீக் தீர்மானமோ இந்திய சமஸ்தானங்களைப்பற்றி ஒன்றும் கூறவில்லை. அதைப் பின்பு காண்போம். இத்திட்டமோ அவைகளை ஏதாவ தொரு சமஷ்டியில் சேர்க்கிறது.

இது இந்திய சுதந்திரத்தைக் கருதவில்லை யென்பது வெளிப்படை. ராஜப்பிரதிநிதி, கவர்னர்களை வைத்துக்கொள்வதால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தி யத்திலிருந்து விடுபட விரும்பவில்லை.

இது முஸ்லிம் லீகின் தீர்மானத்தைப் பொதுப்படையாக அனுச ரிக்கிறது: 'வடமேற்கிலும் வடகிழக்கிலும் போல, முஸ்லிம்கள் பெரும் பான்மையாக உள்ள பிராந்தியங்களில்' சுதந்திர ராஜ்யங்களை ஏற்படுத்து கிறது. அப்படிப் பிரிக்கும்போது பஞ்சாபிலும் வங்காளத்திலுமுள்ள சில முஸ்லிம் சிறுபான்மைப் பகுதிகளை விலக்கிவிடுகிறது. அப்படியானால் அது போல முஸ்லிம் சமஸ்தானங்களிலுள்ள சில பகுதிகளையும் அதே காரணங் கொண்டு விலக்கிவிடுவதல்லவா ஒழுங்கு? உதாரணமாக சிந்துஸ்தான் சமஷ்டியிலிருந்து ஜலந்தர் டிவிஷன் முழுவதையும் விலக்கிவிட வேண்டும். அந்த டிவிஷனிலுள்ள ஜில்லாக்கள் ஒவ்வொன்றிலும் இந்துக்களும் சீக்கியர் களும் பெரும்பான்மையோர். ஜில்லாவாரியாக இம்மூன்று வகுப்பினரைக்

4. 'A Punjabi', op. cit., pp. 269-70.
5. *ibid.*, p. 204. 6. *ibid.*, p. 13.

கவனிக்குமிடத்து இந்துக்கள் காங்ரா, ஹோஷியார்ப்பூரில் மிகப் பெருவாரியாவர். ஜலந்தர், பெரோஸ்பூர் ஜில்லாக்களில், முஸ்லிம்களை இந்துக்களோடோ அல்லது சீக்கியர்களோடோ தனித்தனியாக ஒப்பிட்டுப்பார்த்தால் அப்பொழுது பெரும்பான்மையோராகக் காணப்படுகிருர்கள்; இந்துக்கள் சீக்கியர்களோடு சேர்த்து ஒப்பிட்டால் சிறுபான்மையோராகிருர்கள். லாகூர் டிவிஷனிலுள்ள அமிர்தசரஸ் ஜில்லாவைக் கவனித்தால், இந்துக்கள் சீக்கியர்கள் பெரும்பான்மையர், முஸ்லிம்கள் சிறுபான்மையர். முஸ்லிமல்லாதாரும், முஸ்லிம்களும் முறையே 54 : 46 என்ற விகிதத்திலிருக்கின்றனர். வங்க சமஷ்டியிலும், கோல்பாரா ஜில்லாவைச் சேர்ப்பதில் நியாயமில்லை. அங்கு முஸ்லிம்கள் சிறுபான்மையர். முஸ்லிம் பிரதேசங்களைப் பிரிப்பதற்காகத்தான் பிரிவினையென்ருல், முஸ்லிம்கள் சிறுபான்மையினராக இருக்கும் பிரதேசத்தையும் ஏன் முஸ்லிம் பிரதேசத்தோடு சேர்க்க வேண்டுமென்பது தெரியவில்லை.

இத்திட்டங்களுக்கெல்லாம் பொதுவாகச் சொல்லக்கூடிய குற்றங்களிருப்பினும், 'பஞ்சாபி'யினுடைய திட்டத்தில் மாத்திரம் காணும் சில குறைகளும் இருக்கின்றன. ஏதாவது ஒரு விளங்கக்கூடிய கொள்கையில் இந்த ஐந்து சமஷ்டிகள் பிரிக்கப்பட்டிருப்பதாகத் தோன்றவில்லை. இதிலுள்ள இரண்டு சமஷ்டிகள், முஸ்லிம் பெரும்பான்மையைக் கொண்டதென்பது தவிர வேறு வகையில் இப்பிரிவினைக் கொள்கை புரியாத்தனமானது. இந்து சமஷ்டி ஆறு பிரதேசங்களிலமைந்திருக்கிறது. அவைகளுக்கிடையே இதர சமஷ்டிகள் குறுக்கிடுகின்றன. இந்து சமஷ்டி வடக்கே இமயமுதல் தென்குமரி வரையும், கிழக்கே சீனு—பர்மா எல்லையிலிருந்து மேற்கே அரபிக்கடல் வரையும் பரவியிருக்கிறது. ஒரு பிரதேசத்தை இன்னொரு பிரதேசத்தோடு சேர்ப்பதற்கு ஒட்டு நிலங்களும் விடப்பட்டிருக்கின்றன. சில பிரதேசங்கள் அவைகளினுடைய இயல்பான சுற்றுப்புறங்களிலிருந்து பிரிக்கப்பட்டு, நெடுந்தொலைப் பிரதேசங்களோடு சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்தப் பெரிய நிலப்பரப்பில் சிந்தி, பலுச்சி, புஷ்டு தவிர மற்றெல்லா மொழிகளும் பேசப்படுகின்றன. இப்பெரிய நிலப்பரப்பில் வாழும் மக்கள் எல்லா சமயத்தவராகவுமிருக்கின்றனர். அவர்களுடைய தொகையும் விகிதமும் வேறுபடக்கூடும். அந்நிலப்பரப்பில் பிரிட்டிஷ் இந்தியாவும் இந்திய சமஸ்தானங்களும் அடங்கியிருக்கின்றன. இரண்டு கோடி முஸ்லிம்களையும், இன்னும் எத்தனையோ வேறுபாடுகளையும் மாறுபாடுகளையும் கொண்ட இந்நிலப்பரப்பு ஒரு சமஷ்டியாக இருக்க முடியுமானுல், ஏன் இந்தியா முழுதும் ஒரு சமஷ்டியாக இருக்க முடியாதென்பது விளங்கவில்லை. ராஜபுதனமும், மத்திய இந்திய ஏஜென்ஸி சமஸ்தானங்களும் சேர்ந்து ஒரு சமஷ்டியாக முடியுமானுல், சாட்டிஸ்கார் அல்லது ஒரிஸ்ஸாவுடன் சேர்ந்தபாஸ்தார் ஏன் பிரிக்கப்பட்டு ஹைதராபாதுடன் சேர்க்கப்பட வேண்டுமென்பது தெரியவில்லை. மைசூரோடு தொடர்புள்ள திருவாங்கூரையும் கொச்சியையும், தட்சிண சமஸ்தான சமஷ்டியிலிருந்து பிரித்து, இந்து சமஷ்டியோடு ஏன் சேர்க்க வேண்டுமென்பதற்கும் காரணம் தெரியவில்லை. ஹைதராபாத் ராஜ்யத்துக்குள் ராஜபாஷையாகிய உருதுவைத் தவிர மராத்தி, தெலுங்கு, கன்னடம் ஆகிய மூன்று பாஷைகள் பேசப்படுகின்றன. மைசூரும் கொச்சியும் சேர்க்கப்படுவதால், அந்த சமஷ்டியில் இன்னும் அதிகமாக ஒரு பாஷை, அதாவது மலையாளமும் சேரும்.

திரு. எம். ஆர். டி. கூறிய யோசனையை ஒட்டி, ஈஸ்டர்ன் டைம்ஸ் பத்திரி

கையில் ஒரு திட்டம் வந்தது. அது 'இந்தியாவின் வருங்கால அரசியலமைப்புப் பிரசினை'யில் வெளியிடப்பட்டது. அதுவும் 'பஞ்சாபி' திட்டத்தையொட்டியே யிருப்பதால் அதை இங்கு தனியாகக் கொடுக்கவில்லை.

## 18. அலிகார் பேராசிரியர்களின் திட்டம்

பேராசிரியர்கள் சையது சாப்ருல் ஹாசனும், மகம்மது ஆப்சல்ஹுசேன் காத்ரியும் சேர்ந்து வெளியிட்ட திட்டம் இரண்டாவதாகும். அது இந்தியாவைக் கீழ்க்கண்டவாறு முழுச் சுதந்திர நாடுகளாகப் பிரிக்கின்றது :—

(i) பாகிஸ்தான்—பஞ்சாப், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், சிந்து, பலுசிஸ்தானம், சுதேச சமஸ்தானங்களான காஷ்மீர், ஜம்மு, மாண்டி, சாம்பா, சாகித், சுமின், கபூர்தலா, மாலர்கோட்லா, சித்ரால், தீர், காலாத், லோஹாரு, பிலாஸ்பூர், பாஹல்பூர், சிம்லாமலை முதலிய ராஜ்யங்கள் இதில் சேரும்.

ஜனத்தொகை. 3,92,74,244 முஸ்லிம்கள் 2,36,97,538—60 3 சத விகிதம்.

(ii) வங்காளம்—ஹௌரா, மிட்னாப்பூர் ஜில்லாக்கள் தவிர பூர்ணியா ஜில்லா (பீஹார்), சில்ஹட் டிவிஷன் (அஸ்ஸாம்).

ஜனத்தொகை 5,25,79,232—முஸ்லிம்கள் 3,01,18,184–57·0 சத விகிதம்.

(iii) இந்துஸ்தான்—இந்தியாவின் மற்றப் பாகங்களும், சுதேச ராஜ்யங்களும் சேர்ந்ததும், ஹைதராபாத், பாகிஸ்தான், வங்காளம், இவைகளிலுள்ள சுதேச ராஜ்யங்கள் தவிர்த்ததும்.

ஜனத்தொகை 21,60,00,000—முஸ்லிம்கள் 2,09,60,000–9.7 சத விகிதம்,

(iv) ஹைதராபாத்—இதில் ஹைதராபாத், பீரார், கர்னாடகம் (மதராஸ் ஒரிஸா) சேரும்.

ஜனத்தொகை 2,90,65,098—முஸ்லிம்கள் 21,44,010–7·5 சத விகிதம்.

(v) டில்லிமாகாணம்—டில்லி, மீரட் டிவிஷன், ரோஹில்கண்ட் டிவிஷன், அலிகார் ஜில்லாவும் (ஆக்ரா டிவிஷன்) சேர்ந்தது.

ஜனத்தொகை 1,26,60,000—முஸ்லிம்கள் 35,20,000–28சத விகிதம்.

(vi) மலையாள மாகாணம்—இதில் மலையாளமும் பக்கத்து இடங்களும் சேரும், அதாவது மலையாளமும் தென் கன்னடமும்.

ஜனத்தொகை 49,00,000—முஸ்லிம்கள் 14,40,000–27சத விகிதம்.

மேலும், 50000 ஜனத்தொகைக்கு மேலுள்ள இந்திய நகரங்களனைத்தும் சுதந்திர நகர அந்தஸ்தில் இருக்கும். இவைகளின் முஸ்லிம் ஜனத்தொகை 13,88,698 ஆகும். இந்துஸ்தானத்தில் உள்ள முஸ்லிம் கிராமவாசிகள் ஆங்காங்கு சிதறிக்கிடப்பதைத் தடுக்கவேண்டும். முஸ்லிம்களாக உள்ள கிராமங்களில் அவர்களை வாழச் சொல்லவேண்டும்.

மேற்சொன்ன பாகிஸ்தான், வங்காளம், ஹிந்துஸ்தான் ஆகிய மூன்றும், பாதுகாப்புக்காகக் கீழ்க்கண்டவாறு நேச ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டும் :

(i) ஒன்றையொன்று ஒப்புக்கொண்டு உதவிக்கொள்ளுதல்.

(ii) பாகிஸ்தானும் வங்காளமும் முஸ்லிம்களின் தாயகமாகவும், இந்துஸ்தானம் இந்துக்களின் தாயகமாகவும் ஒப்புக்கொள்ளப்பட வேண்டும். அவரவர்கள் விரும்பியபோது அவரவர்கள் நாட்டிற்குச் செல்லலாம்.

(iii) இந்துஸ்தானத்திலுள்ள முஸ்லிம்களை, சிறுபான்மைத் தேசிய இனத்தினராகவும், பாகிஸ்தானத்தையும், வங்காளத்தையும் சேர்ந்தவர்களாகவும் கொள்ளவேண்டும்.

(iv) இந்துஸ்தானத்திலுள்ள முஸ்லிம் சிறுபான்மைக்கும், பாகிஸ்தான், வங்காளத்திலுள்ள இதரச் சிறுபான்மைக்கும் ஜனத்தொகைப்படி பிரதிநிதித்துவமும், பாதுகாப்புகளும், தனித் தொகுதியும் அளிக்கப்பட வேண்டும். சீக்கியர்களுக்கும், இந்துவற்ற இதரச் சிறுபான்மையோருக்கும் தனித்தொகுதியளிக்கவேண்டும்.

(v) இந்துஸ்தானத்தில், யாவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட முஸ்லிம் அரசியல் சபையே முஸ்லிம்களின் நலனைப் பாதுகாக்கும் பிரதிநிதித்துவ சபையாக இருக்கும்.

இந்துஸ்தான், பாகிஸ்தான், வங்காளமாகிய மூன்று நாடுகளும் கிரேட் பிரிட்டனோடு அல்லது ராஜப் பிரதிநிதியோடு நேச ஒப்பந்தங்களைத் தனித் தனியாகச் செய்துகொள்ளலாம். தங்களுக்குள் நேரும் வழக்குகளையும், தங்களுக்கும் அரசருக்கும் நேரும் வழக்குகளையும் விசாரிக்க ஒரு பொது நீதிமன்றத்தை ஏற்படுத்தலாம்.

ஹைதராபாத் ஒரு தனியான உயர்நிலை பெற்றிருக்கிறது. ஒரு நேச நாடாக பிரிட்டிஷ் அரசாங்கத்தால் ஏற்றுக்கொள்ளப்பட் டிருக்கிறது. உடன்பாடுகளின்படி அது ஒரு தனி சுதந்திர நாடு. நிர்வாகக் காரணங்களுக்காக பீராரும், கர்னாடகமும் அதிலிருந்து பிரிக்கப்பட்டன வாதலால், அவை மீண்டும் அதோடு சேர்க்கப்பட வேண்டும். அவைகளைச் சேர்த்தபிறகு, ஹைதராபாத்தை நேபாளத்தைப்போலவே ஒரு தனி ராஜ்யமாக ஒப்புக்கொள்ள வேண்டும். கர்னாடகத்தை அதோடு சேர்த்துவிட்டால் அது முஸ்லிம் இந்தியாவின் தென்சிறகாய் அமையும்.

'பஞ்சாபி'யின் திட்டத்திற்குக் கூறும் குறைகளெல்லாம் இதற்கும் பொருந்தும்; எல்லா வழிகளிலும் பொருந்தும். சொல்லப்போனால் முஸ்லிம்கள் பெருவாரியாகவுள்ள பிரதேசங்களில் முஸ்லிம் ராஜ்யங்களை ஏற்படுத்துவதென்ற லீக் தீர்மானத்திற்கு முரணாக இத் திட்டம் இருக்கின்றது; அம்பாலா டிவிஷனும், ஜலந்தர் டிவிஷனும் இந்துக்களைப் பெரும்பான்மையாகக் கொண்டிருந்தும் அவைகளையும் பாகிஸ்தானில் சேர்க்க விரும்புகிறது; கிழக்கு மண்டலத்தில் இந்துக்கள் பெரும்பான்மையாயுள்ள வங்காள, அஸ்ஸாம் ஜில்லாக்களைச் சேர்க்கிறது; பீஹாரில் இந்துக்கள் பெரும்பான்மையாக உள்ள பூர்ணியா ஜில்லாவையும் இதில் சேர்க்கிறது.

பீராரையும், கர்னாடகத்தையும் சேர்த்து ஹைதராபாத்தை ஒரு தனி முஸ்லிம் ராஜ்யமாக இது ஆக்குகிறது. இந்துக்கள் மிக அதிகமாகவுள்ள அவைகளை ஏன் ஒரு முஸ்லிம் நாடாக்கவேண்டு மென்பது விளங்கவில்லை. முஸ்லிம்கள் அதில் 10.4 சத விகிதத்தினரேயாவர். அத்தேசத்தை ஆள்பவர் ஒரு முஸ்லிம் என்பதுதான் அதற்குக் காரணமென்றால், இந்துவை அரசராகக் கொண்ட காஷ்மீரம் ஏன் பாகிஸ்தானோடு சேர்க்கப்பட வேண்டும்?

இந்தியா முழுதும் தனித்தனி 'சுதந்திர நகரங்களை' உண்டாக்குவதன் மூலமாகப் பிரிவினையை அதிகமாக்க முயலுகிறது இத்திட்டம். இவ்வாசிரியர்கள் இந்துக்களையும் முஸ்லிம்களையும் ஐரோப்பாவிலுள்ள ஸெக் ஜாதியினருக்கும் சுடேட்டன் ஜெர்மானியர்களுக்கும் ஒப்பிடுகிறார்கள். ஆகவே இந் நகரங்களை டான்ஸிக்குக்கு ஒப்பிடலாம். சுடேட்டன் ஜெர்மானியரை ஸெக் ஜாதியின

ருடைய இம்சையிலிருந்து காப்பாற்றுவதாகச் சொல்லி ஜெர்மானியர் ஸெக் ஜாதியினர்மீது போர் தொடுத்ததைப் போல, இந்துஸ்தானத்திலுள்ள முஸ்லிம்களை இந்துக்களின் கொடுமைகளிலிருந்து காப்பாற்றப்போகிறோம், 'சுதிந்திர நகரங்களை விடுவிக்கிறோம்' என்ற சாக்கில் இந்துக்கள் மீது போர் தொடுப்பதற்காக இத்திட்டங்கள் போடப்பட்டனவா? இல்லை யென்றே நம்புவோமாக.

இந்து முஸ்லிம் ராஜ்யங்கள் ஒன்றையொன்று ஒப்புக்கொள்ளவும் உதவவும் ஒப்பந்தங்கள் செய்துகொள்ளலாமென இத் திட்டங்களின் ஆசிரியர்கள் நினைக்கிறார்கள். இந்துஸ்தானத்திலுள்ள முஸ்லிம்களைத் தேசியச் சிறுபான்மையராகக் கொள்ள வேண்டுமென்றும், முஸ்லிம் தேசத்தைச் சேர்ந்தவராகக் கருதவேண்டு மென்றுங் கூறும் இவர்கள், அதேபோல பாகிஸ்தானிலும் வங்காளத்திலும் உள்ள இந்துக்களைப்பற்றி ஒன்றும் கூறாததேனோ? இந்துஸ்தானத்திலுள்ள முஸ்லிம்களின் உரிமைகளைக் கவனிக்க அங்கிகாரம் பெற்ற ஒரு முஸ்லிம் ஸ்தாபனம் இருக்கவேண்டும் என்று கூறும் இவ்வாசிரியர்கள், ஏன் அவ்வித இந்து ஸ்தாபனமொன்று முஸ்லிம் ராஜ்யங்களிலுள்ள இந்துக்களைக் கவனிக்க அமைக்கப்பட வேண்டுமென்று கூற முன்வரவில்லை?

சுருங்கக்கூறின் 'உமி உனக்கு, அவலெனக்கு' என்ற கொள்கையில் தனித்தனி சுதந்தர முஸ்லிம் ராஜ்யங்களை ஏற்படுத்துவதொன்றே இத்திட்டத்தின் நோக்கமெனக் கூறலாகும்.

## 19. ஸி. ரஹமத் அலியின் திட்டம்

மூன்றாவது திட்டம், சௌத்ரி ரஹமத் அலி எழுதிய இஸ்லாத்தின் மில்லத்தும், 'இந்தியத்துவ'த்தின் ஆபத்தும் என்ற வெளியீட்டில் காணப்படுகிறது. அது 1940-ல் எழுதப்பட்டது. இந்த ஆசிரியர் பாகிஸ்தான் தேசிய இயக்கத்தின் ஸ்தாபகத் தலைவர் ஆவார். 1933-ல் இவ்வியக்கத்தை ஆரம்பித்தார். ஆதியில் இவ்வியக்கம் பஞ்சாப், ஆப்கானியா (ஆப்கானியர்கள் பெரும்பாலும் வசிக்கும் எல்லைப்புற மாகாணம்), காஷ்மீர், சிந்து, பலுசிஸ்தானம் ஆகிய மாகாணங்களைப் பிரிக்கவேண்டும் என்ற கோரிக்கையைக் கொண்டதாக இருந்தது. 1940-ல் தம்முடைய திட்டத்துக்குக் கிடைத்த வரவேற்பைப்பற்றி அவர் கூறுவதாவது: 'எங்களுடைய திட்டத்துக்குக் கிடைத்த வரவேற்பு, எங்களுடைய காரியங்களைத் தொடர்ந்து நடத்துமாறு ஊக்கமளிப்பதோடல்லாமல், திட்டத்தின் இரண்டாவது பாகத்தையும் கொண்டுவருவதற்கு ஊக்கமளிக்கிறது. இந்த இரண்டாவது பாகம் வங்காளத்தையும் உஸ்மானிஸ்தானையும் (ஹைதராபாத் - தக்காணம்) சேர்ந்தது.'[1] '"இந்தியா"வில் தங்கிவிடச் சம்மதித்துவிட்டோமானால் "இந்தியத்துவ"த்தில் அகப்பட்டு நலிய வேண்டியதுதான். "இந்தியத்துவம்" இந்திய தேசியவாதிகளென்ற தந்திரக்காரர்களால் ஏற்படுத்தப்பட்ட புதியதொரு மதக் கோட்பாடு. சில முஸ்லிம் ஏமாளிகள் கைகட்டி நின்று பணிவாக அதை ஏற்றுக்கொண் டிருக்கின்றார்கள். சுயநல வாதிகளான பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகள் ஈவிரக்கமின்றி அதை ஆதரித்திருக்கின்றார்கள்.'[2] அவர், அகில இந்திய முஸ்லிம் லீகோடு அதனுடைய பெயரைப்பற்றிச் சண்டை போடுகிறார்: 'அகில இந்திய முஸ்லிம் லீக்,

1. *The Millat of Islam and the Menace of Indianism*, p. 1.
2. *ibid.*, p. 4.

இவ்வளவு காலத்திற்குப் பிறகு "இந்தியர்க"ளிடமிருந்து விடுபட்ட இன ஒற்றுமை வேண்டுமென்று இப்பொழுதுதான் கோருகிறது. அப்படியிருந்தும் "இந்தியா"வோடு ஒட்டிக்கொண்டும், "இந்தியாவை"த் "தாய்நாடு" என்றும் கூறுகிறது.'[3] '"இந்தியா"வின் பூகோள ஒற்றுமையை ஏற்றுக்கொள்வது இன ஒற்றுமையின் (மில்லத்)மீது "இந்தியத்துவம்" என்ற தளையைப் பூட்டுவ தாகும்.'[4] 'அவர்கள் (முஸ்லிம்கள்) ஒரு முடிவுக்குவந்து "இந்தியா"வை விட்டு விலகுவார்களாக. அதாவது இந்தியாவோடு வைத்துக்கொண்ட எல்லாத் தொடர்புகளையும் அறுத்துக்கொண்டு இன ஒற்றுமையை (மில்லத்) இந்தியத் துவத்திலிருந்து காப்பாற்றுவதற்கு அவர்கள் வாழவேண்டும். இஸ்லாமிய நாடுகளின் ஒற்றுமையையும் (பாக்ஸ் இஸ்லாமிக்கா) காப்பாற்ற வேண்டும்.'[5] இவ்வாசிரியர் வங்காளத்திலும், உஸ்மானிஸ்தானத்திலும் சுதந்திரத் தனி யரசுகள் வேண்டுமென்று வற்புறுத்துகிறார். அஸ்ஸாமை வங்காளத்தோடு ஒட்டிய பிரதேசமாக்கி, அதை பாங்-இ-இஸ்லாம் என அழைக்கவேண்டுமென்கிறார். 'இதர நாடுகள் எவ்வாறு சர்வ தேசியச் சட்ட விதிகளின்படி தங்களுடைய நாட்டின்மீது ஆதிக்க உரிமையைக் கொண்டாடுகின்றனவோ அச்சட்டத்தின் பிரகாரமே நமக்கும் உஸ்மானிஸ்தான்மீது உரிமையுண்டு என்ற முக்ய விஷயத் தைச் சொல்லுவது நல்லது. இந்த ராஜ்யம் உஸ்மானிஸ்தானைப்போல இந்த உபகண்டத்தில் ஒரு தனி முக்கியத்துவம் பெற்றது.' 'இது அமைக்கப்பட்ட பிறகு பலமும் உறுதியுமான அடிப்படையில் பாகிஸ்தான், வங்காளம், உஸ்மா னிஸ்தான் ஆகிய மூன்று சுதந்திர நாடுகளை ஸ்தாபனம் செய்வோம், செய்ய வேண்டும். இத்தேசங்கள் சரித்திரத்தில் இதுவரை காணாதபடி அவ்வளவு விரிவாக, பெரிதாக, சக்திவாய்ந்தனவாக இருக்கும்.'[6] "இந்தியத்துவ"த்தி லிருந்து விலக வேண்டுமென்று நாம் உண்மையாக ஆசைப்பட்டால், நாம் "இந்தியா"விலிருந்து தனியாகப் பிரிந்து நம்முடைய தேசீய இன ராஜ்யங்களை இணைத்து தென் ஆசிய நாடுகள் என்று பெயர் வைக்கவேண்டும். அகில இந்திய முஸ்லிம் லீகை ஒழித்துவிட்டு அதற்குப் பதிலாக பாகிஸ்தான், வங்காளம், உஸ்மானிஸ்தான் ஆகிய நாடுகளோடு நேசஉறவு வைத்துக்கொள்ள வேண்டும்.

'நாம் இவ்வாறு செய்தால்தான் "இந்தியா"விலிருந்து நாம் பிரிந்தது ஊர்ஜிதமாகும்; இன வொற்றுமைக்கும் ஊக்கமளிக்கும். உலக மக்கள் மனத்திலும் இது நன்கு பதியும். இதைச் செய்துவிட்டோமானால் நாம் சோதனையில் வென்றவர்களாவோம், காரிய சித்தி அடைந்தவர்களாவோம். நமது நோக்கம், திட்டம், முயற்சி இவைகளில் சிறந்த ஒற்றுமையை அடைந்தவ ராவோம். தெற்கு ஆசியாவில் ஒரு புனித இயக்கத்தைத் தோற்றுவித்தவர்க ளாவோம். புராதனமான புனித காரியத்தில் நமக்குள்ள உறுதி நமக்கு ஆர்வத்தை அளிக்க "பிறை, நட்சத்திரங்க"ளுக் கடியில் ஐக்கியப்பட்டு இறுதி வெற்றி காணும்வரையும் போராடுவோமாக.'[7]

இவ்விதமாக இந்நூலாசிரியர் இரு தேசிய இனக் கொள்கையில் சிறிதும் விடாப்பிடியாக இருக்கிறார். எங்கெங்கு சாத்தியமோ அங்கெல்லாம் முஸ்லிம் ராஜ்யங்களை ஸ்தாபிக்க வேண்டுமென்று சொல்லுகிறார். முஸ்லிம் ராஜ்யங் களில் எந்தெந்தப் பிரதேசத்தைச் சேர்ப்பது, அவைகளில் முஸ்லிம் அல்லாதார் இருந்தார்களானல் அவர்களுடைய உரிமைகள் என்ன, "இந்தியா"வில்

3. *ibid.*, p. 6. 4. *ibid.*, pp. 11-12. 5. *ibid.*, p. 14. 6. *ibid.*, p. 15.
7. *ibid.*, p. 16.

உள்ள முஸ்லிம்களின் உரிமைகள் என்ன என்பதெல்லாம் பேசுவதற்குரிய விஷயங்களாகவே அவருக்குத் தோன்றவில்லை; ஏதோ ஒரு தீர்க்க தரிசனத்தால் விவேகமடைந்திருக்கிறார். மேற்சொன்ன அற்ப விஷயங்களைப்பற்றி அவர் கவலைப்படவில்லை. முஸ்லிம் ராஜ்யங்களை ஏற்படுத்தினால் போதும். எல்லாம் சரியாகிப் போய்விடும்; அவைகளை ஏற்படுத்தவில்லை யெனில் எல்லாம் மோசமாகவே இருக்கும்.

பாகிஸ்தான், பங்கிஸ்தான், உஸ்மானிஸ்தான் இவைகளுக்கான திட்டத்தோடு நமது ரஹ்மத் அலி திருப்தி அடையவில்லை. 1942-ல் பாக் திட்டம், இஸ்லாமிய நாடுகளின் ஐக்கியம் என்று அவர் அழைக்கின்ற திட்டத்தின் 3, 4, 5, 6-வது பாகங்களை வெளியிட்டார். மில்லத்தும் நமது பணியும் என்ற வெளியீட்டில் அவர் ஏழு கற்பனைகளை வெளியிட்டார். 'தினியாவில் ஏழாவது கண்டத்தை ஸ்தாபனம் செய்வதற்காக விதியால் ஏற்படுத்தப்பட்ட ஏழு கற்பனைகள்' என்று அதற்குப் பெயர். அவைகளாவன :

I சிறுபான்மைத் தன்மையாக இருப்பதைத் தவிர்த்தல்.
II தேசீய இனத்தன்மையை ஒப்புக்கொள்ளுதல்.
III விகிதாசாரத்துக்கு ஏற்ற பிரதேசத்தைப் பெறுதல்.
IV தனித்தனி தேசத்தை உறுதி செய்தல்.
V அந்தத் தேசங்களை யெல்லாம் ஒன்றுபடுத்தி 'பாக் காமன் வெல்த்' ஆக்குதல்.
VI 'இந்தியா'வை 'தினியாவாக' மாற்றுதல்.
VII 'தினியா'வையும் அதன் நாடுகளையும் ஒன்றுசேர்த்து 'பாகேஷ்யா' ஆக்குதல்.

I. சிறுபான்மைத் தன்மையைத் தவிர்த்தல்:—'பிரிட்டிஷாரும் இந்துக்களும் சட்டபூர்வமான பாதுகாப்புகள் அளித்தாலும் நாம் நமது சிறுபான்மையரை இந்து நாடுகளில் விட்டுவிடக்கூடாது என்பது இந்தக் கற்பனையின் அர்த்தம்.'

II. தேசீய இனத்தன்மையை ஒப்புக்கொள்ளுதல்:—'முந்தின கற்பனைக்குத் துணைபுரிவது இக்கற்பனை. தினியாவிலும் அதன் கீழ்ப்பட்ட நாடுகளிலும் உள்ள இந்துப் பெரும்பான்மைப் பிரதேசங்களில் நம் வகுப்பைச் சேர்ந்தவர்கள் சிறுபான்மையராக இருந்தால், அவர்கள் தனித் தேசீய அந்தஸ்தைப் பெறவேண்டும். பாகிஸ்தான், பங்கிஸ்தான், உஸ்மானிஸ்தானில் உள்ள இந்து, சீக்கியச் சிறுபான்மையருக்கும் அவ்வித அந்தஸ்தைக் கொடுக்க வேண்டும். தனி நபர் சுயேச்சைப்படி நடக்கும் பருவம் எய்துவதைப் போல ஓர் இனத்தவருக்கு அவருடைய தேசீய இனத்தன்மையும் ஆகும்' என்ற உண்மையிலிருந்து இந்தக் கற்பனை கிளம்பியதாகும். 1940 வரையும் இத்தகைய கோரிக்கையைக் கேட்பதற்குச் சில குடியேற்றத் தகராறுகள் இருந்தன. ஆனால், பாகிஸ்தானில் தங்களுக்குத் தனித் தேசீய அந்தஸ்துக் கொடுக்கவேண்டுமென்று சீக்கியர்கள் கேட்டதிலிருந்து இந்தக் கோரிக்கைக்குத் தடையொன்றுமில்லை. ஆகையால் இந்தக் கோரிக்கையினால் எவ்வளவு அதிகமான பலனைப் பெறமுடியுமோ அவ்வளவு பலனைப் பெறுவதற்கு விகிதாசாரத்துக்குத் தகுந்த பிரதேசத்தைக் கொடு என்ற கொள்கையில் முயல வேண்டும். தினியாவிலும் அதன் வசமுள்ள நாடுகளிலும் உள்ள ஏழு இந்துப் பெரும்பான்மைப் பிரதேசங்களில் நம்முடைய சிறுபான்மையருக்கு அந்தஸ்தும் பிரதேசமும் கொடுத்தால், பாகிஸ்தானிலுள்ள மூன்று சீக்கிய ராஜ்யங்களான

பாட்டியாலா, நாபா, ஜிந்து ராஜ்யங்களுக்கு நாமும் நியாயம் வழங்குவோம் இந்துப் பெரும்பான்மையிலுள்ள நமது சிறுபான்மைப் பிரதேசங்களாவன: சிதிகிஸ்தான், பளுகிஸ்தான், ஹைடரிஸ்தான், மோமீனிஸ்தான், மாப்ளாஸ்தான், சாபிஸ்தான், நாஸரிஸ்தான். முஸல்மான்களுக்கு பாகிஸ்தானைக் கொடுத்தால் பாகிஸ்தானிலுள்ள சீக்கியர்களும் சுதந்திரக் கோரிக்கைகளை வற்புறுத்துவார்களே என்ற வார்த்தைகளைச் சொல்லிச் சொல்லி பிரிட்டிஷாரும் இந்துக்களும் கடந்த 85 வருஷங்களாக நமது ஆர்வத்தை அடக்க முயன்றிருக்கிறார்கள்.' [8]

III. விகிதாசாரத்துக்குரிய பிரதேசத்தைப் பெறுதல்:— சிதிகிஸ்தான், பளுகிஸ்தான், ஹைடரிஸ்தான், மோமீனிஸ்தான், மாப்ளாஸ்தான், சாபிஸ்தான், நாஸரிஸ்தான் இவைகளைச் சிருஷ்டி செய்வதற்கு விகிதாசாரப்படி பிரதேசத்தை அடைய முயலவேண்டும். 'தினியாவிலும் அதன் வசமுள்ள நாடுகளிலும் நமக்குரிய பிரதேசத்தைப் பங்கிட்டுப் பெற்று நமது வகுப்பினருக்கு அதில் நாடுகளை உண்டாக்கவேண்டும்—உதாரணமாக இந்துஸ்தானத்தில் (ஐக்ய மாகாணங்களான ஆக்ராவும் அயோத்தியும்) நமது சிறுபான்மையர் ஜனத்தொகையில் 15 சத விகிதத்தினர். ஆகவே அவர்களுக்கு நிலப்பரப்பிலும் 15 சத விகிதம் உண்டு. இது சுமார் 17000 சதுர மைல்கள் ஆகும். இதை ஹைடரிஸ்தானாக மாற்றவேண்டும்.........அதைப் போலவே மத்திய மாகாணங்கள், புந்தேல்கண்டு, மாளவம், பீகார், ஒரிஸ்ஸா, ராஜிஸ்தான், பம்பாய் மாகாணம், தென்னிந்தியா, மேல் சிங்களம், கீழ்ச் சிங்களம் ஆகிய இடங்களிலும் நம்முடைய சிறுபான்மையர்க்கு உரிய பிரதேசத்தைப்பெற்று அதில் சிதிகிஸ்தான், பளுகிஸ்தான், மோமீனிஸ்தான், மாப்ளாஸ்தான், சாபிஸ்தான், நாஸரிஸ்தான் ஆகிய நமது தேசீய நாடுகளை முறையே உண்டாக்கவேண்டும்.' [9]

IV. தனித்தனித் தேசங்களை உறுதி செய்தல்:—'தினியாவிலும், சிங்களத்திலும் உள்ள நம்மவரைச் சிதறியிருக்கும்படி விட்டுவிடுவது ஆபத்தாகையால் அவர்களை அங்கங்கே குட்டித் தேசங்களாக ஆக்கிப் பலப்படுத்த வேண்டும்.' [10]

V. அந்தத் தேசங்களை யெல்லாம் ஒன்றுபடுத்தி 'பாக் காமன்வெல்த்' ஆக்குதல்:— அதாவது 'குறைந்தது நமது நாடுகள் பத்தையாவது சேர்த்து ஒரு சர்வதேசீய ஸ்தாபனம் அமைக்கவேண்டும்.'

VI. இந்தியாவை, 'தினியா'வாக மாற்றுதல்:—'இந்தியாவின் இந்தியத்துவத்திலிருந்து "ஆன்மாவையும் மண்ணையும் விடுதலை செய்து", தினியத்துவத்துக்கு மாற்றவேண்டும். இவ்விதம் செய்வதன் மூலமாக அது உலகத்தில் தனக்குரிய பூர்விக உயர்நிலையை எய்துமாறு செய்யலாம். ஆகவே நமது பழங்கால லட்சியத்திற்கு நம்மை நாம் அர்ப்பணம் செய்யவேண்டும். உலகத்தின் மிகவும் மோசடிக் கதைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கவேண்டும். இந்தியத்துவத்தின் இடம் இந்தியா அல்ல என்பதையும், இந்தியா என்பது தினியத்துவத்தின் இடம் என்பதையும், இந்தியா என்பது தினியா என்பதையும் நாம் உலகத்திற்குப் பிரகடனப்படுத்தவேண்டும்.' [11]

VII. 'தினியா'வையும் அதன் நாடுகளையும் ஒன்றுசேர்த்து 'பாகேஷ்யா, ஆக்குதல்:— பாகிஸ்தான், பங்கிஸ்தான், உஸ்மானிஸ்தான் என்ற மூன்று சுதந்திர ராஜ்யங்களை உண்டாக்குவதோடு அல்லாது இந்துப் பிரதேசங்களிலும் முஸ்லிம் ராஜ்யங்களை ஏற்படுத்தப் பார்க்கிறார். ஜனத்தொகை விகிதப் பிரகாரம் அவர்

8. Rahmat Ali : *The Millat and the Mission*, pp. 12-13.
9. *ibid.*, pp. 13-14. 10. *ibid.*, p. 16. 11. *ibid.*, p. 18.

களுக்கு நிலப்பரப்பும் கொடுக்கவேண்டுமாம் பிறகு இந்திய ராஜ்யங்களை எல்லாம் ஒன்ருகச் சேர்த்து 'பாக் காமன்வெல்த்' ஆக்குகிருர். இந்தியா என்ற பெயர் மறைந்து, அதே எழுத்துக்களால் ஆன தினியா என்ற பெயரால் அழைக்கவேண்டுமாம் (India—Dinia) பாக் காமன்வெல்த் பாகேஷ்யாவாக மாறும்.

ரஹமத் அலி, பாகிஸ்தான் என்ற பெயருக்கும் அதன் கருத்துக்கும் கர்த்தா. இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டுக்குச் சென்ற முஸ்லிம் பிரதிநிதிகள் சமஷ்டி அமைப்பை ஏற்றுக்கொண்டு 'மில்லத்துக்கு' துரோகம் செய்ததால்தான் இந்தத் திட்டத்தை முதன் முதலில் கொண்டு வந்ததாகச் சொன்ஞர். தம்முடைய கருத்துக்களுக்கு முஸ்லிம் லீக் ஓரளவு மாறியதாகவும் உரிமை கொண்டாடுகிருர். அவர் வெளியிட்டிருக்கின்ற திட்டத்தின் இதர பாகங்களையும், வெளியிடப் போகின்ற திட்டங்களையும் லீக் நாளடைவில் ஏற்றுக்கொள்ளாதென்று யாரால் உறுதி சொல்லமுடியும்? இந்தியா என்ற சொல்லே மறைந்து 'மில்லத்' நிறுவப்பட்டு தினியா என்றே பெயரும் வரக்கூடிய நாளை எதிர்பார்ப்பதற்கு இந்தியர்கள் தயாராக இருக்கவேண்டுமென்று எப்படிச் சொல்லாதிருக்கமுடியும்?

## 20. டாக்டர் எஸ். ஏ. லத்தீபின் திட்டம்

மற்ஞெரு திட்டத்தின் ஆசிரியர் டாக்டர் எஸ். ஏ. லத்தீப். இவர் தம்முடைய திட்டத்தை இந்தியாவில் முஸ்லிம் பிரசினை என்ற நூலில் எழுதியிருக்கிருர். இது பிரிவினை நோக்கம் கொண்டதல்ல; எண்ணற்ற சிக்கல்கள் நிறைந்ததல்ல. இயற்கை வழிகளை ஒட்டி இந்திய ஒற்றுமையை உண்டாக்கும் திட்டமென்று சொல்லப்படுகிறது. ஆகவே இதன் நோக்கம் முற்றிலும் இந்திய மயமானது. கனடாவில் இரண்டு ஜாதிகள் ஒன்றுசேர்ந்து ஒரு பொது நாட்டிற்கு உழைப்பதைப்போல இந்தியாவில் ஒரே கலாசாரமுள்ள இனத்தவர்களைக் கொண்ட நாடுகளை உண்டாக்கி, ஒரு சமஷ்டியையும் உண்டாக்க வேண்டுமென்று இத் திட்டம் நாடுகிறது. இது ஒற்றுமைக்குரிய திட்டமே தவிரப் பிரிவினையை வேண்டும் திட்டமல்ல.[1]

இத்திட்டத்தின்படி, 'முஸ்லிம்களாக உள்ள பிரதேசங்களை நான்காகவும், இந்துக்களாகவுள்ள பிரதேசங்களைப் பதிஞென்ருகவும் இந்தியாவைப் பிரிக்கலாமென்று சொல்லப்படுகிறது. ஆங்காங்குள்ள இந்திய சுதேச ராஜ்யங்களை அவைகளின் உறவுக்கேற்றவாறு முஸ்லிம் பிரதேசங்களோடோ இந்துப் பிரதேசங்களோடோ சேர்த்து விடலாம். இத்தகைய பிரிவுகள் ஒரே இனத்தவரைக் கொண்ட உறுதியான அரசாங்கத்தை உடையதாக இருக்கும். இந்நாடுகள் பலவும் சேர்ந்து ஓர் அகில இந்திய சமஷ்டியில் சேர்ந்திருக்கும்.'[2]

**முஸ்லிம் கலாசாரப் பகுதிகள் :**

I. வடமேற்குப் பகுதி:—இதில் சிந்து, பலுசிஸ்தானம், பஞ்சாப், வடமேற்கு எல்லை மாகாணம், இந்திய சமஸ்தானங்களான காயிர்பூர், பாஹல்பூர் சேர்ந்திருக்கும். சமஷ்டி அரசியல் அமைப்பில் இவை ஒன்றுபட்டு இருக்கும்.

1. S. A. Latif: *Muslim Problem in India*, pp. 28—38.
2. *ibid.*, p. 30.

இரண்டரைக்கோடி முஸ்லிம்கள் இதைத் தங்களுடைய நாடாகப் பெற்றிருப்பார்கள்.

II. வடகிழக்குப் பகுதி :—இதில் கிழக்கு வங்காளம், கல்கத்தா, அஸ்ஸாம் சேர்ந்திருக்கும். மூன்று கோடி முஸ்லிம்கள் அரசியல் சுதந்திரம் பெற்றிருப்பார்கள்.

III. டில்லி லக்ஷ்மணபுரி பகுதி :—மேற்சொன்ன இரண்டு பகுதிகளுக்கிடையே முஸ்லிம்கள் அதிகமாக ஓரிடத்திலும் இல்லை. மேற்சொன்ன இரண்டு பகுதிகளுக்குப் பக்கத்திலுள்ள முஸ்லிம்களை அப்பகுதிகளுக்கே போகும்படி செய்துவிடலாம். ஐக்கிய மாகாணம், பீஹாரிலுள்ள ஒரு கோடியே 20 லட்சம் ஜனங்களைக் கிழக்கே பாட்டியாலாவிலிருந்து மேற்கே லக்ஷ்மணபுரி வரைக்கும் இடையில் உள்ள பிரதேசத்தில் வாழச் செய்யலாம். இதற்குள் ஆக்ரா, டில்லி, கான்பூர், லக்ஷ்மணபுரி முதலியவை அடங்கக்கூடும். இந்து ஸ்தலங்களான காசி, ஹரித்துவாரம், அலஹாபாத், மதுரா முதலியவை இப்பிரதேசத்துக்கு வெளியில் இருக்கும்.

IV. தக்ஷிணப் பகுதி :—இதில் ஹைதராபாத், பீரார், தெற்கத்திய ஜில்லாக்களான கர்நூல், கடப்பை, சித்தூர், வட ஆற்காடு, செங்கல்பட்டு, சென்னை நகரம், கடற்கரையோரம் சேர்ந்திருக்கும். மத்தியமகாணம், பம்பாய் மாகாணம், சென்னை மாகாணம், மைசூர், கொச்சி, திருவாங்கூர் ஆகிய இடங்களிலுள்ள முஸ்லிம்கள் இந்தப் பகுதியில் ஒன்று சேரவேண்டும். வடகிழக்கிலும், டில்லி-லக்ஷ்மணபுரி பகுதியிலும் வாழும் அதிகப்படியான ஜனங்கள் இங்கு வந்து தங்கலாம். மேற்கூறிய நான்கு பகுதிகள் தவிர ராஜபுதனம், குஜராத், மாளவம், மேற்கிந்திய சமஸ்தானங்கள் ஆகியவைகளிலுள்ள முஸ்லிம்களை, போபால், டோங், ஜுனகாத், ஜவ்ரா, ஆஜ்மீர் முதலிய முஸ்லிம் நாடுகளில் சேர்த்து விடலாம். ஜனத்தொகையைப் பரிவர்த்தனை செய்து கொள்ளலாம்.

இந்துக் கலாசாரப் பகுதிகள் :

I. வங்காளத்தின் பாகங்களும் பீஹாரின் பாகங்களும் சேர்ந்து வங்காள இந்துக்களின் ஒரு பிரதேசமாக இருக்கும்.

II. ஓரியா பேசும் ஜனங்களைச் சேர்த்த ஒரிஸ்ஸா பகுதி.

III. மேற்கு பீஹார், ஐக்ய மாகாணம் (இமயமலையிலிருந்து விந்திய மலைவரையும் பரவியுள்ள டில்லி—லக்ஷ்மணபுரி பகுதிவரை), சில மத்திய இந்திய சமஸ்தானங்கள் ஆகியவை சேர்ந்த இந்துஸ்தானம். இதில் ஹிந்தி புத்துயிர் பெற்ற பாஷையாக இருக்கும்.

IV. ராஜபுதனத்திலுள்ள ராஜபுத்ர சமஸ்தானங்கள்.

V. இந்து கத்தியவாரிலுள்ள நாடுகளும், இதர குஜராத்தியக் கலாசாரமுள்ள பிரதேசமும்.

VI. மகாராஷ்டிரம்.

திராவிடக் கலாசார நாடுகள் :—(VII) கன்னடம். (VIII) ஆந்திரா. (IX) தமிழ்நாடு. (X) மலையாளம்.

XI. ஓர் இந்து சீக்கியப் பகுதி :—இதில் காஷ்மீரத்தின் ஒரு பகுதி சேரும். காஷ்மீர் ஜில்லாக்களில் முஸ்லிம்கள் அதிகமாக உள்ள பிரதேசங்களை பஞ்சாபோடு சேர்த்துவிட்டு, வடகிழக்குப் பஞ்சாபிலுள்ள காங்கிரா பள்ளத்தாக்கை மகாராஜாவுக்கு விட்டு விடலாம். சிந்து மாகாணத்திலுள்ள இந்துக்

களை குஜராத், ராஜபுதனத்திலுள்ள இந்துப் பிரதேசங்களுக்கு அனுப்பி விடலாம். இந்து சீக்கியப் பகுதியில் பஞ்சாப் ஸ்டேட்ஸ் ஏஜன்ஸியின் கீழுள்ள முஸ்லிமல்லாத ராஜ்யங்களை எல்லாம் சேர்த்து விடலாம். காஷ்மீர் ராஜ்யத்தின் ஒரு பகுதியும் சேரும்.

இப்புத்தகத்தில் கூறப்பட்டுள்ள எல்லைகள், யோசனை கூறுகிற முறையில் அமைந்திருக்கின்றன. எல்லைகளை வகுக்க ஒரு ராயல் கமிஷனை ஏற்படுத்தலாம்.

இந்துக்களும் முஸ்லிம்களும் தனித்தனிப் பிரதேசங்களில் வாழ வேண்டும். இதர இடங்களில் உள்ளவர்கள் தத்தமக்குரிய இடத்திற்கு மாற்றப்படுவார்கள் என்று இத்திட்டம் யோசனை கூறுகிறது. ஹரிஜனங்கள் இந்து நாட்டிலோ முஸ்லிம் நாட்டிலோ எதில் வாழவேண்டுமானாலும் வாழலாம். ஜனத்தொகையை இடம் மாற்றுவது மெதுவாகச் சில வருஷங்களில் நிறைவேறலாம். ஆரம்பத்தில் அவரவர் இஷ்டப்படி இடத்தை மாற்றும்படி செய்யலாம்.

அரசியல் அமைப்பில் கீழ்க்கண்ட அம்சங்கள் இருக்கவேண்டும் :

(க) இந்திய சமுதாயங்களுக்குப் பொதுச் சட்டம்:—ஒரு பகுதியைச் சேர்ந்தவர் இன்னொரு பகுதியில் வாழலாம். அவருக்குப் பாதுகாப்பும் பிரஜா உரிமையும் அளிக்கப்படவேண்டும்.

(உ) கோயில்கள், ஞாபகச் சின்னங்கள், புதையிடங்கள் :—மத்திய அரசாங்கத்தால் கவனித்துக் காப்பாற்றப்படவேண்டும்.

(ங) கிறிஸ்தவர்கள், பௌத்தர்கள், பார்ஸிகள் :—சின்னஞ் சிறு தேசிய இனத்தினரான இவர்களுக்கு ஒவ்வொரு நாடும் சமய, கலாசாரப் பாதுகாப்புகள் அளிக்கும். அவர்கள் விரும்பினால் தங்களுக்கென்று சேரிகளை அமைத்துக் கொள்ளலாம்.

(ச) ஹரிஜனங்கள் :—இந்து அல்லது முஸ்லிம் பிரதேசங்களில் தங்களுடைய தாயகங்களை ஏற்படுத்தி, முழுப்பிரஜா உரிமையோடு வாழலாம்.

இந்நூலாசிரியர் 1935-ம் வருஷத்திய சட்டத்திற்குப் பதிலாக வேறொரு அரசியல் அமைப்பைத் தயார் செய்திருக்கிறார்.

அவ்வமைப்பு ஒவ்வொரு சமஷ்டிப் பகுதிக்கும், இந்திய சமஸ்தானங்களுக்கும் முழுச் சுயாட்சி கொடுத்துப் பாதுகாப்பும் அளிக்கிறது. சமஷ்டிக்குரிய அதிகாரப் பொறுப்புக்களைக் குறைத்திருக்கிறது.

இந்தப் பகுதிகளர்க ஒன்று கூடித் தங்களுக்குள் பொதுச் சபைகள் ஏற்படுத்திக் கொள்ளலாம். கலாசார, பொருளாதார விஷயங்களைப் பற்றி இவைகள் ஒன்றுகூடிப் பொதுத் திட்டங்களை வகுக்கலாம்.

ஒவ்வொரு மாகாணப் பகுதியிலும் மத்திய அரசாங்கத்திலும் ஒருமனப்பட்ட உறுதியான நிர்வாக சபை இருக்கவேண்டும். இது பிரதிநிதித்வ முறையில் அமையவேண்டுமென்பது அவசியமில்லை.

முஸ்லிம்களுக்கும், இதரச் சிறுபான்மைகளுக்கும் பாதுகாப்பு அளிக்கக் கூடிய இலாகாவை மத்தியிலும், சமஷ்டிப் பகுதிகளிலும் ஏற்படுத்துவதற்கு இவ்வமைப்பு இடங்கொடுக்கிறது.

இந்த இந்திய சமஷ்டித் திட்டத்தில் எல்லா சமஷ்டிப் பகுதிகளுக்கும் நிரம்ப சுயாட்சி உண்டு. எல்லாப் பகுதிகளுக்கும் பொதுவிஷயங்களான பாதுகாப்பு, வெளிநாட்டுக் காரியங்கள், வியாபாரம், போக்கு வரவு முதலிய

விஷயங்கள் சமஷ்டியில் இருக்கும். மிச்ச அதிகாரங்கள் சமஷ்டிப் பகுதிகளில் இருக்கும்.

இந்தியாவில் எத்தனையோ கலாசாரங்கள் இருக்கின்றன. அவைகள் அபிவிருத்தி அடைந்து வளருவதற்குச் சுதந்திரம் கொடுக்கப்படவேண்டும். பாதுகாப்பு உணர்ச்சி அளிக்கவேண்டும். சமஷ்டியில் சேருவதற்கு இஷ்டப் படவேண்டும். மத்திய அரசாங்கம் கலாசார விஷயத்தைப் பற்றிச் சட்டம் இயற்றுவதற்கு இடங்கொடுக்கலாகாது.

சமஷ்டிப் பகுதிகளுக்கு முழு சுயாட்சி கொடுத்ததனால் சமஷ்டிப் பகுதிகளை ஒன்றுபடுத்த வேண்டிய அவசியம் ஏற்படும். ஆகவே சில சமஷ்டிப் பகுதிகள் ஒன்று சேர்ந்து பொதுக்கொள்கைகளையும், பொதுப் பிரசினைகளையும் உண்டாக்கித் தீர்ப்பதற்குப் பகுதிவாரியாக போர்டுகள் ஏற்படுத்தலாம். இத்தகைய போர்டுகளை ஏற்படுத்துவதால் சில சமஷ்டிப் பகுதிகளைச் சேர்த்து உப சமஷ்டிகள் ஏற்படுத்த வேண்டிய அவசியம் இராது.

பல கட்சிகளையும், பல கூட்டங்களையும் சேர்ந்த மனிதர்களைக்கொண்டு உறுதியான நிர்வாக சபையை ஏற்படுத்தவேண்டும். இதன்மூலம் பெரும்பான்மை வகுப்பு சிறுபான்மையைக் கொடுமைப்படுத்துவதைத் தடுக்கலாம். வெவ்வேறு வகுப்புக்களையும் சேர்ந்த பொதுக்கொள்கைகளையும் திட்டத்தையும் வகுத்து அகில இந்தியாவுக்கும் அவைகளைப் பொதுவாக்கலாம். மேற்கூறிய நிர்வாக சபை, கூட்டுமந்திரி சபையா யிருக்கவேண்டுமென்பதில்லை. ஆனால் உறுதியான கட்டுப்பாடுள்ளதாக இருக்கும். சட்டசபைகளால் பிரதமர் தேர்ந்தெடுக்கப் படவேண்டும். வகுப்புவாரிப் பிரதிநிதித்வம் கொண்ட மந்திரிசபையை அவர் அமைக்கலாம். விகிதாச்சாரப்படி மந்திரிகளின் எண்ணிக்கை இருக்கவேண்டும். இந்தியா முழுமைக்கும் இதே விகிதாச்சாரம் ஒப்புக்கொள்ளப்பட வேண்டும். பிரதமரால் தேர்ந்தெடுக்கப்பட்ட இத்தகைய மந்திரி சபையைச் சட்டசபை ஓட்டுகளால் வெளியேற்ற முடியாது.

அரசியலமைப்பில் முஸ்லிம்களுக்குக் கீழ்க்காணும் பாதுகாப்புகள் அளிக்கப்பட வேண்டும்.

(அ) சட்டசபைகளில் பிரதிநிதித்வம்:—(1) தனித்தொகுதிகளும், பல மாகாணங்களில் உள்ளதுபோல முஸ்லிம்களுக்கு விகிதாச்சாரமும் இருக்க வேண்டும்.

(2) மத்திய சட்டசபைக்கு இந்திய சமஸ்தானங்கள் போதுமான அளவு முஸ்லிம்களை அனுப்ப வேண்டும். அதாவது சமஷ்டிப் பகுதிச் சட்ட சபைகளில் உள்ளதுபோல், மத்ய சட்டசபையில் மூன்றிலொரு பங்கு ஸ்தானங்களாவது இருக்க வேண்டும்.

(3) பகுதி போர்டுகளிலும் முஸ்லிம்களுக்குப் போதுமான பிரதி நிதித்வம் இருக்கவேண்டும்.

(ஆ) சட்டம்:—இஸ்லாமிய மதம், தனி நபர்ச் சட்டம், கலாசாரம் இவை களைப்பற்றிச் சட்டசபையில் உள்ள முஸ்லிம் அங்கத்தினர்களே கவனிக்க வேண்டும். இதற்கென்று தனிக் கமிட்டி ஏற்படுத்த வேண்டும். முஸ்லிம் சட்டத்திலும், சமயக் கல்வியிலும் படித்தவர்கள் இவர்களுக்கு உதவி செய்ய லாம். இக்கமிட்டியின் முடிவுகளைச் சட்டசபைகள் ஏற்றுக் கொள்ள வேண்டும். இந்த முடிவுகள் இதர வகுப்பாருக்கு இடைஞ்சல் செய்யுமானல் இம்முடிவுகளைச் சட்டசபை நன்கு பரிசீலனை செய்யும். ஆனால் இந்த முடிவு களின் அடிப்படையைப் பாதிக்க விடக்கூடாது.

(இ) நிர்வாகம் :—இந்து முஸ்லிம் பிரதிநிதிகளால் ஆக்கப்பட்ட நிர்வாகம் அமைக்கவேண்டும். இரு சாராருக்கும் சம்மதமான கொள்கையை அனுஷ்டிக்க வேண்டும். அமெரிக்க ஐக்ய நாடுகளில் உள்ளதுபோல இந்த நிர்வாக அமைப்பைச் சட்டசபைகள் வெளியேற்ற முடியாதபடி இருக்கவேண்டும். பிரதமர் சட்டசபையில் தெரிந்தெடுக்கப்படவேண்டும்; அமெரிக்காவில் உள்ளதுபோல ஜனங்களால் தெரிந்தெடுக்கப்படக்கூடாது. பிரதமர் சட்டசபையில் உள்ள எல்லாக் கூட்டத்தினரையும் சேர்ந்தவர்களை மந்திரிகளாகப் பொறுக்கி எடுக்க வேண்டும். முஸ்லிம் அங்கத்தினர்களால் சிபாரிசு செய்யப்பட்டவர்களை முஸ்லிம் மந்திரிகளாக ஆக்க வேண்டும். சட்டம், அமைதி, கல்வி முதலிய இலாகாக்களுக்கு ஒரு மந்திரியும், ஒரு துணை மந்திரியும் நியமிக்கப்பட்டும் அதில் ஒருவர் முஸ்லிமாகவும் இருக்கவேண்டும்.

(ஈ) அரசாங்க உத்தியோகக் கமிஷன் :—முஸ்லிம்கள் சிறுபான்மையாக உள்ள மாகாணங்களில் உத்தியோகக் கமிஷன் அங்கத்தினராக ஒரு முஸ்லிமாவது இருக்கவேண்டும். உத்தியோகங்களில் போதுமான பிரதிநிதித்வம் முஸ்லிம்களுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்பதைக் கவனிப்பது இவருடைய முக்கிய வேலை.

(உ) நீதி :—முஸ்லிம்களுடைய தனி நபர்ச் சட்டத்தை நிலைநாட்டுவது முஸ்லிம் நீதிபதிகளாக இருக்கவேண்டும்.

(ஊ) முஸ்லிம் கல்வியையும் பொருளாதார முன்னேற்றத்தையும் கவனிக்கும் போர்டு : முஸ்லிம்களுடைய கல்வியையும், கைத்தொழில், இயந்திரப் பயிற்சியையும் கட்டுப் படுத்த, கவனிக்க, பயிற்சி யளிக்க இந்த போர்டுக்கு அதிகாரம் உண்டு.

(எ) பிரத்தியேக வரி விதித்தல் :—ஏதாவது தனிப்பட்ட காரணத்தைக் கொண்டு முஸ்லிம்கள் தங்களுக்குள் வரி வசூலிக்கத் தீர்மானித்தால் அதற்குத் தேவையான சட்டமளிக்க அனுமதிதர வேண்டும்.

இடைக்காலத்தில் ஜனங்கள் குடியேறுவதை அவர்களது இஷ்டத்திற்கு விட்டுவிடவேண்டும். ஜனத்தொகையை பரிவர்த்தனை செய்வதற்கு ஒரு ராயல் கமிஷனை ஏற்படுத்தவேண்டும். இடைக்கால அரசியல் அமைப்பு, இறுதியில் சமஷ்டியை உண்டாக்குவதற்கு ஏற்றவாறு இருக்க வேண்டும். ஜனத்தொகை மாற்றத்தை ஏற்படுத்தாதபடி கலாசாரத்தை ஒட்டி அல்லது பாஷையை ஒட்டிச் சில புதிய மாகாணங்களை ஏற்படுத்த வேண்டியதிருக்கலாம். இந்தப் புதிய மாகாணங்கள் மிகச் சிறியவையாயுமிருக்கலாம். ஆனால் தற்போதைய ஐக்கிய மாகாணங்களிலும் பீஹாரிலும் உள்ள முஸ்லிம்களுக்கென்று ஒரு புதிய மாகாணத்தை உடனே அமைக்கவேண்டும். அதற்கு ஒரு முஸ்லிம் பிரதமர் தேர்ந்தெடுக்கப்படவேண்டும்.

லத்தீப் திட்டத்தில் இரண்டு பெருங் குறைகள் இருக்கின்றன. பெருவாரியான ஜனத்தொகையை பரிவர்த்தனை செய்ய வேண்டியதிருக்கிறது. மாகாணத்திற்கு மாகாணம் மாற்ற வேண்டியதோடல்லாமல் பிரிட்டிஷ் இந்தியாவிற்கும் இந்திய சமஸ்தானங்களுக்கும் இடையே இப்பரிவர்த்தனை செய்ய வேண்டியதாகவும் இருக்கிறது. இதைச் செய்து முடிப்பதற்கு அநேக வருஷத் தவணை கொடுத்தாலும், செலவும் சிரமமும் அசாத்தியமாகும். ஆகவே இத்திட்டம் நடைமுறைக்கு ஒவ்வாதது. தலைமுறை தலைமுறையாக ஓரிடத்தில், ஒருவிதச் சுற்றுப்புறத்தில், ஒருவகை சீதோஷ்ண நிலையில் வாழ்ந்த பொது மக்களை, வேரோடு பறித்து முன்பின் அறியாத வேறொரு மண்ணில், வேறொரு சுற்றுப்புறத்தில் நடுவதென்றால், சம்பந்தப்பட்ட ஜனங்களுக்கு அளவற்ற

தொல்லேயே மிஞ்சும். ஆரம்பத்தில் ஜனங்கள் தங்கள் இஷ்டப்படி போகலாம் என்றும் நாளடைவில் அவர்களைக் கட்டாயப்படுத்திப் போகச் சொல்ல வேண்டுமென்றும் சொல்லப்படுகிறது. இஷ்டப்பட்டுப் போகச் சொன்னல் இந்துக்களோ முஸ்லிம்களோ, தங்களது தாயகத்தில் பற்றுள்ளவர்களாதலால், தங்களது இடங்களைவிட்டுக் கிளம்பமாட்டார்கள். கட்டாயப்படுத்தினால், அதனுல் ஏற்படும் துன்பங்கள் சகிக்க முடியாதவை ஆகும். இடம் மாற்றப்பட வேண்டிய ஜனத்தொகை இந்திய ஜனத்தொகையில் மூன்றில் இரண்டு பங்காகும் என்று 'பஞ்சாபி' எழுதிய இந்தியாவின் மத்திய சமஷ்டி என்ற புத்தகத்தில் எடுத்துக் காட்டப்படுகிறது. கோடிக்கணக்கான ஜனத்தொகையை இடம் மாற்றுவதென்பதும், ஆயிரக்கணக்கான சதுர மைல்களில் உள்ளவர்களை அப்புறப்படுத்துவதென்பதும் சரித்திரத்தில் கேட்டதுமில்லை ; நடந்ததுமில்லை.

இரண்டாவதாக இந்தத் திட்டம் சமஸ்தானங்களை இப்பொழுதிருக்கின்ற நிலைமையிலேயே கிட்டத்தட்ட வைத்துவிடுகின்றது. பிரிட்டிஷ் ஆட்சியிலேயே ஒரு சமஷ்டியை நிறுவுகிறது. சமஸ்தானங்களிலோ பிரிட்டிஷ் இந்தியாவிலோ அரசருக்கும் ஜனங்களுக்கும் உள்ள தொடர்பை ஜனங்கள் முடிவு செய்துகொள்ளட்டும் என்று இவ்வாசிரியர் விட்டுவைக்கிருர் போலும். ஆனல் இத்தகைய அரசியல் அமைப்பில் இத்தகைய அடிப்படையான பிரசினையை ஒதுக்கி வைத்துவிட்டு, அதிலுள்ள வகுப்புவாதப் பக்கத்தை மாத்திரம் கவனிப்பது இயலாத காரியம். இந்தியாவில் உள்ள எல்லா அரசியல் கட்சிகளும் தங்களுடைய லட்சியம் சுதந்திரம் என்றே தீர்மானம் செய்திருக்கின்றன. லட்சியத்தில் எல்லாக் கட்சிகளும் ஒத்திருக்கின்றன. மிதவாதிகள் மாத்திரம் குடியேற்றநாட்டு அந்தஸ்தைச் சுதந்திரத்துக்குச் சமம் என்று சொல்லிக்கொண் டிருக்கிருர்கள். ஆகவே சமஸ்தானங்களில் இப்பொழுது இருக்கின்ற கொடுங்கோலரசாட்சி அமைப்பை இன்னும் நீடிக்க விடுவது கூடாது. மன்னர்கள், வேண்டுமானல் இங்கிலாந்தில் உள்ள மன்னரைப்போல இருப்பதற்கு ஆசைப்படட்டும் ; ஆனல், அதிகாரம் முழுதும் ஜனப் பிரதிநிதிகள் கைக்கு மாறவேண்டும்.

எல்லையை வகுக்கின்ற வேலையை இந்நூலாசிரியர் ஒரு ராயல் கமிஷனுக்கோ அல்லது எல்லோருடைய சம்மதம் பெற்ற ஒரு ஸ்தாபனத்துக்கோ விட்டுவிடுகிருர். ஆகவே இத்திட்டத்தைப் பற்றிய விமரிசனமும் நிரந்தர மதிப்பைப் பெற்றதாகாது. ஹைதராபாத், பீரார், தென் ஜில்லாக்களான கர்நூல், கடப்பை, சித்தூர், வட ஆற்காடு, செங்கல்பட்டு, சென்னை நகரம் இவை யத்தனையும் சேர்ந்து தக்காணப் பகுதியாகப் பிரிக்கப்பட வேண்டுமென்பதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது என்பது தெரியவில்லை. மத்திய மாகாணம், பம்பாய், சென்னை மாகாணங்களிலுள்ள முஸ்லிம்களும், மைசூர், கொச்சி, திருவாங்கூரிலுள்ள முஸ்லிம்களும் தக்காணப் பகுதியில் வந்து சேர்ந்தாலும், அவர்களுக்குக் கொடுக்கப்படும் நிலப்பரப்பு முஸ்லிம் அல்லாதாருக்குக் கொடுக்கப்படுவதைக் காட்டிலும் அதிகமாக இருக்கிறது. மேலும் இது ஒரு மொழியைச் சேர்ந்த மாகாணமாகவும் இருக்காது. அதில் மராத்தி, தெலுங்கு, கன்னடம், ஓரளவு தமிழ் இத்தனையும் கலந்திருக்கும். திருத்தி அமைப்பது என்று ஏற்பட்டுவிட்டால் ஹைதராபாத்தில் உள்ள மராத்தி, தெலுங்கு, கன்னடம், தமிழ் பிரதேசங்களை அம்மொழிகளைப் பேசும் பெரும்பான்மை மாகாணங்களோடு ஏன் சேர்க்கக்கூடாது? இப்படிச் செய்வதுண்டானல், ஹைதராபாத் ராஜ்யம் சிதறுபடும். இங்ஙனம் சிதறுவதைத் தடுக்க

வேண்டுமென்ருல் பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள சில பகுதிகளை அதில் சேர்க்கலாம். இப்படி எல்லாம் செய்தாலும்கூட அங்குள்ள முஸ்லிம்களுக்குப் பெரும்பான்மை கிடைக்குமா என்பது சந்தேகம்தான்.

பகுதிவாரி போர்டுகளை ஏற்படுத்துவது அநாவசியமாகத் தென்படுகிறது. இதனுல் சமஷ்டிப் பகுதிகள் சுதந்திரமுள்ளவையா என்பது சந்தேகத்திற்கு இடமளிக்கிறது. மத்திய சமஷ்டிக்கும் மாகாணங்களுக்குமிடையே புதியதொரு நிர்வாகத்தை ஏற்படுத்துவதனுல் காரியங்கள் சீரடைந்து விடுமென்பது இல்லை. இரண்டு மூன்று மாகாணங்களுக்கு மாத்திரம் உரிய பொது விஷயங்களைப்பற்றிப் பரிசீலனை செய்வதற்கு மத்திய அரசாங்கத்தின்மீது நம்பிக்கையில்லாவிட்டால் இதற்கென்று விசேஷக் கமிட்டிகளை ஏற்படுத்திக் கொள்ளலாம். இந்தத் திட்டத்திலுள்ள அநேக சில்லறை விஷயங்களை இங்கு கவனித்துக் கொண்டிருப்பது அவசியமில்லை. ஏனென்ருல் அவை விவரிக்கப்படவில்லை. முஸ்லிம்களைத் திருப்திப்படுத்துமானுல் அமெரிக்க அரசியல் அமைப்பையோ, சுவிஸ் அரசியல் அமைப்பையோ நமக்கு வேண்டிய திருத்தங்களோடு நாம் எடுத்துக்கொள்ளலாம். ஆனுல் அது விஷயம்பற்றி இங்கு பரிசீலனை செய்யவேண்டியதில்லை. பிரதேசத்தைத் திருத்தி அமைப்பதும் ஏராளமான ஜனத்தொகையை இடம் மாற்றுவதும் இதோடு சேர்க்கப்பட்டால் பிரசினை இன்னும் சிக்கலாகக்கூடும்.

## 21. ஸர் சிக்கந்தர் ஹையாத்கானின் திட்டம்

காலஞ்சென்ற ஸர் சிக்கந்தர் ஹையத்கான் எழுதிய இந்திய சமஷ்டியின் பொதுக் கொள்கைகள் என்ற வெளியீட்டில் மற்ருெரு திட்டம் காணப்படுகிறது. பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களும் இந்திய சமஸ்தானங்களும் இதில் சேரலாம்.

(1) பிரதேச அடிப்படையில் அகில இந்திய சமஷ்டியை ஏற்படுத்துவதற்காக நாட்டை ஏழு பகுதிகளாகப் பிரிக்கலாம்:

பகுதி I. அஸ்ஸாமும், வங்காளமும் (மேற்கத்திய ஒன்றிரண்டு ஜில்லாக்களை எடுத்துவிடலாம்), வங்காள சுதேச சமஸ்தானங்களும், சிக்கிம் சமஸ்தானமும்.

பகுதி II. பீஹாரும், ஒரிஸ்ஸாவும் (வங்காளத்தின் ஜில்லாக்களிலிருந்து ஒரிஸ்ஸாவுடன் சேர்த்தவையுடன்).

பகுதி III. ஐக்கிய மாகாணங்கள், சமஸ்தானங்களுடன்.

பகுதி IV. சென்னை, திருவிதாங்கூர், சென்னையிலுள்ள சுதேச சமஸ்தானங்கள், குடகு.

பகுதி V. பம்பாய், ஹைதராபாத், மேற்கிந்திய சமஸ்தானங்கள், பம்பாய் சமஸ்தானங்கள், மைசூர், மத்தியமாகாண சமஸ்தானங்கள்.

பகுதி VI. ராஜபுதன சமஸ்தானங்கள் (பிகானிர், ஜெய்ஸல்மீர் தவிர), குவாலியர், மத்திய இந்திய சமஸ்தானங்கள், பீஹார் ஒரிஸ்ஸா சமஸ்தானங்கள், மத்திய மாகாணம், பீரார்.

பகுதி VII. பஞ்சாப், சிந்து, வடமேற் கெல்லை மாகாணம், காஷ்மீரம், பஞ்சாபிலுள்ள சமஸ்தானங்கள், பலுசிஸ்தானம், பிகானிர், ஜெய்ஸல்மீர்.

இவ்வெல்லைகள் தற்காலிகமானவை; பின்னுல் அவசியமானுல் மாற்றிக் கொள்ளலாம்.

(2) ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு சட்டசபை உண்டு. 1935-ம் வருடத்திய இந்திய அரசாங்கச் சட்டப்படி பிரிட்டிஷ் இந்தியாவும் சுதேச ராஜ்யங்களும்

தங்களுக் கேற்பட்ட தொகையினரான் பிரதிநிதிகளைச் சட்டசபைகளுக்கு அனுப்பலாம்.

(3) எல்லாப் பகுதியிலிருந்தும் அனுப்பப்பட்ட சட்டசபைப் பிரதிநிதிகளாகச் சேர்ந்து, மத்திய சமஷ்டிச் சட்டசபை அங்கத்தினர்களாவார்கள். இவர்களது எண்ணிக்கை மொத்தம் 375 (பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து 250-பேரும் இந்திய சமஸ்தானங்களிலிருந்து 125-பேரும்). கீழே 21-வது பாராவின் பிரகாரம் இத்தொகை மாறலாம்.

(4) சமஷ்டிச் சட்டசபையின் மூன்றிலொரு பங்கினர் முஸ்லிம்களாக இருக்கவேண்டும்.

(5) 1935-ம் வருடத்திய இந்திய அரசாங்கச் சட்டப்பிரகாரம் இதரச் சிறுபான்மைக்கு ஸ்தானங்கள் அளிக்கப்படும்.

(6) பகுதிச் சட்டசபை, பகுதி ஜாபிதாவுக் கடங்கிய விஷயங்களைப் பற்றிச் சட்டமியற்றலாம். அதில் சேர்ந்துள்ள இரண்டு அல்லது மேற்பட்ட யூனிட்டுகள் விரும்பினல் மாகாண ஜாபிதாவுக்குரிய விஷயங்களைப்பற்றியும் சட்டமியற்றலாம். இந்தச் சட்டங்களை அமுலுக்குக் கொண்டுவருவதற்கு முன்னல் அந்தந்த யூனிட்டிலுள்ள அரசாங்கம் அதை ஊர்ஜிதம் செய்ய வேண்டும். அதற்கு முந்திய சட்டங்கள் செல்லுபடியாகா.

(7) பகுதி ஜாபிதாவைச் சேர்ந்த விஷயங்களில் எந்தச் சட்டமியற்றப் பட்டாலும் அதற்கு அங்கத்தினர்களில் மூன்றில் இரண்டு பங்கினர் ஆதரவு தரவேண்டும். இல்லாவிட்டால் அது தீர்மானிக்கப்பட்டதாகாது.

(8) பகுதி சம்பந்தப்பட்ட விஷயங்களில் சட்டமியற்றுவதற்கு எந்தப் பகுதிகளும் சமஷ்டிச் சட்டசபைக்கு அதிகாரமளிக்கலாம். இதற்கு ஏழு பகுதிகளில் நான்கு பகுதிகளாவது இவ்வாறு கேட்டுக்கொள்ளவேண்டும். இவ்வாறு இயற்றப்பட்ட சட்டத்தை எல்லாப் பகுதிகளும் ஏற்றுக்கொண்டால் தான் அது எங்கும் அமுலுக்கு வரலாம். இல்லாவிட்டால் எந்தப் பகுதி வேண்டிக்கொண்டதோ அந்தப் பகுதியில் மாத்திரம் இச்சட்டம் அமுலுக்கு வரும்.

(9) சமஷ்டிச் சட்டசபையில் பகுதிகளால் வேண்டப்பட்டு நிறைவேற்றப் பட்ட சட்டத்தை ரத்துசெய்யுமாறு மூன்று பகுதிகள் கேட்டுக்கொண்டாலும் அவ்வாறே ரத்து செய்யவேண்டும். யூனிட்டுகளின் வேண்டுகோளின்படி இயற்றப்பட்ட சட்டத்தை ரத்து செய்யுமாறு அதில் சேர்ந்த பாதி யூனிட்டுகள் கேட்டுக்கொண்டால் அவ்வாறே அச்சட்டத்தை ரத்து செய்யவேண்டும்.

(10) சமஷ்டி நிர்வாகசபையில் சக்கரவர்த்தியின் பிரதிநிதியான வைசிராயும், ஏழுக்குக் குறையாமலும் பதினொன்றுக்கு மேற்படாமலும் உள்ள மந்திரிகளும் சேர்ந்திருப்பர். சமஷ்டிப் பிரதமரும் அதிலிருப்பார்.

(11) சமஷ்டிச் சட்டசபையிலுள்ள அங்கத்தினர்களிலிருந்து ஒருவரை சமஷ்டிப் பிரதமராக ராஜப் பிரதிநிதி நியமிப்பார். பிரதமருடைய யோசனையின்பேரில் அச்சட்டசபை அங்கத்தினர்களிலிருந்து சிலரை மந்திரிகளாக நியமிப்பார். அதற்குரிய சில விதிகள் பின்வருமாறு :

(i) ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு மந்திரியாவது இருக்கவேண்டும்.

(ii) மந்திரிகளில் மூன்றிலொரு பங்கினர் முஸ்லிம்களாக இருக்க வேண்டும்.

(iii) மந்திரிகளின் எண்ணிக்கை ஒன்பதுக்குக் குறைந்தால் அதில்

இருவர் சுதேச சமஸ்தானங்களைச் சேர்ந்தவர்களாக இருக்கவேண்டும்; ஒன்பதுக்கு அதிகமானால் மூவர் இருக்கவேண்டும்.

விதிகள் ii-ம் iii-ம் ஒன்றையொன்று தழுவுவதைப்பற்றி எதிர்ப்புக் கிடையாது. மற்ற முக்கிய சிறுபான்மைகளுக்கும் போதுமான பிரதிநிதித்துவம் கொடுப்பதற்கு எல்லாவித முயற்சிகளும் செய்யப்படும்.

(iv) சமஷ்டித் திட்டம் ஆரம்பித்த முதல் பதினைந்து அல்லது இருபது வருஷத்திற்கு, பாதுகாப்புக்கும் வெளிநாட்டுறவுக்கும் ராஜப் பிரதிநிதி இரண்டு மந்திரிகளை நியமனம் செய்யலாம். அவர்கள் சட்டசபை அங்கத்தினர்களாகவோ அல்லது வெளியார்களாகவோ இருக்கலாம். அக்காலத்திற்குப் பிறகு எல்லா மந்திரிகளும் சட்டசபை அங்கத்தினர்களாகவே இருக்க வேண்டும்.

மந்திரிகளும் அவர்களுடைய பொறுப்பும் தற்காலிகமாக வகுக்கப் பட்டவை: 1. சமஷ்டிப் பிரதமர். 2. பாதுகாப்பு மந்திரி. 3. வெளிநாட்டு மந்திரி; இந்திய சமஸ்தான விஷயங்களும் இவர் கவனிக்கவேண்டியவை. 4. சமஷ்டி நிதிமந்திரி. 5. உள்நாட்டு மந்திரி. 6. போக்குவரவு, தபால் தந்தி மந்திரி. 7. சிறுபான்மை மந்திரி. 8. ஒருமிப்பு மந்திரி; பகுதிகளிடையே பொதுநல விஷயங்களில் ஒருமித்த நடவடிக்கை எடுக்கும்படி கவனிப்பவர். 9. வர்த்தக, கைத்தொழில் மந்திரி.

(12) (i) சமஷ்டிச் சட்டசபைக்குள்ள வயதே (5 வருடம்) மந்திரிப் பதவிக்கும் இருக்கவேண்டும்.

(ii) மந்திரிகள் பதவியி லிருப்பது வைசிராயின் இஷ்டத்தைப் பொறுத்தது.

(iii) ஒரு பகுதியி லிருந்துவந்த மந்திரி அந்தப் பகுதியின் நம்பிக்கையை யிழந்தால் தம் பதவியையும் இழக்கவேண்டும்.

(iv) 11-வது பாராவில் (iv)-ல் குறிப்பிட்ட மந்திரிகள் தவிர மற்றவர்கள், மந்திரிசபைமீது சமஷ்டிச் சட்டசபையில் நம்பிக்கையில்லாத் தீர்மானம் வந்தால், ராஜினாமா செய்யவேண்டும்.

(13) பகுதிச் சட்டசபைகளின் பிரதிநிதிகளைக் கீழ்க்கண்டவாறு தேர்ந்தெடுக்கவேண்டும்:

(i) பிரிட்டிஷ் இந்திய யூனிட்டுகளைப் பொறுத்தவரை 1935-ம் வருடத்திய இந்திய அரசாங்கச் சட்டப்படி சமஷ்டிச் சட்டசபைக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கவேண்டும்.

(ii) சுதேச சமஸ்தானங்களைப் பொறுத்தவரை கீழ்க்கண்ட விதிகளைக் கூடியமட்டும் அனுசரிக்கலாம்:—

(அ) முதல் பத்து வருஷத்திற்கு முக்கால் பங்கினர் அரசரால் நியமிக்கப்பட்டு, கால்பங்கினர் சமஸ்தானச் சட்டசபை கொடுத்த மனிதர்களிலிருந்து அரசரால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக இருக்கவேண்டும்.

(ஆ) அடுத்த 5-வருஷத்திற்கு மூன்றில் இருபங்கினரை அரசர் நியமிக்க வேண்டும். மீதி ஸ்தானங்களுக்கு (அ)-வில் குறிப்பிட்டதுபோல.

(இ) அடுத்த 15-வருஷத்திற்கு பாதி நியமனம், பாதியை (அ)-வில் போலத் தேர்ந்தெடுத்தல்.

(ஈ) அடுத்த 20-வருஷங்களுக்கும் அதன்பின்பும் மூன்றிலொரு பங்கினர் நியமன மாகுதல். மீதியை (அ)-வில் போலத் தேர்ந்தெடுத்தல்.

(14) தற்காப்பு விஷயமாக ஆலோசனை கூறுவதற்கு வைசிராயைத் தலைவராகக்கொண்ட ஒரு கமிட்டி இருக்கவேண்டும். அதன் அங்கத்தினர்கள்: சமஷ்டிப் பிரதமர், பாதுகாப்பு மந்திரி, வெளிநாட்டு மந்திரி, நிதிமந்திரி, போக்குவரத்து மந்திரி, சேனைத் தலைவர், உத்யோகஸ்தர்களின் தலைவர், கடற்படைத் தலைவர், விமானப்படைத் தலைவர், 7-பகுதியின் பிரதிநிதிகள், வைசிராயால் நியமிக்கப்பட்ட உத்யோகத்திலுள்ள 5-நிபுணர்கள், உத்யோகப் பற்றற்ற இருவர், பாதுகாப்பிலாகாக் காரியதரிசி ஆகியோர்.

(15) வெளிநாட்டுறவைக் கண்காணிக்க, வைசிராயைத் தலைவராகக் கொண்ட ஒரு கமிட்டியும் இருக்கவேண்டும். இதன் அங்கத்தினர்கள்: சமஷ்டிப் பிரதமர், வெளிநாட்டு மந்திரி, பகுதிச் சட்டசபை அங்கத்தினர்களிலிருந்து தலைவரால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள், வைசிராயால் நியமனம் செய்யப்பட்ட இரு உத்தியோகஸ்தர்கள், இரு உத்தியோகப் பற்றற்றவர்கள், வெளிநாட்டிலாகாக் காரியதரிசி ஆகியோர்.

இந்தக் கமிட்டிகளில் சுதேச சமஸ்தானப் பிரதிநிதிகளின் எண்ணிக்கை 3-க்குக் குறையுமானால், மன்னர் சபை அனுப்பும் ஜாபிதாவிலிருந்து தலைவர் மற்றுஞ் சிலரைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம்.

(16) சமஷ்டி ரயில்வே நிர்வாக சபையில் 7 பகுதிப் பிரதிநிதிகளும் இருக்கவேண்டும்.

(17) அரசியலமைப்பில் பலன்தரும் முறையில் கீழ்க்காணும் பாதுகாப்புகள் இருக்கவேண்டும்:

(i) சிறுபான்மையரின் சட்டபூர்வமான நலன்களைப் பாதுகாத்தல்.

(ii) பிரிட்டிஷாரின் வமிசத்தைச் சேர்ந்த குடிகளுக்குப் பாதகமான காரியங்களைத் தடுத்தல்.

(iii) சுதேச சமஸ்தானங்கள் செய்துகொண்ட உடன்படிக்கைகள், ஒப்பந்தங்களைப் பாதுகாத்தல்.

(iv) சமஷ்டி நிர்வாகம், அல்லது சமஷ்டிச் சட்டசபை, அல்லது பகுதிச் சட்டசபை பிரிட்டிஷ் இந்திய யூனிட்டுகளின் அல்லது சுதேச சமஸ்தான யூனிட்டுகளின் சுதந்திரத்தில் தலையிடாதபடி பார்த்துக்கொள்ளுதல்.

(v) வெளிநாட்டு ஆக்கிரமிப்பிலிருந்து இந்தியாவைப் பாதுகாத்தல்; யூனிட்டுகளில் அமைதியை நிலைநாட்டுதல்; இந்தியாவின் உள்நாட்டமைதியையும் பாதுகாத்தல்.

(vi) ஒரு யூனிட்டிலோ அல்லது பகுதியிலோ உள்ள மக்கள் மற்றொரு யூனிட்டுக்கோ அல்லது பகுதிக்கோ எதிராகக் காரியம் செய்யாதபடி தடுத்தல்.

(vii) சிறுபான்மைகளின் கலாசாரத்தையும், மத உரிமைகளையும் பாதுகாத்தல்.

(18) 1937 ஜனவரி 1-ல் உள்ள இந்திய ராணுவ அமைப்பை மாற்றக் கூடாது. சமாதான காலத்தில் அதைக் குறைப்பதுண்டானால் 1937 ஜனவரி 1-ல் உள்ள வகுப்புவாரி விகிதாச்சாரத்தை மாற்றக்கூடாது. நாட்டின் அமைதிக்குப் பயமேற்படும்பொழுது, பெரும் ஆபத்து அல்லது யுத்தமேற்படும் பொழுது, இவ் விகிதாச்சாரத்தைத் தளர்த்தலாம்.

(19) நாட்டின் முழுமைக்கும் நன்மையான விஷயங்களையும், அவைகளின் ஒழுங்கான நிர்வாகத்தையும் மத்திய சமஷ்டியினிடம் ஒப்படைத்துவிட வேண்டும். உதாரணமாக பாதுகாப்பு, வெளிநாட்டுக் காரியங்கள், போக்குவரவு, சுங்கம், நாணயம் முதலியவை. சமஷ்டி ஜாபிதாவிலுள்ள இதர

விஷயங்கள் யூனிட்டுகளிடம் அல்லது பகுதிகளிடம் இருக்கவேண்டும். சமஷ்டி ஜாபிதாவில் இல்லாத மீதி அதிகாரங்கள் யூனிட்டுகளிடம் இருக்க வேண்டும். பகுதிக்கு ஒப்படைக்கப்பட்ட விஷயங்கள் பகுதிச் சட்டசபைகளி லிருக்கவேண்டும்.

(20) ஒரு விஷயம் சமஷ்டியைச் சேர்ந்ததா, பகுதியைச் சேர்ந்ததா, அல்லது பொதுவானதா, அல்லது மாகாணத்தைச் சேர்ந்ததா, அல்லது சுதேச சமஸ்தானத்தைச் சேர்ந்ததா என்ற சந்தேகம் ஏற்படும்பொழுது வைசிராயின் தீர்மானமே முடிவானது.

(21) சமஷ்டிச் சட்டசபை ஒன்ருகவே இருக்கவேண்டும். மேல்சபையில் தற்போது பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட்ட விசேஷ நலன்களுக்குரிய அதிக ஸ்தானங்களை 7 பகுதிகளுக்கும் சமமாகப் பங்கிடவேண்டும்.

(22) மத்தியிலும் மாகாணங்களிலும் சிறுபான்மைகளின் நலன்களைப் பாதுகாக்க ஒரு தனி இலாகா இருக்கவேண்டும். போதுமானதும் பலனளிக்கக் கூடியதுமான அதிகாரம் அதன்வசம் இருக்கவேண்டும்.

பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களும், இந்திய சமஸ்தானங்களும் தனித்த இரு பாகங்களாக சமஷ்டியில் நுழையாமல், பிரதேசவாரியாக வந்து சேருவ தற்கு இந்தத் திட்டம் வழி தேடுகிறதால் இந்திய ஒற்றுமைக்கும் மத்திய அரசாங்க உறுதிப்பாட்டிற்கும் உகந்த திட்டமென்று சொல்லப்படுகிறது. பக்கத்தில் பக்கத்திலுள்ள பிரதேசங்களுக் கிடையிலும், இனங்களுக்கிடை யிலும், மொழியும் பொருளாதார நிலைமையும் ஒன்ருக அமைந்துள்ள பாகங் களுக்கிடையிலும், இயற்கை உறவையும் காரிய வொற்றுமையையும் வளர்க்கும், இத்திட்டம். சட்டம், அமைதி, கைத்தொழில், விவசாய ஆராய்ச்சி ஏற்பாடுகள், நிர்வாகப் பயிற்சிக் கூடங்கள் ஆகிய இவற்றில் ஒன்றுபட்டு முன்னேறலாம். பிரிட்டிஷ் இனங்களும் சுதேச இனங்களும் சமஷ்டியில் யாதொரு ஐயப்பாடும் இல்லாமல் சேர இடமளிக்கிறது. தங்களுடைய உறவுகளிலும் உள்நாட்டு விவகாரங்களிலும் மத்திய அரசாங்கம் தலையிடாதபடி அதன் அதிகாரம் குறைவு பட்டதென அவை நன்கு அறியும். சிறுபான்மைகளுக்குப் பாதுகாப்புணர்ச்சி அளிக்கிறது. யூனிட்டுகளின் சுதந்திரத்திற்கும் முழுமைக்கும் யாதொரு ஊனமும் ஏற்படாதென்ற நிலைமையும் இத்திட்டத்திலிருக்கிறது.

இத்திட்டம் 1935-ம் வருடத்திய இந்திய அரசாங்கச் சட்டத்திற்கு ஒரு திருத்தம்போல இருக்கிறது. இந்திய சுதந்திரத்தைத் தன் குறிக்கோளாகக் கொள்ளவில்லை. வருங்காலத்தில் எந்தச் சமயத்திலும் இந்திய சமஸ்தானங் களில் தேர்தல் முறையை ஏற்படுத்தும் உத்தேசத்தை இதில் காண முடிய வில்லை. உள்நாட்டிலும் சரி, சமஷ்டிச் சட்டசபைக்கும் சரி, வடிகட்டிய நியமன முறையையே ஏற்படுத்துகிறது. வெளிநாடு, பாதுகாப்பு ஆகிய முக்கிய இரு இலாகாக்களுக்கு வெளியாரை அதாவது தேர்ந்தெடுக்கப்படாத பிரதிநிதிகளை வைசிராய் நியமிப்பதற்கு இடமளிக்கிறது. மந்திரிகள் அவரவர்க ளுடைய பகுதிச் சட்டசபைக்குப் பொறுப்பாளியாவதால் மந்திரிசபைக்குக் கூட்டுப்பொறுப்புக் கிடையாது. நம்பிக்கையில்லாத் தீர்மானம் வந்தாலும் வெளியேற்ற முடியாத வெளியார்கள் மந்திரியாக இருப்பதாலும் மந்திரி சபைக்குக் கூட்டுப்பொறுப்புக் கிடையாது. மந்திரிகள் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள், எந்தப் பகுதியைச் சேர்ந்தவர்கள், எந்த ராஜ்யத்தைச் சேர்ந்த வர்கள் என்பது முக்கியமாகக் கவனிக்கப்படுகிறதே யொழியத் திறமைக்கும் ஆற்றலுக்கும் முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. மந்திரிகளது விசுவாசமும்

ஒருமுகப்பட்டதல்ல; கிளைவிட்டது. இதிலுள்ள சிறந்த அம்சம் என்ன வென்றால் இந்தியாவை, அரசியல், கலாசாரக் காரணங்களால் இது துண்டாட வில்லை. இந்தியாவை ஒரே தேசமாகக் கருதுகிறது.

## 22. சர் அப்துல்லா ஹரூன் கமிட்டியின் திட்டம்

1940 பிப்ரவரியில் அகில இந்திய முஸ்லிம் லீகின் வெளிநாட்டுக் கமிட்டி இந்திய அரசியலமைப்புச் சீர்திருத்தத்திற்குத் திட்டமிட்ட பல ஆசிரியர் களையும் வரவழைத்தது. எல்லாத் திட்டங்களையும் பரிசீலனைசெய்து ஏதாவது ஒரு நல்ல திட்டத்தை உறுதி செய்யலாமா என யோசனை செய்தது. அவ்வாறு பல ஆசிரியர்கள் ஒன்றுகூடி ஒரு கமிட்டியாக அமைந்து, லாகூர் தீர்மானத்தை யொட்டி ஒரு திட்டத்தைத் தயாரித்தார்கள். லாகூர் தீர்மானம், சர் அப்துல்லா ஹரூனால் தயாரிக்கப்பட்டது. இந்தக் கமிட்டியின் திட்டத்தில் பிரிட்டிஷ் இந்தியா தவிர்த்த, மற்ற இடங்களிலுள்ள முஸ்லிம்களைப் பற்றியும் கூறப்பட் டிருந்ததால் இது பாகிஸ்தான் தீர்மானத்தைக் காட்டிலும் முழுமைபெற்ற தெனக் கூறலாம்.

வடமேற்கிலும் வடகிழக்கிலும் இரண்டு முஸ்லிம் ராஜ்யங்களை ஏற்படுத்தலாமென்று இந்தக் கமிட்டி சிபாரிசு செய்தது. வடமேற்கில் முஸ்லிம்கள் 63 சத விகிதத்தினராகவும் வடகிழக்கில் 54 சத விகிதத்தின ராகவும் இருப்பார்கள்.

### அட்டவணை III

(I) வடமேற்கு ராஜ்யம் அல்லது பகுதி. (1931-ஆம் ஆண்டு ஜனத் தொகை.)

| | மொத்த ஜனத்தொகை | | முஸ்லிம் ஜனத்தொகை |
|---|---|---|---|
| பஞ்சாப் | 2,35,80,852 | | 1,33,32,460 |
| சிந்து | 38,87,070 | | 28,30,800 |
| எல்லைப்புறம் | 24,25,076 | | 22,27,303 |
| பிரிட்டிஷ் ஆட்சியிலுள்ள எல்லைப்புற மலைப்பகுதி | 13,67,231 | | 13,17,231 |
| பிரிட்டிஷ் பலுசிஸ்தானம் | 4,63,508 | | 4,05,309 |
| டில்லி மாகாணம் | 6,36,246 | | 2,06,960 |
| மொத்தம் | 3,23,60,063 | (?) | 2,03,20,063 |
| | | | அல்லது 62·79 சத விகிதம். |

(II) வடகிழக்கு ராஜ்யத்தில் அடங்கிவை: அஸ்ஸாம், வங்காளம் (பாங்கூரா, மிட்னாப்பூர் ஜில்லாக்கள் தவிர), பீஹாரைச் சேர்ந்த பூர்ணியா.

| | |
|---|---|
| மொத்த ஜனத்தொகை | 5,70,10,946 |
| முஸ்லிம்கள் | 3,08,76,421—அதாவது 54 சத விகிதம். |
| முஸ்லிமல்லாதார் | 2,61,34,523—அதாவது 46 சத விகிதம். |

முஸ்லிமல்லாதவர்களில் சுமார் 85,00,000 அதாவது 32 சத விகிதத்தினர் தாழ்த்தப்பட்ட வகுப்பினர், சுமார் 15,00,000, அதாவது 6 சத விகிதத்தினர்

மலைஜாதியினர், சுமார் 4 லட்சம்பேர் கிறிஸ்தவர்கள், மற்றவர்கள் ஜாதி இந்துக்கள்.

(III) 'பிரிட்டிஷ் இந்தியா அல்லாத இதர பாகங்களிலும், முஸ்லிம் செல்வாக்கு மிகுந்த இடங்களில் அச்செல்வாக்கை நிரந்தரமாக்குவது முஸ்லிம்களுக்கும் நல்லது, மற்றவர்களுக்கும் நல்லது என்பதை எடுத்துக்காட்டுவது இக்கமிட்டியின் கடமையாகும். ஆகவே எல்லா மகமதிய சுதேச சமஸ்தானங்களையும், சிறிதோ பெரிதோ எதுவாயினும், முஸ்லிம் அரசியல் திட்டத்தின்படி சுதந்திர முஸ்லிம் ராஜ்யங்களாகவே கருதவேண்டும். நைஜாம் சமஸ்தானத்தை விஸ்தரித்துச் சுதந்திரமுடைய நாடாக ஆக்கவேண்டுமென்பது நமது அடிப்படைக் கோரிக்கையாக இருக்கவேண்டும். அதற்குக் கடற்கரையும் கொடுக்கப்படவேண்டும். இப்படிப்பட்ட நாடு நைஜாம் சமஸ்தானத்திற்கு வெளியிலுள்ள இந்திய முஸ்லிம்களுக்கு அளவற்ற பலமளிக்கும். இந்திய முஸ்லிம்களனைவரும் ஒருங்கு திரளுமிடமாகவும், தங்களுடைய அரணாகவும் ஹைதராபாத்தை ஆக்கிவிட்டால், தங்களுக்கு எவ்வளவோ நல்லது என்பதை முஸ்லிம்கள் ஒரு காலத்தில் உணரமாட்டார்கள் என்று நாம் எவ்வாறு சொல்லக்கூடும்.'[1] இவ்விதமாக ஹைதராபாத் முஸ்லிம் அதிகாரத்தின் மூன்றாவது பெருநிலையமாகும்.

பக்கத்திலுள்ள முஸ்லிம் ராஜ்யங்களோடு சுதேச சமஸ்தானங்களும் பொதுக் காரியங்களுக்காக ஒன்றுகூடி சமஷ்டியாவதைப்பற்றியும் இக்கமிட்டி பரிசீலனை செய்தது. இந்த ஏற்பாடு செய்யப்பட்டால் நிலைமை கீழ்க்கண்டவாறு இருக்கும்:

## அட்டவணை IV

### வடக்கத்திய முஸ்லிம் பகுதி

| பெயர் | மொத்த ஜனத்தொகை | முஸ்லிம் ஜனத்தொகை |
|---|---|---|
| மேலே காட்டியபடி பிரிட்டிஷ் இந்திய மாகாணங்கள் | 3,23,60,063 | 2,03,20,063 |
| எல்லைப்புற சமஸ்தானங்கள் | | |
| தீர், சுவாத், சித்ரால் | 9,02,075 | 8,52,000 |
| பலுசிஸ்தான் சமஸ்தானங்கள் | | |
| கலாட் | 3,42,101 | 3,31,234 |
| லாஸ்பேலா | 63,008 | 61,550 |
| சிந்து சமஸ்தானங்கள் | | |
| கைர்பூர்மிர்ஸ் | 2,27,183 | 1,86,577 |
| பஞ்சாப் சமஸ்தானங்கள் | | |
| பாஹல்பூர் | 9,84,612 | 7,99,176 |
| கபூர்தலா | 3,16,757 | 1,79,251 |
| பாட்டியாலா | 16,25,520 | 3,63,920 |
| நாபா | 2,87,574 | 57,393 |

1. *The Pakistan Issue*, pp. 79-80.

| பெயர் | மொத்த ஜனத்தொகை | முஸ்லிம் ஜனத்தொகை |
|---|---|---|
| பரித்கோட் | 1,64,364 | 49,912 |
| ஜிந்த் | 3,24,676 | 46,002 |
| மாலர்கோட்லா | 83,072 | 31,417 |
| லொஹாரு | 23,338 | 3,119 |
| பாட்டாடி | 18,873 | 3,168 |
| துஜனு | 28,216 | 5,863 |
| சாம்பா | 1,46,870 | 10,839 |
| மாண்டி | 2,70,465 | 6,351 |
| சுகெத் | 58,408 | 733 |
| கால்சியா | 59,848 | 21,797 |
| சிம்லா மலை சமஸ்தானங்கள் | 3,30,850 | 10,017 |
| சிர்மூர் | 1,48,568 | 7,020 |
| பிலாஸ்பூர் | 1,00,994 | 1,458 |
| காஷ்மீர் | 36,46,243 | 28,17,636 |
| பிகானிரும் ஜெய்சல்மீரும் சேர்வதாய் இருந்தால் | | |
| பிகானிர் | 9,36,218 | 1,41,578 |
| ஜெய்சல்மீர் | 76,255 | 22,116 |
| மொத்தம் | 4,35,26,151 | 2,63,30,190 |
| | | (அல்லது 69.49 சத விகிதம்) |
| பிகானிரையும் ஜெய்சல்மீரையும் நீக்கி | 4,25,13,678 | 2,61,66,526 |
| | | (அல்லது 61·54 சத விகிதம்) |

வடமேற்குப் பகுதியிலுள்ள சிறுபான்மைகளின் எண்ணிக்கையை இக்கமிட்டி மிகவும் சிரமப்பட்டுப் பின்வருமாறு ஆராய்ந்திருக்கிறது. வடமேற்கு பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் தொகை 14,13,532 அல்லது 4·36 சத விகிதம். சீக்கியர்களின் தொகை 31,39,964 அல்லது 9·70 சத விகிதம். ஜாதி இந்துக்கள் 70,19,278 அல்லது 21 69 சத விகிதம். சுதேச சமஸ்தானங்களிலுமுள்ள ஜனத்தொகையையும் இவ்வாறு கணக்கிட்டிருக்கிறது. சுதேச சமஸ்தானங்களில் ஜாதி இந்துக்கள் 24,94,093 பேர் அதாவது 22·33 சத விகிதம். சீக்கியர்கள் 10,58,142 பேர் அதாவது 10·42 சத விகிதம் என்றும் கூறப்படுகிறது.

(குறிப்பு: சமஸ்தானங்களில் ஜாதி இந்துக்களின் சத விகிதம் கண்டுபிடித்தது தவறு எனத் தோன்றுகிறது. 22·33 என்பதற்குப் பதிலாக 24·56 என்றிருக்கவேண்டும்.)

கிழக்கு முஸ்லிம் பகுதியில் கீழ்க்காணும் சமஸ்தானங்களை சமஷ்டியில் சேரும்படி தூண்டலாம்:—

## அட்டவணை V

| | மொத்த ஜனத்தொகை | முஸ்லிம் ஜனத்தொகை |
|---|---|---|
| வங்காள சமஸ்தானங்கள் | | |
| கூச் பீஹார், திரிபுரா | 9,73,316 | 3,12,476 |
| அஸ்ஸாம் சமஸ்தானங்கள் | | |
| மணிப்பூர், காஸி மலை | 6,25,606 | 24,600 |
| பிரிட்டிஷ் மாகாணங்கள் | 5,70,10,946 | 3,08,76,421 |
| மொத்தம் | 5,86,09,868 | 3,12,13,497 |

அல்லது 53·15 சதவிகிதம்.

மொத்த ஜனத்தொகையில் சிறுபான்மை வகுப்புக்களின் சத விகிதம் வருமாறு :

## அட்டவணை VI

| பிரதேசம் | ஜாதி இந்துக்கள் | தாழ்த்தப்பட்ட வகுப்பினர் | மலை ஜாதியினர் | கிறிஸ்தவர்கள் |
|---|---|---|---|---|
| பிரிட்டிஷ் வங்காளம் ... | 29·9 | 13·7 | 1·5 | — |
| வங்க சமஸ்தானங்கள் ... | 64·9 | 3 0 | — | — |
| பிரிட்டிஷ் அஸ்ஸாம் ... | 36·6 | 21·0 | 8·2 | 2·5 |
| அஸ்ஸாம் சமஸ்தானங்கள் ... | 43·7 | — | 44·9 | 7·4 |

இரு பகுதிகளிலும் பிரதேசங்கள் கீழ்க் கண்டவாறு அமையும் :—

| | பிரிட்டிஷ் இந்தியா (ச. மைல்கள்) | சமஸ்தானங்கள் (ச. மைல்கள்) | மொத்தம் (ச. மைல்கள்) |
|---|---|---|---|
| கிழக்குப் பகுதி ... | 225,352 | 213,370 | 438,722 |
| வடமேற்குப் பகுதி... | 129,637 | 17,754 | 147,391 |
| இருபகுதிகளின் மொத்தம் ... | 354,989 | 231,124 | 586,113 |

இந்தியா முழுமையையும் எடுத்துக்கொண்டால் நிலைமை கீழ்க்கண்டவாறு இருக்கும் :—

| | |
|---|---|
| இந்தியா முழுமையின் மொத்த ஜனத்தொகை ... | 35,05,29,557 |
| முஸ்லிம் ஜனத்தொகை ... ... | 7,76,78,245 |
| மேற்கு, கிழக்குப் பகுதிகளிலுள்ள முஸ்லிம் ஜனத்தொகை (சமஸ்தானங்கள் உள்பட) ... | 5,75,42,787 |

அல்லது 74 07 சதவிகிதம்.

இவ்விதமாக இந்தக் கமிட்டி சுமார் 74·07 சதவிகித முஸ்லிம்களுக்குத் தன்னுடைய பிரேரணைகள் மூலம் பாதுகாப்பளிக்கிறது.

'இந்தப் பிரதேசவாரி ராஜ்யங்கள் அமைக்கப்பட்ட உடனேயே அவைகள் பாதுகாப்பு, வெளிநாட்டுறவுகள், சுங்கவரிகள் முதலிய பொறுப்புக் களை ஏற்பதாக லீகின் லாகூர் தீர்மானம் கருதவில்லை. ஆகவே எல்லா ராஜ்யங்களுக்கும் பொதுவான ஒரு பொது நிர்வாக அமைப்பு இடைக்காலத்தில் இருக்கும் என்பது ஏற்படுகிறது. எல்லா ராஜ்யங்களையும் ஒருங்கு சேர்க்கும் ஒரு பொது நிர்வாகம் இன்றியமையாததாக இருக்கும். இத்தீர்மானத்தின் மூன்ருவது கொள்கையின்படி சிறுபான்மையருக்குள்ள பாதுகாப்புரிமைகளைச் சரிவரக் கண்காணித்து நிறுவுவதற்கு முஸ்லிம் செல்வாக்குள்ள நாடுகளுக்கும் முஸ்லிம் செல்வாக்கற்ற நாடுகளுக்குமிடையே ஏதாயினும் ஒருவித சம்பந்த முள்ள அமைப்பு இருந்தேயாக வேண்டும். சமஷ்டி அமைப்போ முஸ்லிம் களுக்குப் பிடிக்கவில்லை. பெரும்பான்மையான இந்துக்களின் கை ஓங்கிவிடு மென்று பயப்படுகிருர்கள். அத்தீர்மானத்தில் கண்ட விதிகளை நிறைவேற்றி வைக்க ஏதாயினும் ஒரு பொது ஏற்பாடு இருக்க வேண்டுமாகையால் மத்திய அரசாங்க அதிகாரத்தில் முஸ்லிம்கள் பாதிப் பங்கு பெறக்கூடிய முறையில் ஒரு திட்டம் வகுக்கவேண்டும்.'[2]

ஆகவே எல்லா 'சுதந்திர' நாடுகளுக்கும் முக்கிய காரியங்களைக் கவனிக்கக்கூடிய பொது நிர்வாகத்தை ஏற்படுத்துவதற்கு ஓர் ஒப்பந்தத்திற்கு வரவேண்டுமென்று அக்கமிட்டி கூறுகிறது. அந்தப் பொது நிர்வாகம் சில நிபந் தனைகளுக்குட்பட்டு, (அ) வெளிநாட்டுறவு (ஆ) பாதுகாப்பு (இ) போக்குவரவு (ஈ) சுங்கம் (உ) சிறுபான்மைப் பாதுகாப்பு, இடம் மாறிக் குடியேறுதல் ஆகிய விஷயங்களைக் கவனிக்கும். அந்நிபந்தனைகளாவன:

(அ) பாதுகாப்பு :—ஒவ்வொரு நாடும் தன்னுடைய பிரதேச முக்கியத்தைப் பொறுத்த அளவில் ஒரு படையை வைத்திருக்கும். அப்படைச் செலவில், படையளவுக்குத் தக்கபடி மத்திய அரசாங்கமும் பங்கேற்றுக் கொள்ளும். சாதாரண காலங்களில் படையை அந்தந்த நாடே ஆளும். யுத்த காலங்களில் படையை மத்திய அரசாங்கமே ஆளும்.

(ஆ) கடற்படை:–மத்திய அரசாங்கத்தின் ஆட்சியிலேயே இருக்கும். மத்திய அரசாங்கத்தினிடம் ஒப்படைக்கப்பட்ட விஷயங்கள் தவிர மற்ற யாவும் நாடுகளிடமே யிருக்கும். மிச்ச அதிகாரங்களும் தனி நாடுகளிடமே இருக்கும். பொது நிர்வாக சபைகளிலும், போர்டுகளிலும் முஸ்லிம்கள் பாதிக்குப் பாதி யாகவே யிருக்கவேண்டும்.

மேற்கண்ட திட்டத்தைப் பிறப்பித்த கமிட்டியின் அங்கத்தினர் ஒன்பது பேர். அவர்களுக்குள் கடிதப் போக்குவரத்திலிருந்தபொழுதே 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையில் இத்திட்டம் தலைகாட்டிவிட்டது. இக்கமிட்டி அங்கத்தினருள் பேராசிரியர் ஆப்ஸல் ஹுசேன் காத்ரியும் ஒருவர். இவரும் தனியாக ஒரு திட்டத்தை அமைத்துள்ளார் என்பதை நாம் கண்டோம். சுதேச சமஸ்தானங்களைச் சேர்ப்பதும் முஸ்லிமல்லாத இந்திய நாடுகளோடு தொடர்பு கொள்வதும் லாகூர் தீர்மானத்துக்குப் புறம்பான செயல் என்பது இவருடைய எண்ணம். 'மத்திய நிர்வாகம்' 'மத்திய அரசாங்கம்' எனப்படும் எதற்கும் அவர் எதிரி. அப்படி ஏற்படும் காலத்தில் இந்து ராஜாங்கமாகிய அகில இந்திய சமஷ்டியே ஏற்பட்டுவிடும் என்று அவர் கருதினர். டாக்டர் சையது லத்தீப் இக்கமிட்டியின் மற்ருெரு அங்கத்தினர். இவரும் ஒரு திட்டத்தை ஏற்படுத்தியவர். இந்தக் கமிட்டி அறிக்கையில் கண்டுள்ளபடி வடமேற்கு,

2. op. cit., pp. 87-8.

வடகிழக்குப் பகுதிகளின் எல்லைகளை வகுப்பது இவருக்குத் திருப்தியளிக்க வில்லை. இக்கமிட்டியிலுள்ள பஞ்சாப், சிந்து, ஐக்கிய மாகாண அங்கத்தினர் களே, எல்லையை நிர்ணயித்தவர்கள். டாக்டர் எஸ். ஏ. லத்தீப் ஸர் ஹரூ னுக்கு எழுதினார்: 'முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ள இடங்களில் ஒரே இனத்தவரைக் கொண்ட நாடுகளையே லாகூர் தீர்மானம் வேண்டுகிறது. ஆனால் உங்கள் கமிட்டியிலுள்ள பஞ்சாப், அலிகார் அங்கத்தினர்கள், பஞ்சாபை விஸ்தரித்து, அலிகார்வரை பெரிதாக்கி முஸ்லிமல்லாத பிரதேசங் களிலும் ஏகாதிபத்தியம் செலுத்த நாடுகின்றனர். காஷ்மீரிலிருந்து ஜெய்ஸல்மீர் வரையுள்ள முஸ்லிமல்லாத ராஜ்யங்களையும் சேர்க்க விரும்புகின்றனர். இதன்மூலம் முஸ்லிம்கள் 55 சத விகிதத்தினராகக் குறைந்துவிடுவார்கள். இதேபோல கிழக்குப் பகுதியிலும் வங்காளம், அஸ்ஸாம், பீஹாரில் ஒரு ஜில்லா முதலியவைகளைச் சேர்ப்பதால் முஸ்லிம் தொகை 54 சத விகிதமாக இறங்கிவிடுகிறது. இவ்வித எல்லை நிர்ணயம் லாகூர் தீர்மானத்தின் சொல் லுக்கும் பொருளுக்கும் எதிரானது. அவ்வித நிர்ணயத்தின்படி வட.கிழக்குப் பகுதியில் 46 சதவிகித முஸ்லிமல்லாதாரிருக்கவும், வடமேற்கில் 42 சதவிகித முஸ்லிமல்லாதாரிருக்கவும், அவ்விராஜ்யங்களை முஸ்லிம் ராஜ்யங்களென்று கூறுவது எவ்வாறு பொருந்தும்.'[3]

இக்கமிட்டியையோ அல்லது அதன் ஆலோசனைகளையோ, அல்லது அதன் பிரேரணைகளையோ ஏற்றுக்கொள்ளத் திரு. ஜின்னா மறுத்துவிட்டார். தனி நபர்கள் அல்லது கூட்டத்தினரின் ஆலோசனைகள் என்றவாறே அவற்றைக் கருதுவதாகக் கூறிவிட்டார்.

மற்றுஞ் சில திட்டங்கள் இருக்கின்றன—1942-ல் அலிகாரில் பேசும் பொழுது சர் பிரோஸ்கான் நூன் வெளியிட்ட திட்டம் ஒன்று; மற்றொன்று திரு. ரிஸ்வானுல்லாவின் திட்டம். அவைகளை நான் பார்க்கவில்லையாதலால் இங்கு அவை கொடுக்கப்படவில்லை.

## 23. பிரிவினைக் கருத்துப் பிறந்த கதை

இப்பிரிவினைத் திட்டங்களனைத்தும் 1939-லிருந்துதான் வகுப்பட்டுப் பிரசுரமாயின. முஸ்லிம் லீகின் லாகூர் கூட்டத்திற்கு முன்பு தோன்றியவை சில. அதன் பின்னர் தோன்றியவை சில. 1930 டிசம்பரில் அலகாபாத்தில் கூடிய அகில இந்திய முஸ்லிம் லீக் கூட்டத்திற்குத் தலைமை வகித்த சர் மகமது இக்பால் தான், முதல் முதலாகத் தனியாகப் பிரிந்த சுதந்திர முஸ்லிம் ராஜ்யம் வேண்டுமென்று கேட்டவர் என்று பொதுவாகச் சொல்லப்பட்டு வருகிறது. ஆகவே, அவருடைய பேச்சுகளிலிருந்து சில பகுதிகளை மேற்கோள் காட்டுவது நல்லது: 'இஸ்லாமின் சமய லட்சியம், அது அமைத்துக் கொடுத்த சமூக முறையோடு ஒட்டியது. ஒன்றை நிராகரிப்பது மற்றொன்றையும் நிரா கரிப்பதாகும். ஆகவே தேசீய இனமுறையில் அரசாங்கத்தை அமைப்பதால் இஸ்லாமியக் கொள்கையான திண்மைக்குப் பங்கம் வருமானால் அத்தகைய அரசாங்க அமைப்பு எந்த முஸ்லிமுக்கும் நினைப்பதற்கும் லாயக்கற்றது......... ஆகவே இந்திய தேசீய ஒற்றுமையைப் பல மக்களினுடைய உறவிலும் ஒத்துழைப்பிலும் காணவேண்டும். இத்தகைய ஒற்றுமையைக் கண்டு

3. op. cit., pp. 98-9.

பிடிப்பதில்தான் இந்தியாவின் வருங்காலமும் ஆசியாவின் வருங்காலமும் நிலைநிற்கும்.......

'உள்நாட்டு ஒத்துழைப்புக்கு இத்தகைய ஒரு கொள்கையைக் கண்டுபிடிக்க நாம் இதுவரை எடுத்த முயற்சிகள் தோல்வியடைந்த விஷயம் வருந்தத்தகுந்தது. நாம் ஏன் தோற்றோம்? ஒருகால் நாம் ஒருவரையொருவர் சந்தேகிக்கிறோம்; ஒருவரையொருவர் ஆளவேண்டுமென்று உள்ளூர ஆசைப் படுகிறோம். ஒருகால், ஒத்துழைப்பு என்ற உயர்ந்த கொள்கையின்பொருட்டு, சந்தர்ப்பவசத்தால் நமது கையில் சிக்கியிருக்கும் தனி உரிமைகளை விட்டுக் கொடுக்க நம்மால் முடியவில்லை போலும். அல்லது தேசீயத்தின் மறைவில் அகங்காரத்தை ஒளிக்க முடியவில்லை போலும். வெளிப்பார்வைக்குப் பரந்த மனப்பான்மை சார்ந்த தேச பக்தியைக் கொண்டவராகத் தென்படுகிறோம். ஆனால் உள்ளூர ஜாதியபிமானம் அல்லது இனப்பான்மை கொண்ட சிறுமனத் தராக இருக்கின்றோம். ஒருகால், ஒவ்வொரு கூட்டத்தாரும் தத்தம் கலா சாரத் தொன்மையை அனுசரித்து வளரும் உரிமையை நாம் ஒப்புக்கொள்கிறோ மில்லை. காரணம் எதுவாக இருப்பினும் நான் நம்பிக்கை யிழக்கவில்லை. உள்நாட்டு ஒற்றுமையை நோக்கியே சம்பவங்கள் நகருவதாகத் தோன்றுகிறது. அவனுடைய பிறந்த இடத்தில் அவனுடைய கலாசார தோரணையில் வளரு வதற்கு முழுச் சுதந்திரமும் கொடுக்கப்பட்டால் இந்திய முஸ்லிம் இந்தியாவின் சுதந்திரத்திற்காக எந்தத் தியாகத்திற்கும் பின்வாங்கமாட்டான் என்று எனக்குத் தோன்றுகிறது. ஒவ்வொரு வகுப்பினருக்கும் அவரவருடைய கலாசார முறையில் வளரவேண்டுமென்ற கொள்கை குறுகிய வகுப்பு வாதத்தால் தோன்றியதல்ல.........பிற வகுப்பாருடைய பழக்க வழக்கங்கள், சட்டங்கள், சமய சமூக ஸ்தாபனங்கள்மீது பெருமதிப்புக் கொண்டிருக் கிறேன். குரானின் போதனைக்கிணங்க, பிற மதத்தாருடைய தொழுகைத் தலங்களைக் காக்கவேண்டிய அவசியமேற்பட்டால் அவ்வாறு காப்பது என் கடமை............

'இந்திய சமூகத்தின் பிரதானப் பங்குகள் ஐரோப்பிய நாடுகளைப் போன்று பிரதேச வாரியாக அமைந்தவையல்ல......ஐரோப்பிய ஜனநாயகத் தத்துவம் இந்தியாவுக்குப் பொருந்தாது. இங்குள்ள வகுப்புப் பிரிவுகளைக் கவனிக்கவேண்டும். இந்தியாவிற்குள் ஒரு முஸ்லிம் இந்தியாவை அமைப்ப தென்னும் கோரிக்கை நியாயமானதே......பஞ்சாப், வடமேற்கெல்லை மாகாணம், சிந்து, பலுசிஸ்தானம் ஆகியவைகளை ஒரு நாடாக்குவதை நான் விரும்பு கிறேன்......முஸ்லிம்கள் அதிகமில்லாத அம்பாலா முதலிய பகுதிகளை விலக்கி விடுவதால் முஸ்லிம் இந்தியா பரவலாயிராமல், ஆனால் முஸ்லிம் ஜனத்தொகை அதிகமாயுள்ளதாக இருக்கும்......இந்திய சமுதாயத்திற்குள் தங்களது வளர்ச்சிக்கு முழுச் சுதந்திரமும் பெற்ற வடமேற்கு இந்திய முஸ்லிம்கள் இந்தியக் காவலர்களாக நன்கு அமைவார்கள். வெளிநாட்டிலிருந்து வாட் படைகள் நுழைய முயன்றாலும் சரி, தீங்கு செய்யும் கருத்துக்கள் நுழைய முயன்றாலும் சரி, அவைகளைத் தடுப்பார்கள்......சுதந்திர இந்தியாவில் ஒரே அரசாங்க அமைப்பு என்பது என்னால் நினைக்கக்கூடாத காரியம். மிச்ச அதிகாரங்களென்பது சுயஆட்சி நாடுகளிடமே இருக்கவேண்டும். மத்திய சமஷ்டி அரசாங்கத்தினிடம் அதைச் சேர்ந்த நாடுகளால் ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்களே இருக்வேண்டும்.'[1]

---

1. Reproduced in F. K. Khan Durrani : *The Meaning of Pakistan*, pp. 205—213.

இவ்விதமாக சர் மகமது இக்பால் தோற்றுவித்த திட்டத்தில் ஒரு மத்திய இந்திய அதிகாரத்துக்கு உட்படாத சுதந்திர முஸ்லிம் ராஜ்யம் கருதப்பட வில்லை. சுய ஆட்சியுள்ள யூனிட்டுகளைக்கொண்ட ஒரு சமஷ்டியை அவர் விரும்புகிறார் என்பது தெளிவு. முஸ்லிம்கள் அதிகமாக உள்ள பிராந்தியங் களை, சுலபமாக ஆளுவதற்கேற்றபடி எல்லைகளைத் திருத்தியமைக்க வேண்டு மென்கிறார். இந்தியப் பாதுகாப்பைப்பற்றிய அவர் கருத்துக்கள் அவர் அதற்கு முன்பே 1926-ல் நேஷன் பத்திரிகைக்குக் கூறியதையொட்டியே இருக்கின்றன. அப்பொழுது அவர் கூறியதாவது: 'ஆப்கானியர் படையெடுத்தால் முஸ்லிம் கள் நாட்டின் துரோகிகளாக மாறிவிடுவார்கள் என்று சில கோழை இந்துக்கள் சந்தேகிக்கிறார்கள். இந்தியர்கள் யாவரும் ஒருவரையொருவர் நம்பி ஒற்றுமை யாக இருந்தால் எல்லோரும் தம்தாய் நாட்டைக் காப்பார்கள். எதிரி முஸ்லி மாக இருந்தாலும் சரி, அல்லது முஸ்லிமல்லாதாராக யிருந்தாலும் சரி, அவர்களை யாவரும் ஒன்று கூடி எதிர்ப்பார்கள். என்னுடைய வீட்டைத் தகர்த்து என்னுடைய சுதந்திரத்தைப் பறிக்கவரும் எந்த அரசியல் கொள்ளைக்காரனையும் எதிர்ப்பேன். ஜெஹாதைப் பற்றி எவ்விதப் பயமும் கிடையாது. ஜெஹாதுகளெல் லாம் அரசியல் அபிலாஷைகளுக்குத் திரையேயாகும். நாம் ஒரு கூட்டத்தவர் என்ற உணர்ச்சியை வளர்ப்பதன் மூலமாகவே நம்முடைய கஷ்டங்களைப் போக்க முடியும். இணக்கமும் தாராளமுங்கூடிய ஒரு தேசீய ஒப்பந்தத்தினால் இவ்வித நல்ல நிலைமை வளர்ச்சியடையுமென்று நான் கருதுகிறேன்.'[2]

வட்டமேஜை மகாநாடுகள் தோன்றும் வரை இந்திய முஸ்லிம்கள், சிறு பான்மைக்குரிய பாதுகாப்புக்களைக் கோருவதுடன் திருப்தி அடைந்திருந் தார்கள். பிரிவினைக் கருத்து எப்படி உண்டாயிற்று என்பதை டாக்டர் ஷௌகத்துல்லா அன்ஸாரி தம்முடைய, பாகிஸ்தான்—இந்தியாவின் பிரசினை என்ற புத்தகத்தில் கூறுகிறார். அவருடைய சொற்களை விரிவாக இங்கு எடுத்துக் காட்டுகிறேன் :

'1930–31-ல் சீர்திருத்தங்கள் உருவாகிக்கொண்டிருந்தன. முதலிரண்டு வட்டமேஜை மகாநாடுகளிலும் முஸ்லிம்கள் இந்திய சமஷ்டி ஏற்படுத்து வதையே தங்களது குறிக்கோளாகக் கொண்டிருந்தார்கள். ஜே. கோட்மன் சி. ஐ. இ. 1932-ல் 3-வது வட்டமேஜை மகாநாட்டின் போது எழுதியதாவது : "வடமேற்குள்பட பிரிட்டிஷ் இந்தியாவையும் இந்திய சமஸ்தானங்களையும் சேர்த்து வல்லரசான ஐக்கிய இந்தியாவை அமைக்கின்ற காரியம் நாளுக்குநாள் பலவீனமாக்கப்பட்டு வருகிறது. வடமேற் கெல்லையை இந்தியாவோடு சேர்ப்பது மிகமிக முக்கிய நிபந்தனையாகும். இந்திய வல்லரசுக்குப் பதிலாக இந்தியாவினின்றும் பிரிந்த ஒரு முஸ்லிம்ராஜ்யத்தை வடக்கிலும் மேற்கிலும் ஸ்தாபிப்பதற்கு முயற்சிகள் செய்யப்படுகின்றன. இந்நாடுகள் வெளியிலுள்ள முஸ்லிம் உலகத்தோடு ஒட்டியிருக்கும். அதன்பின் மீதி என்ன இருக்கும்? ஒன்றுபட்ட, ஒரே இனத்தாலான நாடாக இந்து இந்தியா இருக்குமா? ஒரு கால் இருக்கலாம்! அல்லது அந்தப் பரந்த நாட்டை அடிபிடி நடத்திக்கொண் டிருக்கிற அரசர்கள் பங்குபோட்டுக் கொண்டிருக்கலாம். அல்லது இந்துஸ் தானத்தின் பழைய க்ஷத்திரிய வகுப்பினர் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டு நாட்டைப் பாழாக்கிக் கொண்டிருக்கலாம். வருங்காலத்தில் இந் நிலைமை எளிதில் வரக்கூடும். அனேகமாய்........."

'அகில இந்திய சமஷ்டியிலுள்ள பாதுகாப்புகள் உபயோகமற்றவை

2. *The Searchlight*, 30th April 1926.

என்று சில முஸ்லிம் இளைஞர்கள் நினைத்தார்கள். அவர்களது உள்ளத்தில் மேற்கூறிய கருத்து செழித்தோங்க ஆரம்பித்தது. “இந்து தேசியத்தில் நமது தீரம்பொருந்திய ஆனால் குரலற்ற தேசிய இனம் பலியிடப்படுகிறது” என்று கருதலானார்கள். இதுவரை சிறுபான்மையாக அழைக்கப்பட்ட முஸ்லிம்கள் ஒரு “தேசீய இனம்” என்று 1930-ல் தான் ஒரு பஞ்சாபி முஸ்லிமால் அழைக்கப்பட்டனர். அவர் பெயர் சௌத்ரி ரஹமத் அலி. இவர் ஒரு கேம்ப்ரிட்ஜ் கல்லூரி மாணவர். பி. ஏ. பட்டம் பெறாதவர். இவர்தான் இவ்வியக்கத்திற்கு உருவமும் அமைப்பும்கொடுத்தவர். பஞ்சாப், வடமேற்கெல்லை மாகாணம் (ஆப்கானிய மாகாணம்), காஷ்மீரம், சிந்து, பலுசிஸ்தானம் ஆகியவைகளை பாகிஸ்தான் என்ற முஸ்லிம் நாடாக ஆக்கவேண்டுமென்ற கருத்தை வெளியிட்டவர். இது டாக்டர் இக்பாலின் திட்டத்திற்கு வேறுபட்டது. இந்திய சமஷ்டியின் பாகமாக, இம்மாகாணங்கள் அமையவேண்டுமென்பது இக்பாலின் யோசனை. சௌத்ரி ரஹமத் அலி, இம்மாகாணங்கள் தங்களுக்கென ஒரு சமஷ்டியமைக்க வேண்டுமென்று கோருகிறார். பாகிஸ்தானைக் கோரி பல பிரசுரங்கள் அச்சடித்து பார்லிமெண்டு அங்கத்தினர்களுக்கும் வட்டமேஜை மகாநாட்டு அங்கத்தினர்களுக்கும் கொடுத்தார். ஆனால் எந்த இந்தியனும், இந்து அல்லது முஸ்லிம் யாரேனும் அதை ஏற்றெடுத்தும் பார்க்கவில்லை. கூட்டுப் பார்லிமெண்டின் தேர்ந்தெடுக்கப்பட்ட கமிட்டியின்முன் 1933 ஆகஸ்டில் சாட்சியம் கொடுத்த முஸ்லிம்கள் அதை இவ்வாறு கூறினார்கள் :

எ. யூசுப் அலி : “எனக்குத் தெரிந்தவரை அது ஒரு மாணவன் திட்டம்; பொறுப்புள்ள மனிதர் யாரும் அதைக் கொண்டுவரவில்லை.”

சாபருல்லாகான் : “நாங்கள் ஆராய்ந்தவரை அதை மனோராஜ்யம் என்றே கூறவேண்டும். நடைமுறைக்கு ஒத்துவராத கற்பனை.”

டாக்டர் கலிபா சூஜா உத்தீன் : “பிரதிநிதித்துவப் பொறுப்புவாய்ந்த எந்த சிலனோ அல்லது சபையோ இத்தகைய திட்டத்தை ஏற்றெடுத்தும் பார்க்கவில்லை என்று கூறுவதே போதுமானது.”

‘இந்த மகாநாட்டில் பாகிஸ்தானைப் பற்றிய கேள்விகள் எழுந்தன என்பது குறிப்பிடத்தக்கது. இந்தப் பிரசினையைப் புறக்கணித்து அடுத்த விஷயங்களைப்பற்றிக் கவனிக்கலாமென்று இந்திய முஸ்லிம் பிரதிநிதிகள் கருதியபோது பிரிட்டிஷ் பக்கத்திலிருந்து பாகிஸ்தான் தூபம் கிளம்பிக் கொண்டேயிருந்ததென்பதும் கவனிக்கவேண்டிய விஷயம்.......................... இந்தியாவில் பாகிஸ்தானைப்பற்றி யாரும் பேசவும் இல்லை; கேள்விப்பட்டதுமில்லை; முஸ்லிம் பிரதிநிதிகள் இதில் அக்கறை கொள்ளவில்லை; என்றாலும் பிரிட்டிஷ் பிற்போக்குப் பத்திரிகைகள் பாகிஸ்தானைப் பற்றிப் பிரமாதப்படுத்தின. கன்சர்வேடிவ் கட்சியிலுள்ள சர்ச்சில்—லாயிட் கூட்டம் பாகிஸ்தானில் பெரும் புதையலைக் கண்டார்கள். இது காரணமாக, பார்லிமெண்டில் பாகிஸ்தானைப்பற்றிப் பல தடவை கேள்விகள் எழுந்தன.’[3]

பிரிவினைக் கருத்தைப் பெற்றெடுத்தது யாராக யிருந்தாலும் சரி, அதைப் பாலூட்டி வளர்த்த செவிலிகள் யாராக இருந்தாலும் சரி, டாக்டர் அன்சாரி கூறியதுபோல, அது எப்படியோ, செல்வமாகச் சீராட்டப்படும் இடத்தைச் சேர்ந்துவிட்டது. எல்லோரும் அதை இப்பொழுது கவனிக்கும்படியாகவும் செய்து விட்டது.

3. Shaukatullah Ansari: *Pakistan—The Problem of India*, pp. 4—7.

# 24. தெளிவின்மையும் சிக்கல்களும்

1940 மார்ச் மாதம் லாகூரில் கூடிய அகில இந்திய முஸ்லிம் லீக் நிறைவேற்றிய தீர்மானம் :—

(1) சென்ற ஆகஸ்டு 7௨, செப்டம்பர் 17, 18, அக்டோபர் 22, 1940 பிப்ரவரி 3-ந் தேதிகளில் முஸ்லிம் லீக் கௌன்சிலும், காரியக் கமிட்டியும் அரசியலமைப்புப் பிரசினை பற்றி நிறைவேற்றிய தீர்மானங்களின் அடிப்படையில் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளை இவ் அகில இந்திய முஸ்லிம் லீக் கூட்டம் முழுதும் ஒப்புக் கொள்ளுகிறது. மேலும் 1935-ம் வருடத்திய இந்திய அரசாங்கச் சட்டத்திலடங்கிய சமஷ்டித் திட்டம், இந்நாட்டின் நிலைமைகளுக்குப் பொருந்தாது என்றும், நடப்புக்கும் ஒத்துவராது என்றும் மீண்டும் உணர்த்துகிறது. மேலும் அது முஸ்லிம் இந்தியாவுக்குச் சிறிதும் ஏற்றுக்கொள்ளத்தக்கதல்ல என்பதை மீண்டும் வலியுறுத்திக் கூறுகிறது.

(2) 1935-ம் வருடத்திய இந்திய அரசாங்கச் சட்டத்தை எவ்வாறு அமுலுக்குக் கொண்டு வருவது, அதை நிறைவேற்றும் வழிகள் யாவையென்பதை, இந்தியாவிலுள்ள பல்வேறு கட்சிகள், நலன்கள், இனங்கள் இவற்றைக் கலந்து கொண்டுதான் மீண்டும் புனர் ஆலோசனை செய்யப்படும் என்று 1939 அக்டோபர் 18-ல் மன்னர் அரசாங்கத்தின் சார்பாக வைஸ்ராய் வெளியிட்ட பிரகடனத்தின் பகுதி நம்பிக்கையூட்டுவதாக இருக்கிறது. அரசியலமைப்புத் திட்டம் முழுதும் புனராலோசனை செய்யப்பட்டாலொழிய முஸ்லிம் இந்தியா திருப்தி அடையாது. அவ்விதம் திரும்ப மாற்றியமைக்கப்படும் திட்டமும் முஸ்லிம்களுடைய சம்மதத்தையும் ஆமோதிப்பையும் கொண்டு அமைக்கப்பட்டாலொழிய, அது அவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

(3) இந்தியாவின் வடமேற்கு, கிழக்கு மண்டலங்களில் உள்ளதுபோல், முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ள பிரதேசங்கள் அடுத்தடுத்துள்ளவைகளாக இருந்தால் அவசியத்திற்கேற்றபடி எல்லை வகுத்துத் தொகுதி தொகுதியாகப் பிரித்து அவற்றைச் 'சுதந்திர ராஜ்யங்க'ளாக்க வேண்டும். அதனுடைய பகுதிகளும் சுயேச்சையுடையனவாக இருக்க வேண்டும். இந்த அடிப்படையில் வகுக்கப்படாத எந்த அரசியலமைப்பும் முஸ்லிம்கள் ஏற்கத்தக்கதல்ல. அது நடைமுறைக்கு ஒத்தும் வராது. இதுவே அகில இந்திய முஸ்லிம் லீகின் இந்த மகாநாட்டைப் பொறுத்த முடிவான அபிப்பிராயம் என்று தீர்மானிக்கிறது.

(4) இப்பகுதிகளிலும் பிரதேசங்களிலும் உள்ள சிறுபான்மையினரைக் கலந்து கொண்டு, அவர்களுடைய மதம், கலாசாரம், பொருளாதாரம், அரசியல், நிர்வாகம் முதலியவை சம்பந்தமான உரிமைகளையும் நலன்களையும் காக்க, போதுமான, பலமுள்ள பாதுகாப்புகள் இவ்வரசியலமைப்பில் தெளிவாக அளிக்கப்பட்டிருக்க வேண்டும். இதேபோல முஸல்மான்கள் சிறுபான்மையாக இருக்கும் இந்தியாவின் இதர பாகங்களில், அவர்களையும் இதரச் சிறுபான்மையினரையும் கலந்து கொண்டு அவர்களுக்கு வேண்டிய மத, கலாசார, பொருளாதார, அரசியல் சுய நிர்வாக உரிமைகளையும் நலன்களையும் காக்க வேண்டும். அதற்கு வேண்டிய உருப்படியான பாதுகாப்புகளை அந்த அரசியலமைப்பில் தனியாகச்[1] சேர்க்க வேண்டும்.

---

[1] 'இந்தியாவின் வருங்காலப் பிரசினை' என்ற புத்தகத்தில் வெளியிடப்பட்டிருந்த தீர்மான வாசகத்தில் 'தனியாக' என்றிருக்கிறது. பக்கம் : 17. திரு. எம். நோமன்

இந்த அடிப்படையான கொள்கைகளைக் கொண்டு ஓர் அரசியலமைப்பைத் தயாரிக்க இம்மாநாடு, காரியக் கமிட்டிக்கு அதிகாரமளிக்கிறது. அந்தந்தப் பிரதேச அரசாங்கங்கள் தற்காப்பு, வெளிநாட்டு விவகாரங்கள், போக்குவரத்து, சுங்கவரி முதலிய அதிகாரங்களை முடிவாகத் தாமே மேற்கொள்ளுவதற்குரிய ஏற்பாடுகளும் அந்த அரசியலமைப்பில் அடங்கி இருக்க வேண்டும்.

இத் தீர்மானத்திலிருந்து, 1935-ம் வருடத்திய இந்திய அரசாங்கச் சட்டத்தை அது ஆராய்கிறதென்றும், அந்தச் சட்டம் முஸ்லிம் இந்தியாவுக்குச் சிறிதும் பொருந்தாது என்றும், இந்த நாட்டின் தனி நிலைமைகளைப் பொறுத்து அதை அமுலுக்குக் கொண்டு வருவது அசாத்தியமென்றும் தெளிவாவதோடு, அது முஸ்லிம் இந்தியாவால் ஏற்றுக் கொள்ளத்தக்கதல்லவென்றும் தெரிகிறது. முழு அரசியலமைப்பையும் மீண்டும் ஆலோசித்தாலொழிய முஸ்லிம் இந்தியா திருப்தி அடையாது. முஸ்லிம் இந்தியாவின் சம்மதத்தையும் ஆமோதிப்பையும் பெற்றுத் திருத்தியமைக்கப்படாத வரையில் எந்தத் திட்டமும் முஸ்லிம் இந்தியாவினுல் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது என்றும் தீர்மானம் கூறுகிறது. மேலும் முஸ்லிம்கள் ஏற்கக்கூடியதும் நடைமுறைக்குக் கொண்டுவரக் கூடியதுமான ஓர் அடிப்படைக் கொள்கையை விதிக்கிறது. அந்த அடிப்படைக் கொள்கையாவது: இந்தியாவின் வடமேற்கு, கிழக்கு மண்டலங்களில் உள்ளதுபோல முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ள பிரதேசங்கள் அடுத்தடுத் துள்ளவைகளாக இருந்தால் அவசியத்திற் கேற்றபடி எல்லை வகுத்துத் தொகுதி தொகுதியாகப் பிரித்து அவைகளைச் 'சுதந்திர ராஜ்யங்க'ளாக்க வேண்டும். அந்த ராஜ்யங்களின் பகுதிகளும் சுயேச்சை கொண்டிருக்க வேண்டும். அந்தப் பிரதேசங்களிலுள்ள சிறுபான்மையருக்குரிய மத, கலாசார, பொருளாதார, அரசியல் நிர்வாக உரிமைகளைக் காக்க, போதுமான, உருப்படியான பாதுகாப்புகள் அவர்களைக் கலந்து அளிக்கப்பட வேண்டுமென்றும், அதேபோல இந்தியாவின் இதர பாகங்களிலுள்ள இதரச் சிறுபான்மைகளுக்கும் அவர்களைக் கலந்து கொண்டு இத்தகைய பாதுகாப்புகள் அளிக்க வேண்டுமென்றும் இத்தீர்மானம் கூறுகிறது. இக்கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு ஓர் அரசியலமைப்பைத் தயார் செய்வதற்கு லீக் அதன் காரியக் கமிட்டிக்கு அதிகாரமளிக்கிறது. அந்தந்தச் 'சுதந்திர ராஜ்யங்கள்' முடிவில், தற்காப்பு, வெளிநாட்டு விவகாரங்கள், போக்குவரத்து, சுங்கம் ஆகியவற்றேடு இன்னும் இதர அவசியமான அதிகாரங்களைத் தாங்களே மேற்கொள்ளும் வகையில் அந்த அரசியலமைப்பைத் தயாரிக்க வேண்டுமென்றும் அத்தீர்மானம் கூறுகிறது.

அந்தத் தீர்மானம் அதிகாரமளித்தபடி லீக் காரியக் கமிட்டியால் தயாரிக்கப்பட்ட எந்த ஒரு திட்டமும், அது தயாரிக்கப்பட்டிருந்தாலும்கூட, இன்னும் வெளிவந்தபாடாயில்லை. முஸ்லிம் லீகின் தலைவர் திரு. எம். ஏ. ஜின்னு, சென்னையில் கீழ்க்கண்டவாறு கூறினர் :—

'அகில இந்திய முஸ்லிம் லீகின் குறிக்கோள் எது என்பதை எவ்வளவு தெளிவாக என்னுல் கூற முடியுமோ அவ்வளவு தெளிவாகக் கூறுகிறேன். தற்காப்பு, நாணயச் செலாவணி, நாணயமாற்று முதலிய விஷயங்களில் முழுப் பொறுப்பும் அதிகாரமும் பெற்ற சுதந்திர ராஜ்யங்களை இந்தியாவின்

---

எழுதிய 'முஸ்லிம் இந்தியா' என்ற புத்தகத்தில் 'தெளிவாக' என்ற பதம் காணப்படுகிறது. பக்கம்: 404. அம்பேத்கார் எழுதிய 'பாகிஸ்தான் அல்லது இந்தியப் பிரிவினை' என்ற நூலிலும் 'தெளிவாக' என்ற பதமே காணப்படுகிறது. பக்கம்: 4.

வடமேற்கிலும் கிழக்கிலும் உண்டாக்குவதே அதன் லட்சியமாகும். மேலும் அகில இந்தியத் தன்மை பொருந்திய ஓரே மத்திய அரசாங்கத்தை எக் காரணங்களைக் கொண்டும் நாங்கள் விரும்பவில்லை.'

இந்தப் பிரதேசங்களில் சேர்க்கப்பட வேண்டிய நாடுகளைப் பற்றியும் திட்டங்களின் விவரங்களைப் பற்றியும் விளக்கிச் சொல்லுமாறு அழைத்த போது, அதற்கு அவர் மறுத்துவிட்டார். முதலில் கொள்கையை ஒப்புக் கொள்ள வேண்டும் ; அதற்கப்புறம்தான் விவரங்களைக் கூறவோ திட்டத்தை வெளியிடவோ தம்மால் முடியும் என்று பிடிவாதமாகக் கூறிவிட்டார்.

வெகு சமீபத்தில், அதாவது 1944 ஏப்ரல் கடைசி வாரத்தில் திரு. ஜின்னுவுக்கும் பஞ்சாப் பிரதமர் மாலிக் கிஸிர் ஹையத்கானுக்கும் இடையே பேச்சு வார்த்தைகள் நடந்தன. பஞ்சாபில் யூனியனிஸ்ட் கட்சி மந்திரி சபைக் குப் பதிலாக ஒரு முஸ்லிம் லீக் மந்திரி சபையேனும் அல்லது லீக் கூட்டு மந்திரி சபையேனும் ஏற்படுத்த வேண்டுமென்று திரு. ஜின்னு கோரியதை யொட்டி இப்பேச்சு வார்த்தைகள் நடந்து வந்தன. 'சம்பந்தப்பட்ட யாவரும் பாகிஸ் தான் திட்டத்தின் குணுகுணங்களைச் சரியாக உணர்ந்து மதிப்பிடுவதற்கு அனு சரணையாக பாகிஸ்தான் ஆட்சிமுறைபற்றிய விவரங்களையும் பாகிஸ்தான் அர சாங்க அமைப்புப் பற்றிய உள் நுணுக்கங்களையும் தெளிவுபடுத்தி விளக்கிக் கூறவேண்டும்' என்று முஸ்லிமல்லாத மந்திரிகள் விரும்பினர்கள். மேலும் 'பாகிஸ்தானின் திட்டத்தில் பஞ்சாபின் எல்லைகள் யாவை, எக்கொள்கையி னடிப்படையில் இவ்வெல்லைகள் நிச்சயிக்கப்படும் என்பதை எவ்வளவு தெளிவாகக் கூறமுடியுமோ அவ்வளவு தெளிவாகக் கூறவேண்டும்' என்றும் அவர்கள் கேட்டார்கள். அதற்கு ஜின்னு 'அது ஓர் அகில இந்தியப் பிரசினை என்றும் தற்சமயம் யோசிக்கப்பட்டுவரும் கூட்டு மந்திரிசபை அமைப்புக்கு அது எவ்வகையிலும் சம்பந்தமுடையதல்ல'[2] என்றும் சொல்லி விட்டார்.

திட்டம் என்று சொல்லக்கூடிய ஏதேனும் ஒன்று அவர் கையில் இருக்குமாகுல், அப்படியே அதனை வெளியிடுவதில் லீகின் தலைவருக்குள்ள சங்கடம் என்ன என்பதைப் புரிந்துகொள்வது கடினமாக இருக்கிறது. இந்திய முஸ்லிம் வகுப்பின் சார்பாகப் பேசத் தனக்கே தனியுரிமை உண் டென்று பாத்தியதை கொண்டாடிக் கொள்ளுகிற பொறுப்புவாய்ந்த ஒரு சபை பூரா விவரங்களையும் ஆராய்ந்தறியாமல் ஓர் அரசியல் திட்டத்தை வெளி யிடுமென்றும், முழு விவரங்களையும் பரிசீலனை செய்யாமல் நாட்டைப் பிரிக்க ஒரு திட்டத்தைக் கொண்டு வருமென்றும் நினைப்பது நியாயமல்ல. அதற்கு மாருக தன்னுடைய திட்டத்தை நன்கு ஆராய்ந்து அதன் குண தோஷங்களைக் கண்டறிந்த பிறகே அதைப் பிறர் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று விரும்பினுல், மற்றவர்கள் அறிய விரும்புகிற விளக்கங்களைக் கொடுப்பதற்குப் பேராவல் கொள்ளா விட்டாலும் ஓரளவாவது இணங்க வேண்டும். பிறர் இதை நன்கறிந்து உணர்ந்து, விவாதித்து ஏற்றுக்கொள்வதற் குரிய வழிகளைச்செய்ய லீக் இசையும் என்று யாரும் எதிர்பார்ப்பது இயற் கையே. பிறர் அது பற்றிய தகவல்களையும் விளக்கங்களையும் கேட்பது அவ்விவ ரங்களை அவசியமில்லாமல் அறிந்து கொள்வதற்காக மட்டுமல்ல. பிரிவினைத் திட்டத்தை ஆற அமர யோசிப்பதற்கே அவைகளை அறிவது மிக இன்றியமை யாத தாகின்றது.

---

2. Statement of non—Muslim Ministers, Dtd. 1-5-44 Published in *The A. B. Patrika*, 3-5-44.

உதாரணமாக லீக் கருதுகிற பாகிஸ்தானில் அது தீர்மானித்துள்ள படி எந்தெந்தப் பிரதேசங்கள் சேருமென்பதையும் ஹிந்துஸ்தானத்தில் சேருபவை எவை என்பதையும் அறிந்துகொள்வது அவசியம். இதுபோன்று பாகிஸ்தானில் உள்ள முஸ்லிமல்லாத சிறுபான்மையின் அளவென்ன ? இந்துஸ் தானத்திலுள்ள முஸ்லிம் சிறுபான்மை எவ்வளவிருக்கும் ? பாகிஸ்தானில் உள்ள முஸ்லிமல்லாத சிறுபான்மைகளுக்கு என்னென்ன பாதுகாப்புகளும் உத்தரவாதங்களும் போதுமென லீக் கருதுகிறது ? இந்துஸ்தானத்திலுள்ள முஸ்லிம்களுக்கு என்னென்ன பாதுகாப்புகளையும் உத்தரவாதங்களையும் வற்புறுத்தும் ? என்பதெல்லாம் தெரிந்துகொள்வது இன்றியமையாததாகும். இந்துஸ்தானத்தில் சிறுபான்மை முஸ்லிம்களுக்குக் கொடுக்கப்படும் அதே சௌகரியங்கள் பாகிஸ்தானில் உள்ள முஸ்லிமல்லாத சிறுபான்மைகளுக்கும் கொடுப்போம் என்று மாத்திரம் லீக் கூறினால், அது போதாது. இதற்குமுன் வேறு எந்த இனமும் எந்த ஒரு பிரிவினைத் திட்டத்தையும் கொண்டு வரவில்லை. அவ்விதம் கொணர்ந்து தாங்கள் மற்றவர்களிடம் கோருகிற சிறுபான்மை உரிமைகளைப் பற்றியும் தாங்கள் பிற சிறுபான்மைக்கு அளிக்கக் காத்திருக்கும் உரிமைகளைப் பற்றியும் கூறியதில்லை. ஆகையால் பிறர் மட்டுமன்றி முஸ்லிம் களும் கூட நன்கு ஆராயவேண்டித் தனது திட்டங்களை முறைப்படுத்தி வெளியிடுவது லீகின் கடமையாகும்.

மேலும் ஒரு தரப்பு அல்லது மறு தரப்பிலுள்ள சிறுபான்மையினரின் தொகையைப் பொறுத்து இம்மாதிரி பரஸ்பர நடவடிக்கை யெடுக்கும் எந்தத் திட்டமும் நடைமுறையில் சாத்தியமற்றதாகி விடலாம். உதாரணமாக ஒரு புறத்திலுள்ள சிறுபான்மை அங்குள்ள ஜனத்தொகையில் 40 சத விகிதத் துக்கும் 50 சத விகிதத்துக்குக்குமுள்ளாக இருப்பதாக வைத்துக்கொள்வோம். மறுபுறத்திலுள்ள சிறுபான்மை அங்குள்ள ஜனத்தொகையில் 10 சத விகிதத்திற்குச் சற்று முன் பின்னாக இருக்கிறதாகவும் வைத்துக் கொள்வோம். அப்போது சுமார் 10 சத விகிதம் அல்லது அதை யொட்டியுள்ள சிறு பான்மையினர் ஒரு பக்கத்தில் தங்கள் சொந்த பலத்தின் மூலம் தங்கள் உரிமைகளை வற்புறுத்திப் பெற்றுக் கொள்ளக்கூடிய நிலைமையைக் காட்டி லும் பலமடங்கு அதிக சௌகரியமான நிலைமையில், 40 சத விகிதம் அல்லது 45 சதவிகிதச் சிறுபான்மையினர் மறு பக்கத்தில் இருப்பார்கள் என்பது மிகத் தெளிவு. மேலும் ஒரு சாரார் மறுசாராருக்கு அளிப்பதாக ஒப்புக்கொள் ளும் விஷயங்கள் உபயோகமற்றதாக இருக்கலாம். அப்போது மறு சாரார், பரஸ்பர நடவடிக்கைகளில் நம்பிக்கையும் உற்சாகமுமற்று, உடன்பாட்டை ஏற்றுக்கொள்ளாமற் போகக்கூடும்.

இதை இன்னும் தெளிவாய் விளக்குவோம். வடமேற்கு, கிழக்கு மண்டலங்களிலுள்ள இந்துக்கள், அதிலும் சிறப்பாக பஞ்சாபிலுள்ள இந்துக்கள், தங்களுடைய சொந்த மாகாணங்களில் சிறுபான்மையினராக இருந்தாலும், சட்டசபையிலும் சர்க்கார் உத்தியோகத்திலும் தங்களுக்கென்று எவ்விதச் சலுகையோ அதிகப்படி ஸ்தானங்களோ வேண்டாமென்று கூறுகிற தாக வைத்துக்கொள்வோம். கிறிஸ்தவ வகுப்பினர்போன்ற இதரச் சிறு பான்மைகள் சலுகையாகக் கோரிப் பெறுகிற அதிகப்படி இடங்களைப் பெரும் பான்மையினர் தங்களது ஸ்தானங்களிலிருந்தே கொடுக்கவேண்டும் என்றும் அவர்கள் கூறுகிறார்கள். மேலும், தங்களுடைய சொந்த மாகாணங்களில் தாங்கள் எவ்விதம் சலுகைகளும் அதிகப்படி ஸ்தானங்களும் கேட்டுப் பெறுமல்

இருக்கிறார்களோ அதைப்போல இந்துப் பெரும்பான்மையான மாகாணங்களில் உள்ள முஸ்லிம் சிறுபான்மைக்கும் யாதொரு சலுகையோ அதிகப்படி ஸ்தானமோ அளிக்கக்கூடாது என்றும், அங்குள்ள கிறிஸ்தவ வகுப்பினர் போன்ற சிறுபான்மைக்கு எவ்வளவு சலுகையும் அதிகப்படி ஸ்தானமும் தேவைப்படுமோ அவ்வளவே முஸ்லிம் சிறுபான்மைக்கும் அளிக்கவேண்டுமென்றும் அவர்கள் கூறுகிறதாக வைத்துக்கொள்வோம். தாங்கள் பெரும்பான்மையாக உள்ள மாகாணங்களில் இந்துக்கள் இவ்விஷயத்தையே வேறுவழியில் சொல்லலாம். தங்களுடைய மாகாணங்களிலுள்ள சிறுபான்மைக்குத் தாங்கள் எவ்விதச் சலுகையும் காட்டத் தயாராக இல்லையென்றும், தாங்கள் பெரும்பான்மையாக உள்ள மாகாணங்களில் முஸ்லிம்களும் இந்துச் சிறுபான்மைக்கு யாதொரு சலுகையும் காட்டவேண்டாமென்றும் கூறுவதாக வைத்துக்கொள்வோம். மேற்காணும் இருவகை உதாரணங்களின்படி, நாட்டிலெங்கணும் உள்ள இந்துக்கள், அவர்கள் சிறுபான்மையாக இருப்பினும் சரி, பெரும்பான்மையாக இருப்பினும் சரி, இவ்வித மனப்போக்கை மேற்கொண்டால் அது பரஸ்பர நடவடிக்கைக்கு முழுதும் ஒத்ததாகவே இருக்கும். முஸ்லிம் மாகாணங்களிலுள்ள இந்துக்கள் போக்கும், இந்து மாகாணங்களிலுள்ள இந்துக்கள் போக்கும் வேறுபடுகிறதாகச் சொல்லி இதை யாரும் குறைகூற முடியாது. இந்த மனப்போக்கை இந்துக்கள் ஏன் பெறக்கூடாது என்பதற்கு ஒரு காரணமும் இல்லை. இவ்வித மனப்போக்கால் வங்காளத்திலுள்ள இந்துக்களுக்கு லாபமே உண்டு. 1935-ம் வருடத்திய இந்தியச் சட்டத்தின்படி அவர்களுக்குச் சட்டசபைகளில் ஏற்பட்டிருக்கும் 32-சதவிகித ஸ்தானங்கள் என்பது போய் இப்போது 44-சதவிகித ஸ்தானங்கள் கிடைக்கும். பஞ்சாபிலும் அவர்களுடைய நிலைமை கொஞ்சம் அபிவிருத்தி பெறும். வங்காளத்தில், சர்க்கார் உத்தியோகங்களில் 50-சதவிகிதத்திற்குப் பதிலாக சுமார் 44-சதவிகிதம் பெறுவார்கள். பஞ்சாப் உத்தியோகங்களில் அவர்களது நிலைமை முன்போலவே இருந்துவிடக்கூடும். வடமேற்கு எல்லைமாகாணம், சிந்து, பலுசிஸ்தானத்திலுள்ள இந்துக்களின் நஷ்டம் சிறிது அதிகமாகவே இருக்கும். ஆனால் அவர்களுடைய முழு ஜனத்தொகை 14·50-லட்சம்தான். ஆகவே அவர்களுக்குச் சட்டசபைகளிலும், உத்தியோகங்களிலும் ஏற்படும் நஷ்டம் சொற்பமே. இப்பொழுது பீஹார்போன்ற ஒரு மாகாணத்திலுள்ள முஸ்லிம்களுக்கேற்படும் நஷ்டம் என்ன என்பதைப் பார்ப்போம். சட்டசபைகளிலும் உத்தியோகங்களிலும் அவர்கள் 25-சதவிகிதப் பிரதிநிதித்துவம் பெறுவதை 12-சதவிகிதமாகக் குறைக்கவேண்டியிருக்கும். ஒரு மாகாணத்தில் மட்டும், சட்டசபையிலும் உத்தியோகங்களிலும் ஏற்படும் நஷ்டம் மிக அதிகமாக இருக்கும். இரண்டு முஸ்லிம் மண்டலங்களிலும் இந்துக்கள், சட்டசபைகளிலும் உத்தியோகங்களிலும் எவ்வளவு இழக்க நேரிடுமோ அதைக்காட்டிலும் மற்றைய இடங்களில் உள்ள முஸ்லிம்கள் அதிகம் இழப்பார்கள். ஒரே ஒரு மாகாணத்தில் ஏற்படக்கூடிய இந்தக் குறைவின்மூலம் 47-லட்சம் முஸ்லிம்கள் பாதிக்கப்படுவார்கள். ஆனால் வடமேற்கு மண்டலம் பூராவிலும் 14·50-லட்சம் இந்துக்கள்தான் பாதிக்கப்படுவார்கள். இப்படி ஏற்பட்டால் மற்ற இந்துப் பிரதேசத்திலும் முஸ்லிம்களின் நிலைமையை மிகச் சுலபமாக நாம் கற்பனை செய்துகொள்ளலாம். இவ்விதமான பரஸ்பர நடிவடிக்கையென்பது இந்துக்களைக் கவராது ; அவர்களை, முஸ்லிம்களுக்குச் சலுகைகளும் அதிகப்படி ஸ்தானங்களும் கொடுக்கும்படியாகச் செய்துவிடாது. மேலும்

தங்களுக்குரிய பாதுகாப்புகளுக்கு உத்தரவாதம் செய்வது யார் என்பதை ஒவ்வொரு கட்சியும் நன்கு தெரிந்துகொள்ளச் செய்ய வேண்டும். இப்பிரிவினைத் திட்டத்தில் எண்ணற்ற இடங்கள் தெளிவில்லாமலிருக்கின்றன. ஒழுங்காகவும் நியாயமாகவும் அதைப்பற்றி விவாதிப்பதற்கும், புரிந்து கொள்வதற்கும் நமக்கு ஏராளமான விளக்கங்களும் விவரங்களும் தேவையாக இருக்கின்றன.

'இரு தேசீய இனங்கள்' என்ற கொள்கைக்கும் விளக்கம் இல்லை. இதையும் நாமே அறிந்துகொள்ள வேண்டும். பாகிஸ்தான் ஆதரவாளர்கள் முஸ்லிம்களைத் தனித் தேசீய சமுதாயமாகக் கூறுகிறார்கள். இவ்வாறு பிரிப்பதற்கு இஸ்லாம் மதத்தையும் அதன் வழியாக ஏற்படும் சமூக அரசியல் முறைகளையும் ஆதாரமாகக் கொள்கிறார்கள் என்று தோன்றுகிறது. தேசீய இனத்தை உண்டாக்கும் பல அம்சங்களில் மதம் தவிர மற்ற எல்லா அம்சங்களும் இந்தியாவில் குறிப்பிடத்தக்க பல பிரதேசங்களில் முஸ்லிம்களுக்கும் முஸ்லிமல்லாதவர்களுக்கும் ஒன்றுபட்டதாகவே இருக்கின்றன. அவைகள் முஸ்லிம்களுக்குத்தான் சொந்தமானவை என்று கூறுவதற்கில்லை. மொழி விஷயத்தில், பஞ்சாபி இந்துவும், பஞ்சாபி முஸ்லிமும், பஞ்சாபி சீக்கியரும் ஒரு மொழியே பேசுகிறார்கள். அவர்களது மொழிக்கும் மதத்திற்கும் சம்பந்தமில்லை. அதேபோன்று, வடமேற்கு எல்லைப்புறத்துப் பட்டாணியர்கள் இந்துவாயினும் முஸ்லிமாயினும் புஷ்டு மொழியே பேசுகிறார்கள். அவ்வாறே வங்காளிகளும், இந்துவோ முஸ்லிமோ அனைவரும் வங்கமே பேசுகிறார்கள். இப்பிரதேசங்களில் அவர்கள் யாவரும் ஒரே மண்ணில்தான் வாழ்கிறார்கள். இந்த இடங்களிலுள்ளவர்கள், பிரிட்டிஷ் இந்தியாவின் மற்றப் பாகத்திலுள்ளவர்களைப் போன்று பிரிட்டிஷ் ஆட்சியில்—நீண்டகால முஸ்லிம் ஆட்சியை விட்டு விட்டாலும்—குறைந்தது நூறு வருஷமாயினும் ஒரே அரசாங்கத்தின்கீழ் வாழ்ந்து வந்திருக்கிறார்கள்.

தேசீய இனத்தைப் பிரித்துக் காட்டும் அம்சமாக மதம் ஒன்றை மாத்திரம் எடுத்துக்கூறும் இக்காலத்தில், மதம் ஒன்று தவிர மற்ற எல்லா விஷயங்களிலும் ஒன்றுபட்டு நிற்கும் மக்களே இந்நாட்டின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிவரை வாழ்கிறார்கள் என்பதை மனத்தில் வைத்துக்கொள்வது நல்லது. இது சம்பந்தமாகத் திரு. எட்வர்டு தாம்ஸன் திரு. ஜின்னாவிடம் பேசும் பொழுது, 'பாகிஸ்தான் வந்தால் ஒவ்வொரு கிராமத்திலும் ஒவ்வொரு தெருவிலும் ஒன்றோடொன்று சண்டையிட்டுக் கொண்டிருக்கும் இரு தேசீய சமுதாயங்கள் ஏற்பட்டு விடுமே! இது நினைப்பதற்கும் பயங்கரமாக ஆகிவிடுமே!' என்று குறிப்பிட்டதாகச் சொல்லப்படுகிறது. இது பயங்கரமாக இருக்கிறதெனினும், இதைத் தவிர வேறு வழியில்லை என்று திரு. ஜின்னா பதிலளித்ததாகவும் சொல்லப்படுகிறது.[3] திரு. ஜின்னா சமீபத்தில் வெளியிட்ட பத்திரிகைச் செய்தி யொன்றில், தாம் திரு. எட்வர்டு தாம்ஸனுக்குப் பேட்டியளித்ததையும், மேற்கண்ட பதிலளித்ததையும் மறுத்திருக்கிறார். திரு. எட்வர்டு தாம்ஸனுக்கு அவர் அளித்ததாகச் சொல்லப்படும் பேட்டியில், அவரால் சொல்லப்பட்டவை என்று கருதப்படும் வார்த்தைகளை அவர் சொல்லியிருந்தாலும் சரி, சொல்லாவிட்டாலுஞ் சரி, நமக்கு அதைப்பற்றிக் கவலையில்லை. ஆனால் மதத்தை அடிப்படையாகக் கொண்டு இரு தேசீய இனங்களைப் பிரிப்பதாலேற்

3. The conversation is reproduced in Mr. Edward Thompson's *Enlist India for Freedom*, p. 52.

படும் அடிதடி இந்தியாவின் ஒவ்வொரு கிராமத்திலும் ஒவ்வொரு தெருவிலும் உண்டாவதைத் தடுக்க முடியாது என்பதை யாராலும் மறுக்க முடியாது. இந்தியாவின் எந்தப் பாகத்திலாவது உள்ள ஒரு முஸ்லிம் தம் மதம் காரணமாக மட்டும், இந்தியாவின் வெவ்வேறு மூலைமுடுக்குகளிலும் உள்ள முஸ்லிம்களால் ஆகிய ஒரு தேசிய இனத்தைச் சேர்ந்தவராக இருக்கலாம். ஆனல் அதே சமயம் அவர் வாழும் இடம் காரணமாகத் தம்மைச் சூழ்ந்து வாழும் முஸ்லிம் அல்லாதவர்களிடமிருந்து வேறுபட்டவராகவும் மாறிவிட்டால் அப்பொழுது அவர் எந்த அரசாங்கத்திற்குக் கட்டுப்பட்டவர் என்ற கேள்வி இயற்கையாக எழுகின்றது. அவர் பிறந்து வளர்ந்து வாழ்க்கை நடத்தும் அரசாங்கம் முஸ்லிம் அரசாங்கமாக இல்லாது இருக்கலாம். ஆகவே அது பாகிஸ்தானில் அடங்கியதாக இருக்காது. இந்த முஸ்லிம் தாம் வாழும் இந்த ராஜ்யத்திற்குக் கட்டுப்பட்டவரா அல்லது வெகு தொலைவிலுள்ள ஒரு முஸ்லிம் ராஜ்யத்திற்குக் கட்டுப்பட்டவரா? அந்த முஸ்லிம் ராஜ்யத்தில் பெரும் பகுதியினர் இவருடைய மதத்தையே பின்பற்றுகிறார்கள் என்பது தவிர, இந்த முஸ்லிமுக்கும் அந்த அரசாங்கத்திற்கும் எவ்விதமான தொடர்பும் இருக்க முடியாது. முஸ்லிம்கள் மட்டும்தான் ஒரு தேசிய இனமாக முடியும், அவர்கள்தான் அவ்வாறு ஆகிறார்கள், மற்றவர்களிடம் ஒரே மதம் என்ற முக்கியமான அம்சம் காணப்படாததால் அவர்களை உருவமற்ற கதம்பம் என்று கொண்டால் ஒழிய, முஸ்லிம் அரசாங்கத்திலுள்ள முஸ்லிம் அல்லாதவர் யாருக்குக் கட்டுப்பட்டவர் என்ற கேள்வியும் எழக்கூடும். இத்தகைய முஸ்லிம் அல்லது முஸ்லிம் அல்லாதவர் இரட்டை மனிதராகி இரட்டை அரசாங்கத்திற்கு விசுவாசமாக இருப்பார் என்று ஆகிறதா இல்லையா? யுத்தம் போன்ற ஒரு நெருக்கடியில் இப்படி இரண்டுபட்ட விசுவாசம் இருந்தால் சரிப்பட்டு வருமா?

தனியாகப் பிரிந்த ஒரு தேசிய இனத்தைச் சேர்ந்த இத்தகைய அங்கத்தினரின் அந்தஸ்தைப் பற்றியும் பல பிரசினைகள் கிளம்புகின்றன. சாதாரணமாக ஒரு குறிப்பிட்ட நாட்டின் அரசாங்கத்தில் வசிக்கும் ஒரு மனிதன் அவனுடைய முந்திய தேசிய இனம் எப்படி இருந்தபோதிலும் இப்போது சில நிபந்தனைகளைப் பூர்த்தி செய்து விடுவதால் அந்த நாட்டின் மக்கள் உரிமை பெற்றுவிடுகிறார்கள். அதனல் அவனுக்கு ஓர் அந்தஸ்துக் கிடைக்கிறது. சில உரிமைகளைப் பெறுகிறான். சில பொறுப்புகளும் ஏற்பட்டு விடுகின்றன. இந்தியாவில் உள்ள ஒரு முஸ்லிம், முஸ்லிம் அரசாங்கத்தில் வாழ்கிறானா அல்லது முஸ்லிம் அல்லாத அரசாங்கத்தில் வாழ்கிறானா என்பதைப்பற்றி ஆராயாது அவன் எங்கிருந்தாலும் மதம் காரணமாக அவன் முஸ்லிம் தேசீய இனத்தைத்தான் சேர்ந்தவன் என்று வைத்துக்கொண்டால், தான் வாழும் நாடு முஸ்லிம் அல்லாத நாடாக இருக்கும்பொழுது அந்த நாட்டைச் சேர்ந்தவன் என்ற அந்தஸ்தைக் கேட்பதற்கு அவனுக்கு உரிமை உண்டா, அல்லது அந்த அந்தஸ்தை அவனுக்குக் கொடுப்பதுதான் நீதியாகுமா, ஒழுங்காகுமா? அவ்விடத்தில் அவன் ஓர் அந்நியன் போன்று இருக்கவில்லையா? தன்னுடைய தேசிய இன ராஜ்யமாகிய முஸ்லிம் ராஜ்யத்தைத் தனக்குப் பாதுகாப்பு அளிக்கவும் தனக்குச் சாதகங்கள் தேடிக் கொடுக்கவும் எதிர்பார்த்துக்கொண்டு இருக்கமாட்டானா? தான் வாழும் நாட்டின் அரசாங்கத்தினிடமிருந்து ஏதாயினும் உரிமைகளைப் பெறலாம் என்றால் ஓர் அந்நியன் எதிர்பார்க்கக்கூடிய உரிமைகளையும் சலுகைகளையுந் தானே அவன் எதிர்பார்க்கலாம். ஒரு தேசிய இனத்தைச் சேர்ந்தவர்கள் அந்நிய நாட்டில் சென்று வேலை பார்த்துத் தொழில் நடத்தி வாழக்கூடும். அதே

நாட்டில் அதே தேசிய இனத்தைச் சேர்ந்தவர்களாகி வேலை செய்து தொழில் நடத்துபவர்களும் இருக்கலாம். இவர்கள் அந்த நாட்டைச் சேர்ந்த கூட்டத்தாரில் சிறுபான்மையராக இருக்கக்கூடும். அந்த நாட்டில் வந்து பிழைக்கும் அந்நியர்களுக்கும் அந்த நாட்டிலேயே பிறந்து வாழ்ந்து வளரும் சிறுபான்மையினருக்கும் வித்தியாசம் உண்டு. இந்த வித்தியாசத்தைப் புறக்கணிக்கவோ அலட்சியம் செய்யவோ யாராலும் முடியாது. அந்த நாட்டில் உள்ள சிறுபான்மையர் அதே நாட்டின் தேசிய இனத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களுக்கு அத்தகைய உரிமைகளும் உண்டு. ஆனால் சிறுபான்மையினருக்குக் கிடைக்கும் உரிமைகளை அந்நியர்கள் பெற முடியாது. ஆகவே, முஸ்லிம் அல்லாதவர்கள் பெரும்பான்மையாக உள்ள மாகாணங்களிலும் ராஜ்யங்களிலும் உள்ள முஸ்லிம்கள், மற்றொரு தேசிய இனத்தைச் சேர்ந்தவர்களாகக் கூறிக்கொண்டு அதே சமயத்தில் சிறுபான்மையினரின் உரிமைகளையும் கோர முடியாது. முஸ்லிம் ராஜ்யங்களில் உள்ள முஸ்லிம் அல்லாதவர்களும் தாங்கள் வேறு தேசிய இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று கூறினால் அவர்களது நிலைமையும் இவ்வாறே ஆகும்.

முஸ்லிம் மனப்போக்கின்படி நாடாள வேண்டுமென்ற ஆசை கொண்டு இந்தியாவின் வடமேற்கிலும் கிழக்கிலும் முஸ்லிம் ராஜ்யங்களை ஏற்படுத்த லீக் விரும்பினால் அந்த ராஜ்யங்களில் உள்ள முஸ்லிம் அல்லாதாரின் அந்தஸ்து என்ன? அந்நாட்டினரோடு சரிநிகராக நடத்தப்படுவார்களா, அல்லது தாழ்த்தப்படுவார்களா?

முஸ்லிம்களுக்கும் ஜிம்மிகளுக்கும் இடையே ஒரு வேறுபாட்டை முஸ்லிம் பொதுஜனச் சட்டம் ஒப்புக்கொள்ளுகிறது. முஸ்லிம் அல்லாதவர்கள் ஜிம்மிகளுடைய அந்தஸ்தைப் பெறுவார்கள் என்று கொள்வதா அல்லது தற்கால ஜனநாயக ராஜ்யங்களில் உள்ள ஜனங்களைப்போல நடத்தப்படுவார்கள் என்று கொள்வதா? அலிகார் முஸ்லிம் சர்வ கலாசாலையைச் சேர்ந்த திரு. ஏ. எஸ். டெரிடன் என்பவர் 'காலிப்களும் அவர்களது முஸ்லிம் அல்லாத குடிகளும்' என்று ஒரு புத்தகம் எழுதியிருக்கின்றார். அதில், காலிப்கள் ஆண்ட முஸ்லிம் நாடுகளில் முஸ்லிம் அல்லாதவர்கள் நிலைமையை விரிவாக எழுதியுள்ளார். அதைச் சுருக்கிக் கூறுவது இங்கு சாத்தியமில்லை. அந்நூலின் கடைசி அத்தியாயத்திலிருந்து சில வாக்கியங்களைக் கொடுப்பதோடு நிறுத்திக் கொள்கிறேன். திரு. டெரிடன் கூறுவதாவது :—'இஸ்லாமிய ஆட்சி அடிக்கடி சகிக்க முடியாததாய் இருந்தது. எகிப்தில் நடந்த கலகமே அதற்கு அத்தாட்சி. முஸ்லிம்களின் தேவைகளெல்லாம் பூர்த்தியான பிறகு கஜானுவில் உள்ள அதிகப்படி பணத்தை திம்மிகளுக்காகச் செலவு செய்யுமாறு ஒரு கவர்னருக்கு இரண்டாவது உமார் என்ற காலிப் உத்தரவிடலாம். ஆனால் அரசாங்கத்திற்குத் தேவையான எல்லாப் பணத்தையும் திம்மிகள்தான் கொடுத்தாகவேண்டும் என்பது வழக்கமாக இருந்தபோதிலும் அவர்கள் பிரதியாகப் பெற்றதொன்றும் கிடையாது. முந்திய அரசாங்கங்களுக்குச் செலுத்திய வரிகளைக் காட்டிலும் அதிகமான வரிகளை அவர்கள் முதன்முதலில் ஒருகால் செலுத்தாமல் இருந்திருக்கக்கூடும். ஆனால் நாளடைவில் ஏதாவது ஒரு வழியில் அவர்களுடைய வரிச்சுமை பெருகிக் கொண்டே போயிற்று. முதல் நூற்றுண்டின் இறுதியில் இரண்டாவது உமாரின் ஆட்சியின்போது திம்மிகளுக்குச் சங்கடங்கள் ஏற்பட்டன என்பதில் சந்தேகமே இல்லை. அவர்களது உடைக்குத் தடைகள் விதிக்கப்பட்டன. அரசாங்க உத்தியோகங்களிலிருந்து அவர்களை விலக்கும்

முயற்சி தொடங்கப்பட்டது......இரண்டாவது நூற்றுண்டில் முஸ்லிம் மனப் போக்கு கொடூரமாகி விட்டது......உடைகளைப் பற்றிய சட்ட திட்டங்கள் மிகக் கடுமையாயின. மாதா கோயில்களைக் கட்டக் கூடாது என்ற கருத்தும் பிறந்தது. சட்டங்களைக் காட்டிலும் ஆளுபவர்களின் போக்கு சற்று நன்ருக இருந்தது என்று கூறுவது அவசியம். சட்டப் புத்தகத்தில் திம்மிகளுக்கு எத்தனையோ தடைகள் விதிக்கப்பட்டிருந்தன. திருமணம், இழவு, விருந்துகள், மாதா கோயில் திருவிழாக்கள் முதலியன நடத்துவது தடுக்கப்பட்டிருந்தது. முஸ்லிமின் ஆடை ஓரத்தை மிதிப்பது தண்டனை விதிக்கக்கூடிய குற்றமாகும். சாலைகளின் நடுப் பாகத்தை முஸ்லிம்களுக்கு விட்டுவிட்டு திம்மிகள் ஓரமாகவே நடக்க வேண்டும்......

'சமாரா துறவி மடத்தை முத்தாசிம் விலைக்கு வாங்கி அங்கே ஓர் அரண்மனை கட்ட விரும்பினுர். தங்களுடைய கட்டிடங்களுக்கு வேண்டிய பொருள்களைப் பெறுவதற்காக மற்ற காலிப்கள் மாதா கோயில்களை இடித்தார்கள். மாதா கோயில்களையும் துறவி மடங்களையும் சூறையாடுவதற்குப் பாமர மக்கள் எப்பொழுதும் தயாராக இருந்தார்கள். திம்மிகள் செழிப்பாக வாழலாமென்று இருந்தது. இருந்தாலும் பிறர் தயவிலேதான் அவர்கள் எப்பொழுதும் வாழ்ந்து வந்தார்கள். சில சமயம். அரசனுடைய சித்தப் போக்குகளுக்கும் ஆளாக வேண்டியதிருக்கும். பாமர மக்களின் வெறியாட்டத்திற்கு ஆளாக வேண்டியிருக்கும் இன்னும் சில சமயங்களில். ஆல் ஹக்கீம் என்பவனுடைய கதையை ஒரு பைத்தியக்காரனின் கிறுக்குத்தனமாகவே கொள்ள வேண்டும். இஸ்லாம் ஆட்சியின் தன்மையை அது காட்டுவதாகக் கொள்ளக்கூடாது. ஆனுல் திம்மிகளின் நிலைமை பிற்காலத்தில் படுமோசமாகவே மாறியது. பொது மக்கள் துன்புறுத்தியமையால் அவர்கள் மிகவும் கஷ்டப்பட நேர்ந்தது. பாமர மக்களின் மதவெறியோடு, படித்த மக்களின் கெடுபிடிகள் வலுக்க ஆரம்பித்து விட்டன. இங்ஙனம் கெடுபிடி செய்து ஆட்சி நடத்தியமையால், ஆன்மார்த்த, மத விஷயங்களில் இஸ்லாம் ஏனைய மதங்களிலிருந்து முற்றிலும் பிரிக்கப்பட்டு விட்டது. முஸ்லிம் உலகமென்றும், முஸ்லிமல்லாத உலகமென்றும் இரண்டே கருதப்பட்டன. இஸ்லாம்தான் கவனிக்கத் தகுந்தது என்று ஆகிவிட்டது. இந்தப் போக்கிற்கு விலக்கான சில புகழ்பெற்ற உதாரணங்கள் உண்டு. ஆனுல் பொதுப்படையில் இதுவே உண்மை ஆயிற்று. ஒரு திம்மியினுடைய மதத்திற்கு எவனேனும் ஒரு முஸ்லிம் உதவியதாகத் தெரிந்தால் அவனை அழைத்து மன்னிப்புக் கேட்பதற்கு மூன்று முறை சந்தர்ப்பமளிப்பார்கள். மேலும் பிடிவாதமாக இருந்தால் அவனைக் கொன்று விடுவார்கள். முஸ்லிம்கள் வேண்டாம் என்று கழித்து ஒதுக்கிய பொருள்களே திம்மிகளுக்குச் சிறந்தது என்ற உணர்ச்சி பொதுவாக நிலவியது உண்மைதான்.'[4]

பாகிஸ்தானை ஆதரித்து எழுதிய சில எழுத்தாளர்கள், தாங்கள் கருதியிருக்கும் ராஜ்யம் ஒரு முஸ்லிம் ராஜ்யமாக இருக்குமென்பதைத் தெளிவாகவே கூறியிருக்கிருர்கள். முஸ்லிம் ராஜ்யமென்ருல் எல்லோருக்கும் ஒரே நீதி என்பதாக அவர்கள் நினைக்கிருர்கள். மேலே மேற்கோளாகக் காட்டப்பட்டவைகளை அறிந்த பின்பு முஸ்லிம் அல்லாதவர்கள் அந்த அபிப்பிராயத்தை ஒருகாலும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். முஸ்லிம் ராஜ்யம் என்ருல் என்ன என்பதுபற்றிச் சரியாக உணர்ந்து மதிப்பிடுவதற்கு உதவியாக தெளிவான, நன்கு வரையறுக்கப்பட்ட திட்டமொன்று வைத்திருப்பது அவசியமாகும்.

---

4. A. S. Tritton, *The Caliphs and their non-Muslim subjects*, pp. 230-3.

தெளிவற்ற லாகூர் தீர்மானத்திற்கு விளக்கங்களும் விரிவுரைகளும் வேண்டு மென்று பலரும் கேட்பது நியாயமென்று தெளிவாகத் தெரிகிறது. இந்த இரு தேசீய இனக் கொள்கையைக் கொண்டு வருவதற்கு முன்பும், பிரிவினைத் திட்டத்தை முன் வைப்பதற்கு முந்தியும் இந்த விஷயங்களையும் இதுபோன்ற மற்ற பல கேள்விகளையும் லீக் சிந்தித்திருக்க வேண்டும். லீகில் சேராத மற்ற வர்கள்—அவர்கள் முஸ்லிம்களாக இருப்பினும் சரி, முஸ்லிம் அல்லாதவர் களாக இருப்பினும் சரி, இத்திட்டத்தை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று அது விரும்பினால் இந்தச் சிக்கலான பிரசினைகளை அது எப்படித் தீர்க்கப் போகின்ற தென்பதை எல்லோருக்கும் திருப்தியளிக்கும்படி தெரிவிக்க வேண்டும். இல்லாவிட்டால், பிரிவினைத் திட்டத்தை கண்மூடித்தனமாகப் பிறர் ஆதரிக்க வேண்டுமென்று கூறுவதை ஒக்கும்.

ஒரு தெளிவற்ற பொதுக் கொள்கையையும் வரையறுக்கப்படாத ஒரு திட்டத்தையும் ஆதரிப்பதாகப் பிறர் வாக்களிக்க வேண்டும் என்று லீக் விரும்புகிறது. பிறகு மெதுவாக அதனுள் அடங்கிய சிக்கல்களையும் விவரங் களையும் தெரிவித்து அவைகளை அவர்கள் ஒப்புக்கொள்ளும்படியாக நிர்ப் பந்தப்படுத்த விரும்புகிறது. கொள்கையை ஒப்புக்கொண்டபோதிலும் பின்னர் திட்டத்தை அவர்கள் ஒப்புக்கொள்ள முடியாதபோது அவர்களை நம்பிக்கைத் துரோகிகள் என்றும், சொன்ன சொல்லைக் காப்பாற்ருதவர்கள் என்றும் குற்றம் சாட்ட விரும்புகிறது, என்று இவ்வாறெல்லாம் லீகைப்பற்றிக் கருதுவது தர்மமன்று. ஆனல் இக்காரியங்களைப் பொதுஜனப் பார்வைக்கு வெளிப்படுத்தாமலிருக்கும் முறையானது பிறர் இவ்விதமாக அனுதாபமற்ற முறையில் அதை நோக்குவதற்கு இடமளித்து விடுகிறது. முதன்முதலில் பிரிவினைக் கொள்கையை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று லீகின் தலைவர் சொல்லிக்கொண்டே யிருந்தார். அதற்கு உதாரணமாக அவிபக்த இந்துக் குடும்பத்தை எடுத்துக் காட்டினர். அக்குடும்பத்தில் பிரிவினைக் கொள்கை முதலில் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. அதன் பிறகு பிரிவினைக் காரியங்கள் தொடங்கப்படுகின்றன என்பதைக் கூறினர். இப்பொழுது அவருடைய இந்த நிலைமை மாறிவிட்டது. காந்திஜியின் சம்மதத்தையும் அங்கீகாரத் தையும் பெற்றுத் திரு. சி. ராஜகோபாலாச்சாரியார் சரியானதொரு திட்டத்தைக் கொண்டுவந்தார். அது லாகூர் தீர்மானத்தின் ஷரத்துகளைப் பூர்த்தி செய்வதாக அவர் கூறினர். அதைத் திரு. ஜின்ன அளவுகடந்து பழித்தார். இதிலிருந்து நிலைமை எவ்வாறு மாறிவிட்டது என்பதைக் குறிப்பிட்டுக் காட்டலாம். மகாத்மா காந்தியைத் திரு. ஜின்ன தம்முடைய பம்பாய்மாளிகையில் வரவேற்க முடிவு செய்ததை வெளியிட்டபோது 'சி. ஆர்.' திட்டத்தைப் பழித்துவிட்டுக் கூறியதாவது: 'திரு. காந்தி தமது சொந்த முறையிலாவது இந்தியப் பிரிவினையை ஒப்புக்கொண்டிருக்கிருர். மேற்கொண்டு பார்க்கவேண்டிய காரியம் அப்பிரிவினையை எவ்வாறு எப்பொழுது நிறைவேற்றுவது என்பதே யாம்.'[5] திட்ட விவரங்களைத் தெரிவிக்கும் முன்பே பிரிவினைக் கொள்கையை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று இதற்கு முன்பு எவ்வளவோ வற்புறுத்தப் பட்டது. இப்பொழுது திரு. ஜின்ன மேற்கண்டவாறு கூறியதும், அடுத்த படியாகத் தமது திட்டங்களை வெளியிட்டு, தம்முடைய திட்டம் திரு. ராஜ கோபாலாச்சாரியாருடைய 'முடமானதும், சிதைந்தும் நைந்தும் கரையான் அரித்தும்போன பாகிஸ்தானை'க் காட்டிலும் எவ்விதம் உயர்ந்தது என்பதைக்

5. லாகூரில் அகில இந்திய முஸ்லிம் லீக் கௌன்சிலில் பேசியது. 30-7-44.

காட்டுவாரென்று யாருமே எதிர்பார்ப்பது இயற்கை. ஆனால் அதைப்பற்றி நீடித்த விவாதங்கள் நடந்தன. காந்திஜிக்கும் திரு. ஜின்னாவுக்கும் கடிதப் போக்குவரத்துகளும் நெடுநாள் நடந்தன. இவைகளால் கண்ட முடிவு என்ன? இரு தேசீய சமுதாயக் கொள்கையையும் லாகூர் தீர்மானத்தையும் அப்படியே ஒப்புக்கொள்ள வேண்டுமென்று புதிய கோரிக்கைகள் கிளம்பின. அப்பொழுது தான் பிரிவினைத் திட்டத்தைப்பற்றி விவரிக்கலாம் என்றும் சொல்லப்பட்டது. திரு. ஜின்னாவின் வார்த்தைகளின்படியே பிரிவினைக் கொள்கையை காந்திஜி ஏற்றுக்கொண்டு விட்டார். மீண்டும் மற்றொரு விளங்காத பொதுக்கொள்கையையும், விளங்காத பொதுப் பிரிவினைத் திட்டத்தையும் ஒப்புக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறது. திட்ட விவரங்களை வெளியிடுவதற்கு முன்பு பிரிவினைக் கொள்கையை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்த, அவ்வாறே ஏற்றும்கொள்ளப்பட்டது. அவ்வாறு ஏற்றுக்கொண்டதன் வழியாகத் திட்ட விவரங்களைப் பற்றிய பேச்சு எழாமல் இரு தேசீய இனக் கொள்கையை ஒப்புக்கொள்ள வேண்டுமென்ற புதிய கோரிக்கை பிறந்தது. லாகூர் தீர்மானத்திலும் பிரிவினைக் கொள்கையிலும் இரு தேசீய இனக் கொள்கையே அடிப்படையாக இருப்பதாகவும் சொல்லப்படுகிறது. இவைகளை ஒப்புக்கொண்டால் இன்னும் என்னென்ன புதிய கோரிக்கைகள் கிளம்புமோ? தெரியவில்லை. பிரிவினைத் திட்டத்தையும் அதற்கு ஆதாரமான கொள்கையையும் இன்னதென்று முற்றிலுங் கண்டு ஆராயாமல் பகுதி பகுதியாக ஆராயப் புகுவதின் முடிபு இங்ஙனம் குழப்பத்திலேயே முடியும்.

## 25. தெளிவின்மையால் ஏற்படும் பிரதிகூலங்கள்

பாகிஸ்தானில் எந்தப் பிரதேசங்களைச் சேர்த்துக்கொள்வது என்ற பிரசினையும் சரித்திரபூர்வமானது. பொதுவாக இச்சரித்திரம் தெரிந்திருக்காது. பிறிதோரிடத்தில் காட்டி யிருக்கின்றபடி இந்தியாவை முஸ்லிம் மண்டலமாகவும், முஸ்லிம் அல்லாத மண்டலமாகவும் பிரிப்பதற்கு அநேகர் திட்டங்கள் வகுத்து இருக்கின்றனர். அவர்களில் சிலர் கலாசார காரியங்களை உத்தேசித்தும், அரசாங்க நிர்வாகத்தில் முஸ்லிம்கள் நிறைந்த பிரதேசங்களில் மட்டுமல்லாது இந்தியா முழுவதிலும் முஸ்லிம்களை சௌகரியமான நிலைமையில் வைப்பதற்கு உத்தேசித்தும் திட்டங்களை வகுத்துள்ளார்கள். மற்றவர்கள் சுதந்திர முஸ்லிம் நாடுகளை ஏற்படுத்த வேண்டியே திட்டங்கள் வகுத்ததாக வெளிப்படையாகச் சொல்லுகிறார்கள். 1940 மார்ச்சில் லாகூரில் அகில இந்திய முஸ்லிம் லீக் பாகிஸ்தான் தீர்மானத்தை நிறைவேற்றியது. அதற்குச் சற்று முன்பு பிப்ரவரியில் லீகின் அந்நிய விவகாரக் கமிட்டி, இந்தியாவின் அரசியல் அமைப்புச் சீர்திருத்தத்திற்காகத் திட்டங்கள் வெளியிட்ட அநேக ஆசிரியர்களுக்கு அழைப்பு விடுத்தது. 'அந்தக் கமிட்டியின் ஆதரவில் அவர்கள் யாவரும் கூடி ஒவ்வொரு திட்டத்தையும் ஆராய்ந்து முடிவில் சரியானதொரு திட்டத்தை அமைக்க முடியுமா என்று பார்ப்பதே அவர்களின் நோக்கம்.'[1] முஸ்லிம் லீகின் அந்நிய விவகார உதவிக் கமிட்டியின் தலைவர் சர் அப்துல்லா ஹரூன்

1. Letter of Sir Abdullah Haroon, Chairman, Foreign Sub-committe, All India Muslim League, Dated 13th Dec. 1940, published in *The Pakistan Issue*, pp. 73-4.

தலைவர் திரு. ஜின்னாவிடம் ஒரு குறிப்பைக் கொடுத்தார். மேலே மேற்கோளாகக் காட்டப்பட்ட கடிதத்தில் மேலும் அவர் கூறுவதாவது: 'காரியக் கமிட்டியால் அமைக்கப்பட்ட இந்தத் தீர்மானம் (லீகின் லாகூர் தீர்மானம்), சென்ற பிப்ரவரியில் நான் உங்கள் (திரு. ஜின்னாவின்) கையில் கொடுத்த குறிப்பை அனுசரித்துச் செய்யப்பட்டிருக்கிறது.'[2] அந்தக் குறிப்பு வெளியிடப்படவே யில்லை. அதில் என்ன விஷயங்கள் அடங்கியிருக்கின்றன என்பதைச் சொல்லுவதும் இயலாது.

லீகின் அந்நிய விவகார உதவிக் கமிட்டி அழைப்புக்கிணங்கிக் கூடியவர்கள் வெளியிட்ட திட்டங்களில் முற்றிலும் வேறுபட்ட, முரணான இருவிதக் கருத்துக்கள் இருந்தன. முஸ்லிம் மண்டலம் அடக்கமாக இருக்கவேண்டும். அதில் முஸ்லிம்கள் சிறுபான்மையாக இருக்கக்கூடிய இடங்களை எல்லாம் ஒதுக்கிவிட வேண்டும். முஸ்லிம்கள் பெரும்பான்மையாகவும் இதரர்கள் சிறுபான்மையாகவும் இருந்தால்தான் முஸ்லிம்கள் நினைக்கும் பிரகாரம் ஆள முடியும் என்பது ஒருவகைக் கருத்து. முஸ்லிம் பெரும்பான்மை குறைவாக இருந்தால் நிலைதடுமாறி விடுவதோடு அல்லாமல் தனி முஸ்லிம் மண்டலங்களைப் பெற்றிருக்கின்ற நோக்கம் தோல்வி அடையாவிட்டாலும் பழுதடைந்துவிடும் என்பது இவர்கள் கருத்து. மற்றொரு சாரார், முஸ்லிம் மண்டலங்களில் எவ்வளவு அதிகமாக நிலப்பகுதியைச் சேர்த்துக் கொள்ளலாமோ அவ்வளவு சேர்த்துக்கொண்டு விடலாமென்று கருதினார்கள். குறைந்த அளவினதாய பெரும்பான்மை கிடைத்தாலும் போதும் என்று கருதினார்கள். இந்த இருவிதக் கருத்துக்களையும் ஒன்று படுத்துவதே அந்நிய விவகார உதவிக் கமிட்டியின் நோக்கங்களில் ஒன்றாக இருந்திருக்கக்கூடும். லீகின் வருடாந்திரக் கூட்டத்தின்போது இக்கமிட்டியின் வேலைகள் முடிவு பெறவில்லை; ஆகவே சர் அப்துல்லா ஹரூன் லீக் தலைவரிடம் அரை குறையான குறிப்பொன்றைக் கொடுத்தார். சர் அப்துல்லா ஹரூன் அளித்த குறிப்பை அனுசரித்து அமைக்கப்பட்ட லாகூர் தீர்மானம் தெளிவற்ற வார்த்தைகளால் ஆக்கப்பட்டது. உதாரணமாக, 'இந்தியாவின் வடமேற்கிலும் கிழக்கிலும் இருப்பதைப்போல முஸ்லிம்கள் அதிகமாக உள்ள மண்டலங்களை, அவசியமானால் எல்லைகளை மாற்றி அமைத்து அடுத்தடுத்துள்ள பிரதேசங்களை ஒன்று சேர்க்கவேண்டும். இவைகளைச் சுதந்திர ராஜ்யங்களாக ஆக்கவேண்டும். இவைகளிலுள்ள பகுதிகளும் சுயேச்சையும் முழுப் பொறுப்பும் வாய்ந்தவையாக இருக்கவேண்டும்' என்பது அதன் வாசகம். இங்கு முஸ்லிம் ராஜ்யங்களில் சேர்க்கவேண்டிய நிலப்பரப்பைக் குறிக்கும் சொற்களாவன: 'பகுதிகள்' 'பிரதேசங்கள்', 'நிலப்பரப்புகள்', 'மண்டலங்கள்.' தற்காலத்திய அரசியலமைப்பு அல்லது நிர்வாக தஸ்தவேஜுகளிலோ இந்த வார்த்தைகள் ஒன்றையும் காணமுடியாது. தற்காலம் காணப்படும் சொற்கள் 'ஜில்லாக்கள்', 'தாசில்கள்', 'தாலுகாக்கள்', 'மாகாணங்கள்' என்பனவாம். நிச்சயமின்மை, தெளிவின்மை, விளங்காத்தனம் முதலியவைகள் வேண்டாமென்றும் தெளிவும், எளிமையும் வேண்டுமென்றும் விரும்பியிருந்தால் இத்தகைய யாருக்கும் தெரிந்து விளங்கக்கூடிய சாதாரணச் சொற்களைக் கையாண்டிருக்கலாம். அந்தச் சமயத்தில் அவர்கள் இவ்வாறு தெளிவாக இருப்பது சரிப்படாது என்றும் மேலே பிரஸ்தாபித்த இரு கட்சியினரின் வேற்றுமைகள் பலப்பட்டு விடுமென்றும் ஒருவேளை நினைத்திருக்கலாமல்லவா?

---

2. Letter of Sir Abdullah Haroon, op. cit., p. 75.

எது எப்படி இருந்தபோதிலும் இந்த வார்த்தைகள் என்ன கருத்தோடு உபயோகப்படுத்தப்பட்டன என்பதை நாம் யோசிக்கவேண்டும்.

இவ்வாறு தெளிவும் விளக்கமும் இல்லாதபோதும் அந்த வார்த்தைகள், இருக்கின்ற அமைப்பில் போதுமான தெளிவு உடையனவாகவே இருக்கின்றன. மறைமுகமாக அதற்குச் சரியான பொருளை லீகின் தலைவரே கொடுத்திருக்கின்ருர். அவருடைய அர்த்தத்தின்படி முஸ்லிம் பெரும்பான்மை அதிகமாகவும் நிலப்பரப்பு சிறிதாகவும் உள்ள ராஜ்யத்தையே விரும்புகிருர். முஸ்லிம் பெரும்பான்மை சிறிதாகவும் நிலப்பரப்பு அதிகமாகவும் உள்ள முஸ்லிம் ராஜ்யங்களை அவர் விரும்பவில்லை.

இந்த அபிப்பிராயத்திற்கு ஆதாரமான சில உண்மைகளைக் குறிப்பிடுகிறேன். அமெரிக்க இன்டர் நேஷனல் நியூஸ் ஸர்வீஸ் நிருபரான திரு. என். டபிள்யூ. சாப்மன் பேட்டி கண்டபோது திரு. ஜின்னு கூறியதாவது: 'மொத்த ஜனத்தொகையில் முஸ்லிம்கள் கிட்டத்தட்ட 75 சதவிகிதம் இருக்கக்கூடிய வடமேற்கு, கிழக்குப் பகுதிகளில் தனி முஸ்லிம் ராஜ்யங்கள் ஏற்பட்டு பாகிஸ்தான் கிடைக்கும்பொழுதுதான் உண்மையான சுதந்திரம் கிடைக்கும்.'[3] வடமேற்குப் பகுதியைப் பொறுத்தமட்டும் இது சரிதான். அதில் முஸ்லிம் அல்லாதார் அதிகமாக உள்ள பஞ்சாப் ஜில்லாக்களை ஒதுக்கிவிட வேண்டும். கீழ்க்காணும் 1941-ம் வருடத்திய ஜனக் கணக்கு இதைத் தெளிவாகக் காட்டுகிறது.

## அட்டவணை VII

### வடமேற்கு மண்டலத்தில் முஸ்லிம், முஸ்லிமல்லாதாரின் எண்ணிக்கை

| பிரதேசப் பெயர் | மொத்த ஜனத்தொகை | முஸ்லிம் | முஸ்லிம் அல்லாதார் |
|---|---|---|---|
| | | (லக்ஷக் கணக்கில்) | |
| வ. மே. எ. மாகாணம் ... | 30·38 | 27·88 | 2·49 |
| சிந்து ... | 45·35 | 32·08 | 13·27 |
| பிரிட்டிஷ் பலுசிஸ்தானம் ... | 5·02 | 4·39 | 0·63 |
| பஞ்சாப் (முஸ்லிம் அல்லாதார் பெரும்பான்மையாக உள்ள ஜில்லாக்களை நீக்கி, முஸ்லிம் பெருவாரியாக உள்ளவை) ... | 168·71 | 123·64 | 45·07 |
| மொத்தம் ... | 249·46 | 187·99 | 61,46 |

இந்த விவரப்படி முஸ்லிம் தொகை 75·30 சதவிகிதமும் முஸ்லிம் அல்லாதார் தொகை 24·70 சதவிகிதமும் ஆகிறது. இதற்கு மாருக பஞ்சாப் மாகாணத்தின் முழு ஜனத்தொகையையும் எடுத்துக்கொண்டால், முஸ்லிம் அல்லாதவர்கள் பெரும்பான்மையினராக இருக்கும் பாகங்களின் ஜனத்

3. *Some recent speeches and writings* of Mr. Jinnah, collected and edited by Jamiluddin Ahmad, 3rd Edition (1943), p. 366.

தொகையை மேலே கொடுத்துள்ளவற்றுடன் சேர்த்துக் கணக்கிட்டால், பின் வருமாறு நிலைமை இருக்கும்:

| | | மொத்த ஜனத்தொகை (லக்ஷக் கணக்கில்) | முஸ்லிம் |
|---|---|---|---|
| அட்டவணை VII-ல் காணும் மொத்த ஜனத்தொகை | ... | 249·46 | 187·99 |
| விலக்கப்பட்ட பகுதியின் ஜனத்தொகை | ... | 115·48 | 38·54 |
| மொத்தம் | ... | 364·94 | 226·53 |

இக்கணக்கின்படி முஸ்லிம் ஜனத்தொகை ·62 சதவிகிதம் ஆகிறது. இதேபோன்று 1931-ம் வருடத்திய ஜனக்கணக்குப்படி புள்ளி விவரங்களை எடுத்துக்கொண்டால், பஞ்சாப், சிந்து, வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பிரிட்டிஷ் பலுசிஸ்தானம் இவைகளின் மொத்த ஜனத்தொகை 3,03,50,506 ஆகவும், அதில் முஸ்லிம் சங்கியை 1,87,95,872 அல்லது 61·9 சதவிகிதமாகவும் ஆகிறது.

திரு. சாப்மனுக்கு ஜின்னா பேட்டியளித்தபோது வடமேற்கு மண்டலத்தில், பஞ்சாப் முழுவதையும் சேர்த்துச் சொல்லியிருப்பது சாத்தியமாக இருக்கமுடியாது. ஆனால் முஸ்லிம்கள் பெரும்பாலோராகவுள்ள பஞ்சாபின் அந்தப் பாகத்தைமட்டும் தான் சேர்த்திருக்க முடியும்.

இதே முடிவைக் குறிப்பிடக்கூடிய மற்றொரு தஸ்தாவேஜும் இருக்கிறது. இந்தியாவின் மற்றப் பகுதியிலிருந்து முஸ்லிம் மண்டலங்களைப் பிரித்துவிடும் விஷயத்தைப் பற்றி ஈஸ்டர்ன் டைம்ஸ் பத்திரிகையில் திரு. எம். ஆர். டி. நிறைய எழுதியிருக்கிறார். 1940 மார்ச்சில் லாகூரில் கூடிய லீக் கூட்டத்திற்குப் பிறகு, இந்தியாவின் வருங்கால அரசியல் அமைப்புப் பிரசினை என்ற புத்தகம் திரு. எம். எச். ஸையத் என்பவரால் வெளியிடப்பட்டது இவர் பம்பாயைச் சேர்ந்தவர். ஜின்னாவின் சார்பாகத்தான் இதை எழுதியிருக்கிறார் என்பது தெளிவு. ஜின்னாவும் இதற்கொரு முன்னுரை தந்துள்ளார். அம்முன்னுரையில் அவர் கூறுவதாவது: ‘இந்தியாவின் வருங்கால அரசியல் அமைப்புப்பற்றி பரிசீலனை செய்ய உண்மையாக விரும்புகிறவர்களுக்கு இப்புத்தகம் பெரிதும் உதவும். இந்த நோக்கைக் கொண்டுதான் நன்றாக ஆராயப்பட்ட ஒரு சில கருத்துக்களைத் தேர்ந்தெடுத்து ஒரு புத்தக ரூபத்தில் அமைத்திருக்கிறேன். அகில இந்திய முஸ்லிம் லீகின் லாகூர் தீர்மானம் ஓர் அடிப்படையான பிரசினையைக் கிளப்புகிறது. அதை விளக்குவதற்கு இந்தச் சிறு புத்தகம் அதிக உதவியளிக்கும் என நம்புகிறேன். இந்தப் பரந்த உபகண்டத்தின் நன்மையை விரும்புகின்ற ஒவ்வொருவரும் வெறுப்பு, ஓரவஞ்சகம், அறிவற்ற உணர்ச்சியின்றி இப்பிரசினையை மேற்கொள்வார்களென்று நம்புகிறேன்.’ இந்தப் புத்தகத்தில் அநேகருடைய அபிப்பிராயங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இவைகளைத் தேர்ந்தெடுத்தவர் ஜின்னாதான். லீக் கூடுவதற்கு முன்பு 1940 ஜனவரி 5-ல் ஈஸ்டர்ன் டைம்ஸ் பத்திரிகையில் வெளிவந்த திரு. எம். ஆர். டி.யின் கட்டுரையும் ஒன்று இந்தக் கட்டுரையில் பாதுகாப்பிலிருப்பதா அல்லது பிரிவினையா என்ற

பிரசினையைப்பற்றி ஆராயும்பொழுது திரு. எம். ஆர். டி கூறுவதாவது: 'அடுத் தடுத்துள்ள ஐந்து பரப்புகளான பஞ்சாப், காஷ்மீர், சிந்து, எல்லைமாகாணம், பலுசிஸ்தானம் என்ற வடமேற்குப் பிராந்தியத்தின் ஜனத்தொகையான 4 கோடியே 20 லட்சத்தில் முஸ்லிம்களின் ஜனத்தொகை 2 கோடியே 80 லட்சம் ஆகிறது. பஞ்சாபின் கிழக்கு ஓரப்பகுதியைச் சற்று மாற்றியமைத்து முஸ்லிம் ஜனத்தொகையை இன்னும் அதிகப்படுத்தி விடலாம். அம்பாலா டிவிஷனையும் கிழக்கே உள்ள இந்து, சீக்கிய ராஜ்யங்களையும் பஞ்சாபிலிருந்து நீக்கிவிட்டால் பஞ்சாபின் தற்போதைய ஜனத்தொகை 2 கோடியே 85 லட்சத் திலிருந்து 2 கோடியே ஒரு லட்சமாகிவிடும். முஸ்லிம்களின் ஜனத்தொகையோ 55 சதவிகிதத்திலிருந்து 70 சதவிகிதத்திற்கு ஏறிவிடும். முழுவதும் முஸ்லிமான வடமேற்குப் பிரதேசத்தைப் பூராவாகச் சேர்த்து ஒன்ருக்கும்பொழுது இந்த முஸ்லிம் ஜனத்தொகையின் சதவிகிதம் இன்னும் அதிகமாக உயரும். உத்தேசித்தபடி கிழக்கு எல்லையை மாற்றி அமைத்த பின்பு வடமேற்குப் பகுதியில் மொத்தமாக எல்லாம் சேர்ந்து 3 கோடியே 50 லட்சம் ஜனத்தொகை இருக்கும். அதில் முஸ்லிம் ஜனத்தொகை 2 கோடியே 70 லட்சமாகவும் முஸ்லிம் அல்லாதார் ஜனத்தொகை 80 லட்சமாகவும் இருக்கும். நிரந்தர மானதும் அசைக்கமுடியாத அளவு பலம் கொண்டதுமான 77 சதவிகித அளவுக்கு முஸ்லிம் ஜனத்தொகை உயர்ந்துவிடும். அதிலும் ஜனத்தொகையை பரிவர்த்தனை செய்யும் திட்டத்திற்கு அவசியமில்லாதபடியே காரியம் நிறை வேறிவிடும்.'[4] திரு. ஜின்னுவின் அதிகாரமும் ஆதரவும் பெற்று 'லாகூர் தீர்மானத்தை விளக்குவதற்கு உதவி செய்யும் இத்திட்டம்' முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இல்லாத பாகத்தை பஞ்சாபிலிருந்து விலக்குவதை ஆதரிக்கின்றது. இதே அபிப்பிராயத்தை மறைமுகமாக ஆதரிக்கின்ற மற்ருெரு விஷயமும் இருக்கின்றது. சர் அப்துல்லா ஹரூன் தலைமையில், நியமிக்கப்பட்ட லீகின் அந்நியக் கமிட்டிபற்றி முன்னமேயே சொல்லியிருக்கி றேன். அந்தக் கமிட்டி லாகூர் லீக் மகாநாட்டிற்குப் பின்பும் தொடர்ந்து கூடியது. வடமேற்கு மண்டலத்தில் சேர்க்கவேண்டிய ராஜ்யங்களைப் பற்றி விவரமான ஒரு திட்டத்தைத் தயாரித்தது. இந்தத் திட்டத்தில் பஞ்சாப் முழுவதும் சேர்க்கப்பட்டிருந்தது. மேலும் பஞ்சாபிலும் காஷ்மீரிலுள்ள சுதேச ராஜ்யங்கள், டில்லி மாகாணத்தின் கிழக்கு எல்லையைத் தாண்டிய பிரிட்டிஷ் இந்தியாவின் ஒரு பகுதி, அலிகார் ஜில்லாவில் ஒரு பாகம், பிகானிர், ஜெய்ஸல்மீர், ராஜபுதானம் ஆகிய சுதேச சமஸ்தானங்களும் சேர்க்கப்பட்டிருந்தன. இந்தத் திட்டம் 1941 பிப்ரவரி 18-ம் தேதி டில்லி ஸ்டேட்ஸ்மன் பத்திரிகையில், பூர்த்தியாகு முன்பே ஆதாரமற்றதாக வெளி வந்துவிட்டது. மாகாணப் பத்திரிகைகளின் டில்லி நிருபர்கள், தங்கள் தங்கள் ஊர்ப் பத்திரிகைகளுக்கு லீகின் அந்நியக் கமிட்டி பிப்ரவரி 17-ல் வெளியிட்ட தாகச் சொல்லித் தந்தியடித்து, திட்டத்தின் சுருக்கத்தை அனுப்பிவிட்டார்கள். இந்தத் திட்டத்தை நன்ருகப் படித்துப் பார்த்து அதுபற்றி அவருடைய கருத்தை வெளியிடுமாறு சர் அப்துல்லா ஹரூன் டாக்டர் சையத் அப்துல் லத்தீபைக் கேட்டிருந்தார். அவ்வாறே டாக்டர் லத்தீபும் 1941 மார்ச் 8-ம் தேதி தம்முடைய கருத்தை அனுப்பியிருந்தார். அதனுடைய பிரதி ஒன்றைத் திரு. ஜின்னுவுக்கும் அனுப்பியிருந்தார். இச்செய்கை ஜின்னுவுக்குக் கோபமூட்டிய தாகத்தெரிகிறது. அவர் மார்ச் 15-ல் டாக்டர் லத்தீபுக்குக் கீழ்க்கண்டவாறு எழு

---

4. *India's Problem of her Future constitution*, pp. 33-4.

தினர்: 'உங்களுக்கு வெளிப்படையாகத் தெரிவிப்பது என்னவென்றால் நீங்கள் சதா தொண தொண என்று கூறிக் கொண்டிருப்பதுபோல ஒரு கமிட்டியையும் முஸ்லிம் லீக் நியமிக்கவில்லை. முஸ்லிம் லீகோ நானோ, தனிநபர்களிடமிருந்தும் குழுவினரிடமிருந்தும் யோசனைகளைக் கவனிப்போமே தவிர மற்றப்படி திட்டங்கள் என்று சொல்லப்படுகின்ற இப்பிரேரணைகளை ஒப்புக்கொள்ள முடியாது. ஆகவே தாங்களோ அல்லது சர் அப்துல்லா ஹாரூனோ இந்தக் கமிட்டி அந்தக் கமிட்டி என்று பேசிக்கொண்டிருக்க வேண்டாம். முஸ்லிம் லீகோ அதனுடைய அதிகாரமோ தனி நபர்களும் கூட்டங்களும் கொண்டு வரக்கூடிய திட்டங்களுக்கு ஆதரவளிப்பதாகக் கூறவேண்டாம்.'[5]

ஆகவே நிலைமை சுருக்கமாகப் பின்வருவதுபோல் ஆகிறது. இன்டர் நேஷனல் நியூஸ் ஏஜன்சி நிருபரிடம், லீக் தலைவர் வடமேற்கு மண்டலத்தில் முஸ்லிம் ஜனத்தொகை மொத்தத்தில் 75 சதவிகிதமாகிறதென்றும் இவ்வாறு ஏற்படுவதற்கு முஸ்லிம் அல்லாதவர் அதிகமாக இருக்கும் பஞ்சாப் கிழக்கு ஜில்லாக்களை ஒதுக்கி விடுவது அவசியம் என்றும் சொல்லியிருக்கிறார். 'லாகூர் தீர்மானத்தை மிகவும் தெளிவுபடுத்த உதவுகின்றன' என்று சொல்லி அநேக அபிப்பிராயங்களைப் பொறுக்கித் தொகுத்து வெளியிடுகின்றார். இந்த அபிப்பிராயத் தொகுப்பில், பஞ்சாபிலுள்ள கிழக்கு ஜில்லாக்களை விலக்கவேண்டுமென்று சொல்லும் திரு. எம். ஆர். டி.யின் திட்டத்தைச் சேர்த்திருக்கிறார். பஞ்சாப் முழுவதையும் சில சுதேச சமஸ்தானங்களையும் பிரிட்டிஷ் இந்தியாவின் மற்றச் சில பாகங்களையும் சேர்க்க வேண்டுமென்று கூறும் திட்டங்களையும் அபிப்பிராயங்களையும் ஒதுக்கித் தள்ளிவிட்டார். மிகவும் செல்வாக்குள்ள பிரமுகரான சர் அப்துல்லா ஹாரூன் தலைமையில் லீகின் அந்நியக் கமிட்டி தயாரித்த திட்டத்தில், பஞ்சாப் முழுவதும், அலிகார் வரையிலுள்ள சில பிரிட்டிஷ் இந்திய பாகங்களும் சில இந்திய சமஸ்தானங்களும் சேர்கப்பட்டதற்காகக் கமிட்டி நடவடிக்கைகளையும் கமிட்டியையும் ஜின்னா நிராகரித்து விடுகிறார். இதிலிருந்து லீகின் தலைவர் வடமேற்கு மண்டலத்தில் பஞ்சாப் பூராவையும் சேர்ப்பதை விரும்பவில்லை என்றும் கிழக்குப் பஞ்சாபை விலக்குவதை விரும்புவதாகக் காட்டுகிறார் என்றும் முடிவுக்கு வருவதைத் தடுக்க முடியாது. இவைகளை எல்லாம் பார்க்கும்பொழுது முஸ்லிம்களுக்கும் முஸ்லிமல்லாதவர்களுக்கும், லீக் தலைவர் தெளிவான வார்த்தைகளில் பிரிட்டிஷ் இந்தியாவின் எந்த ஜில்லாக்களை வடமேற்குப் பகுதியில் சேர்ப்பதாக உத்தேசிக்கிறார் என்ற விஷயத்தை அதிகாரபூர்வமாக தெரிவித்துவிடுதலே சிறந்தது ஆனால் ஏற்கெனவே சொல்லப்பட்ட பிரகாரம் அவர் அவ்வாறு செய்ய மறுத்துவிட்டார். 1944 ஏப்ரல் வரையில் அவ்வாறு பிடிவாதமாகவே இருந்தார். அத்திட்டத்தை ஆராய்வதற்காக அதன் விவரங்கள் வேண்டுமென்று பஞ்சாபின் முஸ்லிமல்லாத மந்திரிகள் கேட்டபொழுதும் மறுத்துவிட்டார். இத்திட்டத்தைப் பற்றி யாருக்கும் விளங்குகின்ற முறையிலும் எளிதாகச் சொல்லக்கூடிய முறையிலும் சாதாரணப் பழக்கமுள்ள அரசியல் பதங்களை உபயோகித்துத் திரு. சி. ராஜகோபாலாச்சாரியார் அத்திட்டத்திற்குச் சரியான அமைப்புக் கொடுத்தபிறகே அதாவது, மகாத்மா காந்தியோடு பேச்சு வார்த்தை நடத்தும்போதும் ஒரு பத்திரிகை பேட்டியின்போதும் திரு. ஜின்னா முதன் முதலாக வாயைத் திறந்து லாகூர் தீர்மானத்தின்படி முஸ்லிம் மண்டலங்களில் சேர்க்கவேண்டிய பரப்புகள்,

5. *The Pakistan Issue*, p. 100.

இன்றுள்ளபடி ஜில்லாக்கள் இல்லை, முழு மாகாணங்களே என்று கூறினர். இவ்விதமாகப் பார்க்கப்போனல் வடமேற்கு மண்டலத்தில் பஞ்சாப் முழுவதும் சேரவேண்டியதிருக்கும். கிழக்கு மண்டலத்தில் வங்காளமும் அஸ்ஸாமும் சேரவேண்டியதிருக்கும். பஞ்சாப் முழுவதையும் சேர்த்துக்கொள்வது என்ற கருத்தின் மூலம் லீக் தலைவரின் செயல்கள் முன்னுக்குப் பின் முரணுகிறது என்பது நமக்குத் தெரியவருகிறது.

இப்பொழுது கிழக்கு மண்டலத்தைப் பற்றிக் கவனிப்போம். வங்காளத்தின் ஜனத்தொகை 6,03,06,525. இதில் 3,30,05,434 அல்லது . 54 73 சதவிகிதம் முஸ்லிம்கள். அஸ்ஸாமின் ஜனத்தொகை 1,02,04,733. இதில் 34,42,479 அல்லது 33·73 சதவிகிதம் முஸ்லிம்கள். லாகூர் தீர்மானத்தில் உத்தேசமாகச் சொல்லப்படும் பிரகாரம் இந்த 2 மாகாணங்கள் முழுவதையும் கிழக்கு முஸ்லிம் மண்டலத்தில் சேர்ப்பதாயிருந்தால் இரண்டு மாகாணங்களிலுமுள்ள ஜனத்தொகை 7,05,11,258 ஆகும். இதில் முஸ்லிம் தொகை 3,64,47,913 அல்லது 51 69 சதவிகிதமாகிறது என்ற நிலைமை ஏற்படுகின்றது. கிழக்கிலும் முஸ்லிம் ஜனத்தொகை 75 சதவிகிதமிருக்கும் என்று திரு. சாப்மனிடம் திரு. ஜின்னு கூறியதற்கும் உண்மைக்கும் வெகுதூரமிருக்கின்றது. முஸ்லிமல்லாதவர்கள் அதிகமாக இருக்கின்ற பகுதிகளை எடுத்துவிட்டு முஸ்லிம்கள் அதிகமாக இருக்கும் பகுதிகளைச் சேர்த்தாலும் கிழக்கில் முஸ்லிம் ஜனத்தொகை 68 அல்லது 69 சத விகிதத்திற்குமேல் ஏருது. திரு. எம். ஆர். டி. இக்கிழக்கு மண்டலத்தைப் பற்றி ஒரு கட்டுரையில் குறிப்பிட்டிருக்கின்ருர். இக் கட்டுரை இந்தியாவின் வருங்கால அரசியல் பிரசினை என்ற புத்தகத்தில் 34-ம் பக்கத்தில் காணப்படுகின்றது. அதன் வாசகங்கள் : 'பஞ்சாபில் போல வங்காளத்திலும்கூட எல்லைகளை மாற்றியமைப்பதால் முஸ்லிம் ஜனத்தொகை 80 சத விகிதத்திற்கு மேல் வரக்கூடும். கிழக்கு வங்காளத்திலும் மேற்கு வங்காளத்தில் கோல்பாரா, சில்ஹட் ஜில்லாக்களிலும் முஸ்லிம்கள் 75 சத விகிதத்தினராக இருக்கின்றனர். இந்த ஜனத்தொகை ஒன்று சேர்க்கப்பட்டுக் கிழக்கு வங்காளத்திலிருந்தும் அஸ்ஸாமிலிருந்தும் ஒரு புதிய மாகாணம் உண்டாக்கப்பட்டால் 4 கோடி ஜனத்தொகையில் முஸ்லிம்கள் 80 சத விகிதத்தினராய் நிரந்தரமான பெரும்பான்மை உடையவராக இருப்பார்கள்.' திரு. எம். ஆர். டி யால் கொடுக்கப்பட்ட இந்தப் புள்ளிகள் தவருனவை என்பதை இனிமேல் காண்போம். ஆனுல் அவருடைய கருத்துப்படி கிழக்கு முஸ்லிம் மண்டலத்தில் வங்காளமும் அஸ்ஸாமும் முழுவதும் சேர்க்கப்படுவதாயில்லை என்பதையும் முஸ்லிம்ஜனத்தொகை அதிகமாயுள்ள பாகங்கள் மாத்திரம் சேர்க்கப்படும் என்பதையும் ஞாபகப்படுத்திக்கொள்வோம். வட கிழக்குப் பகுதியில், 'தற்போதைய அஸ்ஸாமும் வங்காளமும் பீகாரிலுள்ள, ஆனுல் வங்காளத்தோடு கலாசாரத் தொடர்பு கொண்ட பூர்ணியா ஜில்லாவும் (பாங்கூரா, மிட்னுபூர் ஜில்லாக்கள் தவிர) சேரவேண்டுமென்று' ஹரூன் கமிட்டி சிபாரிசு செய்திருக்கின்றது. இந்தக் கமிட்டியும்கூட வங்காளத்திலிருந்து சில ஜில்லாக்களை விலக்கி இருக்கின்றது. ஆகவே வடமேற்கு மண்டலத்தின் சம்பந்தமாக லீகின் கோரிக்கை புரண்டதைப்போலக் கிழக்கு மண்டலத்தில் பிரதேசங்களைக் கோரும் விஷயத்திலும் லீகின் நிலைமை புரண்டுவிட்டதென்று உறுதியாகச் சொல்லலாம்.

# 26. தீர்மானத்தை அலசிப்பார்த்தல்

கிழக்கு முஸ்லிம் மண்டலத்திலும் வடமேற்கு முஸ்லிம் மண்டலத்திலும் சேர்க்க உத்தேசிக்கப்பட்ட பிரதேசங்கள் எவை எவை என்பது பற்றி வெவ்வேறு பொருள்படக்கூடிய விதமாக லாகூர் தீர்மானத்தில் தெளிவற்ற வார்த்தைகள் உபயோகப்படுத்தப்பட் டிருந்தன என்பதைக் கண்டோம். முஸ்லிம்களும் முஸ்லிம் அல்லாதவர்களும் சேர்ந்து சரியாகவும், அறிவு பூர்வ மாகவும் அதை அறிந்து கொள்ளுவதற்குத் தெளிவானதும், விவரமானதும், வரையறுக்கப்பட்டதுமான திட்டம் அவசியமாகிறது. ஆனால் முஸ்லிம் லீகோ இத்தகைய விவரங்களைக் கொடுக்க மறுத்துவந்திருக்கிறது. லாகூர் தீர்மானத்தி னுடைய வார்த்தைகளுக்கு சாதாரண இயற்கை அர்த்தத்தைக் கொடுத்து அதை நிறைவேற்றும்பொழுது லீக் எதைக் கருதியிருக்கக் கூடும் என்று நாம் பார்க்கவேண்டியதிருக்கின்றது அப்படியானால் இப்பொழுது அத்தீர்மானத்தை அலசிப் பார்ப்போம்.

தீர்மானம் மூன்று பாகங்களைக் கொண்டது. 1935-ம் வருஷத்திய இந்திய அரசாங்கச் சட்டத்திலடங்கிய சமஷ்டித் திட்டம் இந்நாட்டின் பிரத்தியேக நிலைமைகளுக்கு முற்றிலும் பொருந்தாது என்றும், சாத்தியமற்றது என்றும், முஸ்லிம் இந்தியாவுக்கு அடியோடு ஏற்றுக்கொள்ளத் தக்கதல்ல வென்றும் இத்தீர்மானத்தின் முதல் பாகம் கூறுகின்றது. 1935-ம் வருஷத்திய இந்திய அரசாங்கச் சட்டத்தை எவ்வாறு அமுலுக்குக் கொண்டுவருவது, அதை நிறைவேற்றும் வழிகள் எவை என்பதை இந்தியாவிலுள்ள பல்வேறு கட்சிகள், நலன்கள், இனங்களையும் கலந்துதான் மீண்டும் ஆலோசனை செய்யப் படும் என்று 1939 அக்டோபர் 18-ம் தேதி வைஸ்ராய் மன்னரது சர்க்காரின் சார்பாக வெளியிட்ட பிரகடனம் நம்பிக்கை யூட்டுவதாக இருக்கிறதென்றும் அரசியல் அமைப்புத் திட்டம் முழுதும் திருப்பி ஆலோசிக்கப்பட்டால் ஒழிய முஸ்லிம் இந்தியா திருப்தி அடையாதென்றும் அவ்விதம் மாற்றி அமைக்கப் பட்ட திட்டமும் முஸ்லிம்களுடைய சம்மதத்தையும் ஆமோதிப்பையும் கொண்டு அமைக்கப்பட்டாலொழிய அவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாதென்றும் தீர்மானத்தின் இரண்டாவது பகுதி கூறுகின்றது. இவ்வாருக இந்த இரண்டு பாகங்களும் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குக் கூறப் பட்டவையாகும். பிரிட்டிஷ் அரசாங்கம் உத்தேசித்துக்கொண்டிருக்கும் அரசியல் பிரேரணைகள் சம்பந்தமாக லீக் கொண்ட கருத்தை வெளியிடு கின்றன. மேலும் வடமேற்கு கிழக்கு பிராந்தியங்களில் சுதந்திரமான முஸ்லிம் ராஜ்யங்களை ஏற்படுத்தும் பிரசினையைப் பற்றி மூன்ருவது பாகத்தில் சொல்லப்போவதால் அதற்குப் பின்னமைப்பைத் தயார் செய்கின்ற அளவுக்கு முதல் இரண்டு பாகங்களும் முக்கியத்துவம் வாய்ந்தனவாக இருக்கின்றன.

மூன்ருவது பாகத்தின் முதல் பாரா லீகின் முடிவான அபிப்பிராயத்தை வெளியிடுகிறது. அதாவது 'இந்தியாவின் வடமேற்கிலும் கிழக்கிலும் உள்ளது போன்று முஸ்லிம்கள் உள்ள மண்டலங்களை அவசியமானல் மாற்றி அமைத்து அடுத்தடுத்துள்ள பிரதேசங்களை எல்லைகட்டித் தனித்தனி ராஜ்யங்க ளாக ஆக்கவேண்டும். அதைச் சேர்ந்த பகுதிகளும் சுதந்திரமுள்ளனவாக இருக்கவேண்டும்.'

முஸ்லிம் மண்டலத்திலும் முஸ்லிம் அல்லாத மண்டலத்திலும் உள்ள சிறுபான்மையினரின் மதம், கலாசாரம், பொருளாதாரம், அரசியல், நிர்வாகம்

முதலிய உரிமைகளையும் நலன்களையும் காப்பதற்குரிய போதுமான பலனளிக்கத் தகுந்த பாதுகாப்புகளை அவர்களைக் கலந்துகொண்டே அளிக்கவேண்டும் என்று இரண்டாவது பாரா கூறுகின்றது.

இந்த ஆதாரக் கொள்கைகளுக் கிணங்க ஓர் அரசியல் அமைப்பைத் தயார் செய்யும்படி லீக் காரியக் கமிட்டி அதிகாரமளிக்கப்படுகின்றது. மூன்ருவது பாராவின் இறுதியில் தற்காப்பு, அந்நிய விவகாரங்கள், போக்கு வரத்து,சுங்கம் இன்னும் இவைபோன்ற அவசியமான விஷயங்களை எல்லாம் அவ்வப் பிரதேசங்கள் ஏற்றுக்கொள்வதற்கு அந்த அரசியலமைப்பில் இடந்தர வேண்டுமென்று கோருகிறது.

இப்பொழுது இத்தீர்மான ஷரத்துகளிலிருந்து கிளம்பும் கேள்விகள் யாவை என்பதைப் பார்ப்போம்: (அ) யார் அரசியலமைப்பை வகுப்பது? (ஆ) கருதப்பட்ட அரசியலமைப்பின் தன்மை யாது—மன்னனைக் கடவுளாகக் கொண்ட ஆட்சியா? ஜனநாயகமா? ஒரு சிலரது ஆட்சியா? சர்வாதிகாரமா? அல்லது வேறு ஆட்சியா? (இ) பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தோடும் இதர முஸ்லிம் அல்லாத மண்டலங்களோடும் இந்த "சுதந்திர ராஜ்யங்களி"ன் உறவு எப்படியிருக்கப் போகிறது? (ஈ) சிறுபான்மைக்கு அளிக்கப்பட்ட சட்டபூர்வமான பாதுகாப்புகள் கவனிக்கப்படாத பொழுது எவ்வாறு, யாரால், எந்த அதிகாரத்தைக்கொண்டு இந்தப் பாதுகாப்புகள் வற்புறுத்தப்படும்? (உ) முஸ்லிம் ராஜ்யம் அல்லது ராஜ்யங்களில் எங்கெந்தப் பிரதேசங்கள் சேர்க்கப்படும்? (ஊ) அந்நாடுகளின் வளங்கள் என்ன? நிலைமை என்ன? (எ) இந்த அரசியல் அமைப்பை அமுலுக்குக் கொண்டுவரும் காலத்திற்கும் இச் சுதந்திர ராஜ்யங்கள் தற்காப்பு, அந்நிய விவகாரங்கள், போக்குவரத்து, சுங்கம் இவைகள் சம்பந்தப்பட்ட அதிகாரங்களை முடிவாக மேற்கொள்ளுகின்ற காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் இவ்வதிகாரங்கள் யார் பொறுப்பில் இருக்கும்?

முஸ்லிம் மண்டலங்களில் சேர்க்கப்படவேண்டிய பிரதேசங்கள் எவை என்ற கேள்வி ஒருபுறமிருக்க திரு. ஜின்னு லாகூர் தீர்மானத்தை அப்படியே ஒப்புக்கொள்ளவேண்டும் என்று வற்புறுத்துவதால் இத்தீர்மானம் சம்பந்தமான மேற்கண்ட கேள்விகளுக்கு என்ன பதில் என்பதை முழுதும் அறிந்து கொள்வது அவசியமாகும்.

(அ) யார் அரசியல் அமைப்பை வகுப்பது? தீர்மான வாசகத்தையும் புதிய அரசியல் அமைப்பு வேண்டுமென்ற பிரேரணையின் சந்தர்ப்பத்தையும் நோக்க இந்த அரசியல் அமைப்பு 1935-ம் வருடத்திய சட்டத்தைப்போல பிரிட்டிஷ் பார்லிமெண்டால் அமைக்கப்பட வேண்டுமென்று காணப்படுகிறது. ஆனல் அதே சமயத்தில் 1935-ம் வருஷத்திய சட்டம் ஏற்கெனவே இந்தத் தீர்மானத்தின் ஆரம்பத்தில் கண்டிக்கப்படுகிறது. முஸ்லிம்களால் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டுமென்ருல் முஸ்லிம்களினுடைய சம்மதமும் ஆமோதிப்பும் வேண்டும் என்றிருந்தபோதிலும் அந்த அரசியல் அமைப்பை வகுப்பதில் இந்தியர்களுக்கும், ஆகவே முஸ்லிம்களுக்கும் பங்கு கிடையாது. தீர்மானத்தின் இந்தப் பகுதியை ஒப்புக்கொள்ளுவதன் மூலமாக நாம் கிரிப்ஸின் திட்டத்தைத் தாண்டி வெகுதூரம் பின்னடைந்து விடுவோம். கிரிப்ஸ் திட்டமோ இந்தியர்கள் தங்களுடைய அரசியல் அமைப்பைத் தாங்களே அமைத்துக்கொள்ளும் உரிமையை அளித்திருக்கிறது. பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தினர் வெளியிட்ட அறிக்கைகளே இந்த உரிமையை அளித்திருக்கும்போது லாகூர் தீர்மானத்தின் இந்தப் பகுதி இந்தியாவிலுள்ள

முஸ்லிம்களும் இந்துக்களும் இதரரும் இவ்வுரிமையை விட்டுவிட வேண்டு மென்று எதிர்பார்க்கிறது.

(ஆ) கருதப்பட்ட அரசியலமைப்பின் தன்மை யாது—மன்னனைக் கடவுளாகக் கொண்ட ஆட்சியா? ஜனநாயகமா? ஒரு சிலரது ஆட்சியா? சர்வாதிகாரமா? அல்லது வேறுவித ஆட்சியா? இது சம்பந்தமாகத் தீர்மானத் தில் ஒன்றுமே காணோம். ஜனநாயக ஆட்சிமுறை இந்தியாவுக்குப் பொருந்தாது என்று லீக் கருதுகிறது. இக்கருத்தை லீகின் தலைவர் அநேக முறைகளில் தெரிவித்திருக்கின்றார். திரு. ஜின்னாவின் பேச்சுகள் எழுத்துக்களி லிருந்து இதைக் காட்டும் பகுதிகளை இங்கு காண்போம்: 'இந்நாட்டிலுள்ள 35 மில்லியன் வாக்காளர்களில் மிகப் பெரும்பாலோர் யாதொன்றும் அறியாத வர்கள், எழுத்து வாசனை யற்றவர்கள், படிப்பிக்கப் படாதவர்கள், நூற்றாண்டு களாக வழங்கிவரும் மிக மோசமான மூடப் பழக்கங்களில் ஆழ்ந்தவர்கள், கலாசாரத் துறையிலும் சமூகப் பழக்கவழக்கங்களிலும் ஒருவர்க்கொருவர் விரோதமுள்ளவர்கள். இவர்களைக் கருதுமிடத்து ஜனநாயகப் பிரதிநிதித்வ அரசாட்சி முறையை இந்தியாவில் ஏற்படுத்துவதென்பது நடக்காத காரியம் என்று வெளிப்படுகிறது.'[1]

'சென்றகால அனுபவமெல்லாம் இருந்தும் கூட இவ்வித அரசாட்சி முறை இந்தியாவுக்கு முற்றிலும் பொருந்தாது என்பதை பிரிட்டிஷ் பார்லி மெண்ட் அங்கத்தினர்களால் உணரக் கூடவில்லை. இந்திய நிலைமைகளைப்பற்றி அவர்களிடம் கூட இத்தகைய அறியாமை நிலவுகிறது. ஜனநாயக முறைகள் இங்கிலாந்தைப் போன்ற ஒரே தேசீய இனமுள்ள நாட்டிற்கே பொருந்தும். இந்தியாவைப் போன்ற வெவ்வேறு தேசீய இனங்களுள்ள நாடுகளுக்குச் சற்றும் பொருந்தாது. இந்த எளிய உண்மையை அறியாதிருப்பதே இந்திய அரசியல் நோய்களுக்கெல்லாம் காரணமாகும்... மேற்கத்திய ஜனநாயக ஆட்சி இந்தியாவுக்கு முற்றிலும் பொருந்தாது. அதைத் திணிப்பதே அரசாங்கத்தின் நோயாகும்.'[2]

கருதப்பட்ட ராஜ்யம் தங்களுக்கு ஏற்றுக்கொள்ளத் தகுந்ததா என்பதை ஜனங்கள் ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வருவதற்கு அந்த ராஜ்யத்தின் தன்மையை விளக்கி வரையறுத்துக் கூறுவது அவசியமாகிறது. சாதாரணமாக எல்லோரும் அறிந்திருக்கின்ற மேற்கத்திய ஜனநாயக முறை இந்தியாவுக்குப் பொருந்தா தென்றால், முஸ்லிம் லீகுக்கும் ஏற்றுக்கொள்ளத் தக்கதில்லை என்றால், வேறு எந்த மேனாட்டு முறைதான் லீகுக்கு ஏற்றுக்கொள்ளத் தக்கதாக இருக்கும். அல்லது மேனாட்டு ஜனநாயக முறையில் என்ன மாறுதல்களைச் செய்தால் லீகுக்கு உகந்ததாக இருக்கும் என்பதை முஸ்லிம் மண்டலங்களிலும் முஸ்லி மல்லாத மண்டலங்களிலும் உள்ள சிறுபான்மைகள் மாத்திரமல்ல, பெரும் பான்மைகளும் அறிந்து கொள்வதுஅவசியமாகிறது. இந்தியாவிலுள்ள ஜனத் தொகை ஓரினமாக இருக்கவில்லை என்றும், இந்திய மொத்த ஜனத்தொகை யில் முஸ்லிம் ஜனத்தொகை மாத்திரம் ஓரினமாக இருக்கிறதென்றும், ஆகையால் இந்தியாவுக்கு ஜனநாயகம் பொருந்தாது என்றும் பாகிஸ்தான் ஆதர வாளர்கள் கூறுகிறார்கள். இந்தியப் பிரிவினைக்கப்புறமும் இக்காரணம்

---

1. Statement to the *Manchester Guardian* reproduced in *Recent Speeches and Writings of Mr. Jinnah*, p. 86.

2. Article in the *Time and Tide*, Dtd.19th January, 1940, reproduced in *Recent Speeches and Writings of Mr. Jinnah*, pp. 111-113.

மறைந்து விடுமா? இந்திய மொத்த ஜனத்தொகையில் முஸ்லிம்கள் எந்த விகிதத்தில் இருக்கின்றார்களோ அந்த அளவிற்குக் குறையாது முஸ்லிம் மண்டலங்களிலுள்ள இந்துக்களும் இதர முஸ்லிமல்லாதவர்களும் இருப்பார்கள். பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள முஸ்லிம்களின் சதவிகிதம் 26·83 ஆகிறது. பூரா பஞ்சாபையும் சேர்த்துக்கொண்டால் வடமேற்கு மண்டலத்திலுள்ள முஸ்லிமல்லாதவர்கள் 37.93 சதவிகிதமாகவும் முஸ்லிமல்லாதவர்கள் பெரும்பான்மையாக உள்ள ஜில்லாக்களை மண்டலத்திலிருந்து ஒதுக்கி விட்டாலும் கூட முஸ்லிமல்லாதவர்களின் தொகை 24·64 சதவிகிதமாகவே இருக்கும். இதேபோல கிழக்கு மண்டலத்தில் முஸ்லிமல்லாத பெரும்பான்மைப் பிரதேசங்களை விலக்கிவிட்டால் 48·31 சதவிகிதமாகவும் அவைகளை விலக்காவிட்டால் முஸ்லிமல்லாதவர்கள் 30·58 சதவிகிதமாகவும் இருப்பார்கள். பிரதேசங்களை மாற்றி அமைத்து முஸ்லிம் சுயேச்சை அரசாங்கங்கள் ஏற்பட்டு முஸ்லிம்கள் பெரும்பான்மையாகவும் முஸ்லிமல்லாதவர்கள் சிறுபான்மையாகவும் இருந்தால் ஜனநாயகம் பொருந்துகிறதென்றும் அவ்வாறில்லாமல் முஸ்லிம்கள் சிறுபான்மையாக இருந்தால் ஜனநாயகம் இந்தியாவுக்கே பொருந்தாது என்றும் சொல்லுவது குதர்க்கமாகிறது. அத்தகைய வாதத்தில் நியாயமோ ஒழுங்கோ மருந்துக்குக்கூட இல்லை என்பது தெளிவு. லீகின் தலைவர், ஜனநாயகம் இந்தியாவுக்குப் பொருத்தமற்றது என்று சொல்லும்பொழுது, அதே காரணங் கொண்டு அந்த ஜனநாயகம் பாகிஸ்தானுக்கும் பொருந்தாது, ஆகவே வேறு மாதிரி அரசியல் அமைப்பை உத்தேசிக்கிறோம் என்று மற்றவர்கள் கூறினால் அவ்வாறு சொல்வது சரியல்ல என்று கூற முடியாது. சம்பந்தப்பட்ட யாவரும் அதை அலசி ஆராய்ந்து அதிலுள்ள குணங்களையும் குற்றங்களையும் அறிந்து முழு ஆராய்ச்சி செய்தபிறகு ஏற்றுக்கொள்ளும்படியாக அந்தத் திட்டத்தின் முழு விவரங்களையும் ஏன் யாவருக்கும் கொடுக்கக்கூடாது?

(இ) பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தோடும் முஸ்லிமல்லாத மண்டலத்தோடும் இச் சுதந்திர ராஜ்யங்களின் உறவு என்னவாயிருக்கும்? இந்த ராஜ்யங்கள் முஸ்லிமல்லாத மண்டலத்திலிருந்து பிரிந்து சுயேச்சையுடன் இருக்குமென்பது தெரிகிறது. ஆனால் அவைகள் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தினின்று நீங்கி சுதந்திரமுடையனவாக இருக்குமா என்பது தெளிவாயில்லை. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து இந்த முஸ்லிம் மண்டலங்கள் சுயேச்சை பெற்று விடுவதென்பதுண்டானால் அப்பொழுது தங்களுக்கும் இந்தியாவின் மற்றப் பாகத்திற்கும் அரசியல் அமைப்பைத் தயாரித்துக்கொடுக்கும்படி பிரிட்டிஷ் பார்லிமெண்டைக் கேட்பதிலோ அல்லது அதை எதிர்பார்ப்பதிலோ அறிவுமில்லை, அர்த்தமுமில்லை. ஆரம்பத்திலேயே பூரண சுதந்திரத்தை மேற்கொள்ளுவதென்பது உத்தேசிக்கப்படவில்லை என்பதும், தற்காப்பு, வெளிநாட்டு விவகாரங்கள், போக்கு வரத்து, சுங்கம் முதலிய அதிகாரங்களை முடிவாக ஏற்றுக் கொள்வதற்கு முன்பு அவைகள் வேறொரு அதிகார ஸ்தாபனத்தினிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கும் என்பதும் மூன்றாவது பாகத்தில் மூன்றாவது பாராவில் தெளிவாகச் சொல்லப்படுகிறது. இந்தியாவிலுள்ள எந்தக் குழுவினரிடமும் இவ்வதிகாரங்களை ஒப்படைப்பதை லீக் நிராகரித்திருக்கின்றது. ஏனெனில் எந்த விதத்திலேனும் இந்துக்கள் அந்தக் குழுவின் பெரும்பான்மையாக இருந்துவிடுவார்கள். அப்படியானால் இந்த அதிகாரங்கள் இடைக்காலத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் வசமே இருக்கும் என்று ஏற்படுகிறது. ஆரம்பத்தில் இச் சுதந்திர ராஜ்யங்களின் சுதந்திரம் சுருங்கின தன்மையதாகவே இருக்குமென்பதை

மூன்ருவது பாராவிலுள்ள "முடிவாக" என்ற வார்த்தை வெகு தெளிவாக்கு கிறது. சுதந்திர ராஜ்யங்களை ஏற்படுத்துவதிலிருந்து முழு அதிகாரங்களையும் மேற்கொள்வதுவரையுள்ள இடைக்காலத்தைப் பற்றி ஒன்றும் குறிப்பிடப் படவில்லை. இவ்விடைக்காலம் எவ்வளவு நீடிக்கும் என்பது பற்றித் தீர்மானம் செய்தபோது அவர்களால் நிதானிக்க முடியாமல் இருந்திருக்கக்கூடும். ஆகவே இந்த முஸ்லிம் சுதந்திர ராஜ்யங்களின் ஆரம்ப நிலைமை வெஸ்ட் மினிஸ்டர் சட்டத்தின்படி பிரிட்டிஷ் காமன்வெல்த்திலுள்ள டொமினியன் அந்தஸ்திற்கும் குறைவாகவே யிருக்கும். மேலும் இவைகள் பிரிட்டிஷ் ஆதிக்கத்திலிருந்து விடுபடுவதென்பதொன்றுண்டானுல் அது எப்பொழுது என்பதும் தெரியவில்லை. நாம் இவ்வாறு கருதுவது நியாயமற்றதல்ல என்பது லண்டன் நியூஸ் கிரானிகள் பத்திரிகைக்கு ஜின்னு கொடுத்த பேட்டியிலிருந்து தெளிவாகும் :[3]

'கேள்வி : நீங்கள் நினைப்பதுபோல் நிச்சயமாக உள் நாட்டுக் கலகம் ஏற்படும். நீங்கள் ஓர் இந்திய அல்ஸ்டர் மாகாணத்தைச் சிருஷ்டிப்பீர்கள். அதை ஐக்கிய இந்தியா என்ற பெயரால் இந்துக்கள் ஒரு காலத்தில் தாக்கக் கூடும், அல்லவா ?

திரு. ஜின்னு : நான் இதை ஒத்துக்கொள்ளவில்லை. இந்தப் புதிய அரசியல் அமைப்பின் கீழ் காரியங்களை ஒழுங்குபடுத்தி முடிவுக்கு வருவதற்கு ஓர் இடைக்காலம் இருக்கும். அப்பொழுது ராணுவத்தையும் வெளிநாட்டு விவகாரங்களையும் பொறுத்தமட்டில் பிரிட்டிஷ் அதிகாரமே மேலோங்கி நிற்கும். இந்த இடைக்காலத்தின் அளவு, இந்த இரு இனத்தவரும் கிரேட் பிரிட்டனும் ஒத்துப்போவதற்கு அனுசரிக்கும் வேகத்தைப் பொறுத்ததாகும்.

கே : ஹிந்துஸ்தானமும் பாகிஸ்தானமும் அயலார்களாக வாழ்வதற் கேற்றபடி நல்லுறவுகள் உள்ளவைகளாக இல்லை என்பதால் பிரிட்டன் இந்தி யாவைவிட்டு வெளியேற மறுத்துவிட்டால், என்ன நடக்கும் ?

திரு. ஜின்னு : அது நடக்கக்கூடும். ஆனுல் நிச்சயமில்லை. அப்படி யிருந்தாலும் இன்றைக்கு எங்களுக்கில்லாத ஓரளவு தன்னரசாவது அப்பொழுது கிடைக்கும். ஒரு தனித் தேசீய இனம் என்ற முறையிலும் டொமி னியன் என்ற முறையிலும் பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு காரியங்கள் நடத்தி ஒப்பந்தத்திற்கு வரக்கூடிய ஒரு நல்ல நிலைமையில் இருப்போம். தற்போதுள்ள முட்டுக்கட்டை நிலைமையில் அது எங்களுக்குச் சாத்தியமில்லை.'

இடையே இன்னொரு விஷயத்தைக் கவனிக்கலாம். மேலே மேற் கோளாகக் காட்டப்பட்ட கடைசி வாக்கியத்தில் 'டொமினியன்' என்ற வார்த்தை உபயோகப்பட்டிருப்பது தவறு. ஏன் எனில் இடைக்காலத்தில் ராணுவமும் வெளிநாட்டு விவகாரமும் பாகிஸ்தானில் பிரிட்டிஷ் ஆதிக்கத்தி லேயே இருக்கும். ஆனுல் பிரிட்டிஷ் டொமினியனில் அவை பிரிட்டிஷ் அதி காரத்தில் இருக்கவில்லை. டொமினியன் சர்க்காரே இவைகளைக் கொண்டிருக் கும். ஆகவே இந்தச் சந்தர்ப்பத்தில் "சுதந்திரம்" என்ற வார்த்தைகூட இங்கு இப்பொழுது டொமினியன் அந்தஸ்தைக் குறிக்கமுடியாது. குறிப்பிட வும் இல்லை. அப்படியிருக்கும்பொழுது இப்பிரதேசங்களிலுள்ள மக்கள் பிரிட்டிஷ் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டிருப்பது என்பதும் அல்லது அவர்கள் கைக்கு முழு அதிகாரமும் மாற்றப்பட்டிருக்கும் என்பதும் மிகக் குறைவுதான். இந்தியாவின் இதர பாகமோ அல்லது அதில் ஒரு பகுதியோ பிரிட்டிஷ் அதி

3. **Published in *The A. B. Patrika*, 4-3-1944.**

காரத்திலிருந்து பூரண விடுதலை பெற்றாலும் இந்தப் பிரதேசங்களில் முஸ்லிம் கள் அதிகமாக இருந்தாலும் அங்குள்ள பிரிட்டிஷாரோடு போராடவேண்டிய தாகத்தான் இருக்கும். சுதந்திர இந்தியாவில் இந்தப் பிரதேசங்கள் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த தீவுகள் போன்று இருக்கும். ஆகவே இவர்கள் கருதுகின்ற விடுதலை எல்லாம் இந்தியாவின் இதர பாகத்திலிருந்து துண்டுபட்டு நிற்பதே ஒழிய பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து ஆரம்ப காலத்தில் கூட விடுதலை பெற்றதாக விருக்காது.

பிரிவினையினால் உண்டாக்க இருக்கும் புதிய ராஜ்யங்களின் அந்தஸ் தைப்பற்றித் திரு.ஜின்னா பேசிய பேச்சுக்களிலிருந்து இன்னும் ஒரு மேற்கோள் காட்டுகிறேன். லாகூர் தீர்மானத்தை அடுத்து 1940 ஏப்ரல் 1-ல் திரு. ஜின்னா விடுத்த செய்தி அறிக்கையில் இதைக் காண்கிறோம் :

கிரேட் பிரிட்டனோடு முஸ்லிம் தாயகம் கொள்ளக்கூடிய உறவு சம் பந்தமாகத் திரு. ஜின்னா லாகூர் தீர்மானத்தைக் குறிப்பிட்டுச் சொன்னதா வது: 'இந்தியாவின் இதர பாகங்களில் ஏற்படும் மண்டலம் அல்லது மண்ட லங்களோடு எங்களுடைய உறவு சர்வதேசியத் தன்மையுள்ளதாக இருக்கும். இதற்கொரு உதாரணம் இந்தியா பர்மாவோடும் இலங்கையோடும் கொண் டுள்ள தொடர்பாகும்'[4] இதிலிருந்து பாகிஸ்தான் மட்டுமன்றி ஹிந்துஸ்தான மும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் பகுதியாகக் கருதப்படுகிறது என்பது தெளி வாகிறது. இந்தியா, பர்மா, சிலோன் ஆகியவை பிரிட்டிஷ் சர்க்காரோடும் தங்களுக்குள்ளும் எவ்விதத் தொடர்பு கொண்டிருக்கின்றனவோ அதேபோல இவைகளும் இருக்குமென்றே கருதப்படுகிறது.

மேலும் திரு. ஜின்னா தம்முடைய பேட்டியில் ராணுவத்தையும் வெளி நாட்டு விவகாரங்களைப்பற்றியுமே குறிப்பிட்டார். தீர்மானமோ 'போக்கு வரத்து, சுங்கம் இன்னும் அவசியமான இதைப்போன்ற விஷயங்கள் பலவற் றையும்' குறிப்பிடுகின்றது. இந்தியாவின் இதர பாகம் இவைகளில் எந்த விஷயத்தைப்பற்றியும் எந்தவிதமான அதிகாரமும் பெற்றிருக்காது. முஸ்லிம் மண்டலங்களும் இடைக்காலத்தில் இவ்விஷயங்கள்பற்றி அதிகாரத்தை மேற் கொள்ளா. ஆகவே 'போக்குவரத்து, சுங்கம் இன்னும் அவசியமான இதைப்போன்ற காரியங்கள்' பிரிட்டிஷ் அதிகாரத்தின் கீழ்தான் இருக்கமுடியு மென்ற ஒரே முடிவுதான் ஏற்படுகிறது. இக்காரியங்கள் அநேக பொறுப் புக்களை உள்ளடக்கியதாக இருக்கக்கூடும். ஆகவே இந்த முஸ்லிம் மண்டலங் களின் அதிகாரமெல்லாம் தற்போது, 1935-ம் வருஷத்து இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி மாகாண அரசாங்கங்களுக்குக் கிடைத்துள்ள அதிகாரத்திற் கும் குறைந்ததாக இருக்கும்.

இரண்டு சுதந்திர ராஜ்யங்கள் தங்களுக்குள் உடன்படிக்கை செய்து கொள்வதைப்போல சுதந்திர முஸ்லிம் மண்டலங்கள் இந்தியாவின் பிற பாகத் தோடு உடன்படிக்கை செய்துகொள்ளும் என்று சொல்லப்படுகிறது. வெளி நாட்டு விவகாரங்கள் சம்பந்தமாக பிரிட்டிஷ் அதிகாரமே முஸ்லிம் மண்டலங் களில் மேலோங்கி இருக்கும் என்றால் இம்மண்டலங்களின் அரசாங்கம் எப்படி இந்தியாவின் இதர பாகத்தோடு உடன்படிக்கை செய்துகொள்ளும். ஆகவே ஒப்பந்தம் ஏதாவது ஏற்படுமென்றால் அது இந்தியாவின் இதர பாகத் தோடும் பிரிட்டிஷ் அதிகாரத்தோடும் செய்துகொண்ட ஒப்பந்தமாகவே இருக்கும். அல்லது இந்தியாவின் இதர பாகத்தோடு பிரிட்டிஷ் சர்க்காரின்

---

4. Mr. M. R. T.: *India's Problem of her Future constitution*, p. 31.

அதிகாரத்தின்கீழ் அதன் உத்தரவுப்படி முஸ்லிம் மண்டலங்கள் செய்து கொண்ட ஒப்பந்தமாகவே யிருக்கும். இப்போது இந்திய சர்க்கார் ஆப்கனிஸ் தானம்போன்ற சுதந்திர நாட்டோடு செய்துகொள்ளும் ஒப்பந்தம்போன்றே அது இருக்கும்.

(ஈ) சிறுபான்மைக்கு அளிக்கப்பட்ட சட்டபூர்வமான பாதுகாப்புகள் கவனிக்கப்படாதபொழுது எவ்வாறு, யாரால், எந்த அதிகாரத்தைக்கொண்டு இந்தப் பாதுகாப்புகள் வற்புறுத்தப்படும்? முஸ்லிம் லீகின் தீர்மானம் இதுபற்றி முழுமௌனம் சாதிக்கின்றது. முஸ்லிம் ராஜ்யங்களும் முஸ்லிமல் லாத ராஜ்யங்களும் எவ்விதமான மத்திய அரசாங்கத்திற்கும் கட்டுப்படாமல் சுயேச்சையாக இருக்குமாதலால் இந்தப் பாதுகாப்பு உரிமைகளை வற்புறுத்தும் நியாய ஸ்தாபனமோ நிர்வாக ஸ்தாபனமோ இருப்பதாகத் தெரியவில்லை. சிறு பான்மை உரிமைகளைப் பாதிக்கக்கூடிய எந்தச் செயலையும் ஒரு நாடு இன்னொரு நாட்டுக்கு விரோதமாகச் செய்த செயலாகவே கருதப்படும். நேசப்பான்மையில் இத் தகராறைத் தீர்த்துக்கொள்ளாதவரையில் ராஜதந்திர முறைகளால் அல்லது சர்வதேசீய மத்தியஸ்தத்தின் மூலமாக இவைகளைத் தீர்த்துக்கொள்ள வேண்டி ஏற்படும். ஒரு ராஜ்யத்திலுள்ள சிறுபான்மைகள் மற்றச் சுதந்திர ராஜ்யங்களிலுள்ள தங்களது இனத்தாரின் உதவியை இத்தகைய தகராறு சந்தர்ப்பங்களில் உதவிக்கழைக்க முடியுமா? அவ்வாறு அழைப்பது சுலப மாகவும் இருக்குமா? இந்தியாவிலிருந்து புதிதாகச் சிருஷ்டிக்கப்பட்ட இந்த முஸ்லிம் ராஜ்யங்கள்தான் உலகத்திலேயே உள்ள முஸ்லிம் ராஜ்யங்கள் என்று நினைப்பதற்கு இல்லை. இந்தியாவிற்கு வெகு சமீபத்திலேயே பிற முஸ்லிம் ராஜ்யங்கள் இருக்கின்றன. முஸ்லிமல்லாதவர்களுடைய கொடுங் கோன்மைக்கும், அடக்குமுறைக்கும் எதிராக இந்தியாவிலுள்ள முஸ்லிம் சிறுபான்மை இந்த வெளிநாட்டு முஸ்லிம் ராஜ்யங்களினுடைய உதவியைக் கோரமுடிந்ததா? காங்கிரஸ் மந்திரிசபைகள் முஸ்லிம் சிறுபான்மையினரை அடக்கிக் கொடுமைபடுத்தின என்ற கதை உண்மையானுல், புதிய முஸ்லிம் ராஜ்யங்களை உண்டாக்குவதற்கு அதுவே போதிய காரணமாக இருக்குமானுல், ராஜதந்திர முறைகளால் அம்மந்திரிசபைகளுக்கு எதிர்ப்புக் கூறவும் இதே காரணங்கள் போதுமானதாக இருக்கக்கூடும். முஸ்லிம்கள் அவர்கள் எங்கு வாழ்ந்தாலும் சரி, அவர்களைப்பற்றிய இதர விவரங்கள் எப்படி இருந்தாலும் சரி, மதம் என்ற ஒரே காரணத்தினுல் அவர்கள் ஒரே தேசீய இனத்தைச் சேர்ந்தவர்களாகிருர்கள் என்று வைத்துக்கொண்டால் பக்கத்திலுள்ள முஸ்லிம் ராஜ்யங்கள் ராஜதந்திர முறைகளில் காங்கிரஸ் மந்திரிசபைகளின் போக்கிற்குத் தங்களுடைய எதிர்ப்பைக் காட்டியிருக்கக்கூடும். அம்மாதிரி யான உதவியை நாடித் தூண்டுவதற்கு இந்தியாவின் முஸ்லிம் சிறுபான்மை இதுவரை முயன்றிருக்கின்றதா? இந்துஸ்தானும் பாகிஸ்தானும் பொதுத் தொடர்பு ஒன்றும் பெற்றிரா. ஆகையால் பாகிஸ்தானில் முஸ்லிம் அல்லாத சிறுபான்மை கொடுமைப்படுத்தப்பட்டால் இந்துஸ்தான் அதுவிஷயமாகத் தலையிடுவது முடியாத காரியம் என்றில்லாவிட்டாலும் கஷ்டமானதாக இருக்கும். அதேபோல இந்துஸ்தானத்திலுள்ள முஸ்லிம் சிறுபான்மை கஷ்டப் படுத்தப்பட்டால் அதில் தலையிடுவது பாகிஸ்தானுக்குக் கஷ்டமாகவேயிருக்கும். ஐரோப்பாவிலுள்ள சிறுபான்மையினரின் அனுபவத்தைப்பற்றி இங்கு குறிப் பிடுவது நல்லது. சிறுபான்மை ஒப்பந்தங்களினுல் சர்வதேச சங்கத்தால் உத்தரவாதமளிக்கப்பட்டு இவர்களுடைய உரிமைகள் பாதுகாக்கப்பட்டன.

'பொதுவாகப் பேசுமிடத்து சிறுபான்மையரின் விதிவசம் மிகக் கொடுமையான கஷ்டங்களுள்ளதாகவே இருந்தது. இதற்குக் கண்யமான விலக்குகள் புதிய ராஜ்யங்களிலும் பழைய ராஜ்யங்களிலு மிருந்தன. கிட்டத்தட்ட ஒவ்வொரு அரசாங்கமும் சிறுபான்மை ஒப்பந்தங்களை மீறியே இருந்திருக்கின்றது. ஒவ்வொரு சிறுபான்மையும் கஷ்டத்திற்குள்ளாகியே இருந்திருக்கின்றது. அந்த ராஜ்யங்களும் தண்டனை கிடைக்குமென்ற பயம் இன்றியே சிறுபான்மைகளுக்குத் தீங்கு இழைத்திருக்கின்றன. அவர்களுக்கு சர்வதேச சங்கமளித்த வாக்குறுதி ஆற்றோடு போகிறவனுக்குக் கிடைத்த துரும்புபோலத்தான் இருந்தது என்பதை மறுக்கமுடியாது. சர்வதேச சங்கத்தின் உதவியை நாடிப் பலன்பெற்ற சம்பவங்கள் மிக மிகக் குறைவே. அவைகளிலும் இதர யோசனைகள் வந்து குறுக்கிட்டனவே ஒழியச் சிறுபான்மைகளுக்கு ஒழுங்கான நீதி கிடைக்கவேயில்லை.'[5]

பாகிஸ்தானும் ஹிந்துஸ்தானும் ஆகிய சுதந்திர ராஜ்யங்களிலுள்ள சிறுபான்மையரை ஒழுங்காக நடத்துவதுபற்றி இவ்வாறு சொல்லப்படுகிறது. 'இந்து இந்தியாவிலும் முஸ்லிம் ராஜ்யங்களிலும் சிறுபான்மைகள் இருப்பதால் இவர்களைப்பற்றி ஒரேமாதிரியான நடவடிக்கைகளை மேற்கொள்ளுவது சாத்தியமாகிறது இவ்விதமாகச் சிறுபான்மையினரிடையே நம்பிக்கை உண்டாக்கலாம். அவர்களும் நாளடைவில் தங்களுடைய நிலைமையில் அமைதிபெற்று விடுவார்கள்.'[6] 'இந்தியப் பிரிவினை அந்தந்த மண்டலங்களிலுள்ள பெரும்பான்மைமீது பெரிய பொறுப்பைச் சுமத்துகிறது. சிறுபான்மையினரிடையே நமக்கு ஆபத்தில்லை என்ற உணர்ச்சி ஏற்படுத்தி அவர்களுடைய முழு நம்பிக்கையைப் பெறவேண்டும்.'[7] இப்பொழுது சிறுபான்மைமீது பெரும்பான்மைக்கு இருக்கவேண்டிய பொறுப்புணர்ச்சியை உண்டாக்குவதற்கு வேண்டியும் அவர்களுடைய முழு நம்பிக்கையைப் பெறுவதற்காகவும் பிரிவினை என்பது தேவையில்லை. உண்மையில் ஐக்கியமே இத்தகைய பொறுப்புணர்ச்சி வளர்வதற்கு ஏற்ற சூழ்நிலையை அளிக்கிறது. பிரிவினை இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, எந்த நிலைமையிலும் இப்பொறுப்புணர்ச்சியை வளர்க்கக் கூடும், வளர்க்கவும் வேண்டும். இந்த மேற்கோள்களில் உண்மையாக எதிர்பார்க்கப்படுவது பொறுப்புணர்ச்சி வளரவேண்டும் என்பதல்ல. ஆனல் ஒரு மண்டலத்திலுள்ள பெரும்பான்மை மக்கள் தங்களுடைய நடவடிக்கைகளால் இதர மண்டலப் பெரும்பான்மையோர் எங்ஙனம் பாதிக்கப்பட்டுப் பதிலுக்கு என்ன செய்துவிடுவார்களோ என்ற பயமே தோன்றுகிறது. இரண்டு காரணங்களில் ஒன்றினுல் இது ஏற்படக்கூடும். ஒவ்வொரு சுதந்திர ராஜ்யமும், தான் ஒழுங்கு மீறினுல் அடுத்த ராஜ்யம் வந்து தலையிடுமே என்று பயப்பட்டு ஒழுங்காக நடந்துகொள்ளலாம். மேலே கூறிய பிரகாரம் இவ்வாறு நடப்பது சாத்தியமென்ருலும் அநேகமாக நடைபெருது. இன்னொரு விதமாகவும் இது நடைபெறலாம். அடுத்த ராஜ்யத்திலுள்ள சிறுபான்மையினரைத் துன்புறுத்துவார்களே என்று பயந்துகொண்டாவது தன் ராஜ்யத்திலுள்ள சிறுபான்மையைத் துன்புறுத்தாமல் இருக்கக்கூடும். வேறு வார்த்தைகளில் சொல்லப் போனல் ஒரு ராஜ்யத்திலுள்ள சிறுபான்மைகள் அடுத்த ராஜ்யத்தின் நன்னடத்தைக்காக வைக்கப்பட்ட பணயம்போல இருப்பார்கள். ஆனல்

---

5. C. B. Macartney: *National States and National minorities* (1934), p. 390.

6. Mr. M. R. T.: p. cit., p. 41. 7. *ibid.*, quoting Mr. Jinnah at p. 30.

நடைமுறையில் இவ்விதம் இருக்குமா என்பது சந்தேகம்தான். ஏதோ ஒரு சுதந்திர அரசாங்கம் ஒழுங்குமீறி நடந்தது என்பதற்காக அத்தோடு சிறிதும் தொடர்பில்லாததும் எல்லா வகையிலும் ஒழுங்காக நடந்துகொள்ளுவதும் குற்றமற்றதுமான ஒரு சிறுபான்மையை, பாகிஸ்தானோ இந்துஸ்தானோ பழிக்குப்பழி வாங்கும் என்று நினைப்பதுகூட நமக்குள்ள இயற்கையான நியாய உணர்ச்சிக்கு வெறுப்பூட்டுகிறது; நினைக்கக் கூடாததாகவும் இருக்கிறது. காங்கிரஸ் கொடுமை புரிந்தது என்னும் கதை உண்மையாக இருந்திருக்குமானால் முஸ்லிம் மாகாணங்களிலுள்ள முஸ்லிம்கள் பதில் நடவடிக்கை எடுத்திருப்பார்கள். இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி எல்லா மந்திரிசபைகளும் சமமான அதிகாரத்தையே பெற்றிருந்தன. அச்சட்டத்தின்படி காங்கிரஸ் மந்திரிசபைகள் முஸ்லிம்களைத் துன்புறுத்தக் கூடுமானால் முஸ்லிம் மந்திரி சபைகளும் அதே அதிகாரத்தை மேற்கொண்டு தங்கள் வசமுள்ள இந்துச் சிறுபான்மையினரைத் துன்புறுத்தக்கூடும். எது எப்படியிருந்தாலும் அவை மத்திய சர்க்காரை வற்புறுத்தி கவர்னர்கள் மூலமாக அங்குள்ள முஸ்லிம் சிறுபான்மையரைக் காப்பாற்றி யிருக்கக்கூடும். ஆனால் முஸ்லிம் மந்திரி சபைகள் பதில் நடவடிக்கை எடுத்ததாகவோ அல்லது கவர்னர்கள் தமது விசேஷ அதிகாரங்களை உபயோகிக்கும்படி தூண்டியதாகவோ ஒரு தகவல்கூடத் தெரியவில்லை. இதனால் முஸ்லிம் மந்திரிசபைமீது முஸ்லிம் அல்லாத சிறுபான்மைகள் ஒன்றும் குறை கூறுவதற்கில்லை என்று நினைத்துவிடக் கூடாது. அம் மந்திரிசபைகள்மீது அவர்களும் கடுமையான குற்றச்சாட்டுகளைக் கூற இருந்தார்கள். அவைகளைச் சட்டசபைகளிலும் பத்திரிகைகளிலும் வெளியிட்டார்கள். ஆனால் இதர மாகாணங்களிலுள்ள முஸ்லிம் சிறுபான்மையைக் காப்பாற்றும் பொருட்டு எடுத்துக்கொண்ட பதில் நடவடிக்கைகளைப் போல இருந்தன என்று ஒருவரும் புகார் கூறவில்லை. முஸ்லிம்களைக் கொடுமைப் படுத்தியதாகக் கூறிய புகார்களெல்லாம் உண்மையில் நியாயமற்றவை அல்லது முஸ்லிம் மந்திரிசபைகள் நடவடிக்கை எடுக்கும்படியாக அவ்வளவு கடுமையானவை அல்ல என்பதையே இது காட்டுகிறது. இருந்தாலும் இப்பொழுது மாத்திரம் இந்தியாவைப் பிரிக்கவேண்டும் என்பதற்கான பெருங் காரணங்களுள் இதுவும் ஒன்ருகக் கொண்டுவரப்படுகிறது. இந்தக் 'கொடுமையும் அடக்குமுறையும்' நடந்த காலத்திலெல்லாம் முஸ்லிம் மந்திரிசபைகள் அதிகாரத்திலிருந்தபோது இருந்ததைக் காட்டிலும் சுதந்திர ராஜ்யங்கள் ஆங்கு ஏற்பட்டுவிட்டால் நிலைமை எந்தவகையில் சிறப்பாகிவிடும்? இவ்வாறு இந்தியாவின் இதர பாகத்திலிருந்து முற்றிலும் துண்டிக்கப்பட்டு விடுவதால் அவர்களது நிலைமை ஒன்றும் உதவியளிக்கக் கூடியதாக இருக்காது. சாதகம் செய்ய முடியாமல் சங்கடப்படவே நேரிடும். பிரிவினைக் கோரிக்கைக்கு அடிப்படையாக இருக்கின்றது ஒரே ஒரு காரணம்தான். இந்தியா முழுவதிலுமுள்ள இந்துப் பெரும்பான்மை முஸ்லிம் சிறுபான்மையை அடக்கி ஒடுக்கிவிடும் என்ற பயமே அந்தக் காரணம். இந்திய ஜனத்தொகையில் இவ்வளவு அதிகமாக முஸ்லிம்கள் இருக்கும்போதே சிறிதும் அச்சமற்று இந்துப் பெரும்பான்மை அவர்களைத் துன்புறுத்தக் கூடுமானல், முஸ்லிம்கள் இன்னும் மிகக் குறைந்த சிறுபான்மையாகி அநீதியான பெரும்பான்மையிட மிருந்து நீதியைப் பெறுவதற்குரிய பலத்தையும் அதிகமாக இழந்துவிட்டால் அப்பொழுதுமட்டும் இந்துக்கள் ஒழுங்காக நடப்பார்கள் என்று எவ்வாறு கூற இயலும்? அப்பொழுது சுதந்திர முஸ்லிம் ராஜ்யங்கள் தலையிடுவதென்பது நடக்காத

காரியம். அல்லது பெரும்பாலும் கஷ்டமான காரியம். பெரும்பான்மைகள் சிறுபான்மைகளுக்கு அளித்திருக்கும் பாதுகாப்புகளை மதிக்கின்ற மனப் போக்கில் இருக்கவேண்டும், அல்லது சிறுபான்மை அவைகளை வற்புறுத்தக் கூடிய நிலைமையி லிருக்கவேண்டும். அந்த அளவிற்குத்தான் இப் பாதுகாப்பு உரிமைகள் பலனளிக்கக்கூடும். மேலே அவர்களால் சொல்லப்பட்ட காரணங் களாலேயே இந்துப் பெரும்பான்மை ஒழுங்காகவும் நியாயமாகவும் நடந்து கொள்ளும் என்று நம்புவதற்கில்லை. தனக்கு ஒழுங்கான நியாயம் கிடைக்க வேண்டுமென்று முஸ்லிம் சிறுபான்மை வற்புறுத்துவதற்கு இன்று பெற் றிருக்கும் சக்தியைக் காட்டிலும் அப்போது குறைவாகவே பெற்றிருக்கும். பாதுகாப்புக்கள் அந்தந்த அரசியலமைப்பில் சட்டபூர்வமானவையாக இருப் பினும் அந்த ராஜ்யங்கள் உண்மையான சுயேச்சை பெற்றிருக்குமானால் இப் பாதுகாப்புக்களை அவைகள் திருத்திவிடக்கூடும். பாதுகாப்புக்கள் திருத்தப் ப்டாமல் அரசியலமைப்பில் இருந்தாலும் வெறும் ஏட்டுச் சுரைக்காயாகவே இருக்கும்; சிறுபான்மைக்கு யாதொரு பாதுகாப்பும் அளிக்கா. சர்வதேச சங்கம் சிறுபான்மைகளுக்குப் பாதுகாப்பு அளிப்பதாகக் கொடுத்த வாக்குறுதி களின் அனுபவம் இதை ஏற்கெனவே தெளிவாக்கிவிட்டது.

## 27. தீர்மானத்தை அலசிப் பார்த்தல் (தொடர்ச்சி)
## முஸ்லிம் ராஜாங்கத்தின் எல்லை கட்டுதல்

(உ) [1]முஸ்லிம் ராஜ்யம் அல்லது ராஜ்யங்களில் எங்கெந்தப் பிரதேசங்கள் சேர்க்கப்பட இருக்கின்றன? சேர்க்கப்படப் போகின்றன?

பின்வரும் அட்டவணையில் 1941-ம் வருடத்திய ஜனத்தொகை விவரத்தில் பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களின் சமூகவாரி ஜனத்தொகை விவரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. பிரிவினைக்கு நியாயமுண்டா என்று புரிந்துகொள்வதற்கு அதைக் கவனிப்பது உதவியாயிருக்கும்.

### அட்டவணை VIII

மாகாணங்களில் சத விகிதக் கணக்குடன் இனவாரி ஜனத்தொகை

ஜனத்தொகை : லட்சக்கணக்கில் சத விகிதம் : பிறைக்கோட்டில்

| மாகாணம் | மொத்த ஜனத் தொகை | ஜாதி இந்துக்கள் | தாழ்த்தப்பட்ட வகுப்பினர் | மொத்த இந்துக்கள் | முஸ்லிம்கள் | கிறிஸ்தவர்கள் | சீக்கியர் | மலை ஜாதியினர் | இதரர் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சென்னை | 493.42 | 347.31 | 80.68 | 427.99 | 38.97 | 20.46 | 0.04 | 5.62 | 0.36 |
| | | (70.4) | (16.3) | (86.7) | (7.9) | (4 1) | (0.0) | (1.1) | |
| பம்பாய் | 208.50 | 147.00 | 18.55 | 165.55 | 19 20 | 3.75 | 0.08 | 16.14 | 3.76 |
| | | (70.5) | (8.9) | (79.4) | (9.2) | (1.8) | (0.04) | (7.7) | |
| வங்காளம் | 603.07 | 176.80 | 73.79 | 250.59 | 330.05 | 1.66 | 0.16 | 18.89 | 1.70 |
| | | (29.3) | (12.2) | (41.5) | (54.7) | (0.28) | (0.03) | (3.1) | |
| ஐ. மா. | 550.21 | 340.95 | 117.17 | 458.12 | 84.16 | 1.60 | 2.32 | 2.89 | 1.11 |
| | | (62.0) | (21.1) | (83.2) | (15.3) | (0.29) | (0.42) | (0.53) | |
| பஞ்சாப் | 284.19 | 63.02 | 12.49 | 75.51 | 162.17 | 5.05 | 37.57 | – | 3.89 |
| | | (22.1) | (4.4) | (26.5) | (57.0) | (1.7) | (13.2) | – | |
| பீஹார் | 363.40 | 221.74 | 43.40 | 265.14 | 47.16 | 0.33 | 0.13 | 50.56 | 0.06 |
| | | (61.0) | (11.9) | (72.9) | (12.9) | (0.10) | (0.04) | (13.9) | |
| ம. மா. & பீரார் | 168.14 | 98.81 | 30.51 | 129.32 | 7.84 | 0.58 | 0.15 | 29.37 | 0.87 |
| | | (58.8) | (18.1) | (76.9) | (4.6) | (0.35) | (0.09) | (17.4) | |
| அஸ்ஸாம் | 102.05 | 35.37 | 6.76 | 42.13 | 34.42 | 0.41 | 0.03 | 24.85 | 0.20 |
| | | (34.6) | (6.6) | (41.2) | (33.7) | (0.40) | (0.03) | (24.3) | |
| வ. மே. எ. | 30.38 | 1.80 | – | 1.80 | 27.89 | 0.11 | 0.58 | – | 0.001 |
| | | (5.9) | – | (5.9) | (91.7) | (0.36) | (1.9) | – | |
| ஒரிஸ்ஸா | 87.29 | 55.95 | 12.39 | 68.34 | 1.46 | 0.28 | 0.002 | 17.21 | 0.006 |
| | | (64.1) | (14.1) | (78.2) | (1.6) | (0.32) | (0.0) | (19.7) | |
| சிந்து | 45.35 | 10.38 | 1.92 | 12.30 | 32.08 | 0.20 | 0.31 | 0.37 | 0.09 |
| | | (22.9) | (4.2) | (27.1) | (70.7) | (0.45) | (0.68) | (0.81) | |
| ஆஜ்மீர் & மேர்வாரா | 5.83 | 3.76 | – | 3.76 | 0.90 | 0.06 | 0.009 | 0.91 | 0.19 |
| | | (64.5) | – | (64.5) | (15.4) | (0.99) | (0.15) | (15.6) | |
| அந்தமான் & நிக்கோபார் | 0.34 | 0.08 | – | 0.08 | 0.08 | 0.03 | 0.007 | 0.11 | 0.03 |
| | | (24.9) | – | (24.9) | (23.7) | (7.7) | (2.2) | (32.8) | |
| பலுசிஸ்தானம் | 5.02 | 0.40 | 0.05 | 0.45 | 4.39 | 0.06 | 0.12 | – | 0.001 |
| | | (7.9) | (0.9) | (8.8) | (87.5) | (1.2) | (2.3) | – | |
| குடகு | 1.69 | 1.05 | 0.26 | 1.31 | 0.15 | 0.03 | – | 0.20 | – |
| | | (62.1) | (15.3) | (77.4) | (8.7) | (2.0) | – | (11.6) | |
| டில்லி | 9.18 | 4.45 | 1.23 | 5.68 | 3.05 | 0.17 | 0.16 | – | 0.12 |
| | | (48.4) | (13.4) | (61.7) | (33.2) | (1.9) | (1.7) | – | |
| பாந்த்பிப்லோடா | 0.052 | 0.037 | 0.009 | 0.05 | 0.003 | 0 002 | – | 0.00012 | 0.001 |
| | | (71.2) | (17.3) | (89.7) | (4.7) | (4.1) | – | (0.22) | |
| மொத்தம் | 2958.00 | 1508.90 | 399.20 | 1908.10 | 793.98 | 34.82 | 41.65 | 167.13 | 12.38 |
| | | (51.0) | (13.5) | (64.5) | (26.8) | (1.19) | (1.41) | (5.65) | (0.42) |

1. 233-ம் பக்கம் பார்க்க.

லாகூர் தீர்மானம் ராஜ்யப் பிரதேசங்களைத் திட்டமாக வரையறுத்துக் கூறவில்லை. அல்லது லீகின் அதிகாரம் பெற்ற யாரும் இதுவரை அவ்வாறு செய்யவில்லை. ஆனால் ஆதாரக் கொள்கையை மாத்திரம் தீர்மானம் வகுத்திருக்கிறது. அதாவது இந்தியாவின் வடமேற்கு, கிழக்கு மண்டலங்களில் உள்ளதுபோல முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ள பிரதேசங்களை அடுத்துள்ளவையாக இருந்தால் அவசியத்திற்கேற்றபடி எல்லை வகுத்துத் தொகுதி தொகுதியாகப் பிரித்து சுதந்திர ராஜ்யங்களாக்க வேண்டும். அதனுடைய பகுதிகளும் சுயேச்சையுடையனவாக இருக்கவேண்டும். ஏதேனும் குறிப்பிட்ட பாகம் அதில் சேர்க்கப்படத் தகுந்ததா என்பதற்குரிய சோதனைகளாவன: (1) முஸ்லிம் ராஜாங்கத்தில் சேர்க்கப்படவிருக்கும் ஒரு பாகத்தோடு அடுத்த பாகம் ஒட்டி இருக்கிறதா? (2) அந்தப் பகுதியில் முஸ்லிம்கள் எண்ணிக்கையில் அதிகமாக இருக்கின்றார்களா? (3) முதல் இரண்டு சோதனைகளுக்கும் பொருந்தி வருவதற்காக அப்பிரதேசத்தை மாற்றி அமைப்பது இயலுமா? மேலும் அம்மண்டலத்திலுள்ள ஒவ்வொரு பகுதியும் சுயேச்சையும் பூரண பொறுப்பும் பெற்றதாக இருக்கவேண்டும்.

லாகூர் தீர்மானம் சுதேச ராஜ்யங்களைப்பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை என்று லீகின் தலைவரே அதிகாரபூர்வமாக அறிவித்துவிட்டார். அவைகளைப்பற்றி அவர் கூறியதாவது: 'நாம் கவனிக்கக்கூடிய முக்கியமான சுதேச ராஜ்யங்கள் கிழக்கு மண்டலத்தில் இல்லை. வடமேற்கு மண்டலத்திலேயே இருக்கின்றன. அவைகள் காஷ்மீர், பாஹல்பூர், பாட்டியாலா முதலியனவாம். முஸ்லிம் தாய்நாட்டைச் சேர்ந்த சமஷ்டியில் இந்த ராஜ்யங்கள் விரும்பிச் சேர்வதற்கு ஒருப்பட்டால் அவைகளோடு நியாயமான, கண்யமான ஒப்பந்தத்திற்கு வருவது எங்களுக்கு எப்பொழுதும் மகிழ்ச்சியளிக்கும். இருப்பினும் எங்களுக்கு அவைகளை எவ்வகையிலும் வற்புறுத்தும் விருப்பம் கிடையாது.'[2] மேலும், காந்திஜி 1944 செப்டம்பரில் பேச்சு வார்த்தைகளின் போது பாகிஸ்தானில் காஷ்மீர் சேர்க்கப்படுமா என்று கேட்டபொழுது இப்பொழுது பாகிஸ்தான் என்பது சிந்து, பலுசிஸ்தானம், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பஞ்சாப் ஆகிய நான்கு மாகாணங்களையே குறிக்குமென்று சொல்லிவிட்டார். ஆகவே முஸ்லிம் மண்டலங்களை எல்லை கட்டும்பொழுது சுதேச ராஜ்யங்களை விலக்கிவிட்டுப் பார்க்கவேண்டும்.

முஸ்லிம் மண்டலத்தில் சேர்க்கப்பட வேண்டிய நிலப்பரப்பைப் பற்றிய சொற்றொடர்கள் தெளிவற்றனவாக இருக்கின்றன. பாகிஸ்தானில் சேர்க்க வேண்டிய நிலப்பரப்பைக் குறிக்கும் சொற்கள் யாவும் இப்போதைய பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அரசியல் நிர்வாகத் தஸ்தாவேஜுகளில் காணப்படாதனவாம். 'பகுதி', 'பிரதேசங்கள்', 'விஸ்தீரணங்கள்' 'மண்டலங்கள்' என்னும் சொற்கள் கையாளப்பட்டிருக்கின்றன. இவ்வார்த்தைகளில் ஒன்றேனும் லீகால் விளக்கப்படவில்லை. இவைகளில் எவையேனும் பழக்கத்திலுள்ள அரசியல் நிர்வாக நூல்களிலும் உபயோகப்படுத்தப்படவில்லை. இப்போது பழக்கத்திலுள்ள சொற்கள் 'மாகாணம்', 'ஜில்லா', 'தாசில்', 'தாலுகா', 'தானா' முதலியன. இந்தத் தீர்மானத்தின் கர்த்தாக்களுக்குத் தீர்மானம் என்ன என்று தெரிந்திருக்குமானால் பிறருக்கும்—முஸ்லிம்களுக்கும், முஸ்லிமல்லாதவருக்கும், பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும்—இதைத் தெளிவாக்க வேண்டுமென்று கருதி

2. Statement to Press, Dtd. 1st April 1940, printed in *India's Problem of her Future constitution*, p. 30.

யிருந்தால், இந்தப் பழக்கத்திலுள்ள சொற்களைச் சுலபமாகக் கையாண்டிருக்க லாம். சந்தேகத்துக்கு இடமான வார்த்தைகளை உபயோகித்திருப்பது; பிரேரணைகளின் திட்ட விவரங்களை வெளியிடுவதற்கு இணங்காதிருப்பது, அதன் உட்கருத்துக்களை விளக்க மறுப்பது ஆகியவைகளைப்பற்றிச் சுருங்கக் கூறுமிடத்து இவை எல்லாம் துரதிர்ஷ்டமானவை என்றுதான் கூறவேண்டும். அத்திட்டத்தை முழுதும் ஆராய்வதற்கு இவை இடையூறுக இருக்கின்றன. அநேக அதிகாரபூர்வமற்ற அர்த்தங்களும் கிளம்புவதற்கு இடமளித்து விட்டன; அதுமட்டுமல்ல, அநேக மனிதர்களின் மனத்தில் சந்தேகத்தைப் பிறப்பித்து விட்டன; அவர்கள் பலபல கேள்விகளையும் கேட்க ஆரம்பித்து விட்டார்கள். அவற்றிற் சில: இத்தகைய சந்தேகத்திற்கு இடமான மொழி ஏன் உபயோகப்படுத்தப் பட்டிருக்கிறது? நிலப்பரப்பு சுருக்கமாக இருந்தாலும் முஸ்லிம்கள் சேர்ந்தாற்போலும் பெரும்பான்மையாகவும் இருக்கின்ற பாகிஸ் தான் ராஜ்யங்கள் அமைக்கவேண்டும் என்ற கட்சிக்கும் முஸ்லிம் பெரும் பான்மை குறைந்த அளவில் இருந்தாலும் நிலப்பரப்பு அதிகமாகவுள்ள பாகிஸ்தான் ராஜ்யங்கள் வேண்டுமென்ற கட்சிக்குமிடையே உள்ள அபிப்பிராய பேதத்தைத் தீர்த்துவைக்காமல் அப்படியே விட்டுவிடுவதற்காக இத்தகைய மொழி கையாளப்பட்டதா? பொதுஜனப் பார்வைக்கும் பொதுஜன ஆராய்ச் சிக்கும் அத்திட்டத்தை வெளிப்படுத்துவது உசிதமல்ல என்று கருதினர்களா? முஸ்லிம் ராஜ்யங்களிலிருந்து எவைகளைச் சேர்ப்பது எவைகளை விலக்குவது என்பதைத் திட்டமாகச் சொல்லுவதற்கு இணங்காதிருப்பதன் மர்மம் என்ன? உரிய காலத்தில் எது நல்லது, மிக உசிதமானது என்று கருதப்படுகிறதோ அத்தகைய அர்த்தத்தை அவ்வப்பொழுது கொள்ளலாம் என்பதற்காக இந்த விஷயம் பூராவும் தெளிவற்ற சந்தேக நிலைமையில் இப்பொழுது விட்டுவிடப் பட்டிருக்கிறதா? முஸ்லிமல்லாதவர்கள் பிரிவினைக் கொள்கையை முதலில் ஒப்புக்கொள்ளட்டும்; அதற்கப்புறம் லீக் கோருகின்ற எந்தப் பிரதேசத் தையும் கொடுக்கும்படி கேட்போம்; எல்லைகளை அமைக்கும்போது அவர்கள் ஏதாவது மறுக்க ஆரம்பித்தால் உடனே வாக்கு மீறினர்கள் என்று குற்றம் சாட்டலாம் என்ற கருத்தோடு இவ்வாறு தீர்மானம் செய்யப்பட்டதா?

பழக்கத்திலுள்ள சொற்களை வேண்டுமென்றே நீக்கிவிட்டு இத்தகைய விளங்காத சொற்களை உபயோகப்படுத்தியதன் நோக்கமும் உட்கருத்தும் எப்படியிருந்தாலும் சரி, அந்த முயற்சிக்கு வெற்றிகிட்டாமல் போய்விட்டது. அந்த வாசகத்திற்குச் சரியான அமைப்புக் கொடுத்துப் பார்த்தால் அந்தத் தீர்மானம் முழுமைக்கும் ஒரே அர்த்தம்தான் ஏற்படக்கூடும். முஸ்லிம்கள் எண்ணிக்கையில் அதிகமாயில்லாத எந்தப் பிரதேசத்தையும் முஸ்லிம் ராஜ்யத்தில் சேர்க்கக்கூடாது என்பதில் சிறிதும் சந்தேகமேயில்லை. மேலும் இத்தகைய பிரதேசம் முஸ்லிம் பெரும்பான்மையாக உள்ள பிரதேசத்தை அடுத்து ஒட்டி யிருக்கவேண்டும்.

இந்தச் சோதனைகளையும் விதிகளையும் பிரயோகித்து வடமேற்கு கிழக்கு மண்டலங்களில் ஏற்படுத்தவேண்டிய சுதந்திர ராஜ்யங்களில் எந்தெந்த இடங்களைச் சேர்க்கலாம் என்பதைக் கவனிக்கலாம். ஒவ்வொரு மாகாணத் தையும் அதனுடைய ஜில்லாக்களையும் பற்றிக் கவனிப்போம்:

## 1. வடமேற்கு மண்டலம்

1941-ம் வருடத்திய இந்திய ஜனக் கணக்குப் புள்ளி விவரங்கள் கீழே தரப்பட்டிருக்கின்றன. (பிறைக் கோடுகளில் சத விகிதம்)

### அட்டவணை IX

| சிந்து ஜில்லாக்கள் | விஸ்தீரணம் (ச. மைல்) | மொத்த ஜனத் தொகை | இந்துக்கள் | முஸ்லிம்கள் | இந்தியக் கிறிஸ்தவர்கள் | மலை ஜாதியினர் | இதரர் |
|---|---|---|---|---|---|---|---|
| தாது | 7,370 | 3,89,380 | 58,372 | 3,29,991 | 74 | 154 | 789 |
| | | | (14.99) | (84.74) | (0.26) | | |
| ஹைதராபாத் | 4,476 | 7,58,748 | 2,45,849 | 5,07,620 | 490 | 769 | 4,020 |
| | | | (32.40) | (66.90) | (0.69) | | |
| கராச்சி | 8,357 | 7,13,900 | 2,22,597 | 4,57,035 | 11,310 | 884 | 22,074 |
| | | | (31.18) | (64.00) | (4.80) | | |
| லர்கானு | 2,857 | 5,11,208 | 91,062 | 4,18,543 | 49 | — | 1,554 |
| | | | (17.81) | (81.85) | (0.31) | | |
| நவாபாஹா | 3,908 | 5,84,178 | 1,40,428 | 4,36,414 | 212 | 1,326 | 5,798 |
| | | | (24.04) | (74.72) | (1.25) | | |
| சுக்கூர் | 5,550 | 6,92,556 | 1,95,458 | 4,91,634 | 277 | 51 | 5,136 |
| | | | (28·22) | (70.98) | (0.78) | | |
| தார்-பர்கார் | 13,649 | 5,81,004 | 2,47,496 | 2,92,025 | 800 | 33,635 | 7,048 |
| | | | (42.58) | (50.26) | (7.14) | | |
| மேல் சிந்து எல்லைப்புறம் | 1,969 | 3,04,034 | 28,664 | 2,75,063 | 20 | — | 287 |
| | | | (9.42) | (90.47) | (0.10) | | |
| மொத்தம் | 48,136 | 45.35,008 | 12,29,926 | 32,08,325 | 13,232 | 36,819 | 46,706 |
| | | | (27.12) | (70.75) | (2.13) | | |

மேற்கண்ட புள்ளி விவரங்களில் "இதரர்" என்ற தலைப்பில் சேர்ந்தவர்கள்—சீக்கியர்கள் 31,011 அல்லது 0·68 சத விகிதம்; (இந்தியக் கிறிஸ்தவரல்லாத) கிறிஸ்தவர்கள் 6,977; ஜைனர்கள் 3,687; பார்சிகள் 3,838; பௌத்தர்கள் 111; யூதர்கள் 1,082; மொத்தம் 46,706. இவர்கள் ஜில்லா வாரியாகத் தனித்தனியாகக் காட்டப்படவில்லை. (கடைசி 3 பத்திகளுக்கும் சேர்ந்தாற்போல் சத விகிதம் எடுக்கப்பட்டிருக்கிறது.)

## அட்டவணை X

| வ. மே. எல்லைப்புற ஜில்லாக்கள் | விஸ்தீரணம் (ச. மைல்) | மொத்த ஜனத் தொகை | இந்துக்கள் | முஸ்லிம்கள் | இந்தியக் கிறிஸ்தவர்கள் | | இதரர் |
|---|---|---|---|---|---|---|---|
| ஹஜாரா | 3,000 | 7,96,230 | 30,267 | 7,56,004 | 314 | | 9,645 |
| | | | (3.80) | (94.94) | | (1.25) | |
| மர்தான் | 1,098 | 5,06,539 | 10,677 | 4,83,575 | 376 | | 11,911 |
| | | | (2.10) | (95.46) | | (2 42) | |
| பெஷாவார் | 1,547 | 8,51,833 | 51,212 | 7,69,589 | 3,397 | | 27,635 |
| | | | (6.01) | (90.34) | | (3.64) | |
| கோஹட் | 2,707 | 2,89,404 | 17,527 | 2,66,224 | 596 | | 5,057 |
| | | | (6.06) | (91.99) | | (1.95) | |
| பன்னு | 1,695 | 2,95,930 | 31,471 | 2,57,648 | 467 | | 6,344 |
| | | | (10.63) | (87.06) | | (2.30) | |
| டேரா இஸ்மெயில்கான் | 4,216 | 2,98,131 | 39,167 | 2,55,757 | 276 | | 2,931 |
| | | | (13.14) | (85.78) | | (1.07) | |
| மொத்தம் | 14,263 | 30,38,067 | 1,80,321 | 27,88,797 | 5,426 | | 63,523 |
| | | | (5.94) | (91.79) | | (2.26) | |

மேற்கண்ட புள்ளி விவரத்தில் உள்ள "இதரர்" என்பவர்கள்: சீக்கியர்கள் 57,939 அல்லது 1·91 சத விகிதம்; (இந்தியக் கிறிஸ்தவரல்லாத) கிறிஸ்தவர் 5,463; பௌத்தர்கள் 25; யூதர்கள் 71; ஜைனர் 1; பார்சி 24; மொத்தம் 63,523.

## அட்டவணை XI

| பலுசிஸ்தான ஜில்லாக்கள் | விஸ்தீரணம் (ச. மைல்) | மொத்த ஜனத் தொகை | இந்துக்கள் | முஸ்லிம்கள் | இந்தியக் கிறிஸ்தவர்கள் | | இதரர் |
|---|---|---|---|---|---|---|---|
| க்வெட்டா பிஷின் | 5,310 | 1,56,289 | 28,629 | 1,13,288 | 2.296 | | 12,076 |
| | | | (18.32) | (72.48) | | (9.19) | |
| லாரலே | 7,375 | 83,685 | 3,129 | 79,273 | 118 | | 1,165 |
| | | | (3.74) | (94.73) | | (1.53) | |
| ஜாப் | 10,478 | 61,499 | 4,286 | 55,987 | 78 | | 1,148 |
| | | | (6.97) | (91.04) | | (1.99) | |
| போலன் | 407 | 6,009 | 950 | 4,812 | 22 | | 225 |
| | | | (15.81) | (80.08) | | (4.11) | |
| சாகை | 19,429 | 29,250 | 1,204 | 27,864 | 1 | | 181 |
| | | | (4.12) | (95 26) | | (0.62) | |
| சிபி | 11,457 | 1,64,899 | 6,425 | 1,57,706 | 118 | | 650 |
| | | | (3.89) | (95.63) | | (0.46) | |
| மொத்தம் | 54,456 | 5,01,631 | 44,623 | 4,38,930 | 2,633 | | 15,445 |
| | | | (8.89) | (87.51) | | (3.60) | |

மேற்கண்ட புள்ளி விவரத்தில் "இதரர்" என்பவர்கள்: சீக்கியர்கள் 11,918 அல்லது 2·38 சத விகிதம்; (இந்தியக் கிறிஸ்தவரல்லாத) கிறிஸ்த வர்கள் 3,369; ஜைனர்கள் 7; பார்சிகள் 75; பௌத்தர்கள் 43; யூதர்கள் 19; இதரர் 14; மொத்தம் 15,445.

இந்த அட்டவணைகளை மேலெழுந்த வாரியாகப் பார்த்தால் சிந்துவி லுள்ள எந்த ஜில்லாவிலும் முஸ்லிம் அல்லாதவர்கள் பெரும்பான்மையாக இல்லை என்பது தெரியவரும். இதற்கு மாறாக முஸ்லிம்கள் ஒவ்வொரு ஜில்லா விலும் பெரும்பான்மையாக இருக்கின்றார்கள். அவர்களுடைய மிக அதிகமான சத விகிதம் 90 47. இது வடக்கு சிந்து எல்லை ஜில்லாவில் இருக்கிறது. மிகக் குறைந்த சத விகிதம் தார்பர்கார் ஜில்லாவில்—50·26 சத விகிதம்—இருக் கின்றது. மாகாணம் பூராவிலும் சமூகவாரி விகிதம்: முஸ்லிம்கள் 70·75 சத விகிதம்; இந்துக்கள் 27·12 சத விகிதம்; சீக்கியர், கிறிஸ்தவர், ஜைனர் பௌத்தர், யூதர், ஆதிகுடிகள் ஆகியோர்கள் 2·13 சத விகிதமிருக்கி ன்றனர். இதில் 0·68 சீக்கியர். இந்த மாகாணம் முழுதும், பலுசிஸ்தானம், வ. மே. எ. மாகாணம், மேற்கு பஞ்சாப் ஆகியவைகளை ஒட்டியே இருக்கின்றது.

இதேபோல வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் ஒவ்வொரு ஜில்லா விலும் முஸ்லிம்கள் தொகையில் பெரும்பான்மையராக இருக்கிறார்கள். மர்தான் ஜில்லாவில் அபரிமிதமான 95·46 சத விகிதமும் டேரா இஸ்மெயில் கான் ஜில்லாவில் குறைந்ததான 85·78 சத விகிதமுமாக இருக்கிறார்கள். முழு மாகாணத்தையும் சேர்த்துப் பார்க்கும்பொழுது முஸ்லிம்கள் 91·79 சத விகிதமும், இந்துக்கள் 5.94 சதவிகிதமும், இதரர் 2·26 சத விகிதமும் இருக் கிறார்கள். மாகாணத்தின் மொத்த ஜனத்தொகையில் சீக்கியர் 1.91 சதவிகிதத் தினர். இந்த மாகாணம், பலுசிஸ்தானம், சிந்து, மேற்கு பஞ்சாப் ஆகியவைகளை ஒட்டியிருக்கின்றது.

பலுசிஸ்தானத்திலும் இதைப்போல எல்லா ஜில்லாக்களிலும் முஸ்லிம் கள் பெரும்பான்மையாக இருக்கிறார்கள். சிபி ஜில்லாவில் உயர்ந்த சதவிகிதம் 95·63 ஆகவும் க்வெட்டா பிஷின் ஜில்லாவில் குறைந்த சத விகிதம் 72·48 ஆகவும் இருக்கிறது. மாகாணம் பூராவையும் கவனிக்கும்போது முஸ்லிம்கள் 87·51 சத விகிதமும் இந்துக்கள் 8·89 சத விகிதமும் "இதரர்" மொத்த ஜனத்தொகையில் 3·60 சத விகிதமும் இருக்கிறார்கள். "இதரர்" என்ற இனத்தில் 2·38 சத விகிதமுள்ள சீக்கியர்களும் சேர்ந்தவர்கள். இந்த மாகாண மும்கூட சிந்து, வ. மே. எ. மாகாணம், பஞ்சாப் இவைகளை ஒட்டியே இருக்கிறது.

லாகூர் தீர்மானத்தின் பிரகாரம் இந்தியாவின் வடமேற்கில் உண்டாக் கக்கூடிய முஸ்லிம் சுதந்திர ராஜாங்கத்தில் சேர்ந்துகொள்வதற்குரிய லட்சணங்களை இந்த மூன்று பிரிட்டிஷ் மாகாணங்களும் பெற்றிருக் கின்றன. இதில் சிறிதும் சந்தேகமில்லை.

பஞ்சாப் மாகாணத்தின் நிலைமையோ வேறாக இருக்கிறது. இதைக் கீழ்க்காணும் 1941 ஜனக்கணக்கு அட்டவணையைப் பார்த்து அறிந்து கொள்ளலாம்.

## அட்டவணை XII

அம்பாலா டிவிஷன்

| டிவிஷன் அல்லது ஜில்லா | விஸ்தீரணம் (ச. மைல்) | மொத்த ஜனத் தொகை | இந்துக்கள் | முஸ்லிம்கள் | கிறிஸ்தவர்கள் | சீக்கியர்கள் | இதரர் |
|---|---|---|---|---|---|---|---|
| ஹிசார் | 5,213 | 10,06,709 | 6,52,676 (64.83) | 2,85,208 (28.33) | 1,292 (0.13) | 60,731 (6.03) | 6,802 (0.67) |
| ரோட்டாக் | 2,246 | 9,56,399 | 7,80,474 (81.61) | 1,66,569 (17.42) | 1,043 (0.11) | 1,466 (0.15) | 6,847 (0.71) |
| கர்கான் | 2,234 | 8,51.458 | 5,60,498 (65.85) | 2,85,992 (33.56) | 1,673 (0.20) | 637 (0.07) | 2,658 (0.31) |
| கர்னல் | 3,126 | 9,94,575 | 6,66,036 (66.97) | 3,04,346 (30.68) | 1,249 (0.13) | 19,887 (2.00) | 3,057 (0.30) |
| அம்பாலா | 1,851 | 8,47,745 | 4,10,333 (48.40) | 2,68,999 (31.73) | 6,065 (0.71) | 1,56,543 (18.46) | 5,805 (0.68) |
| சிம்லா | 80 | 38,576 | 29,466 (76.38) | 7,022 (18.20) | 934 (2.42) | 1,032 (2.67) | 122 (0.32) |
| மொத்தம் | 14,750 | 46,95,462 | 30,99,483 (66.01) | 13,18,136 (28.07) | 12,256 (0.26) | 2,40,296 (5.12) | 25,291 (0.54) |

ஜலந்தர் டிவிஷன்

| டிவிஷன் அல்லது ஜில்லா | விஸ்தீரணம் (ச. மைல்) | மொத்த ஜனத் தொகை | இந்துக்கள் | முஸ்லிம்கள் | கிறிஸ்தவர்கள் | சீக்கியர்கள் | இதரர் |
|---|---|---|---|---|---|---|---|
| காங்ரா | 9,979 | 8,99,377 | 8,38,479 (93.23) | 43,249 (4.81) | 788 (0.09) | 4,809 (0.53) | 12,052 (1.34) |
| ஹோஷியார் பூர் | 2,195 | 11,70,323 | 4,68,225 (40.01) | 3,80,759 (32.53) | 6,165 (0.53) | 1,98,194 (16.94) | 1,16,980 (9.99) |
| ஜலந்தர் | 1,334 | 11,27,190 | 1,98,160 (17.59) | 5,09,804 (45.23) | 6,233 (0.55) | 2,98,741 (26.50) | 1,14,252 (10.13) |
| லூதியானு | 1,399 | 8,18,615 | 1,66,678 (20.36) | 3,02,482 (36.95) | 1,913 (0.23) | 3,41,175 (41.68) | 6,367 (0.78) |
| பெரோஸ்பூர் | 4,085 | 14,23,076 | 2,79,260 (19.62) | 6,41,448 (45.07) | 12,607 (0.89) | 4,79,486 (33.69) | 10,275 (0.72) |
| மொத்தம் | 18,992 | 54,38,581 | 19,50,802 (35.87) | 18,77,742 (34.53) | 27,706 (0.51) | 13,22,405 (24.31) | 2,59,926 (4.78) |

| லாகூர் டிவிஷன் | விஸ்தீரணம் | மொத்த ஜனத் தொகை | இந்துக்கள் | முஸ்லிம்கள் | கிறிஸ்தவர்கள் | சீக்கியர்கள் | இதரர் |
|---|---|---|---|---|---|---|---|
| அமிர்தசரஸ் | 1,572 | 14,13,876 | 2,16,778 | 6,57,695 | 25,973 | 5,10,845 | 2,585 |
| | | | (15.33) | (46.52) | (1.84) | (36.13) | (0.18) |
| லாகூர் | 2,595 | 16,95,375 | 2,84,351 | 10,27,772 | 70,147 | 3,10.646 | 2,459 |
| | | | (16.77) | (60.62) | (4.14) | (18.32) | (0.15) |
| குர்தாஸ்பூர் | 1,846 | 11,53,511 | 2,83,192 | 5,89,923 | 51,522 | 2,21,261 | 7,613 |
| | | | (24.55) | (51.14) | (4.47) | (19.18) | (0.66) |
| சயால்காட் | 1,576 | 11,90,497 | 2,31,114 | 7,39,218 | 75,831 | 1,39,409 | 4,925 |
| | | | (19.41) | (62.09) | (6.37) | (11.71) | (0.41) |
| குஜரான் வாலா | 2,311 | 9,12,234 | 1,07,887 | 6,42,706 | 60,829 | 99,139 | 1,673 |
| | | | (11.83) | (70.45) | (6.67) | (10.87) | (0.18) |
| ஷெய்குபுரா | 2,303 | 8,52,508 | 77,740 | 5,42,344 | 60,054 | 1,60,706 | 11,664 |
| | | | (9.12) | (63.62) | (7.04) | (18.85) | (1.37) |
| மொத்தம் | 12,203 | 72,18,001 | 12,01,062 | 41,99,658 | 3,44,356 | 14,42,006 | 30,919 |
| | | | (16.64) | (58.18) | (4.77) | (19.98) | (0.43) |
| **ராவல்பிண்டி டிவிஷன்** | | | | | | | |
| குஜராத் | 2,266 | 11,04,952 | 84,643 | 9,45,609 | 4,449 | 70,233 | 18 |
| | | | (7.66) | (85.58) | (0.40) | (6.36) | (0.00) |
| ஷாஹ்பூர் | 4,770 | 9,98.921 | 1,00,708 | 8,35,918 | 12,770 | 48,046 | 1,479 |
| | | | (10.08) | (83.68) | (1.28) | (4.80) | (0.15) |
| ஜீலம் | 2,774 | 6,29,658 | 40,879 | 5,63,033 | 893 | 24,680 | 173 |
| | | | (6.49) | (89.42) | (0.14) | (3.92) | (0.02) |
| ரா. பிண்டி | 2,022 | 7,85,231 | 82,463 | 6,28,193 | 9,014 | 64,127 | 1.434 |
| | | | (10.50) | (80.00) | (1.15) | (8.17) | (0.18) |
| அட்டாக் | 4,148 | 6,75,875 | 43,190 | 6,11,128 | 1,392 | 20,120 | 45 |
| | | | (6.39) | (90.42) | (0.21) | (2.97) | (0.01) |
| மியான் வாலி | 5,401 | 5,06,321 | 62,787 | 4,36,260 | 358 | 6,865 | 51 |
| | | | (12.40) | (86.16) | (0.07) | (1.36) | (0.01) |
| மொத்தம் | 21,381 | 47,00,958 | 4,14,670 | 40,20,141 | 28,876 | 2,34,071 | 3,200 |
| | | | (8.82) | (85.52) | (0.61) | (4.98) | (0.07) |
| **முல்தான் டிவிஷன்** | | | | | | | |
| மா. கோமரி | 4,204 | 13,29,103 | 1,91,182 | 9,18,564 | 24,432 | 1,75,064 | 19,861 |
| | | | (14.38) | (69.11) | (1.84) | (13.17) | (1.49) |
| லயால்பூர் | 3,522 | 13,96,305 | 1,62,295 | 8,77,518 | 51,948 | 2,62,737 | 41,807 |
| | | | (11.62) | (62.85) | (3.72) | (18,82) | (2.99) |
| ஜாங் | 3,415 | 8,21,631 | 1,29,791 | 6,78,736 | 763 | 12,238 | 103 |
| | | | (15.80) | (82.61) | (0.09) | (1.49) | (0.01) |
| முல்தான் | 5,653 | 14,84,333 | 2,42,987 | 11,57,911 | 14,290 | 61,628 | 7,517 |
| | | | (16,37) | (78.01) | (0.96) | (4.15) | (0.51) |
| முஜாபர்கார் | 5,605 | 7,12,849 | 90.547 | 6,16,074 | 227 | 5,882 | 119 |
| | | | (12.70) | (86.42) | (0.03) | (0.82) | (0.02) |
| டேரா காஜி கான் | 9,364 | 5,81,350 | 67,393 | 5,12,678 | 87 | 1,072 | 120 |
| | | | (11.59) | (88.19) | (0.01) | (0.18) | (0.02) |
| பலுச் எ. பிரதேசம் | — | 40,246 | 160 | 40,084 | — | 2 | — |
| | | | (0.39) | (99.60) | — | (0.0) | — |
| மொத்தம் | 31,763 | 63,65,817 | 8,84,355 | 48,01,565 | 91,747 | 5,18,623 | 69,527 |
| | | | (13.89) | (75.43) | (1.44) | (8.15) | (1.09) |
| மாகாணத்தின் மொத்தம் | 99,089 | 2,84,18,819 | 75,50,372 | 1,62,17,242 | 5,04,941 | 37,57,401 | 3,88,863 |
| | | | (26.57) | (57.06) | (1.78) | (13.22) | (1.37) |

| டிவிஷன் அல்லது ஜில்லா | விஸ்தீரணம் (ச. மைல்) | மொத்த ஜனத் தொகை | இந்துக்கள் | முஸ்லிம்கள் | கிறிஸ்தவர்கள் | சீக்கியர்கள் | இதரர் | மொத்த முஸ்லிம் அல்லாதார் |
|---|---|---|---|---|---|---|---|---|
| **முஸ்லீம் பெரும்பான்மை ஜில்லாக்கள்** | | | | | | | | |
| ரா. பிண்டி டிவி. | 21,381 | 47,00,958 | 4,14,670 (8.82) | 40,20,141 (85.52) | 28,876 (0.61) | 2,34,071 (4.98) | 3,200 (0.07) | 6,80,817 (14.48) |
| முல்தான் டிவி. | 31,763 | 63,65,817 | 8,84,355 (13.89) | 48,01,565 (75.43) | 91,747 (1.44) | 5,18,623 (8.15) | 69,527 (1.09) | 15,64,252 (24.57) |
| லாகூர்டிவி. அமிர்தசரஸ் நீங்கலாக | 10,631 | 58,04,125 | 9,84,284 (16.96) | 35,41,963 (61.02) | 3,18,383 (5.49) | 9,31,161 (16.04) | 28,334 (0.49) | 22,62,162 (38.98) |
| மொத்தம் | 63,775 | 1.68,70,900 | 22,83,309 (13.53) | 1,23,63,669 (73.29) | 4.39,006 (2.60) | 16,83,855 (9.98) | 1,01,061 (0.60) | 45,07,231 (26.71) |
| **முஸ்லீம் அல்லாதார் பெரும்பான்மை ஜில்லாக்கள்** | | | | | | | | |
| அம்பாலா டிவி. | 14,750 | 46,95,462 | 30,99,483 (66.01) | 13,18,136 (28.07) | 12,256 (0.26) | 2,40,296 (5.12) | 25,291 (0.54) | 33,77,326 (71.93) |
| ஜலந்தர் டிவி. | 18,992 | 54,38,581 | 19,50,802 (35.87) | 18,77,742 (34.53) | 27,706 (0.51) | 13,22,405 (24.31) | 2,59,926 (4.78) | 35,60,839 (65.47) |
| அமிர்தசரஸ் ஜில்லா | 1,572 | 14,13,876 | 2,16,778 (15.33) | 6,57,695 (46.52) | 25,973 (1.84) | 5,10,845 (36.13) | 2,585 (0.18) | 7,56,181 (53.48) |
| மொத்தம் | 35,314 | 1,15,47,919 | 52,67,063 (45.61) | 38,53,573 (33.35) | 65,935 (0.57) | 20,73,546 (17.96) | 2,87,802 (2.49) | 76,94,346 (66.63) |

மேலேயுள்ள அட்டவணையில் கொடுத்திருக்கும் புள்ளி விவரங்களை ஆராய்வதற்கு முன்பு "இதரர்" என்ற தலைப்பில் ஆதி தர்மிகள், ஜைனர், பார்சி, யூதர், இன்னும் எந்த சமூக இனத்தையும் மதத்தையும் சேராத சிலரையும் சேர்த்திருக்கிறது என்பதை அறிந்துகொள்வது நல்லது. அவர்களில் மிக அதிகமானவர்கள் ஆதி தர்மிகள். ஜனக் கணக்கு கமிஷனர் அவர்களைத் தாழ்த்தப்பட்ட வகுப்பினரோடு சேர்த்திருந்தாலும்கூட அவர்கள் தங்களை இந்துக்கள் என்று சொல்லவில்லை. ஆகையால் அவர்களை இந்துக்களிலும் சேர்க்காமல் ஒதுக்கப்பட்ட வகுப்பிலும் சேர்க்காமல் தனியாகப் பதியப்பட்டிருக்கின்றது. அவர்களின் எண்ணிக்கை 3,43,685; பஞ்சாபின் மொத்த ஜனத்தொகையில் 1·21 சத விகிதம். அவர்கள் மிக அதிகமாக ஜலந்தர் டிவிஷனில் இருக்கிறார்கள். அங்கு அவர்களுடைய தொகை 2,50,267; அந்த டிவிஷனிலுள்ள ஜனத்தொகையில் 4·60 சத விகிதம். அடுத்தபடியாக அவர்கள் அதிகமாக இருக்கும் டிவிஷன்கள் முல்தானும் லாகூரும். அவற்றில் அவர்களுடைய தொகை முறையே 68,641, 20,488-ஆகும். அம்பாலா, ராவல்பிண்டி டிவிஷன்களில் அவர்களுடைய தொகை மிகவும் குறைந்தது. அதாவது 2,795, 1,534 ஆகும். 1931-ம் வருஷத்திய ஜனக்கணக்கு அறிக்கையில் குறிப்பிட்டிருந்ததாவது: '1931-ம் வருஷத்திய ஜனக் கணக்கில் குறிப்பிட வேண்டிய அம்சம் என்னவென்றால் மத விஷயமான அறிக்கையில் அநேக சாமார்களும் சுப்ராக்களும் இதர தீண்டாதார்களும் தங்களை ஆதி தர்மிகள் என்று சொல்லிக் கொண்டனர். இதற்கு முந்திய ஜனக் கணக்குகளில் இந்த சுப்ராக்கள் ஏதாவது ஒரு திட்டமான மதத்தைச் சேர்ந்தவர்களாகத் தங்களைச் சொல்லிக் கொள்ளாதவரை இந்துக்களோடேயே சேர்த்து எழுதப்பட்டனர்.' 1941-ம்

வருஷத்திய ஜனக் கணக்கு அறிக்கையில்கூட ஆதி தர்மிகள் என்று பதிவு செய்யப்பட்டவர்கள் எல்லாம் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்றாலும் தங்களை இந்துக்களென்று சொல்லிக்கொள்ளவில்லை என்று குறிப்பிடுகிறது. சென்ற இரண்டு ஜனக் கணக்குகளும் இந்துக்களிலிருந்து ஆதி தர்மிகளை விலக்கியதன் மூலமாக இந்துக்களின் எண்ணிக்கை மிகவும் குறைந்து விட்டது.

பஞ்சாபின் ஜனக் கணக்குப் புள்ளி விவரத்தை ஆராயும்போது சிந்து, வடமேற்கு எல்லைப்புறம், பலுசிஸ்தானம் ஆகிய மாகாணங்களுக்கு பஞ்சாப் வேறுபட்டதாயிருக்கிறது என்பது தெரிகிறது. அந்த மூன்று மாகாணங்களிலும் முஸ்லிம்களின் எண்ணிக்கை மிக அதிகமாகி மொத்த ஜனத்தொகையில் அவர்களது சத விகிதம் முறையே 70·75, 91·79, 87·51 ஆக இருக்கும் பொழுது பஞ்சாபின் முஸ்லிம்களின் எண்ணிக்கை சொற்பப் பெரும்பான்மை யாகவும் மொத்த ஜனத்தொகையில் 57.06 சத விகிதமாகவுமே இருக்கிறது. அந்த மாகாணங்களில் உள்ளதுபோல பஞ்சாபின் ஒவ்வொரு ஜில்லாவிலும் முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கவில்லை. அது மட்டுமல்ல; முஸ்லிமல்லாதவர்கள் அபரிமிதமான பெரும்பான்மையில் உள்ள ஜில்லாக்களும் டிவிஷன்களும் பஞ்சாபில் இருக்கின்றன. லாகூர் தீர்மானத்திலுள்ள சொற்றொடர் ‘எண்ணிக்கையில் பெரும்பான்மை’ என்றுதான் இருக்கிறது. எவ்வளவு பெரும்பான்மை என்பதைத் திட்டவட்டமாகத் தெரிவிக்கக்கூடிய பதங்கள் ஒன்றும் அதில் இல்லை. ஆகையால் எண்ணிக்கையில் பெரும்பான்மை என்பது அபரிமிதமான பெரும்பான்மையைத்தான் குறிக்கிறது என்றும் சொல்லிக் கொள்ளலாம், அல்லது சொற்பமான பெரும்பான்மையைத்தான் குறிக்கிறது என்றும் அர்த்தம் கொள்ளலாம். ஆனால் பிரிவினை வேண்டுமென்று கோரியதற்குரிய காரணத்தையும் நோக்கத்தையும் யோசித்துப் பார்க்கும்பொழுது அவர்கள் கருதியது சொற்பப் பெரும்பான்மையை அல்ல, அபரிமிதமான பெரும்பான்மையைத்தான் கருதியிருக்கிறார்கள் என்ற முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது. தங்களுடைய கருத்துக்கிணங்க தங்களுடைய நலன்களை விருத்தி செய்வதற்கு முஸ்லிம்களுக்குச் சந்தர்ப்பமளிக்க வேண்டும் என்பதே பிரிவினையின் நோக்கம். அவர்கள் ஒரு தனித் தேசிய இனமாக அமைகிறார்கள். ஆகவே இந்த நாட்டில் வாழும் மற்றவர்களோடு தங்களுடைய கலாசாரம், சமூக வாழ்க்கை, வாழ்க்கை நோக்கு, மதம் ஆகியவற்றில் வேறுபடுகிறார்கள். ஆகையால் தங்களுடைய அதிகாரம் மேலோங்கி இருக்கக்கூடிய ஒரு தனித் தாயகம் அவர்களுக்கு வேண்டும். இதுவே அவர்கள் பிரிவினையைக் கோருகின்ற காரணம். அப்படியானால் சொற்பமான பெரும்பான்மையாக இருந்துகொண்டு தங்களுடைய கருத்துக்களுக்கிணங்க அபிவிருத்தி செய்து கொள்வதென்பது முஸ்லிம்களுக்கு இயலாது. ஏன் எனில், அங்குள்ள பலங்கொண்ட சிறுபான்மை இவர்களோடு கலந்துவிடத் தயாராக இருக்காது; இதற்கு மாறாகத் தன்னுடைய கருத்துக்கிணங்கவே தன்னுடைய நலன்களை விருத்தி செய்யப் போராடிக் கொண்டிருக்கும். வேறு மதம், தனிக் கலாசாரம், சமூக வாழ்க்கை, வாழ்க்கை நோக்கு இவற்றைக் கொண்டதன் காரணமாக ஒரு சொற்பமான பெரும்பான்மை ஒரு தனித் தாயகம் வேண்டுமென்று உரிமை கொண்டாடினால், அதே போலப் பெயரளவில் சிறுபான்மையாக இருக்கக்கூடிய சிறுபான்மையும் தனது கருத்துக்களின்படி விருத்தி செய்து கொள்வதற்குத் தனித் தாயகம் வேண்டுமென்று கோரினால் அதை மறுப்பது நீதியாகாது, ஒழுங்கும் ஆகாது. நான்கு

வடமேற்கு மாகாணங்களுக்குள்ளும் வித்தியாசம் இருக்கிறது என்பதை அறிந்துகொண்ட காரணத்தினுல் சுதந்திர ராஜ்யங்களுக்குள் அடங்கிய பகுதிகளுக்கு சர்வாதிகாரமும் சுயேச்சையும் இருக்க வேண்டும் என்று லாகூர் தீர்மானம் திட்டம் செய்கிறதென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஒரு பெரிய ராஜ்யத்துள்ளடங்கிய பகுதி எப்படி எதுவரையில் சுயேச்சை பெற்றிருக்க வேண்டும் என்ற பிரசினையை இப்பொழுது விட்டுவிடுவோம். அந்த ராஜ்யத்துக்குள் அடங்கிய பகுதிகள் ஒன்றுக்கொன்று என்ன உறவோடிருக்கும் என்பதை மட்டும் கவனித்தால், ஒவ்வொரு பகுதியும் தனது உள்நாட்டு நிர்வாகப் பொறுப்பைத் தானே ஏற்றுத் தன்னைத்தானே நம்பி இருக்க வேண்டும் என்பதில் சந்தேகம் இருக்க முடியாது. சுதந்திர முஸ்லிம் ராஜ்யங்களினுடைய அரசியலமைப்பு முறை ஜனநாயகத்தன்மை வாய்ந்ததாயிருந்தால் சொற்பமான முஸ்லிம் பெரும்பான்மையினர் அவர்களுடைய கருத்துப்படியே நிர்வாகம் செலுத்துவது என்பது அனுபவத்தில் சாத்தியமாகாதது என்றில்லாவிட்டாலும் மிக மிகக் கஷ்டமாயிருக்கும். இங்கே ஜனநாயகம் என்பதற்கு நான் கொடுக்கும் அர்த்தமாவது :—அந்த அரசாங்கத்திலுள்ள மக்கள் தங்களை ஆளும் தலைவர்களை ஜாதிமத நிற வித்யாசங்களின்றித் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்ளவும், தங்களுடைய நோக்கம், கொள்கைப்படி நிர்வாகம் செய்யவும் உரிமைகள் பெற்றிருப்பது என்பதாம். தற்போது பஞ்சாப் மாகாணத்தில் உள்ள முஸ்லிம்கள் சொற்பப் பெரும்பான்மையான 57 சத விகிதம் ஆக இருப்பதால் லாகூர் தீர்மானத்தின்படி பஞ்சாபைப் பிரித்து வடமேற்கு சுதந்திர ராஜ்யத்தில் சேர்க்க முடியாது, அங்ஙனம் சேர்க்கவும் கூடாது. எந்தெந்தப் பிரதேசத்தை விலக்கி விடுவது என்பதை ஆராயும்பொழுது ஒரு மாகாணத்தையே பகுதியாக வைத்துக்கொண்டு அதன் ஜனத் தொகையைக் கவனிக்க வேண்டுமென்ருல் பஞ்சாபை அப்படியே முஸ்லிம் ராஜ்யத்தில் சேர்த்துவிட முடியாது என்ற முடிவு ஏற்படுகிறது. இந்தியாவின் மத்ய சமஷ்டி என்ற புத்தகத்தை எழுதிய "பஞ்சாபி"யும், திரு. எம். ஆர். டி. யும் பஞ்சாப் மாகாணம் முழுவதையும் அப்படியே எடுத்துக் கொள்ளாமல் முஸ்லிம்கள் சிறுபான்மையாக இருக்கும் சில பகுதிகளை அதிலிருந்து விலக்கி விட்டார்கள்.

'பஞ்சாபிலிருந்து அம்பாலா டிவிஷனையும் கிழக்கத்திய இந்து சீக்கிய ராஜ்யங்களையும் விலக்கி விட்டால் அதனுடைய ஜனத்தொகை $28\frac{1}{2}$ மில்லியனிலிருந்து 21 மில்லியனுக்குக் குறைந்துவிடும். ஆனுல் முஸ்லிம் சத விகிதம் 55-லிருந்து 70-க்கு உயர்ந்துவிடும். பூரா வடமேற்கையும் அப்படியே சேர்த்து மொத்தமாகப் பார்க்கையில் முஸ்லிம் சதவிகிதம் இன்னும் அதிகமாக உயர்ந்துவிடும். உத்தேசித்த பிரகாரம் கிழக்கு எல்லையைச் சற்று மாற்றி அமைத்துவிட்டால் வடமேற்கு பாகத்தின் மொத்த ஜனத் தொகையை 35 மில்லியனுக்கி விடலாம். அதில் முஸ்லிம்கள் 27 மில்லியனும் முஸ்லிமல்லாதவர் 8 மில்லியனும் ஆவார்கள். இதில் முஸ்லிம்களின் விகிதம் 77 சத விகிதமாவதால் நிரந்தரமானதும் அசைக்க முடியாததும் ஆன முஸ்லிம் அரசாங்கம் ஏற்பட்டுவிடும். இதற்கு, ஜனத்தொகை ஓரிடத்திலிருந்து மற்ருேர் இடத்துக்குக் குடியேறச் செய்யும் பரிவர்த்தனையும் தேவையில்லாமல் போய்விடும்.'[3]

'பஞ்சாபின் கிழக்கு எல்லைப் பிரசினை முக்கியம் வாய்ந்தது ஆகிறது. அதுபற்றி முஸ்லிம்களுக்கு அபிப்பிராய வேற்றுமை ஏற்பட்டுவிடக் கூடும். சிலர் யமுனை நதியை இயற்கை எல்லையாகக் கருதலாம். அல்லது கங்கை,

3. *India's Problem of her Future Constitution*, pp. 33-4.

சிந்து சமவெளியைப் பிரிக்கும் மேட்டுப் பறம்பை இயற்கை எல்லையாகவும் கருதலாம். காங்ரா ஜில்லாவிலுள்ள கிழக்கு இந்து நிலங்களையும், ஹோஷியார்பூர் ஜில்லாவிலுள்ள சில பாகங்களையும், அம்பாலா டிவிஷன் முழுவதையும் பஞ்சாபிலிருந்து விலக்கும்படியாக எல்லைகட்ட வேண்டும் என்றும் சிலர் கருதலாம். முதல் கருத்தைக் கவனிக்கும்போது, இந்து இந்தியாவையும் பஞ்சாப் பகுதியான சிந்துஸ்தானையும் பிரிப்பதற்கு இயற்கையான எல்லையாக யமுனை ஆற்றையும் அல்லது முன்கூறிய மேட்டுப்பறம்பையும் வைத்துக் கொள்ளலாம் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆனால் சிந்துப் பிரதேச சமஷ்டியை அமைப்பதன் அடிப்படை நோக்கம் இந்து ஜனத் தொகையைக் குறைத்து அதில் முஸ்லிம்களினுடைய விவசாய, கைத்தொழில், கலாசார நலன்களைப் பாதுகாப்பது என்றால் கிழக்கு எல்லையை யமுனை யாற்றில் நிறுத்துவதோ அல்லது, டில்லியிலிருந்து அரவல்லி மலைவரை தென்கிழக்காகச் செல்லும் மேட்டுப் பறம்புவரை கொண்டு செல்லுவதோ அந்த நோக்கங்களைப் பூர்த்தி செய்வதற்கு உதவாது. ஏன் என்றால், இந்துக்கள் அதிகமாக உள்ள டில்லி மாகாணத்தையும், அம்பாலா டிவிஷனையும் நமது தேசத்திற்குள் கொண்டு வந்து விடும். இதனால் நமது ஜனத்தொகையில் இந்துக்களின் விகிதம் அதிகமாகிவிடும். அப்படி அதிகமாவது நமது நலன்களுக்குக் கேடு விளைப்பதாகும். இவ்வாறு எல்லை கட்டுவது இந்து இந்தியாவிலிருந்து நமக்குக் கலாசாரப் பிரிவினையை உண்டாக்கிவிடாது. நம்மிடையே உள்ள அதிகமான இந்து ஜனத் தொகைக்கும் இந்து இந்தியாவிலுள்ள ஜனத் தொகைக்குமுள்ள நெருங்கிய உறவு காரணமாக நமது கஷ்டங்கள் இன்னும் அதிகப்படும். நம்மிடையேயுள்ள இந்துக்களின் மனமெல்லாம் இந்து இந்தியாவிலுள்ள இந்துக்களின்பாலே செல்லும். இந்த ஒரு முக்கியமான காரணத்தைக் கொண்டே இந்துக்கள் அதிகமாகவுள்ள பாகத்தை நம்முடைய பிரதேசங்களில் சேர்த்துக் கொள்ளக் கூடாது என்ற இரண்டாவது அபிப்பிராயமே நமக்கு நல்லதாகும்.'[4] 'ஆகவே ஆரம்பத்தில் பஞ்சாபின் கிழக்கு எல்லையை மாற்றி அமைக்க வேண்டுமென்று முஸ்லிம்கள் வற்புறுத்த வேண்டும். முன்கூறிய கிழக்கத்திய இந்து நிலங்களை அதிலிருந்து விலக்குவதன் அவசியத்தையும் உணர்த்த வேண்டும்.'[5]

வேறொருவிதமான விவாதப் போக்கை எடுத்துக்கொள்வோம். முஸ்லிம்கள் எண்ணிக்கையில் பெரும்பான்மையாக இல்லாத பகுதியை பாகிஸ்தானில் சேர்ப்பது நீதியும் ஒழுங்கு மாகாது என்பதை பாகிஸ்தான் ஆதரவாளர்களால்கூட மறுக்கமுடியாது. இத்தகைய கோரிக்கை லாகூர் தீர்மானத்தின் தெளிவான வார்த்தைகளான 'எண்ணிக்கையில் முஸ்லிம்கள் அதிகமாயுள்ள நிலப்பரப்புகள்' என்ற சொற்களுக்கு முரண்படும். மேலும் இக்கோரிக்கை அவ்விடங்களிலுள்ள முஸ்லிமல்லாத பெரும்பான்மைக்கு அநீதி செய்வதுமாகும். முஸ்லிமல்லாதார்மீது முஸ்லிம் ஆட்சியைத் திணிப்பதற்குத்தான் இந்த ஏற்பாடு என்று முஸ்லிம் அல்லாதார் கருதும்படியும் செய்யும். டாக்டர் ஸையத் அப்துல் லத்தீப் என்பவர் முஸ்லிம்களது உரிமைகளையும் நலன்களையும் காப்பதற்காக இந்தியாவைக் கலாசார மண்டலங்க ளாக்கவேண்டுமென்று திட்டம் கொண்டுவந்தவர்களில் முதலாவது மனிதர். சர் அப்துல்லா ஹரூன் கமிட்டியால் தயாரிக்கப்பட்ட திட்டம் வடமேற்கு முஸ்லிம் ராஜ்யத்

4. *Confederacy of India*, by 'A Punjabi' pp. 243-4.
5. *ibid.*, p. 246.

தில் பஞ்சாப் முழுவதையும் சேர்த்ததோடல்லாமல் டில்லி மாகாணத்தையும் அலிகார் ஜில்லாவின் ஒரு பகுதியையும் சேர்த்திருந்தது. அதுபற்றி சையத் அப்துல் லத்திப் 1941-ல் எழுதியதாவது: 'கமிட்டியின் அறிக்கையில் சொல்லியுள்ளபடி வடமேற்கு வடகிழக்குப் பகுதிகளை எல்லைகட்டுவது எனக்குப் பிடிக்கவில்லை. அபரிமிதமான முஸ்லிம் பெரும்பான்மையுள்ள அடக்கமான ஒரே இனமுள்ள மக்களைக்கொண்ட ராஜ்யங்களையே லாகூர் தீர்மானம் கோருகிறது. ஆனால் உங்களுடைய கமிட்டியைச் சேர்ந்த பஞ்சாப், அலிகார் அங்கத்தினர்கள் முஸ்லிம் அல்லாத பிரதேசங்களின்மீதும் ஏகாதிபத்திய ஆசைகொண்டவர்களாகக் காணப்படுகிறார்கள். பஞ்சாபைப் பெரிதாக்கி அலிகார்வரையிலும் விஸ்தரிக்க நினைக்கிறார்கள். காஷ்மீரிலிருந்து ஜெய்சல்மீர் வரையிலுள்ள முஸ்லிமல்லாத ராஜ்யங்களைச் சேர்ப்பதால் முஸ்லிம் சதவிகிதம் 55-க்குக் குறைந்துவிடும். இதேபோன்று வடகிழக்குப் பகுதியிலும் வங்காளம், அஸ்ஸாம், பீஹாரில் ஒரு ஜில்லா முதலியவற்றைச் சேர்க்க விரும்புகிறார்கள். இதனால் முஸ்லிம் சதவிகிதம் 54 ஆகிவிடும். இவ்விதமாக எல்லை கட்டுவது தீர்மானத்தின் கருத்துக்கும் லட்சியத்துக்கும் விரோதமானது என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம். வடகிழக்கில் 46-சதவிகிதமான முஸ்லிமல்லாதாரையும் வடமேற்கில் 42-சதவிகிதமான முஸ்லிமல்லாதாரையும் வைத்துக்கொண்டு உங்களுடைய ராஜ்யங்களை எந்தவித அர்த்தத்திலும் முஸ்லிம் ராஜ்யங்கள் என்று சொல்லமுடியாது. முஸ்லிம் மண்டலங்கள் என்றும் சொல்லமுடியாது. இந்த எல்லைக்கட்டுக்கு நான் சிறிதும் பொறுப்பாளியல்ல. இந்த வேலை முற்றிலும் பஞ்சாப், சிந்து, ஐக்கிய மாகாண அங்கத்தினர்களிடமே ஒப்படைக்கப்பட்டிருந்தது. 80-சதவிகித முஸ்லிம் பெரும்பான்மையுள்ள சிறிய ராஜ்யங்களோடு நான் திருப்தி யடைவேன். அவைகளைத்தான் என்னுடைய ராஜ்யங்களென்று சொல்லிக்கொள்வேன்.'[6]

லீகின் லாகூர் தீர்மானத்தை அனுசரித்ததுபோல இத்திட்டம் ஹாஜி சர் அப்துல்லா ஹரூன், நைட்., எம். எல். ஏ. அவர்களால் தயாரிக்கப்பட்டது. இவர் முஸ்லிம் லீகின் வெளிவிவகார சப்கமிட்டித் தலைவராக ஆதியிலிருந்து அந்தம்வரையும் இருந்தார். அந்த சப்கமிட்டி 1940 டிசம்பர் 23-ம் தேதி லீகின் தலைவரிடம் தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது. திரு. ஜின்னா, டாக்டர் லத்தீபுக்கு 1941 மார்ச் 15-ல் எழுதிய கடிதத்தில் இந்தக் கமிட்டியையும் திட்டத்தையும் நிராகரித்துவிட்டார்.

முஸ்லிமல்லாதார் பெரும்பான்மையாக இருக்கக்கூடிய சில பிரதேசங்களை முஸ்லிம் ராஜ்யத்தில் சேர்ப்பதற்குக் கருதலாம். இவ்விடத்திலுள்ள முஸ்லிமல்லாதார், இம்முயற்சியை முஸ்லிம் அல்லாதவர்கள்மீது முஸ்லிம்கள்கொண்ட ஏகாதிபத்திய ஆசை என்று கருதுவார்கள். இத்தகைய முஸ்லிமல்லாதாரின் நலனை மனத்தில் கொண்டு கவனித்தாலும்சரி, அல்லது திரு. எம். ஆர். டி.யும், 'பஞ்சாபி'யும் விளக்கிக் கூறியபடி முஸ்லிம்களின் நலன்களைக் குறிக்கோளாக் கொண்டு நோக்கினாலும் சரி, முஸ்லிம்கள் சிறுபான்மையாக உள்ள எந்தப் பிரதேசத்தையும் முஸ்லிம் ராஜ்யத்தில் சேர்த்துக்கொள்வ தென்பது ஒழுங்காகாது; நியாயமுமாகாது. பிரிவினையை ஒப்புக்கொண்டாலும் கூட அது சரியாகாது.

இந்த நோக்கமே லீகின் லாகூர் தீர்மானத்தின் நோக்கமுமாகும். இந்த நோக்கத்தைக்கொண்டு பஞ்சாபின் நிலைமையைக் கவனிப்போம். பஞ்சாபி

---

6. *The Pakistan Issue*, pp. 98—9.

லுள்ள முல்தான் டிவிஷன் சிந்துவுக்கும் பலுசிஸ்தானத்துக்கும் ஒட்டியிருக்கின்றது. 75.41 சதவிகிதம் முஸ்லிம் பெரும்பான்மையைக் கொண்டதாக இருக்கின்றது. இந்த டிவிஷனிலுள்ள ஒவ்வொரு ஜில்லாவிலும் முஸ்லிம்களே பெரும்பான்மையினர். பலுச் எல்லைக்கு அப்பாலுள்ள பிரதேசத்தில் 40,246-பேர் வசிக்கிருர்கள். இவர்களில் 99·60 சதவிகிதம் முஸ்லிம்கள். இவர்களை விட்டுவிட்டுப் பார்த்தாலும் டேராகாஜிகான் ஜில்லாவில் முஸ்லிம் ஜனத்தொகை 88·19 சதவிகிதம் இருக்கிறது. இந்த டிவிஷனிலுள்ள ஒவ்வொரு ஜில்லாவிலும் முஸ்லிம்களே பெரும்பான்மையினர். அவர்களுடைய குறைந்த சதவிகித ஜனத்தொகை லயால்பூர் ஜில்லாவில் 62·85-ஆக இருக்கின்றது. வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தை ஒட்டியுள்ள ராவல்பிண்டி டிவிஷனிலும் முஸ்லிம்கள் அபரிமிதமான பெரும்பான்மையராக இருக்கிருர்கள். ஜனத்தொகையில் அவர்களுடைய சதவிகிதம் 85·52. அட்டாக் ஜில்லாவில்தான் அவர்களுடைய சதவிகிதம் மிக உயர்ந்து 90·42-ஆக இருக்கிறது. மிகக் குறைந்த சதவிகிதம் ராவல்பிண்டி ஜில்லாவில் 80·00-ஆக இருக்கின்றது. லாகூர் தீர்மானத்தை அடிப்படையாகக் கொண்டு பிரிவினை நிறைவேற்றப் பட்டாலும் இந்த இரண்டு டிவிஷன்கள் முழுமையும் வடமேற்கு முஸ்லிம் ராஜ்யத்தில் சேர்வதாகக் கூறலாம்.

லாகூர் டிவிஷனைக் கவனிக்கும்பொழுது நிலைமை சிக்கலாக மாறுகிறது. அந்த டிவிஷனிலுள்ள முஸ்லிம்களின் சதவிகிதம் 58 18 தான் ஆகிறது. இதை அபரிமிதமான பெரும்பான்மை என்று கூற முடியாது. அதை முஸ்லிம் மண்டலம் என்று முஸ்லிம்கள் கூறுவதற்கும் இடமில்லாமல் போகிறது. அமிர்தசரஸ் ஜில்லாவில் 46·52 சதவிகிதமான சிறுபான்மையாகவே அவர்கள் இருக்கிருர்கள். குருதாஸ்பூர் ஜில்லாவில் முஸ்லிம் ஜனத்தொகை 51·14 சதவிகிதமாக இருப்பதால் முஸ்லிமல்லாதாரோடு கிட்டத்தட்ட சமநிலையில் இருக்கிறது. லாகூர் டிவிஷனிலுள்ள மிக உயர்ந்த முஸ்லிம் சதவிகிதம் குஜரன்வாலா ஜில்லாவில் 70·45 ஆக இருக்கின்றது. லாகூர், சயால்காட், ஷெய்குபுரா ஜில்லாக்களில் முஸ்லிம் சதவிகிதம் முறையே 60·62, 62·09, 63 62 ஆக இருக்கின்றது. மேற்சொன்ன இலக்கணங்களின்படி பார்த்தால் முஸ்லிம் சிறுபான்மை கொண்ட அமிர்தசரஸை எக்காரணம்கொண்டும் முஸ்லிம் மண்டலம் என்று சொல்லமுடியாது. இதைப்போல குர்தாஸ்பூர் ஜில்லாவை முஸ்லிம்களும் சரி, முஸ்லிமல்லாதவர்களும் சரி, தங்களைச் சேர்ந்தது என்று கூறுவது இரு சாராருக்கும் பொருத்தமாகவே இருக்கும். அபரிமிதமான முஸ்லிம் பெரும்பான்மை வேண்டுமென்று வற்புறுத்தப்படாவிட்டால், 60 சதவிகிதத்திலிருந்து 70 சதவிகிதம் வரை உள்ள முஸ்லிம் பெருபான்மையுள்ள ஜில்லாக்களும் முஸ்லிம் ராஜ்யத்தோடு சேர்க்கப்பட வேண்டுமென்று கேட்கப்படும்.

ஜலந்தர் டிவிஷனுடைய நிலைமை மிகவும் தெளிவாக இருக்கிறது. இங்கே மொத்த ஜனத்தொகையில் 34·53 சதவிகிதம்தான் முஸ்லிம்கள் இருக்கிருர்கள். எந்த ஜில்லாவிலும் எண்ணிக்கையில் அவர்கள் பெரும்பான்மையாக இருக்கவில்லை. அவர்கள் அதிக சதவிகிதமாக உள்ளது ஜலந்தர் ஜில்லாவில்; 45·23 சதவிகிதம். குறைந்த சதவிகிதத்தில் இருப்பது காங்ரா ஜில்லாவில்; 4·81 சதவிகிதம். அந்த டிவிஷனை மொத்தமாகக் கவனித்தால் இந்துக்கள் ஒரே இனமாக 35·87 சதவிகிதமும் முஸ்லிம்கள் 34·53 சதவிகிதமுமாக இருக்கின்றனர்கள். அந்த டிவிஷனில் உள்ள ஜில்லாக்கள் மொத்தம் ஐந்து. அவற்றில் இரண்டான ஜலந்தர், பெரோஸ்பூர் ஜில்லாக்களில் முஸ்லிம் சதவிகிதம் 45·23

ஆகவும் 45·07 ஆகவும் இருக்கிறது. ஆகவே இந்த ஜில்லாக்களிலும் அவர்கள் சிறுபான்மையாகவே இருக்கின்ருர்கள். லீகின் லாகூர் தீர்மான இலக்கணத்திற்கு ஜலந்தர் டிவிஷன் ஒத்துவராது. ஆகவே முல்தான் ராவல்பிண்டி டிவிஷனைச் சேர்ந்த ஜில்லாக்களோடு இதுவும் போய்விடமுடியாது. மேலும் அவை லாகூர் டிவிஷனைச் சேர்ந்த ஜில்லாக்கள் குறுக்கிடுவதால் பிரிந்திருக்கின்றன.

அம்பாலா டிவிஷனில் முஸ்லிம்கள் 28.07 சதவிகிதம்தான் இருக்கிருர்கள். அந்த டிவிஷனிலுள்ள எந்த ஜில்லாவிலும் முஸ்லிம்கள் 33 56 சதவிகிதத்திற்குமேல் போகவில்லை. கர்கான் ஜில்லாவில்தான் அவர்களுடைய அதிகப்படி சதவிகிதம் 33.56 ஆக இருக்கின்றது. அந்த டிவிஷனில் இந்துக்களோ 66·01 சதவிகிதம் இருக்கின்ருர்கள். அவர்களுடைய அதிகபட்ச சதவிகிதம் 81·61 ஆக ராஹ்டாக் ஜில்லாவிலிருக்கிறது. அவர்களுடைய குறைந்தபட்ச சதவிகிதம் அம்பாலா ஜில்லாவில் 48·40 ஆக இருக்கிறது. ஆகவே லாகூர் தீர்மான விதிகளின்படி பார்ப்பதென்ருல் இந்த டிவிஷனே அல்லது அதைச் சேர்ந்த எந்த ஜில்லாவோ வடமேற்கு முஸ்லிம் சுதந்திர ராஜ்யத்தில் வந்து சேராது.

இப்பொழுது வடமேற்கு மண்டலம் முழுவதையும் அப்படியே கவனிப்போம். மேற்கண்ட பிரகாரம் விலக்கவேண்டிய நிலப்பரப்புகளை விலக்கி விட்டுப்பார்த்தால் நிலைமை இவ்வாருகும்:

அட்டவணை XIII

| மாகாணம் | மொத்த ஜனத்தொகை | முஸ்லிம் ஜனத்தொகை | முஸ்லிம் ஜனத்தொகையின் சதவிகிதம் |
|---|---|---|---|
| சிந்து | 45,35,008 | 32,08,325 | 70·75 |
| வ. மே. எ. புறம் | 30,38,067 | 27,88,797 | 91·79 |
| பலுசிஸ்தானம் | 5,01,631 | 4,38,930 | 87·51 |
| பஞ்சாப் (அம்பாலா, ஜலந்தர், டிவிஷன்களும், லாகூர் டிவிஷனில் அமிர்தசரஸ் ஜில்லாவும் நீங்கலாக) | 1,68,70,900 | 1,23,63,669 | 73·28 |
| வடமேற்கு மண்டலத்தின் மொத்தம். | 2,49,45,606 | 1,87,99,721 | 75·36 |

முஸ்லிமல்லாதவர்கள் மிக அதிகமாக இருக்கின்ற பகுதிகளை விலக்காது பஞ்சாபின் நிலைமை இவ்வாறு இருக்கும். அதாவது வடமேற்கு சுதந்திர ராஜ்யத்தில் உள்ள மொத்த ஜனத்தொகையான 3,64,93,525-ல் முஸ்லிம்கள் 2,26,53,294 அதாவது 62·07 சதவிகிதமாக இருப்பார்கள். இவ்வளவு சொற்ப முஸ்லிம் பெரும்பான்மை கொண்ட மண்டலத்தை உண்மையாகவே முஸ்லிம் மண்டலமென்று கூறலாமா?

## 2. கிழக்கு மண்டலம்

இப்போது கிழக்கு மண்டலப் பக்கம் திரும்பி வங்காளத்தைக் கவனிப்போம்.

# அட்டவணை XIV

| டிவிஷன் அல்லது ஜில்லா | விஸ்தீரணம் (ச. மைல்) | மொத்த ஜனத் தொகை | முஸ்லிம் கள் | இந்துக் கள் | இந்தியக் கிறிஸ்தவர் கள் | மலை ஜாதி யினர் | இதரர் |
|---|---|---|---|---|---|---|---|
| **பர்த்வான் டிவிஷன்** | | | | | | | |
| பர்த்வான் | 2,705 | 18,90,732 | 3,36,665 (17.81) | 13,93,820 (73.72) | 3,280 (0.17) | 1,51,355 (8.00) | 5,612 (0.30) |
| பீர்பம் | 1,743 | 10,48,317 | 2,87,310 (27.41) | 6,86,436 (65.48) | 344 (0.03) | 74,084 (7.07) | 143 (0.01) |
| பங்குரா | 2,646 | 12,89,640 | 55,564 (4.31) | 10,78,559 (83.63) | 1,216 (0.09) | 1,54,246 (11.97) | 55 (0.00) |
| மிட்னபூர் | 5,274 | 31,90,647 | 2,46,559 (7.73) | 26,81,963 (84.06) | 3,834 (0.12) | 2,53,625 (7.95) | 4,666 (0.14) |
| ஹூக்லி | 1,206 | 13,77,729 | 2,07,077 (15.03) | 10,99,544 (79.81) | 543 (0.04) | 69,500 (5.04) | 1,065 (0.08) |
| ஹௌரா | 561 | 14,90,304 | 2,96,325 (19.88) | 11,84,863 (79.50) | 994 (0.07) | 3,919 (0.26) | 4,203 (0.29) |
| மொத்தம் | 14,135 | 1,02,87,369 | 14,29,500 (13.90) | 81,25,185 (78.98) | 10,211 (0.10) | 7,06,729 (6.87) | 15,744 (0.15) |
| **பிரஸிடென்ஸி டிவிஷன்** | | | | | | | |
| 24 பர்கானு | 3,696 | 35,36,386 | 11,48,180 (32.47) | 23,09,996 (65.32) | 20,823 (0.59) | 51,085 (1.44) | 6,302 (0.18) |
| கல்கத்தா | 34 | 21,08,891 | 4,97,535 (23.59) | 15,31,512 (72.62) | 16,431 (0.78) | 1,688 (0.08) | 61,725 (2.93) |
| நாடியா | 2,879 | 17,59,846 | 10,78,007 (61.26) | 6,57,950 (37.38) | 10,749 (0.61) | 12,671 (0.72) | 469 (0.03) |
| முர்ஷிதா பாத் | 2,063 | 16,40,530 | 9,27,747 (56.55) | 6,84,987 (41.75) | 394 (0.02) | 26,138 (1.59) | 1,264 (0.08) |
| ஜெஸ்ஸூர் | 2,925 | 18,28,216 | 11,00.713 (60.21) | 7,21,079 (39.44) | 1,057 (0.06) | 4,978 (0.27) | 389 (0.02) |
| குல்னு | 4,805 | 19,43,218 | 9,59,172 (49.36) | 9,77,693 (50.31) | 3,538 (0.18) | 2,675 (0.14) | 140 (0.01) |
| மொத்தம் | 16,402 | 1,28,17,087 | 57,11,354 (44.56) | 68,83,217 (53.70) | 52,992 (0·41) | 99,235 (0.77) | 70,289 (0.55) |
| **ராஜஷாஹி டிவிஷன்** | | | | | | | |
| ராஜஷாஹி | 2,526 | 15,71,750 | 11,73,285 (74.64) | 3,29,230 (20.95) | 1,166 (0.07) | 67,298 (4.28) | 771 (0.05) |
| தினஜ்பூர் | 3,953 | 19.26,833 | 9,67,246 (50.20) | 7,74,622 (40.20) | 1,448 (0.08) | 1,82,892 (9.49) | 625 (0.03) |
| ஜல்பைகுரி | 3,050 | 10,89,513 | 2,51,460 (23.08) | 5,51,647 (50.63) | 2,589 (0.24) | 2,79,296 (25.63) | 4,521 (0.41) |
| டார்ஜிலிங் | 1,192 | 3,76,369 | 9,125 (2.42) | 1,78,496 (47.43) | 2,599 (0.69) | 1,41,301 (37.54) | 44.848 (11.92) |
| ரங்பூர் | 3,606 | 28,77,847 | 20,55,186 (71.41) | 8,02,849 (27.90) | 389 (0.01) | 18,200 (0.63) | 1,223 (0.04) |
| போக்ரா | 1,475 | 12,60,463 | 10,57,902 (83.93) | 1,87,532 (14.88) | 286 (0.02) | 14,387 (1·14) | 356 (0.03) |
| பாப்னு | 1,836 | 17,05,072 | 13,13,968 (77.06) | 3,83,755 (22.51) | 285 (0.02) | 6,906 (0.40) | 158 (0.01) |
| மால்டா | 2,004 | 12,32,618 | 6,99,945 (56.78) | 4,65,678 (37.78) | 466 (0.04) | 66,449 (5.39) | 80 (0.01) |
| மொத்தம் | 19,642 | 1,20,40,465 | 75,28,117 (62.52) | 36,73,809 (30.51) | 9,228 (0.08) | 7,76,729 (6.45) | 52,582 (0.44) |

டாக்கா டிவிஷன்

| டிவிஷன் அல்லது ஜில்லா | விஸ்தீரணம் (ச. மைல்) | மொத்த ஜனத் தொகை | முஸ்லிம்கள் | இந்துக்கள் | இந்தியக் கிறிஸ்தவர்கள் | மலை ஜாதியினர் | இதரர் |
|---|---|---|---|---|---|---|---|
| டாக்கா | 2,738 | 42,22,143 | 28,41,261 (67.29) | 13,60,132 (32.21) | 15,846 (0.38) | 4,029 (0.10) | 875 (0.02) |
| மைமன்சிங் | 6,156 | 60,23,758 | 46,64,548 (77.44) | 12,96,638 (21.52) | 2,322 (0.04) | 59,722 (0.99) | 528 (0.01) |
| பரித்பூர் | 2,821 | 28,88,803 | 18,71,336 (64.78) | 10,06,238 (34.83) | 9,549 (0.33) | 1,363 (0.05) | 317 (0.01) |
| பகர்கஞ்ச் | 3,783 | 35,49,010 | 25,67,027 (72.33) | 9,58,629 (27.01) | 9,357 (0.26) | 284 (0.01) | 13,713 (0.39) |
| மொத்தம் | 15,498 | 1,66,83,714 | 1,19,44,172 (71.59) | 46,21,637 (27.70) | 37,074 (0.22) | 65,398 (0.39) | 15,433 (0.09) |

சிட்டகாங் டிவிஷன்

| டிவிஷன் அல்லது ஜில்லா | விஸ்தீரணம் (ச. மைல்) | மொத்த ஜனத் தொகை | முஸ்லிம்கள் | இந்துக்கள் | இந்தியக் கிறிஸ்தவர்கள் | மலை ஜாதியினர் | இதரர் |
|---|---|---|---|---|---|---|---|
| திப்பேரா | 2,531 | 38,60,139 | 29,75,901 (77.09) | 8,79,960 (22.80) | 428 (0.01) | 1,524 (0.04) | 2,326 (0.06) |
| நவகாளி | 1,658 | 22,17,402 | 18,03,937 (81.35) | 4,12,261 (18.59) | 535 (0.02) | 34 (0.00) | 635 (0.03) |
| சிட்டகாங் | 2,569 | 21,53,296 | 16,05,183 (74.55) | 4,58,074 (21.27) | 395 (0.02) | 6,348 (0.29) | 83,296 (3.87) |
| சிட்டகாங் கு. பிர. | 5,007 | 2,47,053 | 7,270 (2.94) | 4,881 (1.98) | 60 (0.02) | 2,33,392 (94.47) | 1,450 (0.59) |
| மொத்தம் | 11,765 | 84,77,890 | 63,92,291 (75.40) | 17,55,176 (20.70) | 1,418 (0.02) | 2,41,298 (2.84) | 87,707 (1.03) |
| வங்காள மொத்தம் | 77,442 | 6,03,06,525 | 3,30,05,434 (54.73) | 2,50,59,024 (41.55) | 1,10,923 (0.18) | 18,89,389 (3.13) | 2,41,755 (0.40) |

வங்காளத்தில் முஸ்லிம், முஸ்லிம் அல்லாதார் பெரும்பான்மையாக உள்ள ஜில்லாக்கள்

| டிவிஷன் அல்லது ஜில்லா | விஸ்தீரணம் (ச.மை) | மொத்த ஜனத் தொகை | முஸ்லிம்கள் | இந்துக்கள் | இந்தியக் கிறிஸ்தவர்கள் | மலை ஜாதியினர் | இதரர் | முஸ்லிம் அல்லாதாரின் மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| நாடியா | 2,879 | 17,59,846 | 10,78,007 (61.26) | 6,57,950 (37.38) | 10,749 (0.61) | 12,671 (0.72) | 469 (0.03) | 6,81,839 (38.74) |
| முர்ஷிதாபாத் | 2,063 | 16,40,530 | 9,27,747 (56.55) | 6,84,987 (41.75) | 394 (0.02) | 26,138 (1.59) | 1,264 (0.08) | 7,12,783 (43.44) |
| ஜெஸ்ஸூர் | 2,925 | 18,28,216 | 11,00,713 (60.21) | 7,21,079 (39.44) | 1,057 (0.06) | 4,978 (0.27) | 389 (0.02) | 7,27,503 (39.79) |
| ராஜஷாஹி டிவி. (டார்ஜிலிங், ஜல்பை. நீங்கலாக) | 15,400 | 1,05,74,583 | 72,67,532 (68.72) | 29,43,666 (27.84) | 4,040 (0.04) | 3,56,132 (3.37) | 3,213 (0.03) | 33,07,051 (31.28) |
| டாக்கா டிவி. | 15,498 | 1,66,83,714 | 1,19,44,172 (71.59) | 46,21,637 (27.70) | 37,074 (0.22) | 65,398 (0.39) | 15,433 (0.09) | 47,39,542 (28.40) |
| சிட்டகாங் டிவி. | 11,765 | 84,77,890 | 63,92,291 (75.40) | 17,55,176 (20.70) | 1,418 (0.02) | 2,41,298 (2.84) | 87,707 (1.03) | 20,85,599 (24.59) |
| மொத்த முஸ்லிம் பெரும்பான்மை ஜில்லாக்கள் | 50,530 | 4,09,64,779 | 2,87,10,462 (70.09) | 1,13,84,495 (27.79) | 54,732 (0.13) | 7,06,615 (1.72) | 1,08,475 (0.26) | 1,22,54,317 (29.90) |

| டிவிஷன் அல்லது ஜில்லா | விஸ்தீரணம் (ச.மை) | மொத்த ஜனத் தொகை | முஸ்லிம்கள் | இந்துக்கள் | இந்தியக் கிறிஸ்த வர்கள் | மலை ஜாதியினர் | இதரர் | முஸ்லிம் அல்லாதாரின் மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| பர்த்வான் டிவி. | 14,135 | 1,02,87.369 | 14,29,500 (13.90) | 81,25,185 (78.98) | 10,211 (0,10) | 7,06,729 (6.87) | 15,744 (0.15) | 88,57,869 (86.10) |
| 24 பர்கானுக்கள் | 3,696 | 35,36,386 | 11,48,180 (32.47) | 23,09,996 (65.32) | 20,823 (0.59) | 51,085 (1.44) | 6,302 (0.18) | 23,88,206 (67.53) |
| கல்கத்தா | 34 | 21,08,891 | 4,97,535 (23.59) | 15,31,512 (72.62) | 16,431 (0.78) | 1,688 (0.08) | 61,725 (2.93) | 16,11,356 (76.41) |
| குல்னு | 4,805 | 19,43,218 | 9,59,172 (49.36) | 9,77,693 (50.31) | 3,538 (0.18) | 2,675 (0.14) | 140 (0.01) | 9,84,046 (50.64) |
| ஜல்பைகுரி | 3,050 | 10,89,513 | 2,51,460 (23.08) | 5,51,647 (50.63) | 2,589 (0.24) | 2,79,296 (25.63) | 4,521 (0.41) | 8,38,053 (76.91) |
| டார்ஜிலிங் | 1,192 | 3,76,369 | 9,125 (2.42) | 1,78,496 (47.43) | 2,599 (0.69) | 1,41,301 (37.54) | 44,848 (11.92) | 3,67,244 (97.58) |
| மொத்த முஸ்லிம் அல்லாதார் ஜில்லாக்கள் | 26,912 | 1,93,41,746 | 42,94,972 (22.21) | 1,36,74,529 (70.70) | 56,191 (0.29) | 11,82,774 (6.11) | 1,33,280 (0.69) | 1,50,46,774 (77.79) |

அட்டவணை பதினுன்கைப் பார்த்தால் பர்த்வான் டிவிஷனில் அதன் மொத்த ஜனத்தொகையில் முஸ்லிம்கள் 13·90 சதவிகிதத்திற்கு மேல் இல்லாததால் முஸ்லிம்கள் மிகச் சிறுபான்மையாக இருக்கிருர்கள் என்பது தெரிகிறது. அந்த டிவிஷனில் உள்ள எந்த ஜில்லாவிலும் உயர்ந்த சத விகிதம் 27·41-க்குமேல் போகவில்லை. மிகக் குறைந்த சதவிகிதம் 4.31. அந்த டிவிஷனிலுள்ள எந்தப் பகுதியிலும் முஸ்லிம் அல்லாதார் நிறைந்துள்ள ஜில்லாக்களே இருக்கின்றன. இந்த ஜில்லாக்கள் பீஹார், வங்காளம், ஒரிஸ்ஸாவைச் சேர்ந்தவை. பீர்பம், பர்த்வான் ஜில்லாக்களைச் சுற்றி ஒருபக்கம் முஸ்லிம் பெரும்பான்மையுள்ள ஜில்லாக்கள் இருக்கின்றன. ஆனுல் அவைகளைச் சுற்றிலும் மறுபக்கங்களிலும் முஸ்லிம் அல்லாத பெரும்பான்மையுள்ள ஜில்லாக்களே யிருக்கின்றன. ஆகவே பர்த்வான் டிவிஷன் லாகூர் தீர்மான நிபந்தனைகளை நிறைவேற்றுவதாயில்லை. ஆகவே இதைக் கிழக்கு முஸ்லிம் மண்டலத்தில் சேர்ப்பதற்குக் கேட்க முடியாது.

பிரசிடென்ஸி டிவிஷனும் கல்கத்தா உள்பட முஸ்லிம் சிறுபான்மையை உடையதாக இருக்கிறது. அவர்களுடைய சதவிகிதம் 44·56. இந்துக்களின் சத விகிதம் 53·70. ஆனுல் அதைச் சேர்ந்த சில ஜில்லாக்கள் முஸ்லிம் பெரும் பான்மை உடையனவாக இருக்கின்றன. அவைகளாவன: நாடியா, முர்ஷிதா பாத், ஜெஸ்ஸூர். அவைகளின் சதவிகிதம் முறையே 61·26, 56·55, 60·21. 24 பர்கானு ஜில்லாக்களிலும் குல்னுவிலும் அவர்களுடைய சதவிகிதம் 32·47-ம் 49·36-ம் ஆகும். அவைகளில் இந்துக்களின் சதவிகிதம் முறையே, 65·32-ம், 50·31-ம் ஆகும். கல்கத்தாவில் முஸ்லிம்கள் 23·59 சதவிகிதம்தான். அங்குள்ள மொத்த ஜனத்தொகையில் முஸ்லிம்கள் கால் பங்குக்கும் குறைவானவர்கள். இந்துக்களின் ஜனத்தொகையோ 72·62 ஆகும். ஜனத்தொகைக் காரணத்தைக் கொண்டு இந்த டிவிஷன் முஸ்லிம் மண்டலத்தில் சேரமுடியாது. ஜில்லாவாரி யாகப் பார்த்தாலும்கூட 24 பர்கானுக்கள், கல்கத்தா, குல்னு என்பவை அதில் சேரமுடியாது. கல்கத்தாவைப் பொறுத்தமட்டிலும்கூட அது மிகப்பெரும் பாலான முஸ்லிமல்லாத விஸ்திரணத்தால் சூழப்பட்டிருக்கின்றது. எல்லைகளை எப்படி மாற்றியமைத்துப் பார்த்தாலும் அதை முஸ்லிம் மண்டலமாக மாற்ற

முடியாது. இந்த டிவிஷனில் உள்ள எல்லா ஜில்லாக்களும் முஸ்லிம் அல்லாத ஜில்லாக்களையும் தொட்டு, அருகிலிருக்கின்றன. முஸ்லிம் பெரும்பான்மை ஜில்லாக்களையும் நெருங்கியிருக்கின்றன. கல்கத்தா மாத்திரம் எந்தப் பக்கத்திலும் முஸ்லிம் பிரதேசத்தை அடுத்திருக்கவில்லை.

ராஜஷாகி டிவிஷனில் ஜல்பைகுரி, டார்ஜிலிங் ஜில்லாக்கள் ஒரு சிறிய முஸ்லிம் சிறுபான்மையைக் கொண்டுள்ளன. அங்கு அவர்களுடைய சதவிகிதம் 23 08, 2·42. எல்லையோரத்தில் இருக்கின்ற தினுஜ்பூர் ஜில்லா 50·19 சதவிகித ஜனத்தொகையைத்தான் பெற்றிருக்கிறது. இந்த டிவிஷனைச் சேர்ந்த இதர ஜில்லாக்கள் முஸ்லிம் பெரும்பான்மை பெற்றிருக்கின்றன. போக்ரா ஜில்லாவில் அவர்களின் மிக உயர்ந்த சதவிகிதம் 83·93. மால்டா ஜில்லாவில் அவர்களுடைய குறைந்த சதவிகிதம் 56·78. சுருக்கமான முஸ்லிம் ஜனத்தொகையைக் கொண்ட ஜல்பைகுரி, டார்ஜிலிங் ஜில்லாக்களை முஸ்லிம் மண்டலங்கள் என்று சொல்வது நியாயமில்லை. 50 சதவிகித முஸ்லிம்களைக் கொண்ட தினுஜ்பூர் ஜில்லாவையும் முஸ்லிம் மண்டலம் என்று சொல்லிவிட முடியாது.

டாக்கா டிவிஷனுடைய நிலைமை வேறுபட்டது. இங்கு முஸ்லிம்கள் 71·59 சதவிகிதத்தினர். இந்த டிவிஷனிலுள்ள ஒவ்வொரு ஜில்லாவிலும் அவர்கள் பெரும்பான்மையாக இருக்கின்ருர்கள். அவர்களுடைய மிக உயர்ந்த சதவிகிதம் மைமன்சிங் ஜில்லாவில் 77·44 ஆக இருக்கின்றது. குறைந்த சதவிகிதம் பரீத்பூர் ஜில்லாவில் 64·78 ஆக இருக்கிறது.

இதேபோல சிட்டகாங் டிவிஷனில் முஸ்லிம்கள் பெரும்பான்மையினர். அவர்களுடைய சத விகிதம் 75·40. இந்த டிவிஷனிலுள்ள ஜில்லாக்களில் அவர்கள் பெரும்பான்மையினர். சிட்டகாங் குன்றுப் பிரதேசத்தில் மாத்திரம் 2·94 சத விகிதமாக இருக்கின்ருர்கள். குன்றுப் பிரதேசத்தில் மலை ஜாதியினரே 94·47 சத விகிதத்தினராக இருக்கிருர்கள்.

வங்காள மாகாணம் பூராவையும் இப்பொழுது இருக்கிறபடியே எடுத்துக்கொண்டால் அதிலுள்ள பர்த்வான், பிரசிடென்சி, ராஜஷாகி, டாக்கா, சிட்டகாங் ஆகிய ஐந்து டிவிஷன்களிலும் சேர்ந்து முஸ்லிம் ஜனத்தொகை 54·73 ஆக இருக்கின்றது. இப்படியிருக்க முஸ்லிம்கள் இதை ஒரு முஸ்லிம் மண்டலம் என்று கூறமுடியாது. சுதந்திர அந்தஸ்துள்ள தனி முஸ்லிம் ராஜ்யத்திற்காக இதைக் கேட்கமுடியாது. பிரதிநிதித்வ முறையிலமைந்த எந்த அரசாங்கமும் இந்த ராஜ்யத்தில் நிலைத்திருக்கமுடியாது. எவ்வளவோ காலத்திற்கு முன்தொட்டு ஒன்ருக இருந்த நிலப்பரப்பை இந்தியாவின் இதர பாகங்களிலிருந்து பிரித்துவிட வேண்டுமென்கின்ற அடிப்படையான விஷயத்தில் 54·73 சத விகிதத்திய ஜனத்தொகை மற்றவர்கள்மீது தங்களது இஷ்டத்தை வற்புறுத்தவேண்டும் என்பதற்கு என்ன நியாயம் இருக்கின்றது?

இப்பொழுது ஜில்லாக்களைப்பற்றிக் கவனிப்போமாஞல் பர்த்வான் டிவிஷனில் உள்ள ஜில்லாக்களை முஸ்லிம் மண்டத்திலிருந்து விலக்கிவிட வேண்டியதிருக்கும். 24 பர்கானு, குல்னு ஜில்லாக்களையும், பிரசிடென்சி டிவிஷனிலுள்ள கல்கத்தாவையும் விலக்க வேண்டியதிருக்கும். முஸ்லிம் அல்லாத பெரும்பான்மை அதிகமுள்ள ஜல்பைகுரி, டார்ஜிலிங் ஜில்லாக்களையும் விலக்க வேண்டியதிருக்கும். தினுஜ்பூர் ஜில்லாவை முஸ்லிம்களும் முஸ்லிமல்லாதவர்களும் சம உரிமையோடு தமக்கு வேண்டுமென்று கோரலாம். லாகூர் தீர்மானத்தின் அர்த்தத்தின்படி ராஜஷாகி டிவிஷனிலுள்ள இதர

ஜில்லாக்கள், டாக்காவிலுள்ள ஜில்லாக்கள், பறம்புநாடு தவிர்த்த சிட்டகாங் டிவிஷனிலுள்ள ஜில்லாக்கள் யாவும் முஸ்லிம் பெரும்பான்மை பெற்றிருப்பதால் முஸ்லிம் மண்டலத்தைச் சேர்ந்ததென்று கூறக்கூடும்.

சந்தேக நிலையிலுள்ள தினஜ்பூர் ஜில்லாவையும் சிட்டகாங் பறம்பு நாட்டையும் முஸ்லிம் மண்டலத்திற்குக் கொடுத்து விட்டால், வங்காளத்திலுள்ள முஸ்லிமல்லாத ஜில்லாக்களின் நிலைமையும் முஸ்லிம் ஜில்லாக்களின் நிலைமையும் அட்டவணை XIV-ல் காட்டியதுபோல இருக்கும்.

முஸ்லிம் மண்டலத்திலிருந்து தினஜ்பூர் ஜில்லாவையும் சிட்டகாங் பறம்பு நாட்டையும் நீக்கிவிட்டால் இரண்டு மண்டலங்களின் நிலைமையும் ஓரளவுக்கு மாறுதல் பெறும்.

மேலே காட்டிய பிரகாரம் முஸ்லிம் மண்டலத்தில் முஸ்லிம்கள் 70·09 சத விகிதமும், இந்துக்கள் 27·70 சத விகிதமும், மலை ஜாதியினர் 1·72 சத விகிதமும் இருப்பார்கள். முஸ்லிம் அல்லாத மண்டலத்தில் இந்துக்களுடைய நிலைமை 70·70 சத விகிதமாக இருக்கும். அதாவது முஸ்லிம் மண்டலத்திலுள்ள முஸ்லிம்களைக் காட்டிலும் சற்று அதிகமாக இருக்கும். முஸ்லிம்கள் 22·21 சத விகிதமாக இருப்பார்கள். அதாவது முஸ்லிம் மண்டலத்திலுள்ள இந்துக்களுக்கும் குறைவாயிருப்பார்கள். மலை ஜாதியினர் அங்கு 6·11 சத விகிதத்தினராக இருப்பார்கள். மாகாணத்தின் மொத்த ஜனத்தொகையில் மலை ஜாதியினரின் தொகை 18,89,389 அல்லது 3·13 சத விகிதமாகும். அவர்களுடைய நிலைமையைத் தனியாக ஆராயவேண்டி யிருக்கிறது. அஸ்ஸாமின் புள்ளி விவரங்களைப்பற்றிப் பேசும்பொழுது அதைப்பற்றிச் சொல்லுகிறேன். ஏன் என்ருல் வங்காளத்தைக் காட்டிலும் அஸ்ஸாமில் அவர்களது பிரசினை முதன்மையாக இருக்கின்றது. இதே கொள்கையோடுதான் அங்கும் போரிட வேண்டி யிருக்கிறது.

இப்பொழுது அஸ்ஸாமின் நிலைமையைக் கவனிப்போம்:

## அட்டவணை XV

| டிவிஷன் அல்லது ஜில்லா | விஸ்தீரணம் (ச.மை) | மொத்த ஜனத் தொகை | முஸ்லிம்கள் | இந்துக்கள் | கிறிஸ்தவர்கள் | மலைஜாதியினர் | இதரர் |
|---|---|---|---|---|---|---|---|
| **சூர்மா பள்ளத்தாக்கு & மலை டிவிஷன்** | | | | | | | |
| கச்சார் | 3,862 | 6,41,181 | 2,32,950<br>(36.33) | 2,25,816<br>(35.22) | 3,979<br>(0.62) | 1,78,264<br>(27.80) | 172<br>(0.03) |
| சில்ஹட் | 5,478 | 31,16,602 | 18,92,117<br>(60.71) | 11,49,514<br>(36.88) | 3,055<br>(0.09) | 69,907<br>(2.24) | 2,009<br>(0.06) |
| காஷி & ஜெய்ந்தியா மலைகள் | 2,353 | 1,18,665 | 1,555<br>(1.31) | 12,739<br>(10.74) | 424<br>(0.36) | 1,03,567<br>(87.27) | 380<br>(0.32) |
| நாகமலைகள் | 4,289 | 1,89,641 | 531<br>(0.28) | 4,198<br>(2.21) | 30<br>(0.02) | 1,84,766<br>(97.43) | 116<br>(0.06) |
| லூஷாய் மலைகள் | 8,142 | 1,52,786 | 101<br>(0.06) | 2,447<br>(1.60) | 51<br>(0.03) | 1,47,042<br>(96.24) | 3,145<br>(2.06) |
| மொத்தம் | 24,124 | 42,18,875 | 21,27,254<br>(50.42) | 13,94,714<br>(33.06) | 7,539<br>(0.18) | 6,83,546<br>(16.20) | 5,822<br>(0.14) |

அஸ்ஸாம் பள்ளத்தாக்கு டிவிஷன்

| டிவிஷன் அல்லது ஜில்லா | விஸ்தீரணம் (ச.மை) | மொத்த ஜனத் தொகை | முஸ்லிம்கள் | இந்துக்கள் | கிறிஸ்தவர்கள் | மலை ஜாதியினர் | இதரர் |
|---|---|---|---|---|---|---|---|
| கோல்பாரா | 3,969 | 10,14,285 | 4,68,924 (46.23) | 3,06,223 (30.19) | 285 (0.03) | 2,37,993 (23.46) | 860 (0.08) |
| காமரூபம் | 3,840 | 12,64,200 | 3,67,522 (29.07) | 6,96,549 (55.09) | 1,168 (0.09) | 1,97,926 (15.65) | 1,035 (0.08) |
| டர்ராங் | 2,804 | 7,36,791 | 1,20,995 (16.42) | 3,47,758 (47.19) | 6,643 (0.90) | 2,60,748 (35.38) | 647 (0.09) |
| நௌகாங் | 3,898 | 7,10,800 | 2,50,113 (35.18) | 2,88,351 (40.56) | 4,147 (0.58) | 1,66,525 (23.42) | 1,664 (0.23) |
| சிபசாகர் | 5,128 | 10,74,741 | 51,769 (4.81) | 6,43,191 (59.84) | 15,707 (1.46) | 3,60,768 (33.56) | 3,306 (0.31) |
| லக்கிம்பூர் | 4,156 | 8,94,842 | 44,579 (4.98) | 5,01,036 (55.98) | 4,745 (0.53) | 3,35,230 (37.46) | 9,252 (1.03) |
| காரோமலைகள் | 3,152 | 2,23,569 | 10,398 (4.65) | 14,307 (6.39) | 29 (0.01) | 1,98,474 (88.77) | 361 (0.16) |
| மொத்தம் | 26,947 | 59,19,228 | 13,14,300 (22.12) | 27,97,415 (47.26) | 32,724 (0.55) | 17,57,664 (29.74) | 17,125 (0.29) |
| சாடியா எல்லைப் பிரதேசம் | 3,309 | 60,118 | 864 (1.43) | 18,506 (30.78) | 516 (0.86) | 39,974 (66.49) | 258 (0.43) |
| பாலிபாரா எல்லைப் பிரதேசம் | 571 | 6,512 | 61 (0.94) | 2,588 (39.74) | 31 (0.48) | 3,812 (58.53) | 20 (0.31) |
| மொத்த அஸ்ஸாம் | 54,951 | 1,02,04,733 | 34,42,479 (33.73) | 42,13,223 (41.29) | 40,810 (0.40) | 24,84,996 (24.35) | 23,225 (0.23) |

## அட்டவணை XVI

அஸ்ஸாமில் முஸ்லிம் முஸ்லிம் அல்லாதார் பெரும்பான்மையாக உள்ள ஜில்லாக்கள்

| டிவிஷன் அல்லது ஜில்லா | விஸ்தீரணம் (சதுர மைல்) | மொத்த ஜனத் தெகை | முஸ்லிம்கள் | இந்துக்கள் | கிறிஸ்தவர்கள் | மலை ஜாதியினர் | இதரர் | முஸ்லிம் அல்லாதார் மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| முஸ்லிம் பெரும்பான்மை ஜில்லாக்கள் | | | | | | | | |
| சில்ஹட் | 5,478 | 31,16,602 | 18,92,117 (60.71) | 11,49,514 (36.88) | 3,055 (0.09) | 69,907 (2.24) | 2,009 (0.06) | 12,24,485 (39.27) |
| முஸ்லிம் அல்லாதார் பெரும்பான்மை ஜில்லாக்கள் | | | | | | | | |
| சில்ஹட் நீங்கலாக அஸ்ஸாம்முழுமையும் | 49,473 | 70,88,131 | 15,50,362 (21.87) | 30,63,709 (43.22) | 37,755 (0.53) | 24,15,089 (34.07) | 21,216 (0.30) | 55,37,769 (78.13) |

மேற்கண்ட அட்டவணைகளைக் கவனிக்குமிடத்து அஸ்ஸாம் மாகாணத்தை எந்த ஆதாரம் கொண்டு முஸ்லிம் மண்டலத்தில் சேர்க்க விரும்புகிறார்கள் என்பது தெரியவில்லை. அந்த மாகாணம் பூராவையும் கவனித்தால் முஸ்லிம்கள் 33·73 சதவிகிதமும் இந்துக்கள் 41·29 சத விகிதமும் இருக்கிறார்கள். ஜில்லாக்களைக் கவனித்தோமானால் சில்ஹட் ஜில்லாவில்தான் முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கின்றார்கள். வேறு எந்த ஜில்லாவிலும் அவர்கள்

பெரும்பான்மையாக இருக்கவில்லை. கச்சார், கோல்பாரா ஜில்லாக்களில் ஒரே தனி யினமாக மிக அதிகமாக அவர்கள் இருந்தபோதிலும் அங்கு முறையே 36·33 சத விகிதமாகவும் 46·23 சத விகிதமாகவும் இருக்கின்றுர்கள். முஸ்லிம் மண்டலமென்று நியாயமாகக் கூறிக்கொள்ளக்கூடிய ஜில்லா சில்ஹட்தான். அப்படி யிருந்தாலும் அங்குள்ள 60·71 சத விகிதத்தை அபரி மிதமான பெரும்பான்மை என்று சொல்லிவிட முடியாது. சில சிறு ஜில்லாக் களில் பூர்வகுடிகள் அபரிமிதமான பெரும்பான்மையாக இருக்கின்றுர்கள். மற்றும் சில ஜில்லாக்களில் இந்துக்கள் மாத்திரம் பெரும்பான்மையாகா விட் டாலும் இந்துக்களும் பூர்வகுடிகளும் சேர்ந்து பெரும்பான்மை யாகிறுர்கள். அந்த மாகாணத்தில் மொத்தம் 14 ஜில்லாக்கள் இருக்கின்றன. அதில் 8 ஜில்லாக்களில் முஸ்லிம்கள் 5 சத விகிதத்துக்கும் குறைவாக இருக்கிறுர்கள். மூன்று ஜில்லாக்களில் 1 சத விகிதத்துக்கும் குறைவு. எண்ணிக்கையில் தாங்கள் அதிகமாக இருக்கின்ற பிரதேசத்தையே முஸ்லிம் லீக் உரிமை கொண் டாடுகிறது. அப்படியுண்டானுல் அவ்வாறு எண்ணிக்கையில் அதிகமாக இல்லாத இடத்தையும் தனக்குக் கேட்டுக்கொண் டிருக்க முடியாது. அந்த இடத்தில் ஒரு தனியினமாகப் பார்க்கும்பொழுது அவர்கள் அதிகமாக இருக்கலாம். ஆனுல் பிற இனத்தாரோடு சேர்ந்தபோது மட்டும் பெரும் பான்மையாகிக் கொண்டு நாங்கள் பெரும்பான்மையாக இருக்கிறேம் என்று கூறி அப்பிரதேசத்தைக் கோரமுடியாது. இந்த மாதிரி வகையில் இருந்து கொண்டு வேறு எந்த வகுப்பும் இந்தியாவிலிருந்து பிரிந்துபோகும் உரிமையைக் கேட்கவில்லை. மற்றவர்கள் இத்தகைய பிரிவினையை எதிர்த்து வந்திருக்கிறுர் கள். ஆகவே முஸ்லிம் பெரும்பான்மை என்ற ஒரே காரணத்தைக் கொண்டு தான் முஸ்லிம் லீக் இத்தகைய உரிமையைக் கொண்டாடலாமே தவிர இதர இனங்களையும் சேர்த்துக் கொண்டல்ல.

இது சம்பந்தமாக பூர்வகுடிகளின் நிலைமையைக் கவனிப்பது அவசிய மாகும். இனப்பிரிவினை செய்யும்போது மதத்தை ஆதாரமாக வைத்துக் கொள்ளாமல் பூர்வகுடிகள் என்று தனியினத்தைப் பிரித்ததால் இந்துக்களின் தொகை குறைக்கப்பட் டிருக்கிறதென்பதை அட்டவணை XVII காட்டும். அந்த மாகாணத்தில் முஸ்லிம்களின் தொகை எவ்வாறு அதிகப்படுத்தப்பட் டிருக்கிறது என்பதையும் காண்போம்.

### அட்டவணை XVII

**1901, 1911, 1921, 1931, 1941–ம் வருடத்திய ஜனக் கணக்கில் முக்கிய இனங்களின் ஸ்தானம்**

| மாகாணம் | மொத்த ஜனத் தொகை | இந்துக்கள் | | | | | முஸ்லிம்கள் | | | | | மலை ஜாதியினர் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1941 | 1941 | 1931 | 1921 | 1911 | 1901 | 1941 | 1931 | 1921 | 1911 | 1901 | 1941 | 1931 | 1921 | 1911 | 1901 |
| பிரிட்டிஷ் அஸ்ஸாம் | 1,02,04,733 | 4129 | 5720 | 5433 | 5418 | 5578 | 3373 | 3196 | 2896 | 2810 | 2689 | 2435 | 825 | 1479 | 1652 | 1652 |
| அஸ்ஸாம் சமஸ்தானம் | 7,25,655 | 4516 | 4362 | 5994 | 5816 | 5996 | 436 | 393 | 455 | 419 | 365 | 4674 | 4491 | 3433 | 3758 | 3632 |
| மொத்த அஸ் ஸாம் | 1,09,30,388 | 4154 | 5628 | 5461 | 5438 | 5598 | 3178 | 3007 | 2778 | 2693 | 2581 | 2584 | 1073 | 1573 | 1755 | 1744 |

பிரிட்டிஷ் அஸ்ஸாமில் 1931-ல் 57·20 சத விகிதம் ஆக இருந்த இந்து ஜனத்தொகை 1941-ல் 41·29 சத விகிதம் ஆகக் குறைந்து விட்டது என்பதையும் அஸ்ஸாம் முழுவதிலும் சுதேச ராஜ்யங்களையும் சேர்த்து 56·28 சத விகிதத்தி

லிருந்து 41·54க்குக் குறைந்து விட்டதென்பதையும் கவனித்தாக வேண்டும். பூர்வகுடிகளின் ஜனத்தொகையே பிரிட்டிஷ் அஸ்ஸாமில் 8·25 சதவிகிதத்தி லிருந்து 24·35 சத விகிதத்திற்கு உயர்ந்திருக்கிறது; அஸ்ஸாம் மாகாணம் முழு வதையும் கவனித்தால் அந்த ஜனத்தொகை 1931, 1941 ஜனக் கணக்குகளுக் கிடையே 10·73 சத விகிதத்திலிருந்து 25·84 சத விகிதத்திற்கு உயர்ந்திருக் கிறது. 1941-ல் அஸ்ஸாம் ஜனக்கணக்கு வேலைகளுக்கு சூபரின்டென் டாக இருந்த திரு. கே. டபிள்யூ. பி. மாரார், ஐ. சி. எஸ். இவ்வளவு திடீரென்று பெரிய வித்தியாசம் ஏற்படுவதற்குக் காரணத்தைக் கீழ்க்கண்ட வாறு விளக்குகிறார்:

'இந்த அட்டவணை இனத்தன்மையின் ஆரம்பத்தைக் காட்டுகிறதே ஒழிய மத நிலையைக் காட்டவில்லை என்பது முக்கிய விஷயம். போதிய கால மும் பொருளாதாரமும் இருந்திருந்தால் 1931-ம் வருஷத்து விவரங்களோடு நன்றாகப் பொருந்தும்படியான இதர விவரங்களையும் கொடுத்திருக்கக்கூடும். இச் சுருங்கிய ஜனக்கணக்கில் இது சாத்தியமாக இல்லை. இனமும் மதமும் ஒன்றுதான் என்றும், ஒரே மாதிரியானவை என்றும் நினைக்கக்கூடும். பெரும் பாலும் அப்படி நினைக்க இடமுண்டு. ஆனால் பூர்வகுடிகள் இருக்கின்ற இடங்களில் இனம் மதம் இரண்டும் ஒன்றாகவே இருக்கவேண்டிய அவசியம் இல்லை. இந்த ஜனக்கணக்கில் அவர்கள் எல்லாம் மதத்தின் அடிப்படையாகத் தொகுக்கப்படாமல் இன அடிப்படையில்தான் தொகுக்கப்பட் டிருக்கிறார்கள். காஷி என்ற இனத்தைச் சேர்ந்தவன் முந்தின ஜனக்கணக்கில் தன்னை இந்து என்று சொல்லியிருந்தால் இந்துக்களோடு சேர்க்கப்பட்டிருப்பான். அல்லது கிறிஸ்தவன், முஸ்லிம், இயற்கைவாதி என்று சொல்லியிருந்தால் அந்தந்த மதப் பிரிவினையில்தான் சேர்க்கப்பட்டிருப்பான். ஆனால் இந்தத் தடவை அவன் எந்த மதத்தைச் சேர்ந்திருந்தாலும் மதப் பிரிவினையில் சேர்க்காமல் இனப்பிரிவு ஒன்றையே கருதி காஷி என்ற இனத்தில் சேர்க்கப்பட்டிருப்பான். கிறிஸ்தவ ஜனத்தொகையிலும், ஓரளவு இந்து, புத்த ஜனத்தொகைகளிலும் குறைவு ஏற்பட்டதற்கு முக்கிய காரணம் இதுவேயாகும். இதே சமயத்தில் பூர்வகுடிகளின் இன விருத்தியும் அதிகமாகவே இருந்திருக்கின்றது......மேற் சொன்ன விவரங்களை மனத்தில் வைத்துக்கொண்டு ஜனக்கணக்குப் புள்ளி களைப் பார்த்தால் அதில் ஆபத்தை உண்டாக்கும் நோக்கங்கள் மறைந்து கிடக்கின்றன என்று சொல்லமுடியாது. எல்லா வகுப்புக்களும் வெவ்வேறு வித அளவில் இனப்பெருக்கம் இயற்கையாகப் பெற்றிருக்கின்றன. எந்த ஜில்லாவிலும் இதற்கு முன்பிருந்ததைக் காட்டிலும் இனவாரி விகிதம் பெரிதும் மாறுதலடையவில்லை. வெளியிலிருந்து சிலர் குடியேறியதால் தான் இனவாரி விகிதம் மாறுதல் அடைந்திருக்கிறது.

'இந்துக்களையோ கிறிஸ்தவர்களையோ இடம்விட்டு இடம் குடியேறச் செய்வது என்ற பேச்சுக்கிடையாது. கிறிஸ்தவர்களைப்பற்றி ஒரு தனிக் குறிப்பு பின்னால் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது இந்துக்கள் பழைய விகிதத்திலிருக்கின்றனர். அஸ்ஸாமில் பூர்வகுடிகளின் எண்ணிக்கை முக்கிய மானது. அவர்களுக்கென்று அஸ்ஸாமில் பரந்த நிலப்பரப்புகள் ஒதுக்கப் பட்டிருக்கின்றன. 1931-ம் வருடத்திய முறையைப் பின்பற்றி ஜாதிவாரி யாகவோ மத வாரியாகவோ பிரிக்கப்பட்டிருந்தால் பூர்வகுடிகள் எத்தனை பேர் என்பதைக் கண்டுபிடிக்க முடியாது. அவர்களுக்கென்று தனி நிலங்கள் ஒதுக்கப்படுவதற்குக் காரணம் இல்லாமல் போய்விடும்.'[7]

7. *Census of India*, 1941, Vol. IX—*Assam*, Tables, pp. 21-2.

அவர்களுடைய மதத்தையும் அதே சமயத்தில் பதிந்திருந்தால் பூர்வ குடிகளைத் தனியாகக் கணக்கெடுத்துப் பதிவதைப்பற்றித் தகராறு செய்ய வேண்டிய அவசியமில்லை. ஜனக் கணக்கு சூபரின்டென்ட், 'இந்துக்கள் முன்பு போலவே பழைய விகிதத்திலே இருக்கிறார்கள்' என்று கூறுகிறார். ஆனால் அவர்களுடைய தொகையையும், தாரதம்யத்தையும் காட்டுகிற அட்டவணைகளை மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் அது முற்றிலும் தவறான, குழப்பந் தரக்கூடிய நிலைமையைக் காட்டுகிறது. கிறிஸ்தவர்களுடைய தொகையிலும் இந்துக்களுடைய தொகையிலும் பெரிதும் குறைவேற்பட்டிருப்பதற்குரிய காரணங்களைச் சொல்லிவிட்டு அதே சமயத்தில் இந்தக் குறைபாடுள்ள 1941-ம் வருடத்து ஜனக்கணக்கிலும் கிறிஸ்தவர்களின் தொகை என்ன என்பதைக் கணக்கெடுக்க வெகு சிரமப்பட்டிருக்கிறார். பிரிட்டிஷ் அஸ்ஸாமிலும் சுதேச சமஸ்தானங்களிலும் சேர்ந்து கிறிஸ்தவர்களின் தொகை 3,86,000 எனச் சொல்லுகிறார். ஆனால் பதிந்திருக்கிற தொகையோ 67,184-க்கு மேல் இல்லை. மீதி 3,19,000, பூர்வ குடிகளைச் சேர்ந்த கிறிஸ்தவர்களின் உத்தேசமான தொகையே. இந்த உத்தேசிக்கப்பட்ட தொகையும் 1931-ம் வருஷத்துப் புள்ளிகளைக் கொண்டு தயார் செய்ததாகும். இவ்விதமாக மாகாணத்திலுள்ள கிறிஸ்தவர்களின் தொகையைச் சற்று ஏறத்தாழச் சரியாகக்குறிப்பிட்டு, இந்துக்களுடைய தொகையை மாத்திரம் சரியாகக் குறிப்பிடவில்லை. 'அவர்களுடைய தொகை பழைய விகிதத்திலேயே இருக்கிறது' என்று கூறும் குறிப்புத் தவிர வேறொன்றும் காணோம்.

1941-ல் இந்தியாவிற்கு ஜனக் கணக்கு கமிஷனராக இருந்த திரு. எம். டபிள்யு. எம். ஈட்ஸ், ஸி ஐ.இ., ஐ.ஸி.எஸ்., 1941-ம் வருஷத்து ஜனக் கணக்கில் புகுத்திய மாறுதல்களின் அவசியத்தைப்பற்றி விளக்கப் புகுந்து பூர்வீகக் குடிகளை மதவாரியாகக் குறிப்பிடாமல் இனவாரியாகக் குறித்ததன் காரணத்தை விளக்குகிறார் :—'இஸ்லாம் மதம் கிறிஸ்து மதம் ஆகிய இரண்டுக்கும் இதர மதங்களுக்குமிடையே சுவரோ அல்லது வேலியோ போன்று ஒரு தடை இருப்பதாகத் தோன்றுகின்றது. அதை ஊடுருவியோ அல்லது கடந்தோதான் மதம் மாறுகிறவன் செல்ல வேண்டும். ஆனால் தெளிவற்ற நிலைமையில் கூறப்படும் இயற்கை வாதத்திற்கும் அதேபோல திட்டமற்றதாகத் தோன்றக்கூடிய இந்து மதத்திற்கும் இடையே மிகப் பரந்த தரிசு இருப்பதாகத் தெரிகிறது. ஒரு பூர்வ குடியினன் இந்து மதத்தில் சேர்க்கப்படும் விதம் மதமாற்றத்தினால் இல்லை; சில கொள்கைகளை ஏற்றுக் கொள்வதினாலும் இல்லை; அல்லது ஜனத் தொகையில் ஒரு குறிப்பிட்ட இனத்தைச் சேர்ப்பதினாலும் இல்லை; இந்தப் பரந்த தரிசைக் கடந்து செல்லுகின்ற ஒரேவகையினால்தான் ஒரு பூர்வ குடியினன் இந்துவாக முடியும் இந்தப் பயணம் ஒரு தலைமுறையில் முடியவும் கூடும். பொதுவாக அப்படித்தான் ஆகிறது. எப்பொழுது, எந்தத் தலைமுறையில் பாதிக்கு மேலாக அந்தத் தரிசு நிலத்தைக்கடந்தாகி விட்டது என்று கண்டு பிடித்துச் சொல்வதற்கு ஒரு நிபுணன் வேண்டும். அதாவது இந்துவாக மாறுகின்ற காரியம் பாதிக்குமேல் ஆகிவிட்டதா என்பதைக் கண்டறிந்து சொல்வதற்கு நிபுணன்தான் வேண்டும். ஆகவே இதை மனத்தில் வைத்துக்கொண்டு தான் இனவாரி அட்டவணைகளையும் இனவாரி விகிதத்தைக் காட்டும் அட்டவணைகளையும் ஆராய வேண்டும். இவ்விதமாகப் பார்த்தால் பிரிட்டிஷ் இந்தியாவில் மொத்த ஜனத்தொகையில் இந்துக்கள் 64½ சத விகிதத்தினர். முஸ்லிம்கள் 27 சத விகிதம். இந்தியக் கிறிஸ்தவர்கள் 1 சத விகிதம். பூர்வகுடிகள்

5½ சத விகிதம். மத அடிப்படையில் பார்த்தால் இந்த 5½ சத விகிதத்தில் கிட்டத்தட்ட 20-ல் ஒரு பாகம் கிறிஸ்தவ மதத்தைச் சேரும். மற்றதெல்லாம் கிட்டத்தட்ட இந்துப் பெரும்பான்மையைச் சேர்ந்ததாகவே கூறலாம். ஒரு கோடியில் உள்ளவர்களிடம் அந்தப் பூர்வீக வாழ்க்கை முறையே இருந்து வருகிறது. இன்னொரு கோடியில் உள்ளவர்கள் கிட்டத்தட்ட இந்துக்கள் ஆகியதாகக் காணப்படுகிறது. இதற்கிடையில் உள்ள ஜனங்கள் இந்துவாக மாறுகின்ற போக்கில் ஏற்படும் பலதரப்பட்ட நிலைமையிலும் இருக்கிறார்கள். இந்த நிலைமை ஒவ்வொரு மாகாணத்திலும் ஒவ்வொரு ராஜ்யத்திலும் வித்தியாசப்படலாம். நிலைமை நான் ஏற்கெனவே கூறியதைப்போல அவ்வவ்விடத்தில் மதிப்புப் போடுவதையும் பொறுத்திருக்கின்றது.' [8]

மேலும் 'பூர்வ குடிகளைத் தனியாகப் பிரித்து ஒதுக்கியதை விட்டு விட்டால், வங்காளத்திலுள்ள இந்து முஸ்லிம்களின் ஜனத்தொகை தாரதம்யம் 1931-லிருந்ததுபோல, மாறுதல் அடையாமல் இருந்திருக்கிறது என்றே கூறலாம்......பீஹார், மத்திய மாகாணங்கள், அஸ்ஸாம் முதலிய மாகாணங்களின் புள்ளி விவரங்கள், பூர்வ குடிகளைத் தனியாகப் பிரித்திருக்கிற விஷயத்தையும் பூர்வ குடிகள் குறிப்பிடத்தக்க முறையில் இந்துக்கள் ஆகிற விஷயத்தையும் வெளிப்படுத்துகின்றன. ஆனால் 1931-ம் வருஷப்படி மதவாரியாக ஜனங்களைப் பிரித்திருந்தால் இந்துக்களுடைய ஜனத் தொகையில் மிகக் கொஞ்சமாகவே குறைவு ஏற்பட்டிருக்கும்.' [9]

இதர மதத்தினரோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் பூர்வகுடிகளுக்கும் இந்துக்களுக்கும் பல விஷயங்களில் ஒற்றுமையிருப்பதைப்போல வேறு எந்த இனத்தவருள்ளும் ஒற்றுமையில்லை என்பது விளங்கும். இது, இவ்விஷயமாக நன்கு ஆராய்ச்சி செய்த நிபுணர்களின் அபிப்பிராயம். பூர்வகுடிகள் இந்துக்களாகிக் கொண்டிருக்கும் காரியமும் எவ்வளவோ காலத்திற்குமுன் தொன்று தொட்டு நடந்து கொண்டே வந்திருக்கிறது. நூற்றுக்கணக்கான வருஷங்களாகவும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகவும் மிகப் பெருந் தொகையினர் இந்துக்களாகிக் கொண்டு வந்திருக்கிறார்கள். அதுவும் தங்களுடைய தொன்மையான பழக்கங்களைவிட்டு திடீர் புரட்சியினால் மாறாது மெதுவாக, அமைதியாக மாறியிருக்கிறார்கள். ஆகவே அவர்களை இந்துக்களோடுதான் சேர்த்துக் கணக்கெடுத்திருக்க வேண்டும். 1941-ம் வருஷத்துக்கு முந்தின ஜனக்கணக்கில் செய்ததுபோல, தங்களை இந்துக்கள் என்று சொல்லிக்கொண்ட பூர்வீக குடிகளையாவது இந்துக்களோடு சேர்த்துப் பதிந்திருக்க வேண்டும்.

திரு. வெரியர் எல்வின், எம்.ஏ. (ஆக்சன்), எப்.ஆர்.ஏ.ஐ., எப்.என்.ஐ., மத்திய மாகாணங்களில் அனேக ஆண்டுகளாக பூர்வகுடிகளின் மத்தியிலே வாழ்ந்து அவர்களுடைய பழக்க வழக்கங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்து வந்தவர். 1944 ஜனவரியில் டில்லியில் இந்திய விஞ்ஞான காங்கிரஸின் 31-வது கூட்டம் நடைபெற்றது. அதில் மனித பரிணாம ஆராய்ச்சி, புராதனப் பொருள் ஆராய்ச்சி என்ற இரண்டு பிரிவுகளுக்கும் தலைவராகத் திரு. வெரியர் எல்வின் இருந்தார். தமது தலைமைப் பிரசங்கத்திற்கு 'மானிட பரிணாம உண்மை' என்னும் பொருளை எடுத்துக் கொண்டார். 'நாம் மேற்கொள்ளும் எல்லா அடிப்படை வேலையிலும் கலப்பற்ற உண்மையைக் கடைப்பிடிக்க வேண்டும். அப்பொழுதுதான் இந்தியாவின் மானிட பரிணாம ஆராய்ச்சி வேலை நிலைபெற்

8. *Census of India*, 1941, Vol. I—*India*, pp. 28-9.
9. *Ibid.* p. 30.

றிருக்கும்' என்று கூறினர். அவர் மேலும் கூறியதாவது :—'இதை வற் புறுத்த வேண்டியது அவசியமாகிறது. ஏன் எனில், இந்த நாட்டில் மானிட ஆராய்ச்சியைச் சந்தேகக் கண்ணுேடே பார்க்கிருர்கள். இதற்குப் பல காரணங் கள் இருக்கின்றன. ஜனக்கணக்கு எடுக்கும்பொழுது, படித்தவர்களும், அர சியல்வாதிகளும் ஆதிக் குடிகளை இந்து இனத்திலிருந்து பிரிப்பதற்கு முயன்ருர் கள். விஞ்ஞான ஆராய்ச்சியை அரசியல் நோக்கங்களுக்கும் வகுப்புவாத நோக்கங்களுக்கும் பயன்படுத்தக்கூடும் என்ற எண்ணத்திற்கு இந்த முயற்சி இடமளித்துவிட்டது. ஆரம்ப காலங்களில் இயற்கை வாதத்தையும், இந்து மதத்தையும் பிரிப்பதற்கு ஜனக்கணக்கு அதிகாரிகள் முயன்ருர்கள். பின்பு "ஆதிமக்களின் மதத்தை தழுவுபவர்கள்" என்ற சொற்றெடர் கையாளப் பட்டது. இதை எப்படிக் கண்டு பிடிப்பது? ஒரு மனிதனைப் பார்த்து, "நீ இந்துக் கடவுளை வணங்குகிருயா அல்லது ஆதிமக்களின் கடவுளை வணங்கு கிருயா?" என்று கேட்பதென்று தீர்மானிக்கப்பட்டது. இந்த முறையும் அர்த்தமற்றது. இந்திய தீபகற்பத்தின் ஆதிக் குடிகளின் மதம் இந்து மதத் தைப் போன்றதே. இந்து மதத்தில் எத்தனையோவித அம்சங்கள் இருக் கின்றன. சமய ஆராய்ச்சி உள்ளவன் அந்த அம்சங்களை இயற்கை வாத மென்றே கூறிவிடலாம். மதப் பிரிவினைகளில் பூர்வ குடிகளை இந்துக்க ளென்றே பதிந்திருக்க வேண்டும். வேறு எந்தவிதமாகப் பதிவதும் பயனில்லா விட்டாலும் மிக மோசமானது. சமய ஆராய்ச்சிப் பழக்கமுள்ளவனுக்குக்கூட பலதிறப்பட்ட பூர்வ குடிகளின் மதத்தைப்பற்றி விளக்குவது கஷ்டமாக இருக்கும். ஆகவே கல்வியறிவில்லாத ஜனக் கணக்கனுக்கு பூர்வ குடிகளின் மதத்தை அறிவது இயலாத காரியம். நாட்டின் காரியங்களில் அவர்களுக்கும் உரிய பங்கு கிடைப்பதற்காக பூர்வ குடிகள் எத்தனைபேர் இருக்கிருர்கள் என்று அறிந்துகொள்ள நாம் விரும்புகிரேம் இப்பொழுது நமக்கு மத நிலைமையைப் பற்றியும் சரியாகத் தெரியாது; இனங்களைப் பற்றியும் நன்ருகத் தெரியாது. இந்து மதத்திலிருந்து பூர்வ குடிகளை எவ்வாறு பிரித்தொதுக்க லாம் என்ற முயற்சியில் நமது மானிட ஆராய்ச்சி வல்லுநர் இறங்கியதால் மானிட ஆராய்ச்சி என்ற விஞ்ஞானத்தையே மக்கள் இழிவாகக் கருதுகின்ற நிலைமைக்குக் கொண்டுவந்து விட்டனர்.'[10]

ஜனக் கணக்கு அதிகாரிகள் பூர்வீக மக்களின் விஷயமாகச் சரியான முறைகளைக் கைக்கொள்ளாததின் பயனுகச் சில மாகாணங்களிலும் சில சுதேச சமஸ்தானங்களிலும் இந்துக்களின் தொகை மிக மிகக் குறைந்துவிட்டது. இதை அவர்களே ஒப்புக்கொள்ளுகிருர்கள். ஏற்கெனவே எடுத்துக் காட்டியபடி இந்தி யாவின் ஜனக் கணக்கு கமிஷனர் திரு. ஈட்ஸ் கூறுவதாவது :—' பூர்வ குடி களின் பிரசினையால் முஸ்லிம் புள்ளி விவரம் ஒன்றும் மாறுதல் பெற்றுவிட வில்லை என்று கருதலாம். முந்திய வருஷங்களில் கண்டதுபோல அவர்களது ஜனத்தொகை விருத்தியாகிக் கொண்டே வந்திருக்கிறது. அதன் காரணங் களையும் முந்திய ஜனக் கணக்கு அறிக்கைகளில் விவரமாகக் காட்டி யிருக் கிறது. வங்காள ஜனத்தொகை மாறுதல் பெருமலே இருக்கிறது. பஞ்சாபில் ½ அல்லது 1 சத விகிதம் உயர்ந்திருக்கிறது. கவனிக்கத்தகுந்த அளவில் முஸ்லிம் ஜனத்தொகை அதிகமானது அஸ்ஸாமில்தான். மைமன்சிங்கிலிருந்தும்

---

10. *Proceedings of the Thirty-first Indian Science Congress, Delhi*, 1944, p. 91.

கிழக்கு வங்காளத்திலிருந்தும் முஸ்லிம்கள் அங்கு சென்று குடியேறியதால் இவ்விதம் அங்கு ஜனத்தொகை உயர்ந்தது.'[11]

அஸ்ஸாம் ஜனத்தொகையிலுள்ள முக்கிய இனத்தாரின் தாரதம்யத்தை XVII-வது அட்டவணை காட்டுகிறது. இந்துக்களின் எண்ணிக்கை திடீரெனக் குறைந்ததுபற்றி மேலே விளக்கிக் கூறப்பட்டிருக்கிறது. முஸ்லிம்களின் விகிதம் திடமாகப் பெருகிக் கொண்டே வந்திருக்கிறது. பிரிட்டிஷ் அஸ்ஸாமில் அவர்களுடைய ஜனத்தொகை 1901-ல் 26.89 ஆக இருந்தது 1941-ல் 33.73 ஆக வளர்ந்துவிட்டது. கிழக்கு வங்காளமாகிய மைமன்சிங் ஜில்லாவிலிருந்து அஸ்ஸாம் ஜில்லாக்களுக்கு முஸ்லிம்கள் குடியேறியதே இதற்கு முக்கிய காரணம். முஸ்லிம்கள் குடியேறியதைப்பற்றி 1931-ம் வருடத்திய ஜனக் கணக்கு அறிக்கையில், ஓர் அத்தியாயமே எழுதப்பட்டிருக்கிறது. அஸ்ஸாமில் குடியேறினவர்கள் முக்கியமாக மூவகைப்பட்டவர்கள் என்று சொல்லப்படுகிறது. (1) அஸ்ஸாம் தேயிலைத் தோட்டங்களுக்கு வந்த குடியேற்றம். (2) கிழக்கு வங்காளக் குடியேற்றம். (3) நேபாளத்தைச் சேர்ந்தவர்களின் குடியேற்றம். 1931-ல் ஜனக் கணக்கு சூபரின்டென்டாக இருந்த சி. எஸ். மல்லன், எம்.ஏ.,ஐ.சி.எஸ்., இதைப் பற்றிச் சொல்வதாவது :—'இந்த ஜனக் கணக்கில் பெரிய மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. முந்தின பத்தாண்டில் நடந்ததுபோல குடியேறியவர்கள் அஸ்ஸாமில் வந்து குவிந்து கொண்டே இருந்திருக்கிறார்கள். ஆனால் தோட்டங்களுக்குக் கூலி திரட்டும் மாகாணங்களில் குடியேற்ற வெள்ளம் பழைய அளவில் பாயவில்லை.'[12]

கிழக்கு வங்காளத்திலிருந்து குடியேற்றக்காரர்கள் அஸ்ஸாமில் நுழைந்ததுபற்றி அஸ்ஸாம் ஜனக் கணக்கு அறிக்கையிலிருந்து நீண்டதொரு மேற்கோள் கொடுப்பது இங்கு அவசியமாகும். 'கிழக்கு வங்காளத்திய ஜில்லாக்களிலிருந்தும் குறிப்பாக மைமன்சிங்கிலிருந்தும் நிலப்பசி யெடுத்த வங்காளிகள் பெரும் பட்டாளமாக அஸ்ஸாமுக்குள் படையெடுத்தார்கள். சென்ற 25 வருஷங்களுக்குள் இந்த மாகாணத்தில் நடந்த மிக முக்கிய சம்பவம் இதுவே. அஸ்ஸாமின் வருங்காலம் முழுவதையும் இது மாற்றி விடுமோ என நினைக்க வேண்டியிருக்கிறது. 1820-ல் பர்மாவிலிருந்து படையெடுத்தவர்கள் நாசம்செய்ததைக் காட்டிலும், இவர்கள் அஸ்ஸாமிகளின் நாகரிகம், பண்பாடு,கட்டுக்கோப்பு இவைகளை அழித்து விடுவார்கள்போலத்தோன்றுகிறது. இக்குடியேற்றப் படையெடுப்பு 1911-க்குச் சற்று முன்பு ஆரம்பித்தது. முன்னேறிவரும் இப்படையைப்பற்றி அவ்வருஷத்திய அறிக்கையே முதன் முதலாகக் குறிப்பிடுகிறது. ஆனால் நமக்கு இப்பொழுது தெரிந்துள்ளபடி 1911-ல் கோல்பாரா, சூர் நிலங்களில் முதன்முதலாகக் கணக்கெடுக்கப்பட்ட வங்காளக் குடியேற்றக்காரர்கள் வெறும் முன்னோடிகள் அல்லது அநேகமாய் வேவு பார்ப்பவர்கள் ; அவர்களைத் தொடர்ந்து பின்வந்த பெரிய குடியேற்றப் படைக்கு வழிகாட்டிகள். 1921 சமயத்திலெல்லாம் முதற்படை அஸ்ஸாமுக்குள் நுழைந்துவிட்டது. கோல்பாரா ஜில்லாவை உண்மையில் கைப்பற்றி விட்டது. 1911-க்கும் 1921-க்கும் இடையே நடந்த சம்பவங்களை 1921-ம் வருஷத்திய ஜனக் கணக்கு அறிக்கை பின்வருமாறு விவரிக்கிறது :—

'"1911-ல் உழவர்கள் கிழக்கு வங்காளத்திலிருந்து கோல்பாராவுக்கு அப்பாற் சென்றுவிடவில்லை. அஸ்ஸாம் பள்ளத்தாக்கைச் சேர்ந்த ஜில்லாக்களில்

11. *Census of India*, 1941, Vol. I—*India*, Tables, p. 29.
12. *Census of India*, 1931, Vol. III, *Assam Report*, Part 1, p. 44.

க்ணக்கெடுக்கப்பட்டவர்களும் சில ஆயிரம்பேர்தான். அவர்களில் பெரும் பாலோர் குமஸ்தாக்கள், வியர்பாரிகள், தொழிலாளிகள். சென்ற பத்தாண்டில் (1911-21) இந்த இயக்கம் பள்ளத்தாக்குப் பிரதேசம் வரை பரவி விட்டது. இப் படிக் குடியேறினவர்கள் தெற்கேயுள்ள 4 ஜில்லாக்களிலும் மத்திய ஜில்லாக் களிலும் குறிப்பிட்டத்தக்க அளவில் இருக்கிருர்கள். வடக்கத்திய இரண்டு ஜில் லாக்கள் (அதாவது சிபசாகர், லக்கிம்பூர்) இன்னும் தொடப்படவேயில்லே. கோல்பாராவில் கிட்டத்தட்ட 70 சதவிகிதத்தினர் இந்தக் குடியேற்ற வாசிகளே. அடுத்தபடியாக அவர்களுக்குப் பிடித்தமான ஜில்லாவாக இருப்பது நௌகாங். அவர்கள் அங்கு 14 சதவிகிதத்தினராக இருக்கிருர்கள். காமரூப ஜில்லாவில் தரிசு நிலங்களெல்லாம் வெகு சீக்கிரம் கைப்பற்றப்படுகின்றன. பார்பெட்டா சப் டிவிஷனில் இது வெகு துரிதமாக நடைபெறுகிறது. டர்ராங் ஜில்லாவில் நிலத்தைக் கண்டறிவதும் குடியேறுவதும் ஆரம்பக் கட்டத்திலிருக் கிறது. பிரம்மபுத்ரா நதிக்கரையிலிருந்து குடியேற்றக்காரர்கள் வெகு தூரம் சென்று விடவில்லே.........கிட்டத்தட்ட ஒவ்வொரு ரயிலும் கப்பலும் இக் குடியேற்றக் கூட்டங்களைக் கொண்டுவந்து தள்ளுகிறது. ஆகவே அவர்க ளுடைய படையெடுப்பு பள்ளத்தாக்கில் மேலும் பரவும். வெகு சீக்கிரம் நதியிலிருந்து அப்பாலும் சென்றுவிடும்."

'1921 லிருந்து படையெடுப்பின் முன்னேற்றத்தைக் கவனிப்போம். அஸ்ஸாமுக்கு வந்து நுழைந்தபின் பிறந்த குழந்தைகளை அஸ்ஸாமில் பிறந்தவர் களாகவே பதிந்திருப்பதால் அவர்களுடைய எண்ணிக்கை காணப்படவில்லே. கீழ்க்காணும் அட்டவணை வங்காளத்தில் பிறந்த மொத்த ஜனத்தொகையைக் காட்டுகிறது. குடியேறினவர்களை மாத்திரம் காட்டவில்லே. இருந்தாலும் கடந்த பத்து வருஷங்களாக என்ன நடந்துகொண்டுவந்தது என்பதை இந்தப் புள்ளிகள் காட்டும்:

## அட்டவணை XVIII

### 1911, 1921, 1931-வருடங்களில் வங்காளத்தில் அஸ்ஸாம் பள்ளத்தாக்கின் ஒவ்வொரு ஜில்லாவிலும் பிறந்தவர்களின் எண்ணிக்கை.

(மை. சி. = மைமன்சிங்; ஒவ்வொரு புள்ளியுடனும் 000 சேர்த்துக் கொள்ளவும்.)

| வருடம் | கோல்பாரா | காமரூப் | டர்ராங் |
|---|---|---|---|
| 1911 | 77 (மை. சி. 34) | 4 (மை. சி. 1) | 7 (மை. சி. 1) |
| 1921 | 151 (மை. சி. 78) | 44 (மை. சி. 30) | 20 (மை. சி. 12) |
| 1931 | 170 (மை. சி. 80) | 134 (மை. சி. 91) | 41 (மை. சி. 30) |

| வருடம் | நௌகாங் | சிபசாகர் | லக்கிம்பூர் |
|---|---|---|---|
| 1911 | 4 (மை. சி. 1) | 14 (மை. சி. 0) | 14 (மை. சி. 0) |
| 1921 | 58 (மை. சி. 52) | 14 (மை. சி. 0) | 14 (மை. சி. 0) |
| 1931 | 120 (மை. சி. 108) | 12 (மை. சி. 0) | 19 (மை. சி. 2) |

'மேலே காட்டப்பட்ட புள்ளி விவரங்களில் மைமன்சிங் ஜில்லாவி லிருந்து வந்தவர்களை மாத்திரம் பிறைகளுக்கிடையே கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏன் என்ருல் அந்த ஒரு ஜில்லாதான் குடியேற்ற வெள்ளத்திற்கு முக்கிய காரணமானது.

'இந்தப் புள்ளி விவரங்கள் திடுக்கிடச் செய்கின்றன. அஸ்ஸாம் பள்ளத்தாக்கிலுள்ள தெற்கத்திய ஜில்லாக்களில் மைமன்சிங்கிலிருந்து வந்தவர்கள் எவ்வளவு விரைவாகப் பரவுகிறார்கள் என்பதைக் காட்டுகிறது...... 1921-க்குள்ளாக இந்தப் படையெடுப்பாளர்களின் முன்னேடிப் பட்டாளம் கோல்பாராவைக் கைப்பற்றிவிட்டதென்று ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். 1921-லிருந்து 31 வரை வந்த இரண்டாவது பட்டாளம் அந்த ஜில்லாவில் நன்கு வேரூன்றி நௌகாங் ஜில்லாவை முழுதும் கைப்பற்றிவிட்டது. காமரூபத்தைச் சேர்ந்த பார்பெட்டா சப் டிவிஷனும் அவர்கள் கையில் சிக்கியது டர்ராங் படையெடுக்கப்பட்டு வருகின்றது. சிபசாகர் இதுவரையும் முழுதும் தப்பித்து விட்டது. ஆனால் வடலக்கிம்பூரிலிருக்கும் சில ஆயிர மைமன்சிங்கிகள் எல்லையிலிருந்துகொண் டிருக்கிறார்கள். அடுத்த பத்து வருஷத்திற்குள் அவர்கள் பெரிய காரியங்களைச் செய்யக்கூடும்.......

'கிழக்கு வங்காளத்திலிருந்து அஸ்ஸாம் பள்ளத்தாக்கில் குடியேறினவர்களுடைய சரியான தொகையை (அஸ்ஸாமில் பிறந்த அவர்களுடைய குழந்தைகளையும் சேர்த்து) எவ்வளவென்று சொல்லுவது கஷ்டம். திரு. லாயிட் 1921-ல், அவர்களுடைய தொகை அவர்கள் அங்கு வந்தபின் பிறந்த குழந்தைகளோடு சேர்த்து அவ்வருஷத்தில் குறைந்தது 3,00,000 என்றும் மதிப்பிட்டார் எனக்குத் தெரிந்தவரை இப்போது அவர்களுடைய தொகை 5,00,000 இருக்குமென்று மதிப்பிடுகிறேன். மைமன்சிங்கிலிருந்து வந்தவர்கள் மாத்திரம் 1,400,00 பேர். ஏற்கெனவே வந்தவர்களும் பெருகி வளர்ந்துகொண்டே இருந்திருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை. 1921 ஜனக்கணக்கு அறிக்கையில் காட்டியபடி இக்குடியேற்றக்காரர்கள் தனித்தனியாக வரவில்லை, குடும்பம் குடும்பமாக வந்தார்கள். மைமன்சிங்கில் பிறந்து அஸ்ஸாமில் கணக்கெடுக்கப்பட்ட 3,38,000 பேர்களில் 1,52,000 பேர் பெண்கள். இதிலிருந்து குடியேறினவர்கள் தனியாக வரவில்லை என்பது தெரிகிறது. வருங்காலத்தைப் பற்றி என்ன சொல்வது? படை எடுப்பு எந்தவகையிலும் முற்றுப்பெறவில்லை; அஸ்ஸாமில் இன்னும் ஏராளமான தரிசு நிலங்கள் இருக்கின்றன; அதிலும் சிறப்பாக லக்கிம்பூர் சப்டிவிஷனிலும் காமரூபத்திலும் இருக்கின்றன; இங்கு அதிகமாகக் குடியேறிகள் வந்திருந்தபோதிலும் அது இன்னும் அநேகரைக் கொள்ளக்கூடிய நிலைமையில் இருக்கின்றது. மங்களதாய் டிவிஷனும் இன்னும் அநேகரைக் கொள்ளும். கோல்பாரா, நௌகாங்கிலுள்ள தரிசு நிலங்களெல்லாம் கைப்பற்றப்பட்டு விட்டதால் அடுத்த படையெடுப்புகள், காமரூபம், மங்களதாய், வடலக்கிம்பூர் இவைகளை நோக்கியே செல்லும். சாகுபடிக்குரிய நிலங்கள் வடலக்கிம்பூர் சப்டிவிஷனில் ஏராளமாக இருக்கின்றன என்ற விஷயம் பெரும்பாலான குடியேறிகளின் காதில் விழுந்தால் அது ஒரு சரியான "எல்—டொராடோ" ஆகிவிடும்.

'அடுத்த 30 வருஷங்களுக்குள் அஸ்ஸாமில் சிபசாகர் ஜில்லா ஒன்றுதான் தங்களது இருப்பிடமாக இருப்பதை அஸ்ஸாமிகள் காண்பார்கள். இது வருந்தத்தக்கதே. என்றாலும் இது நடக்கக்கூடாத காரியமல்ல.'[13]

1941-ம் வருஷத்திய ஜனக்கணக்கு அறிக்கை இக்குடியேற்றக் கதையை சிறியதும் பொருள் பொதிந்ததும் ஆன ஒரு வாக்கியத்தைக்கொண்டு முடிக்கின்றது. இவ்வாக்கியம் முன்பே மேற்கோளாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றது.—'(முஸ்லிம் ஜனத்தொகையில்) மிகவும் குறிப்பிடத்தக்க வளர்ச்சி

---

13. *Census of India*, 1931, vol. III. *Assam Report*, part 1, pp. 49-52.

அஸ்ஸாமில் நடைபெற்றிருக்கிறது. அது மைமன்சிங்கிலிருந்தும் கிழக்கு வங்காளத்திலிருந்தும் ஜனங்கள் குடியேறியதையே மீண்டும் எடுத்துக் காட்டுகிறது.'[14]

வங்காள முஸ்லிம்கள் அஸ்ஸாமில் குடியேறும் காரியம், வங்காளத்திலும் அஸ்ஸாமிலும் ஆட்சியிலிருந்த லீக் மந்திரிசபைகளின் பேராதரவில் சௌகரியமாக நடைபெற்றுவந்தது அப்பொழுது அஸ்ஸாமில் முதல் மந்திரியா யிருந்தவர் சர் சாதுல்லா; வங்காளத்தில் சர் நாசிமுத்தீன். 1944 அக்டோபர் கடைசி வாரத்தில் வங்காள சர்க்கார், பத்திரிகைகளுக்கு விடுத்த அறிக்கை இவ்வாறு கூறுகிறது: '1938 ஜனவரி 1-ந் தேதிக்கு அப்புறம் அஸ்ஸாமுக்கு வெளியிலிருந்து வந்தவர்களுக்கு நிலம் அளிப்பதை அஸ்ஸாம் அரசாங்கம் தங்களது 1940 ஜூன் 21-ந் தேதித் தீர்மானத்தின்படி தடை செய்கிறது. இந்தத் தீர்மானம் மைமன்சிங் போன்ற எல்லை ஜில்லாக்களில் உள்ளவர்களைப் பெரிதும் பாதிக்கிறது. இந்த மாகாணத்தில் சாகுபடி நிலங்கள் கிடைப்பது மிக மிக அரிதாக இருப்பதால் இந்த எல்லை ஜில்லாக்களிலுள்ள குடியானவர்கள் சாகுபடி நிலத்தைத் தேடி அஸ்ஸாமுக்குள் செல்கிறார்கள். அஸ்ஸாம் அரசாங்கம் குடியானவர்கள் அஸ்ஸாம் பள்ளத்தாக்கில் நிலம் பெறுவதற்கு விதித்த தடைகளை எல்லாம் நீக்குவதற்கு இந்திய சர்க்காரைத் தூண்டுமாறு சென்ற வங்காள சட்டசபைக் கௌன்சில் கவர்னரை ஒரு தீர்மானத்தின் மூலம் கேட்டுக்கொண்டது. அவ்விதமே வங்காளத்தில் கஷ்டப்படும் ஜனங்களுக்கு உதவி அளிப்பதற்காகவும் இரு மாகாணங்களுக்கிடையே நேச உறவு நிலவுவதற்காகவும் முன்கூறிய தீர்மானத்தால் விதிக்கப்பட்ட தடைகளை எடுத்து விடுமாறு வங்காள அரசாங்கம் அஸ்ஸாம் அரசாங்கத்தைக் கேட்டுக்கொண்டது.

'சில ஜில்லாக்களில் புல்வெளியாக இருக்கும் அதிகப்படி நிலங்களை ஒதுக்கி வைத்துக் குடியேறிகளுக்குச் சாதகம் செய்வதாகவும் மேலும் மெதுவாகத் தடைகளை எல்லாம் தளர்த்திக்கொண்டிருப்பதாகவும் அஸ்ஸாம் அரசாங்கம் பதிலளித்தது. மேலும் பூர்வ குடிகள் அதிகமாக இருக்கின்ற இடங்களில் இந்தத் தடைவிதிகளை அஸ்ஸாம் சர்க்காரால் முழுதும் ஒழிக்க முடியவில்லை. குடியேறிகள் நெருங்குவதைக் கண்டு பூர்வகுடிகள் அஞ்சுகிறார்கள். ஏனெனில் அவர்கள் கடந்த காலங்களில் குடியேறிகளால் மிகவும் கஷ்டப்பட்டிருக்கின்றார்கள். இருந்தாலும் கொஞ்சம் கொஞ்சமாகத் தடைகளை ஒழித்து விடுவதாக அஸ்ஸாம் அரசாங்கம் வாக்களித்திருக்கிறது. பூர்வ குடிகளைக் காப்பாற்றுவதற்கும், சுதேசிகளுக்கு நிலம் ஒதுக்குவதற்கும் இடைஞ்சல் ஏற்படாதபடி குடியேறியவர்களுக்குப் புது இடங்களை அளிப்பதாக அஸ்ஸாம் அரசாங்கம் வாக்களித்திருக்கிறது.'

சர் சாதுல்லா மந்திரிசபை முன்பொருதடவை பதவி வகித்து ஓர் அபிவிருத்தித் திட்டம் போட்டிருந்தது. அதன் பின்பு அஸ்ஸாம் கவர்னராக இருந்த சர் ராபர்ட் ரீட் அந்த நிலமளிப்புக் கொள்கையை நன்றாக ஆராய்ந்து விட்டு அந்த அபிவிருத்தித் திட்டத்தை நிறுத்திவிட்டார். மீண்டும் பதவிக்கு வந்த சாதுல்லா மந்திரிசபை அந்த கவர்னரின் முடிவை மீறிச் சென்று விட்டது என்பதைத் தெளிவுபடுத்த வேண்டியது அவசியமாகிறது. சமீபத்தில் தாம் எழுதிய கட்டுரையில் சர் ராபர்ட் ரீட் கூறுவதாவது: 'அஸ்ஸாம் பள்ளத்தாக்கில் சுதேச ஜனங்கள் பூர்வீகமாக வாழ்ந்து வருகிறார்கள். இப்

14. *Census of India, Vol I—India*, 1941, Tables, p. 29.

பொழுது வங்காள மைமன்சிங்கிலிருந்துவந்த சுறுசுறுப்பான முஸ்லிம்கள் பூர்வீகக் குடிகளை அழிக்காவிட்டாலும் அவர்களுக்கு நெருக்கடியாக வந்திருக்கிறார்கள். இக்காரியம் முஸ்லிம்களுக்குத் திருப்தியளிக்கிறது. இந்துக்களுக்குத் திருப்தியளிக்கவில்லை. ஏனென்றால் அஸ்ஸாமில் எவ்வளவுக்கெவ்வளவு முஸ்லிம்கள் அதிகமாகிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு பாகிஸ்தான் கோரிக்கை வலுப்பெறும்.'[15] அஸ்ஸாமில் எல்லைத் திட்டம் என்று ஒரு திட்டம் இருந்தது. அதன் பிரகாரம் குடியேறியவர்கள் சில குறிப்பிட்ட விஸ்தீரணங்களிலேயே இருக்கவேண்டும். அங்கு அவர்கள் பரம்பரையாக வாழ்ந்துவந்த ஜனங்களின் நலன்களுக்கு இடையூறு விளைக்கக்கூடாது. மேலும் பாதுகாக்கப்பட்ட மேய்ச்சல்தரை என்னும் நிலங்கள் இருந்தன. பிரிட்டிஷ் ஆட்சி தொடங்கியதிலிருந்து இவைகள் வெகு நல்ல முறையில் காப்பாற்றப்பட்டு வந்தன. இப்பொழுது, எல்லை முறையையும் பாதுகாப்பு நிலங்களையும் மீறுவதைத்தான் எதிர்க்க வேண்டியதிருக்கிறது. பாதுகாக்கப்பட்ட மேய்ச்சல் தரைகளைப் பற்றித்தான் மேற்கூறிய வங்காள அரசாங்க அறிக்கை கூறுகிறது. அஸ்ஸாம் அரசாங்கம் தனது தடைவிதிகளை மெதுவாக ஒழித்துவிடும் என்றும் குடியேறியவர்களுக்காகப் புதிய இடங்களைத் தரும் என்றும் கூறியது, இந்தப் பாதுகாப்புப் புல்வெளியைத்தான்.

இவ்விதமாக அஸ்ஸாமிலுள்ள இந்துக்களின்மீது ஒரு கிடுக்கி வியூகத் தாக்குதல் இருக்கின்றது. இதன் நோக்கம் என்ன என்பதை இந்துக்களும் பூர்வ குடிகளும் உணரத் தவறமாட்டார்கள். இந்தத் தாக்குதல் இயக்கம் மைமன்சிங்கிலுள்ள முஸ்லிம்கள் அஸ்ஸாமில் குடியேறுவதை ஆதரித்து ஊக்கமளிப்பதற்காகவே தோன்றியிருக்கிறது. அங்கு ஏற்கெனவே வாழ்ந்துவந்த பூர்வீக மக்களின் அபிவிருத்திக்கே இவை தேவையான நிலங்கள். அவர்கள் இதை இழந்துவிட்டு வாழமுடியாது. இவ்விதமாக முஸ்லிம்களுக்கு ஊக்கமளிப்பதென்பது கிடுக்கியின் ஒருபக்கம். கிடுக்கியின் மற்றொரு பக்கம் இந்துக்களிலிருந்து பூர்வ குடிகளைப் பிரித்து அவர்களுடைய தொகையைக் குறைத்து நாளடைவில் அவர்களைச் சிறுபான்மை யாக்கிவிடுவது. இப்படிச் செய்வதன் இன்னொரு நோக்கம் அஸ்ஸாம் மாகாணம் பூராவிலும் எந்த ஒரு தனி இனமும் பெரும்பான்மையாக இல்லை என்று காட்டுவதே. இந்த நிலைமையில் மிக அதிசயமான விஷயம் என்ன என்றால் ஆதிக் குடிகளைத் தனியாகப் பிரித்துக் கணக்கெடுத்தது நியாயம்தான் என்று 1941-ம் வருஷத்திய ஜனக்கணக்கு கமிஷனர் கூற வந்ததேயாகும். பூர்வகுடிகளின் மொத்த எண்ணிக்கை என்ன என்று கண்டுபிடிப்பதற்காகவே இவ்வாறு செய்யப்பட்டதென்று கூறுகிறார். ஆதிகுடிகளின் நன்மைக்காக இந்திய அரசாங்கச் சட்டத்தில் 91, 92-வது பிரிவுகள் செய்யப்பட்டன. அவர்களுக்காகச் சில இடங்கள் ஒதுக்கப்பட்டன. அந்நிலங்களைப் பாதுகாப்பதற்காக கவர்னருக்கு விசேஷ அதிகாரங்கள் அளிக்கப்பட்டன.[16] அஸ்ஸாமிலுள்ள நிலங்கள் சம்பந்தமாக கவர்னரின் விசேஷப் பொறுப்புகள் எவ்வாறு நிறைவேற்றப்படுகின்றன என்பதை ஓர் அனுபவமுள்ள ஐ. சி. எஸ். ஆபீஸராகிய திரு எஸ். பி. தேசாயினுடைய அறிக்கையில் காணலாம்: 'குடியேறி, நிலங்களை ஆக்ரமிப்புச் செய்கின்றவர்கள் சம்பந்தப்பட்டவரை நிலவரி ஒழுங்குமுறைச் சட்டம்

15. Quoted in an article—'The Background of Immigration into Assam,' published in the *Hindustan Standard* of 19th December 1944.

16. *Census of India* 1941, Vol. I, *India*, Tables, p. 28.

ஒன்றும் கிடையாது. ஆங்காங்குள்ள அதிகாரிகளையும் உத்யோகஸ்தர்களையும் ஏமாற்றிவிட்டதாகக் குடியேறிகள் வெளிப்படையாகக் கூறுகிறார்கள். பாதுகாப்பு நிலங்களில் தினந்தோறும் புதிய புதிய மூங்கில் குடிசைகள் கிளம்பிக்கொண்டிருக்கின்றன. குடியேறிகள் அங்கங்குள்ள அதிகாரிகளைச் சிறிதேனும் லட்சியம் செய்யவில்லை என்பதை நான் நேரில் கண்டேன். சப் டிவிஷனல் அதிகாரி முதலாகக் கீழேயுள்ள சிப்பந்திகள் வரையும் யார் என்ன கேட்டாலும் இந்தக் குடியேறிகள் பதிலளிப்பதில்லை. வெகு சிலரான நேபாள இடையர்களும் அஸ்ஸாமிய பாமௌக்களும் தங்களுடைய நிர்க்கதியைக் கண்டு சக்கரவர்த்தியின் பெயரில் ஆணையிட்டுக் குடியேற்றத்தை நிறுத்துமாறு கூறுகிறார்கள். இதற்கு, தாங்களே அரசர் என்று முன்பின் யோசனையற்ற குடியேறிகளில் சிலர் சொன்னதாகத் தெரிகிறது. உண்மையாக அஸ்ஸாமிகளின் அவமானமான நிலை வரம்பு கடந்துவிட்டது. "சட்டத்தின் கட்டுப்பாடுகளெல்லாம் குடியேறிகளுக்கில்லை. நமக்குத்தான்" என்று அவர்கள் கருதுகிறார்கள். தங்களைக் காப்பாற்றிக் கவனிக்கவேண்டிய அரசாங்கம் கடமை தவறிவிட்டது என்றும் உணருகிறார்கள். எல்லா இனத்தைச் சேர்ந்த மக்களும் மிகுந்த கலவரம் எய்தி யிருக்கிறார்கள். வேரூன்றிய மனக்கசப்பையே அவர்களுடைய பேச்சுக்கள் வெளிப்படுத்துகின்றன.'[17]

முஸ்லிம் லீக் மந்திரி சபையினாலும் குடியேறியவர்களைச் சேர்ந்த சட்டசபை அங்கத்தினர்களாலும் ஆக்கமளிக்கப்பட்ட குடியேறிப் படைகள் பலவகையான கொடுஞ் செயல்களைப் புரியத் தொடங்கின. ஆடு, மாடு, எருமை முதலியவைகளைத் தாக்கி அவைகளின் கால்களை வெட்டினார்கள். ஆடு மாடு மேய்ப்பவர்களை அக்கிரமமாகத் தாக்கினார்கள். சில சமயங்களில் அவர்களைக் கொன்றார்கள். இக்காரியங்கள் நாட்டு மக்களிடையே இயல்பாக பெரும் கோபாவேசத்தைத் தூண்டிவிட்டது. 1944 நவம்பரில் கூடிய சட்டசபையில் அரசாங்கம் எதிர்க்கட்சியால் பலமாகத் தாக்கப்பட்டது. இரண்டரை வருஷக் கூட்டு மந்திரிசபைக் கப்புறம் எதிர்க்கட்சி அப்பொழுதுதான் முதன் முதலாகத் தோன்றியது. நில ஏற்பாட்டைப் புனராலோசனை செய்வதற்காக ஒரு கமிட்டி ஏற்படுத்தி மக்களிடையே வளர்ந்த அதிருப்தியை நீக்குமாறு யோசனை சொல்லப்பட்டது. சட்டசபையில் கவர்னரே இது விஷயமாகப் பேசினார். எல்லா வகுப்பாரிடையேயும் அமைதியும் நேசமும் நிலவவேண்டும் என்ற எதிர்க்கட்சியின் யோசனையை சர் சாதுல்லா ஒப்புக்கொண்டார். அதன் பிரகாரம் 1944 டிசம்பரில் ஒரு மகாநாடு கூடியது. இரண்டு விஷயங்கள் சம்பந்தமாக நிலப் பிரிவினை முழுதும் விவாதிக்கப்பட்டது. அந்நாட்டில் பூர்வீகமாக வாழும் நிலமற்ற மக்களுக்கும் இதுவரை நேர்மையற்ற முறையில் சகாயமளிக்கப்பட்ட குடியேறிகளுக்கும் நிலமளிப்ப தெப்படி? தனியாக ஒதுக்கப்பட்ட எல்லைகளில் பூர்வீக மக்களை வைத்து எப்படிக் காப்பாற்றுவது என்பது அந்த மகாநாட்டில் எடுத்துக் கொள்ளப்பட்ட முக்கிய விஷயம். மேய்ச்சல் தரையாக ஒதுக்கப்பட்ட இடங்களில் வரம்பு மீறிப் போகின்றவர்களை எவ்வாறு வெளியேற்றுவது என்பதே இரண்டாவது விஷயம். 1945 ஜனவரியில் அரசாங்கம் மேற்கொண்ட தீர்மானத்தில், இந்த மகாநாட்டில் ஒப்புக்கொள்ளப்பட்ட பாதுகாப்புகள், அளிக்கப்படவில்லை. சில விஷயங்களில்

---

17. Quoted in 'The Background of Immigration into Assam published in the *Hindustan Standard*, Dated 19th December 1944.

மகாநாட்டின் அடிப்படையான முடிவுகளுக்கும் அரசாங்கக் காரியங்கள் விரோதமாகவே இருந்தன. உதாரணமாக 1938-க்கு முன்பேவந்த குடியேறி களுக்குத்தான் தரிசுநிலம் அளிப்பதென்பது மகாநாட்டின் முடிவு. ஆனல் அரசாங்கம் நிறைவேற்றிய தீர்மானத்தில் மிக மோசமான விதி விலக்குகள் இருந்தன. 1938-க்குப் பிறகு வந்து சுமார் 3 வருஷத்துக்கு மேலாக நிலத்தை அனுபவித்துவந்த குடியேறிகளுக்கு விதிவிலக்குச் செய்யப்பட்டது. 5 பைகாக் கள் நிலமுள்ள எவனுக்கும் நிலம் பெற உரிமையில்லை என்று கருதப்பட்டது. அந்நாட்டுக் குடிகள் இவ்வளவே நிலம் வைத்திருந்தார்கள். அவர்களது பொருளாதாரத்திற்கு இது போதாது. இத்தகைய பூர்வீகக் குடிகள் அதிக நிலம்பெற முடியாதபடி இந்தச் சட்டம் குறுக்கிட்டது. இதேபோல பூர்வீகக் குடிகளுக்கு ஒதுக்கப்பட்ட நிலங்கள் வரையறுக்கப்படவில்லை. அதில் நிச்சய மற்ற தன்மைக்கும் குழப்பத்திற்கும் இடமிருந்தது. 1945 மார்ச்சில் நடந்த பட்ஜெட் விவாதத்தின்போது இப்பிரசினை மீண்டும் விவாதிக்கப்பட்டது. இப்பொழுது எதிர்க்கட்சி வலுப்பட்டு விட்டது. தோல்விக்கும் ராஜீநாமா வுக்கும் பயந்து சர் மகமது சாதுல்லா எதிர்க்கட்சியோடு ஒப்பந்தம் செய்து கொண்டார். முஸ்லிம் லீகைச் சேர்ந்த விவசாய மந்திரியை நீக்குவதற்கு ஒப்புக்கொண்டார். எதிர்க்கட்சியின் ஆள் ஒருவரை விவசாய மந்திரியாக எடுத்துக்கொண்டார். சட்டசபையை ஒத்திவைத்த பிறகு ஒப்பந்தத்தை வெகு சீக்கிரம் நிறைவேற்றுவதற்குப் பதிலாக எவ்வளவு தாமதம் செய்ய முடியுமோ அவ்வளவு தாமதம் செய்தார். புதுத் தீர்மானத்தை ஒழுங்குபடுத்தி வெளியிடுவ தற்கே 3 மாதங்கள் ஆயின. அவரும் அவருடைய லீக் மந்திரிகளும், ஒப்பந் தத்திற்கு எவ்வளவு இடையூறு செய்ய முடியுமோ அவ்வளவு இடையூறும் செய்துவருகிறர்கள் என்று இப்பொழுது சொல்லப்படுகிறது. இந்த ஒப்பந் தத்தின் அடிப்படைக் கொள்கைகளுக்கு விரோதமாக காரியங்கள் செய்யுமாறு லீக் தலைவர் மகமத் அலி ஜின்னு அஸ்ஸாம் மந்திரி சபைக்குக் கட்டளைகள் பிறப்பித்ததாகச் சொல்லப்படுகிறது. இதற்குள்ளாகச் சட்டசபை கலைக்கப்படு மெனவும் தோன்றுகிறது. இனிமேல், நிலைமை முழுதும் எவ்வாறு மாறும் என்றும் சொல்வதற்கில்லை.[18]

இவ்வளவெல்லா மிருந்தும்கூட மாகாணம் முழுதையும் கவனித்தால் இந்துக்கள்தான் முஸ்லிம்களைவிடப் பெரும்பான்மையாக இருக்கின்றனர். இந்துக்களோடு பூர்வ குடிகளையும் சேர்த்துவிட்டால் அவ்விரு வகுப் பினரும் சேர்ந்து இன்னும் அதிகப் பெரும்பான்மையாக இருப்பார்கள். முஸ்லிம் மண்டலங்களைச் சேர்ந்த பகுதிகள் சுயேச்சையும் முழுப் பொறுப்பும் உள்ளனவாக இருக்க வேண்டுமென்று லீக் தீர்மானம் விதிக்கிறது. 33·73 சத விகிதம் உள்ள முஸ்லிம்களை வைத்துக்கொண்டு முஸ்லிமல்லாத இதரர்கள் பெரும்பான்மையாக உள்ள அஸ்ஸாம் எப்படி 'சுயேச்சையும் முழுப் பொறுப்பும்' உள்ள முஸ்லிம் ராஜ்யமாகும் என்பது தெரியவில்லை. கிழக்கு மண்டலத்தில் ஏதாவது சுதந்திர ராஜ்யம் ஏற்படும் என்றல் அது சுதந் திரமும் பொறுப்பும் உள்ள முஸ்லிமல்லாத ராஜ்யமாகவே இருக்கும். முஸ்லிம் பெரும்பான்மைகொண்ட சில்ஹட் ஜில்லாவை எடுத்துவிட்டால் அந்த மாகாணத்தின் இதர ஜில்லாக்களும் சில்ஹட் ஜில்லாவும் சேர்ந்து அட்டவணை XVI-ல் காட்டப்பட்டது போலிருக்கும்.

---

18. இது 1945-ல் பிற்பகுதியில் எழுதப்பட்டது என்பது கவனிக்கத் தக்கது.

ஆனால் பாகிஸ்தான் ஆதரவாளருடைய சாமர்த்தியம் வற்றுவதது. பல காரணங்களைக் கொண்டு அவர்கள் அஸ்ஸாமை வேண்டுகிறார்கள். அவை யாவன :

(1) முஸ்லிம் பெரும்பான்மையாக உள்ள மண்டலத்தில் அஸ்ஸாம் இருக்கின்றது.

(2) அஸ்ஸாமில் வாழும் அதிகப்படியான முஸ்லிமல்லாதவர் பூர்வீக மக்கள்.

(3) அந்த மாகாணத்தில் முஸ்லிம்கள் பெரும்பான்மையராக இருக்கிறார்கள். கீழ்க்கண்ட விதமாக லீகர்கள் இந்த முடிவுக்கு வருகிறார்கள். அஸ்ஸாம் மாகாணத்தில் மொத்தம் ஒரு கோடியே ஒன்பது லட்சம் மக்கள் இருக்கிறார்கள். அவர்களில் 45 லட்சம் அல்லது 41·5 சதவிகிதம் இந்துக்கள். இவ்விதமாக இந்துக்கள் சிறுபான்மையாகவே இருக்கிறார்கள். 29 லட்சம் அல்லது 26·7 சதவிகிதத்தினர் பூர்வீக மக்கள். நாகரிக முறையில் வாழத் தகுதியற்றவர்கள். அரசியலமைப்பு சம்பந்தமான எல்லா விவகாரங்களிலும் இவர்களை விலக்கிவிட வேண்டியதிருக்கும். சிறுபான்மைகளுக்கு அரசியலமைப்பு உரிமைகள் அளிக்க வேண்டுமென்றால் அவ்வுரிமைகளை ஜனத்தொகையில் உள்ள நாகரிகப் பிரிவினருக்கே கொடுக்கவேண்டும். இவ்விதமானவர்கள் 80 லட்சமுள்ள இந்துக்கள் அல்லது முஸ்லிம்களேயாவர். அஸ்ஸாம் தேயிலைத் தோட்டங்களிலும், எண்ணெய்ச் சுரங்கங்களிலும் ஏராளமான தொழிலாளர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் நிலையாக இல்லாமல் இடம் மாறுபவர்கள். இவர்களையும் அரசியலமைப்பு சம்பந்தமான பேச்சுக்களிலிருந்து விலக்கவேண்டும். அவர்களுடைய மொத்தத் தொகை 15·2 லட்சம். மொத்த ஜனத்தொகையிலிருந்து இவர்களையெல்லாம் விலக்கிய பிறகு அரசியல் உரிமைகளை அனுபவிக்கக் கூடியவர்கள் 65 லட்சம் மக்களேயாகிறார்கள். ஆகவே இந்த மாகாணத்தில் வாழும் 34·75 லட்சம் முஸ்லிம்களே பெரும்பான்மையாகிறார்கள்.

(4) வங்காள எல்லை ஜில்லாக்களிலிருந்து வருகின்ற விவசாயிகள் இடம் விட்டுப் பெயர்ந்து வடக்கு அஸ்ஸாமிலுள்ள சாகுபடி செய்யப்படாத பாகங்களில் தங்குகிறார்கள். இந்த விவசாயிகளெல்லாம் முக்கியமாக முஸ்லிம்களே. அவர்களுக்குப் பொருளுதவி செய்யவும் இதர நலன்கள் புரியவும் மத்தியதர வகுப்பினராக இந்துக்கள் இருக்கிறார்கள். அவர்களிடையே கடைக்காரர்களாகவும் வியாபாரிகளாகவும் வைத்தியர்களாகவும் சென்று தங்குகிறார்கள். சுருங்கச் சொன்னால் கிழக்கு வங்காள ஜில்லாக்களே அஸ்ஸாமுக்குள் பரவுகின்றன என்று கூறலாம்.

(5) ‘ மாகாண முழுவதிலு மட்டுமின்றி டிவிஷன் டிவிஷனாகவும் முஸ்லிம்களே பெரும்பான்மையாக இருக்கிறார்கள். சூர்மா பள்ளதாக்கில் முஸ்லிம்கள் மொத்த ஜனத்தொகையில் 51 சதவிகிதமாகிறார்கள். பூர்வீக ஜனங்களைவிட்டு விட்டுப் பார்த்தால் முஸ்லிம்களே 65 சதவிகிதத்திற்கு அதிகமாக இருக்கிறார்கள். ஆகவே அரசியல் உரிமைகளுக்குப் பாத்தியமுள்ளவர்களாக இருக்கிறார்கள். அஸ்ஸாம் பள்ளத்தாக்கு ஜில்லாக்களில் மொத்த ஜனத்தொகையில் இந்துக்கள் 47 சதவிகிதத்தினராயிருக்கிறார்கள். ஆகவே அவர்கள் சிறுபான்மையினர் என்பது தெளிவு. அஸ்ஸாம் பள்ளத்தாக்கில் தொழிலாளிகள் அனைவரும் இடம் விட்டுப் பெயருகிறவர்கள். ஆகவே அங்கு வாழும் குடிகளாகக் கருதக்கூடிய இந்துக்கள் 12·98 லட்சம் பேர்களே. இங்கும் முஸ்லிம்

களே அரசியல் உரிமைகள் பெறத்தக்க பெரும்பான்மையினராக இருக்கின்றூர்கள்.'[19]

(6) தனது ஜனத்தொகைக்குப் போதுமான திடம் கொண்டதாக கிழக்கத்திய பாகிஸ்தான் இருக்கவேண்டும். ஜனத்தொகை விரிவிற்கு அஸ்ஸாம் இடமளிக்கிறது.

(7) அஸ்ஸாம் மாகாணத்தில் ஏராளமான காடுகள் இருக்கின்றன; தாதுப் பொருள்களும், நிலக்கரியும், பெட்ரோலும் கிடைக்கின்றன. பொருளாதாரத்திலும் வரவு செலவிலும் பலங்கொண்டதாக கிழக்கத்திய பாகிஸ்தான் இருக்கவேண்டும் என்ருல் அஸ்ஸாம் அதில் சேர்ந்திருக்கவேண்டும்.

(8) அஸ்ஸாமிலுள்ள பெரும்பாலான மக்கள் வங்கமொழி பேசுகின்றவர்கள்.

இப்பொழுது இந்தக் காரணங்களைக் கவனிப்போம்:

1. முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கிற இடங்கள்தான் முஸ்லிம் மண்டலமென்று கருதியிருக்கக்கூடும். ஆனுல் இப்பொழுது முஸ்லிம் மண்டலமென்பது வேறு ஏதோ ஒன்ருகத் தோன்றுகின்றது. முஸ்லிம் மண்டலத்தில் அடங்கியிருப்பதால் முஸ்லிம்கள் சிறுபான்மையாக இருக்கக்கூடிய மாகாணத்தையும் சேர்த்துக்கொண்டதாகவும் தோன்றுகின்றது.

2. பூர்வீக மக்கள் இந்துக்களல்லர் என்பதை ஒப்புக்கொள்ள முடியாது. வாக்கு வாதத்திற்காக அவர்கள் இந்துக்களல்லர் என்று வைத்துக்கொண்டாலும் அஸ்ஸாமிலுள்ள முஸ்லிமல்லாத பெரும்பான்மையினர் இந்துக்களே; பூர்வீக மக்களல்லர்.

3-5. திரு. முஜிபூர் ரஹ்மான் கொடுத்த புள்ளி விவரங்களிலிருந்து எவ்வாறு 29 லட்சமுள்ள பூர்வீக மக்களை இந்துக்களிலிருந்து பிரித்திருக்கிருர்கள் என்பதைக் கண்டோம். மேலும் 'நாகரிக வாழ்கை'க்குத் தகுதியற்றவர்கள் என்றும் கூறப்பட்டிருக்கிருர்கள். ஆகவே 'நாகரிக இனத்தினர்' 109 லட்சத்திலிருந்து 80 லட்சத்திற்கு எவ்வாறு குறைக்கப்பட்டிருக்கின்றனர் என்பதையும் கண்டோம். அப்படியிருந்தும் இந்துக்கள் 45 லட்சம், பெரும்பான்மையாக இருக்கின்ருர்கள். முஸல்மான்களோ 34·75 லட்சமாகத்தான் இருக்கிருர்கள். தேயிலைத் தோட்டங்களிலும் எண்ணெய்ச் சுரங்கங்களிலும் வேலை செய்கிற 15·2 லட்ச இந்துக்கள் வேறு குறைக்கப்பட்டிருக்கிருர்கள். இவ்வாறெல்லாம் செய்துதான் முஸ்லிம்களைப் பெரும்பான்மையாக்க வேண்டியதாயிருக்கிறது. இந்த விதமாகத்தான் அஸ்ஸாம் ஒரு முஸ்லிம் பெரும்பான்மை மாகாணம் ஆகிறது. இதைக் காட்டிலும் வேருெரு புள்ளி விவரப் பித்தலாட்டத்தைக் கற்பனை செய்வதுகூடக் கஷ்டம்.

இந்தமாதிரி வாதப் போக்கில் ஒரே ஒரு குறைதான் இருக்கின்றது. இந்துக்களுடைய தொகையை இத்தகைய வழிகளால் குறைக்கக் கூடுமானுல் இந்தியா முழுவதிலும் உள்ள இந்துக்களின் தொகையைக் குறைத்து அவர்களைச் சிறுபான்மையாக்கி விடலாம். அப்படியாக்கும்பொழுது இந்தியா முழுதுமே பாகிஸ்தான் ஆகிவிடுகிறது. இந்தியாவின் மற்றப் பாகங்களிருந்து வடமேற்கு வடகிழக்குப் பகுதிகளைப் பிரித்து அங்கு மாத்திரம் பாகிஸ்தானை வரம்புகட்ட வேண்டுமென்ற அவசியமில்லை.

---

19. Mujibur Rahman : *Eastern Pakistan* : *Its Population, Delimitation and Economics*, quoted by H. N. Barua in *Reflections on Assam-cum-Pakistan*, pp. 82-3.

4, 6, 7. அஸ்ஸாமில் நிலம் இருக்கின்றது. முஸ்லிம்களுக்கும் நிலம் வேண்டும். அஸ்ஸாமில் காடுகள், சுரங்கங்கள், பெட்ரோலியம், நிலக்கரி இன்னும் இதர இயற்கைப் பொருட்சாதனங்கள் இருக்கின்றன. பாகிஸ் தானுக்கு அவைகள் வேண்டும். ஆகவே இது போதாதா? பாகிஸ்தானின் தேவைகளைப் பூர்த்திசெய்ய அஸ்ஸாமை ஏன் பாகிஸ்தானில் சேர்க்கக்கூடாது? ஏகாதிபத்திய ராஜ்யங்கள் பிற நாடுகளை அடிமைப்படுத்துவதற்கு இத்தகைய காரணத்தைத்தான் மேற்கொண்டன. வேறு எக்காரணத்தையும் கொள்ள வில்லை. பாகிஸ்தானும் ஏன் அதே காரணங்களைக் கைக்கொள்ளக்கூடாது? இந்தியப் பிரிவினைக்கு மாத்திரம் இணங்கினால் போதாது, பாகிஸ்தானை ஒழுங் காகக் காப்பாற்றுவதற்கு வேண்டிய பொருள்களையும் தேடிக் கொடுக்கச் சம்மதிக்க வேண்டும் என்பதையும் நாம் உணருகிறோம்.

அவர்கள் கோரியபடியே வங்காளம் அஸ்ஸாம் ஆகிய இரு பிரிட்டிஷ் மாகாணங்கள் முழுமையையும் சேர்த்துவிட்டால் கிழக்கிந்திய முஸ்லிம் மண்ட லத்தில் வகுப்புவாரி நிலைமை கீழ்க்கண்டபடி இருக்கும் :

## அட்டவணை XIX

| மாகாணம் | மொத்த ஜனத் தொகை | முஸ்லிம்கள் | இந்துக்கள் | கிறிஸ்தவர் கள் | மலைஜாதி யினர் | இதரர் | மொத்த முஸ்லிம் அல்லாதார் |
|---|---|---|---|---|---|---|---|
| வங்காளம் | 6,03,06,525 | 3,30,05,434 (54.72) | 2,50,59,024 (41.55) | 1,66,509 (0.28) | 18,89,389 (3.13) | 1,86,169 (0.31) | 2,73,01,091 (45.27) |
| அஸ்ஸாம் | 1,02,04,733 | 34,42,479 (33.73) | 42,13,223 (41.29) | 40,810 (0.40) | 24,84,996 (24.35) | 23,225 (0.23) | 67.62,254 (66.27) |
| மொத்தம் | 7,05,11,258 | 3,64,47,913 (51.69) | 2,92,72,247 41.51 | 2,07,319 (0.29) | 43,74,385 (6.20) | 2,09,394 (0.30) | 3,40,63,345 (48.30) |

இந்த இரண்டு மாகாணங்களிலும் முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கக்கூடிய ஜில்லாக்களை மாத்திரம் எடுத்துக்கொண்டால் கிழக்கு முஸ்லிம் மண்டலத்தின் இனவாரி நிலைமை கீழ்க்கண்டவாறிருக்கும்.

## அட்டவணை XX

| மண்டலம் | மொத்த ஜனத் தொகை | முஸ்லிம்கள் | இந்துக்கள் | இந்தியக் கிறிஸ்த வர்கள் | மலே ஜாதி யினர் | இதரர் | மொத்த முஸ் லிமல்லாதார் |
|---|---|---|---|---|---|---|---|
| வங்காளம், முஸ்லிமல் லாதார் பெரும் பான்மை யாக உள்ள ஜில்லாக் கள் நீங்க லாக... | 4,09,64,779 | 2,87,10,462 (70.79) | 1,13,84,495 (27.79) | 54,732 (0.13) | 7,06,615 (1.72) | 1,08,475 (0.26) | 1,22,54,317 (29.90) |
| அஸ்ஸாம், மு.அ.பெரும் பான்மை யாக உள்ள ஜில்லாக்கள் நீங்கலாக... | 31,16,602 | 18,92,117 (60.71) | 11,49,514 (36.88) | 3,055 (0.09) | 69,907 (2.24) | 2,009 (0.06) | 12,24,485 (39.27) |
| கிழக்கு மண் டல முஸ்லிம் பெரும் பான்மை ஜில்லாக் களின் மொத்தம் | 4,40,81,381 | 3,06,02,579 (69.42) | 1,25,34,009 (28.43) | 57,787 (0.13) | 7,76,522 (1.76) | 1,10,484 (0.25) | 1,34,78,802 (30.57) |

இப்பொழுது வங்காளத்தில் முஸ்லிம் பெரும்பான்மை சொற்பமாக 54·73 சதவிகிதமிருக்கிறது. வங்காளம் அஸ்ஸாம் இரண்டையும் ஒன்ருக்கி விட்டால் அதன் பயஞக முஸ்லிம் பெரும்பான்மை 51·69 சதவிகிதமாகக் குறைந்துவிடும், முஸ்லிமல்லாதவர்கள் பெரும்பான்மையாக இருக்கின்ற இடங்களை யெல்லாம் பிரித்துவிட்டால் அப்பொழுது அஸ்ஸாம், வங்காள மிரண்டிலும் முஸ்லிம் பெரும்பான்மை 69·42 ஆகும். ஆகவே இந்த மாகாணங் கள் இரண்டையும் ஒன்ருய்ச் சேர்த்தால், அவைகளைக் கிழக்கிலுள்ள முஸ்லிம் மண்டலம் என்று கூறமுடியாது. அப்படிச் சொல்வதற்கு என்ன இருக்கிறது. ஒன்றுமில்லை. திரு. சாப்மனுக்குத் திரு. ஜின்ஞ அளித்த பேட்டியில் கிழக்கு மண்டலத்தில் முஸ்லிம்கள் 75 சதவிகிதமிருப்பதாகக் கூறிஞர் என்பதை முன்பே மேற்கோளாகக் காட்டியிருக்கிருேம். ஆனல் உண்மை அவ்வாறில்லை. முஸ்லிமல்லாத மாகாணங்களை ஒதுக்கி விட்டுப் பார்த்தால்கூட, கிடைக்கின்ற முஸ்லிம் சதவிகிதம் 69·42. திரு. ஜின்ஞ கூறிய 75 சதவிகிதத்திற்கு ஏதோ சமீபத்திலாவதிருக்கிறது. இரண்டுமாகாணங்களிலுமுள்ள முஸ்லிமல்லாத பகுதிகளை விலக்காதபோது கிடைக்கின்ற 51·69 சதவிகிதமோ 75 சதவிகிதம் என்ற நினைப்புக்கு நெடுந்தொலைவில் இருக்கிறது.

ஜனக்கணக்குப் புள்ளிகளிலிருந்து கிடைக்கக்கூடிய நிலைமையைப் பின் வருமாறு சுருக்கிச் சொல்லிவிடலாம் :

(1) சிந்து, வடமேற்கு எல்லைப்புறம், பலுசிஸ்தான மாகாணங்களில் மாகாணவாரியாகவும் ஜில்லாவாரியாகவும் முஸ்லிம்கள் எண்ணிக்கையில் பெரும்பான்மையாக இருக்கிறார்கள்.

(2) பஞ்சாபில், ராவல்பிண்டி, முல்தான் டிவிஷன்களிலுள்ள ஒவ்வொரு ஜில்லாவிலும் அவர்கள் எண்ணிக்கையில் பெரும்பான்மையினர். ஆகவே அந்த இரண்டு டிவிஷன்களிலுள்ள 12 ஜில்லாக்களிலும், பலுச் எல்லை நிலத்தையும் சேர்த்தெண்ணினால் அதையும் சேர்த்து ஆக 13 ஜில்லாக் களில் அவர்கள் எண்ணிக்கையில் பெரும்பான்மையினர்.

(3) லாகூர் டிவிஷனில் தொகையில் அவர்கள் பெரும்பான்மை யினரே. ஆனால் அமிருதசரஸ் ஜில்லாவில் அவர்கள் சிறுபான்மையினரே. அங்கு அவர் களுடைய சதவிகிதம் 46·52 குர்தாஸ்பூர் ஜில்லாவில் அவர்கள் பெயரளவில் தான் பெரும்பான்மை.

(4) ஜலந்தர் டிவிஷனில் அவர்கள் சிறுபான்மையினர். அவர்களுடைய சதவிகிதம் 34·53. இந்துக்கள் சதவிகிதம் 35·87. சீக்கியர்களின் சதவிகிதம் 24·31. தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஆதிதர்மிகளை இந்துக்களோடு சேர்த்துக்கொண்டால் இவர்களது நிலைமை மிக உயரும்.

(5) அம்பாலா டிவிஷனில் முஸ்லிம்கள் எண்ணிக்கையில் சிறுபான்மை யினர். அவர்களது சதவிகிதம் 28·07. இந்துக்கள் சதவிகிதம் 66 01.

(6) வடமேற்குப் பிரதேசத்திலுள்ள சிந்து, வ. மே. எ. புறம், பலுசிஸ் தானம், பஞ்சாப் நான்கு மாகாணங்களையும் அப்படியே எடுத்துக்கொண்டால் முஸ்லிம் சதவிகிதம் 62·07 ஆகும்.

(7) அம்பாலா, ஜலந்தர் டிவிஷன்களையும், லாகூர் டிவிஷனிலுள்ள அமிருதசரஸ் ஜில்லாவையும் விலக்கிவிட்டு சிந்து, வ. மே. எ. மாகாணம், பலுசிஸ்தானம் ஆகிய மூன்று மாகாணங்களையும் பஞ்சாபில் முஸ்லிம்கள் அதிகமான ராவல்பிண்டி, முல்தான் டிவிஷன்களையும், அமிருதசரஸ் ஜில்லா வொழிந்த லாகூர் டிவிஷனையும் சேர்த்துக் கொண்டால் அப்பொழுது முஸ்லிம் களின் சதவிகிதம் 75·36 ஆகிறது.

(8) கிழக்கு மண்டலத்தில் முஸ்லிம்கள் எண்ணிக்கையில் சிறுபான்மை யினர். அவர்களது சதவிகிதம் 33·73. இந்துக்களின் சதவிகிதம் 41·29. ஆதி மக்களின் சதவிகிதம் 24·35. இந்துக்களாகிவிட்ட ஆதி மக்களையும் இந்துக்க ளென்று தங்களைக் கூறிக்கொள்கிற ஆதிமக்களையும் இந்துக்களோடு சேர்த்துக் கொண்டால் அப்பொழு தவர்களின் சதவிகிதம் 50—க்கு மேலாகும். சில்ஹட் ஜில்லா ஒன்றில் மாத்திரம் முஸ்லிம் பெரும்பான்மை 60·71. இதர ஒவ் வொரு ஜில்லாவிலும் அவர்கள் சிறுபான்மையினரே

(9) வங்காளம் முழுதும் கவனித்தால் முஸ்லிம் பெரும்பான்மை 54·73 ஆக இருக்கிறது.

(10) சிட்டகாங், டாக்கா டிவிஷன்களில் முஸ்லிம்கள் பெரும்பான்மை யாக இருக்கிறார்கள். சிட்டகாங் குன்றுப் பக்கங்கள்தவிர அந்த டிவின்களைச் சேர்ந்த ஒவ்வொரு ஜில்லாவிலும் முஸ்லிம்களே பெரும்பான்மையாக இருக் கிறார்கள்.

(11) ராஜஷாகி டிவிஷனில் அவர்கள் பெரும்பான்மையினர். ஆனால் அந்த டிவிஷனைச் சேர்ந்த ஜல்பைகுரி, டார்ஜிலிங் ஜில்லாக்களில் அவர்கள்

சிறுபான்மையினர். அங்கு அவர்களுடைய சதவிகிதம் முறையே 23·08-ம் 2·42-ம், ஆகும். தினஜ்பூர் ஜில்லாவில் 50·20 சதவிகிதம் தான் இருக்கிறார்கள்.

(12) கல்கத்தாவும் உள்பட பிரஸிடென்ஸி டிவிஷனில் அவர்கள் சிறுபான்மையினர். அவர்கள் சதவிகிதம் 44·56. இந்துக்களின் சதவிகிதம் 53·70. நாடியா, முர்ஷிதாபாத், ஜெஸ்ஸூர் ஜில்லாக்களில் அவர்கள் பெரும்பான்மையாக இருக்கிறார்கள். குல்னா ஜில்லாவில் அரைப்பாகத்திற்குக் கொஞ்சம் குறைவு. அதாவது 49·36 சதவிகிதம்.

(13) முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கின்ற வங்காள ஜில்லாக்கள் மாத்திரம் முஸ்லிம் மண்டலத்தில் அடங்குமானால் அவர்களுடைய சதவிகிதம் 70·09 ஆகும்.

(14) முஸ்லிம்கள் சிறுபான்மையாக இருக்கின்ற ஜில்லாக்களில் அவர்களுடைய சதவிகிதம் 22·21 ஆக இருக்கிறது.

(15) அஸ்ஸாம் வங்காளம் ஆகிய இரண்டு மாகாணங்கள் முழுதையும்சேர்த்துக் கிழக்கு மண்டலம் ஆக்கினால் அவர்களுடைய சதவிகிதம் 51·69 ஆகும்.

(16) முஸ்லிம்கள் எண்ணிக்கையில் சிறுபான்மையாக இருக்கக்கூடிய ஜில்லாக்களைக் கிழக்கு மண்டலத்திலிருந்து விலக்கிவிட்டால் அப்பொழுது முஸ்லிம்களுடைய சதவிகிதம் 69·42 ஆகும்.

இந்தியா எப்படி இருக்க வேண்டுமென்று இயற்கை விதித்ததோ, தேச சரித்திரமும் அதை எவ்வாறு ஒப்புக்கொண்டதாகத் தோன்றுகிறதோ அவ்விதமாக இந்தியா பூராவையும் எடுத்துக்கொண்டால் முஸ்லிம்களின் சதவிகிதம் 23·8; முஸ்லிமல்லாதவர்களின் சத விகிதம் 76·2. சுதேச சமஸ்தானங்களை விலக்கிவிட்டு பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள முஸ்லிம்களின் சத விகிதத்தை மாத்திரம் கவனித்தால் அது 26·8 ஆகிறது. முஸ்லிம் அல்லாதவரின் சத விகிதம் 73 2 ஆகிறது. முஸ்லிம் சிறுபான்மை ஜில்லாக்களைச் சேர்த்தால் வடமேற்குப் பிரதேசத்தில் முஸ்லிமல்லாதாருடைய சத விகிதம் 38-ம் கிழக்குப் பிரதேசத்தில் 48-ம் ஆகிறது. முஸ்லிம் சிறுபான்மை ஜில்லாக்களை எடுத்துவிட்டால் வடமேற்குப் பிரதேசத்தில் 25 சத விகிதமாகவும் கிழக்குப் பிரதேசத்தில் 32 சத விகிதமாகவும் இருக்கின்றது. அவ்வப் பிரதேசத்திலுள்ள முஸ்லிமல்லாதார் பிரிவினைக்கு உட்படும்படி கேட்டுக்கொள்ளப் படுவார்களானால், இந்தியா முழுவதையும் எடுத்துக்கொண்டால் அதில் 23 8 சத விகிதம் மாத்திரம் உள்ள முஸ்லிம்களை அல்லது பிரிட்டிஷ் இந்தியாவில் 26 8 சத விகிதம் மாத்திரமுள்ள அந்த முஸ்லிம்களை, இதுவரையும் இருந்ததைப்போல இனிமேலும் அவர்கள் ஒன்றாகத்தான் இருக்க வேண்டுமென்று ஏன் கேட்டுக்கொள்ளக் கூடாது? சில பிரதேசங்களில் மொத்த ஜனத்தொகையில் 75 சத விகிதமுள்ள முஸ்லிம்கள் தாங்கள் அதிகமாக இருக்கின்ற பகுதிகளைப் பிரித்துவிட வேண்டுமென்று கோருவதும் வற்புறுத்துவதும் நியாயமும் ஒழுங்குமானால், இந்தியா முழுவதிலும் 76·2 சத விகிதமாக இருக்கின்ற முஸ்லிமல்லாதார், பிரிட்டிஷ் இந்தியாவில் மாத்திரம் 73 2 சத விகிதம் இருக்கின்ற முஸ்லிம் அல்லாதார் ஏன் அதே நியாயத்தோடும் ஒழுங்கோடும் பிரிவினைக்கு இணங்க மறுக்கக்கூடாது? அதிலும் வேறு எதிலும் இல்லாவிட்டாலும் நெடுங்காலமாக நாட்டு நிர்வாகத்தில் சரித்திரபூர்வமான தொடர்பு இருக்கும்பொழுது அவர்கள் ஏன் பிரிவினைக்கு இணங்காதிருக்கக்கூடாது?

1940 மார்ச்சில் லீக் நிறைவேற்றிய லாகூர் தீர்மானத்தின் விதிகளின்படி வடமேற்கு, கிழக்கு முஸ்லிம் மண்டலங்களில் சேரும் பகுதிகளை வரையறுக்க முந்திய பக்கங்களில் முயன்றிருக்கிறேன். என்னுடைய கருத்துப்படியே எல்லை கட்டுவதாக நினைத்துவிடக் கூடாது. பிரிக்கப்பட வேண்டுமென்று கோரப் படுகிற பிரதேசங்களில் உள்ளவர்கள் இணங்கினால்தான் எல்லைகளை வரையறுக்க முடியும். அந்தப் பிரதேசத்தில் வசிப்பவர்கள் என்பது முஸ் லிம்கள் மாத்திரமல்ல; முஸ்லிம் அல்லாதவர்களையும் குறிக்கும். வெறும் வாக்குவாதத்திற்காகத்தான் வடமேற்கு, கிழக்கு பிரதேசங்களிலுள்ள முஸ்லிம்களில் பெரும்பான்மையினர் பிரிவினையை ஆதரிக்கிறார்கள் என்று வைத்துக்கொண்டேன். ஆகவேதான் மேற்கில் சிந்து, வடமேற்கு எல்லை, பலுசிஸ்தான் மாகாணங்கள் முழுவதையும், பஞ்சாபின் சில மேற்கத்திய ஜில்லாக்களையும் சேர்த்து மேற்கத்திய முஸ்லிம் மண்டலமாகிறது என்று வைத்துக்கொண்டேன். அங்குள்ள ஜனங்கள் பிரிவினையை விரும்பி, சந்தேகத் துக்கு இடமில்லாத வழியில் தங்களுடைய கருத்தை ஏதாவதொரு முறையில் வெளியிட்டா லொழிய, அங்குள்ள முஸ்லிம்களில் பெரும்பான்மையினர் பிரிவினையை ஆதரிக்கவில்லை என்று வாதாடுவதில் நியாயமும் ஆதாரமும் இல்லாமல் இல்லை. முஸ்லிம்களை விட்டுவிட்டாலும் இப்பிரசினை சம்பந்த மாக எங்களைப் புறக்கணிக்கக்கூடாது என்று வற்புறுத்துகின்ற மற்றவர்களும் இருக்கிறார்கள்.

## 28. பிரிவினையும், சீக்கியர்களும் வங்காளிகளும்

பிரிட்டிஷ் பஞ்சாபிலும், பஞ்சாப் சுதேச சமஸ்தானங்களிலும் தங்கி வாழும் சீக்கியர்களைப்பற்றிக் கவனிப்போம். பஞ்சாபின் எந்தப் பாகத்தை யேனும் இந்தியாவிலிருந்து பிரிக்கும் எந்தத் திட்டத்தையும் அவர்கள் எதிர்த்துக் கூறியிருக்கிறார்கள். என்னவானாலும் சரி, அதை எதிர்ப்பதென்ற தங்களது உறுதியைத் தெரியப்படுத்தியிருக்கிறார்கள். முஸ்லிம்களால் பிரிவினை வற்புறுத்தப்பட்டால் தாங்கள் அதிகமாக வாழும் விஸ்தீரணங்களையும் தங்களது சமய, சரித்திர சம்பந்தமான இடங்களையும், கோயில்கள் உள்ள இடங்களையும் தனியாகப் பிரித்தொரு ராஜ்யமாக்க வேண்டுமென்று கூறு கிறார்கள். இந்த விஸ்தீரணம் மேற்கே சீனாப் நதியிலிருந்து கிழக்கே யமுனை வரையும் தெற்கே ராஜபுதன எல்லையிலிருந்து வடக்கே காஷ்மீர், வட மலைப்பிரதேசம் வரையும் பரவியிருக்கிறதென்று அவர்கள் பாத்தியம் கொண்டாடுகிறார்கள். திரு. வி. எஸ். பட்டி, காலிஸ்தான் என்று ஒரு சிறு வெளியீடு பிரசுரித்திருக்கிறார். மேற்கே பாகிஸ்தானுக்கும் கிழக்கே இந்துஸ்தா னுக்கும் மத்தியில் காலிஸ்தான் இருப்பதாகக் கூறி அதற்கு எல்லை கட்டியிருக் கிறார். உத்தேசிக்கப்பட்ட சீக்கிய ராஜ்யத்தின் எல்லைகள் 'வடக்கே காஷ்மீரம்; வடமேற்கு, மேற்கு, தென்மேற்கில் சீனாப் நதியும், முல்தானுக்கப்பா லுள்ள பஞ்சாபும்; தெற்கே ராஜபுதனமும் கச் வளை குடாவும்; கிழக்கே யமுனை நதி; வடகிழக்கே சிம்லாக் குன்று நாடுகளும் குலுவும். இந்தச் சீக்கிய ராஜ்யம் கால்சாவின் இருப்பிடமாக யிருக்குமாதலால் இதைக் காலிஸ்தான் என்று கூறுவது பொருத்தமில்லாமல் போகாது. அதில் பொதுவாகக் கீழ்க்கண்ட சீக்கிய ராஜ்யங்கள் இருக்கும்: பாட்டியாலா, நாபா, ஜிந்த், பரீத்கோட், கபூர்தலா, கால்சியா, மாலர்கோட்லா, சிம்லாக் குன்று ராஜ்யங்கள், லூதியானு

டிவிஷன்கள் அல்லது ஜில்லாக்கள், ஜலந்தர், குலு, அம்பாலா, பெரோஸ்பூர், லாகூர், அமிர்தசரஸ், லயால்பூர், குஜரன்வாலா, ஷெய்குபுரா, மான்ட்கோமரி, ஹிஸார், ரோட்டக், கர்னல், முல்தான், டில்லி. சீக்கியர்களுக்குக் கடற்கரையும் துறைமுகமும் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் மற்றவர்களால் சுற்றி வளைக்கப்பட்டு விடுவார்கள். வியாபாரத்திற்கு அந்நியரை நம்பி வாழவேண்டியதிருக்கும். ஆகவே சிந்து கடற்கரையோரமும், பாஹல்பூர், ராஜபுதன ஓரங்களும் கிடைத்து கச் வளைகுடாவுக்கு வழி கிடைக்கவேண்டும்.'[1]

இந்துஸ்தான் ரெவ்யூவில் திரு. செயின்ட் நிகல்ஸிங் எழுதிய கட்டுரையில் 'பஞ்சாபைப் பிரிப்பதற்கான திட்டம்' என்று ஒன்று வெளியிட்டிருக்கிறார். பாகிஸ்தான் ஏற்படுவதுண்டானால் சீக்கியரும் தங்களுக்கு 'ஆஸாத் பஞ்சாப்' வேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள் என்று கூறுகிறார்.

அதில் பிரிட்டிஷ் இந்தியாவைச் சேர்ந்த 3,500,000 சீக்கியர்களும் சுதேச சமஸ்தானங்களைச் சேர்ந்த 1,250,000 சீக்கியர்களும் இருப்பார்கள். அதாவது மொத்தத்தில், 1941 ஜனக்கணக்குப்படி அவர்களது மொத்த ஜனத்தொகையான 50 லக்ஷத்து 10 ஆயிரத்தில் கிட்டத்தட்ட 4,800,000 சீக்கியர்கள் இந்த ஆஸாத் பஞ்சாபிலிருப்பார்கள். அவர் ஆஸாத் பஞ்சாபின் எல்லைகளை விவரமாகக் கூறியிருந்தாலும் ஒன்றும் உறுதியாகக் கூறவில்லை. 'மிகவும் தகராறுக்கிடமான இந்தப் பிரசினையில் நடுநிலைமை வகிக்கத் தகுந்த மனிதர்களாலாகிய கமிட்டியிடம் இந்த எல்லை கட்டும் வேலையை ஒப்படைக்க வேண்டுமென்று உத்தேசிக்கப்படுகிறது. இந்த முடிவை 1943 ஜுன் 5-ம் தேதி வெளியிட்டார்கள். இத்திட்டத்தைக் கொண்டுவந்தவர்கள்—சிரோமணி அகாலிதல்—எல்லைகளைத் தீர்மானிக்கும்போது ஜனத்தொகை, சொத்து, நிலவருமானம், கலாசார வளமைகள், சரித்திரத் தொடர்புகள் முதலிய விஷயங்கள் எல்லாம் ஒழுங்காகக் கவனிக்கப்படும் என்று வாக்குறுதியளித்திருக்கிறார்கள். அத்திட்டம் சீக்கிய ராஜ்யத்தை கமிஷனர்களால் ஆளப்படும் 4 பிரிவுகளாகப் பிரிக்கிறது. அவைகளின் பெயர் முல்தான் (ஒரு பாகம் மாத்திரம்), லாகூர், ஜலந்தர், அம்பாலா—இதில் வரும் ஜில்லாக்கள் :

முல்தான் டிவிஷன் :—முல்தான் (ஒரு பாகம் மாத்திரம்), மான்ட்கோமரி, லயால்பூர், ஜாங்,முஜாபர்கார்.

லாகூர் டிவிஷன் :—லாகூர், ஷெய்குபுரா, குஜரன்வாலா, அமிர்தசரஸ், குர்தாஸ்பூர், சயால்காட்.

ஜலந்தர் டிவிஷன் :—ஜலந்தர், ஹோஷியார்பூர், காங்ரா, லூதியானு, பெரோஸ்பூர்.

அம்பாலா டிவிஷன் :—அம்பாலா, கர்னல், ஹிஸார், ரோட்டக், கர்கான், சிம்லா.

மான்ட்கோமரி ஜில்லாவின் ஓரமாக உள்ள முல்தான் ஜில்லா பாகத்தை விலக்கிவிட்டால் ஆஸாத் பஞ்சாபில் 200,00,000 பேர் இருக்கிறார்கள். விவரம் :

| | |
|---|---|
| சீக்கியர்கள் | 34,42,508 |
| முஸ்லிம்கள் | 91,91,608 |
| இதர முஸ்லிமல்லாதார்கள் (பெரும்பாலும் இந்துக்கள்) | 72,45,336 |
| மொத்தம் | 198,79,452 |

1. V. S. Bhatti: *Khalistan*, p. 4.

திரு. செயின்ட் நிகல்சிங் சொல்லியிருப்பதைப்போல 'இந்துக்களின் மீது கொண்ட அவநம்பிக்கை முஸ்லிம்களின் மனத்தைக் கெடுத்துவிட்டது. ஆகவே பாகிஸ்தான் திட்டம் கொண்டுவரப்பட்டது.

'முஸ்லிம்களின் மீது கொண்ட அவநம்பிக்கை சீக்கியர் மனத்தைக் கெடுத்துவிட்டது. ஆகவே பஞ்சாபைப் பிரிப்பதற்கு ஒரு திட்டம் புகுத்தப் படுகிறது. இத்திட்டத்தின் ஆதரவாளர்கள் அரசியல் வீரமும் நிர்வாகத் திறமையும் உடையவர்கள். இத்திட்டத்தைச் சாத்தியமாக்க அவர்கள் உறுதி கொண்டுள்ளார்கள்.' ஆகையினால் பாகிஸ்தான் வற்புறுத்தப்படுமாகில் சீக்கியர்களைப் புறக்கணிக்க முடியாது. அவர்களுடைய ஷரத்துக்களுக் கிணங்க அவர்கள் ஒரு பிரிவினைத் திட்டத்தை வற்புறுத்துகிறார்கள்.

1905-ல் கர்சன் பிரபு வங்காளத்தைப் பிரித்து இரண்டு மாகாண அரசாங்கங்களை ஏற்படுத்தினர் என்பது ஞாபகமிருக்கும். ஒன்றில் அஸ்ஸாமும், வங்காளத்தின் வடக்குக்கிழக்கு ஜில்லாக்களும் அடங்கியிருந்தன. இன்னொன்றில் வங்காளத்தின் இதர ஜில்லாக்களும், பீஹார் ஒரிஸ்ஸாவும் சேர்ந்திருந்தன. இந்தப் பிரிவினை பொதுவாக வங்காள இந்துக்களாலும் செல்வாக்குள்ள சில முஸ்லிம்களாலும் மிகவும் தீவிரமாக வெறுக்கப்பட்டது. இந்த நூற்றாண்டின் முதல் பத்து வருஷத்தில் ஏற்பட்ட பிரிவினை எதிர்ப்புக் கிளர்ச்சியை இது உண்டாக்கியது. நாடெங்கும் தேசீய உணர்ச்சியைத் தட்டி எழுப்பியது. சுதேசி ஆதரிப்பு இயக்கமும் பிரிட்டிஷ் சரக்குகளை விட்டொழிக்கும் இயக்கமும் தொடங்கப்பட்டன. பிரிவினை நிரந்தரமாக்கப்பட்ட விஷயமென்று சொல்லியிருந்தாலும்கூட இறுதியில் பிரிட்டிஷ் அரசாங்கம் அத்திட்டத்தை ரத்துசெய்து விட்டது. முஸ்லிம்களும் இதை எதிர்க்க ஆரம்பித்தபின், இந்தப் பிரிவினை முஸ்லிம்களின் நன்மைக்காக ஏற்பட்டதென்று சொல்லப்பட்டதாயினும், அவர்களுக்கும் இது அதிருப்தியை உண்டாக்கியது. வங்காளத்தில் பாகிஸ்தான் பிரகாரம் பிரிக்கப்படும் விஸ்தீரணம் முந்திய 1905-ம் வருஷத்தில் பிரிக்கப்பட்ட கிழக்கு வங்காளத்தை ஒத்திருக்கும் என்று 1940 மார்ச்சில் நிறைவேற்றப்பட்ட முஸ்லிம் லீக் தீர்மானத்தின் விவாதத்தை விளக்கும்போது - இப்பொழுது - சொல்லப்படுகிறது. முந்திய பிரிவினையைத் தங்களது உக்கிரமான கிளர்ச்சியால் 1911-ல் முறித்தெறிந்த வங்காள இந்துக்கள் இப்பொழுது அதை பணிந்தேற்றுக் கொள்ளமாட்டார்கள். வங்காளத்தை இதர பாகத்திலிருந்து துண்டித்து விடுவதை அவர்கள் ஒருகாலும் சம்மதிக்கப் போவதில்லை. இக்காரியத்தில் இந்தியாவின் மற்றப் பாகங்களிலுள்ள இந்துக்களெல்லாம் அவர்களுக்குத் துணை நிற்பார்கள். ஆகவே நான் லீகின் லாகூர் தீர்மானத்தினல் ஏற்படும் சிக்கல்களை எடுத்துக் காட்டியதோடு திருப்தியடைகிறேன்.

## 29. விவசாயம்

நாம் இப்பொழுது முஸ்லிம் ராஜ்யங்களின் வளங்களைக் கவனிப்போம். இந்தியா ஒரு விவசாய நாடு. இங்குள்ள ஜனத்தொகையில் பெரும் பகுதி, முஸ்லிம் மண்டலத்திலும் சரி, முஸ்லிமல்லாத மண்டலத்திலும் சரி, தனது வாழ்வுக்கும் ஆதரவுக்கும் விவசாயத் தொழிலையே நம்பி யிருக்கிறது. ஆகவே இவ்விரு மண்டலங்களின் நீர், நிலவளங்களைக் கவனிப்பது அவசியமாகும்.

### 1. கிழக்கு மண்டலம்

முதன்முதலில் கிழக்கு மண்டலத்தைக் கவனிப்போம். இம்மண்டலம் செழிப்பானது. ஆனால் ஜனநெருக்கம் இங்கு அதிகம். சதுர மைலுக்கு 787 பேர் வீதம் வாழ்கின்றனர். நிலவளம் மிகுந்திருப்பினும் அங்குள்ள மக்களுக்குப் போதுமான உணவுப்பொருள் அங்கு கிடைக்கவில்லை. இதைக் கீழ்வரும் பகுதிகள் விளக்கும்.

1941-ல் வங்காளத்தின் மொத்த ஜனத்தொகை 6 கோடியே 3 லட்சத்திற்குச் சற்று அதிகம். காடுகளையும் உழவுக்குதவாத நிலங்களையும் தள்ளிய பின் மீதியுள்ள சாகுபடி நிலம் 1936-7-ல் மொத்தம் 3,51,07,049 ஏக்கர் இருந்தது. இதில் பயிர் செய்யப்பட்டு வருகிற நிலம் 2,44,66,300 ஏக்கர். பயிர் செய்யக்கூடிய, ஆனால் செய்யப்படாத மீதி நிலம் 1,06,40,749 ஏக்கர். ஆக, பயிர் செய்யப்பட்டு வருகிற நிலம் ஆளொன்றுக்கு 0·40 ஏக்கரும், பயிர் செய்யக்கூடிய, நிலம் ஆளொன்றுக்கு 0·17 ஏக்கரும் கிடைக்கும். இரண்டையும் கூட்டிப் பார்த்தால் 1941 ஜனக்கணக்குப்படி தலைக்கு 0·57 ஏக்கர் நிலத்துக்கு அதிகமாக யாருக்கும் சாகுபடிக்கு நிலம் கிடைத்து விடாது. இப்புள்ளி விவரங்களை முஸ்லிம் மண்டலத்திற்கும் முஸ்லிமல்லாத மண்டலத்திற்குமாகத் தனியாகப் பிரித்துக் கவனித்தால் நிலைமை கீழ்க்கண்டவாறிருக்கும்.

### அட்டவணை XXI

| | விவசாயத்துக்கான விஸ்தீரணம் (ஏக்கர்) | | விவசாயம் நடக்கும் விஸ்தீரணம் (ஏக்கர்) | | விவசாயத்துக்கான மீதி விஸ்தீரணம் (ஏக்கர்) | | விவசாயம் நடக்கும் விஸ்தீரணம் | விவசாயத் துக்கான விஸ்தீரணம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| | மொத்தம் | நபர் 1க்கு | மொத்தம் | நபர் 1க்கு | மொத்தம் | நபர் 1க்கு | (சத. விகிதம்) | |
| முஸ்லீம் பகுதி | 2,39,48.462 | 0.58 | 1,78,33,600 | 0.43 | 61,14,862 | 0.14 | 74.4 | 25.6 |
| முஸ்லிம்அல் லாதார்பகுதி | 1,11,58,587 | 0.57 | 66,32,700 | 0.34 | 45,25,887 | 0.23 | 59.4 | 40.6 |

இதிலிருந்து ஆளொன்றுக்குக் கிடைக்கக்கூடிய சாகுபடி நிலம் முஸ்லிம் மண்டலத்திலும் முஸ்லிமல்லாத மண்டலத்திலும் ஒரே அளவாக இருப்பது தெரிய வருகிறது. ஆனால் முஸ்லிம் மண்டலத்தில் மிகச் சொற்பமான நிலம் தவிர பாக்கி எல்லா நிலமும் சாகுபடியாக்கப்படுகிறது. முஸ்லிமல்லாத மண்டலத்திலோ இதைவிடக் கூடக்கொஞ்சம் நிலம் சாகுபடி செய்யப்படாமலிருக்கிறது. சிட்டகாங் குன்றுப் பிரதேசங்களில் நிலைமை இப்படித்தான் இருக்கிறது. இங்கு ஜனத்தொகை மிகக் குறைவு. பூராவும் மலை

ஜாதியினர். சாகுபடி செய்யக்கூடிய நிலங்கள் இவர்களுக்கு அதிக மிருக்கின்றது. 2,47,053 ஜனத்தொகையுள்ள இவர்களுக்கு விவசாயத்துக்கு வரும்படியான, ஆனால் விவசாயம் செய்யப்படாமலிருக்கும் நிலம் 14,22,017 ஏக்கர் இருக்கிறது. ஆகையால் ஆளொன்றுக்கு இவர்களுக்கு 5·75 ஏக்கர் நிலம் அதிகமாகக் கிடைக்கும். முஸ்லிம் மண்டலத்திலோ ஆளொன்றுக்கு 0·14 ஏக்கர்தான். அநேகமாய் அந்த நிலம் மலைஜாதியினர்களுக்கு ஒதுக்கப்படும். அப்படி ஒதுக்கப்பட்டுவிட்டால் மேற்கண்ட புள்ளி விவரத்தில் காட்டப்பட்ட தற்குக் குறைவாகவே ஒவ்வொருவருக்கும் கிடைக்கும்.

ஜனத்தொகை பெருகிக்கொண்டு வந்திருக்கிறதென்பதை ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும். அதுவும் இந்த மாகாணத்தின் கிழக்கு அல்லது முஸ்லிம் மண்டலத்திலேயே அதிகமான பெருக்கம் இருந்திருக்கிறது. டாக்கா (சதுர மைலுக்கு 1,542 பேர்), மைமன்சிங் (சதுரமைலுக்கு 979 பேர்), பரித்பூர் (சதுரமைலுக்கு 1,024 பேர்), திப்பேரா (சதுரமைலுக்கு 1,525 பேர்), நவகாளி (சதுரமைலுக்கு 1,337 பேர்) முதலிய ஜில்லாக்கள் ஜனநெருக்கமுள்ளவை. 1936-7-ல் எடுத்த கணக்குப்படி இந்த ஜில்லாக்களிலுள்ள சாகுபடிக்கேற்ற மொத்த நிலங்களில் முறையே 95·6, 84, 99, 93, 92 சதவிகிதம் பயிர் செய்யப் பட்டு வந்தன. டாக்கா, சிட்டகாங் டிவிஷன்கள் முழுதும் முஸ்லிம் மண்டலத்தில் சேருவன. 1881-க்கும் 1931-க்கும் இடையே இங்கு ஜனப்பெருக்கம் 60 சதவிகிதமும், 88 சதவிகிதமுமாகும். 1931-க்கும் 1941-க்கும் இடையே 19·9 சதவிகிதமும் 25·2 சதவிகிதமுமாகும். ராஜஷாகி டிவிஷனில் இரண்டு ஜில்லாக்கள் தவிர மற்றப் பாகம் முஸ்லிம் மண்டலத்தில் சேருவன. இங்கு 1881-க்கும் 1931-க்குமிடையே ஜனப்பெருக்கம் 26 சதவிகிதம். 1931-க்கும் 1941-க்கும் இடையே 12·8 சதவிகிதம். கல்கத்தா, 24 பர்கானு இவைகள் போக மீதியுள்ள பிரஸிடென்ஸி டிவிஷனில், இதேபோல 1931-க்கும் 1941-க்கும் இடையே ஏற்பட்ட ஜனப்பெருக்கம் 15·6 சதவிகிதம்.

இக்கணக்குகளிலிருந்து வங்காளத்தில் இன்னும் மேற்கொண்டு சாகு படிக்குக் கொண்டுவரக்கூடிய நிலம் வெகு குறைவாயிருப்பது தெரிகிறது. முஸ்லிம் மண்டலத்திலோ இன்னும் குறைவு; அநேகமாக நிலமே இல்லை யென்றுகூடக் கூறிவிடலாம். ஆகையால் இயற்கையான ஜனப்பெருக்கத்திற் கேற்றவண்ணம் சாகுபடி நிலமும் பெருகிக்கொண்டு போவதிற்கில்லை. எதிர்கால ஜனப்பெருக்கத்தைப்பற்றிக் கவலைப்படுவதைத் தற்சமயம் நிறுத்திக் கொண்டு இப்பொழுதுள்ள ஜனத்தொகையைக் காப்பாற்றுவதற்காவது அந்த மாகாணத்தில் உணவுப்பொருள் கிடைக்கிறதா என்பதைப் பார்ப்போம். உணவுப்பொருள் விஷயத்தில் வங்காளம் பற்றுக்குறை மாகாணம் என்பது பின்னால் காட்டப்பட்டிருக்கிறது. 1943-ல் ஏற்பட்ட பஞ்சமும் இவ்வுண் மையை நம் மனம் கண்டு பதறும் முறையில் உணர்த்தியது. இப்பஞ்ச ஆபத்துச் சூழ்வதற்குப் பல காரணங்களிருந்தன என்பதில் ஐயமில்லை. இருந்தாலும் பற்றுக்குறைக் காரணத்தை ஒதுக்கிவிடவோ, குறைவுபடுத்தவோ முடியாது. கலப்பையை நம்பி வாழும் மனிதன் என்ற தமது நூலில் சர் அசிசுல் ஹக் கூறுவதாவது: 'இம்மாகாணத்து மக்களின் பிரதான உணவு அரிசி. உழவனுடைய முக்கிய உணவு அரிசியும் பருப்பும். காய்கறி, மீன், புலால் போன்ற இதர உணவுகள் இவனுக்கு மிகக் குறைவு. தினம் மூன்று வேளையும் இவன் அரிசிச் சோற்றையே உண்ணுகிறான். இம்மாகாணத்தில் நெல் சாகுபடி செய்வது நாட்டு மக்களின் உடல்நலத்தைப் பேணிக் காக்கின்ற காரியமாகும்.

எனினும், தன்னளவுக்குப் போதுமான உணவைக்கூட வங்காளம் உற்பத்தி பண்ணவில்லை.'[1]

1931 ஜனக் கணக்குப்படியுள்ள 5,18,73,436 பேர்களில் 4 கோடிப் பேருக்கு மேலாக முழுச் சாப்பாடு வேண்டியவர்கள் என்று கணக்கிட்டிருக்கிறார். அரிசி யுணவு கொள்ளாதவர்களும், முழுச் சாப்பாடு தேவையற்ற குழந்தைகளும் இதில் சேர்க்கப்படவில்லை. 'ஆளொன்றுக்கு தினம் 14 சாடக்குகள் (ஒரு சாடக், 2·2 அவுன்ஸுக்குச் சமம்) வீதம் ஒரு வருஷத்துக்கு மொத்தம் 31 கோடியே 90 லட்சம் மணங்கு அரிசி வேண்டும்.[2] சிறையில் அளிக்கப்படும் அளவான 12 சாடக்குகள் வீதம் பார்த்தாலும் மொத்தம் 27 கோடியே 30 லட்சம் மணங்கு அரிசிக்குச் சற்று அதிகம் தேவைப்படும். 14 சாடக்குகள் வீதம் நெல்லுக்குக் கணக்கிட்டால் 47 கோடியே 90 லட்சம் மணங்குகளும் 12 சாடக்குகள் வீதம் கணக்கிட்டால் 41 கோடி மணங்குகளும் வேண்டும்.'[3] 1936-37-ன் விதைப்புக் கணக்குப்படி ஏக்கருக்கு ஒரு மணங்கு வீதம் 2·2 கோடி ஏக்கருக்கு வேண்டிய 2·2 கோடி மணங்கைக் கூட்டிக் கொள்வோம். அந்த மாகாணத்தில் அரிசி உணவுகொள்ளும் வயதுவந்த நபருக்கு 14 சாடக்குகள் அல்லது 12 சாடக்குகள் என்பதைப் பொறுத்து மொத்தம் தேவையான நெல் 50·1 அல்லது 43·2 கோடி மணங்குகள் ஆகும். 1927-28 முதல் 1936-7 வரை பத்து வருஷ காலத்திய மகசூலைக் கணக்கிட்டு, 14 சாடக்குகள் அல்லது 12 சாடக்குகள் என்பதையொட்டி, வருடாவருடம் சராசரி 16·1 அல்லது 9·3 கோடி மணங்கு பற்றாக்குறையாக இருந்ததென்று சர் அசிசுல் ஹக் கூறுகிறார். வங்காளத்தின் மகசூலோடு அங்குவரும் இறக்குமதியில் மீண்டும் ஏற்றுமதியாகும் அளவைக் கழித்து மீதி உள்ளதைக் கூட்டினால் 3¾ லட்சம் டன் நெல்லுக்குச் சமமான 2½ லட்சம் டன் அரிசி கிடைக்கிறது. அதாவது கிட்டத்தட்ட ஒரு கோடி மணங்கு நெல். 'சராசரியில் 16 கோடியே 10 லட்சம் மணங்கு பற்றாக்குறையாக இருக்கும்பொழுது இந்த 10 லட்சம் மணங்கு வந்து நிலைமையில் பிரமாதமான மாறுதலொன்றையும் ஏற்படுத்தவில்லை. ஆகவே மாகாணத்தின் அரிசி உற்பத்தி, குறைந்தபட்சத் தேவைக்கும் போதாதபடி குறைவாகவே இருக்கிறது.'[4]

---

1. Sir Azizul Haque: *The Man behind the Plough*, p. 51.

2. ஒரு அவுன்ஸ் அரிசியில் 108-லிருந்து 114 வரை காலரி என்னும் உஷ்ணச் சத்துகள் இருக்கின்றன. (இதை ஆர். என். சாப்ரா எழுதிய Tropical Theraputics என்னும் நூலில் 1632-ம் பக்கத்தில் காணலாம்.) 2·2 அவுன்ஸ் ஒரு சாடக்குக்குச் சமம். ஆகவே ஒரு அவுன்ஸுக்கு சராசரி 111 காலரிகள் என்று வைத்துக்கொண்டால் 244 காலரி உஷ்ணச் சத்துகள் ஒரு சாடக் அரிசியில் இருக்கின்றன. 14 சாடக் அரிசியில் 3416 காலரியும் 12 சாடக் அரிசியில் 2928 காலரியும் கிடைக்கும். ஆனால் இதற்கு ஒவ்வொரு அணு அரிசியும் உஷ்ணமாக மாறவேண்டும். நடைமுறையில் இப்படி நடப்பதில்லை. சிறிது உழைப்போடு வீட்டிலேயே இருக்கும் ஆணுக்கும் பெண்ணுக்கும் சராசரி 2500 காலரி இருக்க வேண்டுமென்றும் தேக உழைப்பு இல்லாமல் உட்கார்ந்த இடத்திலேயே அலுவல்களைக் கவனிப்போருக்கு 3000 காலரி வேண்டுமென்றும், சாதாரண வேலையில் ஈடுபட்ட தொழிலாளிக்கு 3500 காலரியாவது இருக்க வேண்டுமென்றும் கஷ்டமான வேலையில் உள்ளவனுக்கு 4000 காலரியாவது அல்லது அதற்கு மேலாவது இருக்க வேண்டுமெனவும் அந்நூலாசிரியர் கூறுகிறார்.

3. Haque, op. cit., p. 52.

4. *ibid.*, pp. 55-6. இதில் அச்சுப்பிழை உளதென்று விளங்குகிறது. 10 லட்சம் என்பதை ஒரு கோடி என்று படிக்கவேண்டும்.

திரு. காளிசரண்கோஷ், **1770-1943**க்கு இடையிலேற்பட்ட வங்கப் பஞ்சங்கள் என்றொரு நூல் எழுதியிருக்கிறார். ஜனத்தொகையைச் சேர்ந்த ஒவ்வொரு வருக்கும் 5·5 மணங்குவீதம் வங்காளத்திற்கு மொத்தம் 25·7 கோடி மணங்கு அல்லது 93·70 லட்சம் டன் அரிசி தேவையென்று கணக்கிட்டிருக்கிறார். இந்தக் கணக்கில், ஒரு நாளைக்கு இரண்டுவேளை உணவு தேவையற்ற குழந்தைகள், கைம்பெண்கள் முதலியோரைச் சேர்க்கவில்லை. தேவை முற்கூறியவாறிருக்கக் கிடைப்பதோ சராசரியில் 85 லட்சம் டன். அதனால் 13·46 லட்சம் டன் அல்லது சுமார் 3·67 கோடி மணங்கு வருஷாவருஷம் பற்றாக்குறையாகிறது.[5] 16·1 அல்லது 93 கோடி மணங்கு பற்றாக்குறையென்று சர் அசிசுல் ஹக் கூறும்போது காளிசரண் கோஷின் கணக்கு அதற்கு மிகமிகக் குறைவு. வயதுவந்த நபரின் ஒரு நாளைத் தேவை 14 அல்லது 12 சட்டாக்குகள் என்று வைத்து சர் அசிசுல் ஹக் கணக்கிடும்போது திரு. கோஷ் ஒரு நாளைத் தேவையை 10 சாடக்குகளுக்கும் குறைவாகக் கணக்கிட்டிருப்பதே இக்குறைவுக்குக் காரணம்.

வங்காளத்தின் ஜனத்தொகை வளர்ச்சிக் கேற்றவாறு தரிசு நிலங்கள் விளை நிலங்களாக மாறவில்லை; மாற்றவும் முடியாது; அதிலும் சிறப்பாக முஸ்லிம் மண்டலத்தில் அப்படித்தானிருக்கிற தென்பதையும் கண்டோம். அங்கு விளையும் தானியத்தைக் கொண்டே வங்காளத்திற்கு அதிக உண வளிக்கும் வழியென்ன? சாகுபடி நிலத்தை அதிகப்படுத்துவது இதற்குரிய வழியல்ல. விளைச்சலை அதிகப்படுத்துவதே இதற்குரிய வழி. இப்பொழு துள்ள நிலைமையில் முஸ்லிம் மண்டலத்தில் கால்வாய் மூலமாகவோ வேறு விதமாகவோ நீர்ப்பாசனம் செய்ய வசதியில்லை. அந்த மாகாணத்தில் பர்த்வான் டிவிஷனில் பர்த்வான் ஜில்லாவிலும் மிட்னாப்பூர் ஜில்லாவிலும்தான் இரண்டு கால்வாய்களிருக்கின்றன. முஸ்லிம் மண்டலம் வானம் பார்த்த பூமியாகவே இருக்கவேண்டி யிருக்கிறது. கிழக்கு முஸ்லிம் மண்டலத்தில் ஏதாவது செயற்கை நீர்ப்பாசன வசதி செய்யமுடியுமா என்பது சந்தேகமான விஷயம். அங்குள்ள நிலத்தில் பெரும்பாகம் சாதாரணமாகச் சதுப்பு நிலமாக இருக் கிறது. பஞ்சத்தினால் கஷ்டப்படுவதைக் காட்டிலும் வெள்ளத்தாலும் கடும் புயலாலும் இப்பாகம் கஷ்டப்படுகிறது. ஆகையால் ஏதாவது நீர்ப்பாசன வசதிகளால் இங்குள்ள நிலம் அதிக மேனி காணும்படி செய்யமுடியுமா என்பது சந்தேகம். வருஷா வருஷம் இங்குள்ள பெருநதிகள் வெள்ளப் பெருக்கெடுத்து நாசத்தை உண்டுபண்ணுகின்றன. இந்த நாசத்துக்குப் பதிலாக மக்களுக்கு நன்மை அளிக்கும் முறையில் இந்த ஆறுகளை வகைப்படுத்த விஞ்ஞானத் துறை யால் முடியும். இது நம் சக்திக்கு மீறிய காரியமல்ல. இப்படிச் செய்தால் உணவுப் பொருள் உற்பத்தி பெருகலாம் என்று நம்புவோமாக.

குடியானவர்களுக்குச் சொந்தமாயிருக்கும் நிலங்கள் துண்டுபட்டுச் சிறு சிறு அளவில் இருக்கின்றன, இந்தத் துண்டாடும் வேலை மேலும் மேலும் நடந்து வருகிறது. ஆகையால் முழு மும்முரத்தில் சாகுபடி செய்வது கஷ்ட மான காரியம். 5 பேர்கள் உள்ள ஒரு விவசாயக் குடும்பத்தின் நிலப்பரப்பு சாதாரணமாக 7 ஏக்கர் என்று சர் அசிசுல் ஹக் கூறுகிறார். அதில் 5·3 ஏக்கர் சாகுபடி செய்யப்படுகிறது. 1·7 ஏக்கர் தரிசு போடப்படுகிறது. நிலத்தின் ஒரு பகுதி இருபோகம் விளையக் கூடுமென்பதைக் கவனிக்கும்போது ஒரு குடும் பத்தின் மொத்த சாகுபடி நிலம் 6·5 ஏக்கர்: அதில் 5 ஏக்கர் நெல் சாகுபடி

5. K. C. Ghosh: *Famines in Bengal*, 1770-1943, Appendix, pp. 193-4.

நிலம்; ½ ஏக்கர் சணல் சாகுபடி; 1 ஏக்கர் இதர தானியம் என்று அவர் கூறுகிருர்.[6] இதோடு இன்னெரு விஷயமும் கவனிக்கவேண்டும். ஒரு விவசாயியின் நிலம் 7 ஏக்கராக இருந்தாலும் அந்த 7 ஏக்கரும் ஒரே இடத்தில் இல்லாமல் நாலா மூலையிலும் சின்னஞ் சின்னமாகச் சிதறிக்கிடக்கும். இடையிடையில் மற்றவர்களது நிலம் குறுக்கிடும். உரம் போடுவதால் தவிர வேறு எந்த வழியிலும் இந்தத் துண்டு துணுக்கு நிலங்களின் மேனியை அதிகப்படுத்த முடியுமென்பது சிரமமான காரியம் அதிக மழை உரத்தை அடித்துக்கொண்டு போய்விடுகிறது. அநேக மாதங்களுக்கு நிலத்தில் தண்ணீர் கட்டியே இருக்கும். ஆகையால் செயற்கை முறையில் உரமிடுவதற்கும் இசையாமலிருக்கிறது. ஜமீன்தார்களுக்கு ஒரு குறிப்பிட்ட வரி செலுத்துகிருர்களென்பது தவிர மற்றப்படி இந்தச் சின்னஞ் சிறு நிலங்களின் விவசாயிகள், ஏறக்குறைய நிலத்திற்குப் பாத்தியமுள்ள சொந்தக்காரர்கள் போலவே இருக்கிருர்கள். இந்த விவசாயிகள் தாங்களே தீவிரமாகச் சாகுபடி செய்வதற்குப் பதிலாகப் பெரும்பண்ணை விவசாயம் நடத்தினுல் அதிகப்பலனை எதிர்பார்க்கலாமென்று வைத்துக்கொண்டாலுங்கூட அதுவும் கூட்டுப் பண்ணை முறையில்தான் சாத்தியமாகும். இந்த முறையை இந்தியக் குடியானவர்களிடைப் புகுத்துவது அவ்வளவு எளிதல்ல. இந்துவாயினும் முஸ்லிமாயினும் தனது சொற்ப நிலபுலன்கள் மீதும் அபாரப்பற்றுள்ளவன். மற்றவர்களது நிலத்தோடு அவனுடைய நிலத்தை ஒன்று சேர்க்கும்படி தூண்டுவதோ அல்லது வற்புறுத்துவதோ அவனிடம் எளிதில் நடைபெருது.

இப்போது இதர விளைபொருள்களின் நிலைமையைக் குறிப்பிட்டால் மாத்திரம் போதுமானது. இந்த மாகாணத்தின் தேவைக்குப் போதிய அளவில் கரும்பு, பயறுகள், எண்ணெய் வித்துக்கள் விளையவில்லை. இப்பொருள்களுக்கோ அல்லது இவற்றின் செய் பொருள்களுக்கோ இந்த மாகாணம் இதர இடங்களையே எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது.

மக்களின் உணவில் சர்க்கரை மிக முக்கியமான அம்சமாகும். ஒரு காலத்தில் வங்காளம் சர்க்கரையை நிறைய உற்பத்தி செய்ததுண்டு. இப்பொழுது நிலைமை வெகுவாக மாறிவிட்டது. 'இந்தியாவுக்குள் இறக்குமதி செய்யப்படும் மொத்த சர்க்கரையில் வங்காளம் 13 சத விகிதத்தை உபயோகிக்கிறது. அதன் சர்க்கரை உற்பத்தியோ இந்தியாவின் மொத்த உற்பத்தியில் 2·8 சத விகிதமே. 1935-36-ல் இந்த மாகாணத்தில் 20,79,494 மணங்கு வெல்லமும், 29,43,311 மணங்கு மாவுச் சர்க்கரையும் இறக்குமதியாயிற்று. 1936-37ல் வங்காளம் 6,25,175 மணங்கு மாவுச் சர்க்கரை உற்பத்தி செய்தது. ஆனுல் 35,39,250 மணங்கு சர்க்கரையை உபயோகித்தது.'[7]

சரியான சத்துணவில் எண்ணெயும் அவசிய இடம் பெற்றது. சர் அசிசுல் ஹக் கூறுவதாவது—'வங்காளம் இன்னும் கடுகெண்ணெயை அதிகமாகவே உபயோகிக்கிறது. 1914-15-ல் எண்ணெய் வித்துக்களின் சாகுபடி நிலம் 14,59,100 ஏக்கர். 1934-35ல் இது 7,23,800 ஏக்கராகி விட்டது. 20 வருஷ காலத்திற்குள் பாதிக்கும் குறைந்து விட்டது.'[8] இந்தியாவின் புள்ளி விவரக் கணக்கு[9]ப்படி 1939-40-ல் வங்காளத்தில் விளைந்த மொத்தம் எண்ணெய்

6. Haque: op. cit., pp. 93-4.
7. *ibid.*, p. 91.
8. *ibid.*, p. 39.
9. *Statistical Abstract of India*, 1930-31 to 1939-40, p. 556.

வித்து (ஆளி விதை, எள், கடுகு,............) 2,05,000 டன் அல்லது 55,96,500 மணங்கு. அதை 33·3 சத விகித முறையில் எண்ணெயாக மாற்ற 18,65,500 மணங்காகும். ஜனத் தொகையில் நபர் ஒன்றுக்கு ஆண்டொன்றுக்கு 1¼ சேர் வீதம் கிடைக்கிறது. நபர் ஒன்றுக்கு நாளொன்றுக்கு ½ சாடக்கு எண்ணெய் (சிறையில் அளிக்கப்படும் அளவைவிடக் குறைந்த அளவே) வீதம் கணக்கிட்டால் ஜனத் தொகையில் ஆளொன்றுக்கு ஆண்டொன்றுக்கு 10 சேர் பற்றுக் குறையாகிறது. தெளிவாகக் கூறப்போனுல், தன் தேவையின் 11 சத விகிதமே வங்காளம் எண்ணெய் உற்பத்தி செய்கிறது. உற்பத்தி செய்கிறதைப்போல் எட்டு மடங்கு இறக்குமதி செய்ய வேண்டியிருக்கிறது.

பயறு தினுசுகளைப்பற்றி ஏறத்தாழக் கணக்கிட்டுப் பார்த்தாலும் 80 சத விகிதம் பற்றுக்குறையாகிறது. ஆகவே இந்தக் குறையைச் சரிக்கட்ட இறக்குமதி செய்ய வேண்டியிருக்கிறது.

1943-ம் வருடப் பஞ்சம் வங்காளத்தின் மோசமான உணவு நிலைமையை எடுத்துக் காட்டியதைப்போல, இந்தியா முழுதும் அப்பஞ்சத்தைப் போக்க எவ்வாறு விரைந்துவந்து உதவி செய்ததென்பதையும் எடுத்துக் காட்டியது. இதற்குப் பத்து ஆண்டுகளுக்குமுன் 1934-ல் பீஹாரில் பெரிய பூகம்பம் நிகழ்ந்தபோது இந்தியா முழுதும் எவ்வாறு அதற்கு உதவியதோ அதேபோல வங்காளத்துக்கும் உதவியது. பீஹார் பூகம்பத்தின் நாசவேலை சில நிமிஷங்களில் முடிந்துவிட்டது. அதன் கொடிய விளைவுகளை பீஹார் நெடுநாள் அனுபவிக்க வேண்டியிருந்தது. வங்கப் பஞ்சக் கொடுமைகளோவெனில் சகிக்க முடியாதவை, எடுத்துச் சொல்லவொண்ணுதவை. வங்காளம் பஞ்சத்தின் கொடூரங்களிலிருந்து இன்னும் தலைதூக்கவில்லை. இப்பஞ்சம் நமக்கு ஒரு படிப்பினையைக் கொடுக்கிறது. அதை அலட்சியம் செய்தால் நம்மைக் கேடு சூழும். வங்காளத்திற்குப் பிற மாகாண அரசாங்கங்களும், மத்திய அரசாங்கமும் விரைந்தோடி உதவின. பஞ்சத்தால் பரிதவித்துக் கொண்டிருக்கும் ஒரு நாட்டிற்கு ஆயிரம் மைல்கள் அல்லது அதற்கப்பாலும் உள்ள நாடுகள் உதவி செய்தனவா என்று பார்ப்பதிருக்கட்டும். வங்காளத்திற்குப் பிற மாகாணங்கள் உதவியதுபோல எங்கேனும் ஒரு சுதந்திர நாட்டிற்கு அவசரத் தேவைச் சமயத்தில் அதன் அண்டை அயல்நாடுகள் விரைந்தோடி உதவியிருக்கின்றனவா என்பது எனக்குத் தெரியாது. பிறகு ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ள நாடுகளைக் குறித்துப் பேசுவானேன் ?

1944 ஜூலை 24-ல் வங்க சட்டசபையில் கேள்விகளுக்குப் பதிலளிக்கும்போது கனம் சுஹ்ரவர்த்தி அரிசி, நெல் இறக்குமதி பற்றிக் கூறினர். 1943 ஜனவரி–டிசம்பருக்கிடையில் எல்லா மாகாணங்களிலிருந்தும், இடங்களிலிருந்தும் 54,33,437 மணங்கு அரிசியும் 5,27,934 மணங்கு நெல்லும் இறக்குமதியாயின. இதில் பீஹார், ஒரிஸ்ஸா மாகாணங்களிலிருந்து 26,18,009 மணங்கு அரிசியும், 3,38,532 மணங்கு நெல்லும் வந்தன. 1943 ஏப்ரல்–டிசம்பர் மாதங்களுக்கிடையில் வங்காளத்தில் இறக்குமதியான அரிசி, கோதுமை, கோதுமைப் பண்டங்கள், ஜோவர், பாஜ்ரா, சோளம், கொள்ளு, பயறுகள், பார்லி முதலிய உணவு தானியங்களின் பெறுமானம் ரூ. 21,18,74,165.[10]

மத்திய சட்ட சபையில் திரு. ஏ. என். சட்டோபாத்யாயா கேட்ட கேள்விகளுக்கு 1945 பிப்ரவரி 28-ல் உணவு அங்கத்தினர் சர் ஜே. பி. ஸ்ரீவஸ்தவா கூறியதாவது :—1944-ல் வங்க சர்க்கார் மொத்தம் பத்து லட்சம்

---

10. *Hindustan Standard*, Dtd. 26—7—'44.

டன்னுக்குமேல் அரிசி வாங்கிற்று. 1943 நவம்பரிலிருந்து 1944 நவம்பருக்கிடையில் 2,35,470 டன் அரிசி கிடைக்கும்படியும், 1943 ஏப்ரல் முதல் தேதியிலிருந்து 1944 ஏப்ரல் 30-ந் தேதிக்கிடையில் 4,69,127 டன் கோதுமை கிடைக்கும்படியும் மத்திய சர்க்கார் ஏற்பாடு செய்தது.[11]

இந்தியாவின் ஒரு பாகமாய் இருப்பதாலும் மத்திய சர்க்காரைக் கொண்டிருப்பதாலும் அவசரத் தேவைக் காலத்திலாவது வங்காளத்துக்கு உதவி வந்தது. எதிர்காலத்திலும் அப்படியே உதவி வருமாக.

வங்காளம், ஒன்றே ஒன்றில் அதாவது சணல் உற்பத்தியில் தான் செழித்திருக்கிறது. ஆனால் அது உணவுப் பயிரல்ல. வியாபாரப் பயிர். பணமாக மாற்றக்கூடியது. 1936–37-ல் வங்காளத்தில் சணல் சாகுபடியின் மொத்தப் பரப்பு 21,54,800 ஏக்கர். இதில் 20,11,800 ஏக்கர் வடக்கிலும் கிழக்கிலும் இருக்கின்றன. இவை முஸ்லிம் மண்டலங்களில் சேருகின்றன. 1936-37ல் 400 பவுண்டு நிறை கொண்ட 104 லட்சம் பேல்கள் உற்பத்தியாயின. அதில் 59 லட்சம் பேல்களை இந்நாட்டு ஆலைகள் எடுத்துக்கொண்டன. 49 லட்சம் பேல்கள் வங்காளத்திலிருந்து வெளிநாட்டுக்கு அனுப்பப்பட்டன. 1936–37 முடிய பதினைந்தாண்டுகளில் சணலின் சராசரி உற்பத்தி வருஷம் 95 லட்சம் பேல்கள்; உள்நாட்டு ஆலைகளின் சணல் கொள்முதலும் வெளிநாட்டு ஏற்றுமதியும் கிட்டத்தட்ட அதே அளவாக இருந்திருக்கின்றன. ஆனால் அதே காலத்தில் விலையில் ஏற்றத் தாழ்வு மிக அதிகமாக இருந்திருக்கிறது. 1925-26ல் ஒரு மணங்கின் ஏற்றமான விலை ரூ. 18-13-0. 1932–33, 1933–34, 1934–35ல் ஒரு மணங்கு விலை ரூ. 3-8-0.[12] சணலைப் பணமாக்கலாம். இதை விற்று விவசாயி நிலத் தீர்வை செலுத்தவும், துணிமணி வாங்கவும், இதரச் செலவுகள் செய்யவும் முடிகிறது. கிராமப் பொருளாதாரத்தில் இப்பயிர் முக்கியம் பெறுகிறது. ஆனால் இதன் விலையில் திடீர் ஏற்றத் தாழ்வுகள் ஏற்பட்டு விடுகின்றன. தேவைக்குச் சரியாக உற்பத்தி வராததால் இவ்வேற்றத் தாழ்வுகள் ஏற்படுகின்றனவென்று சொல்லுவதற்கில்லை. வியாபார மோசடிகளால் இவை நிகழ்கின்றனவென்று கூறுவதே பொருந்தும். இந்திய ஆலைகளும் வெளிநாட்டு வாடிக்கைக்காரர்களும் இன்ன விலைக்குத்தான் வாங்கிக் கொள்வோம் என்று ஓங்கிச் சொல்லக்கூடிய நிலையிலிருக்கிறார்கள். சணல் விவசாயி பொருளாதாரத்தில் மோசமான நிலையிலிருப்பதால் நல்ல விலை வருமட்டும் காத்திருக்க முடிவதில்லை. அவர்கள் கேட்கும் விலைக்கே விற்க வேண்டியதாக இருக்கிறது. விலைவாசி நடப்பு ஒருநிலையாக இல்லாததால் விவசாயிக்குச் சணல் விற்று வரவால் இவ்வளவுதான் பணம் கைக்குக் கிட்டும் என்று நம்பியிருப்பதற்கில்லை. இந்த நிலைமையில் உணவுப் பற்றுக்குறையைச் சமாளிப்பது அவனுக்குக் கஷ்டமாகிறது. சணலைக் கொள்முதல் செய்கிறவர்கள்—இந்தியாவிலும் சரி, வெளியிலும் சரி, கிழக்கு மண்டல சுதந்திர முஸ்லிம் ராஜ்யங்களுக்கு வெளியில்தான் இருக்கிறார்கள். ஆகையால் சுதந்திரமும் தனி ஆதிபத்தியமும் கொண்டபிறகு அந்த முஸ்லிம் பகுதி சணல் விலையைத் தானாகவே ஒழுங்குபடுத்தி விவசாயிகளுக்கு உதவியளிக்கும் நிலைமையில் இருக்குமா என்பது சந்தேகமே.

மேலும், நிலத்தில் விளையும் தானியத்திலும் மிகுதியான உணவுப் பொருளை வாங்கக்கூடிய நிலைமையில் சணல் விலைவாசி யிருந்தாலொழிய உணவுப் பயிர் செய்வதற்காக சணல் சாகுபடியை யொழித்துவிடவேண்டிய அவசிய

---

11. *Hindustan Standard*, Dtd. 2—3—'45.
12. Haque: op. cit., pp. 66–8.

மேற்பட்டு விடும். 'தற்போதைய (1936–37) விலைவாசி நிலவரத்தில் சணலின் சராசரி விலை மணங்குக்கு ஐந்து ரூபாய்க்கும் குறைந்தால் சணல் சாகுபடி லாபகரமானதல்ல'[13] என்று சர் அசிசுல் ஹக் கணக்கிட்டிருக்கிறார். 1928–29க்கும் 1934–1935க்கும் இடைப்பட்ட காலத்தில் சணல் விவசாயி பெருத்த நஷ்டமடைந்திருக்கிறான் என்பதைக் காட்டியிருக்கிறார்.

மேலே காட்டியபடி அஸ்ஸாம் ஜில்லாக்களில் சில்ஹட் ஒன்றுதான் கிழக்கு முஸ்லிம் மண்டலத்தில் சேருகிறது. அதன் விஸ்தீரணம் 5,478 சதுர மைல். ஜனத் தொகை 31,16,602 பேர்; 1941 ஜனக் கணக்குப்படி சதுர மைலுக்கு 569 பேர். 1931 ஜனக் கணக்குப்படி சதுர மைலுக்கு 497 பேர். பத்து வருஷத்தில் 14·4 சதவீதம் பெருகியிருக்கிறது. அந்த மாகாணத்தில் வேறெந்த ஜில்லாவிலும் சதுர மைலுக்கு 329 பேருக்குமேல் இல்லை. மாகாண முழுமையையும் பார்த்தால் சதுர மைலுக்கு 186 பேருக்குமேல் இல்லை. வங்காளம் போல சில்ஹட் ஜனநெருக்கமுள்ள பரப்பு என்பது தெளிவாகிறது. அஸ்ஸாம் மாகாணத்தில் 1936–37ல் அரிசி, பயறுகள், இதர உணவு தானியங்களைச் சாகுபடி செய்யும் மொத்த நிலம் 56,83,774 ஏக்கர். அதாவது தலைக்கு 1·8 ஏக்கர். 1936–37ல் சில்ஹட் ஜில்லாவில் உணவு தானியங்கள் சாகுபடியான நிலம் 19,82,566 ஏக்கர். அதாவது தலைக்கு 0.63 ஏக்கராகிறது. 1936–37ல் ஐந்து வருஷச் சராசரி பார்த்ததில் ஒரு ஏக்கரிலிருந்து மாரிகாலத்தில் 896 பவுண்டு அரிசி கிடைத்ததாகத் தெரிகிறது. அந்த விகிதத்தில் கணக்கிட்டால் ஒரு நபருக்கு ஒரு வருஷத்திற்கு 564 பவுண்டு, அதாவது நாளொன்றுக்கு 1·5 பவுண்டுக்குச் சற்று அதிகம் கிடைக்கும். எல்லா நிலத்தையும் நெல் சாகுபடி நிலமாக வைத்துக்கொண்டு பேசுகிறோம் என்பதையும் இதற்கிடையில் ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும். அதிகப்படுத்திக் கூறப்பட்ட இந்த அரிசியளவும் சரியான உடல் நிலையுள்ள ஒரு மனிதனுக்குப் போதுமானதல்ல. வங்காளத்திலுள்ள முஸ்லிம் ஜில்லாக்களில் இருப்பதுபோல இல்லாமல் சில்ஹட் ஜில்லாவில் சணல் சாகுபடி நிலம் மிகமிகக் குறைவு. வங்காளத்தின் உணவுக் குறையைச் சமாளிப்பதற்கு இந்த ஜில்லா மாத்திரம் எவ்வித நல்லுதவியும் செய்ய முடியாது.

கிழக்கு வங்காளத்திலிருந்து அஸ்ஸாமுக்குள் கடந்த நாற்பது அல்லது அதற்கு மேற்பட்ட வருஷகாலமாக குடியேற்றம் நடைபெற்று வந்ததென்பதை முன்னொரு அத்தியாயத்தில் கண்டோம். இந்தக் குடியேற்றம் அஸ்ஸாமின் முஸ்லிம் ஜனத் தொகையை அதிகமாக்கியதென்றாலும் வங்காளத்தின் உணவு நிலைமையில் ஒன்றும் மாறுதலைச் செய்துவிடவில்லை. வங்காளத்தில் அதே காலத்தில் ஜனத் தொகையில் 181 லட்சத்துக்குமேல் அதிகரித்தது. 1931–41க்கிடையில் அதிகமானது சுமார் 102 லட்சம். அஸ்ஸாமின் ஜனத் தொகையே இவ்வளவுதான். நிலைமை இப்படியிருக்க அஸ்ஸாம் குடியேற்றத்தால் வங்காளத்தின் உணவு நிலைமையில் மாறுதலை எதிர்பார்க்க முடியாது.[14]

வங்காள, அஸ்ஸாம் மாகாணங்களின் உற்பத்திப் பொருள்களில் தேயிலை முக்கியமானது. வங்காள முஸ்லிம் ஜில்லாக்களில் தேயிலை அவ்வளவாக இல்லை. 1936–37ல் வங்காளத்தில் தேயிலை சாகுபடியான மொத்த நிலம் 2,03,100 ஏக்கர். அதில் முஸ்லிம் மண்டலத்தைச் சேர்ந்தது 7,700 ஏக்கரே. மீதி 1,95,400 ஏக்கர் முஸ்லிமல்லாத மண்டலத்தைச் சேர்ந்த ஜல்பைகுரி

13. Haque: op. cit., p. 62.
14. *Census of India*, Vol. I, Tables, p. 62.

டார்ஜிலிங் ஜில்லாக்களிலுள்ளவை. அஸ்ஸாம் நிலைமை சிறிது தேவலை, 1936-37ல் தேயிலை சாகுபடியான மொத்தம் 4, 38, 925 ஏக்கரில் 88, 957 ஏக்கர் முஸ்லிம் மண்டலத்தில் சேரக்கூடிய சில்ஹட் ஜில்லாவில் இருக்கிறது மீதி நிலம் சிபசாகர், லக்கிம்பூர், டர்ராங், கச்சர் ஜில்லாக்களைச் சேர்ந்தவை. இவை முஸ்லிம் மண்டலத்துக்கு வெளியிலிருக்கின்றன.

## 2. வடமேற்கு மண்டலம்

விவசாயம் உணவுப் பொருள் ஆகியவற்றைப் பொறுத்தமட்டில் வட மேற்கு முஸ்லிம் மண்டலம் நல்ல நிலைமையிலிருப்பது தெரியவருகிறது.

முஸ்லிம் மண்டலத்தில் வரும் பஞ்சாப் ஜில்லாக்களின் ஜனத்தொகை 1,68,70,900 ; விஸ்திரணம் 63,775 சதுரமைல் : அதாவது சதுரமைலுக்கு 264 பேர். வடமேற்கு எல்லை மாகாணத்தில் ஜனத்தொகை நெருக்கம் சதுர மைலுக்கு 213 பேர். சிந்துவிலும் பலுசிஸ்தானத்திலும் சதுரமைலுக்கு முறையே 94 பேரும் 9-பேர்களுமாவர். வங்காள முஸ்லிம் மண்டலத்தில் ஜனத்தொகை நெருக்கம் சதுரமைலுக்கு 810 பேராகவும், சில்ஹட் ஜில்லாவில் 569 பேராகவும் இருக்க, பஞ்சாபின் சில பாகங்கள், வடமேற் கெல்லை முழுமை, சிந்து, பலுசிஸ்தானம் ஆகியவை யாவு மடங்கிய வடமேற்கெல்லை மண்டலத்தில் ஜன நெருக்கம் சதுரமைலுக்கு 138 பேரேயாவர்.

பலுசிஸ்தானம் தவிர்த்து மீதி வடமேற்கு மண்டலத்தில் சாகுபடி நிலம் பற்றிய விவரம் 24-வது அட்டவணையில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த அட்டவணையில் பஞ்சாப் ஜில்லாக்கள் அத்தனையையும் பற்றிய கணக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. முஸ்லிம் மண்டலத்தில் சேரும் ஜில்லாக்களைப் பற்றி மாத்திரம் பின்பு கூறுகிறேன். இப்புள்ளி விவரங்கள் 1939-40-ல் எடுக்கப்பட்டவை.

பஞ்சாபில் முஸ்லிம் மண்டலத்திலும் முஸ்லிமல்லாத மண்டலத்திலும் உள்ள மக்களுக்கு நபரொன்றுக்கு எவ்வளவு நிலம் கிடைக்கிறதென்பதைப் பற்றி 1937-8-ஆம் ஐக்கிய இந்திய விவசாயப் புள்ளி விவரங்கள் கூறுவதாவது :

### அட்டவணை XXII

| | மொத்தவிஸ் திரணம் (ஏக்கர்) | விவசாயத் துக்குதவாத பிரதேசம் (ஏக்கர்) | விவசாயப் பிரதேசம் (ஏக்கர்) | விவசாயத்துக் கேற்ற, ஆனால் விவசாயம் நடக்காத பிரதேசம் (ஏக்கர்) | விவசாயப் பிரதேசம் (ஏக்கர்) | உணவுதான் யங்கள் விளையும் பிரதேசம் |
|---|---|---|---|---|---|---|
| பஞ்சாப் முஸ்லிம் அல்லாதார் ஜில்லாக்கள் | 2,18,92,338 | 67,39,576 | 1,51,52,762 | 37,68,649 | 1,13,84,113 | 97,78,981 |
| பஞ்சாப் முஸ்லிம் ஜில்லாக்கள் | 3,82,62,386 | 82,57,553 | 3,00,04,833 | 1,40,92,069 | 1,59,12,764 | 1,16,32,107 |
| சிந்து | 3,01,79,486 | 1,42,66,347 | 1,59,13,139 | 58,99,512 | 48,73,248 | 42,96,211 |
| வ. மே. எ. மாகாணம் | 84,37,582 | 30,39,984 | 53,97,598 | 28,51,700 | 21,09,029 | 21,12,929 |

## அட்டவணை XXIV

| மாகாணம் | மொத்த விளைச்சல் பிரதேசம் | அரிசி | | கோதுமை | | இதர உணவு தான்யங்கள் | | உணவுப் பொருள் பிரதேச மொத்த விவரம் | | பருத்தி | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஏக்கர் | ஏக்கர் | டன் | ஏக்கர் | டன் | ஏக்கர் | டன் | ஏக்கர் | டன் | ஏக்கர் | பேல் கணக்கில் |
| பஞ்சாப் | 2,57,44,129 | 9,76,552 | 2,87,000 | 95,65,976 | 37,60,000 | 93,55,869 | 14,72,000 | 1,98,98,397 | 55,19,000 (15,06,68,700) மண. | 26,41,105 | 10,17,000 |
| நபர் 1-க்கு | 0.9 | | | | | | | 0.7 | 5.3 மண. | 0.09 | |
| வ. மே. வ. எ. புறம் | 20,00,617 | 36,423 | – | 9,31,373 | 2,60,000 | 9,77,235 | 3,23,000 | 19,45,031 | 5,83,000 (1,59,15,900) மண. | 17,351 | 3,000 |
| நபர் 1-க்கு | 0.66 | | | | | | | 0.65 | 5.2 மண. | | |
| சிந்து | 49,45,843 | 13,28,713 | 4,43,000 | 12,70,563 | 3,26,000 | 16,45,010 | 1,90,000 | 42,44,286 | 9,59,000 (2,61,80,700) மண. | 8,54,390 | 3,09,000 |
| நபர் 1-க்கு | 1.1 | | | | | | | 0.93 | 5.8 மண. | 0.18 | |
| மூன்று மாகாணங்களின் மொத்தம், | 3,26,90,589 | 23,41,688 | 7,30,000 | 1,17,67,912 | 43,46,000 | 1,19,78,114 | 19,85,000 | 2,60,87,714 | 70,61,000 (19.27,65,300) மண. | 35,12,846 | 13,29,000 |
| நபர் 1-க்கு | 0.90 | | | | | | | 0.70 | 5.4 மண. | 0.10 | |

## அட்டவணை XXIII

| | எண்ணெய் வித்துக்கள் பிரதேசம் | சர்க்கரை கிடைக்கும் பிரதேசம் | பருத்தி விளையும் பிரதேசம் | ஜனத் தொகை | நபர் ஒன்றுக்கு விளைச்சல் பூமி | விவசாயம் செய்யக் கூடிய பிரதேசம் நபர் ஒன்றுக்கு | உணவு தான்யப் பிரதேசம் நபர் ஒன்றுக்கு |
|---|---|---|---|---|---|---|---|
| முஸ்லிம்களில்லாத பஞ்சாப் ஜில்லாக்கள் | 4,12,771 | 2,56,550 | 7,79,779 | 1,15,47,919 | 0.98 | 0.32 | 0.84 |
| பஞ்சாப் முஸ்லிம்ஜில்லாக்கள். | 4,88,783 | 2,53,464 | 23,55,752 | 1,68,70,900 | 0.94 | 0.83 | 0.69 |
| சிந்து | 2,13,512 | 7,420 | 9,70,174 | 45,35,008 | 1.08 | 1.30 | 0.94 |
| வ.மே.எல்லைப்புற. மா. | 91,739 | 70,084 | 22,195 | 30,38,067 | 0.69 | 0.93 | 0.69 |

பஞ்சாப், சிந்து, வடமேற்கு எல்லைப்புற மாகாணங்களில் நபரொன்றுக்குக் கிடைக்கக்கூடிய நிலப்பரப்பு, வங்காளத்தில் நபரொன்றுக்குக் கிடைப்பதைக் காட்டிலும் அதிகமென்பது நன்கு விளங்கும். அதுமட்டுமல்ல. வடமேற்கத்திய மாகாணங்களில் வங்காளத்தைக் காட்டிலும் விவசாய விருத்திக்கு நிலப்பரப்பு இருக்கிறதென்பதும் தெரிகிறது. பஞ்சாபிலும் சிந்துவிலும் விரிவான நீர்ப்பாசன வசதியிருப்பதே இதற்குக் காரணம்.

இதர மாகாணங்களுக்குரிய புள்ளி விவரங்கள் கிடைத்தது போல பலுசிஸ்தானத்திற்குரிய எல்லாப் புள்ளிவிவரங்களையும் என்னுற் பெற இயலவில்லை. 1933-4-ல் மொத்தம் சாகுபடியான நிலம் 4,49,094 ஏக்கர் என்றும், அறுவடையான மொத்த நிலம் 2,73,872 ஏக்கர் என்றும் தெரிகிறது ; அதாவது நபரொன்றுக்குச் சாகுபடி நிலம் 1·1 ஏக்கர் வீதமும், அறுவடையான நிலம் 0·7 ஏக்கர் வீதமும் 1931-ஞ்த்திய ஜனக்கணக்குப் பிரகாரம் வருகிறது. 1941-ஞத்திய ஜனக்கணக்குப்படி நபரொன்றுக்குச் சாகுபடிநிலம் 0·81 ஏக்கர் வீதமும் அறுவடையான நிலம் 0·54 ஏக்கர் வீதமும் கிடைக்கிறது.

கால்வாய்கள் மூலம் விரிவான நீர்ப்பாசன வசதிபெற்றிருப்பதால் பஞ்சாபும் சிந்துவும் அதிர்ஷ்டமானவை. அங்கு விரிவாக விவசாயம் செய்வதற்கு இயலும். அதுமட்டுமன்றி ஏற்கெனவே சாகுபடியான நிலங்களிலும் தீவிர சாகுபடி செய்யவும் கூடும்.

1939-40-ல் நீர்பாசனமுள்ள சாகுபடியான நிலங்களின் விவரம் பின்வருமாறு :

## அட்டவணை XXV

| | விளைச்சல் பிரதேசம் | நீர்ப் பாசனப் பிரதேசம் | விளைச்சல் பிரதேசத்தில் நீர்ப்பாசன சதவிகிதம் | கால்வாய், உபநதிகள் கிளைகள் இவற்றின் நீளம் மைல்களில் | 1939-40-ம் ஆண்டு முடிவுவரை நீர்ப் பாசனத்துக்கு வந்த பிரதேசத்தின் விஸ்தீரணம் ச. மைல் |
|---|---|---|---|---|---|
| பஞ்சாப் | 2,57,44,129 | 1.35,21,889 | 62.5 | 20,193 | 39,26,90,268 |
| சிந்து | 49,45,843 | 42,43,949 | 85.8 | 9,620 | 30,00,88,760 |
| வ.மே.எல்லைப்புறம் | 20,00,617 | 4,75,413 | 23.5 | 979 | 3,15,21,444 |
| பலுசிஸ்தானம் | 4,49,094 | 1,45,402 | 32 3 | 252 | 1,45,11,276 |
| வ. மே. மண்டலத்தில் மொத்தம். | 3,31,39,683 | 1,83,86,653 | 55.4 | 31,044 | 73,88,11,748 |
| பிரிட்டிஷ் இந்தியாவின் மொத்தம். | 20,99,59,786 | 2,82,92,938 | 13.4 | 74,911 | 1,53,89,42,433 |
| வ. மே. மண்டலம், பி. இந்தியா ஆகியவைகளின் சத விகித வித்யாசம். | 15.6 | 61.4 | | 41.4 | 47.9 |

## அட்டவணை XXVI

| | மொத்த விளைச்சல் | ஏற்படும் செலவு ரூபாய் | நிகர வருமானம் ரூபாய் | மொத்த மூல தனசத விகிதம் | விளைச்சல் மதிப்பு ரூபாய் | நபர் 1-க்கு கிடைக்கும் தொகை |
|---|---|---|---|---|---|---|
| பஞ்சாப் | 7,10,90,148 | 1,53,98,222 | 5,56,91,926 | 14.19 | 50.74,57,696 | 17– 3–0 |
| சிந்து | 1,68,61,293 | 68,85,554 | 99,75,739 | 3.32 | 11,02,12,677 | 24– 5–0 |
| வ.மேஎல்லைப்புறம் | 23,22,557 | 9,80,071 | 13,42,486 | 0.42 | 2,66,82,912 | 8–12–0 |
| பலுசிஸ்தானம் | 3,94,540 | 2,55,955 | 1,38,585 | 0.95 | 4,48,398 | 0–14–0 |
| வ. மே. மண்டல மொத்த விஸ்தீரணம். | 9,06,68,538 | 2,35,19,802 | 6,71,48,736 | 9.08 | 64,48,01,683 | 17–10–0 |
| பிரிட்டிஷ் இந்தியாவின் மொத்தம். | 14,60,42,127 | 4,56,93,471 | 10,03,48,656 | 6.52 | 1,36,29,08,373 | 3–8–0 |
| வ. மே. மண்டலம், பி. இந்தியா ஆகியவைகளின் சத விகித வித்யாசம். | 62.4 | 51.4 | 66.9 | | 47.3 | |

பஞ்சாபில் முஸ்லிம் மண்டலங்களிலும் முஸ்லிமல்லாத மண்டலங்களிலும் கிணறு, கண்மாய்களால் நீர்பாய்ச்சப்படாமல், அரசாங்கக்கால்வாய்களின் மூலமாக நீர்பாய்ச்சப்படுகின்ற நிலங்களின் விவரம் பின்வருமாறு :

| | சர்க்கார் கால்வாய்கள் மூலம் நீர்ப்பாசனம் பெறும் நில விஸ்தீரணம் | சர்க்கார் நீர்ப்பாசனம் பெற்ற நிலங்களின் சதவிகிதம் |
|---|---|---|
| பாஞ்சால முஸ்லிம் பகுதி | 87,08,089 ஏக்கர் | 78 சதவிகிதம் |
| பாஞ்சால முஸ்லிமல்லாத பகுதி | 24,95,199 ஏக்கர் | 22 சதவிகிதம் |
| மொத்த பாஞ்சாலம் | 1,12,03,288 ஏக்கர் | |

இவ்விதமாக பஞ்சாபில் அரசாங்கக் கால்வாய்களால் பயனடையும் நிலங்களில் பெரும்பகுதி முஸ்லிம் மண்டலத்திலிருக்கிறது. இதர பிரிட்டிஷ் இந்தியாவோடு ஒப்பிட்டால், கால்வாய்ப் பாசன வசதிகளில் வடமேற்கு மண்டலம் மிகவும் சாதகமான நிலைமையிலிருக்கிற தென்பது தெளிவான விஷயம். வடமேற்கில் சாகுபடியாகும் நிலம் பிரிட்டிஷ் இந்தியாவில் சாகுபடியாகும் நிலப்பரப்பில் 15·6 சதவிகிதமே. ஆனால் கால்வாய்ப் பாசன நிலம் பிரிட்டிஷ் இந்தியக் கால்வாய்ப்பாசன நிலத்தில் 61·4 சத விகிதத்திற்குக் குறையவில்லை. பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள மொத்த கால்வாய்கள், அதன் கிளைகள் முதலியவைகளின் நீளம் 74,911 மைலென்றால் வடமேற்கு மண்டலத்தில் மாத்திரம் 31,044 மைல்கள் அதாவது 41·4 சதவிகிதமிருக்கின்றன. கால்வாய்ப் பாசனத்திற்குச் செலவிட்ட 153·89 கோடியில் வடமேற்கு மண்டலத்தில் மாத்திரம் 73·88 கோடி அதாவது 47·9 சதவிகிதம் செலவிடப்பட்டிருக்கிறது. பிரிட்டிஷ் இந்தியா முழுவதிலும் கால்வாய்ப் பாசன நிலங்களிலிருந்து கிடைக்கும் மொத்த வருமானம் 10·03 கோடியில் 6·71 கோடி அதாவது 66·9 சதவிகிதம் வடமேற்கு மண்டலத்தில் கிடைக்கிறது. இந்தியா முழுவதிலும் கிடைக்கிற மகசூல் மதிப்பான 136·29 கோடியில் 64·48 கோடி அதாவது 47·3 சதவிகிதம் வடமேற்கிலிருந்து கிடைக்கிறது. வடமேற்கில் மகசூலின் மதிப்பு நபரொன்றுக்கு ரூ. 17-10-0 இருக்கும்பொழுது பிரிட்டிஷ் இந்தியாவில் ரூ. 3-8-0 தான் ஆகிறது. பஞ்சாப் மாகாணத்தின் சாதாரண மொத்த நிலவரியில் நீர்ப்பாசனத்திலிருந்து கிடைப்பது 42 சதவிகிதமாகும்; சிந்துவில் 13·4 சதவிகிதம். வடமேற்கு எல்லை மாகாணத்தில் 7·5 சதவிகிதம். சிந்து பஞ்சாப் மாகாணங்களை எடுத்துக்கொண்டால் அவை மற்ற மாகாணங்களைக் காட்டிலும் இன்னும் அதிகச் சாதகமான நிலையிலிருப்பது விளங்கும். சிந்துவில் சாகுபடி செய்யப்பட்ட மொத்த நிலத்தில் 85·8 சதவிகித நிலம் கால்வாய்ப்பாசன முள்ளது. பஞ்சாபில் மொத்த சாகுபடி நிலத்தில் 62·5 சதவிகிதம் கால்வாய்ப்பாசனமுள்ளது. வடமேற்கு மண்டலத்தில் மொத்த நிலப்பரப்பில் 55·4 சதவிகிதம் கால்வாய்களால் நீர்பாய்ச்சப்படுவது. பிரிட்டிஷ் இந்தியா முழுவதிலும் வ. மே. மண்டலம் உள்பட உள்ள மொத்த நிலத்தில் 13·4 சதவிகித நிலம்தான் கால்வாய்ப்பாசனம் உள்ளது. வடமேற்கு மண்டலம் தவிர்த்த பிரிட்டிஷ் இந்தியாவோடு வடமேற்கு மண்டலத்தின்

புள்ளி விவரங்களை யொப்பிட்டுப் பார்த்தால், வடமேற்கு மண்டலமே மிகவும் சாதகமான நிலைமையிலிருக்கிறது. ஏனெனில் மொத்த சாகுபடி நிலத்தில் வடமேற்கு மண்டலம் தவிர்த்த பிரிட்டிஷ் இந்தியாவில் கால்வாய்ப்பாசன முள்ளது 5·5 சதவிகிதமானதே.

இவ்வளவெல்லாம் சாதகங்களிலிருந்துங்கூட வடமேற் கெல்லை மண் டலங்கூடத் தன் தேவைக்கு மிஞ்சிய உணவை உற்பத்தி செய்கிற மாகாணம் என்று கூறிவிடமுடியாது. ஏதாவதொரு தானியம் சிறிது கூடவிளைந்தால் அது பக்கத்துப் பிரதேசத்திலேயே செலவழிந்து விடுகிறது. 1934 ஜூனில் சிம்லாவில் மகசூல் திட்டக் கமிட்டி கூடியது. அதில் விவசாய ஆராய்ச்சி இம்பீரியல் கௌன்சில் மாகாணவாரியாக அரிசி கோதுமை நிலைமையைப் பற்றிக் கூறியது. பஞ்சாப், அரிசியைக் குறிப்பிடக்கூடிய அளவில் உற்பத்தி யாக்கும் அல்லது உபயோகிக்கும் நாடல்ல என்று எடுத்துக் காட்டப்பட்டது. கோதுமை விளைவும் அதிகப்படி என்று கூறிவிடமுடியாது. ஏதாவது அதிகப் படி விளைந்தால் அது சுலபமாகப் பக்கத்து மாகாணங்களுக்கும் கல்கத்தாவுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டது. சிந்துவில் 20 லட்சம் ஏக்கர் நிலமும் கோதுமை சாகுபடி செய்யப்பட்டால்தான் வாஸ்தவமாக அதிகப்படி விளைவேற்பட்டு விட்டது எனக் கூறலாம்.[15] மேலே காட்டப்பட்ட புள்ளிக் கணக்கிலிருந்து 1939–40 வரையும் அந்த நிலைமை ஏற்படவில்லை யென்று நன்கு தெரியும்.

இதுகாறும் அரிசி சம்பந்தப்பட்டவரை பற்றுக்குறை மாகாணமாக இருந்தும் 1944-5ல் 30 லட்சம் டன் அதிகப்படி கண்டுள்ள மாகாணமாகப் பஞ்சாப் இருக்கிறதென்று கல்கத்தாவில் 1945 ஜனவரியில் பஞ்சாப் அபிவிருத்தி மந்திரி சர்தார் பலதேவ் சிங் கூறினர். ஆகவே பஞ்சாபும் சிந்தும் சாகுபடியை வெகுவேகமாக விரிவுபடுத்துகின்றன. கூடிய சீக்கிரம் அதிகப்படி விளைவை இந்தியாவின் இதர மாகாணங்களுக்களிக்கக் கூடிய நிலைமைக்கும் வரக்கூடும். இந்தத் திடீர் அபிவிருத்தியும் சந்தேகமில்லாமல் யுத்த முயற்சி யினுல் தூண்டப்பட்டதேயாகும்.

பஞ்சாப், சிந்து, வடமேற்கு எல்லை மாகாணங்களிலுள்ள மொத்த ஜனத்தொகையில் 75 சதவிகிதத்தினரை முழு ஆகாரந் தேவையானவர்கள் என்று வைத்துக்கொண்டு, ஒரு நாளுக்கு 12 சாடக்குகள் அல்லது 14 சாடக் குகள் வீதம் கணக்கிட்டால் பின்வரும் நிலைமை காணப்படும் :

---

15. *Proceedings of the Crop Planning Conference* (Delhi, 1934), pp. 7-10, quoted by Professor Benoy Kumar Sarkar in The *Sociology of Population*, pp. 38-9,

## அட்டவணை XXVII

| மாகாணம் | ஜனத் தொகை | முக்கால் வாசிப்பேர் முழுசாப் பாடு சாப்பிடு கிறவர்கள் | வருஷ உற் பத்தி மணங்கில் | தினம் ஒன்றுக்கு 14 சாடக்குகள் வீதம், வயதுவந் தோர் சாப்பிடும் உணவின் வருஷ அளவு மணங்கில் | பற்றாக் குறை மணங்கில் | நாளொன் றுக்கு 12சாடக் குகள்வீதம்வரு ஷத்துக்கு மணங்கில் | மிச்சம் மணங்கு |
|---|---|---|---|---|---|---|---|
| பஞ்சாப் | 2,84,18,819 | 2,13,14,114 | 15,06,68,700 | 17,01,79,790 | 1,95,11,090 (11.42%) | 14,58,68,235 | 48,00,465 (3.29%) |
| சிந்து | 45,35,008 | 34,01,256 | 2,61,80,700 | 2,71,56,730 | 9,76,030 (3.59%) | 2,32,77,510 | 29,03,190 (12.47%) |
| வ.மே. எல்லைப் புறம் | 30,38,067 | 22,78,550 | 1,59,15,900 | 1,81,92,695 | 22,76,795 (12.51%) | 1,55,93,895 | 3,22,005 (2.06%) |

வடமேற்கு மண்டலத்தில் ஜனத்தொகையும் பெருகிக்கொண்டேயிருக்கிறது. வேறு எந்த மாகாணத்தைக் காட்டிலும் உயர்ந்த விகிதத்தில் பெருகிக்கொண்டு போகிறது. 1891-க்கும் 1941-க்கும் இடைப்பட்ட ஐம்பது வருஷங்களிலும், 1931-41-க் கிடையிலும் ஏற்பட்ட ஜனத்தொகைப் பெருக்கத்தை 28-வது அட்டவணை காட்டுகிறது.

## அட்டவணை XXVIII

| மாகாணம் | 1941—ம் வருஷ ஜனத் தொகை | 1891—ம் வருஷ ஜனத் தொகை | 1891–1941 —வருஷ வித்தியாசத்தின் தொகை | சத விகிதம் | 1931—ம் வருஷ ஜனத் தொகை | 1931-41-ம் வருஷ வித்யாசத்தின் தொகை | சத விகிதம் |
|---|---|---|---|---|---|---|---|
| பஞ்சாப் | 2,84,18,819 | 1,86,52,614 | 97,66,205 | 52.3 | 2,35,80,864 | 48,37,955 | 20.5 |
| சிந்து | 45,35,008 | 28,75,100 | 16,59,908 | 57.0 | 38,87,070 | 6,47,938 | 16.7 |
| வ.மே. எல்லைப்புறம் | 30,38,067 | 18,57,519 | 11,80,548 | 63.5 | 24,25,076 | 6,12,991 | 25.2 |
| பலுசிஸ்தானம் | 5,10,631 | 3,82,106 | 1,19,525 | 31.2 | 4,63,508 | 38,123 | 8.2 |
| பி. இந்திய மாகாணங்கள் | 29,58,08,722 | 21,29,70,616 | 8,28,38,106 | 38,8 | 25,67,57,818 | 3,90,50,904 | 15.2 |

விரிவான கால்வாய்த் திட்டங்களினுல் உணவு தானிய விளைவு அதிகரித்திருக்கிறது. இன்னும் அதிகரிக்கும். பஞ்சாபில் ஜனப்பெருக்கம் ஐம்பது வருஷங்களில் 52 சதவிகிதத்திற்கு மேலும், சிந்துவில் 57 சதவிகிதத்திற்கு மேலும், வடமேற்கெல்லையில் 63 சதவிகிதத்திற்கதிகமாகவும் பெருகியிருக்கிறது. ஆகவே உணவு தானிய விளைவு, ஜனப் பெருக்கத்திற்கேற்ப விருத்தியாக முடியாது. நாட்டின் இதர பாகத்தைப்போல இந்தப் பிரதேசமும் கவனிக்க வேண்டிய பிரசினைகளில், இதுவும் ஒன்ரும். மற்ற மாகாணங்களைக் காட்டிலும் இந்த மாகாணம் இந்தப் பிரசினையை எளிதில் தீர்த்துக்கொள்ளும் நிலைமையில் இருக்கிறது.

உணவு தானியங்கள் தவிர, வடமேற்கு மண்டலம், சிறப்பாக பஞ்சாப், சிந்து மாகாணங்கள் பருத்தி விளைவைப் பெரிதும் உடையனவாயிருக்கின்றன. 1939-1940-ல் 400 பவுண்டுகள் கொண்ட 10,17,000 பேல் பருத்தியை பஞ்சாப் உற்பத்தி செய்தது. சிந்து 3,09,000 பேல் பருத்தியையும், வடமேற்கெல்லை மாகாணம் 3,000 பேல் பருத்தியையும் உற்பத்தி செய்தது. இந்த மூன்று மாகாணங்களிலும் பருத்தி சாகுபடியாகும் நிலங்கள் முறையே 26,41,105 ஏக்கர், 8,54,390 ஏக்கர், 17,351 ஏக்கர் ஆகும்.[16] இது ஒரு பணப் பயிராகையால் முக்கியமானது. பிரிட்டிஷ் இந்தியாவில் உற்பத்தியான 33,81,000 பேல்களில், வடமேற்கு மண்டலத்தில் 13,29,000 பேல்கள் அதாவது 39·3 சதவிகிதம் உற்பத்தியாக்கப்பட்டிருக்கிறது. உயர்ந்த ரகமான பருத்தியைச் சாகுபடி செய்யும் நிலங்கள் சிந்துவில் வருஷா வருஷம் சுக்கூர் தேக்கப் பிரதேசத்தில் அதிகமாகிக்கொண் டிருக்கின்றன. சுக்கூர் தேக்கத்திற்கு

16. *Statistical Abstract for British India*, 1930-31 to 1939-40, p. 554.

முன்னால் 1932-3ல் 3,42,860 ஏக்கராக இருந்தது. 1939-40ல் 8,55,277 ஏக்கராகி விட்டது. வற்றாத நீர்ப்பாசன வசதியால் இது கைகூடியதாகும். அதிக விலைக்கு விற்கக்கூடிய அமெரிக்கன் பருத்தியே பெரும்பாலும் சாகுபடியாகி யிருக்கிறது.[17] பஞ்சாபில், இவ்வளவு அதிகமாக இல்லாவிட்டாலும், நல்ல ரகப் பருத்தியைச் சாகுபடி செய்யும் நிலப்பரப்பு வரவர அதிகமாகிக்கொண் டிருக்கிறது.

400 பவுண்டு நிறையுள்ள பேல் ஒன்றின் சராசரிவிலை ரூ. 105 வீதம் பஞ்சாபின் பருத்தி வருமானம் 1939-ல் சுமார் 9 கோடி ரூபாய்; சிந்துவின் வருமானம் 3·25 கோடி ரூபாய். நாட்டின் மொத்த வருமானம் பருத்தியின் மூலம் 35·50 கோடி ரூபாயாகும்.

இப்பருத்தியின் பெரும்பகுதி இதர மாகாணங்களுக்கோ வெளிநாடு களுக்கோ ஏற்றுமதி செய்யப்படுகிறது. ஏனெனில் இம் மாகாணங்களில் பஞ்சாலைகள் மிகமிகச் சொற்பம். கைநூற்பு அதிகமாயிருந்தாலும், இப் பருத்தியத்தனையும் கைநூற்புக்குத் தேவையில்லை. 1938-9ல் இந்தியாவில் 10 லட்சம் கதிர்களுக்கும் அதிகம் கொண்ட 380 பஞ்சாலைகள் இருந்தன. 2 லட்சம் தறிகளுக்குமேல் இருந்தன. அவற்றில், 72,000 கதிர்கள் கொண்ட 7 பஞ்சாலைகளும் 2000 தறிகளும் பஞ்சாப், சிந்துவில் இருந்தன. வடமேற் கெல்லை மாகாணம், பலுசிஸ்தானத்தில் ஒன்றுமில்லை.[18]

மேற்கூறிய விஷயங்களில் வடமேற்கு மண்டலமென்பது முஸ்லிமல்லாத பெரும்பான்மை உடைய ஜில்லாக்களைக்கொண்ட பஞ்சாபும், சிந்துவும், முஸ்லி மல்லாத பஞ்சாப் ஜில்லாக்களை ஒதுக்காத வடமேற்கெல்லை மாகாணமும் அடங்கியது.

## 30. தாதுப்பொருள்கள்

அமெரிக்க ஐக்கியநாட்டு கொலம்பியா சர்வகலாசாலையைச் சேர்ந்த நிலவியல் பேராசிரியர் சார்லஸ். எச். பெஹ்ரே, தாம் எழுதிய வெளிநாட்டு விஷயங்கள் என்ற நூலில் பின்வருமாறு கூறுகிறார்: 'பர்மா நீங்கலாக இந்தியாவை ஆராய்ந்தால் அது உலக வியாபாரத்தில் அதிக முக்கியத்துவம் பெற்றிருக்கிறது அல்லது வெகுவிரைவில் பெறவிருக்கிறது என்று கூறலாம். நிலக்கரி, பெட்ரோலியம், இரும்பு, மாங்கனீஸ், க்ரோம், தங்கம், பாக்சைட், உப்பு, மங்னீஸைட், மைக்கா, ஜிப்ஸம், ரத்தினக் கற்கள், மானேசைட் இன்னும் ஒளிக்கதிர் திருப்பி உலோகங்கள் முதலியவைகள் நிறையக் கிடைக்கக்கூடிய நாடாக இருக்கிறது.

'நிலக்கரி, இரும்பு, எண்ணெய் என்ற முப்பொருள்களை அடிப்படை யாகக் கொண்டது தற்காலத் தொழிற் சக்தி. இக்காலத்தில் நிலக்கரியும் இரும்பும் சேர்ந்தே தொழிலாக்கத்திற்கடிப்படையாக இருக்கின்றன. மனித உடலுக்கு பிராணவாயுவும் ஜலவாயுவும் எப்படியோ, அது போன்றே இயந்திர விருத்திக்கு நிலக்கரியும் இரும்பும். அவையிரண்டும் அருகருகே கிடைக்கவேண்டும். எண்ணெய் மிக மதிப்புள்ளதேயாயினும் அவ்வளவு

17. Annual Report of the Department of Agriculture of Sind, 1939-40, pp. 7-8.

18. M. P. Gandhi: *Indian Textile Cotton Industry* (1939 Annual), p. 62 and Appendix I.

இன்றியமையாததல்ல. சமாதான காலத்தில் தாதுப் பொருள்களைப் பண்ட மாற்றுச் செய்வது தடைப்படா திருக்குமானால் நிலக்கரிக் கனி மிகுந்த நாடு எண்ணெய்ச் சுரங்கங்களில்லாமலே முன்னேறலாம். அங்கு எண்ணெயில்லா விட்டால், ஜெர்மனி செய்வதுபோல நிலக்கரியை நீர்க்கரியாக மாற்றிக்கொள் ளலாம். எஃகு செய்வதற்கு எண்ணெய் நேரடியாக உதவுவதில்லை. எஃகு உற்பத்திக்கு நிலக்கரிக்குப் பதிலாக அதை உபயோகிக்க முடியாது ; நிலக்கரியே இன்றியமையாதது.

'நாம் கண்ட முடிவு தெளிவானது: இந்தியா போதுமான அளவு எண்ணெய் கொண்டதாயில்லை. ஆனால் தொழிலாக்கத்திற்கு வேண்டிய மிக முக்கிய தாதுப் பொருள்களை நிறையப் பெற்றிருக்கிறது. நிலக்கரி, இரும்பு, எஃகுக் குதவும் கலப்பிரும்பு வகைகள், இன்னும் பல சில்லறைத் தாதுப் பொருள்கள் ஏராளமாக இருக்கின்றன. இவையத்தனையும் இந்தியாவை வல்லரசாக்க முடியும். பிறர் கையை எதிர்பாராத நாடாக ஆக்கவும் கூடும். மற்றத் தொழில் முன்னேற்ற நாடுகளோடு ஒப்பிட இந்நாட்டில் நபரொன்றுக்கு கிடைக்கும் தாதுப் பொருளளவு மிக மிகச் சொற்பமே. ஆனால் சீக்கிரமாகவே ஒவ்வொருவரும் உபயோகிக்கும் அளவை அதிகப்படுத்தலாம். இதனால் முக்கிய தாதுப்பொருட் சுரங்க இருப்புகளைப் பெரிதும் பாதிக்காமலே அவ்வாறு செய்யக்கூடும்.'

இப்பொழுது இத்தாதுப் பொருள்கள் நாட்டில் எங்கெங்கிருக்கின்றன என்பதையும் இந்த நாட்டின் மற்றப் பாகத்தோடு ஒப்பிட வடமேற்கு, கிழக்குப் பிரதேசங்களிலுள்ள முஸ்லிம் மண்டலங்களில் இவை எவ்வளவு இருக்கின்றன என்பதையும் காண்போம்.

அடுத்தாற்போல் காட்டப்பட்டுள்ள 29, 30-வது அட்டவணைகளில் நான் சில தாதுப் பொருள்களைச் சேர்க்கவில்லை. மேற்கு பஞ்சாபில் உப்பு (64,674 டன்கள்) எடுக்கப்படுகிறது. முஸ்லிமல்லாத மண்டலத்தில் பாக்சைட் (10,134 டன்கள்) எடுக்கப்படுகிறது. இதுபோன்று இன்னும் சில சில்லறைத் தாதுப் பொருள்களும் கிடைக்கின்றன.

சந்தேகமில்லாமல் நிலக்கரியே எல்லாவற்றினும் உயர்ந்தது. சிறிதளவு தான் பஞ்சாபிலும் பலுசிஸ்தானத்திலும் கிடைக்கிறது. மற்றப் பெரும் பாகமும் முஸ்லிமல்லாத மண்டலத்தில்தான் கிடைக்கிறது. வங்காளத்தின் நிலக்கரி வயல்களெல்லாம் பர்த்வான் ஜில்லாவில் இருக்கின்றன. அதன் முஸ்லிம் ஜனத்தொகை 18 சதவீதமாகையால் அந்த ஜில்லா முஸ்லிம் மண்டலத்திற்கு வெளியேதான் இருக்கிறது. அஸ்ஸாம் எண்ணெய் வயல்களும் முஸ்லிம் மண்டலத்தில் இல்லை.

தாது எண்ணெய் ஓரளவு பஞ்சாப், வடமேற்கெல்லை மாகாணம், பலுசிஸ்தான் முதலியவைகளில் கிடைக்கின்றது. 1900லிருந்து 1933 வரை இந்தியாவில் பெட்ரோலியத்தின் சராசரி வருஷ உற்பத்தி எவ்வளவென்பது பற்றிய புள்ளி விவரங்களைத் தம்முடைய இந்தியாவின் தாதுச் செல்வம் என்ற நூலில் டாக்டர் ஜே. காக்கின் ப்ரௌன் கொடுத்திருக்கிறார். இவர் இந்தியாவின் பிரதம நிலவியல் மேற்பார்வையாளராக இருந்தவர். 1933 வரை பர்மா இந்தியாவுடனிணைந்திருந்தது. 1929-1932 வரை எண்ணெய் கிடைத்த விவரம் : பர்மாவில் 81·4 சதவிகிதம் ; அஸ்ஸாமில் 15·5 சதவிகிதம்; பஞ்சாபில் 3·1 சதவிகிதம். சர். எட்வின் பாஸ்கோவின் வார்த்தைகளை மேற்கோள் கூறுகிறார் : 'பஞ்சாபின் அனேக பாகங்களிலும் பலுசிஸ்தானத்திலும்

## அட்டவணை XXIX

| தாதுப் பொருள் | முஸ்லிம் வங்காளம் | | பஞ்சாப் | | சிந்து | | வ. மே எல்லைப் புறம் | | பலுசிஸ்தானம் | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | அளவு | மதிப்பு | அளவு | மதிப்பு ரூ. | அளவு | மதிப்பு | அளவு | மதிப்பு | அளவு | மதிப்பு ரூ. |
| நிலக்கரி (டன்) | — | — | 1,84,028 | 10,20,856 | — | — | — | — | 14,388 | 91,812 |
| பெட்ரோலியம் (காலன்) | — | — | 2,11,13,420 | 52,78.355 | — | — | — | — | — | — |
| குரோமைட் (டன்) | — | — | — | — | — | — | — | — | 21,892 | 3,26,014 |
| செம்பு (டன்) | — | — | — | — | — | — | — | — | — | — |
| இரும்புத்தூள் (டன்) | — | — | — | — | — | — | — | — | — | — |
| மாங்கனீஸ் | — | — | — | — | — | — | — | — | — | — |
| மங்கனீசைட் (டன்) | — | — | — | — | — | — | — | — | — | — |
| மைக்கா அந்தர் | — | — | — | — | — | — | — | — | — | — |

## அட்டவணை XXX

| தாதுப்பொருள் | முஸ்லிம் மண்டலம் | | பிரிட்டிஷ் இந்தியா | | முஸ்லிம் மண்டலம் நீங்கலான பி.இந்தியா | |
|---|---|---|---|---|---|---|
| | அளவு | மதிப்பு ரூ. | அளவு | மதிப்பு ரூ. | அளவு | மதிப்பு ரூ. |
| நிலக்கரி (டன்) | 1,98,416 | 11,12,668 | 2,52,78,218 | 9,46,30,718 | 2,50,79,802 | 9,35,18,050 |
| பெட்ரோலியம் (கால) | 2,11,13,420 | 52,78,355 | 8,70,82,371 | 1,65,43,142 | 6,59.68,951 | 1,12,64,787 |
| குரோமைட் (டன்) | 21,892 | 3,26,014 | 27,086 | 4,25,942 | 5,194 | 99,928 |
| செம்பு (டன்) | — | — | 2.88,076 | 32,40,640 | 2.88,076 | 32,40,640 |
| இரும்புத்தூள் (டன்) | — | — | 14,21,701 | 26,91,829 | 14,21,701 | 26,91,829 |
| மாங்கனீஸ் (டன்) | — | — | 7,66,341 | 3,20,93,709 | 7,66,341 | 3,20,93,709 |
| மங்கனீசைட் (டன்) | — | — | 23,052 | 1,34,876 | 23,052 | 1,34,876 |
| மைக்கா (அந்தர்) | — | — | 1,08,834 | 40,89,488 | 1,08,834 | 40,89,488 |
| மொத்தம் | — | 67,17,037 | | 15,38,50.344 | | 14,71,33,307 |

அனேக கற்பாறைகள் வெள்ளத்தாலும் புயலாலும் ஆழமாக அகற்றப்பட்டு விட்டன. சில அசைவுகளாலும் பூர்வீக தாதுச் சுரங்கங்கள் இடம் மாறி யிருக்கின்றன ; அல்லது மறைந்துவிட்டன. எண்ணெய்க் கசிவுகள் ஆங்காங்கே சாதாரணமாக இருக்கின்றன. ஆனால் அவையத்தனையும் வெறும் காட்சி யளவில்தான். சோதனைக் குடைவுகள் போட்டுப் பலனளிக்கவில்லை.'[1] கௌர் எண்ணெய் வயல் நல்ல பலனளித்துக் கொண்டிருக்கிறது. 1938-ல் பிரிட்டிஷ் இந்தியா முழுவதிலும் கிடைத்த தாதுப்பொருள் மதிப்பு ரூ. 15,38,50,000. இதில் வடமேற்கு மண்டலத்திலிருந்து பெற்றது ரூ. 76,17,000 பெறுமானம். அதாவது 4·3 சதவிகிதமே. கிழக்கு மண்டலத்தி லிருந்து கிடைத்தது ஒன்றுமில்லை. இந்திய சமஸ்தானங்களில் கிடைப்ப வற்றையும் பிரிட்டிஷ் இந்தியக் கணக்கோடு சேர்த்துவிட்டால் முஸ்லிம் மண்டலங்களின் நிலைமை மோசமே. பேராசிரியர் பெஹ்ரே கீழ்க்கண்டவாறு கூறியிருப்பதில் அதிசயப்படுவதற் கொன்றுமில்லை : ‘இந்தியாவின் தாதுப் பொருள் இந்தியாவில் இந்துக்களும் முஸ்லிம்களும் அதிகமாகவுள்ள பாகங் களில் நாலா மூலையாகப் பரவிக் கிடக்கின்றது. மதங்காரணமாக இந்தியாவைத் துண்டாடுமிடத்து இந்து ராஜ்யம் செழித்திருக்கும், முஸ்லிம் ராஜ்யம் தாதுப் பொருள்களற்ற நாடாக இருக்கும். தாதுப் பொருளுடைமையில் இவ்விரு பகுதியிலும் மிகுந்த அளவிற்கு ஏற்றத் தாழ்வுகளிருக்கின்றன. ஜனத் தொகையிலுள்ள ஏற்றத் தாழ்வை மாத்திரம் கவனித்துக்கொண்டு தாதுப்பொருள் நிலைமையைக் கவனியாது விட்டுவிடலாம் என்று சொல்லு வதற்கில்லை. தற்போது தாதுப் பொருள்கள் உற்பத்தியாகிறதைக் கொண்டு கவனித்தால் மாத்திரம்தான் இந்துஸ்தானம் தாதுப் பொருள்களில் ஓங்கி நிற்கிறதென்பதில்லை. இந்தியாவின் தொழிலபிவிருத்தி முன்னேற முன்னேற இந்துஸ்தானத்தின் தாதுச் செல்வநிலை பின்னும் மேலோங்கியே நிற்கும். பாகிஸ்தான், இந்துஸ்தான் என்ற பிரசினையை முடிவு கட்டக்கூடிய முக்கிய விஷயம் இதுவே.

நிலக்கரி இரும்புச் சுரங்கங்களை நிறையப் பெற்றிருக்கிறது இந்துஸ்தானம்; மிக அருமையான கலப்பிரும்புச் சுரங்கங்கள் சிலவற்றையும் பெற்றிருக்கிறது; (ஆயினும் தேவைக்குப் போதிய அளவில்லாததால் வெளி நாட்டிலிருந்தும் இறக்குமதி செய்யவேண்டும்) தங்கத்தைப் பெற்றிருக்கிறது ; உலோகமற்ற சில தாதுப் பொருள்களையும் பெற்றிருக்கிறது ; பாக்ஸைட் செம்புச் சுரங்கங்களையும் பெற்றிருக்கிறது; பாகிஸ்தானில் சிறிதளவு நிலக் கரியும் இரும்பும் இருக்கிறது. கலப்பிரும்புகளும் பாக்ஸைட்டும் இருக்கின்றன வென்று சொல்லக்கூடிய அளவில் இல்லை. ஆனால் மாங்கனீஸூம் குரோமி யமும் தவிர, இதர கலப்பிரும்புகளை இந்துஸ்தானம் பெற்றிருப்பதைப் போலவே பாகிஸ்தானும் பெற்றிருக்கிறது ; மாக்னிஸைட் தவிர இதர உபதாதுப் பொருள்களை நிறையப் பெற்றிருக்கிறது. எண்ணெய் பெரும் பாலும் அங்குதானிருக்கிறது.

‘இந்தியாவின் இந்து முஸ்லிம் பகுதிகள் ஒன்றையொன்று நம்பியதாக இருக்கும். இதுவே நமது இரண்டாவது முடிவு ஆகும். இந்துஸ்தானம், பாகிஸ்தானில் சில ஆதாரப் பொருள்களை எதிர்பார்க்க வேண்டியிருக்கும். பாகிஸ்தானின் தொழிலாக்கத்திற்கு இந்துஸ்தானத்தின் ஆதாரப் பொருள்கள் பெரிதும் தேவையாயிருக்கும்.’ மேலும் பேராசிரியர் பெஹ்ரே தமது

---

1. J. C. Brown : *India's Mineral Wealth*, p. 60.

ஆராய்ச்சியைக் கீழ்க்கண்ட பொருட்செறிவான வார்த்தைகளைக் கொண்டு முடிக்கிறார் :

'இந்தியா பிரிட்டனிடமிருந்து விடுதலையடையும் நாளை ஒத்திப்போடுவதன் நன்மைகளை இவ்வறிக்கை எடுத்துக் கூறுவதாக முயலவில்லை. இந்திய ஜனங்களுக்கு மதங்கள் எவ்வளவோ மேம்பட்டதாகத் தோன்றுவதைத் தாழ்வுபடுத்த முன்வரவில்லை. இந்தியாவின் தாதுப் பொருள்களைக் கவனிக்குமிடத்து இந்தியாவில் இந்து முஸ்லிம் பகுதிகள் ஒன்றுக்கொன்று ஒத்தாசையாகவே வளர்ந்திருக்கின்றன என்பதையும் ஒன்றையொன்று பொருளாதாரத்தில் எதிர்பார்ப்பவை என்பதையுமட்டுமே சொல்லுகிறது. பொருளாதாரத்தில் இவ்வளவு தூரம் நெருங்கியிருக்கும்போது, இவ்வாறிருப்பதும் அவசியமாகும்போது, அரசியலிலும் நெருங்கிப் பிணைந்திருப்பதே அறிவோடு சேர்ந்த வழி என்பதை வற்புறுத்துகிறது. மத அடிப்படையின்மீது ராஜ்யங்களைப் பிரிப்பதுண்டானால் இந்திய இந்து வகுப்பினரைக் காட்டிலும் முஸ்லிம் வகுப்பினரே பெரிதும் நஷ்டமெய்துவார்கள். மேலும் இந்தியாவின் பொருளாதாரம் ஆசியாவின் இதர பாகங்களுடன் இணைக்கப்பட் டிருக்கிறதென்பதையும் எடுத்துக் கூறுகிறது.'

சர் ஹோமி மோடி, டாக்டர் மத்தாய் ஆகிய இருவரும் இத்தகைய முடிவுக்கே வந்திருக்கிறார்கள். அவர்கள் கூறுவதாவது :

'சிறந்த ஒரு பொருளாதார விருத்தியுள்ள நாடாக வேண்டியதற்குரிய அம்சங்களை உலகத்திலுள்ள எந்த ஒரு தனி நாட்டைக் காட்டிலும் இந்தியா பெற்றிருக்கிறது. பரப்பு, ஜனத்தொகை, மூலாதாரச் செல்வங்களனைத்திலும் சிறந்திருக்கிறது. உலகில் அமெரிக்க ஐக்கிய நாடுகள், சோவியத் ரஷ்யா தவிர இதைப் போன்ற நாடுகள் வேறு இல்லை......................இந்தியாவைத் துண்டாடுதல் பாகிஸ்தான் இந்துஸ்தான் இரண்டையுமே வலுவிழக்கச் செய்யும். ஆனால் இந்துஸ்தானைக் காட்டிலும் பாகிஸ்தானே மிகுதியும் திண்டாடும்....................இரண்டு மண்டலங்களிலுமே பாகிஸ்தானின் நிலைமை உறுதியாகப் பலமிழந்து நிற்கும். பாகிஸ்தானின் வருங்கால முன்னேற்றத்துப் பெரும் பெரும் இயந்திர சாதனத் தொழிலபிவிருத்தி ஏற்படவேண்டும். ஆனால் அதற்குரிய தாதுப்பொருள் என்ற அடித்தளம் இல்லாத குறையால் அது கஷ்டப்பட வேண்டியிருக்கும்.'[2]

'முஸ்லிம் மண்டலங்களில் ஒரு பெரிய சாதகம் இருக்கிறது. இந்தியா முழுவதிலும் ஆற்று நீரிலிருந்து கிடைக்கும் மின்சாரத்தைக் கணக்குப் பார்க்கும்பொழுது பாகிஸ்தானிலிருந்து கிடைப்பது 2877 ஆயிரம் கிலோவாட்டுகள் என்று காணப்படுகிறது ; கிழக்கு மண்டலத்திலிருந்து 1084 ஆயிரமும் மேற்கு மண்டலத்தில் 1793 ஆயிரமும் கிடைக்கிறது. ஆனால் இந்துஸ்தானத்தில் கிடைப்பது 1343 ஆயிரம் கிலோவாட்டுக்களே.'[3]

2. Sir Homi Modi and Dr. Matthai : *A Memorandum on the Economic and Financial Aspects of Pakistan*, pp. 25-26.

3. *ibid*, p. 16.

# 31. காடுகள்

எல்லா நாடுகளும் காடுகளைப் பெரும் சொத்தாக மதிக்கின்றன. இந்தியாவில் காடுகள் முழுதும் விருத்தி செய்யப்படவில்லை. காடுகளிலிருந்து கிடைக்கும் வருமானமும் மிகச் சொற்பமே. ஆகவே அவைகளைப் பற்றிய விவரங்களை ஆராயவேண்டியதில்லை. அவைகளது பொதுநிலைமையைச் சுருக்கிக் கூறுவோம்.

கிழக்கு மண்டலத்தில் (அதாவது வங்காளம்) காட்டிலாகா காடுகளை இரண்டு வட்டங்களாகப் பிரித்திருக்கிறது. வட வட்டத்திலுள்ள காடுகள், வங்காளத்திலுள்ள முஸ்லிமல்லாத பகுதியிலேயே இருக்கின்றன. தென் வட்டத்திலுள்ள காடுகளில் மூன்றிலொரு பங்கு முஸ்லிம் பிராந்தியத்திலும், மீதி முஸ்லிமல்லாத பகுதியிலுமிருக்கிறது. 1939-40-ல் அந்த மாகாண முழுவதிலுமிருந்து கிடைத்த வருமானம் ரூ. 6,58,033. முஸ்லிம் பகுதி, முஸ்லிமல்லாத பகுதியிலுள்ள காடுகளின் வருமானத்தைப் பிரித்துப் பார்க்கும்பொழுது முஸ்லிமல்லாத பகுதியிலிருந்து கிடைத்த வருமானம் சுமார் ரூ. 4·50 லட்சம்; முஸ்லிம் பகுதிலிருந்து கிடைத்தது சுமார் ரூ. 2 லட்சத்துக்குச் சற்று அதிகம்.[1]

பஞ்சாப் மாகாண முழுவதிலுமுள்ள காடுகளின் விஸ்தீரணம் 5,184 சதுர மைல்கள். அதிலுள்ள கிழக்கு வட்டம் முஸ்லிம் மண்டலத்திற்குப் புறம்பேயிருக்கிறது. அதன் விஸ்தீரணம் 3,877 சதுர மைல். மேற்கு வட்டம் முஸ்லிம் மண்டலத்திலிருக்கிறது. அதன் விஸ்தீரணம் 1,307 சதுர மைல். 1937-8-ல் இரண்டு வட்டங்களின் மொத்த வருமானம் ரூ. 23,60,192. செலவு ரூ. 22,85,007. மீதி வருமானம் மிகமிகச் சொற்பத் தொகையான ரூ. 75,185 தான்.[2]

இந்த விஷயத்திலே சிந்து நிலைமை நன்ருயிருக்கிறது. அதன் காடுகளின் விஸ்தீரணம் 1,134 ச. மைல். 1939-1940-ல் வருமானம் ரூ. 7,76,348. செலவு ரூ. 3,62,741. செலவு போக மிச்சம் ரூ. 4,13,606.[3]

---

1. Based on Report of the Forest Dept., of Bengal, 1939-40.
2. Based on the Report of the Forest Dept., Punjab, 1937-8.
3. Based on the Report of the Forest Dept., of Sind, 1939-1940.

# 32. கைத்தொழில்

தொழிற்சாலைகள் நிலைமையைக் கவனிப்போமாக

## 1939-ம் வருஷப்படி உள்ள தொழிற்சாலைகள்

### அட்டவணை XXXI

I சர்க்கார் ஸ்தாபன தொழிற்சாலைகள்.

| வருஷ முழுவதும் வேலை செய்யும்பெரிய தொழிற் சாலைகள் | வங்கம் | | பஞ்சாப் | | சிந்து | | வ.மே. எல்லைப்பிரதேசம் | | பி. பலுசிஸ்தானம் | | பி. இந்தியா | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | எ | பி | எ | பி | எ | பி | எ | பி | எ | பி | எ | பி |
| துணிமில்கள். | – | — | 1 | 109 | – | — | – | – | – | — | 2 | 2,157 |
| பானம் முதலியவை தயாரிப்பது. | – | — | – | — | 1 | 34 | – | – | – | — | 2 | 175 |
| தச்சுத் தொழில் | – | — | – | — | – | — | – | – | – | — | 3 | 549 |
| பருத்தி மில் | 1 | 19 | 1 | 195 | – | — | – | – | – | — | 5 | 1,701 |
| கடல்துறை | 4 | 2,048 | – | — | – | — | – | – | – | — | 8 | 4,943 |
| மின்சார இஞ்சினிரிங். | 9 | 1,115 | 9 | 1,009 | 1 | 43 | 5 | 148 | – | — | 34 | 3,592 |
| இஞ்சினிரிங். | 10 | 1,912 | 5 | 920 | 3 | 581 | – | – | 1 | 48 | 52 | 7,745 |
| கால் நடை தீவன உற்பத்தி. | – | — | – | — | – | — | – | – | 1 | 43 | 1 | 43 |
| தங்கசாலை. | 1 | 933 | – | — | – | — | – | – | – | — | 2 | 1,836 |
| தளவாட தொழிற் சாலை. | 3 | 9,275 | 6 | 6,556 | 1 | 535 | 5 | 270 | 1 | 1,075 | 25 | 30,709 |
| அச்சுக்கூடங்கள். | 11 | 3,521 | 6 | 1,480 | 1 | 175 | 1 | 105 | – | — | 45 | 12,555 |
| ரயில்வே பட்டரைகள். | 16 | 15,173 | 7 | 11,402 | 5 | 1,736 | – | – | – | — | 74 | 55,784 |
| மரத் தொழிற் சாலை. | 1 | 25 | 1 | 8 | 1 | — | – | – | – | — | 6 | 245 |
| தோல் பதனிடுதல். | 1 | 32 | – | — | – | — | – | – | – | — | 1 | 32 |
| தபால் தந்தி. | 1 | 1,118 | – | — | – | — | – | – | – | — | 2 | 1,331 |
| தண்ணீர் தேக்கம். | 5 | 770 | 1 | 65 | 2 | 62 | 1 | 22 | – | — | 26 | 2,101 |
| கம்பிளி ஆலைகள். | 1 | 161 | – | — | – | — | – | – | – | — | 3 | 626 |
| சில்லறை. | 4 | 567 | 6 | 526 | 2 | 97 | – | – | 5 | 423 | 54 | 4,942 |
| மொத்தம் | 68 | 36,669 | 43 | 22,270 | 17 | 3,263 | 12 | 545 | 8 | 1,589 | 345 | 1.31,066 |
| சில மாதங்கள் வேலைசெய்யும் தொழிற் சாலைகள். | | | | | | | | | | | | |
| கால் நடை தீவன உற்பத்தி. | – | — | 4 | 108 | – | — | 6 | 225 | – | — | 19 | 1,048 |
| சில்லறை | – | — | 1 | 24 | – | — | – | – | – | — | 10 | 332 |
| மொத்தம் | – | — | 5 | 132 | – | — | 6 | 225 | – | — | 29 | 1,380 |
| ஸ்தலஸ்தாபன சர்க்கார் தொழில்கள் மொத்தம் | 68 | 36,669 | 48 | 22,402 | 17 | 3,263 | 18 | 770 | 8 | 1,589 | 374 | 1,32,446 |

எ.=தொழிற்சாலைகள் எண். பி.=தொழிற்சாலையிலுள்ள தொழிலாளர் எண்.

## அட்டவணை XXXII

இதர தொழிற்சாலைகள்

| வருஷம் பூராவும் வேலைசெய்யும் பெரிய தொழிற் சாலைகள் | வங்கம் | | பஞ்சாப் | | சிந்து | | வ. மே. எல்லைப்புறம் | | பலுசிஸ்தானம் | | இந்தியா | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | எ. | பி. | எ. | பி. | எ. | பி. | எ. | பி. | எ. | பி. | எ. | பி. |
| I ஜவுளி | | | | | | | | | | | | |
| நூற்றல் நெய்தல் | 33 | 31,859 | 14 | 9,211 | - | — | - | - | - | - | 836 | 4,86,853 |
| சணல்மில் | 97 | 2,81,229 | - | — | - | — | - | - | - | - | 106 | 2,98,967 |
| பின்னல் ஆடை வகைகள் | 41 | 1,945 | 62 | 1,863 | 1 | 30 | - | - | - | - | 152 | 7,708 |
| சில்க் ஆலைகள் | 6 | 1,886 | 4 | 563 | 2 | 70 | - | - | - | - | 107 | 6,251 |
| கம்பிளி ஆலைகள் | — | — | 6 | 2,661 | - | — | - | - | - | - | 13 | 6,807 |
| சில்லறை | 6 | 991 | 25 | 1,936 | - | — | - | - | - | - | 89 | 10,491 |
| மொத்தம் | 183 | 3,17,910 | 111 | 16,234 | 3 | 100 | - | - | - | - | 1,303 | 8,17,077 |
| II இஞ்சினிரிங் | 259 | 65,247 | 55 | 3,116 | 29 | 2,228 | 2 | 94 | 4 | 265 | 1,001 | 1,48,424 |
| III தாதுப்பொருளும் உலோகமும் | | | | | | | | | | | | |
| உற்பத்தி கிடங்குகள் | — | | 46 | 1,554 | 2 | 64 | - | - | - | - | 110 | 6,066 |
| எஃகு இரும்பு மில்கள் | 6 | 16,914 | - | — | - | — | - | - | - | - | 90 | 40,790 |
| ஈயம் சம்பந்தமான மில்கள் | 1 | 262 | - | — | - | — | - | - | - | - | 1 | 262 |
| பெட்ரோலியம் சுத்தி செய்யும் ஆலை | — | — | 2 | 803 | - | — | - | - | - | - | 4 | 2,981 |
| சில்லறை | 6 | 457 | 23 | 1,108 | - | — | - | - | - | - | 53 | 5,024 |
| மொத்தம் | 13 | 17,633 | 71 | 3,465 | 2 | 64 | - | - | - | - | 187 | 55,123 |
| IV உணவு, பானம், புகையிலை | | | | | | | | | | | | |
| மாவுமில் | 11 | 1,181 | 18 | 1,178 | 13 | 789 | - | - | - | - | 80 | 5,794 |
| அரிசிமில் | 400 | 18,742 | 43 | 1,056 | - | — | - | - | - | - | 1,158 | 45,409 |
| புகையிலை | 4 | 1,339 | 1 | 50 | 1 | 77 | - | - | - | - | 165 | 19,839 |
| சில்லறை | 27 | 2,924 | 26 | 995 | 9 | 301 | 4 | 96 | - | - | 477 | 26,365 |
| மொத்தம் | 442 | 24,186 | 88 | 3,279 | 23 | 1,167 | 4 | 96 | - | - | 1,880 | 97,407 |
| V ரஸாயனம், சாயம் முதலியவை. | 118 | 17,212 | 32 | 1,554 | 9 | 1,642 | - | - | - | - | 588 | 55,945 |
| VI காகிதமில் | 4 | 6,268 | 1 | 995 | - | — | - | - | - | - | 14 | 11,553 |
| அச்சகங்கள் | 96 | 6,575 | 44 | 2,019 | 16 | 509 | 5 | 109 | - | - | 655 | 30,942 |
| சில்லறை | 17 | 1,096 | 2 | 56 | - | — | - | - | - | - | 40 | 1,882 |
| மொத்தம் | 117 | 13,939 | 47 | 3,070 | 16 | 509 | 5 | 109 | - | - | 709 | 44,377 |

## அட்டவணை XXXII (தொடர்ச்சி)

| வருஷம் பூரா வேலை செய்யும் பெரிய தொழிற் சாலைகள். | வங்கம் எ. | வங்கம் பி. | பஞ்சாப் எ. | பஞ்சாப் பி. | சிந்து எ. | சிந்து பி. | வ. மே. எல்லைப் புறம் எ. | வ. மே. எல்லைப் புறம் பி. | பி. பலுசிஸ்தானம் எ. | பி. பலுசிஸ்தானம் பி. | பி. இந்தியா எ. | பி. இந்தியா பி. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| VII கண்ணாடி, மரத்தொழிற் சாலைகள். | | | | | | | | | | | | |
| செங்கல், ஓடுகள், தச்சவேலைகள். | 15 | 1,357 | 7 | 1,017 | 6 | 325 | – | – | – | – | 186 | 20,553 |
| சிமண்ட்,மண் பாண்டங்கள். | 13 | 3,514 | 5 | 835 | 2 | 524 | – | – | – | – | 46 | 13,088 |
| கண்ணாடி. | 12 | 2,280 | 3 | 204 | – | – | – | – | – | – | 74 | 8,934 |
| மரம் அறுத்தல், கல் உடைப்பது முதலியவை. | 18 | 1,137 | 4 | 151 | 1 | 41 | – | – | 2 | 109 | 159 | 9,715 |
| மொத்தம் | 58 | 8,288 | 19 | 2,207 | 9 | 890 | – | – | 2 | 109 | 465 | 52,290 |
| VIII தோல் பதனிடுதல். | 8 | 4,017 | 2 | 155 | 1 | 16 | – | – | – | – | 66 | 12,906 |
| IX பருத்தி,கொட்டை நீக்குதல். | 33 | 19,155 | – | – | – | – | – | – | 1 | 60 | 181 | 25,987 |
| X சணல்கயிறு. சில்லறை | 58 | 9,665 | 2 | 187 | 6 | 232 | – | – | – | – | 218 | 19,712 |
| மொத்தம் | 1,286 | 4,97,252 | 427 | 33,267 | 98 | 6,848 | 11 | 299 | 7 | 434 | 6,598 | 13,29,248 |
| சில மாதம் வேலை செய்யும் தொழிற் சாலைகள் | | | | | | | | | | | | |
| அரிசிமில். | – | — | – | – | 102 | 2,037 | – | – | – | – | 102 | 2,037 |
| சர்க்கரை. | 13 | 3,558 | 4 | 1,303 | 1 | 177 | – | – | – | – | 254 | 74,872 |
| தேயிலை.. | 288 | 18,828 | 10 | 215 | – | – | – | – | – | – | 1,055 | 67,303 |
| காபி, மற்றும் சில்லறை | – | – | – | – | – | – | – | – | – | – | 97 | 5,836 |
| மொத்தம் | 301 | 22,386 | 14 | 1,518 | 103 | 2,214 | – | – | – | – | 1,508 | 1,50,048 |
| ரஸாயனம், சாயம். | – | — | – | – | – | – | – | – | – | – | 22 | 1,989 |
| பருத்தி பேல்கள். | 8 | 2,363 | 311 | 21,115 | 103 | 12,565 | 7 | 199 | – | – | 1,879 | 1,23,879 |
| சணல். | 62 | 12,869 | – | – | 3 | 105 | – | – | – | – | 85 | 13,527 |
| மொத்தம் | 371 | 37,618 | 325 | 22,633 | 209 | 14,884 | 7 | 199 | – | – | 3,494 | 2,89,433 |
| இதர தொழிற் சாலைகளின் மொத்த உற்பத்தி | 1,657 | 5,34,870 | 752 | 55,900 | 307 | 21,732 | 18 | 498 | 7 | 434 | 10,092 | 16,18,691 |
| நிகர மொத்தம் | 1,725 | 5,71,539 | 800 | 78,302 | 324 | 24,995 | 36 | 1,268 | 15 | 2,023 | 10,466 | 17,51,137 |

அட்டவணைகள் XXXI-லும் XXXII-லும் காணும் வங்காளம், பஞ்சாப் புள்ளி விவரங்கள், மாகாணங்கள் முழுமைக்கும் எடுக்கப்பட்டனவே யன்றி, முஸ்லிம் பகுதிகளுக்கு மாத்திரமல்ல. ஆகவே அவை தவருன வழியில் நம்மை இழுத்துக்கொண்டு போய்விடும். அதிலும் சிறப்பாக வங்காளத்தின் விஷயத்தில் அப்படித்தான். ஏனெனில் கைத்தொழில்கள் யாவும் முஸ்லிம் மண்டலத்துக்கு வெளியேயுள்ள கல்கத்தாவிலும் அதைச் சூழ்ந்தும் இருக்கின்றன. சணல் முஸ்லிம் மண்டலத்தில் உற்பத்தியாகிறதென்பதில் சந்தேகமேயில்லை. ஆனுல் சணல் ஆலைகள் யாவும் கல்கத்தாவுக்குச் சில மைல் தூரத்திலேயே ஹுக்ளி நதிக்கரைகளில் இருக்கின்றன. வங்காளத்திலுள்ள சுமார் 30 பஞ்சாலைகளில் முஸ்லிம் மண்டலத்திலிருப்பவை 7 தான்; அதற்கு மேலில்லை. மற்றவைகளெல்லாம் முஸ்லிம் மண்டலத்திற்கு வெளியேயுள்ள மேற்கு வங்காளத்திலிருக்கின்றன. இந்தியாவிலுள்ள மொத்தக் கதிர்கள் 10 லட்சம்; தறிகள் 2 லட்சம். அதில் வங்காளத்திலுள்ளவை, 1,12,000 கதிர்களும், 2,600 தறிகளுமாம். சணலாலைகள் மிக அதிகமான ஆண்களுக்கு வேலையளிக்கின்றன. இரும்பு எஃகுச் சாலைகள் யாவும், மேற்கத்திய முஸ்லிமல்லாத ஜில்லாக்களில்தான் இருக்கின்றன. அதைப்போல எல்லா முக்கிய தொழில்களும் கல்கத்தாவிலும் கல்கத்தாவைச் சுற்றிலும் இருக்கின்றன. அரிசியாலைகளும் சணல் ஆலைகளும் மாகாண முழுதும் ஆங்காங்கு இருக்கின்றன. அரசாங்கத் தொழிற்சாலைகளிலும் ஸ்தலஸ்தாபனத் தொழிற்சாலைகளிலும் முக்கியமானவை தளவாடத் தொழிற்சாலை, ரயில்வேப் பட்டரைகள், கப்பல் கட்டும் துறைகள், அச்சுக்கூடங்கள் ஆகியவையே. இவைகளும்கூட கல்கத்தாவிலும் அதைச் சுற்றியுமே யிருக்கின்றன. இவ்விதமாக வங்காளத்தின் புள்ளி விவரங்கள் மேற்பார்வைக்கு திருப்தியளிப்பதுபோலத் தோன்றினும், தொழில்களைப் பொறுத்தமட்டிலும் அவைகள் முஸ்லிமல்லாத மண்டலங்களைக் குறிக்கின்றனவேயன்றி முஸ்லிம் மண்டலங்களைக் குறிக்கவில்லை.

பேராசிரியர் கூப்லண்டு நிலைமையைப் பின்வருமாறு சுருக்கமாகக் கூறியுள்ளார்: 'வங்காளத்தில் இப்பொழுதுள்ள நிலைமையின்படி பார்த்தால் பிரிட்டிஷ் இந்திய ஜனத்தொகையில் 20 சதவிகிதத்தினர் கையில் 33 சதவிகிதத் தொழில்கள் இருக்கின்றன (தொழிற்சாலைகளிலுள்ள வேலையாட்களின் சராசரித் தொகையைக்கொண்டு கூறப்பட்டது இக்கணக்கு.) கிழக்கு வங்காளத்தில் கல்கத்தாவை விட்டுவிட்டால் பிரிட்டிஷ் இந்தியக் கைத்தொழிலின் சதவிகிதம் 2·7 ஆகக் குறைந்துவிடுகிறது.'[1]

பஞ்சாபின் நிலைமை வேறுவிதமானது. லாகூர் முஸ்லிம் மண்டலத்தில் சேர்கிறது. கைத்தொழில்களெல்லாம் அங்கேதான் இருக்கின்றன. ஆகவே பஞ்சாபின் புள்ளி விவரங்கள், முஸ்லிம் மண்டலத்தின் நிலைமையைத் தான் சிறிது மிகைப்படுத்திக் கூறுகின்றன. ஆகவே வங்காளப் புள்ளி விவரங்களை விட்டுவிட்டு பஞ்சாப், வடமேற்கெல்லை மாகாணம், சிந்து, பலுசிஸ்தானம் முதலியவைகளின் புள்ளி விவரங்களை கவனித்தால் இந்திய முஸ்லிம் மண்டலங்களின் தொழில் நிலைமை நன்கு தெரியும். பஞ்சாபிலும், வடமேற்கெல்லை மாகாணம், சிந்து, பலுசிஸ்தானம் முதலியவைகளிலுமுள்ள அரசாங்கத்தொழிற்சாலைகள், ஸ்தலஸ்தாபனத் தொழிற்சாலைகள், இதரருக்குச் சொந்தமான தொழிற்சாலைகள், பட்டரைகள் முதலியன 1175. இவைகள் 1,06,588 மனிதர்களுக்கு வேலையளிக்கின்றன. பிரிட்டிஷ் இந்தியாவில் தனி மனிதர்களுக்குச்

1. R. Coupland: *The Future of India*, p. 96.

சொந்தமான தொழிற்சாலைகளின் அளவுக்கு மேற்கூறிய மாகாணங்களில் தனி மனிதர்களுக்குச் சொந்தமான தொழிற்சாலைகளின் அளவு குறைவே. பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள மொத்த தொழிற்சாலைகள் 10,466. அவைகளில் வேலை செய்வோர் 17,51,137 பேர். வடமேற்கு மாகாணங்களில் உள்ள தொழிற்சாலைகள், பிரிட்டிஷ் இந்தியத் தொழிற்சாலைகளில் 11·23 சதவிகிதம். அவைகளில் வேலை செய்வோர், பிரிட்டிஷ் இந்தியத் தொழிற்சாலைகளில் வேலை செய்வோரில் 6·1 சதவிகிதமே. சுருங்கச் சொன்னால், வடமேற்கத்திய மாகாணங்களில் ஒரு தொழிற்சாலையில் வேலை செய்வோர் சராசரி 90 பேர்; பிரிட்டிஷ் இந்தியாவிலோ 167 பேர். வடமேற்கத்திய மாகாணங்களிலுள்ள தொழிற்சாலைகளில் பெரும்பான்மை, அரசாங்கத்தாலும் ஸ்தலஸ்தாபனங்களாலும் நடத்தப்படுபவை. அவைகளின் தொகை 91. அவைகள் வேலையளிப்பது 28,024 பேருக்கு. அதாவது அவைகள் தொகை 7·7 சதவிகிதமாயிருக்கும்போது அங்கு வேலை பார்ப்பவர்கள் 26·3 சதவிகிதத்தினர். ஆகவே பெரிய தொழிற்சாலைகளெல்லாம், அரசாங்கம் அல்லது ஸ்தலஸ்தாபனத்தைச் சேர்ந்தவை என்றாகிறது. பெரிய அரசாங்கத் தொழிற்சாலைகளுள், பீரங்கித் தொழிற்சாலைகளும், ரயில்வேப் பட்டரைகளும் சேர்ந்தவை. பஞ்சாபிலும் சிந்துவிலும் மிகப் பெரிய கைத்தொழில் பஞ்சரைப்பதும் பஞ்சுப் பொதி கட்டுவதுமே இவைகள் அதிக மக்களுக்கு வேலையளிக்கின்றன. இவைகளும், பீரங்கிப் பட்டரைகள், ரயில்வேப் பட்டரைகளும் தவிர்த்து, பிரத்தியேக மனிதர்களால் நடத்தப்படும் எந்தத் தொழிற்சாலையும் அதிகமான ஜனங்களுக்கு வேலையளிக்கவில்லை.

பிரிட்டிஷ் இந்தியா முன்னேறியிருக்கிற அளவுகூட வடமேற்கு மண்டல கைத்தொழில் முன்னேற்றமடையவில்லை என்று மேற்கண்டவாறு தெளிவாகிறது. பெரிய பெரிய தொழிற்சாலைகளும் பட்டரைகளும் அரசாங்கத்துக்கே சொந்தமாக இருக்கின்றன.

மேற்கூறிய காரணங்களுக்காக, அதாவது கைத்தொழில்களெல்லாம் முஸ்லிம் மண்டலத்திற்கு வெளியே யிருக்கின்றனவென்பதற்காக, வங்காளத்தின் புள்ளி விவரங்களை விலக்கிவிட்டுப் பார்த்தோமானால், பிரிட்டிஷ் இந்தியாவோடு ஒப்பிடும்போது வடமேற்கு, கிழக்குமண்டலங்களின் நிலைமை இன்னும் அதிருப்திகரமாக இருக்கிறது. வங்காளம், பஞ்சாப், வடமேற்கு எல்லை மாகாணம், பலுசிஸ்தானம் ஆகிய முஸ்லிம் மண்டலங்களின் ஜனத்தொகை பிரிட்டிஷ் இந்திய மொத்த ஜனத்தொகையில் 26·7 சதவிகிதம். ஆனால் கைத்தொழிற்சாலைகள்—அரசாங்கம், ஸ்தலஸ்தாபனம், இன்னும் மற்றவை—13·9 சதவிகிதம் தானிருக்கின்றன. அவைகளில் வேலை செய்வோர் பிரிட்டிஷ் இந்தியாவில் வேலை செய்வோரில் 7.36 சதவிகிதத்தினரேயாவர். ஏற்கெனவே கூறியபடி, பீரங்கித் தொழிற்சாலைகளும், ரயில்வேப் பட்டரைகளும்தான் பெரியவை.

இந்திய மூலதனத்தில் பெரும்பகுதி பஞ்சாலைகள், சணலாலைகள், கரும்பாலைகளில் கிடக்கிறது. பஞ்சாபிலும் சிந்துவிலும் பருத்தி அதிகமாக உற்பத்தியாகிறது. கிழக்கு வங்காளத்தில் சணல் உற்பத்தியாகிறது. என்றாலும் அவைகளை நூற்று நெய்யும் ஆலைகள் யாவும் வடமேற்கு கிழக்கு முஸ்லிம் மண்டலங்களுக்கு வெளியில்தானிருக்கின்றன. 1939-40-ல் இந்தியாவில் பதிவு செய்யப்பட்டு பஞ்சாலைகளை நடத்திவந்த கூட்டுக் கம்பெனிகளின் செலுத்தப்பட்ட மூலதனம் 33·93 கோடி ரூபாய். இதோடு 1938-9-ல் வெளி

நாடுகளில் பதிவு செய்யப்பட்டு இந்தியாவில் பஞ்சாலைகளை நடத்திவந்த கம்பெனிகளின் மூலதனமான 271,778 பவுனையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். இதேபோல சணலாலைகளின் செலுத்தப்பட்ட இந்திய மூலதனம் 20·46 கோடி ரூபாயும் 295,587 பவுனுமாகும். கரும்பாலைகளின் மூலதனம் 10·97 கோடி ரூபாயும் 306,656 பவுனுமாகும். இந்தத் தொழில்களில் முஸ்லிம் மண்டலங்களுக்குக் கொஞ்சம்தான் பங்கு உண்டு. இதேபோல சுரங்கக் கம்பெனிகளிலும் கற்கள் தோண்டும் கம்பெனிகளிலும் செலுத்தப்பட்ட இந்திய மூலதனம் 19·88 கோடி ரூபாய், வெளிநாட்டுப்பணம் 111,056,444 பவுன். முஸ்லிம் மண்டலங்கள் இந்த முயற்சிகளில் சிறிதும் ஈடுபடவில்லை. காரணம், அங்கு நிலக்கரி, இரும்பு, செம்பு போன்ற சுரங்கங்கள் இல்லை. பெட்ரோலியம் சிறிது பெற்றிருக்கின்றன.

சற்றுமுன் பேராசிரியர் சார்லஸ். எச். பெஹ்ரே, வெளிநாட்டு விஷயங்கள் என்ற நூலில் கூறியதை மேற்கோள் காட்டினோம். மேற்கண்ட புள்ளி விவரங்கள் அவரது வாசகங்களை நிரூபிக்கின்றன. இடையிலே இன்னொரு விஷயத்தை நாம் ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டும். வங்காளம் முழுமையும், வடகிழக்குக்கோடி அஸ்ஸாமிலுள்ள பெட்ரோலிய வயல்களைக் கொண்ட அஸ்ஸாம் முழுமையும் கிழக்கு மண்டலத்தில் சேர்க்கப்படுமென்ற நம்பிக்கையை ஆதாரமாகக்கொண்ட முடிவுகள் அவை. அது விஷயமாக லீக் செய்த தீர்மானத்தின்படி அவை முழுவதும் கிழக்கு மண்டலத்தில் சேரா. அதேபோல மேற்கு மண்டலத்தில் சார்லஸ் பெஹ்ரே பஞ்சாப் முழுவதையும் வடமேற்குப் பகுதியில் சேர்க்கிறார். நிலக்கரியும் கைத்தொழில்களும் அதிகமுள்ள மேற்கு வங்காளத்தையும், சில்ஹட் போக அஸ்ஸாம் மாகாணம் முழுவதையும், கைத்தொழில்கள் அதிகமுள்ள பஞ்சாப்பின் கிழக்கு ஜில்லாக்களையும் விலக்கிவிட்டு அவர் பரிசீலனையில் இறங்கியிருப்பாரானால் அவருடைய முடிவுகள், மத அடிப்படையில் இந்தியாவைத் துண்டாடுவதை இன்னும் அதிக வன்மையாக எதிர்க்கும்.

பொருள்களை உற்பத்தி செய்யும் இந்தியத் தொழில்களின் நிலைமையை டாக்டர் எ. எம். லாரென்ஸோ தமது இந்திய அட்லாஸ் (இந்திய விவகாரங்களைப் பற்றிய ஆக்ஸ்போர்டு வெளியீடுகள்) என்ற புத்தகத்தில் அழகாகச் சுருக்கிக் கூறுகிறார் :

'இந்தியாவில் தொழில் வளர்ச்சியும் முன்னேற்றமும் இயற்கைச் சூழ் நிலையைப் பொறுத்திருக்கின்றன. இந்தியாவின் முக்கிய தொழில்கள், சிற்சில வரையறுக்கப்பட்ட பகுதிகளிலேயே ஒதுங்குகின்றன. இரும்பு எஃகுத் தொழில், வங்காளம் பீஹாரில் நிலக்கரி இரும்புச் சுரங்கங்களுக்கருகில் நடக்கின்றன. ஜாம்ஷெட்பூர், குல்டி, பான்பூர், மனோஹர்பூர் முதலிய இடங்களில் உற்பத்தி நடைபெறுகின்றன. சீதோஷ்ண காரணத்தாலும் பருத்தி விளை நிலங்களருகிலிருப்பதாலும் பஞ்சாலைத் தொழில் பம்பாய் மாகாணத்தில் நிலைத்திருக்கிறது. பம்பாய், ஷோலாப்பூர், ஹுப்ளி, ஆமதாபாத் முதலிய இடங்களில் பருத்தி நெசவு அதிகம். சணலாலைகள் வங்காளத்தில் கல்கத்தாவைச் சுற்றிலும் இருக்கின்றன. ஐக்கிய மாகாணத்திலும் பீஹாரிலும், ரயில் பாதையையொட்டி, கரும்புச் சாகுபடிப் பிரதேசத்தில் கரும்பாலைகளிருக்கின்றன. சுண்ணாம்புக்கல், ஜிப்ஸம், களிமண் நிறையக் கிடைக்கும் மத்திய, தெற்குப் பீடபூமியில் சிமெண்டு செய்யப்படுகிறது. காகித ஆலைகள் வங்காளம், பம்பாய், ஐக்கிய மாகாணத்தில் இருக்கின்றன. தோல் தொழில் ஐக்கிய

மாகாணத்திலும் சென்னையிலும் நடைபெறுகிறது. மத்திய மாகாணத்திலும் கங்கையின் மேல் சமவெளிகளிலும் கண்ணாடித்தொழில் நடைபெறுகிறது.'[2]

மேலேயுள்ள பகுதியில் வடமேற்கு மண்டலத்திலுள்ள மாகாணம் ஒன்றேனும் ஒரு தடவையாவது குறிக்கப்படவில்லை என்பதை மட்டும் எடுத்து காட்டினால் போதும்; உண்மை நிலைமை தெளிவாய் விளங்கும். வங்காளத்தைப் பற்றிக் கூறியதெல்லாம் முஸ்லிம் மண்டலத்திற்கு வெளியிலுள்ள தொழிற் சாலைகளைத்தான்.

தற்போதைய நிலைமைகள் தான் வருங்காலத்தில் இன்னும் தீவிரமாய் விளங்கும். சில குறிப்பிட்ட பிரதேசங்களில் சில குறிப்பிட்ட தொழில் வளர்ச்சிக்குக் காரணமாயிருப்பது ஆங்காங்கு கிடைக்கும் இயற்கைப் பொருள்களே. அந்த இயற்கைப் பொருள் சூழ்நிலை நமது இஷ்டத்திற்கு மாறாது. எல்லைகளை மாற்றியமைப்பது, தனித்தனி ராஜ்யங்களை உண்டாக்கு வது போன்ற காரியங்களால் தாதுப்பொருள்களும் இதர மூலப் பொருள்களும் இடம் பெயரா.

அடுத்துள்ள 33-வது அட்டவணையில் மாகாணங்களுக்கிடையே சில முக்கியப் பொருள்களைப்பற்றிய உள்நாட்டு வியாபாரப் புள்ளி விவரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. தொகைகள் ஆயிரம் மணங்குகளைக் குறிக் கின்றன. வடமேற்கு மாகாணங்கள், கிழக்கு மாகாணங்கள் சேர்ந்து பிற மாகாணங்களோடு ஏற்றுமதி இறக்குமதி செய்கிற விவரம் காட்டப்பட்டிருக் கிறது. அதிகப்படி இறக்குமதியைக் கழித்தலடையாளத்துடன் காணலாம். இவை 1939-40 வருடத்திய புள்ளிவிவரங்கள்.

இரண்டு மண்டலங்களும், நிலக்கரி, கட்டிக்கரி, பருத்தித் துணி, இரும்பு, எஃகு, சீனி முதலிய சாமான்களை அதிகப்படி இறக்குமதி செய் கின்றன; உப்பு, அரிசி உள்பட தானியங்களை ஏற்றுமதி செய்கின்றன. கிழக்கு மண்டலத்தில் கோதுமையை ஏற்றுமதி செய்யவில்லை. சுத்தமாகாத வெறும் பஞ்சு, கோதுமை, எண்ணெய் விதைகளில் வடமேற்கு மண் டலத்தில் இறக்குமதியைக் காட்டிலும் ஏற்றுமதி அதிதம். இந்தப் புள்ளி விவரங்கள் மாகாணமுழுமைக்கும் எடுக்கப்பட்டவை. முஸ்லிமல்லாதார் பெரும்பான்மையாயுள்ள ஜில்லாக்களை எடுத்துவிட்டால் அப்பொழுது கிழக்கு மண்டலம் நிலக்கரி, கட்டி நிலக்கரி, இரும்பு, எஃகு முதலியவைகளைப்பொறுத்த மட்டும் மிகவும் சங்கடப்படவேண்டியிருக்கும். வங்காளத்தில் முஸ்லிம்கள் பெரும் பான்மையாயுள்ள கிழக்கு, வடக்கு ஜில்லாக்கள் இப்பொருள்களை ஏற்றுமதி செய்யப்போவதில்லை. முஸ்லிமல்லாத மேற்கத்திய ஜில்லாக்கள் இப் பொருள்களை இறக்குமதி செய்யப்போவதில்லை. ஆகவே முஸ்லிம் ஜில்லாக்கள் இப்பொருள்களை இறக்குமதி செய்யவேண்டியது மிக அதிகமாகும். அதே அடிப்படையில் கிழக்கு முஸ்லிம் மண்டலம் சணல் விஷயத்தில் பெரும் முன் னேற்றத்தைக் காட்டும். சணல் ஏற்றுமதி என்பது அந்நிய நாடுகளுக்கு ஏற்றுமதி யாவதைக் காட்டுகிறது. நிலக்கரி, கட்டிக்கரி, இரும்பு, எஃகு, மேற்கிலுள்ள முஸ்லிமல்லாத ஜில்லாக்களில் உற்பத்தியாகின்றன. கிழக்கி லுள்ள முஸ்லிம் ஜில்லாக்களில் சணல் மிக அதிகமாக உற்பத்தியாகிறது. பஞ்சாபின் முக்கிய ஏற்றுமதி கோதுமை. முஸ்லிம் மண்டலங்கள் முஸ்லி மல்லாத மண்டலங்களிலிருந்து நிலக்கரி, இரும்பு, எஃகுப் பொருள்களை எதிர் பார்க்குமளவுக்கு முஸ்லிமல்லாத இந்தியா பஞ்சாப்பின் கோதுமையை எதிர்

2. A. M. Lorenzo: *Atlas of India*, Sec. 8.

# அட்டவணை XXXIII

| மாகாணம் | நிலக்கரியும் கட்டிக்கரியும் | | | பருத்தி | | | ஜவுளி | | | தான்யம், பருப்பு, மாவு, நெல் முதலியன | | | கோதுமை | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | எ. | பி. | மி. | எ. | பி. | மி. | எ. | பி. | மி. | எ. | பி. | மி. | எ. | பி. | மி. |
| அஸ்ஸாம். | 70 | 3,345 | | 123 | 2 | | 2 | 266 | | 207 | 1,180 | | ... | 73 | |
| வங்கம். | 1,47,043 | 63,487 | | 143 | 207 | | 129 | 957 | | 7,291 | 7,652 | | 29 | 230 | |
| கல்கத்தா. | 3,963 | 1,53,611 | | 62 | 429 | | 1,737 | 1,563 | | 8,504 | 3,002 | | 178 | 3,464 | |
| கி. மண்டல மொத்த உற்பத்தி. | 1,51,076 | 2,20,443 | −69,367 | 328 | 638 | −310 | 1,868 | 2,786 | −918 | 16,002 | 11,834 | 4,168 | 207 | 3,767 | −3,560 |
| பஞ்சாப். | 706 | 44,866 | | 6,637 | 12 | | 176 | 1,358 | | 1,483 | 1,310 | | 13,542 | 79 | |
| வ.மே.எல்லைப்புறம். | 1 | 2,539 | | 133 | 1 | | 4 | 300 | | 29 | 174 | | 18 | 278 | |
| சிந்து பலுசிஸ்தானம். | 25 | 8,943 | | 2,163 | 41 | | 42 | 467 | | 5,508 | 48 | | 6,473 | 43 | |
| கராச்சி. | 880 | 1,586 | | 2 | 6,271 | | 654 | 55 | | 1 | 2,952 | | 1 | 8,335 | |
| வட மேற்கு மண்டலத்தின் மொத்தம். | 1,612 | 57,934 | −56,313 | 8,935 | 6,325 | 2.610 | 876 | 2,180 | −1,304 | 7,021 | 4,484 | 2,537 | 20,034 | 8,735 | 11,299 |

எ. = ஏற்றுமதி பி. = இறக்குமதி மி. = மிச்சம்

| மாகாணம் | இரும்பும் உருக்கும் | | | எண்ணெய் வித்துகள் | | | உப்பு | | | சர்க்கரை | | | சணல் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | எ. | பி. | மி. | எ. | பி. | மி. | எ. | பி. | மி. | எ. | பி. | மி. | எ. | பி. | மி. |
| அஸ்ஸாம். | 112 | 1,266 | | 473 | 20 | | 2 | 1,290 | | 4 | 473 | | 2,851 | 2 | |
| வங்கம். | 4,040 | 6,409 | | 374 | 1,823 | | 594 | 5,822 | | 378 | 1,540 | | 26,052 | 137 | |
| கல்கத்தா. | 7,279 | 7,963 | | 417 | 7,216 | | 10,607 | 110 | | 804 | 1,056 | | 209 | 30,687 | |
| கிழக்கு மண்டல மொத்தம். | 11,431 | 15,638 | −4,207 | 1,264 | 9,232 | −7.975 | 11,203 | 7,222 | 3,981 | 1,186 | 3,071 | −1,885 | 29,112 | 30,826 | −1,714 |
| பஞ்சாப். | 392 | 3,010 | | 2,252 | 462 | | 1,946 | 313 | | 64 | 3,624 | | 6 | 2 | |
| வ.மே.எல்லைப்புறம். | 12 | 260 | | 43 | 56 | | ... | 334 | | 53 | 322 | | ... | 75 | |
| சிந்து பலுசிஸ்தானம். | 187 | 946 | | 2,922 | 121 | | 11 | 280 | | 13 | 322 | | ... | 1 | |
| கராச்சி. | 1,466 | 177 | | 38 | 2,480 | | 232 | 12 | | 1,056 | 904 | | ... | 4 | |
| வ. மே. மண்டல மொத்தம். | 2,047 | 4,393 | −2,336 | 5,255 | 3,119 | −2,136 | 2,189 | 939 | 1,250 | 1,186 | 5,172 | −3,986 | 6 | 82 | −76 |

பார்க்க வேண்டியதில்லை. தனக்கு இப்பொழுது எவ்வளவு தேவையோ அவ்வளவு கோதுமையை முஸ்லிமல்லாத இந்தியா உற்பத்தி செய்துகொள் கிறது. மேலும் கோதுமை வியாபாரத்தில் ஆஸ்திரேலியாவோடு பஞ்சாப் போட்டியிடவேண்டி யிருக்கிறது. ஆஸ்திரேலியா இந்தியாவிற்குள் 1935-6-ல் 13,000 டன் கோதுமையை இறக்குமதி செய்தது. 1938-9-லோ 1,50,000 டன் ஆகிவிட்டது.

இந்தியாவின் மற்றப் பாகங்களிலிருந்து பிரித்துவிட வேண்டுமென்று கூறப்படும் பகுதியிலுள்ள மக்களின் வருங்கால நல்வாழ்வு இந்தப் பிரசினை களைப் பொறுத்திருக்கிறது. ஆனால் இதைப்பற்றி திரு. ஹெர்பெர்ட். எல். மாத்யூஸ் என்பவருக்கு அளித்த பேட்டியில் திரு. எம். ஏ. ஜின்னா கீழ்க்கண்ட வாறு கூறியதாக 1942 செப்டம்பர் 21உ நியூ யார்க் டைம்ஸ் பத்திரிகையில் வெளிவந்தது: 'ஆப்கானிஸ்தானம் எளிய நாடு. இருந்தாலும் அதுவும் வாழ்ந்து வருகிறது. பிரிந்து விட்டோமானால் நாங்கள் 7 கோடிப் பேர் இருப்போம். இந்த ஜனத்தொகையில் மிகமிகக் குறைவாயுள்ள இராக்நாடும் வாழத்தான் செய்கிறது. சுதந்திரமுள்ளவரையும் நாங்கள் அறிவோடும் எளிமையோடும் வாழத்தயாராக இருந்தால் அதற்கு இந்துக்கள் குறுக்கே நிற்பானேன்?............பொருளாதாரமா? அது தன்னைத்தானே கவனித்துக் கொள்ளும்.' இந்தப் பேச்சு, வாக்குவாத முறையில் நன்றாகத்தானிருக்கிறது. ஆனால் 7 கோடி முஸ்லிம்களின் நல்வாழ்வைப் பாதிக்கும் விஷயங்களைச் சமாளிக்கும் விதம் இதுவல்ல. நூற்றாண்டுகளாகக் கட்டப்பட்ட வாழ்வை வேரோடு பறித்துத் தகர்ப்பதாகும்.

## 33. வருமானமும் செலவும்

அடுத்தாற்போல இரண்டு முஸ்லிம் மண்டலங்களும் தங்களது வரவு செலவு நிலைமையில் எவ்வாறு இருக்குமென்பதைக் கவனிப்போம். வடமேற்கு, கிழக்கு மண்டலங்களில் 'சுதந்திர ராஜ்யங்கள்' வேண்டுமென லீக் தீர்மானம் கோருகிறது. அவைகளுக்குப் பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரங்கள், தந்தி தபால், போக்குவரவு, சுங்கம், நாணயம், நாணயமாற்று முதலிய விஷயங்களில் பரிபூரண அதிகார மிருக்க வேண்டுமெனவும் கூறுகிறது. 'ராஜ்யங்கள்' என்ற சொல், லீகின் தீர்மானத்திலும்சரி, திரு. ஜின்னாவின் சென்னை மகாநாட்டு (1941)-த் தலைமைப் பிரசங்கத்திலும் சரி, பன்மையில் உபயோகப் படுத்தப் பட்டிருக்கிறது. அவ்வாறு கூறப்பட்டிருப்பதால் அவை இந்தியாவின் இதர பாகங்களோடுமட்டுமல்ல தங்களுக்குள்ளும் ஒன்றுக்கொன்று தொந்தமற்ற இரண்டு சுதந்திர ராஜ்யங்களைக் குறிப்பது போலக் காணப்படுகிறது. மேலும் அவைகளில் சேரும் அங்கங்கள் "சுயேச்சையாகவும் பூரணபொறுப்பு வாய்ந்ததாகவும்" இருக்கவேண்டுமெனவும் கருதப்படுகிறது. அப்படியானால் சுயேச்சையும் பூரண அரசாங்கப் பொறுப்பும் வாய்ந்த அங்கங்களின் சமஷ்டி யொன்று தோன்றுமா என்பது தெரியவில்லை. சமஷ்டி என்ற சொல்லை உபயோகிக்காததாலும், அங்கங்களாக அமையப்போகும் பகுதிகளை "பூரண அரசாங்கப் பொறுப்பு வாய்ந்தவை" என்று கூறுவதாலும், ஒருவேளை சமஷ் டியைக் கருதவில்லை என்று காட்டுகிறது. ஆனால் வடமேற்கு, கிழக்கு மண் டலங்கள் ஒவ்வொன்றிலும் சமஷ்டிகள் அமைப்பதே அவர்களது நோக்க மென வைத்துக் கொள்வோம். அப்போது ஒவ்வொரு சமஷ்டியும் ஒவ்வொரு

சமஷ்டி நிர்வாகத்தை வைத்துக்கொள்ள வேண்டியிருக்கும். சுதந்திரச் சமஷ்டி ராஜ்யத்தின் நிர்வாக இலாகாக்களும் வேண்டியதிருக்கும். மேலும் சமஷ்டி அங்கங்கள் தங்களது சொந்த நிர்வாக இயந்திரத்தையும் வைத்துக் காப்பாற்ற வேண்டியிருக்கும். சமஷ்டி அரசாங்கத்துக்கும் அதன் அங்கங்களுக்கும் இடையிலுள்ள சம்பந்தம் இப்பொழுது இந்தியாவிலுள்ள மத்திய சர்க்காருக்கும் மாகாண சர்க்காருக்கு முள்ள சம்பந்தமாக இருக்கும். ஆகவே இரண்டிரண்டு வரவு செலவுத் திட்டங்கள் ஒவ்வொரு மண்டலத்திலும் இருக்கும். ஒன்று மத்திய அல்லது சமஷ்டியின் வரவு செலவுத் திட்டம். இரண்டாவது சமஷ்டி அங்கங்களின் அல்லது மாகாணங்களின் வரவு செலவுத்திட்டம். ஒவ்வொரு மாகாணமும் நிலவரி, சுங்கம் போன்ற அனேகவகைகளில் சொந்த வருமானம் உள்ளவை யென்று நாம் அறிவோம். ஒவ்வொன்றும் தனக்குரிய நிர்வாக இயந்திரத்தைக் காப்பாற்றவேண்டும். அத்துடன் சமூக சேவையான அல்லது நாட்டின் ஆக்க வேலைகளான கல்வி சுகாதாரம் முதலியவைகளையும் கவனிக்க வேண்டும். மத்திய அரசாங்கமும் தனக்கென சுங்கம் போன்ற வருவாய்களைப் பெற்றிருக்கிறது. தானும் தன்னுடைய நிர்வாக இயந்திரமொன்றைச் சுமக்க வேண்டியிருப்பதுடன் சமஷ்டி விஷயங்களைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. அவ்விஷயங்களில் முக்கியமானவை பாதுகாப்பும் வெளி விவகாரங்களும். சமஷ்டியும் சமஷ்டி அங்கங்களும் கிட்டத்தட்ட தற்போதுள்ள மத்திய, மாகாண அரசாங்கங்களின் நிர்வாக இயந்திரம் போன்றதொன்றையே கொண்டிருக்கும் என வைத்துக் கொள்ளலாம். வருவாய்களும் செலவினங்களும் அவ்வாறே இருக்குமென்று வைத்துக்கொள்ளலாம். அந்த மண்டலங்களில் விழும் மாகாணங்களின் பொருளாதார நிலைமையை ஆராய்ந்து அவைகளின் வரவுசெலவு எவ்வாறு இருக்குமென்பதையும், மத்திய நிர்வாகத்துக்கு அதன் அங்கங்களாகிய மாகாணங்கள் எவ்வளவு தூரம் உதவ முடியும் என்பதையும் நாம் யூகித்துக் கொள்ளலாம். இது விஷயமாக இரண்டு கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை நாம் மனதில் வைத்துக் கொள்ள வேண்டும். மாகாண முழுமைக்கும் உள்ள வரவு செலவு நமக்கு எளிதாகக் கிடைக்குமே யொழிய ஜில்லா வாரியாகக் கிடைக்காது. ஒரு மாகாணத்திலுள்ள ஏதாவது சில ஜில்லாக்கள் முஸ்லிம் மண்டலத்தில் சேராமல் வெளித் தங்குமானல் அந்த ஜில்லாக்களின் வரவு செலவுப் புள்ளிகள் நமக்குக்கிடைப்பது கஷ்டம். சரி அது போகட்டும். மத்திய அல்லது சமஷ்டி நிர்வாகத்தின் வரவு செலவு என்னவாக யிருக்குமென்று புள்ளி போடப்போனல் அது இன்னும் கடினமாகிவிடும். ஆகவே மத்திய சமஷ்டிகள், அதன் அங்கங்களுடைய வரவு செலவைப்பற்றிய விவாதமோ முடிவுகளோ தற்காலிகமாகத்தான் இருக்கமுடியும். சமீப யுத்தமோ புதிய புதிய நிலைமைகளை உண்டாக்கியிருக்கிறது. புதிய பிரசினைகளையும் உண்டாக்கப்போகிறது. ஆகவே பழைய வரவு செலவுத் திட்டங்களை வைத்துக் கொண்டு ஏதாவது கணக்குப் போட்டுப் பார்ப்பது வெறும் யூகத்துக்கே யொழிய நடைமுறைக்கு ஒத்து வரும் என்று கூறுவதற்கில்லை. இருந்தாலும் இந்த விஷயங்களையெல்லாம் மனதில் வைத்துக் கொண்டு, தற்காலத்திய வரவு செலவுகளைக் கவனிப்பது நமக்கு ஒத்தாசையாக இருக்கும். ஆகவே இப்பொழுது வடமேற்கு, கிழக்கு முஸ்லிம் மண்டலங்களின் மாகாண, மத்திய வரவு செலவுத் திட்டங்களைப் பற்றிக் கூறுகிறேன்.

## அட்டவணை XXXIV

மாகாண வருமானம் (லட்சக்கணக்கில்)

| | வங்காளம், | | அஸ்ஸாம் | | பஞ்சாப் | | வ. மே. எ. | | சிந்து | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | '38-39 | '39-40 | '38-39 | '39-40 | '38-39 | '39-40 | '38-39 | '39-40 | '38-39 | '39-40 |
| சுங்கம். | 221.27 | 221.97 | 11.69 | 13.39 | — | — | — | — | — | — |
| வருமான வரி. | 30.00 | 55.80 | 3.00 | 6.41 | 12.00 | 22.32 | 1.50 | 2.79 | 3.00 | 5.58 |
| உப்புவரி. | 12 | — | 2 | — | — | — | — | — | — | — |
| நிலவரி. | 324.10 | 386.10 | 112.64 | 136·90 | 263.53 | 234.20 | 18.41 | 18.59 | 36.04 | 36.85 |
| மாகாண கலால் வரி. | 159.35 | 165.28 | 35.33 | 33.96 | 101.59 | 104.98 | 8.76 | 8.87 | 37.46 | 36.33 |
| ஸ்டாம்பு வரி. | 257.77 | 256.44 | 18.12 | 17.63 | 78.12 | 74.55 | 7.40 | 7.07 | 16.89 | 17.16 |
| காடு. | 22.41 | 23.98 | 16.69 | 17.46 | 23.03 | 25.39 | 5.97 | 5.22 | 8.65 | 7.76 |
| பத்திரப் பதிவு. | 24·12 | 27.32 | 1.77 | 2.01 | 8.36 | 8.50 | 67 | 69 | 2.00 | 2.07 |
| வாகன சட்டத்தின் கீழ் வருமானம். | 21.90 | 21.31 | 3.71 | 4.09 | 12.83 | 13.49 | 2.08 | 2.38 | 2.10 | 2.68 |
| இதர வரிகளும் தீர்வைகளும். | 38.94 | 46.61 | 6 | 2.37 | 2.81 | 11.44 | 59 | 1.13 | 3.64 | 6.66 |
| மொத்தம் | 1099.98 | 1204.81 | 203.03 | 234.22 | 502.27 | 494.87 | 45.38 | 46.73 | 109.78 | 115.09 |
| ரயில்வேக்களும் மானியம் பெறும் ரயில்வேக்களும். | 14 | 14 | — | — | — | — | — | — | — | — |
| மொத்த நீர்ப்பாசன வேலைகள். | 4.65 | — | — | 1 | 451.17 | 508.70 | 12.47 | 13.81 | 72.39 | 88.71 |
| சிவில் நிர்வாகம். | 90.93 | 93.68 | 13.35 | 13.37 | 80.79 | 90.32 | 8.34 | 8.07 | 10.56 | 14.76 |
| இதர சிவில் வேலைகள். | 29.09 | 35.50 | 10.33 | 10.91 | 43.47 | 39.65 | 11.20 | 10.13 | 10.60 | 9.96 |
| சில்லறை வருமானம். | 21.09 | 25.77 | 1.62 | 4.52 | 31.24 | 28.31 | 2.86 | 3.23 | 1.63 | 2.91 |
| இலாகாக்களும் வட்டியும். | 29.35 | 29.62 | 12 | 26 | 4.61 | 3.76 | 58 | 63 | 4.73 | 7.31 |
| மொத்தம். | 175.25 | 184.71 | 25.42 | 29.07 | 611.28 | 670.74 | 35.45 | 35.87 | 99.91 | 123.65 |
| நன்கொடை. | 30 | 30 | 30.03 | 30.04 | 3.07 | 3.85 | 100.01 | 100.01 | 105.04 | 105.12 |
| அசாதாரண வருமானங்கள். | 1.08 | 41.85 | — | — | 19.24 | 41.63 | — | — | 55.56 | 85.11 |
| ஆகமொத்தம். | 1276.67 | 1431.67 | 258.48 | 293.33 | 1135.86 | 1211.09 | 180.84 | 182.61 | 370.29 | 428.87 |

# அட்டவணை XXXV

## மாகாணச் செலவு (லட்சக்கணக்கில்)

| இனம். | வங்காளம் | | அஸ்ஸாம் | | பஞ்சாப் | | வ. மே. எ. | | சிந்து | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 38–39 | '39-40 | '38–39 | '39-40 | '38–39 | '39-40 | '38-39 | '39-40 | '38-39 | '39-40 |
| ஜில்லாவாரியான செலவு. | 97.64 | 104.65 | 35.92 | 48.58 | 86.46 | 85.06 | 8.53 | 8.51 | 26.03 | 28.26 |
| நீர்ப்பாசனம் | 38.92 | 38.97 | 69 | 59 | 149.82 | 158.26 | 4.77 | 4.58 | 127·98 | 170.67 |
| இலாகாக்கள் கடன். | 15.73 | 17.15 | 33.90 | 4.12 | –21.02 | –17.46 | 2.40 | 1.82 | 1.67 | 5.17 |
| சிவில் நிர்வாகம். | | | | | | | | | | |
| பொது | 519.71 | 534.71 | 79.86 | 82.11 | 329.58 | 328.74 | 72.12 | 78.16 | 83.00 | 85.00 |
| சமூக வேலைகள் | 308.09 | 324.88 | 71.41 | 73.86 | 323.84 | 325.88 | 36.68 | 38.25 | 52.52 | 55.85 |
| இதர சிவில் வேலைகள். | 128.69 | 142.32 | 43.83 | 47.84 | 140.37 | 92.34 | 39.54 | 37.51 | 23.99 | 30.34 |
| சில்லறை | 154,64 | 194.77 | 33.87 | 35.23 | 152.23 | 195.47 | 12.63 | 15.29 | 28.62 | 27.60 |
| சில்லறை மூலதனக் கணக்கு (வருமானக் கணக்கின் கீழ்). | 13.20 | 10.82 | – | – | – | – | 1.63 | 74 | 1.99 | 2.19 |
| மின்சாரத்திட்டம் மூல | – | – | – | – | – | 27.32 | — | 2.09 | – | — |
| தனவட்டி. | – | 2.97 | – | – | – | – | — | – | — | — |
| அசாதாரண இனங்கள் | | | | | | | | | | |
| மொத்தம் | 1276.62 | 1371.24 | 299.48 | 292.33 | 1161.28 | 1195.61 | 178.30 | 186.95 | 345.80 | 405·08 |

## (ஆ) சமூக வேலைகள் —செலவுகளின் விவரம் (லட்சக்கணக்கில்)

| இனம் | வங்காளம் | | அஸ்ஸாம் | | பஞ்சாப் | | வ. மே. எ. | | சிந்து | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | '38-39 | '39-40 | '38-39 | '39-40 | '38-39 | '39-40 | '38-39 | '39-40 | '38-39 | '39-40 |
| விஞ்ஞான இலாகாக்கள் | 29 | 30 | 4 | 5 | 36 | 29 | 5 | 5 | — | — |
| கல்வி | 155.18 | 162.60 | 36.05 | 38.67 | 161.35 | 163.51 | 22.25 | 23.38 | 30.61 | 31.31 |
| வைத்தியம் | 55.96 | 56·31 | 14.54 | 14.40 | 52.58 | 50.60 | 6.75 | 7.76 | 7.88 | 8.54 |
| பொது சுகாதாரம் | 40.60 | 39.39 | 8·86 | 8.21 | 20.37 | 18.01 | 1.77 | 1.59 | 2.57 | 2.66 |
| விவசாயம் | 14.03 | 21.64 | 5.78 | 6.30 | 35.50 | 36·62 | 2.37 | 2·41 | 7.72 | 9.67 |
| கால்நடை வைத்தியம் | 5.30 | 5·83 | 1.58 | 1.63 | 17.60 | 18.49 | 1.60 | 1.53 | 1.19 | 1.23 |
| கூட்டுறவு | 13.38 | 14.49 | 96 | 92 | 14.92 | 17.81 | 1.21 | 1.21 | 1.28 | 1.23 |
| கைத்தொழில்கள் | 18.32 | 20.22 | 2.73 | 2.78 | 19.36 | 18.80 | 62 | 25 | 85 | 91 |
| விமானம் | — | — | — | — | — | — | — | — | — | — |
| ஒலிபரப்பு | — | — | — | — | — | — | — | 4 | — | — |
| சில்லறை | 5.03 | 4.08 | 87 | 90 | 1.80 | 1.75 | 6 | 3 | 42 | 30 |
| மொத்தம் | 308·09 | 324.88 | 71.41 | 73.86 | 323.84 | 325.88 | 36.68 | 38.25 | 52.52 | 55.85 |

முதன் முதலில் மாகாண வரவு செலவுகளை எடுத்துக் கொள்கிறேன். 1938-9-ம் 1939-40-ம் இரண்டாவது உலகமகா யுத்தத்திற்கு முந்திய சாதாரண வருஷங்கள். அவைகளின் புள்ளி விவரங்களே போதுமென்று வைத்துக் கொள்ளலாம்.

34, 35-வது அட்டவணைகளைப் பார்ப்போம். அவைகளில் ஒவ்வொரு மாகாணத்தின் வரவும் செலவும் சரிக்கட்டிப் போகிறது என்பது தெரிகிறது. அவைகளைப் பிரித்த பிறகும் அவைகளை இவ்வாறே நிர்வகித்து வந்தால் அவைகளின் வரவு செலவு சரிக்கட்டிப்போகும். ஆனால் அஸ்ஸாம், சிந்து, வடமேற் கெல்லை மாகாணங்கள் இந்திய சர்க்காரிடமிருந்து உதவிபெற்றே சமாளித்திருக்கின்றன. அவை பெற்ற தொகை முறையே 30 லட்சம், 1 கோடி, 1 கோடியே 5 லட்சம். அந்த மாகாண வருவாய்கள் செலவுக்குப்போதா. மத்திய அரசாங்க உதவியில்லாவிட்டால் கடனில்தான் காரியம் நடக்க வேண்டும். அஸ்ஸாமில் 1938-39, 1939-40 ஆகிய இருவருஷங்களிலும் சமூக சேவை விஷயமாகச் செலவு செய்த தொகைகள் முறையே 71·41 லட்சமும், 73·86 லட்சமுமாகும். மத்திய அரசாங்க உதவித் தொகையில்லாவிட்டால் சமூகசேவைச் செலவில் பாதியைக்கூடச் சரிக்கட்டமுடியாதிருக்கும். இந்த உதவி இல்லாவிட்டால் வடமேற்கெல்லை மாகாணத்தின் நிலைமை படுமோசமாகி விடும். தனது நிர்வாகத்தை நடத்தும் செலவு முழுவதையும் அதனால் ஏற்க

## அட்டவணை XXXVI

மத்திய அரசாங்கம் தம் வருமானத்திலிருந்து மாகாண அரசாங்கங்களுக்கு (திருத்திய உத்தரவுப்படி) விநியோகிக்கும் பணம்(லக்ஷம் ரூபாய்களில்)

| கொடுக்கப் பெறும் மாகாணம் | வருமானவரி 1938-9 கணக்குப் படி | வருமானவரி 1945-6 வரவு செ. திட்டப்படி | சணல் தீர்வை 1938-9 கணக்குப் படி | சணல் தீர்வை 1945-6 வரவுசெலவு திட்டப்படி | மான்யங்கள் 1938-9 கணக்குப் படி | மான்யங்கள் 1945-6 திட்டப்படி |
|---|---|---|---|---|---|---|
| வங்காளம் | 30.00 | 465.80 | 221.27 | 121.22 | .. | .. |
| பம்பாய் | 30.00 | 465.80 | .. | .. | .. | .. |
| சென்னை | 22.50 | 349.35 | .. | .. | .. | .. |
| ஐக்கிய மாகாணம் | 22.50 | 349.35 | .. | .. | 25.00 | .. |
| பஞ்சாப் | 12.00 | 186.32 | .. | .. | .. | .. |
| மத்திய மாகாணம் | 7.50 | 116.45 | .. | .. | .. | .. |
| பீஹார் | 15.00 | 232.90 | 17.12 | 7.80 | .. | .. |
| அஸ்ஸாம் | 3.00 | 46.58 | 11.69 | 10.08 | 30.00 | 30.00 |
| ஒரிஸ்ஸா | 3.00 | 46.58 | 0.92 | 0.90 | 43.00 | 40.00 |
| வடமேற்கு எல்லைப்புறம் | 1.50 | 23.29 | .. | .. | 100.00 | 100.00 |
| சிந்து | 3.00 | 46.58 | .. | .. | 105.00 | .. |

முடியவில்லை. அந்த இரண்டு வருஷங்களில் முறையே 22·25 லட்சமும் 28·50 லட்சமும் பற்றுக்குறையாகிறது. சமூகசேவைகள் இதர சௌகரிய வேலைகளை யெல்லாம் குறைத்துவிடவேண்டும். அந்த இலாகாக்களையே மூடிவிட வேண்டியதுதான். சிந்து விஷயத்திலும் இதேமாதிரிதான். ஆனால் வடமேற்கு எல்லை மாகாணத்தின் நிர்வாகச் செலவுகளைக்காட்டிலும் சற்றுக்குறைவுதான். மத்திய நிதிகளிலிருந்து உதவி கிடைக்காவிட்டால் சமூகசேவைகள், இதர

ஆக்க வேலைகளை நிறுத்தவேண்டியதுதான். பலுசிஸ்தானமோ மத்திய அரசாங்கத்தின் நேரடிப்பொறுப்பிலிருக்கிறது. 1922-23 ல் அதன் வருமானம் 20·54 லட்சம்; செலவு 91·56 லட்சம்; 71 லட்சம் துண்டு விழுவதை மத்திய அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவேண்டும். அஸ்ஸாம், வடமேற்கெல்லை மாகாணம், சிந்து, பலுசிஸ்தானம் ஆகியவைகளைப் பிரித்துவிட்டால் அந்த மண்டலங்கள் இவ்வுதவியைச் செய்துகொண்டிருக்கவேண்டும். கிழக்கு முஸ்லிம் மண்டலம் 30 லட்சமும் வடமேற்கு முஸ்லிம்மண்டலம் 2·76 கோடியும் தத்தம் அங்கங்கள் அவைகளுடைய நிர்வாகத்தை நடத்துதற்குக் கொடுத்தாகவேண்டும். இந்தத் தொகையும், 1938-39, 1939-40 ஆகிய இருவருஷங்களை யொட்டிக் கூறப்படுவதாகும்.

இன்னொரு விஷயம். சமூகசேவைகளுக்கு இந்த மாதிரியே செலவு செய்துகொண்டு போகமுடியாது. காரணம் வேறொன்றுமில்லை. இந்தச் செலவே மிகமிகக் குறைவானது. இதைப் பின்வரும் அட்டவணையில் காணலாம்:

## அட்டவணை XXXVII

சமூகசேவைகளில் செலவுகள்

| மாகாணம் | 1938–39, 1939–40 அவ்வருஷங்களில் ஏற்பட்ட சராசரி சமூகச் செலவு (ரூ. லக்ஷத்தில்) | தனிநபர் ஒன்றுக்கு ஏற்படும் சராசரி செலவு ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| வங்கம் ... ... | 316.48 | 0 | 8 | 5 |
| அஸ்ஸாம் ... ... | 72.63 | 0 | 11 | 3 |
| பஞ்சாப் ... ... | 324.86 | 1 | 2 | 3 |
| வ.மே.எ.புறம் ... ... | 37.46 | 1 | 3 | 8 |
| சிந்து ... ... | 54.18 | 1 | 3 | 1 |

இந்த வகைகளில் இன்னும் அதிகச் செலவு செய்யப்போனால் அதற்காக மாகாணத்திற்குள்ளேயே அதிகவரி விதிக்கவேண்டும், அல்லது சமஷ்டி-அரசாங்கத்திடமிருந்து அதிகப்பணம் வரவேண்டும். நிர்வாகச் செலவைக் குறைப்பதென்பதோ நடக்காத காரியம். இச்செலவுகள் அதிகம். மேலும் இவைகளைக் குறைப்பதற்குண்டான அறிகுறிகள் இந்த மாகாணங்களில் இல்லை. வடமேற்கெல்லை யாகாணம் மாத்திரம் சிறிது காலத்திற்குக் குறைத்தது. இந்திய ஜனங்களின் தேசிய வரும்படிக்கும் உயர்தர உத்தியோகஸ்தர்களின் சம்பளத்துக்கும் ஏணி வைத்தாலும் எட்டாதென்பது பொதுவாகச் சொல்லப்படும் புகார். இதை வற்புறுத்திக் காட்டுவதற்காகத் தான் காங்கிரஸ், தனது மந்திரிகளின் சம்பளத்தைக் குறைத்தது. நிர்வாகச் செலவுகளைக் குறைப்பதற்காக அல்ல. அகில இந்திய முஸ்லிம் லீக் இதைச் சரியென்று ஏற்றுக்கொண்டதாகத் தெரியவில்லை. இந்த வகையில் சிக்கனம் செய்யும் நோக்கத்திற்கு எவ்வித அறிகுறியும் அதுகாட்டவில்லை. நிர்வாகத் தலைவர்களே இவ்விதச் சிக்கனத்தைக் கையாளாதபோது, அதற்குக் கீழ்ப்பட்ட சம்பளக்காரர்கள் தங்களது சம்பளத்தைக் குறைப்பார்களென்று எதிர்பார்ப்பது தவறல்ல என்றாலும்வீணனகாரியம்.குறிப்பிடத்தகுந்த அளவுக்கு நிர்வாகச் செலவைக் குறைக்கலாம் என்று எதிர்பார்க்க முடியாது என்று நினைப்பது சரிதான். ஆகவே சமூகசேவைக்காக மாகாணத்திலே புதுவரிகளைப்போட்டாக

வேண்டும், அல்லது சமஷ்டி அரசாங்கத்திடமிருந்து அதிக உதவிபெற வேண்டும்.

மாகாண வரவு செலவைப்பற்றி இன்னொரு விஷயமும் சொல்ல வேண்டும். மேலே காட்டப்பட்ட அட்டவணைகளிலும் சரி, விவாதங்களிலும் சரி, வங்காளம், அஸ்ஸாம், பஞ்சாப் மாகாணங்கள் முழுமையும் முஸ்லிம் மண்டலங்களில் சேருவதாக வைத்துக்கொண்டே பேசியிருக்கிறோம். இந்த மாகாணங்கள் முழுமையும் முஸ்லிம் மண்டலங்களில் சேரவில்லை; சிலபாகங்கள் தான்சேருகின்றன என்பதை மற்றொரு அத்தியாயத்தில் காட்டியிருக்கிறோம். அப்படியானால் அந்த மாகாணங்களின் வரவும் செலவும் மிகக் குறைந்துவிடும். இவ்வளவுதான் குறையுமென்று துல்லியமாகச் சொல்லுவது முடியாத காரிய மல்ல என்றாலும் கடினமான காரியமே. ஜில்லாவாரியாகப் புள்ளிகள் கிடைக்க வில்லை. ஜில்லாவாரியாகக் கணக்கெடுப்பதும் சிக்கலானகாரியம்,நெடுநாளுமாகும். ஏகதேசமான ஒரு சுலபமான வழியைப் பின்பற்றலாம். அந்த மாகாணத்தின் முஸ்லிம் ஜில்லாக்கள், முஸ்லிமல்லாத ஜில்லாக்களின் வரவுசெலவுகளை ஜனத் தொகை வீதப்படி பிரித்துவிடலாம். இந்த முறை வருமானத்தைச் சரியாகக் காட்டும். ஆனால் செலவைத் தவறாகக் காட்டிவிடும். சுயேச்சையும் பூரண அரசாங்கப் பொறுப்பும் வாய்ந்த ஒரு மாகாணம் அல்லது சமஷ்டி அங்கம் அனேக இலாகாக்கள், அதன் தலைவர், அவருடைய சிப்பந்திகள் முதலியோரை வைத்துப் பராமரிக்கவேண்டும். அந்த அங்கம் சிறிதாக இருந்தாலும் இவ்வளவும் அவசியமே. உதாரணமாக வங்காளத்தை முஸ்லிம் வங்காளம், முஸ்லிமல்லாத வங்காளம் என்று பிரித்தால் அதற்கு ஒரு தலைவருக்குப் பதிலாக இரண்டு தலைவர்களும், அவர்களுடைய சிப்பந்திகளும் இருக்கவேண்டியதிருக்கும். ஒரு மாகாண காரியதரிசிக்கு பதிலாக இரு காரிய தரிசிகள் இருக்கவேண்டியதிருக்கும்: ஜில்லா நிர்வாகத்தின் செலவு முன் போலவே யிருக்கும். ஆனால் மாகாணத்தை முஸ்லிம், முஸ்லிமல்லாதது என்று இருபிரிவாகப் பிரித்தால் மாகாணத் தலைவர்கள், காரியதரிசிகள் இவர்களுக்குச் செலவு செய்யவேண்டியதோ இருமடங்காகிவிடும். வாஸ்தவமான செலவு என்ன என்பதைக் கணக்கிடுவது கடினம். ஜனத்தொகை விகிதத்தில் செலவுகளைப் பிரித்துப்பார்த்தால் என்ன ஆகுமோ அதைக்காட்டிலும் அதிகமேயாகும். வங்காளம், பஞ்சாபில் நிலைமை இவ்வாறுதான் இருக்கும். ஜனத்தொகை வீதம் தற்காலச் செலவைப் பிரிப்பதாலேற்படும் செலவைக் காட்டிலும் இந்த மாகாணங்களின் தலைவர், அவருடைய காரியதரிசிகள் நிர்வாகத்துக்குச் செலவு அதிகமாகும். அஸ்ஸாம் மாகாணத்தில் இந்தச்சங்கடம் ஏற்படப் போவதில்லை. ஏனெனில் அதைச் சேர்ந்த ஒரே ஒரு ஜில்லா - சில்ஹட் மாத்திரம்தான் முஸ்லிம் மண்டலத்தில்சேரும். அது வங்காளத்தோடு சேர்ந்து விடவேண்டி யிருக்குமாகையால் அதற்கென்று தனி மாகாண நிர்வாகம் தேவை யில்லை. 34, 35-வது அட்டவணைகளில் பஞ்சாப், வங்காளத்தின் வரவுசெலவுத் திட்டங்கள் சரிக்கட்டிப்போனதாகக் கண்டோமல்லவா? அந்த மாகாணங்களி லிருந்து முஸ்லிமல்லாத ஜில்லாக்களைப் பிரித்தால் தற்போதைய வருமானத்தைக் கொண்டு அவைகளின் வரவு செலவைச் சரிக்கட்ட முடியாது. எவ்வளவு பற்றாக் குறை என்பதைக் கணக்கிட இயலாதென்றாலும், பற்றாக்குறை குறிப்பிடத் தக்க அளவில் இருக்குமென்பதில் சந்தேகமில்லை. மற்ற மாகாணத்திலிருந்து சில பாகங்களைப் பிரித்து உண்டாக்கிய புதிய மாகாணங்களின் நிலைமை இவ்வாறு இருந்திருக்கின்றது. ஒரிஸ்ஸாவும் சிந்துவும் இதற்குச் சமீபகால

உதாரணங்கள். இவை ஒவ்வொன்றும் தனியாகப் பிரிக்கப்பட்ட பின்னர் தத்தம் வரவுசெலவைச் சரிக்கட்ட முடியாமல் திண்டாடின. மத்திய அரசாங்கமே பெரும் உதவித் தொகை கொடுத்து உதவியது. சிந்து வருஷத்தில் 1 கோடி 5 லட்சம் ரூபாய்கள் பெறுகிறதென்று கண்டோம். 1938-39-லும்' 1939-40-லும் ஒரிஸ்ஸா 43 லட்சம் ரூபாய் உதவித்தொகைபெற்றது. மாகாண நிர்வாகத்தின் இந்த நிலைமையை வற்புறுத்திக் கூறவேண்டியது அவசிய மாகிறது. ஏனெனில் பாகிஸ்தானின் வரவுசெலவைத் தெளிவாகப் பாகு படுத்திக் கூறிய பேராசிரியர் கூப்லண்டு 'மாகாண வரவு செலவுகள், பிரிக்கப் படாத இந்தியாவில் இருந்தது போலவே கிட்டத்தட்ட இருந்துவரும்' என்று வைத்துக்கொண்டு விட்டார். ஆகவே அந்த நிலைமையைத் தீர ஆராயவில்லை அவர். சர் ஹோமி மோடியும் டாக்டர் மத்தாயும் சப்ரூ கமிட்டிக்குத் தாங்கள் அனுப்பிய அறிக்கையிலும் இதைக் கூருமல் விட்டுவிட்டனர்.

ஜனத்தொகை வீதப்படி கணக்கிட்ட வங்காளம், அஸ்ஸாம், பஞ்சாப் முஸ்லிம் ஜில்லாக்களின் வரவு செலவுப் புள்ளி விவரங்களைக் கொடுத்தல் அனுவசியமாகும். இந்த மாகாணங்களின் முஸ்லிம் ஜனத் தொகையைக் கூறினுல் மட்டும் போதுமானது: வங்காளத்தில் 67·9 சத வீதம். அஸ்ஸாமில் 30·5 சத வீதம். பஞ்சாப்பில் 59·4 சத வீதம்.

இப்பொழுது மத்திய இந்திய அரசாங்கத்தின் வரவு செலவில் எந்த அளவை வடமேற்கு கிழக்கு மண்டலங்களுக்கு ஒதுக்குவதென்பதை இப்போது கவனிக்க வேண்டும். ஏற்கெனவே கூறியுள்ளபடி சரியான புள்ளிகளைப் பெறுகின்ற க்ஷ்டம் கிட்டத்தட்ட மலைபோன்றதா யிருக்கிறது. பேராசிரியர் கூப்லண்டு தம்முடைய 'இந்தியாவின் வருங்காலம்' என்ற புத்தகத்தில் ஏதோ சில புள்ளி விவரங்களைக் கொடுத்திருக்கிருர். ஸர் ஹோமி மோடி, டாக்டர் மத்தாய் ஆகிய இருவரும் ஏதோ சில புள்ளி விவரங்களைக் கொடுத் திருக்கின்றனர். இவர்களெல்லாம் சிக்கல் முறையில் கணக்குகளைப் போட்டு இந்தப் புள்ளி விவரங்களுக்கு தந்திருக்கிருர்கள். வேறு புள்ளிகள் இல்லாத இடங்களில் நானும் அவைகளையே எடுத்துக் கொள்கிறேன். பேராசிரியர் கூப்லண்டு 1938–39க்குப் புள்ளிகள் தருகிருர். அவ்ருடைய முறையையே கையாண்ட சர் ஹோமி மோடி, டாக்டர் மத்தாய் இருவ்ரும் சிறிது மாறுதல் களுடன் 1939–40க்குப் புள்ளிகள் தருகின்றனர். மாகாணங்களுடைய புள்ளி விவரங்களும் அதே இரண்டு வருஷங்களுக்கு நமக்குக் கிடைத்திருக்கின்றன. அவைகளை 38, 39-வது அட்டவணைகளில் காணலாம்.

ரயில்வே வருமானத்தை பேராசிரியர் கூப்லண்டு கணக்கிட்டிருப்பதற் கும் சர் ஹோமி மோடி, டாக்டர் மத்தாய் கணக்கிட்டிருப்பதற்கும் எவ்வளவு வேறுபாடு இருக்கிறதென்பதை இந்த அட்டவணைகளிலிருந்து தெரிந்துகொள் ளலாம். 'பாகிஸ்தான் ரயில்வேக்கள், 1938–39ல் வியாபாரப் பாதைகளின் மூலம் 128 லட்சம் லாபம் அடைந்தது. ராணுவப் பாதைகளின் மூலம் 182 லட்சம் நஷ்டம் அடைந்தது' என்று பேராசிரியர் கூப்லண்டு கூறுகிருர். ராணுவப் பாதைகளிலடைந்த நஷ்டத்தை அவர் ஆராயவில்லை. ஏனெனில் அது பாதுகாப்பு சம்பந்தமாகத் தனியாகக கவனிக்கப்படுகிறது. அப்படி வைத்துக் கொண்டாலும் ரயில் வருமானம் 150 லட்சத்துக்கு வர நியாயமில்லை. பிரயாணி கள் அளிக்கும் ரயில் கட்டணத்தை அதிகப்படுத்துவதன் மூலம் இத்தொகை வரக்கூடும் என்று எதிர்பார்க்கிருர். இவ்விதமாக வருமானத்தை அதிகப்படுத் திக் காட்டுவது சரியல்ல என்பது தெளிவான விஷயம். அதுவும் அவருடைய

## அட்டவணை XXXVIII

### வருமானம்

(ரூ. லக்ஷத்தில்)

| இனம் | 1938-39 சமஷ்டி | 1938-39 வ. மே. மண்டலம் | 1939-40 வ. மே. மண்டலம் | 1939-40 கிழக்கு மண்டலம் |
|---|---|---|---|---|
| சுங்கம் | 4050.53 | 448.06 | 582.9 | 1236.3 |
| கலால் | 865.73 | 100.92 | 78.0 | 121.1 |
| நகரசபை வரி | 203.72 | 15.28 | 17.1 | 73.5 |
| இதர வருமானம் | 1374.44 | 121.10 | 150.4 | 297.5 |
| உப்பு வரி | 812.04 | 76.65 | 119.1 | 207.6 |
| அபின் வரி | 50.89 | — | — | — |
| ரயில்வே | 137.32 | 150.00 | –111.8 | –140.8 |
| தபால், தந்தி | 41.40 | 5.17 | 21.3 | 36.0 |
| இதரவகை | 103.20 | 18.87 | 19.8 | 1.6 |
| மொத்தம் | 7639.27 | 936.05 | 876.8 | 1832.8 |

## அட்டவணை XXXIX

### செலவு

(ரூ. லக்ஷத்தில்)

1938-39

| இனம் | சமஷ்டி | வ. மே. மண்டலம் |
|---|---|---|
| ஜில்லா வாரியான செலவு | 423.60 | 51.49 |
| நீர்ப்பாசனம் | 9.24 | 7.02 |
| இலாகாக்கள் | 1338.54 | 186.00 |
| ஸிவில் நிர்வாகம் | 984.69 | 145.56 |
| இதர ஸிவில் வேலைகள் | 219.58 | 10.83 |
| சில்லறை | 204.32 | 33.13 |
| பாதுகாப்பு | 4618.00 | |
| நன்கொடை முதலியவை | 306.32 | 205.00 |
| மொத்தம் | 8104.19 | 639.03 |

1939-40

| இனம் | வ. மே. மண்டலம் | கிழக்கு மண்டலம் |
|---|---|---|
| சிவில் நிர்வாகம் | 145.8 | 203.2 |
| இலாகாக்கள் | 216.4 | 441.7 |
| அதிகப்படி அலவன்ஸ் | 40.7 | 65.5 |
| மான்யங்கள் | 205.0 | 30.0 |
| இதர இனங்கள் | 30.4 | 47.9 |
| மொத்தம் | 638.3 | 787.9 |

## அட்டவணை XL

### இந்தியாவின் பொது வருமானம், செலவு, கடன்

(ரூ. கோடிக்கணக்கில்)

| | 1938–39 | 1939–40 | 1944–45 (திருத்தப் பட்டது) | 1939–40 விருந்து 1944–45 வரை மொத்தம் | 1945–46 பட்ஜட் |
|---|---|---|---|---|---|
| I மத்திய அரசாங்க பட்ஜட் | | | | | |
| 1 வருமானம் | 84.52 | 94.57 | 356.88 | 1.122.61 | 362.34* |
| 2 செலவு | 85.15 | 94.57 | 512.65 | 1,559.55 | 517.63 |
| 3 குறைவு (—) | –0.63 | ... | –155.77 | –476.94 | –155.29 |
| 4 (1) (2)க்குள்ள சத விகிதம் | 99.3 | 100.0 | 69.7 | 70.2 | 70.0 |
| II மொத்த அரசாங்கச் செலவுகள் | | | | | |
| A இந்தியாவின் கணக்கில் | 85.15 | 94.57 | 572.06 | 1.478.93 | 535.39 |
| 1 சிவில் செலவுகள் | 38.97 | 45.03 | 115.42 | 402.22 | 123.40 |
| 2 பாதுகாப்புச் செலவு | 46.18 | 49.54 | 456.64 | 1,346.71 | 411.99 |
| (a) மூலதனக்கணக்கில் | ... | ... | 59.41 | 149.38 | 17.76 |
| (b) வருமானக் கணக்கில் | 46.18 | 49.54 | 397.23 | 1,197.33 | 394.23 |
| (i) அடிப்படைசாதாரண பட்ஜட் | 38.07 | 36.77 | 36.77 | 220.62 | 36.77 |
| (ii) விலைவாசி உயர்வு | ... | 1.19 | 16.92 | 47.48 | 19.76 |
| (iii) யுத்த காரியங்களுக்காக மொத்தச் செலவுகள் | ... | 3.52 | 334.22 | 878.46 | 328.51 |
| (vi) கொடுபடவேண்டியவை மொத்தம் | 8.11 | 8.07 | 9.32 | 50.80 | 9.19 |
| 3 மொத்தச் செலவில் பாதுகாப்புச் செலவின் சதவிகிதம் வருமானக்கணக்கில் | 54.2 | 52.4 | 77.5 | 74.9 | 76.2 |
| B. மீட்கக்கூடிய யுத்தச் செலவு | ... | 4.00 | 439.53 | 1.39.88 | 488.80 |
| III வருஷ முடிவில் மத்திய அரசாங்க வட்டிக் கடன் | 1,205.76 | 1,203.86 | 1,819.02 | ... | 2,180.57 |
| IV மாகாணங்கள் | | | | | |
| 1 வருமானம் | ·84.74 | 90.83 | 200.78 | 784.12 | 188.17 |
| 2 செலவு | 85.76 | 89.22 | 208.05 | 767.96 | 191.74 |
| 3 மிச்சம்(+) குறைவு (—) | –1.02 | +1.61 | –7.27 | +16.16 | –3.57 |
| 4 கடன் நிலைமை (மொத்தக்கடன்கள்)** | 163.20 | 167.61 | 215.49 | 52.29 | ... |

* புதிய வரி உள்பட

** (1) சாசுவதக் கடன், (2) தற்காலிகக் கடன் (3) பிரத்யேக ரிஸர்வ் ஒதுக்கப்படாத கடன் (4) மத்திய அரசாங்கத்திலிருந்து பெற்ற கடன்.

கணக்குப்படி பார்த்தால் (128–182) 54 லட்சம்தான் ஆகிறது. வடமேற்கு மண்டலத்தின் வரும்படி 1938-39க்கு 732·05 லட்சம் ஆகுமே யொழிய 936·05 லட்சம் ஆகாது.

செலவுகளைக் கணிக்கும்போதுதான் ஏற்கெனவே குறிப்பிட்ட அனேக செலவினங்களை பேராசிரியர் கூப்லண்டு விட்டுவிட்டார். ஒரு சுதந்திர ராஜ்யத்தின் நிர்வாகச் சிப்பந்திச் செலவு பொதுவாக மதிப்பிட்டிருந்ததைக் காட்டிலும் அதிகமாகும் என்ற அச்சம் ஏற்படுகிறது. அதே போலதான் சமஷ்டி, மாகாண சர்க்கார் நிர்வாகச் செலவுகளிலும் குறிப்பிட்டிருப்பதைவிட அதிகமாகவே செலவு ஆகுமென்ற சந்தேகம் இருக்கவே செய்கிறது. ஆனால் இருக்கிற புள்ளி விவரங்கள் சரி என்று வைத்துக்கொள்ளப் பார்த்தாலும் 1938–39ம் வருஷத்திய புள்ளி விவரங்களிலிருந்துவரும் வடமேற்கு மண்டலத்தில் 93·02 லக்ஷங்கள் மிஞ்சும் என்றும், 1939–40ம் வருஷத்திய கணக்குகளிலிருந்து 238·5 லட்சம் மிஞ்சுமென்றும் காண்கிறோம். மேற்கண்ட அறிக்கைகளில் பாதுகாப்புக்கு ஏற்படும் செலவுகள் சேர்க்கப்படவில்லை. வடமேற்கு சுதந்திர முஸ்லிம் ராஜ்யத்தின் பாதுகாப்புச் செலவுகளுக்கு இந்தச் சிறு தொகையான மிச்சப் பணம் போதுமா என்று கவனிக்க வேண்டியிருக்கிறது. பேராசிரியர் கூப்லண்டு, முஸ்லிம் லீகின் நோக்கத்தில் மிகுந்த பரிவுள்ளவர் என்பது புத்தகம் முழுவதிலும் நன்கு விளங்குகிறது. வடமேற்கு மண்டலத்தில் மிஞ்சுகின்ற பணம் அதன் பாதுகாப்புச் செலவுக்குப் போதாது என்று அவரும் முடிவுகட்டுகிறார். அவருடைய முடிவை அவருடைய வார்த்தைகளிலே கூறிவிடலாம் :

'பாகிஸ்தானின் பெரிய கஷ்டமும் பேராபத்தும் பாதுகாப்பு சம்பந்தமாகவே இருக்கின்றன. இவையெல்லாம் நிகழக்கூடியவை என்று நாம் முன்னால் பார்த்தவை உண்மையாகவே நிகழக்கூடுமானால், இந்து இந்தியாவின் ஒத்தாசை இன்றி, தானே வடமேற்கு எல்லையைப் பாதுகாக்க வேண்டிய அவசியம் அதற்கு ஏற்படக்கூடும். தற்கால யுத்த தளவாடங்களின் விலை ஏற்றமாக இருக்கிற நிலைமையில் கவனிக்காமல் யுத்தத்திற்கு முன்னிருந்த நிலைமையிலாவது பாதுகாப்புக்கு செலவு செய்வது வடமேற்கு மண்டலத்திற்கு மிஞ்சிய காரியமாகும். போதுமான பணம் திரட்டுவது என்றாலும் புதிய வரிகளை விதிக்கவேண்டியதாயிருக்கும். நிர்வாகச் செலவையும் சமூக முன்னேற்றத்திற்கு செய்யவேண்டிய செலவையும் மிகுந்த அளவில் குறைக்க வேண்டியிருக்கிறது. இக்காரியங்களினால் மக்களின் வாழ்க்கைத்தரம் மிகவும் குறைந்துவிடும். ஏற்கெனவே பின்னடைந்துள்ள மக்கள் அநேக ஆண்டுகளுக்குத் தலைதூக்காதபடி பின்னும் தாழ்ந்துவிடுவார்கள். நிலைமை அதோடு முடிந்துவிட்டதா? இல்லை. பாகிஸ்தானின் கிழக்கு எல்லையிலும் பாதுகாப்பைப்பற்றிக் கவலை இல்லாதிருக்க முடியுமா? இந்த அதிகாரத்தின் ஆரம்பத்தில், பிரிவினையால் ஏற்படும் சாதகங்களைப்பற்றிக் கூற முயற்சி எடுக்கப்பட்டது. பிரிவினையின் பாதகங்களைப்பற்றி ஆராய்வதும் நலமாகும். பாகிஸ்தானா? இல்லையா? என்பதுபற்றி இறுதியாக முடிவு கட்டுவது பாதுகாப்பு விஷயம். அப்படியானால் உண்மையான விஷயங்கள், நியாயமாக நடக்கக்கூடியவை என்று கருதக்கூடிய விஷயங்கள் பாதுகாப்பைப்பற்றி என்ன தெரிவிக்கின்றன? இந்தியாவின் பாகமாக அமைந்திருக்கும்பொழுது எவ்வளவு பாதுகாப்போடு இருந்ததோ அவ்வளவு பாதுகாப்போடு பாகிஸ்தானில் இருக்க முடியாது என்று சொன்னால் அதற்கு எதிர் வார்த்தை கூறுவதற்கு இடமில்லையல்லவா? பாதுகாப்பிற்குரிய

குறைந்தபட்சச் செலவுகளே அதன் வருவாய்களைச் சாப்பிட்டுவிடும். மக்களின் சமூக வளர்ச்சியையும் தடைப்படுத்திவிடும். மற்றக் காரியங்களுக்கு மிகுந்த சங்கடப்பட வேண்டும்.'[4] தம்முடைய கருத்துக்களுக்கு ஆதாரமாக பஞ்சாப் சட்டசபையில் சர் சிக்கந்தர் ஹயத்கான் பேசிய பேச்சுக்களை எடுத்துக் காட்டுகிறார்.

பேராசிரியர் கூப்லண்டு, கிழக்கு மண்டலத்தைப்பற்றி ஒன்றும் கூறவில்லை. முஸ்லிம் அல்லாத ஜில்லாக்கள் தவிர்த்த முஸ்லிம் மண்டலங்களின் நிலைமையைப் பற்றியும் அவர் ஆராயவில்லை. சர் ஹோமி மோடி, டாக்டர் மத்தாய் ஆகிய இருவரும் இவைகளைப்பற்றிக் கூறியிருக்கிறார்கள். கிழக்கு மண்டலத்தைப் பற்றி முன்கூறிய அட்டவணைகளில், வங்காளம், அஸ்ஸாம் ஆகிய மாகாணங்கள் முழுமையும் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. முஸ்லிம் அல்லாத ஜில்லாக்கள் நீங்கிய கிழக்கு, வடமேற்கு மண்டலங்களின் மொத்த வரவு செலவு பின்வருமாறு :—

### அட்டவணை XLI

1939–40

ரூ. லக்ஷத்தில்

நிகர வருமானம்

| இனம் | கி.மண்டலம் | வ.மண்டலம் |
|---|---|---|
| சுங்கம் | 775.0 | 402.2 |
| மத்திய கலால் | 75.5 | 53.8 |
| நகர சபை வரி | 46.0 | 12.0 |
| இதர வருமானவரிகள் | 186.5 | 103.7 |
| உப்பு | 130.0 | 82.2 |
| தந்தி, தபால் வருமானம் | 22.0 | 14.7 |
| ரயில்வேயில் மொத்தநஷ்டம் | –88.5 | –77.2 |
| சில்லறை | 1.0 | 13.6 |
| மொத்தம் | 1147.5 | 605.0 |

நிகர செலவு

| இனம் | கி.மண்டலம் | மே.மண்டலம் |
|---|---|---|
| சிவில் நிர்வாகம் | 126.8 | 100.6 |
| இதர இலாகாக்கள் | 276.7 | 149.5 |
| அதிகப்படி அலவன்ஸ் | 41.0 | 28.0 |
| மான்யங்கள் | 18.8 | 141.4 |
| இதர இனங்கள் | 30.0 | 21.0 |
| மொத்தம் | 493.3 | 440.5 |

மிச்சமாயிருக்கும் பணம் குறைந்துவிடும் என்பதைக் காணலாம். ஆனால் பாதுகாப்பின் செலவுகள் குறையாது என்பது தெரியவரும். பாதுகாப்பை வேறொரு விதத்திலும் கவனிக்க வேண்டும். இரண்டு மண்டலங்களிலுமுள்ள ஜனத்தொகை அடிப்படையில் பாதுகாப்புச் செலவை ஒதுக்குவது என்பது, பாதுகாப்புப் பிரசினையை அணுகும் சரியான முறை அல்ல. இரண்டு மண்டலங்களும் எல்லைகளில் இருக்கின்றன. தரை வழியாக வரும் அன்னியப் படையெடுப்புகளைத் தடுக்க வேண்டிய முழுப் பொறுப்பு இயல்பாக அவைகளைச் சேரும். அன்னியப் படையெடுப்பு வடமேற்கு எல்லையில் நிகழக்கூடும் என்பதை இந்தியாவை ஆண்ட அரசர்கள் ஏற்றுக்கொண்டு அதற்குரிய நடவடிக்கைகளை எடுத்து வந்திருக்கின்றனர். ஆதி சுல்தான்கள் கால முதற்கொண்டு முஸ்லிம் ஆட்சி காலத்தில் அப்படி நடந்து வந்திருக்கிறது. பிரிட்டிஷ் ஆட்சி

4. Coupland, op. cit. pp. 95-6.

காலத்திலும் அவ்வாறே நடந்து வந்திருக்கிறது. தற்போதைய யுத்தத்தில் கிழக்கு எல்லையும் ஆபத்துக்கு உட்பட்டது என்பது தெளிவாகின்றது. வருங் காலத்தில் அதை யாரும் கவனிக்காமல் இருக்க முடியாது. முஸ்லிம் மண்டலங் களைச் சேர்ந்த கடற்கரை அதிக நீளம் இல்லையென்ருலும் அங்கும் போதுமான கப்பற்படை இருக்க வேண்டும். இந்த யுத்தத்திற்கு முன் ஏற்பட்ட பாது காப்புச் செலவை ஜனத்தொகை அடிப்படையில் பகிர்ந்து கவனிப்போம். இந்த அடிப்படை திருப்திகரமற்றது. தவருன பாதையில் செலுத்துவது. தற்போது யுத்த தளவாட உற்பத்தியில் ஏற்பட்டிருக்கும் கிராக்கியும் கவனிக்கப்பட வில்லை. அப்படியிருந்துகூட பாதுகாப்புச் செலவிற்குப் பெரிதும் பற்ருக்குறை ஏற்பட்டு விடுவதைக் கீழ்வரும் அட்டவணையில் காணலாம்:

### அட்டவணை XLII

கிழக்கு மண்டலம்
(ரூ. லக்ஷத்தில்)

| | மாகாண அடிப்படையில் | | | ஜில்லா வாரி | | |
|---|---|---|---|---|---|---|
| வருஷம் | பாதுகாப்புக்கு மீதியுள்ளபணம் | பாது காப்பு செலவு | பற்ருக் குறை | பாது காப்புக்கு மீதியுள்ளபணம் | பாது காப்பு செலவு | பற்ருக் குறை |
| 1939–40 | 1044.9 | 1197.8 | 152.9 | 654.2 | 748.9 | 104.7 |
| மேற்கு மண்டலம் (ரூ. லக்ஷத்தில்) | | | | | | |
| 1938–39 | 93.02 | 642.01 | 548.99 | | | |
| 1939–40 | 238.5 | 619.76 | 381.26 | 164.5 | 423.73 | 259.23 |

பாதுகாப்புப் பிரசினையின் இன்னொரு அம்சமும் கவனிக்கத்தக்கது. எப்பொழுது ஒரு தனி சுதந்திர முஸ்லிம் ராஜ்யம் ஏற்பட்டு விடுகிறதோ அப்போது அது தன் நாட்டவரைக் கொண்ட படையொன்று திரட்டி அதைக் காப்பாற்ற வேண்டும். இந்தியாவின் இதர பாகங்களும், தத்தம் பிரதேசத்தி லுள்ள மக்களைக் கொண்டு தமது படையொன்று ஏற்படுத்தி அதைத் தாமே காப்பாற்றும். பாதுகாப்புப் படைகளைப் பொறுத்த மட்டும் இந்தப் பிரிவினை யால் ஏற்படும் பொருளாதார கஷ்டங்கள் வடமேற்கு முஸ்லிம் ராஜ்யத்திற்கு அதிகமாக இருக்கும். 1930-ல் இருந்தபடி இந்திய சேனையில் 58·5 சத விகிதத் தினர் வடமேற்கு மண்டலத்தைச் சார்ந்தவர்கள் என்று டாக்டர் அம்பேத்கார் சொல்கிருர்.[5] இந்திய சேனையில் முஸ்லிம்களின் விகிதத்தைத் தனியாகக் கணக் கிட்டிருக்கிருர் டாக்டர் அம்பேத்கார். இந்தியக் காலாட்படையில் முஸ்லிம்கள் 36 சத விகிதமாகவும், இந்தியக் குதிரைப் படையில் 30 சத விகிதமாகவும் இருக்கின்றனர். அவர்கள் எல்லோரும் பஞ்சாப், வடமேற்கு எல்லைப்புற மாகாணங்களிலிருந்து வந்தவர்கள்.[6] இந்த மண்டலத்தை இந்தியாவின் இதர பாகங்களிலிருந்து பிரித்துத் தனி சுதந்திர ராஜ்யமாக்கும்பொழுது இந்தியாவின் இதர பாகமும் அதாவது இந்துஸ்தானமும் தன் பகுதியைச் சேர்ந்தவர்களைக் கொண்டே தனது பாதுகாப்புப் படையொன்று அமைப்பது இயற்கை. அந்தப் படையிலுள்ள வட மேற்கத்தியார்கள் அதைவிட்டு வெளியேறுவார்கள். வட மேற்கு சுதந்திர ராஜ்யத்தில் அவர்களுக்கு வேலை கிடைக்காவிட்டால் தவிப் பார்கள். கல்வியில் வல்ல டாக்டர் மேலும் கூறுவதாவது :—'தற்போதைய

5. Dr. B. R. Ambedkar : *Thoughts on Pakistan*, p. 70.
6. '*ibid.*, p. p. 76-7.

இந்திய ராணுவத்திற்கு வீரர்களைக் கொடுக்கும் முக்கிய பகுதியாக இருக்கும் பாகிஸ்தான் பிரதேசம் மத்திய அரசாங்க நிதிக்கு உதவுவது மிகக் குறைவு என்பதைக் கீழ்வரும் புள்ளிகளிலிருந்து தெரிந்து கொள்ளலாம் :

## அட்டவணை XLIII

மத்திய சர்க்காருக்கு தருவது

| | | | | |
|---|---|---|---|---|
| பஞ்சாப் | ... | ரூ. | 1,18,01,385 | |
| வ. மே. எல்லைப்புறம் | ... | ,, | 9,28,294 | |
| சிந்து | ... | ,, | 5,86,46,915 | |
| பலுசிஸ்தானம் | ... | ,, | — | |
| | மொத்தம் | ரூ. | 7,13,76,594 | |
| சென்னை | ... | ரூ. | 9,53,26,745 | |
| பம்பாய் | ... | ,, | 22,53,44,247 | |
| வங்கம் | ... | ,, | 12,00,00,000– | (பாதி வருமானம் |
| ஐ. மாகாணம் | ... | ,, | 4,05,53,000 | தான் காட்டப் |
| பீஹார் | ... | ,, | 1,54,37,742 | பட்டிருக்கிறது. |
| ம. மாகாணமும் பீஹாரும் | ... | ,, | 31,42,682 | ஏனெனில்பாதி |
| அஸ்ஸாம் | ... | ,, | 1,87,55,967 | ஜனத் தொகை |
| ஒரிஸ்ஸா | ... | ,, | 5,67,346 | அநேகமாக இந் |
| | | | | துக்கள்) |
| | மொத்தம் | ரூ. | 51,91,27,729 | |

'இதற்கு மாறாக இந்துஸ்தான மாகாணங்கள் கொடுப்பது இவ்வாறு :–

'பாகிஸ்தான் மாகாணங்கள் கொடுப்பது மிகச் சொற்பம் என்பதைக் காணலாம். நிதியின் பெரும் பகுதி இந்துஸ்தான மாகாணங்களிலிருந்து வருகிறது. உண்மையில் இந்திய அரசாங்கம் பாகிஸ்தான் மாகாணங்களில் தனது காரியங்களைச் செய்வதற்கு இந்துஸ்தான மாகாணங்களிலிருந்து வரும் பணமே உதவுகிறது. இந்துஸ்தான மாகாணங்களின் வருவாய்க்கு பாகிஸ்தான் மாகாணங்கள் வடிகாலாக அமைகின்றன. மத்திய அரசாங்கத்திற்கு பாகிஸ் தான் மாகாணங்கள் கொடுப்பது மிகமிகச் சொற்பம். மத்திய அரசாங்கத்தி லிருந்து அவைகள் பெறும் நிதியோ ஏராளம். மத்திய அரசாங்கத்தின் மொத்த வருமானம் 126 கோடி ரூபாய். இதில் வருஷா வருஷம் 52 கோடி ரூபாய் சேனைக்காகச் செலவழிக்கப்படுகிறது? இந்தப்பணம் எந்தப் பிரதேசத்தில்செல வழிக்கப்படுகிறது? பெருந்தொகையான இந்த 52 கோடியையும் கொடுப்பது யார்? சேனைக்குச் செலவழிக்கப்படுகிற 52 கோடி ரூபாயும், பாகிஸ்தான் பிரதேசத்தி லிருந்துவந்த முஸ்லிம் சேனைக்குச் செலவழிக்கப்படுகிறது. இந்தப் பெருந்தொகையான 52 கோடி ரூபாயும் இந்து மாகாணங்களால் கொடுக்கப் பட்டு பெரும்பாலும் இந்து அல்லாதவர்களைக் கொண்ட சேனைக்கு செலவழிக் கப்படுகிறது.' [7]

இந்திய மத்திய அரசாங்கம் இந்தியாவின் இதர பாகங்களிலிருந்து வசூல் செய்து வடமேற்கு பிரதேசத்தில் செலவழிக்கும் பெருந் தொகையை வடமேற்குப் பிரதேசம் இழந்துவிடுவதோடன்றி, தனது படைகளைக் காப் பாற்றப் பணத்தைக் கண்டுபிடிக்கவும் வேண்டும் என்பது தெளிவாகின்றது. அந்தப் பிரதேசத்தில் உள்ள ஜனங்கள் ராணுவத்தில் சேர்ந்திருப்பதால் கிடைக்கும் வருமானத்தை இழந்து நஷ்டம் அடைவார்கள். அதற்குமேலாக தம்நாட்டுப் படைகளை காப்பாற்றவேண்டி அவர்களிடம் வரி வசூலிக்கப்பட

7. Dr. B. R. Ambedkar : op. cit., p. 86-7.

வேண்டும். இந்த 'மறை வரி' குறிப்பிடத்தக்கத் தொகையாயிருக்கிறதென்று திரு. கே. டி. ஷா எடுத்துக் காட்டுகிறுர். அவர் கூறுவதாவது :—'இந்தியச் சேனையைச் சேர்ந்த பெரும்பகுதியினர் பஞ்சாபிலிருந்தே எடுக்கப்பட்டவர்கள். அதிகாரிகள், சிப்பாய்கள், எடுபிடி வேலைக்காரர்கள் யாவரும் பஞ்சாபியர். அவர்களுடைய சம்பளம், பென்ஷன், கண்ட்ராக்டர்களுடைய லாபம் ஆகியவையெல்லாம் சேர்ந்து ஒரு பெரும் தொகையாகிறது. குறைத்துப் பார்த்தாலும் யுத்தத்திற்கு முன் இம்மாதிரி செலவானவகையில் இந்தியாவின் இதர பாகம் பஞ்சாபிற்கு வருஷா வருஷம் 10 கோடி ரூபாய் மறைவரி கட்டியது. சமீபயுத்தம் இந்த வரியையும் அளவுக்கு மிஞ்சிய அதிகப்படுத்திவிட்டது என்று சொல்லத் தேவையில்லை. யுத்தப் பிற்காலத்தில் இந்த வரி வருஷத்திற்கு இருபத்தைந்து கோடிக்குக் குறையாது.'[8]

பஞ்சாப் மாகாணத்திற்கு ஏற்படக்கூடும் இந்த நஷ்டத்தை முன் கூட்டியே உணர்ந்த சர் சிக்கந்தர் ஹயத்கான், தமது திட்டங்களின்படி எல்லைகளை மாற்றி அமைப்பதென்றுல் பிரதேசவாரி அரசாங்கங்களை ஏற்படுத்துவது என்றுல் 1937 ஜனவரி 1-ம்தேதி சேனையில் முஸ்லிம்கள் என்ன விகிதத்தில் இருந்தனரோ அந்த விகிதத்தைக் குறைத்துவிடக் கூடாதென்று வற்புறுத்திவந்ததன் காரணம் விளங்குகிறது. தற்போதய யுத்தத்தில் இந்திய சேனைக்கு வடமேற்கு மண்டலம் ஏராளமான போர் வீரர்களைக் கொடுத்து திரு. கே. டி. ஷா கூறிய நன்மைகளை அடைந்தது. இந்தியச் சேனையைச் சேர்ந்தவர்களில் பஞ்சாபியர் 29·9 சதவிகிதத்தினர், வடமேற்கு எல்லைப்புறத்தினர் 4 சத விகிதத்தினர், சிந்தியர் 0·4 சத விகிதத்தினர் ; ஆகமொத்தம் 34·3 சத விகிதத்தினரென்று 1945 மார்ச்மாதம் மத்திய சட்டசபையில், கேட்கப்பட்ட ஒருகேள்விக்கு யுத்தக் காரியதரிசி பதிலளித்தார்.

## பொதுக் கடன் (1939–40)

1939-40 முடிவில் இந்திய மத்திய அரசாங்கத்தின் பொதுக் கடன் மாகாண அரசாங்கங்களின் பொதுக் கடன் விவரம் பின்வருமாறு :—

### அட்டவணை XLIV

| | | | |
|---|---|---|---|
| **மத்திய சர்க்கார்** | | | |
| இந்தியாவில் ... | ரூ. | 5,05,51,10,816 | |
| இங்கிலாந்தில் ... | ரூ. | 9,44,61,55,399 | (பவுன் 13 ரூ. 5 அ. 4 பை. விகிதத்தில்) |
| **மாகாணங்கள்** | | | |
| வங்காளம் ... | ரூ. | 30,00,000 | |
| அஸ்ஸாம் ... | ,, | 50,00,000 | |
| பஞ்சாப் ... | ,, | 34,05,50,515 | மொத்தம் ரூ. 63,19,52,167 (பஞ்சாப், வ. மே. எல்லைப்புறம், சிந்து) |
| வ. மே. எல்லைப்புறம் | ,, | 57,24,900 | |
| சிந்து ... | ,, | 23,56,76,752 | |
| குடகு ... | ,, | 3,62,582 | |
| சென்னை ... | ,, | 11,96,92,319 | |
| பம்பாய் ... | ,, | 31,18,72,720 | |
| ஐ. மாகாணம் | ,, | 31,13,92,886 | |
| பீஹார் | | — | |
| ம. மாகாணம் | ,, | 4,88,40,863 | |
| ஒரிஸ்ஸா ... | ,, | — | |
| மொத்தம் | ,, | 1,43,21,12,937 | |

8. K. T. Shah: *Why Pakistan? Why not?* p. 164.

மாகாணங்களின் மொத்தப் பொதுக் கடனுகிய 143 கோடியில் பஞ்சாப், சிந்து, வடமேற்கெல்லை மாகாணங்களின் கடன் 63 கோடி ரூபாய். இந்தத் தொகையில் பெரும்பகுதி பஞ்சாபிலும், சிந்துவிலும் நீர்ப்பாசன வசதிகளுக்காகச் செலவிடப்பட்டிருப்பதால் திரும்ப லாபம் அளிப்பவை. கிழக்குமண்டலத்தில் குறிப்பிடத்தக்க பொதுக் கடனில்லை.

### அட்டவணை XLV

### 1936–37லிருந்து மாகாணங்களின் கடன் நிலைமை

(கோடிக் கணக்கில் ரூபாய்)

| | 1938–39-ம் ஹு முடிவில் | 1944–45-ம் ஹு முடிவில் |
|---|---|---|
| I பொதுக் கடன் | | |
| (அ) சாசுவதக் கடன் | 15.07 | 50.92 |
| (ஆ) நிலையற்ற கடன் | 1.50 | 68.23 |
| (இ) மத்திய அரசாங்கத்திலிருந்துபெற்ற கடன் | 123.24 | 66.57 |
| II ரிஸர்வ் ஒதுக்கப்படாது | 23.39 | 29.77 |
| III வாங்கப்பட்ட கடன் I, II ம் சேர்ந்த மொத்தக் கடன் | 163.20 | 215.49 |
| IV இறுதிக் கடன் (மாகாண அரசாங்கங்களால் வாக்களிக்கப்பட்டவையும் கொடுபட வேண்டியவையும் தவிர்த்து) | 102.48 | 185.79 |

பிரிவினை யேற்படுமானல் இந்தியப் பொதுக் கடனை முஸ்லிம் மண்டலங்கள், முஸ்லிமல்லாத மண்டலங்களுக்கிடையே பிரித்துக்கொடுப்பது சிக்கலான காரியம். ஆனுல் வடமேற்கு, கிழக்கு மண்டலங்களின் பங்குக்கு விழும் கடன் பொறுப்பு அவைகள்மட்டுக்கு அற்பமானதாக இருக்காது.

மேலும், இந்த யுத்தத்தில் மத்திய அரசாங்கத்தின் கடன் ஏராளமாக ஏறிவிட்டது. 1939–40-ம் வருஷத்திய புள்ளி விவரங்களை வைத்துக்கொண்டு கடன்களைக் கணக்கிடுவது தவருக முடியும். 1939–40-ல் 944½ கோடியாக இருந்த கடன் இப்பொழுது 2000 கோடியாக இருக்கும். இரண்டு மண்டலங்களிலுமுள்ள முஸ்லிம் ஜில்லா வாசிகளின் ஜனத்தொகை விகிதப்படி இந்தக் கடனைப் பிரித்துக் கொடுத்தால், அவர்களது மாகாணக் கடன்களோடு சேர்த்து மொத்தம் 500 கோடி ரூபாயாகும். ஒரு வருஷத்திற்கு 3 சத வீதம் அதன் வட்டி 15 கோடி ரூபாயாகும். அந்த மாகாணங்களுடைய வரவிலிருந்து பாதுகாப்புக்கு ஒன்றும் செய்யாது நிர்வாகச் செலவுகளை மாத்திரம் செய்தபின், மிச்சம் இருக்கும் பணத்தைப்போல் இரண்டு மடங்காக இருக்கிறது இந்த வட்டி. ஆனுல் ஏற்கெனவே கூறியபடி இந்தக் கடன் பொறுப்புகளைப் பிரித்துக் கொடுப்பது அவ்வளவு எளிதான காரியமல்ல; திணறவைக்கின்ற சிக்கலான காரியம். இதுபற்றி சர். அர்தேஷிர் தலால் கூறுகிருர்: 'ஒன்ருக இருக்கும் பிரிட்டிஷ் இந்தியாவைச் சிறு துண்டுகளாக்குவதனுல் ஏற்படும் பொருளாதாரக் கஷ்டங்கள், நிதி சம்பந்தமான கஷ்டங்கள் மீற முடியாதவை. ரயில்வே, தந்தி தபால், நீர்ப்பாசனம், அணைக்கட்டு முதலிய அனைத்தும் பிரிக்கப்பட வேண்டும். இவைகள் சம்பந்தமாக ஏற்பட்ட பொதுக் கடன்களையும் சரியாகப் பிரித்துப் புதுப்பிக்க வேண்டும். இதேபோல ராணுவத்தையும் பிரித்து, அதன் பழைய கடன்களையும் இனிவருஞ் செலவுகளையும் ஒழுங்குபடுத்திச் சரிக்கட்ட

வேண்டும். இந்திய அரசாங்க நிதியிலிருந்து, சிந்துவிலுள்ள சுக்கூர் அணைக் கட்டுகள் போன்ற அனேக திட்டங்களுக்குச் செலவு செய்யப்பட்டிருக்கிறது. பாகிஸ்தான் பிரதேசத்தில் இந்தமாதிரிப் பெரிய திட்டங்களுக்காக மத்திய நிதியிலிருந்து செலவழிக்கப்பட்டிருப்பதால் அதையெல்லாம் பாகிஸ்தான் திருப்பிச் செலுத்தவேண்டியிருக்கும். இந்தத் தொகையை மத்திய அரசாங்கம் பாகிஸ்தான் பிரதேசத்தில் செலவு செய்திருப்பதால், பாகிஸ்தான் இதைத் தன் பற்ருக ஏற்றுக்கொண்டு இந்துஸ்தானத்துக்கு ஈடு செய்யவேண்டும். இந்தச் சிக்கலான, கஷ்டம் நிறைந்த, நெஞ்சைப் புண்ணுக்கும் காரியங்கள் ஒருவாறு முடிந்தால், அவைகளும், கணக்கற்ற சச்சரவுகள் தகராறுகள் இல்லாமல் முடிந்துவிட்டால், அதிலிருந்து தோன்றும் பாகிஸ்தான், வறுமை சேர்ந்த, ஆதாரவளங்களற்ற ராஜ்யமாக இருக்கும். பிறந்த உடனேயே நிர்வகிக்க வேண்டிய பொறுப்புகள் ஒருபக்கம் இருக்க, திருப்பிச் செலுத்தமுடியாத கடன் ஒருபக்கமிருக்க, ஒரு தன்னுட்சி பெற்ற சுதந்திர இந்தியா எந்தெந்த வகையிலெல்லாம் முன்னேறலாம் என்று கருதுகிறதோ அந்தப் பொருளாதார வளர்ச்சி, தொழிலாக்கம் முதலியவற்றை இழந்து நிற்கும் பாகிஸ்தான்.[10]

இதோடு சேர்க்கப்பட்டிருக்கும் அட்டவணை கடன் நிலைமையை நாளது வரை விவரமாகக் காட்டுகிறது. இதைக் கவனிக்கும்பொழுது ஒன்று ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அதாவது, எதிர்பார்த்த காலத்துக்கு முன்பே யுத்தம் முடிவடைவதால், 1945-46 வருஷத்து வரவு செலவுத் திட்டத்தில் கொடுக்கப்பட்டிருப்பதுபோல, 31-3-46ல் வரையறுக்கப்படாத கடன்களின் மதிப்பு, மதிப்பிட்ட அளவுக்கு வராமலிருக்கலாம். இருந்தாலும் உண்மையாக இக்கடன் 2000 கோடி ரூபாய்க்கு அதிகமாகவே இருக்கும். மாகாணக் கடன்களும் அதற்கேற்றவாறு மிகுந்துவிடும்.

(அ) ஒவ்வொரு வருஷ முடிவிலும் பாக்கி உள்ள கடன்களே அட்டவணையில் காட்டப்பட்டிருக்கின்றன. (ஆ) பவுன் கடன்கள் ரூபாய்க்கு 1 ஷில்லிங் 6 பென்ஸ் வீதம் மாற்றப்பட்டிருக்கின்றன.

மாகாணங்களுக்கு ஏற்கெனவே சொந்தக் கடன்கள் இருக்கின்றன. லாபம் கொடுக்கும் துறைகளில் அவை செலவு செய்யப்பட்டனவல்ல. பிரிவினை ஏற்பட்டால் இந்திய அரசாங்கத்தின் கடனை அவைகளும் பங்கிட்டுக்கொள்ள வேண்டும். அப்பொழுது தங்களது சொந்தக் கடன்களோடு இது வேறு சுமை ஆகிவிடும். மத்திய அரசாங்கக் கடன்களில் லாபம் தராதவை மாகாணக் கடன்களைக் காட்டிலும் அதிகம் இருக்கின்றன.

கடன்களுக்கு ஈடாக உள்ள சொத்துக்களெல்லாம் பெரும்பாலும் சந்தேகத்துக்கு இடமான நிலையிலுள்ளவை. ஸ்டர்லிங் நிதி பர்மா கடனும் இம்மாதிரியானதே. இவைகளை வசூல் செய்ய முடியாவிட்டால், தத்தம் சுமையைக் குறைக்கவாவது இவைகள் வட்டி தராவிட்டால் அப்பொழுது மாகாணங்களின் கடன் பொறுப்பு அதிகமாகும். யார் யாருக்கு எவ்வளவு சொத்து, கடன் என்பதைப் பிரிப்பதற்குமுன் ஒவ்வொரு சொத்து விவரத்தையும் நன்கு பரிசிலனை செய்யவேண்டும்.

பிரதிப்பயன் அளிக்காத சம்பளமான பென்ஷன் முதலியவைகளின் கணக்கு இன்னும் முடிவு செய்யப்படவில்லை. 1939 அக்டோபரில் ஏற்பட்ட ஒப்பந்தப்படி இவைகளும் இந்திய அரசாங்கத்தினிடமிருந்து வசூல் செய்யப்பட வேண்டியவையே.

---

10 இந்திய அரசாங்கத்தின் வட்டி செலுத்தவேண்டிய கடன்களும், வட்டி தரும் முதலீடுகளும் (விளக்கமான குறிப்பு)

## அட்டவணை XLVI

### இந்திய சர்க்காரின் 1945-46ம் வருஷத்திய வரவு செலவு விளக்கக் குறிப்புகளும்

(ரு. கோடிக் கணக்கில்)

| | 1938-9 யுத்தத்துக்கு முன்பு | 1945-6 வரவு செலவு மதிப்பு |
|---|---|---|
| இந்தியாவில் பொதுக் கடன்கள் | | |
| கடன்கள் | 437·87 | 1,484·43 |
| சர்க்கார் கடன் பத்திரங்கள், அட்வான்ஸ் | 46·30 | 86·61 |
| | 484·17 | 1,571·04 |
| செலவு கடன்கள் | | |
| நிர்வாகம் | 1·03 | ·74 |
| தபாலாபீஸ் பாங்க், பாதுகாப்புக் கடன் பத்திரம் முதலியவை | 81·88 | 110·20 |
| தபாலாபீஸ் சொத்தும், பாதுகாப்புச் சேமிப்புகள் | 59·57 | 43·90 |
| சர்க்கார் பிராவிடன்ட் பண்டு | 72·40 | 97·20 |
| தேசீயச் சேமிப்புப் பத்திரங்கள் | ... | 51 65 |
| இதர இனங்கள் | 10·25 | 13 08 |
| மொத்தச் செலவு | 225·13 | 316·77 |
| சேமிப்பு | | |
| தேய்மானம், ரிசர்வ் நிதி | 27·34 | 125 89 |
| இதர சேமிப்புகள் | ... | 129·28 |
| மொத்தம்—கடன் விவரம் | 736·64 | 2,142 98 |
| இங்கிலாந்தில் | | |
| கடன்கள் | 396·50 | 13 42 |
| யுத்த செலவு | 20 62 | 20 62 |
| ரயில்வேக்கள் வாங்கியதில் தரவேண்டிய வருஷ நிதி | 47·82 | 26·01 |
| செலவு கடன்கள் | 464 94 | 60.05 |
| நிர்வாகம் | 4·18 | 3·55 |
| இங்கிலாந்தில் மொத்த கடன் | 469 12 | 63 60 |
| வட்டி வரும் கடன்களும் சொத்துக்களும் மொத்தம் | 1,205·76 | 2,206 58 |
| ரயில்வேக்களுக்கு மூலதன அட்வான்ஸ் | 725·24 | 797·38 |
| வர்த்தக ஸ்தாபனங்களுக்கு மூலதன அட்வான்ஸ் | 27 42 | 42·10 |
| மாகாணங்களுக்கு அட்வான்ஸ் | 123·28 | 76 97 |
| சமஸ்தானங்களுக்கும் கடன்களுக்கு வட்டியும் | 20·71 | 18·65 |
| பர்மாவிலிருந்து வரவேண்டிய கடன் | 49·73 | 48·15 |
| ரயில்வே சம்பந்தமாக மன்னர் சர்க்காரிடம் உள்ள சேமிப்பு | ... | 26·01 |
| | 946·38 | 1,009·26 |
| நிதி இலாகா பெயரில் உள்ள ரொக்க இருப்புகள் | 30·30 | 547·02 |
| வட்டி தரவேண்டிய கடன்களின் மொத்தம் | 229·08 | 650·30 |

## அட்டவணை XLVII

### ரயில்வேக்கள் (1939—40)

(ரூ. ஆயிரக்கணக்கில்)

| ரயில்வே பெயர்கள் | மொத்த மூலதனம் | நிகர வருமானம் | செலவு | மொத்த வருவாய் | வருமானத்தில் செலவுசத விகிதம் | மொத்த மூலதனத்தில் வரும் வருமான சதவிகிதம் |
|---|---|---|---|---|---|---|
| அஸ்ஸாம் வங்கம் | 26,48,74 | 2,13,35 | 1,68,26 | 45,06 | 78.86 | 1.70 |
| வங்கமும் எல்லேப்புறமும் | 22,84,94 | 3,62,90 | 1,84,82 | 1,78,08 | 50.93 | 7.79 |
| வங்கம் நாகபுரி | 78,45,97 | 11,04,46 | 7,43,44 | 3,61,02 | 67.31 | 4.60 |
| பி. பி. ஸி. ஐ. | 77,50,20 | 12,87,03 | 7,41,00 | 5,46,03 | 57.57 | 7.05 |
| கிழக்கு வங்கம் | 53,09,46 | 6,36,59 | 5,53,20 | 83,39 | 86.90 | 1.57 |
| கிழக்கு இந்தியா | 1,49,94,17 | 21,55,46 | 13,10,84 | 8,44,62 | 60.82 | 5.63 |
| ஜி. ஐ. பி. | 1,17,79,70 | 14,22,98 | 9,11,01 | 5,11,97 | 64,02 | 4.35 |
| எம். எஸ். எம். | 56,34,60 | 8,01,71 | 4,89,26 | 3,12,45 | 61.00 | 5.55 |
| வட மேற்கு (மொத்தம்) | 1,53,26,02 | 16,89,79 | 11,96,45 | 4,93,34 | 70.80 | 3.22 |
| ரோஹில்கந்த் காமோன் | 4,75,91 | 79,93 | 37,19 | 39,74 | 48.34 | 8.35 |
| தென் இந்திய ரயில்வே | 48,68,53 | 5,51,26 | 3,86,88 | 1,64,38 | 70.18 | 3.38 |
| வடமேற்கு வர்த்தக ரயில் | 1,19,44,31 | 15,50,43 | 10,07,00 | 5,43,43 | 64.95 | 4.55 |
| வடமேற்கு ராணுவ ரயில் | 33,81,71 | 1,39,36 | 1,89,45 | – 50,09 | 135.95 | – 1.48 |

பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள மொத்த ரயில்வேக்களில் கிழக்கு வங்காள ரயில்வே முழுவதும், அஸ்ஸாம் வங்காள ரயில்வே அரைகுறையாகவும் கிழக்கு மண்டலத்தில் சேருகின்றன. அவைகளில் போடப்பட்ட முதல் 75·55 கோடி ரூபாய். வருமானம் 1 கோடி 28·45 லட்சம், அதாவது 1 6 சத விகிதம். வடமேற்கு ரயில்வே வடமேற்கு மண்டலத்தில் முழுதும் சேருகிறது. அதில் போடப்பட்ட முதல் 153·26 கோடி ரூபாய். வருமானம் 4 கோடியே 93·34 லட்சம் ரூபாய் அதாவது போட்ட முதலில் 3·22 சத விகிதம். இவ்விதமாக, பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள முக்கிய ரயில்வேக்களில் கிடைக்கும் வருமானத்தைவிட இந்த இரண்டு மண்டலங்களிலும் கிடைக்கும் ரயில் வருமானம் குறைவு என்பது தெரியவருகின்றது. இந்தவகையிலும் பிரிட்டிஷ் இந்தியாவின் இதர பாகங்களிலும் முஸ்லிம் மண்டலங்கள் மோசமான நிலைமையில் இருக்கின்றன. வரவர ரயில் நிதி முக்கியம் அடைந்துவருகிறது. பெரும்பாலான முக்கிய ரயில்வேக்கள் அரசாங்கத்தை சேர்ந்துவிட்டன. அவைகளிலிருந்து வரக்கூடிய லாபம் அரசாங்கத்தைச் சேர்ந்தது. நஷ்டம் ஏற்பட்டாலும் அரசாங்கம் இதர வருமானங்களிலிருந்து அதற்கு ஈடு செய்யவேண்டியதாயிருக்கும்.

## 34. பிரிவினைப் பிரேரணையை ஆராய்வது

### 1. பிரிவினைக்காதாரமான வாதங்கள்

இந்துக்களும் முஸ்லிம்களும் தனித்தனித் தேசீய இனமென்றும் ஆகவே அந்த அடிப்படையைக் கொண்டுதான் இந்தியாவை முஸ்லிம் ராஜ்யம் முஸ்லிமல்லாத ராஜ்யமெனப் பிரிக்கவேண்டு மெனவும் கூறப்படுவதை விரிவாக ஆராய்ந்தோம். கலாசார அரசியல் காரணங்களுக்காக கொண்டுவரப்பட்ட அனேக பிரிவினைத் திட்டங்களை ஆராய்ந்தோம். இந்தியாவின் வடமேற்கு வடகிழக்கில் சுதந்திர முஸ்லிம் ராஜ்யங்களை உண்டாக்க வேண்டுமென்று அகில இந்திய முஸ்லிம் லீக் போட்டுள்ள தீர்மானத்திற்கு எவ்வளவு தூரம் இத்திட்டங்கள் ஒத்துவருகின்றன, எவ்வளவு வேறுபடுகின்றன என்பதையும் கண்டோம். ஏதாவது விரிவான திட்டத்தை முஸ்லிம் லீக் வெளியிடாது, பிரிவினை அடிப்படையைப் பொதுப்படையான வார்த்தைகளில் கூறிவிட்டு அமைந்துவிட்டது. ஆகவே லீகின் தீர்மானக் கொள்கையின்படி எங்கெந்தப் பிரதேசங்கள் இத்தகைய சுதந்திர மண்டலங்களாகும், அவைகளின் வளங்களென்ன என்பதையெல்லாம் நாம் ஆராயவேண்டி யிருந்தது. நாம் இப்பொழுது இந்தப் பிரேரணையை, தனி முஸ்லிம் மண்டலங்களின் நிலைமையிலிருந்தும், முஸ்லிமல்லாத மண்டலங்களின் நிலைமையிலிருந்தும் பொதுப்படக் கவனிக்கக் கூடிய நிலைமையிலிருக்கிறோம். நாளுக்குநாள் உருவாகிக்கொண்டு வருகிற சர்வதேச நிலைமைகளிலும் உலக நிலைமைகளிலும் வைத்து அப் பிரேரணையை நாம் கவனிக்க முடிகிறது.

பிரிவினைக்காதாரமான வாதங்களை பேராசிரியர் கூப்லண்டு அழுத்தந் திருத்தமாக யாரும் நம்பும்வகையில் சுருக்கிக் கூறியிருக்கிறார். அவைகளை அப்படியே கூறுவதுதான் சிலாக்கியம் :

'1. இந்து முஸ்லிம் பிளவு சமீபகாலத்தில் அதிகப்பட்டு வருவதன் முக்கிய காரணம் அவர்களுக்கிடையேயுள்ள செருக்கும் பயமுமாகிய மனக் கோளாறுகள்தான். இந்து ராஜ்ய வரம்பிலிருந்து வந்துவிடுவதால் முஸ்லிம்களில் பாதிப்பேராயினும் இந்து ராஜ்யம் என்ற பயத்திலிருந்து விடுபட்டவர்களாகிறார்கள். இந்து ராஜ்யத்தாலேற்படும் சங்கடங்களிலிருந்து உடனடியாகவும் இறுதியாகவும் தப்புகிறார்கள். ஒரு பெரிய ராஜ்யத்தில் சொற்பச் சிறுபான்மையா யிருப்பவர்களை இரண்டு சிறிய ராஜ்யங்களில் பெரிய பெரும்பான்மையாக்கி, பல இனங்கள் கொண்ட இந்தியா தேசத்தில் ஒரு சிறு வகுப்பினராயுள்ளவர்களைத் தங்களுடைய தாயகத்தில் தனியரசு செலுத்தும் உரிமையுள்ள ஒரு தேசீய இனமாக்கி, முஸ்லிம்களைப் பெருமையாசு பூரிப்படையச் செய்கிறது பிரிவினை. மேலும் அவர்களுடைய நிலைமையை உலகில் விரிவடையச் செய்கிறது............மத்திய கிழக்கிலுள்ள முஸ்லிம் ராஜ்யங்களோடு தோளோடு தோள் நிற்பார்கள். இந்திய எல்லைகளையும் தாண்டி வெளியிலுள்ள முஸ்லிம் சகோதரத்துவ உலகை நாம் சேர்ந்தவர்கள் என்ற உணர்ச்சி இப்போதிருப்பதைவிடப் பிரிவினையின்பின் நன்கு உறுதியாக விளங்கும். அதை விட்டுவிட்டு வெளி யுலகை இவர்கள் புறக்கணித்து கொண்டு இருப்பார்களானால், எங்கோ ஒதுங்கிக் கிடக்கும் இந்தியாவில் இவர்கள் இந்துப் பெரும்பான்மைக்கு நிரந்தர அடிமையாயிருக்க மனமிசைந்து விடுவார்களானால் அப்பொழுது இவர்கள் ஐரோப்பாவிலுள்ள சிறுபான்மைகளுக்கேற்பட்ட விதியை அழைத்துக் கொண்டவர்களாவார்கள் ............

'2. பாகிஸ்தானைப்போல வேறெதுவும் இந்தியா முழுவதின் சிறுபான்மைப் பிரசினையைத் தீர்க்காது என்று சொல்லப்படுகிறது. பாகிஸ்தான் ஒருவகையில் சமப்படுத்தும் கொள்கையை மேற்கொள்கிறது. அந்த வகையில் தான் அக்கொள்கையும் பொருந்தும். ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட இந்து ராஜ்யங்களுக்கெதிராக பாகிஸ்தான் முஸ்லிம் ராஜ்யங்களை அமைக்கிறது. அவைகளின் அளவு எப்படியிருந்தாலும் எப்படியும் அவைகள் தேசிய அந்தஸ்தைப் பெற்றுவிடுகின்றன. அந்த ராஜ்யங்களில் பின்னும் சிறுபான்மைகள் இருக்கக்கூடும்............ஒரே வகுப்பினரைக்கொண்ட ராஜ்யங்களமைத்தல் என்பது நடக்காத காரியம். இந்து ராஜ்யங்களிலும் பிற சிறுபான்மைகளோடு முஸ்லிம் சிறுபான்மைகளும் லட்சக்கணக்கில் இருக்கக் கூடும். இருந்தாலும் சிறுபான்மைப் பிரசினை அவ்வளவு கடுமையாக இருக்காது. பிரிட்டிஷ் அதிகாரத்திலிருந்து முடிவான விடுதலை வரப் போகிறதை உணர்ந்து அதை யார் வசப்படுத்திக் கொள்வது என்ற ஆதிக்கப் போட்டி காரணமாக ஏற்படும் வகுப்புச் சச்சரவு, பிரிவினை ராஜ்யங்கள் ஏற்பட்ட நிமிஷமே மறைந்துவிடும். முஸ்லிம் ராஜ்யங்களுக்கு லீக் ஏற்படுத்தின நிகழ்ச்சித் திட்டத்தில் கலப்பு அரசாங்கமும், சிறுபான்மைகளுக்குச் சட்டபூர்வமான பாதுகாப்புகளும் இடம் பெற்றிருக்கின்றன. ஆனால் எப்படி இந்து ராஜ்யத்தில் இந்துக் கலாச்சாரமும் விரவி நிற்குமோ அதேபோல முஸ்லிம் ராஜ்யங்களில் முஸ்லிம் கலாசாரமும் முஸ்லிம் நட்புமே மேலோங்கி நிற்கும் என்பதை அறிந்துகொள்ள வேண்டும். இந்தியாவின் மத்திய அரசாங்கத்தில் தத்தம் வகுப்புக்கு ஆதிக்கம் பெறும் நோக்கத்தோடு, அங்கங்குள்ள சிறுபான்மைகள் பெரும்பான்மைகளோடு சண்டையிட ஆரம்பித்தால் அதற்கு இடந்தரமாட்டார்கள். இத்தகைய மத்திய அரசாங்கமே யிருக்காது. ............பெரும்பான்மை வகுப்பினரும் தத்தம் பொறுப்பை நிறைவேற்றுவார்கள் எனக் கூறப்படுகிறது. சிறுபான்மைகளும் தத்தமக்கேற்பட்ட நிலைமையில் அமைவுற்றுக் கிடப்பார்கள் எனவும் கூறப்படுகிறது. ஏனெனில் கடைசி நிலைமையாக, சமஷ்டியிலிணைந்த மாகாணங்களுக்கிடையே 'பணயக் கைதிகள்'' என்னும் கொள்கையை அனுஷ்டிப்பதைக் காட்டிலும் தனித்தனி ராஜ்யங்களுக்கிடையே அக்கொள்கையை நன்கு அமுல் நடத்த முடியும் என்பதை யாவரும் உணரக்கூடும்.

'3. மூன்றாவதாக பாகிஸ்தான் இந்தியா முழுமைக்கும் பாதுகாப்புப் பிரசினையை எளிதாக்கும் என்று கூறப்படுகிறது..................வடமேற்கில் முஸ்லிம் ராஜ்யத்தை எப்பொழுது ஏற்படுத்தி விட்டோமோ அப்போதே வடமேற்கெல்லை தனது முக்கியத்துவத்தை இழந்துவிடுகிறது. மலைஜாதியினரும் எல்லைக்கப்பாலுள்ள மக்களும் யாவரும் முஸ்லிம்களே. எல்லையிலுள்ளது, முஸ்லிம் ராஜ்யம், நாம் அவைகளோடு தானே தொடர்பு வைத்துக் கொள்ளவேண்டும் என்பதை எப்போது எல்லைக்கப்பாலுள்ள முஸ்லிம்கள் தெரிந்து கொள்கிறார்களோ அப்போது, முஸ்லிமல்லாதார்மீது மதப்போர் தொடுப்பதைப்போன்று மதவெறி, அரசியல் ஆத்திரம் ஒன்றும் கொள்ள மாட்டார்கள்............பாகிஸ்தானும் அதன் பக்கத்து முஸ்லிம் நாடுகளும் நேசதேச உடன்படிக்கைகள் செய்துகொண்டு, தங்களது நல்லுறவை உறுதிப் படுத்திக் கொள்ளலாம். 1937-ல் ஏற்பட்ட சாதாபாத் உடன்படிக்கையின்படி துருக்கி, இராக், பாரசீகம், ஆப்கானிஸ்தானம் ஆகிய நான்கு நாடுகள் பரஸ்பரப் பாதுகாப்புச் செய்வதாகத் தம்முள் உறுதி கொண்டுள்ளன. ஏன் பாகிஸ்தானும் அதோடு சேர்ந்த ஐந்தாவது நாடாக இருக்கக் கூடாது?

'4. நான்காவதாக, பிரிக்கப்படாத இந்தியாவில், ராணுவ அமைப்பு இந்தியர்கள் கைக்கு அதாவது பெரும்பாலும் இந்துக்கள் கைக்கு மாறவும், இந்திய ராணுவத்தில் முஸ்லிம்களின் விகிதம் குறைந்துவிடுவது நிச்சயம்...... 1939-ல் மூன்றிலொரு பங்காக இருந்த முஸ்லிம் தொகை, இப்போது 30'8 சத விகிதமாக இருக்கிறது. பிரிவினை யேற்படாத பட்சத்தில் அவர்கள் தொகை கால்வாசிக்கும் குறைந்துவிடும். பஞ்சாப் மாகாணத்தின் வாழ்க்கைத் தரத்துக்குக் காரணம் பஞ்சாபி ராணுவத்தினர் அடையும் சம்பளம் பென்ஷன் முதலியவை. ராணுவத்தில் பஞ்சாபியரின் தொகை குறைய அவர்களது வாழ்க்கைத்தரமும் பாதிக்கப்படும். அதுமட்டுமல்ல. இந்து ராஜ்யத்தை நிலை நிறுத்துவதாக ராணுவம் இறுதியான உத்தரவாதம் அளிக்கும்.

'5. ஐந்தாவதாக, பாகிஸ்தானுல், மட்டும்தான் இந்திய முஸ்லிம்கள் பொருளாதார சுய நிர்ணயம் அடைய முடியுமென்று சொல்லப் படுகிறது. இந்து முஸ்லிம் பகைமைக்குப் பொருளாதாரக் காரணமும் எப் பொழுதும் ஒரு பக்கம் இருந்து வந்திருக்கிறது. இந்து ராஜ்யம் ஏற்பட்டு விட்டால் அதன்மூலம் இந்துக்கள் பொருளாதார ஆதிக்கத்தை இந்தியாவின் எல்லாப் பாகத்திலும் நிலைநிறுத்தி விடுவார்களே என்று முஸ்லிம்கள் முன் கூட்டியே பயப்படுகிறுர்கள். முஸ்லிம்கள் அதிகமாகவுள்ள நாட்டுப் புறத்திலும்கூட சில்லறை வியாபாரத்தையும், சந்தை வியாபாரத்தையும் இந்துக் கடைக்காரர்களும் இந்து லேவாதேவிக்காரர்களும் ஆக்கிரமித்து விட்டார்கள். பஞ்சாப் சிந்து மாகாணங்களில்கூட நகரங்களில், பலதிறப் பட்ட தொழிலாளிகளாகவும் மத்திய வகுப்பைச் சேர்ந்த வியாபாரிகளாகவும் இந்து சமூகம் பிற சமூகங்களை மிஞ்சிப் பெருகிக்கொண்டிருக்கிறது. இதுவே போதுமான ஆபத்தாகும். இதற்கு மேலும் ஆலைத் தொழிலபிவிருத்தி காரியங்களைப் படுமோசமாக்கிவிட்டது............வடமேற்கு முஸ்லிம் தாயகம் விவசாயம் பெருத்த நாடு. அதன் ஜனத்தொகை பிரிட்டிஷ் இந்திய ஜனத் தொகையில் 12·3 சதவிகிதம். ஆனுல் பிரிட்டிஷ் இந்திய ஆலைத் தொழி லபிவிருத்தியில் வடமேற்கு 5·1 சதவிகிதமும், தாது பொருளில் 5·4 சத விகிதமும் முன்னேறி இருக்கிறது. வங்காளம் முழுதும் இன்னும் அதிகமாக ஆலைத் தொழி லபிவிருத்தி பெற்றிருக்கிறது. அதன் ஜனத்தொகை பிரிட்டிஷ் இந்திய ஜனத்தொகையில் 20 சதவிகிதம். தொழிற்சாலைகளில் வேலை செய்யும் மக்கள் எண்ணிக்கையைக்கொண்டு கணக்கிடுவோமானுல் 33 சதவிகித ஆலைத்தொழி லங்கிருக்கிறது. ஆனுல் ஆலைப்பிரதேசம் எது என்ருல் இந்து ஜனத்தொகை மிகுந்துள்ள கல்கத்தாவும் அதை அடுத்துள்ள பாகமும்தான். கல்கத்தாவை விலக்கிவிட்டுப் பார்த்தால் வடகிழக்கு முஸ்லிம் தாயகம், வட மேற்கைக் காட்டிலும் விவசாயம் பெருத்த நாடாக இருக்கிறது. இந்திய ஆலைத்தொழில் உண்மையாக இந்துப் பிரதேசங்களிலேதான் குவிந்திருக்கிறது. இந்துக்களே அதன் சொந்தக்காரர்கள். இந்து முதலாளிகளே அதில் பணம் போட்டவர்கள். அது வேலை யளிப்பதும் இந்துப்பாட்டாளிகளுக்கே......பாகிஸ் தான் குறைந்தபட்சம் தன்னுடைய பொருளாதாரத்தையாவது தன் சக்தியில் நடத்திக்கொள்ள முடியும். எப்படியும் வடமேற்கில் அது தன்னுடைய ஆலைத் தொழில்களை நிறுவி அவைகளைக் காக்கமுடியும். தன்னுடைய பருத்திப் பஞ்சை அப்படியே பம்பாய் ஆலைகளுக்கு அனுப்புவதை நிறுத்திக்கொண்டு தன்னுடைய தாயகத்திலேயே நிறைய ஆலைகளை ஏற்படுத்தி அவற்றின் உற்பத்தியைச் சட்டபூர்வமாகக் காக்கலாம். பிற்பாடு, மேலும் பணம்

கிடைத்தால், தன்னுட்டு நீர் சக்திகளைப் பயன்படுத்தி மேலும் ஆலைத் தொழிலபிவிருத்தி செய்யக்கூடும். வடமேற்கிந்தியாவுக்கு உள்ள துறைமுகம் பம்பாயல்ல, கராச்சிதான் என்று சொல்லக்கூடிய அளவுக்கு கராச்சியை உருப்படுத்தலாம்...........'[1]

## II. பாகிஸ்தான் வாதங்களுக்குப் பதிலிறுத்தல்

முன்கூறிய வாதங்களொவ்வொன்றையும் சிந்திப்போம். (1) துவேஷமும் ஆத்திரமும் இவ்வளவு தூரம் தலைவிரித்தாடும் சமயத்தில் இத்தகைய முக்கிய விஷயங்களை ஆற அமர ஆராய்வதென்பது முடியாத காரியமல்லவென்றுலும் மிகமிகக் கடினமானது என்பதை உணரக்கூடும். சாதாரணமாகச் செருக்கு இருந்தால் பயம் இருக்காது. ஆனுல் பேராசிரியர் கூப்லண்டின் ஆராய்ச்சியின்படி அவை இரண்டும் இருக்கின்றனவாம். சரி அது போகட்டும். இந்த பயம் என்னும் மனநிலைக்கு, பிறகு என்னதான் காரணம்? பிரிட்டிஷார் அரசியல் ஆதிக்கத்தைக் கைப்பற்றி இந்திய அரசாங்கத்தை மேற்சொண்டதுமுதல் அவர்களல்லவா இந்நாட்டை அடக்கி ஆண்டுவருவது? முஸ்லிம்கள் தங்களுக்குச் சாதகமான நிலைமைகளையும் அந்தஸ்தையும் இழந்து விட்டார்களென்றுல் அதற்குக் காரணம் இந்துக்களோ அல்லது இதர முஸ்லிமல்லாதார்களோ தங்கள் கைவசமிருந்த அரசியல் அதிகாரத்தைத் தவறுன வழியில் செலுத்தினதால் அல்லவே? முஸ்லிம்களைப் போலத்தானே இவர்களும் அரசாட்சியைப் பறிகொடுத்துப் பரிதவிப்பவர்கள்? பிரிட்டிஷ் ஆட்சியாரம்ப காலத்தில் இந்துக்களைக் காட்டிலும் முஸ்லிம்களே பெரும்பாலும் சந்தேகிக்கப்பட்டார்கள். இந்துக்களைக் காட்டிலும் அவர்களே அடக்கி யொடுக்கப்பட்டார்கள். இது சரித்திர உண்மை. பிரிட்டிஷார் இந்தியாவை ஆளுவதற்கு என்ன உரிமையுண்டென எப்பொழுது இந்துக்கள் கேட்க ஆரம்பித்தனரோ அப்பொழுதே, 'சரி இனிமேல் நமது நடத்தையை மாற்றிக்கொள்ள வேண்டும்; இந்துக்களை முதுகில் தட்டிக்கொடுப்பதை நிறுத்திக்கொண்டு, இனிமேல் முஸ்லிம்களைத்தான் தட்டிக்கொடுக்க வேண்டும்' என்று பிரிட்டிஷார் தீர்மானித்ததும் மறுக்கமுடியாத உண்மையாகும். பிரிட்டிஷார் தங்களது நடத்தையை இவ்வாறு சூழ்ச்சிகரமாக மாற்றியதன் காரணமாக இந்து முஸ்லிம்களுக்குள் சந்தேகமும் அவநம்பிக்கையும் தோன்றியது. ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம் என்பதுபோல மூன்றுவது கட்சியும் ஏனென்று கேட்பாரில்லாமல் அரசாள முடிந்தது. சாந்தமாகச் சம்பவங்களை ஆராய்ந்திருந்தால், வெறுப்பில்லாமல் நிலைமையைச் சிந்தனை செய்திருந்தால் மூன்றும் கட்சியினுடைய நோக்கங்கள், செயல்களின் மீது சந்தேகம் கொண்டிருக்கலாம். ஆனுல் துரதிருஷ்டவசமாக அவ்வாறு கவனிக்கவிடாது அவர்களது கவனம் வேறு வகையில் திருப்பப்பட்டுவிட்டது. முஸ்லிம்கள் பின்னடைந்திருப்பதற்கு இந்துக்களைக் காரணம் கூறுவது எவ்விதத்திலும் முடியாது. நூற்றைம்பது வருஷ காலமாக எல்லா அதிகாரத்தையும் கைக்கொண்டு அரசுபுரிந்த பிரிட்டிஷ் ஆட்சி முறைமையையே காரணம் கூறவேண்டும். இந்தியர்கள் கைக்கு அதிகாரம் மாற்றியதுபோலக் காட்டப்பட்டதும், 1919, 1935-ம் வருஷச் சட்டங்கள் மூலமாகத்தான். அந்தச் சட்டங்களை நிறைவேற்றிய பொறுப்பு பிரிட்டிஷாரையே சேரும். 1935-ம் வருஷத்திய சட்டத்தின்படி முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ள

1. R. Coupland : *The Future of India* p. p. 75-79

மாகாணங்களில் அவர்களே ஆண்டு வருகிறுர்கள். அவர்கள் சிறுபான்மையாக உள்ள அஸ்ஸாமிலும் அவர்களே ஆண்டார்கள். முக்கியமாகப் பெரிய மாகாணங்களாகிய பஞ்சாபிலும் வங்காளத்திலும் சிந்துவிலும்கூட 1937-ம் வருஷத்தில் அந்தச் சட்டம் அமுலுக்கு வந்ததிலிருந்து முஸ்லிம் ஆட்சி தங்கு தடையின்றி நடைபெற்று வந்திருக்கிறது. மத்திய ஆட்சி நெடுகலும் பிரிட்டிஷ் ஆட்சியாகவே இருந்து வந்திருக்கிறது. முஸ்லிம்கள் சிறுபான்மை யாக இருக்கும் மாகாணங்களிலும் குறுகிய காலந்தான் அதாவது 27 மாதங் கள்தான் இந்துப் பெரும்பான்மை ஆளமுடிந்தது. முஸ்லிம்கள் பின்னடைந் திருந்தால் அதற்கு இந்துப் பெரும்பான்மையை எவ்வாறு குறை கூறமுடியும்? மத்திய அரசாங்கத்தில் இந்துக்கள் இடம்பெற்றதே இல்லை. இந்துப் பெரும் பான்மை மாகாணங்களிலும் மிகக் குறுகிய காலந்தான் அவர்களுக்கு ஆளும் சந்தர்ப்பம் கிடைத்தது. முஸ்லிம்கள் முன்னேறுவதற்குத் தடையா யிருந்தவற்றை ஒழிக்க வடமேற்கிலும் கிழக்கிலுமுள்ள முஸ்லிம் மந்திரிகள் என்ன செய்தார்கள்? அந்த மாகாணங்களில் உள்ள இந்துச் சிறுபான்மையின் எதிர்ப்புக் காரணமாக அவர்களால் அடியோடு மாறுதல்கள் செய்யமுடிய வில்லை யென்று வைத்துக்கொண்டாலும்—இப்படிச் சொல்வதற்கு யாதொரு ஆதாரமுமில்லை—பிரிவினையால் அந்த நிலைமையை எவ்வாறு சீர்படுத்தமுடியும் என்று நியாயமாகக் கேட்கலாமல்லவா? ஒன்று, அந்த ராஜ்யத்தில் பெரும் பான்மைக் கொடுமைக் கெதிராக சட்டபூர்வமாக எதிர்க்கும் அரசியல் உரிமைகளும் இல்லாதபடி சிறுபான்மையினர் அடக்கி யொடுக்கப்படவேண்டும் அல்லது இப்போதைய நிலைமையிலேயே அவர்கள் இருந்து வருவார்கள். வடமேற்கு வடகிழக்கு சுதந்திர முஸ்லிம் ராஜ்யங்களிலிருந்து அதிலும் சிறப்பாக பஞ்சாப் வங்காள மாகாணங்களிலிருந்து ஏதாவதொரு வகையில் சிறுபான்மையினரை வெளியேற்றுவதென்றுல் அது வேறு விஷயம். ஆனுல் அதை யாரும் மனமொப்பிச் சொல்லவில்லை. லீக் தீர்மானத்தை ஏற்றுக் கொள்வதுண்டானுல் சிறு பான்மைகள் அங்கேயே யிருப்பார்கள். அவர்களு டைய மத, கலாசார, பொருளாதார, அரசியல் நிர்வாக, உரிமைகளையும் நலன்களையும் காப்பதற்குப் போதுமான பாதுகாப்புகள் அளிக்கப்படும். சட்டபூர்வமாக அந்தப் பாதுகாப்புகள் அவர்களைக் கலந்தே அரசியலமைப்பி லும் சேர்க்கப்படும். முஸ்லிமல்லாத ராஜ்யங்களில் சிறுபான்மைக் களிக்கப் படும் பாதுகாப்புகளை யொட்டி இவையிருக்கும். முஸ்லிமல்லாத சிறுபான்மை பஞ்சாப்பில் சொற்பமாக இருக்கமாட்டாது. அங்கு முஸ்லிம்கள் 57 சத விகிதம்தான். வடமேற்கு மண்டலத்திலும் அவர்கள் அற்பச் சிறுபான்மை யல்ல. பஞ்சாப் முழுமையும் சேர்வதாயிருந்தாலும் வடமேற்கு மண்டலத்தில் முஸ்லிம்கள் 62 சத விகிதமே. முஸ்லிமல்லாதார் மிகுந்துள்ள பிரதேசங்களை அதனின்றும் நீக்கிவிட்டால் 75 சத விகிதமிருப்பர். அதேபோல கிழக்கு மண்டலத்திலும் வங்காளம் அஸ்ஸாம் இரண்டையும் நீக்கிவிட்டால் முஸ் லிம்கள் 51 அல்லது 52 சத விகிதமிருப்பர். முஸ்லிமல்லாதார் மிகுந்துள்ள பிரதேசத்தை விலக்கிவிட்டால் 69 சத விகிதத்திற்குமேல் போகாது. முஸ்லிம் ராஜ்யங்கள் என்றுல் அதில் முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்க வேண்டியிருக்க அவ்வாறில்லாத இந்த மண்டலங்களெல்லாம் எப்படி முஸ்லிம் ராஜ்யங்களாகும் என்பதுதான் விளங்கவில்லை. ஒரு பெரிய ராஜ்யத்தில் சிறுபான்மையாக இருப்பதைக் காட்டிலும் இரு சிறு ராஜ்யங்களில் பெரும் பான்மையாக இருக்கிறேம் என்ற திருப்தியை அவர்கள் அடையலாம் என்பது

வாஸ்தவம்தான். இக்காரியத்தை நிறைவேற்றுவதில் உள்ள கஷ்டநஷ்டங்களைக் கவனிக்கும்போது இந்தப் பெருமையை மாத்திரம் பேணி வளர்த்தால் போதுமா என்பதைத்தான் முஸ்லிம்கள் நன்குணரவேண்டும்.

உலகில் அவர்களது நிலைமை விரிவடைய வேண்டுமாயின் அது முஸ்லிம் ராஜ்யங்களா யிருப்பதையே பெரும்பாலும் பொறுத்திருக்கிறது. முஸ்லிமல்லாதாரைப் பெரிய சிறுபான்மையாகக் கொண்ட இந்தியாவின் வடமேற்கு வடகிழக்கு மண்டலங்கள்போல இவ்வளவு பெரிய சிறுபான்மை கொண்ட முஸ்லிம் நாடுகள் உலகில் வேறெங்குமில்லை. மற்றப்படி இந்தியாவிலுள்ள முஸ்லிம்கள், வெளிநாட்டு முஸ்லிம்களோடு பரிவுகொள்வதைத் தடுப்பதற்கொன்றுமில்லை. உண்மையாக இந்துக்கள் அவர்களுக்குக் குறுக்கே நின்றது கிடையாது. இந்தியாவின் சோதனைகளிலும் கஷ்டங்களிலும் முஸ்லிம்களும் தங்களது முழுப் பங்கை கொள்வார்களென்று இந்துக்கள் இயற்கையாகவே நம்பினார்களேயொழிய அவர்களுக்கு இடையூறு செய்யவில்லை. கிலாபத் கிளர்ச்சி நடந்து வெகுகாலமாகி விடவில்லை. அக் கிளர்ச்சியின்போது முஸ்லிமல்லாதாரனைவரும் ஏக ஐக்கியமாக முஸ்லிம்களோடு சேர்ந்துநின்று உலகத்தின் மற்றப் பாகங்களிலுள்ள முஸ்லிம்களுடைய உரிமைகளுக்காகப் போராடித் துன்புற்றார்கள். கடுந்தியாகத் தீயில் இறங்கினார்கள். பஞ்சாப் இந்தியர்—இந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்களுடைய துயர் நீங்குவதற்காக எவ்வளவு பாடுபட்டார்களோ அவ்வளவு தூரம் முஸ்லிம்களுடைய கலிபாவின் உரிமைகளுக்காகவும் பாடுபட்டார்கள். இந்துக்கள் எந்த முஸ்லிம் நாட்டுக்கும் எதிராக ஒன்றும் செய்ததில்லை. பரஸ்பர உதவிக்காக ஏன் இந்தியாவும் மத்திய கிழக்கு நாடுகளோடு ஒப்பந்தம் செய்து கொள்ளக்கூடாது என்பதற்குக் காரணமேயில்லை. பலம் பொருந்திய ஐக்கிய இந்தியாவைக் காட்டிலும் அதிலிருந்து துண்டுபட்ட ஒரு சின்ன ராஜ்யம் வலுவற்றிருக்குமென்பது நிச்சயம். அப்படித் துண்டாய்ப்போன சின்ன ராஜ்யம் இந்தியாவின் இதர பாகத்தையும் வலுவிழக்கச் செய்யும் என்பதும் நிச்சயம். சரி, என்னதான் பேசி ஆராய்ந்தாலும்; கடைசியாக வலுவுள்ள ஐக்கிய இந்தியாவோடு இணைந்திருப்பதால் கிடைக்கும் லாபங்களுக்குப் பதிலாக, இந்நாட்டில் பரம்பரையாகக்கொண்ட சரித்திரபூர்வமான தொடர்புக்குப் பதிலாக தங்களுக்குப் பெருமைத் திருப்திதான் வேண்டுமா என்பது முஸ்லிம்கள் முடிவு செய்துகொள்ள வேண்டிய விஷயம். அதற்காக இவ்வளவு பெரிய உயிர்போன்ற விஷயத்தில், நெடுகலும் எண்ணூறு ஆண்டுகளாக வளர்ந்துவந்த சரித்திரத்தைக் குறுக்கே முறிக்கும் இப்பிரிவினை விஷயத்தில், அப்பிரதேசங்களிலுள்ள முஸ்லிமல்லாதாரும் தங்களுடைய கருத்தையும் விருப்பத்தையும் சொல்லுவதற்குரிய உரிமையை இழந்துவிடுவார்கள் என்பதல்ல, இழக்கவும் கூடாது.

இப்பிரிவினைத் திட்டத்தினால் என்ன விளையுமோ என்பதைக் கவனிக்கும்போது அப்பிரதேசங்களிலுள்ள முஸ்லிமல்லாதாரும் இதர பாகங்களிலுள்ள முஸ்லிமல்லாதாரும் இத்திட்டத்தைச் சந்தேகிப்பது ஏன் என்பது விளங்குகிறது. பிரிவினையாளர்கள் தங்களது கடைசி நோக்கமென்ன என்பதை வெளியிட்டதைக் காணக்காண அவர்களது சந்தேகம் வலுக்கிறது. பிரிக்கப்பட்ட இந்தியா வலுவிழந்து நிற்கும் என்பதற் கையமில்லை. சர்வதேச சபைகளில் வலுவுள்ள ஒன்றுபட்ட இந்தியாவுக்குள்ள செல்வாக்கு பிரிக்கப்பட்ட இந்தியாவுக்கு இராது. வியாபாரம் உள்நாட்டு ஆலைத்தொழிலபி

விருத்தி இன்னும் இவைபோன்ற நூற்றுக்கணக்கான வகைகளில் ஒன்றுபட்ட இந்தியா அடையும் வசதிகளைப் பிரிக்கப்பட்ட இந்தியா பெருது; இந்தியாவின் இதர பாகத்தைக் காட்டிலும் சிறிதாய் இருக்கும் முஸ்லிம் மண்டலங்களால் நிச்சயமாய்ப் பெறமுடியாது. பிரிவினை காரணமாக முஸ்லிமல்லாத பிரதேசங்களும் மிக மிகச் சங்கடப்பட நேரிடும்.

இதற்கெல்லாம் மேலாகப் பிரிவினையாளர்களின் பேச்சுக்கள் உண்மையாகவே பயமுறுத்துகின்றன. பிரிவினையை யடுத்தே இந்தியாவில் மீண்டும் முஸ்லிம் ஆட்சியை நிலைநாட்ட முயலுவார்கள் என்று பிறர் அஞ்சுவதற்குத் தகுந்த ஆதாரமுண்டு என்பதைக் காட்டும் சில மேற்கோள்கள் தருகிறேன். திரு. எப். கே. துரானி 'பாகிஸ்தானின் பொருள்' என்ரெரு புத்தகம் எழுதியிருக்கிருர். சமீபத்தில் 1943 நவம்பர் 12ல் அவர் அதற்கெழுதிய முன்னுரையில் பின்வரும் வாசகம் காணக்கிடக்கிறது. 'நம்முடைய தந்தையர் இந்திய மண்ணில் இரத்தம்சிந்தி வாங்காத நிலம் ஒரு அங்குலம்கூடக் கிடையாது. நமது தந்தையரின் இரத்தத்திற்கு நாம் துரோகிகளாகக் கூடாது. ஆகவே இந்தியா முழுவதும் நமது தகப்பன் சொத்து. அதை மீண்டும் இஸ்லாமுக்கு ஜெயித்தாகவேண்டும். நமது மதம் விரிவடைவது அவசியம். அந்த அவசியம் அதன் பிறவிக்குணம். அதற்காக இந்துக்கள்மீது வெறுப்போ பகைமையோ என்பது கருத்தல்ல. அதற்கு மாருனது. இஸ்லாம் கொடியின்கீழ் இந்தியாவில் அரசியல், ஆத்மிக ஐக்கியத்தை ஏற்படுத்துவதே நமது இறுதிக் குறிக்கோள். இந்தியாவின் அரசியல் விமோசனம் வேறு வகையில் சாத்தியமில்லை.'[2]

'ஒரு பஞ்சாபி' கூறுவதாவது: 'இந்து இந்தியாவிலிருந்து நமது பிரதேசங்களைப் பிரிப்பதோடு நமது லட்சியம் முற்றுப்பெறவில்லை. ஒரு லட்சிய இஸ்லாமிய ராஜ்யத்தை ஏற்படுத்துவதற்கு இது ஒரு சாதனமேயொழிய வேறில்லை யென்பதை நாம் தெளிவாக்குவது அவசியம். இப்பிரிவினை நமக்குச் சந்தேக மில்லாமல் பொருளாதார விடுதலையளிக்கும். ஆனல் நமது குறிக்கோள், ஒரு இலட்சிய இஸ்லாமிய ராஜ்யம். அது பரிபூரண விடுதலையையும் குறிக்கிறது. விடுதலையடைந்த பிறகு இஸ்லாமிய மயமற்ற உலகில் நமது இஸ்லாமிய ராஜ்யம் என்ற லட்சியத்தை நெடுநாளைக்குக் கொண்டு செலுத்துவது இயலாத காரியமாகையால் இஸ்லாமியப் போக்கில் உலகப்புரட்சியை உண்டாக்க வேண்டு மென்று நாம் சொல்ல வேண்டியிருக்கிறது. நமது இறுதி லட்சியம் இஸ்லாமியப் போக்கில் உலகப்புரட்சியை உண்டாக்குவதே. இந்துக்களிடமிருந்து பிரிதல், அவர்களிடமிருந்து பொருளாதார விடுதலை பெறுதல், பிரிட்டிஷாரிடமிருந்து அரசியல் விடுதலை பெறுதல் ஆகிய காரியங்கள் நமது இறுதி லட்சியத்திற்குரிய சாதனங்களாகும்.'[3]

'உலகத்தின் இதர பாகங்களிலுள்ள சிறுபான்மைகள் மற்ற மதத்தினரோடு நேசபாவத்தில் இருந்து வந்திருக்கிருர்கள். ஆனல் தங்களுடைய தொகையையும் உடல்வலிமையும் கவனிக்கும்போது, எப்பொழுது தாங்கள் ஒரு சுதந்திர முஸ்லிம் ராஜ்யத்தை ஸ்தாபிக்க முடியுமென்று கருதினர்களோ அப்பொழுது தாங்கள் ஒரு சிறுபான்மை என்ற அந்தஸ்தை ஒப்புக்கொண்டதில்லை ......முஸ்லிம்கள் சுதந்திர ராஜ்யத்தை ஏற்படுத்த வேண்டுமென்று இந்தியாவில் தோன்றிய இயக்கம், முஸ்லிம்கள் சிறுபான்மையாக வைக்கப்பட்

2. F. K. Khan Durrani: *The Meaning of Pakistan*, p. x.
3. *Confederacy of India* by 'A. Punjabi' p. p, 269–70

டிருக்கிற சீனா ரஷ்யாபோன்ற நாடுகளிலும் இத்தகைய இயக்கங்கள் வலுப் பெற உதவி செய்யும்.

'மத்திய ஆசியாவிலுள்ள 8 கோடி மக்களில் முஸ்லிம்கள் 95 சத விகிதப் பெரும்பான்மையினர் என்றாலும் அவர்கள் இப்போது சீனா, சோவியத் அர சாங்கங்களால் அடக்கப்பட்டு வருகிறார்கள்.

'இஸ்லாமிய அரசியல் பிரசினைகள் எங்கும் ஒரு தன்மையனவாகவே இருக்கின்றன. ஒரு முஸ்லிம் நாட்டின் சுதந்திரம் மற்றொரு முஸ்லிம் நாட் டிற்கு நேரடியாக உதவும். இந்திய முஸ்லிம்களின் தலைவிதி உலகத்தின் இதர பாகத்தில் உள்ள முஸ்லிம் நாடுகளில் நேரே சென்று எதிரொலிக்கும். அதிலும் சிறப்பாக முஸ்லிம்கள் மிகுந்துள்ள சீனாவின் மேற்கு மாகாணங் களிலும், ரஷ்யாவின் தெற்கு கிழக்கு பாகங்களிலும் முஸ்லிம்களுக்கு ஆக்க மளிக்கும். இந்திய உபகண்டத்தில் சிறுபான்மை அந்தஸ்தை ஏற்றுக்கொள் வதனால் இந்தியாவிலுள்ள 9 கோடி முஸ்லிம்களின் விதி முடிவுகட்டி முத்திரை வைக்கப்படுவதோ டல்லாமல் சோவியத் ரஷ்யாவிலுள்ள 3 கோடி முஸ்லிம் களும், சீனாவிலுள்ள 5 கோடி முஸ்லிம்களும் நிரந்தர அடிமைகளாக்கப்பட்டு விடுவார்கள்.

'காங்கிரஸின் பேராதரவில் இந்தியா ஒரே ஐக்கிய நாடாக சுதந்திரம் அடைந்துவிட்டால் அப்போது அது சீனா, ரஷ்யா நாடுகளுடன் நிரந்தர நேச உடன்படிக்கை செய்துகொள்ளும். அவ்வுடன்படிக்கையின்படி அந்நாடுகள் மூன்றும் தத்தம் நாட்டிலுள்ள முஸ்லிம்களை நிரந்தர அடிமைத்தனத்தில் வைக்கும் என ஊகிப்பது இயற்கை. மத்திய ஆசியாவில் ஒரு சுதந்திர முஸ்லிம் நாடு உண்டாவதை இந்தியாவின் வருங்கால காங்கிரஸ் அரசாங்கம் சந்தேகத் துடன் நோக்கும். ஏனெனில் அந்நிகழ்ச்சி இந்திய முஸ்லிம்களிடையே பிரிவினை இயக்கத்தைத் தூண்டிவிடும்.'[4]

'காலஞ் சென்ற அதாதுர்க் காலத்தில் அவருடைய தூண்டுதலாலும் காலஞ் சென்ற சையது ஜலில் அஹமது ஸின்யூஸியின் ஆதரவிலும் முஸ்லிம் உலகத்தை ஒன்று சேர்க்க வேண்டுமென்று ஒரு (ஸில்ஸிலாயி - ஜமியா - வாஹ்தத் - உமாம் - இஸ்லாம்) இயக்கம் தோற்றுவிக்கப்பட்டது. தங்களுக் கென்று முஸ்லிம் ராஜ்யங்கள் அமைக்க வேண்டுமென்று இந்திய முஸ்லிம்கள் ஆசைப்படுவதும் அவ்வியக்கத்தின் ஒருபகுதியே. ஏற்கெனவே யிருக்கின்ற முஸ்லிம் ராஜ்யங்களோடு முஸ்லிம்கள் பெருவாரியுள்ள பாகங்களில் முஸ்லிம் குடியரசுகளை ஏற்படுத்துவதும் அதன் நோக்கங்களில் ஒன்று. புதிதாக உத்தேசிக்கப்பட்டுள்ள பத்துக் குடியரசுகளுள் முஸ்லிம் வங்காளமும், முஸ்லிம் வடமேற்கிந்தியாவும் ஹைதராபாத் ராஜ்யமும், அடங்கியிருக்கும்.'[5]

இந்தப் பிரகடனங்களைக் கேட்ட பின்னர் முஸ்லிமல்லாதார் மனதில் என்ன எண்ணங்கள் எழக்கூடும்? இந்தியாவை முஸ்லிம்கள் மீண்டும் இஸ்லாமுக்காக ஜயித்து, சீன, ரஷ்ய முஸ்லிம்களையும் அந்தந்த நாட்டுத் தளைகளிலிருந்து விடுவித்து, இஸ்லாமியப் போக்கில் உலகப் புரட்சி செய்வதற் காகத்தான் இந்தியாவைத் துண்டுபோடும் பிரேரணை முதலில் விதை போடப் படுகிறது என்று அவர்கள் கருதினால் அவர்களை யாரும் குறைசொல்லமுடியாது.

4. Mr. M. R. T. in *India's Problem of her future Constitution* pp. 60-7.
5. Ansari : *Pakistan—The problem of India* p. 47.

இவ்வாறு கற்பனைக் காட்சிகளைக் கனவுகாணும் பேர்வழிகளின் பேராசை மெச்சத்தகுந்தது. ஆனால் இந்த ஆசைகளுக்குப் பின்னால் நின்று அவைகளுக்கு உருக்கொடுத்து நிற்பவை யாவை? இந்துக்கள், சீனர், ரஷ்யர் இவர்கள்மீது கொண்ட சந்தேகமும் அவநம்பிக்கையுந்தான். அவர்கள் முஸ்லிம்களை அடக்கி யொடுக்கு வதைத் தவிர வேறு வேலையற்றவர்களாகவும் கருதப்படுகிறார்கள். ஆனால் இதற்கு ஆதாரம் ஒன்றும் இல்லை.

இத்தகைய உயர்ந்த அபிலாஷைகளும், வீரமும், படைத்த முஸ்லிம் சிறுபான்மையை இந்துப் பெரும்பான்மை ஒடுக்கிவிடக்கூடும் என்ற பயத்தை, இந்தியாவையும் உலகத்தையும் இஸ்லாமுக்காக ஜயிக்கவேண்டும் என்ற அவர்களது நோக்கம் வெறும் பொய்யாக்கிவிடுகிறது என்பதையும் கவனிக்கலாம்.

(2) இந்தியாவில் புதிதாக இரண்டு ராஜ்யங்களை ஏற்படுத்துவதன் மூலம் எவ்வாறு இந்தியாவிலும் இந்தப் புதிய ராஜ்யங்களிலும் சிறுபான்மைப் பிரசினையைத் தீர்க்க முடியுமென்பது விளங்கவில்லை. ஒரேயினமான ஜனத்தொகையைக் கொண்ட நாடு, உலகிலெங்கணும் இல்லை. இயற்கையின் போக்கில் ஒவ்வொரு நாட்டிலும் சிறுபான்மைகள் இருந்துதான்தீரும். இந்தியா இதற்குவிலக்கல்ல. பிரிவினைக்கப்புறம் ஏற்படவிருக்கும் முஸ்லிம் மண்டலங்கள் முஸ்லிமல்லாத மண்டலங்களும் இதற்கு விலக்கல்ல. முஸ்லிம் மண்டலங்கள் முஸ்லிமல்லாத மண்டலங்களுக்கிடையே ஜனத்தொகையை மாற்றிக்கொள்வதன் மூலம் முஸ்லிம் சிறுபான்மையை இல்லாமல் செய்துவிடும் யோசனை, செலவு காரணமாகவும் மனித இயற்கையைக் கவனிக்குமிடத்தும் நடக்காத காரியமென விட்டுவிடப்பட்டது. முஸ்லிம் மண்டலங்களிலுள்ள சிறுபான்மையரின் அளவை ஏற்கெனவே பார்த்திருக்கிறோம். வடமேற்கு மண்டலத்தில் முஸ்லிமல்லாதவர்கள் நிறைந்த ஜில்லாக்களைத் தவிர்ப்பதையும் சேர்ப்பதையும் பொறுத்து, முஸ்லிமல்லாதவர்கள் 25 அல்லது 38 சதவிகித மிருப்பர். அதேபோல கிழக்குமண்டலத்தில் முஸ்லிமல்லாதார் நிறைந்துள்ள ஜில்லாக்களை, வங்காளம் அஸ்ஸாமிலிருந்து தவிர்ப்பதும் சேர்ப்பதும் பொறுத்து முஸ்லிமல்லாதார் 31 அல்லது 48 சதவிகித மிருப்பர். வடமேற்கு வடகிழக்கு மண்டலங்களை எடுத்துக்கொண்டால் பஞ்சாப், அஸ்ஸாம், வங்காளத்திலுள்ள முஸ்லிமல்லாத ஜில்லாக்களைத் தவிர்ப்பதும் சேர்ப்பதும் பொறுத்து முஸ்லிம் ஜனத்தொகை 71·56 அல்லது 55·23 சதவிகிதமிருக்கும். முஸ்லிமல்லாத மண்டலங்களிலிருந்து பஞ்சாப் அஸ்ஸாம் வங்காளம் முழுமையையும் விலக்கிவிட்டால் பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள முஸ்லிம்கள் அங்குள்ள ஜனத்தொகையில் 10·75 சதவிகித மிருப்பர். அந்தந்த மாகாணத் தைச்சேர்ந்த முஸ்லிமல்லாத ஜில்லாக்களை முஸ்லிம் மண்டலத்தை விட்டு விலக்கி முஸ்லிமல்லாத மண்டலங்களோடு சேர்த்தால் பிரிட்டிஷ் இந்திய முஸ்லிம்கள் 13·22 சதவிகித மிருப்பர்.

பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள மொத்த முஸ்லிம்கள் 793·95 லட்சம் பேர். அவர்களில் அஸ்ஸாம், வங்காளம், பஞ்சாப் மாகாணங்களைச் சேர்ந்த முஸ்லி மல்லாத ஜில்லாக்களை முஸ்லிம் மண்டலங்களில் சேர்த்துக்கொண்டால் 202·95 லட்சம் (அதாவது 25·56 சதவிகிதம்) முஸ்லிமல்லாத மண்டலத்தில் விட்டுவிடப் படுவர். அந்த ஜில்லாக்களை முஸ்லிம் மண்டலத்திலிருந்து விலக்கிவிட்டால் 299·94 லட்சம் அதாவது 37·77 சதவிகிதத்தினர் முஸ்லிமல்லாத மண்டலத்தில்

## அட்டவணை XLVIII

## முஸ்லிம் அல்லாத மாகாணங்களில் உள்ள முஸ்லிம்கள்

(a) பஞ்சாப், வங்கம், அஸ்ஸாம் ஆகிய மாகாணங்கள் முழுமையு முஸ்லிம் மண்டலத்தில் சேர்த்தால் கணக்குப் பின்வருமாறு

| மாகாணம் | மொத்த ஜனத் தொகை லக்ஷத்தில் | முஸ்லிம் கள் லக்ஷத்தில் | மொத்தத்தில் முஸ்லிம் சத விகிதம் |
|---|---|---|---|
| சென்னை | 493.42 | 38.96 | 7.90 |
| பம்பாய் | 208.50 | 19.20 | 9.21 |
| ஐ. மாகாணம் | 550.21 | 84.16 | 15.30 |
| பீஹார் | 363.40 | 47.16 | 12.98 |
| ம. மாகாணம் | 168.14 | 7.84 | 4.66 |
| ஒரிஸ்ஸா | 87.29 | 1.46 | 1.68 |
| ஆஜ்மீரும் மீர்வாரும் | 5.84 | 0.90 | 15.40 |
| அந்தமான் நிக்கோபார் தீவுகள் | 0.34 | 0.08 | 23.70 |
| கூர்க் | 1.69 | 0.14 | 8.78 |
| டில்லி | 9.18 | 3.05 | 33.22 |
| மொத்தம் | 1888.01 | 202.95 | 10.75 |

## அட்டவணை IXL

(b) பஞ்சாப், வங்கம், அஸ்ஸாம் இங்கெல்லாம் உள்ள முஸ்லிமல்லாத ஜில்லாக்கள் நீக்கிவிட்டுப் பார்த்தால்

| மாகாணம் | மொத்த ஜனத் தொகை | முஸ்லிம்கள் | சத விகிதம் |
|---|---|---|---|
| வங்கம் | 193.42 | 42.95 | 22.21 |
| அஸ்ஸாம் | 70.89 | 15.50 | 21.89 |
| பஞ்சாப் | 115.49 | 38.54 | 33.37 |
| மொத்தம் | 379.80 | 96.99 | 25.27 |
| இதர முஸ்லிமல்லாத மாகாணங்களில் | 1888.01 | 202.95 | 10.75 |
| ஆக மொத்தம் | 2267.81 | 299.94 | 13.22 |

## அட்டவணை L

## முஸ்லிம் மாகாணங்களில் உள்ள முஸ்லிம்கள்

| மாகாணம் | முஸ்லிமல்லாத ஜில்லாக்களை நீக்கி : | | | முஸ்லிமல்லாத ஜில்லாக்களை சேர்த்து : | | |
|---|---|---|---|---|---|---|
| | மொத்த ஜனத் தொகை | முஸ்லிம் கள் | சதவிகிதம் | மொத்த ஜனத் தொகை | முஸ்லிம் கள் | சதவிகிதம் |
| வங்கம் | 409.65 | 287.10 | 70.08 | 603.06 | 330.05 | 50.73 |
| அஸ்ஸாம் | 31.16 | 18.92 | 60.71 | 102.05 | 34.42 | 50.73 |
| பஞ்சாப் | 168.70 | 123.63 | 73.25 | 284.19 | 162.17 | 57.07 |
| வ.மே.எல்லைப்புறம் | 30.38 | 27.89 | 91.79 | 30.38 | 27.89 | 91.79 |
| சிந்து | 45.35 | 32.08 | 70.75 | 45.35 | 32.08 | 70.75 |
| பலுசிஸ்தானம் | 5.02 | 4.39 | 87.50 | 5.02 | 4.39 | 87.50 |
| மொத்தம் | 690.26 | 494.01 | 71.56 | 1070.05 | 591.00 | 55.23 |

விட்டுவிடப்படுவர். மாகாணத்துக்கு மாகாணம் அவர்களுடைய சதவிகிதம் வேறுபடும் : ஒரிஸ்ஸாவில் 1·68. ஐக்கிய மாகாணத்தில் 15·30. சின்ன மாகாணமாகிய டில்லியில் 33·22.

இதற்குமாருக வடமேற்கு மண்டலத்திலுள்ள முஸ்லிமல்லாதார் தொகை, முஸ்லிம் மண்டலங்களில் முஸ்லிமல்லாத ஜில்லாக்களைச் சேர்ப்பதும் தவிர்ப்பதும் பொறுத்து 138·40 லட்சம் அல்லது 61·46 லட்சமும். கிழக்கு மண்டலத்தில் 340·64 லட்சம் அல்லது 134·79 லட்சமும் இருக்கும். இந்த இரண்டு முஸ்லிம் மண்டலங்களையும் சேர்த்துக் கவனித்தால் அதில் முஸ்லிமல்லாத ஜில்லாக்களைச் சேர்ப்பதும் விலக்குவதும் பொறுத்து முஸ்லிமல்லாதார் 479·04 லட்சம் அல்லது 196·25 லட்சம் இருப்பார்கள். இவ்விதயாக முஸ்லிமல்லாத மண்டலத்திலும் முஸ்லிம் மண்டலங்களிலுமுள்ள சிறுபான்மைகள் முஸ்லிம் மண்டலத்தில் முஸ்மல்லாத ஜில்லாக்களைச் சேர்ப்பதும் விலக்குவதும் பொறுத்து மொத்தம் 681·99 அல்லது 496·19 லட்சம் இருக்கும். தொகையைப்பற்றிக் கவனிப்பதுண்டானல், இந்து முஸ்லிம் மண்டலங்களில் உள்ள சிறுபான்மைகள் பேரளவின. முஸ்லிம் சிறுபான்மைகளைக் காட்டிலும் முஸ்லிமல்லாத சிறுபான்மைகளே அதிகம். வடமேற்கில் அவர்கள் 25 அல்லது 38 சதவிகிதமும், கிழக்கு மண்டலத்தில் 31 அல்லது 48 சதவிகிதமும் இருக்கிருர்கள். முஸ்லிமல்லாத மண்டலத்தில் முஸ்லிம்கள் 13·22 அல்லது 10·75 விகிதமே இருக்கிருர்கள். இது முஸ்லிம் மண்டலங்களில் முஸ்லிமல்லாத ஜில்லாக்களைத் தவிர்ப்பதும் சேர்ப்பதும் பொறுத்து இவ்வாறிருக்கும்.

இவ்விதமாக முஸ்லிமல்லாத மண்டலம் அல்லது மண்ட.லங்களிலுள்ள முஸ்லிம் சிறுபான்மை, இமயமுதல் குமரிவரையும், வங்காளம் முதல் பஞ்சாப் வரையும் மிகப் பரந்த நிலப்பரப்பில் சிதறியிருக்கும், வலுவற்றிருக்கும். ஆனல் முஸ்லிமல்லாத சிறுபான்மைகளோ இரண்டு முஸ்லிம் மண்டலங்களிலும், நெருங்கிய இடத்தில் குவிந்திருக்கின்றன. தங்களுடைய உரிமைகளை நிலைநிறுத்தவும் சலுகைகளைக் கேட்கவும் வலுவுள்ளவைகளாக இருக்கும்.

மிகப் பெரிய அளவில் ஜனத்தொகையை மாற்றுவது என்றிருந்தால் தான் சிறுபான்மைகளை நீக்கமுடியும். ஜனத்தொகை மாற்றம் ஒன்று தாமாகச் செய்யவேண்டும் அல்லது வற்புறுத்தி நிகழவேண்டும். கோடிக்கணக்கான முஸ்லிம்களும் முஸ்லிமல்லாதாரும், முஸ்லிமல்லாத மண்டலத்திலிருந்தும் முஸ்லிம் மண்டலத்திலிருந்தும், தாமாக இடம் விட்டுப் பெயர்வார்கள் என்பது நினைக்கக் கூடிய காரியமல்ல ஜனத்தொகை மாற்றத்திற்காக பால்கன் நாடுகளில் ஜனங்கள் தாமாக இடம்விட்டுப் பெயர்ந்தகதை அதிக ஏமாற்றத்தை அளித்தது. காரணம், ஜனங்கள் தாமாகவே தங்களது பழம்பெரும் சூழ்நிலைகளிலிருந்து விட்டுப் போகமாட்டார்கள். அவ்வளவுதான். இந்திய இந்துவாயினும் சரி, முஸ்லிமாயினும் சரி, இன்னெரு ராஜ்யத்தின் பிரஜையாக மாறுவதற்காகத் தன் உறைவிடத்தைவிட்டு நகருவதைப்பற்றிக் கவனிக்கவே மாட்டான் என்று உறுதியாகக் கூறலாம். அவனுக்குத் தான் வாழுமிடத்தில் அவ்வளவு அதிகமான பற்று. கிலாபத் இயக்ககாலத்தில் முஸ்லிம்கள் நடத்திய ஹிஜ்ரத்து அனுபவமும், பெரிய அளவில் ஜனத்தொகைகள் இடம்விட்டுப் பெயருவதற்கு ஊக்கமளிப்பதாக இல்லை. ஜனங்கள் புதிதாகக் குடியேறப் போகும் பிரதேசம் நெடுந்தொலைவிலிருக்கும். அதுமட்டுமல்ல அங்குள்ள சூழ் நிலை, மொழிகள், தட்பவெப்ப நிலைகள், அங்குள்ளோரது பழக்க வழக்கங்கள், வாழ்க்கை முறைகள் எல்லாம் கவனிக்கும்போது இந்த

நடவடிக்கையில் அசடுதட்டிவிடும், அதுவன்றி இந்த நடவடிக்கையைக் கைவிட வேண்டியிருக்கும். மேலும் இவ்வளவு பெரும் ஜனத்தொகையை இடம்விட்டு இடம்கொண்டு செல்வது, பரம்பரையாக அவர்கள் வாழ்ந்துவந்த இடங்களி லிருந்து அவர்களைக் கிளப்பி முற்றிலும் புதிய இடத்தில் ஊன்றுவது, ஈடு செய்தாலும் ஏற்படக் கூடிய சொத்து நஷ்டம் ஆகிய காரியங்களனைத்தும் சம்பந்தப்பட்ட முஸ்லிம் அல்லது முஸ்லிமல்லாத மண்டலங்களுக்குத் தாங்க முடியாத செலவை உண்டாக்கும். இதனல் ஏற்படும் தொல்லை அதிகம். இது சம்பந்தமான நிதி நிர்வாகச் சங்கடங்களைக் கவனித்தால் இதை நிறைவேற்ற முடியாது என்பது தெரியவரும். வலுக்கட்டாயமாக ஜனங்களை இடம் மாற்றுவதால் இத்தனை கஷ்டங்களும் நூறுமடங்கு பெருகிவிடும். அதோடு போலீஸ் ராணுவ பந்தோபஸ்துகளுடன் ஜனங்களை இடம்மாற்ற வேண்டிய சங்கடமும் சேர்ந்துவிடும். இது சிந்திக்கவும் முடியாத காரியம். கிரீஸுக்கும் துருக்கிக்கும் இடையே சில லட்சம் ஜனங்கள் நாடுவிட்டு நாடு பெயர்ந்ததுபற்றிச் சிலர் பேசுகிருர்கள். இந்தியாவில் பிரயாணம் செய்ய வேண்டியதூரம் நெடுந்தூரம் ஏற்படும். செலவுகளோ ஏராளம். இச் செலவுகளை அந்தந்த ராஜ்யங்கள் ஏற்றுக்கொண்டாலும், இதனல் பாதிக்கப் பட்ட அவை பின்னர் நெடுங்காலத்துக்குத் தலைதூக்க முடியாதபடி திணற வேண்டியிருக்கும் கிரீஸ் துருக்கி உதாரணத்தைப் பேசுகிறவர்கள் இந்த விஷயங்களைமறந்துவிடுகிருர்கள்.

சிறுபான்மைகளைக் கலந்துகொண்டே அவர்களுடைய மத, கலாசார, பொருளாதார, அரசியல், நிர்வாக உரிமைகளையும் நலன்களையும் பாதுகாப்பதற் கென்று போதிய பாதுகாப்புகள் சட்டபூர்வமாக பலனளிக்கக்கூடிய முறை யில் அமைக்கப்பட வேண்டுமென்று லீக் தீர்மானம் கூறுகிறது.

சரி, இப்பொழுது முஸ்லிம் சுதந்திர ராஜ்யங்களும் முஸ்லிமல்லாத சுதந்திர ராஜ்யங்களும் இருக்குமென்ருல் அவைகளே தங்களுடைய அரசியலை வகுக்குமென்ருல், இத்தகைய சுதந்திர ராஜ்யங்கள் இத்தகைய பாதுகாப்பு களை அளிக்க எப்படிக் கட்டுப்பட்டவைகளாகும்? சுதந்திர ராஜ்யங்கள் தோன்றிய பிறகு அவைகள் தங்களுடைய அரசியலமைப்பில் இத்தகைய ஏற்பாடுகளைச் செய்ய மறுத்தால் அவைகளைக் கட்டாயப்படுத்துவது யார்? இத்தகைய பாதுகாப்புகளை ஆரம்பத்தில் ஏற்படுத்தி பின்ஞல் அவைகளைச் சிறுபான்மைகளுக்கு எதிராக மாற்றிஞல் அல்லது ரத்து செய்துவிட்டால் அப்பொழுது பாதுகாப்புகளை அமுலுக்குக்கொண்டு வருவதற்கென்ன செய்வது? அரசியலமைப்பில் பாதுகாப்பு விதிகளை ஏற்படுத்தி அமுலுக்குக் கொண்டுவராமலிருந்தால், அல்லது அமுலுக்கு வருவதைக் குறைத்துவிட்டால் ஒரு சுதந்திர ராஜ்யம் இன்னொரு சுதந்திர ராஜ்யத்தில் எவ்வாறு அவைகளை அமுலுக்குக் கொண்டுவர முடியும்? இந்த ராஜ்யங்கள் சுதந்திரமாக இருக்கு மென்றும் ஒன்றையொன்று அதிகாரம் செய்ய முடியாதென்றும் அவற்றின் அரசியலமைப்பிலுள்ள விதிகளை அமுல் செய்யும்படி கட்டாயப்படுத்தக் கூடிய மேலரசாங்கம் இருக்காதென்றும் கொள்ளப்படுகிறது. உத்தரவை நிறைவேற்றிவைக்கும் மேலதிகாரம் இல்லாததாலும், ராஜ்யங்கள் தங்க ளிஷ்டப்படி தம்நாட்டு விதிகளை மாற்றிவிடலா மாதலாலும், பாதுகாப்பு களுக்கு 'அதிகார பூர்வமான' 'சட்ட பூர்வமான' என்ற அடைமொழிகளைச் சேர்த்துவிடுவதால்மட்டும் நிலைமை சீர்பெருது.

உடன்படிக்கைகளில் கண்ட சிறுபான்மை ஷரத்துகளை நிறைவேற்றி

வைப்பதாக சர்வதேச சங்கம் உறுதிமொழி கூறியிருந்தது. அது தன் உறுதி மொழியை நிறைவேற்றிய அனுபவம் போய் இனிமேல் எந்த வெளி ஸ்தாபனம் எத்தகைய உத்தரவாதமளித்திருந்தாலும், ஆபத்துக் காலத்தில் அதையணுகி, தன்னுடைய உத்தரவாதத்தை நிறைவேற்றி வைக்குமாறு வேண்டிக்கொள்ள லாம் என்ற நம்பிக்கைக்கும் இடமில்லாமல் செய்துவிட்டது. பணயக் கைதி சித்தாந்தம் நடைமுறைக்கொவ்வாது. ஒரு தவறு இன்னொரு தவறைச் சரியாக்கி விடாது. மிகமிகப் பழைமையான காலத்தில் 'கண்ணைப் பிடுங்கினவன் கண்ணைப் பிடுங்கு, பல்லைப் பிடுங்கினவன் பல்லைப் பிடுங்கு' என்ற சட்டம் இருந்தது. அதில்கூட கண்ணை அல்லது பல்லைப் பிடுங்கினவனுடைய கண்ணை அல்லது பல்லைத்தான் பிடுங்க அவ்விதி இடமளித்தது. தவிர அவனை விட்டு விட்டு அவனுக்குப் பதிலாக வேறொரு அப்பாவியைப் பழிவாங்க அச்சட்டம் இடமளிக்கவில்லை. ஒருவன் செய்த பாவம் இன்னொருவனைச் சாருவது சரி யென்று அது கூறவில்லை. ஒரு கூட்டத்தார் இழைத்த தீங்குகளுக்காக, அத் தீயோர்களைப்பற்றிக் கொஞ்சமும் முன்பின் அறியாதவர்களை, அத்தீயோர் களுடைய செய்கைகளில் எவ்விதப் பங்கும் கொள்ளாதவர்களை, அத் தீயோர்கள் கடவுளை எவ்வாறு வணங்குகிறார்களோ அந்தமாதிரிதான் இவர் களும் வணங்குகிறார்கள் என்பதுதவிர வேறு எவ்விதத் தொடர்பும் இம்மியு மிராத வேறொரு கூட்டத்தினரைப் பலியிடவேண்டும் அல்லது ஒடுக்க வேண்டும் அல்லது கொடுமைப்படுத்தவேண்டும் என்பது எந்த மனிதக் கொள்கையை யொட்டியும் அறநெறியை யொட்டியும் நியாயமென்று யாரும் கூறமுடியாது. 'பணயக் கைதி முறை அமுலில் வராது. அமுலுக்கு வர ஆரம் பித்து விட்டதோ, அப்பொழுது, அரசியல், நாகரிக அடிப்படையை விட்டு காட்டுமிராண்டித்தனத்திற்கு இறங்கிவிட்டது'[6] என்பது புகழ்பெற்ற ஒரு முஸ்லிமின் வார்த்தைகள். பாகிஸ்தான் ஆதரவாளர்கள் என்ன வேண்டு மானாலும் கூறட்டும். முஸ்லிம் மேலோர் அல்லது முஸ்லிமல்லாத மேலோர் எப்போதாவது இந்தக் காட்டுமிராண்டித்தனத்திற்குச் சம்மதிப்பார்கள் என்று நான் நம்பவேமாட்டேன். நாடுகள் தனித்தனி சுதந்திரம் பெற்றவைகளாக இருந்தால் ஒருநாடு மற்றொரு நாட்டில் வாழும் தன்னினத்தவரை, அந்நாடு நன்றாக நடத்தும்படி வற்புறுத்துவது மிகவும் கஷ்டமான காரியம். அவ்விரு நாடுகளும் ஒரு சமஷ்டியைச் சேர்ந்திருப்பின் அவ்வளவு கஷ்டமிராது. இத்தகைய நெருக்கடி நிலைமையில் ஒவ்வொரு நாட்டுக்கும் உள்ள அமைதியான வழி ஒன்றே ஒன்றுதான். அது ராஜதந்திர தோரணையில் புகார் செய்வது. அந்த வழி தவறினால் அடுத்த வழி போர்தான். அது பொருளாதாரப் போராட்டமாக இருக்கலாம். அல்லது ஆயுதம் தாங்கிய போராக யிருக்கலாம். இரண்டு நாடுகளும் சண்டைபோடுவது தவிர வேறு வழியில்லை என்ற கட்டத்திற்கு வந்தாலொழிய, மிகக் கடுமையான புகார்களுக்கும் போர் தொடுப்பது எளிதல்ல. சில்லறைத் தொந்தரவுகளுக்காக நிச்சயம் போர் தொடுக்க முடியாது. எந்த ராஜ்யமும் கடுமையாகத் தாக்கப்பட்டாலொழிய யுத்தச் சங்கடங்களை மேற்கொள்ளாது. மேலும் யுத்தத்திலிறங்குவோமா வேண்டாமா என்று யோசிக்கும்போது வெகுதூரத்தில், நாட்டில் ஏதோ ஒரு மூலையிலுள்ள தன் மதத்தினரின் நலங்களைக் காட்டிலும் தன் ராஜ்யத்தி லுள்ளவர்களின் நலன்களைத்தான் அது அதிகமாகக் கவனிக்கும்படி நேரிடும்.

---

6. Sir Sultan Ahmad. *A treaty between India and the United Kingdom* : p. 84.

இதெல்லாம் வெறும் தர்க்கவாதமல்ல. இந்தியாவையடுத்து முஸ்லிம் ராஜ்யங்களிருக்கின்றன. இந்தியாவிலுள்ள முஸ்லிம்கள் சரியாக நடத்தப்படவில்லை யென்ற காரணத்திற்காக அவர்கள் இந்தியாவோடு போர் தொடுத்தார்கள் என்பது சரித்திரத்திலில்லை; பிரிட்டிஷாரின் நீண்டகால ஆட்சியில் அல்லது காங்கிரஸ் நிர்வாகம் பண்ணின குறுகிய காலமான 27 மாதங்களில் இந்திய முஸ்லிம்கள்மீது அட்டூழியங்கள் புரியப்பட்டதாகச் சொன்ன போதிலும் அந்த முஸ்லிம் ராஜ்யங்களின் ஆழ்ந்த அமைதியில் சிறு சலசலப்பு கூடத் தென்படவில்லை. காங்கிரஸ் மந்திரிகள் அக்கிரமம் செய்தார்கள் என்று கூறப்பட்டபொழுது பஞ்சாப் அல்லது வங்காளம் அல்லது சிந்துவிலிருந்த முஸ்லிம் லீக் மந்திரி சபைகள் அதை எதிர்த்துத் தங்கள் சுண்டுவிரலைக்கூட அசைக்கவில்லை. இரண்டு புதிய முஸ்லிம் ராஜ்யங்களை ஏற்படுத்துவதன் மூலம் முஸ்லிமல்லாத மண்டலத்திலுள்ள முஸ்லிம்களையும் முஸ்லிம் மண்டலத்திலுள்ள முஸ்லிமல்லாதாரையும் அந்தந்த ராஜ்யங்கள் நன்ருக நடத்தும்படி செய்துவிடலாம், அவ்வளவுக்கு நிலைமை மாறும் என்று நினைப்பது வெறும் பகற்கனவு. சிறுபான்மைகள் எந்த மதத்தைச் சேர்ந்திருந்தாலும் எப்பொழுதும், மனித இயற்கையின் அடிப்படைகளையும், எந்த நாட்டிற்கும் பொதுவாய் விளங்கி, நயமான நாகரிகமுள்ள மனிதர்களின் நடத்தையை உருவாக்கும் அறநெறியையும் மனித வழியையுமே, நம்பி வாழவேண்டியிருக்கும். முஸ்லிமல்லாதார், முஸ்லிம்களை யொடுக்கிக் கொடுமைப்படுத்தும் நோக்கம் தவிர வேறு உயர்ந்த நோக்கம் கொள்ள முடியாதவர்கள் என்றும் ஆனல் அதேசமயத்தில், முஸ்லிம்கள் மாத்திரம் முஸ்லிமல்லாதார்மீது அநியாயமோ அக்கிரமமோ புரிய முடியாதவர்கள் என்பதை முஸ்லிமல்லாதார் ஒப்புக்கொள்ள வேண்டுமென்றும் ஓயாமல் வற்புறுத்திக்கொண்டிருப்பதில் பயனில்லை. முஸ்லிம்கள் முஸ்லிமல்லாதாரை நம்பமுடியாது. ஆகவே ஒரு மத்திய அரசாங்கத்துக்கு, அது எவ்வளவு அதிகாரமில்லா திருந்தபோதிலும், அதனுடைய வேலைகள் எவ்வளவு குறைக்கப்பட்டிருந்தாலும் முஸ்லிம்கள் அதற்குக் கீழ்ப்படிய முடியாது; ஆனல் அதேசமயத்தில் முஸ்லிமல்லாதார் முஸ்லிம்களை நம்பவேண்டும், அவர்கள் ஒழுங்காக நடத்துவதாகக் கூறும் உறுதிமொழிகளை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றெல்லாம் வெளிப்படையாகக் கூறுவதில் அல்லது அப்படி வைத்துக்கொள்வதில் கள்ளமற்ற ஒரு வகைப் பேதைமைதான் காணப்படுகிறது. நம்பிக்கை நம்பிக்கை யூட்டுமென்ருல் அவநம்பிக்கையும் அவநம்பிக்கையைத்தான் ஊட்டும். நீ முஸ்லிமல்லாதார்மீது அவநம்பிக்கை கொண்டால் ஒவ்வொரு காரியத்திலும் அவர்களது நல்லெண்ணத்தின்மீது சந்தேகம்கொண்டால் அவர்களும் அதையே அவ்வாறு திருப்பிச் செய்யமாட்டார்கள் என்று கருத உனக்கு உரிமையில்லை. சுதந்திர ராஜ்யங்களை உண்டாக்குவதால் சிறுபான்மைப் பிரசினை தீராது. பிரசினை இன்னும் கடுமையாகிறது. முஸ்லிம் அல்லது முஸ்லிமல்லாத சிறுபான்மைகளை சுதந்தர ராஜ்யங்களில் பின்னும் அனதைகளாக்குகிறது. பின்னும் தம்மைத் தாமே காக்கும் சக்தியற்றவர்களாக்குகிறது. தங்களது உரிமைகளை யடைவதற்கு வெளியார் உதவியை நாடமுடியாத மோசமான நிலைமையில் தள்ளி விடுகிறது.

இந்தியாவின் வடமேற்கு வடகிழக்கு எல்லை பாதுகாப்பு பிரசினையையும் பாகிஸ்தான் தீர்க்காது. மலைவாசிகளும் வடமேற்கு எல்லைக்கு அப்பால் உள்ள மக்களும் முஸ்லிம்கள். ஆகவே எப்போது வடமேற்கில் ஒரு முஸ்லிம்

ராஜ்யம் ஏற்பட்டு விட்டதோ அப்போதே முஸ்லிம் அல்லாதார்மீது தொடுக்கும் மத, அரசியல், போர் ஆர்வம், மறைந்துவிடும் என்று சொல்லப்படுகிறது. இந்த நம்பிக்கை உண்மையாகாது. இதற்குச் சரித்திரத்தில் ஆதாரமில்லை. இந்தியாவில் முஸ்லிம் ராஜ்யம் ஏற்படப்போவது இது முதல் தடவையல்ல. குத்புதீன் ஐபக் டெல்லி சுல்தான் ஆன காலத்தில் இருந்து, சீக்கியர்கள் வடமேற்கு மூலையில் தங்களது ராஜ்யத்தை ஏற்படுத்தியது வரை இந்தியாவில் ஏதாவது ஒரு முஸ்லிம் ராஜ்யம் இருந்தே வந்து இருக்கிறது. 600 வருஷங்களான இந்த நீண்டகாலமாக அந்த மூலையிலிருந்து ஏற்பட்ட படையெடுப்புகள் எல்லாம், முஸ்லிம்கள், முஸ்லிம் அரசர்களை எதிர்த்து படையெடுத்ததன்றி இந்து அரசர்களை எதிர்த்து அல்ல. அக்காலத்தில் இந்து அரசர்கள் ஆளவில்லை. அல்லாவுதீன் கில்ஜி ஆண்ட ஆதி நாட்களிலிருந்தே டில்லி முஸ்லிம் சுல்தான்கள், அடிக்கடி நிகழ்ந்த வடமேற்கு படையெடுப்புத் தொல்லைகளை சமாளிக்கவேண்டி இருந்தது. அலாவுதீன் தன் ராஜ்யத்தின் எல்லை அரண்களில் சரியான படைகளை வைக்கவேண்டி யிருந்தது. இருந்தாலும் முஸ்லிம் கொள்ளைக்காரர்களும் படை எடுப்பாளர்களும் அடிக்கடி வந்துகொண்டிருந்தனர். முஸ்லிம் ஆட்சிகாலம் பூராவும் இவ்வாறே நடந்து வந்தது. படையெடுப்புகளில் பேர்வாங்கின சிலவற்றை மட்டும் இங்கு குறிப்பிடுகிறேன். தைமூர், பாபர், நாதிர்ஷா, ஆமதுஷா, அப்தாலி முதலியோர் அனைவரும் முஸ்லிம்கள். இந்திய முஸ்லிம் மன்னர்கள்மீதுதான் படை எடுத்தார்கள். ஆகவே வடமேற்கில் முஸ்லிம் ராஜ்யம் ஏற்பட்டவுடனே அதன் காரணமாக படையெடுப்புப் பயம் ஒழிந்து கவலை இல்லாமல் தூங்கிக் கொண்டு இருக்கலாம் என்று எண்ணுவதற்கில்லை. அதற்கு சரித்திரம் இடம் அளிக்கவில்லை. இந்நாட்களில் படையெடுப்பது எளிதல்ல ஆனால் அது வடமேற்கு எல்லையில் முஸ்லிம் ராஜ்யம் ஏற்படுவதனால் அல்ல, வேறு காரணங்களினால்.

இந்திய முஸ்லிம் அரசர்களை எதிர்த்து பிற முஸ்லிம்களும், பிற முஸ்லிம்களை எதிர்த்து இந்திய முஸ்லிம் அரசர்களும்தான் போராடினார்கள் என்பது இல்லை. அதிகாரம், மண்ணாசை இவைகளுக்காக முஸ்லிம்கள் தங்களுக்குள்ளேயே போராடி இருக்கிறார்கள். எப்போது ஜனங்கள் இஸ்லாமைத் தழுவி விட்டார்களோ அப்போதே ஜாதி, நாடு என்ற வேற்றுமைகள் மறைந்துவிட வேண்டுமென்று இஸ்லாம் போதித்தாலும், கிறிஸ்தவர்களுக்குள்ளும் சண்டை நடப்பதை கிறிஸ்தவ மதம் எவ்வாறு தடுக்க முடியவில்லையோ அதைப்போல, இஸ்லாமும் முஸ்லிம்களுக்குள் சண்டைகள் ஏற்படுவதை தடுக்க முடியவில்லை. இதற்காக உதாரணங்கள் தேடிப் பழங்காலச் சரித்திரத்திற்கு போகவேண்டாம். முதல் உலக யுத்தத்தில் துருக்கியரை எதிர்க்க அராபியர்கள் தயங்கவில்லை என்பதை நாம் அறிவோம். முஸ்லிம் களுடைய கலிபா, துருக்கி சுல்தான். அவருடைய அதிகாரத்தையும் அந்தஸ்தையும் நிலைநிறுத்த இந்துஸ்தானத்திலுள்ள முஸல்மான்கள் அரும் பாடுபடும்பொழுது அராபியர்கள் அவருக்கெதிராக கிளர்ச்சி செய்தார்கள். ராசாஷா பாகில்லாவி தற்கால பாரசீகத்தை உண்டாக்கியவர் என்று யாவராலும் கொண்டாடப்படுகிறவர். அராபிய அரசுகள் அவருக்கெதிராக சதியும் சூழ்ச்சியும் செய்தன. அந்நாட்டு முஸ்லிம்களே அச் சூழ்ச்சிகளுக்கு உடந்தையாகயிருந்து அவரை வெளியேற்றி விட்டதால், அவர் சிம்மாசனத்தை இழந்து அயல்நாட்டில் அந்தியகாலத்தை கழிக்கவேண்டிய

தாயிற்று. முதல் இரண்டு உலக மகாயுத்தங்களுக்கிடையே ஆப்கானிஸ்தானம் இரண்டு புரட்சிகளைப் பார்த்துவிட்டது. அமானுல்லாவை பாச்சா சாக்கா விரட்டினார். பாட்சா சாக்காவை நாதிர்ஷா விரட்டினார். இவர்கள் யாவரும் சந்தேகமில்லாமல் முஸ்லிம்களே. இன்றுகூட, துருக்கியர் பாரசீகர் ஆப்கானியர்களை ஒதுக்கிவிட்டு, அராபிய நாடுகளை ஒன்றுசேர்க்க முயற்சி நடந்துகொண்டு இருக்கிறது. இவ்விதமாக பலவேறு இனத்தையும் தேசத்தையும் சேர்ந்த முஸ்லிம்களை இஸ்லாம் ஒன்று சேர்த்துவிட முடியவில்லை. ஒரே நாட்டு முஸ்லிம்களையும் ஒன்றுசேர்த்து விடவில்லை. முஸ்லிம்கள் மட்டுமல்ல, எல்லா நாட்டு மக்களுமே சண்டையையும் ரத்தக்களரியையும் கைவிட்டு, கூடிவாழும் உணர்ச்சியும் அறிவும் பெறுவார்கள் என்று நம்புவோமாக. என்றாலும் முஸ்லிம் ராஜ்யங்கள் ஒன்றோடொன்று சண்டையிடாதவை என்று பசப்புவதில் பயனில்லை.

வடமேற்குப் படையெடுப்பைப் பற்றி இவ்வளவு கண்டோம். கிழக்கெல்லையைப்பற்றியவரை இந்த சாக்குப்போக்குக்கு இடமில்லை. இப்போது கிழக்கெல்லை, வடமேற்கெல்லையைவிட ஆபத்தில் குறைந்திருக்கவில்லை. கிழக்கில் முஸ்லிம் ராஜ்யத்தை ஏற்படுத்துவதால் முஸ்லிம் அல்லாத இந்தியா தனது இயற்கையான பாதுகாப்பு அரணை இழந்துவிடுகிறது. வடமேற்கு மண்டலத்திற்கு கிடைக்கக்கூடும் என்று சொல்லும் லாபமும் கிழக்கு முஸ்லிம் ராஜ்யத்திற்கு கிடையாது. இதுதான் கிழக்கு முஸ்லிம் மண்டலத்தினால் விளையும் பலன்.

அந்த வாதத்தை அப்படியே வைத்துக்கொண்டாலும், அது வடமேற்கு முஸ்லிம் மண்டலத்துக்குத்தான் பொருந்தும். பாதுகாப்பு பிரசினையை எளிதாக்குகிறது என்று சொல்லப்படும். அதே காரணம், முஸ்லிம் அல்லாத மண்டலத்தின் பாதுகாப்பை மிக கடினமாக்குகிறது. இந்திய முஸ்லிம் அல்லாத ராஜ்யத்தின்மீது அரசியல் மத, போர் ஆர்வம் கிளம்புகிறதென்று வைத்துக்கொள்வோம். இந்திய எல்லைகளுக்குள்ளே புதியதொரு முஸ்லிம் ராஜ்யத்தை உண்டாக்குவதனால் அந்த போர் ஆர்வம் பின்னும் தீவிரமாகும். இந்தியாவின் வடமேற்கு மலைகள் அளிக்கும் நல்ல, இயற்கை பாதுகாப்பை இழந்த முஸ்லிம் அல்லாத இந்தியா தன்னால் முடிந்தவரை தன்னைப் பாதுகாக்க வேண்டியதிருக்கும். இந்த வாதத்தில் பாகிஸ்தானுக்கு ஆதரவாக நியாயம் இருக்கிறது என்றால் முஸ்லிம் அல்லாதார் அஞ்சுவதிலும் நியாயம் இருக்கிறது. அதிலும் பாகிஸ்தான் ஏற்படுத்துவதன் கடைசி நோக்கம் என்னவென்று வெளிப்படுத்திய பிறகு, இந்தியாவின் இயற்கை அரணை அவர்கள் இழக்கும்படி செய்வதின் நோக்கம் அந்தரங்கத்தில் கொடியது என்று கண்டிப்பாக நினைப்பார்கள். எவ்விதத்திலும் அது பிரிவினைக்கு இணங்காதபடி செய்துவிடும்.

இருந்தாலும் 'பாதுகாப்பான சேனை பாதுகாப்பான எல்லையைக் காட்டிலும் மேலானது'[7] என்ற, டாக்டர் அம்பேத்காருடைய சித்தாந்தத்தை அனுசரித்தும் நிறையச் சொல்லலாம்.

பாதுகாப்பு விஷயத்தை புதிய நோக்கில் பார்க்கவேண்டி யிருக்கிறது. படைக் கருவிகளின் தன்மையும் அமைப்பும் சமீபகாலத்தில் அபிவிருத்தி அடைந்துவிட்டன. அதன் காரணமாக போர் முறையிலும் மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. இதையெல்லாம் மனதில் வைத்துக்கொண்டு பாதுகாப்பைப்

---

7. Dr. B. R. Ambedkar, *Thoughts on Pakistan* p. 95.

பற்றி தற்காலம் கவனிக்கவேண்டும். பழைய போர் முறையை கவனித்தாலும் கூட முஸ்லிம் இல்லாத இந்தியா நீண்ட கடற்கரையை பாதுகாக்கவேண்டி இருந்தாலும் வடமேற்கு, கிழக்குமண்டலங்களும் தங்களுடைய கடற்கரைகளை பாதுகாக்கவேண்டும். அப்படியானல் பாதுகாப்பதற்கு, முஸ்லிம், முஸ்லிம் அல்லாத மண்டலங்களின் செல்வநிலை எவ்வாறு இருக்கிறது என்ற கேள்வி எழுகிறது. வெளியிலிருந்து தம்மையாரும் தாக்காதவாறு இவை பாதுகாத்துக் கொள்வதோடு, இந்திய எல்லைகளுக்குள்ளேயே இருக்கும் இவை தம்முள்ளும் ஆக்கிரமிப்பு நிகழாதவாறு பாதுகாக்கவேண்டியதிருக்கும். பிரிவினை நிகழு மானுல் முஸ்லிம் ராஜ்யங்கள் முஸ்லிம் அல்லாத ராஜ்யங்களினுடைய வளங்கள் மிகவும் குறைய, பாதுகாப்புத் தேவைகள் பண்மடங்காகும் என்பதை விளக்க பெரிய கணக்குகள் தேவையில்லை. ஒவ்வொரு மண்டலத்தி லும் வாழும் மக்கள் தாங்கமுடியாத கஷ்டங்களை அனுபவித்தால் ஒழிய இவைகள் சரியானபடி பாதுகாப்புச் செய்வது இயலாத காரியம். முஸ்லிம் ராஜ்யங்கள், முஸ்லிம் அல்லாத ராஜ்யங்களுடைய நிதி நிலையையும் தொழில் நிலையையும் ஏற்கெனவே கண்டோம். பிரிவினையால் இவைகளின் செல்வநிலை, தொழில் ஆக்கம் முடங்கும். ஆனுல் முஸ்லிம் ராஜ்யங்களுடன் ஒப்பிட, முஸ்லிம் அல்லாத மண்டலம் நல்ல உறுதியான நிலையில் இருக்கும். முஸ்லிம் ராஜ்யங்கள் பாதுகாப்புக்குரிய நிதிவளமும் இதர பொருள்வளமும் இல்லாமல் கஷ்டப்படும். எப்படி இருந்தாலும் 'இந்தியாவில் பாதுகாப்புகள் சீர்குலையக் கூடாது. பலவகைப்பட்டனவாகப் போய்விடக் கூடாது. பலம் இழக்கும்விதத்தில் விரிவடையக் கூடாது. காப்பாற்ற முடியாத அளவில் செலவு ஏற்படும்படி இருக்கக்கூடாது. இவை இந்திய மக்களுக்கு உயிர் போன்ற முக்கியமான விஷயங்கள். சர்வதேச உலகில் இந்தியாவின் இடம் பூரணமாக உறுதி பெற்றிருக்கவேண்டும்.'[8]

பாதுகாப்பைப்பற்றி இன்னெரு விஷயம். பேராசிரியர் கூப்லண்டும் இதைக் குறிப்பிட்டிருக்கிருர். பாகிஸ்தான் ஆதரவாளர்கள் இதை நன்கு கவனிக்கவேண்டும். சுதந்திரமான முஸ்லிம் ராஜ்யங்களையும் முஸ்லிமல்லாத ராஜ்யங்களையும் ஏற்படுத்திவிட்டால் இவை யொவ்வொன்றும் தத்தம் தரைப் படை, கப்பற்படை, ஆகாயப்படைகளை சந்தேகமில்லாமல் வைத்துக்கொள்ள வேண்டும். இப்படைகள் அந்தந்த நாட்டினரைக் கொண்டே அமைக்கப்பட் டிருக்கும். இதனுல் படை வீரர்களின் இனவிகித அமைப்பில் பெரிய மாறுதல் ஏற்படும். 1856 ல் இந்தியச் சிப்பாய்க் கலகத்திற்குச் சற்று முன்பு இந்தியக் காலாட்படையைச் சேர்ந்தவர்களில் 90 சத விகிதத்தினர் வடகிழக்கு இந்தியா, ஐக்கிய மாகாணம், பீஹார் முதலியவற்றைச் சேர்ந்தவர்களென்றும் வடமேற்கு மண்டலத்தைச் சேர்ந்தவர்கள் 10 சத விகிதத்துக்கும் குறைந்தவர்களென்றும் டாக்டர் அம்பேத்கார் எடுத்துக்காட்டி யிருக்கிருர். 1858-ல் சிப்பாய்க் கலகத் திற்குப்பின் கொள்கை மாறுதல் காரணமாக நிலைமை முழுவதும் மாற்றப்பட்டு விட்டது. படையில் வடமேற்கு மண்டலத்தைச் சேர்ந்தவர்கள் 47 சத விகிதம் நேபாளம், கார்வால், குமான் பிரதேசத்தைச் சேர்ந்தவர்கள் 6 சத விகிதம், வடகிழக்கு இந்தியா, ஐக்கிய மாகாணம், பீஹாரைச் சேர்ந்தவர்கள் 47 சத விகிதம் இருந்தனர். போர் மறவர், போர் மறவரல்லாதவர் என்ற வேறுபாடு 1879-ல் முதன் முதலில் ஒரு கொள்கையாக முதன் முதலில் புகுத்தப்பட்டது. ராபர்ட்ஸ் பிரபு இதை நன்கு கவனிக்கவேண்டிய விஷயமாக

8. Sir Sultan Ahmed op. cit. p. 87.

வலியுறுத்தினர். கிச்னர் பிரபு இதையே இந்தியப்படைக்கு ஆள்சேர்க்கும் கொள்கையாக வைத்துக்கொண்டார். ஆனால் இந்தியச் சேனையில் வடமேற்கினர் பெருவாரியாக இருப்பதற்கும் இதற்கும் யாதொரு தொடர்புமில்லை. 1930க்குள்ளாக வடமேற்கு மண்டலத்தினரின் சத விகிதம் 58 5க்குக் கொண்டு வரப்பட்டது. நேபாளம், கார்வால், குமான், பகுதியைச் சேர்ந்தவர்கள் 22 சத விகிதமானார்கள். வடகிழக்கு, ஐக்கிய மாகாணம், பீஹார் வாசிகள் 11 சத விகிதமாகவும் தென்னிந்தியர் 5·5 சத விகிதமாகவும், பர்மியர் 3 சத விகிதமாகவும் குறைக்கப்பட்டனர்.'[9]

இந்தியப் படையில் வகுப்புவாரி அமைப்பு எவ்வளவுதூரம் மாறியிருக்கிறதென்பதை, டாக்டர் அம்பேத்காருடைய புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்ட கீழ்க்காணும் அட்டவணை ஐயத்துக்கிடமின்றி நன்கு விளக்கும்.

## அட்டவணை LI

இந்திய ராணுவத்தில் பிரதிநிதித்துவ மாற்றம்

| பிரதேசமும் வகுப்புகளும் | 1914-ல் சத விகிதம் | 1918-ல் சத விகிதம் | 1919-ல் சத விகிதம் | 1930-ல் சத விகிதம் |
|---|---|---|---|---|
| I பஞ்சாப், எல்லைப்புறம், காஷ்மீரம் | 47·0 | 46 5 | 46·0 | 58·5 |
| 1 சீக்கியர் | 19 2 | 17·4 | 15·4 | 13·58 |
| 2 பஞ்சாப் முஸ்லிம்கள் | 11·1 | 11·3 | 12 4 | 22·6 |
| 3 பட்டாணியர் | 6·2 | 5·42 | 4.54 | 6·35 |
| II நேப்பாளம், காமான், கார்வால் | 15·0 | 16·6 | 12·2 | 16·4 |
| கூர்க்கர் | 13 1 | 16·6 | 12·2 | 16·4 |
| III மத்திய இந்தியா | 22·0 | 22·7 | 25·5 | 11·0 |
| 1 ஐக்கிய மாகாண ரஜபுத்திரர்கள் | 6·4 | 6 8 | 7 7 | 2·55 |
| 2 ஹிந்துஸ்தானி பேசும் முஸ்லிம்கள் | 4·7 | 3·42 | 4·45 | 0 |
| 3 பிராமணர்கள் | 1·8 | 1·86 | 2 5 | 0 |
| IV தென்னிந்தியா | 16·0 | 11·9 | 12·0 | 5·5 |
| 1 மராட்டியர் | 4·9 | 3·85 | 3·7 | 5·33 |
| 2 சென்னை முஸ்லிம்கள் | 3·5 | 2·71 | 2·13 | 0 |
| 3 தமிழர்கள் | 2·5 | 2 0 | 1·67 | 0 |
| V பர்மியர் | 0 | வெகு சொற்பம் | 1·7 | 3·0 |

பஞ்சாபி முஸ்லிம்கள், பட்டாணியர் இவர்களுடைய தொகை அதிகரித்ததைப் புள்ளிகள் தெளிவுபடுத்துகின்றன. சீக்கியர்கள் முதல் இடத்திலிருந்து மூன்றுவது இடத்துக்கு குறைக்கப்பட்டுவிட்டார்கள். ராஜபுத்திரர்கள், நான்காவது இடத்துக்குத் தள்ளப்பட்டு விட்டார்கள். ஐக்கிய மாகாணப் பிராமணர்கள், தென்னிந்திய முஸலிம்கள், தமிழர்கள் முதலியோர் சேர்க்காமல் விடப்பட்டார்கள்.[10]

1930-ல் இந்திய சேனையில் காணும் வகுப்புவாரி அமைப்பை டாக்டர் அம்பேத்கார் ஆராய்ந்திருக்கிறுர். கூர்க்கர்களை எடுத்துவிட்டால் முஸ்லிம்

10. Ambedkar p. 75.

களின் தொகை இந்திய காலாட்படையில் 36 சத விகிதம். கூர்க்கர்களைச் சேர்த்தால் 30 சத விகிதம். இந்திய குதிரைப்படையில் அவர்கள் 30 சத விகிதம். டில்லி வட்டாரத்தி லிருந்துவந்த காலாட்படையினர் மிகச் சொற்பமான 1 சத விகிதத்தினர். காலாட்படையில் உள்ள மீதி யத்தனைபேரும் குதிரைப்படையில் 19 சத விகிதத்துக்கு மேற்பட்டிருந்தது பூராவும் பஞ்சாப், வடமேற்கு எல்லை மாகாணங்களிலிருந்து வந்தவர்களே.[11] அதற்குப் பிந்திய வருஷங்களைப்பற்றிய புள்ளி விவரத்தை அரசாங்கம் வெளியிடவில்லை. மத்திய சட்டசபை அங்கத்தினர்கள் பலமுறை கேள்வி கேட்டுப்பார்த்தனர். ஆகவே சரியான காரணத்தோடுதான், ஒரு பஞ்சாபி முஸ்லிம் என்ற முறையில் சர். சிக்கந்தர் ஹயத்கான், தனது இந்திய சமஷ்டித்திட்டத்தில், 1937 ஜனவரியிலிருந்த ராணுவ அமைப்பை மாற்றக்கூடாதென வற்புறுத்தி வந்திருக்கிருர். குறைப்பதுண்டானுல் வகுப்புவாரி விகிதத்தை மாற்றக்கூடாது. யுத்தம் போன்ற நெருக்கடியான சந்தர்ப்பங்களில் இதைத் தளர்த்திக்கொள்ளலாம் எனக் கூறியிருக்கிருர். முஸ்லிம்கள் தவிர 1930-ல் 13·58 சத விகிதத்தினராயிருந்த சீக்கியரும் பஞ்சாபியரே. பிரிவினை ஏற்படின் முஸ்லிமல்லாத மண்டலத்திலுள்ள சேனையிலிருந்து இந்தியப் படையைச் சேர்ந்த இப்பெரும் சத விகிதத்தினர் கலைக்கப்பட்டு விடுவார்கள். இது உடனடியான, தடுக்க முடியாத விளைவு. முடியுமானுல் முஸ்லிம் ராஜ்யம் இவர்களைத் தனது ராணுவத்தில் சேர்த்துக்கொள்ளலாம். போர்மறவர், போர்மறவரல்லாதவர் என்ற பிரிவு செயற்கைப் பிரிவு. சிப்பாய்க் கலகத்தின்போது ஆங்கிலேயரை ஆதரித்த பஞ்சாபுக்கு வெகுமதி போலவும், எதிர்த்த ஐக்கிய மாகாணம், பீஹார் வாசிகளுக்குத் தண்டனைபோலவும் இது கையாளப்பட்டதே யொழிய இதற்கு உண்மையான அல்லது சரித்திரக் காரணங்கள் கிடையா என்பதை நாம் கண்டோம். இந்தச் செயற்கை வேறுபாட்டை ஒழித்துவிட வேண்டுமென்று இந்தியாவின் எல்லா பாகத்திலிருந்தும் வற்புறுத்திவருவதால் எந்த தேசிய அரசாங்கமும் மேற்சொன்ன விகிதத்தை வைத்துக்கொண்டிருக்காது. பிரிவினை ஏற்படாவிட்டாலும் மாகாணவாரியாக நியாயமான விகிதத்தை அமைக்கவேண்டியிருக்கும். பிரிவினை ஏற்பட்டுத் தனித்தனி ராஜ்யங்கள் ஏற்பட்டாலொழிய இம்மாறுதல் திடீரென்று ஏற்பட்டுவிடாது. ராணுவத்தில் 1939-ல் மூன்றிலொன்றுக்கு மேலிருந்து இப்போது 30·8 இருக்கும் முஸ்லிம் விகிதம், 25 சத விகிதத்துக்கும் குறைந்தால் பஞ்சாபின் வாழ்க்கைத்தரம் பாதிக்கப்படும். பஞ்சாபித் துருப்புக்களுடைய சம்பளம் பென்ஷன் முதலியவைதான் அவ் வாழ்க்கைத் தரத்துக்கு முக்கிய காரணம்[12] என்று பேராசிரியர் கூப்லண்டு கூறியிருக்கிருர். பிரிவினை காரணமாக இந்துஸ்தானத்தின் சேனையில் வேலை கிடைப்பது முழுவதும் நின்றுவிட்டால் நிலைமை எவ்வளவு மோசமாகிவிடும் என்பதை நன்கு யூகித்துக்கொள்ளலாம்.

இப்போது இந்திய சேனையிலிருப்பவர்கள் பிரிக்கப்பட்ட முஸ்லிம் ராஜ்ய சேனையி லமர்த்தப்படுவார்கள் என்று கொள்ளலாம். இது நடக்கக் கூடாததல்ல. இருந்தாலும் கலைக்கப்பட்ட அத்தனைபேரையும் எடுத்துக் கொள்வதனுல்·சின்ன முஸ்லிம் ராஜ்யம் பெரிய சேனையை நிர்வகிக்கவேண்டியிருக்கும். அப்படியே யாவருக்கும் வேலை கொடுத்துவிட்டாலும் அதற்குரிய

11. Ambedkar op. cit., p. 76.
12. Coupland op. cit. p. 77.

செலவைத் தன்னாட்டு மக்களிடமிருந்தே வசூல் செய்யவேண்டி யிருக்கும், இந்தியாவின் மற்ற பாகங்கள் இதற்கொன்றும் தராது. முஸ்லிம் மண்டலத்துக்கு நஷ்டமாகிற காரியம் முஸ்லிமல்லாத மண்டலத்துக்கு லாபமாகிவிடும். தன் ராணுவத்துக்குச்குச் செய்யும் செலவு, அது என்னவாக இருந்தாலும், முஸ்லிமல்லாத மண்டலம், தன் மக்களளித்த பணத்தை அவர்களிடமே செலவழித்ததாகு மல்லவா?

(5) பிரிவினையால் மாத்திரம்தான் முஸ்லிம்கள் பொருளாதார சுயநிர்ணய பலத்தைப் பெறமுடியுமென்று சொல்லப்படுகிறது. இந்தப் பொருளாதாரப் பிரசினையை இருவகையில் காணலாம். ஒன்று உத்தியோகத்தினால் கிடைக்கும் லாபம். முஸ்லிம் மண்டலங்களை சுதந்திர ராஜ்யங்களாக மாற்றினால், இந்த வகையில் அங்குள்ள முஸ்லிம்களுடைய நிலைமையொன்றும் திருந்திவிடப் போவதில்லை. அரசாங்க உத்தியோகம் யார் யாருக்கு எவ்வளவு விகிதமென்று ஏற்கெனவே தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. எந்த வகையிலாவது அது ஒழுங்காக இல்லை, சரியில்லை யென்றால் அதை மாற்றிக்கொள்ளலாம். அரசாங்க உத்தியோகத்திலிருந்து முஸ்லிமல்லாதாரை விலக்கிவிடவேண்டும் அல்லது தாழ்ந்த நிலைமைக்குக் கொண்டு வந்துவிடவேண்டுமென்று கருதினாலொழிய எவ்வாறு அந்த விகிதத்தை மாற்றமுடியுமென்பது தெரியவில்லை. அரசாங்க உத்தியோகம் அளிக்கின்ற காரியத்தில் முஸ்லிம் ராஜ்யமும் முஸ்லிமல்லாத ராஜ்யமும் சர்வதேசிய சங்கடங்கள் ஏற்படாமல் பரஸ்பர நடவடிக்கை வைத்துக்கொள்ளலாம். முஸ்லிம் ராஜ்யங்களிலுள்ள முஸ்லிமல்லாதார் தொகை யதிகமா யிருப்பதால், முஸ்லிமல்லாத ராஜ்யங்களிலுள்ள முஸ்லிம்களைக் காட்டிலும், அவர்களது நிலைமை எப்பொழுதும் வலுவாக இருக்கும். முஸ்லிமல்லாத ராஜ்யங்களிலுள்ள முஸ்லிம்கள் 1 லிருந்து 13 சதவிகிதமிருந்து கொண்டு, முஸ்லிம் ராஜ்யங்களிலுள்ள் முஸ்லிமல்லாதார் உத்தியோகங்களில் கோருகிற விகிதமும் சலுகையும் கேட்பது கடினம். ஏனெனில் முஸ்லிம் ராஜ்யங்களிலுள்ள முஸ்லிமல்லாதார் தொகை 25 லிருந்து 48 சதவிகித மிருக்கிறது ஆகவே பரஸ்பர நடவடிக்கை நியாயம் என்ற அடிப்படையில் பார்த்தாலும் முஸ்லிமல்லாத ராஜ்யத்தில் உத்தியோகம் பார்க்கும் முஸ்லிம்கள் தொகை குறைந்துவிடும் ஆனால் அதே அளவில் முஸ்லிம் ராஜ்யத்தில் முஸ்லிமல்லாத உத்தியோகஸ்தர்களுடைய தொகை குறைந்துவிடாது. அதிகப்படி ஸ்தானங்களிருப்பது பற்றிய ஏதாவது ஒப்பந்தம், பிரிவினை காலத்தில் மாறுதல் அடையும். ஏனெனில் ஒப்பந்தம் ஏற்படும் போது பிரிவினையைப்பற்றி சிந்தனை தோன்றியிருக்காது. மேலும் பிரிவினைக்குப் பின் ஒரு ராஜ்யம் தன்னினத்தவருக்கு எத்தனை உத்தியோகங்களளித்ததோ அத்தனை உத்தியோகங்களை அவர்களுக்கு முழுக்க முழுக்கப் பிரிந்த பிறகும் அளிக்கமுடியாது. அளிக்க வேண்டுமென்பதும் இல்லை. இவ்விதமாக இந்துஸ்தானத்திலுள்ள முஸ்லிம்கள் உத்தியோக விஷயத்தில் நஷ்டமடைவார்கள். அதற்கேற்ற லாபம் முஸ்லிம் ராஜ்யங்களிலுள்ள முஸ்லிம்களுக்குக் கிடையாது. இந்துஸ்தானத்திலுள்ள முஸ்லிம்களுக்கு உத்தியோக நஷ்டம் ஏற்பட்ட போதிலும் முஸ்லிம் ராஜ்யங்களிலுள்ள முஸ்லிம்களுக்கு அதிக உத்தியோகங்கள் கிடைக்கும் என்பதனால் இந்துஸ்தான முஸ்லிம் ஆறுதலோ பொருளாதாரச் சாதகமோ அடையக் கூடுமென்று வேண்டுமென்றால் வைத்துக் கொள்ளலாம்.

இரண்டாவது அம்சம் தொழில் விரிவால் பொருளாதார அபிவிருத்தியை அடைவது. தற்சமயம் முஸ்லிமல்லாதார் இந்தியாவில் தொழிலாக்கத்தின் மேன்மை யடைந்திருப்பதற்குக் காரணம் அவர்கள் அடைந்திருந்த அரசியல் சாதகம் என்று சொல்ல முடியாது. நாட்டில் ஏதாவது அரசியல் அதிகாரம் இருக்குமானல் அல்லது இருந்திருக்குமானல் அது இந்துக்கள் வசமுமில்லை முஸ்லிம்கள் வசமுமில்லை. பிரிட்டிஷார் வசமே யிருந்தது. இந்துக்கள் முஸ்லிம்களைக் காட்டிலும் மேன்மை பெற்றிருந்தால் அது அவர்களது அரசியல் அதிகாரத்தாலல்ல. அவர்களுடைய முயற்சியினல். ஜனத்தொகை விகிதம் காரணமாகக் கிடைத்த அரசியலாதிக்கம்தான் பொருளாதார மேம்பாட்டுக்குக் காரணமென்றல் இந்திய ஜனத்தொகையில் மிகமிகச் சொற்பமான பார்ஸிகள் முன்னேறுவதற்கு இடமேது? இந்துக்களைக் காட்டிலும் உயர்ந்த நிலைமைக்கு வராவிட்டாலும் பார்ஸிகள் யாருக்கும் தாழ்ந்த நிலைமையை எய்தி விடவில்லை. அவர்களுடைய சிறப்பைக்கண்டு யாரும் பொருமைப்படவில்லை. இந்தியாவில் பார்ஸியல்லாத பெரும் ஜனத்திரளால் நசுக்கப்படுவதாக பார்ஸிகள் எப்பொழுதேனும் குறைகூறியதும் கிடையாது. இந்துக்கள் சிறந்த நிலைமையிலிருக்கிறர்கள் என்று சொல்வது ஒரு வாதமல்ல. முஸ்லிம் ராஜ்யம் தனது அரசியலதிகாரத்தை தன் நாட்டவரிடையே நியாயமாகவும் ஒழுங்காகவும் உபயோகிக்காமல் வகுப்புவாதத்தோடு உபயோகித்தால் மாத்திரம் இந்துக்களை அவர்களுடைய உன்னத நிலையைக் குறைத்துத் தாழ்த்தலாம். வேறுவார்த்தைகளில் கூறினல் முஸ்லிம் ராஜ்யம் அவர்களுக்கெதிராக வேண்டுமென்றே காரியங்கள் செய்தாலொழிய இந்துக்கள் தங்களது நிலைமையை இழக்க மாட்டார்கள். அதுதான் அவர்களது உண்மை நோக்கமானல் நிகழவிருக்கும் காரியங்கள் என்னவென்பதை பிரிவினைக் கோரிக்கைகள் ஒருவாறு முன்னறிவிக்கின்றன என்பதை ஒப்புக்கொண்டால் அவர்கள் கருத்து இது தவிர வேறென்றுக இராது. முஸ்லிமல்லாதார் அந்நிலைமையை ஏற்றுக்கொள்வார்கள் என்று எதிர்பார்க்கவேண்டாம். அரசியலதிகாரத்தை இந்துக்கள் கைவசப் படுத்திக்கொண்டு முஸ்லிம்களுக்கு விரோதமாகவும் தங்களுக்குச் சாதகமாகவும் அந்த அதிகாரத்தை உபயோகப்படுத்தினல் அப்பொழுது நிலைமை வேருகத்தானிருக்கும். ஆனல் ஏற்கெனவே சொல்லியிருந்தபடி மத்திய அரசாங்கத்தில் அவர்கள் அதிகாரம் வகித்தது கிடையாது. மாகாணங்களில் காங்கிரஸ் எந்த அதிகாரத்தை குறுகிய காலமான 27 மாதங்கள் அனுபவித்ததோ அதையேதான் தங்குதடையின்றியும் பிரிட்டிஷாரின் நல்லெண்ணத்தின்பேரிலும் பாகிஸ்தான் மாகாணங்கள் 8 வருஷங்களாக அனுபவித்து வருகின்றன. பஞ்சாப்பைச் சேர்ந்த சில பஞ்சாபிகளும் சீக்கியர்களும் தங்களது திறமையினலும் முயற்சியினலும் பஞ்சாபுக்கு வெளியிலும் தங்களுடைய கைத்தொழில் ஸ்தாபனங்களை ஏற்படுத்தி யிருக்கிறர்கள் என்பதும் ஞாபகம் வைக்கத் தகுந்தது. முஸ்லிம்களில் மோமின்கள், கோஜாக்கள், இருப்பது போல ராஜபுதனம், கத்தியவார், குஜராத், செட்டிநாடு ஆகியவற்றைச் சேர்ந்த இந்துக்கள் மிகப் பெரிய வியாபாரிகளாகவும் தொழிலுற்பத்தியாளர்களாகவும் இருக்கிறர்கள். அரசியலாதிக்கத்தா லவர்கள் இந்த நிலைமையை யடையவில்லை. பிறத்தியாரையெல்லாம் நசுக்கக் கருதினலொழிய இதர முஸ்லிம்களும் தங்களை உயர்த்திக்கொள்ள முடியாது. இவ்வாறு செய்வது முஸ்லிம் சுதந்திர ராஜ்யங்களிலுள்ள முஸ்லிமல்லாதாருக்கு எவ்வாறு நியாயம் புரிந்ததாகும்?

## III. பிரிவினைக்கு எதிர்வாதங்கள்

இவ்விதமாகப் பிரிவினைக்குச் சொல்லப்படும் காரணங்கள் உருப்படாதவை. அல்லது பிரிவினைக்கு நியாயத்தையும் ஒழுங்கையும் அடிப்படையாக கொண்டவை என்று ஏற்றுக்கொள்ளத் தகுந்தவை யல்ல. இதற்கு மாருக பிரிவினைக்கு விரோதமாகச் சரியான காரணங்கள் இருக்கின்றன.

அவற்றுள் சிலவற்றைச் சுருக்கமாக இங்கு கூறுவோம்:

(1) சிறிய நாடுகள் சுதந்தர நாடுகளாக இருக்கமுடியும் என்ற காலம், இன்னும் மலையேறவில்லை என்ருலும் அவைகளின் முடிவுகாலம் நெருங்கி விட்டது. எந்தச் சின்னராஜ்யமும் தனது சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியாதென்பதை சமீபகால அனுபவம் காட்டிவிட்டது. பெரிய ராஜ்யங்களும் கூட, தங்களது சுதந்திரத்தைக் காப்பாற்ற திணறிக்கொண்டிருக்கின்றன. பல ராஜ்யங்கள் ஒன்றுசேர வேண்டுமென்பது தற்காலத்தில் எழுந்த இயற்கையான போக்கு. பெரிய ராஜ்யங்களுக்கும் மேலாக மிகப் பெரிய ராஜ்யமொன்றை ஏற்படுத்துவது தற்கால அரசியலுக்கப்பாற்பட்டதல்ல. ஆகவே இந்தியாவின் அளவையும் பலத்தையும் சிதைத்து அதனிடத்தில் பற்பல சின்னச்சின்ன ராஜ்யங்களை ஏற்படுத்துவது உலகச் சத்ருகளுக்கு எதிர்பாய்வது போலாகும். ஒருக்கால் இந்தியாவில் தோன்றிய பிரிவினை உணர்ச்சி முஸ்லிம் ராஜ்ய மண்டலங்களைப் பிரிப்பதோடு நின்றுவிடாமல், சுதேச சமஸ்தானம் ஒருபுறமிருக்க, முஸ்லிம் ராஜ்யங்களையும் முஸ்லிமல்லாத ராஜ்யங்களையும் ஏராளமாகப் பிரித்துவிடலாம். இவ்விதமாக ஏராளமான சின்ன ராஜ்யங்களான பிறகு இந்தியா சுதந்திரமடைந்து விட்டால் அன்னிய அரசுகளின் சூழ்ச்சிகளால் ஒற்றுமையிழந்து தமக்குள்ளே சண்டையிட்டுக் கொள்ளும் நாடாகிவிடும். அவைகள் எல்லாம் பலமற்று அன்னிய ஆக்கிரமிப்பிலிருந்து தம்மைக் காப்பாற்றிக்கொள்ள முடியாதவையாக இருக்கும். ஒன்றுக்கொன்று சண்டையிட்டுக் கொள்ளும்படியாகவும் எளிதில் வைத்து விடலாம்.

(2) பரஸ்பர உதவியும் ஒருமித்த செயலும் இருக்குமானல் நாட்டின் வளங்களை யாவருடைய நன்மையின்பொருட்டும் மிக நன்ருக உபயோகப் படுத்தலாம். சுதந்திர ராஜ்யங்களேற்பட்டு விட்டால் பரஸ்பர உதவியும் ஒருமித்த செயலும் ஏற்படுவது கடினம். இரண்டு ராஜ்யங்கள் சுதந்திர முள்ளவை யென்ற உண்மையே அவைகளுக்கிடையே பரஸ்பர உதவிக்கும் ஒருமித்த செயலுக்கும் பெருந் தடையாக இருக்கின்றன. சின்ன ராஜ்யங்கள் விஷயத்தில் பெரிய திட்டங்கள் போடுவதென்பது முடியாது. அவைகளெல்லாம் இயற்கையால் ஒரேமாதிரி நன்ருக வளப்படுத்தப்பட்டவையாக இரா. தற்கால ராஜ்யங்களைக் காப்பாற்றுவதற்கு மிக அவசியமான ஏதாவதொரு பொருளுக்கு இவை அயல்நாட்டை நம்பவேண்டி இருக்கும். பரப்பு அதிகமாக இருந்தால், வேறுபாடு நிறைந்திருந்தால், விவசாயம், உலோகம், மின்சாரசக்தி இவை சம்பந்தமான இயற்கைவளங்கள் பரவிக்கிடந்தால் திட்டப்படுத்திய பொருளாதாரம் வெற்றிபெற வழியுண்டு. பிரிவினையால் இந்தியா இந்த சாதகத்தை இழந்துவிடும். இந்தவகையில் நாம் ஏற்கெனவே கண்டபடி வடமேற்கு, கிழக்கு ராஜ்யங்களே மிக வருந்த நேரிடும். முஸ்லிம் ராஜ்யங்கள் நிர்வாகத்தை நடத்துவதற்கும் தேசப் பாதுகாப்புக்கும் எவ்வாறு வேண்டிய வளங்களற்றிருக்கின்றன என்பதைக் கண்டோம்.

(3) தேச வளர்ப்புத்துறைகளை மேற்கொள்ளுவதே இன்றைய இந்தியாவின் அவசரத் தேவை. பிரிட்டிஷ் அரசாங்கம் தன்னையொரு போலிஸ் அரசாங்கமாகவே இதுவரை கருதி பரசாண்டு வந்திருக்கிறது. தேசத்திற்கு ஆக்கம்தரும் துறைகளை அறவே புறக்கணித்து வாடி வருந்தச் செய்து விட்டது. கடந்த காலத்தில் இந்தியா பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் அனுபவித்த இன்னல்கள் கொஞ்ச நஞ்சமல்ல. இந்தியா முழுவதும் மிகமிகத் தாழ்ந்த நிலைமையிலிருந்து தலைதூக்குவதற்கு எவ்வளவோ காரியங்களைச் செய்யவேண்டி யிருக்கிறது. முஸ்லிம் ராஜ்யங்கள் இதற்கு விலக்கல்ல. நாட்டைப் பிரிவினை செய்தால் வளங்கள், குறைவது நிச்சயம். முஸ்லிம் மண்டலங்களும் முஸ்லிமல்லாத மண்டலங்களும் நாளுக்குநாள் பெருகிவரும் தேவைகளுக்குப் ஈடு செய்ய முடியாது.

(4) தற்காலத்தில் முஸ்லிம் நாடுகளில்கூட அரசியலையும் பொருளாதாரத்தையும் மத அடிப்படையில் கவனிக்கும் போக்கு வரவர மாறுகிறது. வேறு அடிப்படைகளில் வைத்து அரசியலைக் கவனிக்கிறார்கள். முஸ்லிம் லீகும் அதன் பிரசாரகர்களும் என்ன கூறினாலும், ஐரோப்பிய கிறிஸ்தவ நாடுகளைப்போன்று, உலகத்திலுள்ள கிறிஸ்தவ நாடுகளைப் போன்று, உலகியலில்—முழுதும் அப்படி யாகாவிட்டாலும்—திரும்பிக்கொண்டிருக்கின்றன. இந்திய முஸல்மான்கள் உலக நிகழ்ச்சி யலைகளைத் திருப்பி வேறு அடிப்படையின்மீது இந்தியாவில் ஒரு ராஜ்யத்தை ஏற்படுத்திக் காப்பாற்றப் போகிறார்களா என்பதுதான் கேள்வி.

(5) பிரிவினைப் பிரேரணையை எல்லா முஸ்லிமல்லாதாரும் பல முஸ்லிம்களும் பலமாக எதிர்த்திருக்கிறார்கள் என்பதை யாவரும் அறிந்ததே பெரும்பான்மையான முஸ்லிம்களுக்குப் பிரதிநிதியாக யிருப்பது. முஸ்லிம் லீகா அல்லது ஜமியத்-உல்-உலேமா, ஜமியத்-உல்-மோமினின், அஹ்ரார், தேசீய முஸ்லிம் சபை, அகில இந்திய ஷியா மாநாடு போன்றவையா என்பதைச் சொல்லுவது என்னுடைய வேலையில்லை. பின்கூறிய ஸ்தாபனங்கள் யாவும் பிரிவினையை எதிர்த்திருக்கின்றன என்பது உண்மை. முஸ்லிம்களைப் பொறுத்தவரை எப்படி யிருந்தாலும் இந்துக்களும் சீக்கியர்களும் பிரிவினையை எதிர்ப்பதென்று கங்கணம் கட்டிவிட்டார்கள். பிரிவினையைப் பிடிவாதமாக வற்புறுத்த வற்புறுத்த இவர்களது எதிர்ப்பும் மிகத் தீவிரமாகவும் கடுமையாகவும் வளருவது நிச்சயம். இந்தச் சச்சரவு எந்த தினுசில் வெளிப்படுமென்று சொல்வது கடினம். ஒரு விஷயம் மாத்திரம் நிச்சயம். அதில் நெருங்கிய சம்பந்தப்பட்டவர்களுடைய சம்மதத்தையும் நல்லெண்ணத்தையும் பெறாமல் இது வெற்றிஅடையமுடியாது. பிரேரணை வெற்றியடைந்தாலும், பிரிவினை ஏற்பட்டு விட்டாலும் இரண்டு பக்கங்களிலும் பகைமை நிலைப்பது நிச்சயம். இந்தப் பிரிவினையின் அடிப்படையான அவநம்பிக்கை நாளுக்குநாள் வளருவது நிச்சயம். பிரிவினை ஏற்பட்ட பிறகு எல்லாம் சரியாய்ப் போய்விடுமென்றும் சுதந்திர ராஜ்யங்கள் சீக்கிரம் சிநேகமாகும் என்று எண்ணுவதும் மனப்பால் குடிப்பதாகும். அனேகமாய் இவைகளுக்கிடையே தோன்றிய மனக்கசப்பும் அவநம்பிக்கையும் பரஸ்பர உதவி யேற்படுவதைத் தடுத்துவிடும். தங்களைப் பாதுகாத்துக்கொள்வதற்காக இரு சாராரும் படைகளைத் தயாராக வைத்துக் கொண்டிருக்கவேண்டி யிருக்கும். வேறு மோசம் ஒன்றும் நிகழாவிட்டாலும் பொருளாதாரப் போராட்டமாவது நிகழக்கூடும்.

(6) இந்த விஷயங்களை யெல்லாம் சுதந்திர ராஜ்யங்களிலுள்ள சிறு பான்மைகளின் நிலைமையைப் படுமோசமாக்கிவிடும். முஸ்லிம் மண்டலத்திலும் முஸ்லிமல்லாத மண்டலத்திலும் உள்ள பெரும்பான்மைகளின் இச்சச்சரவு காரணமாக அவைகள்பால் பிறர் காட்டும் பரிவையும் நல்லெண்ணத்தையும் போக்கிவிடும். இன்றைய நிலைமையிலும் மோசமான நிலைமையை அவைகள் எய்தும். சிறுபான்மைகளுக்கோ தலைவலிபோய் திருகுவலி வந்தது போலத் தான். இந்த பிரேரணை வெற்றிபெற்றால் முஸ்லிமல்லாத சிறுபான்மைகள் மீது அவர்களுக்குப் பிடிக்காத நிலைமையே திணிக்கப்படும். ஆனால் முஸ்லிம் சிறுபான்மை தானே வலியப்போய் பாகிஸ்தான் ஏற்பட பாடுபடுகிறது, அதற்காக உழைத்திருக்கிறது ; முஸ்லிமல்லாதவர்களிடமிருந்து அதைப் பறித் தது; ஆகவே அதற்காக அது வேறு யாரையும் குறை கூறமுடியாது.

மேலும் ஏற்கெனவே வேறோரிடத்தில் நாம் விளக்கிக் கூறியபடி முஸ்லிமல்லாத மண்டலத்திலுள்ள முஸ்லிம்களைக் காட்டிலும். முஸ்லிம் மண்டலத்திலுள்ள முஸ்லிமல்லாதார் தங்களுடைய தொகை காரண மாகவும், திரண்டு ஓரிடத்தில் வாழ்வதாலும் தங்களை நன்கு பாது காத்துக்கொள்ள முடியும். முஸ்லிமல்லாத மண்டலத்திலுள்ள முஸ்லிம் சிறுபான்மை சின்னத் தொகையினராகப் பரவிக் கிடக்கிறார்கள். சலுகை களிலும் சாதகங்களிலும் பரஸ்பர நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளும் ஏற்பாடுகளும் அநேகமாய் இரா. ஏனெனில் முஸ்லிம் ராஜ்யங்கள், முஸ்லி மல்லாத ராஜ்யங்கள் செய்கிற அளவுக்குப் பதில் செய்யமுடியாது. முஸ்லி மல்லாத ராஜ்யம் பரஸ்பர நடவடிக்கை எடுக்கும்படி போதுமான தூண்டுதல் பெற்றிருக்காது.

# 35. கிரிப்ஸ் திட்டம்

1940 மார்ச்சில் லாகூர் கூட்டத்தில் முஸ்லிம் லீக், பாகிஸ்தான் தீர்மானத்தை நிறைவேற்றிய பிறகு, இந்திய முஸ்லிம்களுடைய நியாயமான கோரிக்கைகளைப் பூர்த்திசெய்யும் நோக்கத்துடன் பல திட்டங்கள் கொண்டு வரப்பட்டுள்ளன. இவைகளை, பாகிஸ்தானுக்கு மாற்றுத் திட்டங்களாகக் கொள்ளலாம்.

இவற்றுள் முதன்முதலாகப் பிரிட்டிஷ் யுத்தமந்திரி சபை வெளியிட்ட நகல் அறிக்கை குறிப்பிடத்தக்கது. இந்தியாவுக்கு வந்து அதை வெளிப் படுத்தியவர் சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ். ஆகையால் அதற்கு கிரிப்ஸ் திட்டம் என்று பொதுவாகச் சொல்லப்படுகிறது. அதில் நமக்கு வேண்டியது, இந்திய யூனியனைப்பற்றியும், அந்த யூனியனை ஏற்படுத்தும் ஸ்தாபனம்பற்றியும் கூறுகின்ற பாகம். இடைக்கால ஏற்பாட்டைப்பற்றிய பாகமும், ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் நடத்திய பேச்சுவார்த்தைகள்பற்றியும் அதன் முடிவு பற்றியும் நாம் கவனிக்கவேண்டியதில்லை. இந்தியாவில் கூடிய சீக்கிரம் சுய ஆட்சி ஏற்படுவதற்கு மன்னர் சர்க்கார் என்ன நடவடிக்கைகள் எடுக்கப் போகிறதென்பதைத் தெளிவான திடமான வார்த்தைகளில் வெளியிடுவதே நகல் அறிக்கையின் நோக்கம் என்று கூறப்பட்டது. ஒரு புதிய இந்திய யூனியனை ஏற்படுத்துவது மன்னர் சர்க்காரின் நோக்கம். பிரிட்டனுடனும், இதர டொமினியன்களோடும் தொடர்புகொண்ட, புதிய டொமினியனாக இந்த இந்திய யூனியன் விளங்கும். மற்ற டொமினியன்களைப்போல பிரிட்டிஷ் மன்னருக்கு விசுவாசங்கொண்டதாகயிருக்கும். பிற டொமினியன்களோடு சம அந்தஸ்துடைய இந்திய யூனியன், வெளிநாட்டு, உள்நாட்டு விஷயங்களில் யாருக்கும் கீழ்ப்படிந்ததல்ல. யுத்தம் முடிந்த உடனேயே, இந்தியாவுக்குப் புதிய அரசியலமைப்பை உருவாக்க, பின்னால் விவரிக்கப்பட்டுள்ளபடி ஒரு பிரதிநிதித்துவ சபை ஏற்படுத்த நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படும். இந்த அரசியலமைப்பு வகுக்குஞ் சபையில் இந்திய சமஸ்தானங்களும் கலந்து கொள்வதற்கு இடமளிக்கப்படும். இவ்வாறு வகுக்கப்பட்ட அரசியலமைப்பை சில கட்டுப்பாடுகளுடன் ஏற்றுக்கொண்டு உடனடியில் நிறைவேற்றுவதற்கு மன்னரது சர்க்கார் ஒப்புக்கொள்கிறது. கட்டுப்பாடுகள் :—

(1) இந்தப் புதிய அரசியலமைப்பை ஏற்றுக்கொள்ளத் தயாரா யில்லாத எந்த பிரிட்டிஷ் இந்திய மாகாணமும் அது தன்னுடைய தற்போதைய அரசியலமைப்பிலே இருக்க உரிமையுண்டு. பிற்பாடு வந்து சேரத் தீர்மானித்தால் அதற்கும் இடம் உண்டு. சேராத மாகாணங்கள் தனியாக வேறு சேர்ந்து தமக்குள் ஒரு அரசியலமைப்பை ஏற்படுத்திக் கொள்ள விரும்பினாலும் அதற்கும் பிரிட்டிஷ் அரசாங்கம் இணங்குகிறது. இந்திய யூனியனைப் போன்ற ஒரு ஸ்தாபனத்தை, அதோடு சம அந்தஸ்துள்ளதாக அதே முறையில் அமைத்துக் கொள்ளலாம்.

(2) பிரிட்டனிடமிருந்து இந்தியாவுக்கு பொறுப்பு முழுவதும் மாற்று வதுபற்றியும், இனத்தாலும் மதத்தாலும் சிறுபான்மையா யிருப்பவரைப் பாது காப்பதுபற்றியும் எழக்கூடிய எல்லா விஷயங்களையும் பேசி மன்னரது சர்க்காரும் அரசியலமைப்பு வகுக்கும் சபையும் ஒரு உடன்பாட்டில் கையெழுத்திடுவார்கள். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் அங்கமான இதர அரசாங்கங்களோடு எவ்விதத் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டுமென்று

இந்திய யூனியனை அவ்வுடன்பாடு கட்டுப்படுத்தாது யுத்தம் முடியுமுன்பே அரசியலமைப்பு வகுக்குஞ் சபை கீழ்க்கண்டவாறு அமையும். இந்தியாவின் முக்கிய வகுப்புத் தலைவர்கள் ஒன்றுபட்டு வேறொரு அமைப்பு வகுத்தால் அதையே வைத்துக்கொள்ளலாம்.

யுத்தம் முடிந்த உடன் மாகாணத் தேர்தல்கள் நடைபெறுவது அவசியம். தேர்தல்கள் முடிவு தெரிந்தவுடன் மாகாண அசெம்பிளி அங்கத்தினர்கள் யாவரும் அரசியலமைப்பு வகுக்கும் சபைக்கு விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறையில் தேர்தல் நடத்துவார்கள். தேர்ந்தெடுக்கப்படும் சபை, தேர்தல் நடத்துபவர்களின் தொகையில் பத்தில் ஒருபங்காக இருக்கும். ஜனத்தொகையில் எந்தவிகிதத்தில் பிரிட்டிஷ் இந்தியா பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்குமோ, அதே விகிதத்தில் இந்திய சமஸ்தானங்களும் தங்களை பிரதிநிதிகளை நியமிக்குமாறு அழைக்கப்படும். பிரிட்டிஷ் இந்திய அங்கத்தினர்களுக்குள்ள அதிகாரங்கள் சமஸ்தான அங்கத்தினர்களுக்கும் உண்டு.

யுத்தம்முடிந்தவுடன் ஒரு புதிய இந்திய யூனியனை ஏற்படுத்த பிரிட்டிஷ் அரசாங்கம் உத்தேசித்தது என்று மேற்கூறிய திட்டத்தின் சாரத்திலிருந்து தெரிகிறது. முழு டொமினியன் அந்தஸ்துள்ளதாக இருக்கும் இந்த யூனியன், விரும்பினால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்தும் பிரிந்து கொள்ளலாம். மாகாணச் சட்டசபைகளுக்கு தேர்தல்கள் நடந்தபின் அதன் அசெம்பிளி அங்கத்தினர்கள் கூடி விகிதாசார பிரதிநிதித்துவ முறையில் தேர்தல் நடத்தி அரசியலமைப்பு வகுக்குஞ் சபையை ஏற்படுத்துவார்கள். இச்சபை கூடி அரசியலமைப்பை ஏற்படுத்தும். அதில் சுதேச சமஸ் தானங்களால் நியமிக்கப்பட்ட அங்கத்தினர்கள் இருப்பார்கள். மாகாணங்களி லேற்பட்ட விகிதத்தின்படியே இவர்களது எண்ணிக்கையிருக்கும். இரண் டொரு நிபந்தனைகளின்பேரில் இந்த அரசியலமைப்பு வகுக்குஞ் சபை ஏற்படுத்திய அரசியலமைப்பை நிறைவேற்றுவதாக பிரிட்டிஷ் அரசாங்கம் ஒப்புக்கொள்கிறது. புதிய அரசியலமைப்பு ஏற்றுக்கொள்ளாத மாகாணம் பிரிந்து தனியே தனக்கென்று ஒரு அரசியலமைப்பைத் தயார்செய்து கொள்ளாம். அந்த அமைப்பு இந்திய யூனியன் அந்தஸ்தைப் பெற்றிருக்கும். எல்லாப் பொறுப்பையும் மாற்றுவதுபற்றியும், இனச்சிறுபான்மை, மதச் சிறுபான்மைகளைப் பாதுகாப்பதுபற்றியும் பேச்சுவார்த்தைகள் நடத்தி பிரிட்டிஷ் அரசாங்கம், இந்த அரசியலமைப்புச் சபையோடு ஒரு ஒப்பந்தம் செய்துகொள்ளும். இந்த அறிக்கை தனித்தனி சுதந்திர ராஜ்யங்களைப்பற்றிப் பிரஸ்தாபிக்கவில்லை. ஒரு யூனியன் என்றுதான் பேச்சை தொடங்குகிறது. ஆனால் அந்த யூனியனில் விருப்பமில்லாத மாகாணம் தனியாக பிரிந்து வேறொரு அரசியலமைப்பு வைத்துக்கொள்ளலாம், இந்திய யூனியனைப்போன்ற அந்தஸ்தே இதற்கும் உண்டு என்று கூறுகிறது. இந்தியாவுக்கு விடுதலை யளிக்கும் திட்டத்தில் ஏதாவது தடங்கல் முடங்கல் ஏற்பட்டுவிடக் கூடா தென்பதற்காகத்தான், மாகாணங்கள் சேராமலும் இருக்கலாம் என்ற வசதி சேர்க்கப்பட்டிருக்கிறது. இதை நகல் அறிக்கையை படிக்கும் யாரும் உணராம லிருக்கமுடியாது. இவ்வறிக்கை பாகிஸ்தானை உள்ளடக்கியதுபோலத் தென் பட்டாலும் தெளிவுறுத்தி பிரிவினையை பிரகடனம் செய்யவில்லை யென்றும் ஒரு யூனியனுக்கு மேற்பட்ட யூனியனை ஆரம்பிப்பது நடக்காதவாறு தள்ளிப் போட்டுவிடுகிறதென்றும் நகல் அறிக்கையை முஸ்லிம் லீக் நிராகரித்தது.

1942 ஏப்ரல் 4, அலகாபாத்தில் நடந்த அகில இந்திய முஸ்லிம் லீக் கூட்டத்திற்குத் தலைமை வகித்தபோதும், 1942, ஏப்ரல் 13வ பத்திரிகையாளர் மகாநாட்டில் அறிவித்தபோதும், திரு. ஜின்னு இத்திட்டத்தை கீழ்க்காணும் காரணங்களுக்காக தெளிவாக நிராகரித்தார்.

(i) நகல் அறிக்கையின் முக்கிய நோக்கம் ஒரு புதிய இந்திய யூனியனை உண்டாக்குவது அறிக்கையில் சிறுபான்மைக்குப் பிரிந்துபோகும் உரிமை யிருப்பதாகச் சொல்லப்படுவது ஏமாற்றுவித்தை.

(ii) இந்த அரசியலமைப்புச்சபை, பதினேரு மாகாண சட்டசபை அங்கத்தினர்களும் கூடி, தனித்தொகுதி முறையில்லாமல், விகிதார பிரதிநிதித்துவ முறையில் அமைக்கப்பட்ட பூரண ஆதிபத்தியம் உள்ளதாக இருக்கும். தனித்தொகுதி முறையிலும் முஸ்லிம்கள் 25 சதவிகிதமே யிருப்பர். விகிதாசார முறையில் அதிலும் குறைந்துவிடுவார்கள். அதனுடைய முடிவுகள், வெறும் பெரும்பான்மையோர் செய்யும் முடிவுகளாக இருக்கும். ஒரு அகில இந்திய யூனியனுக்கு அந்தச் சபையின் மூலமாகவே ஒரு அரசிய லமைப்பு ஏற்படும் என்பது உறுதி.

(iii) ஒரு மாகாணம் அல்லது மாகாணங்கள் யூனியனில் சேராம லிருக்கும் உரிமையை எவ்வாறு உபயோகிப்பது என்பது மிகமிக முக்கியமான விஷயம். ஒரு மாகாண சட்டசபையிலுள்ளவர்களில் 60 பேர் யூனியனி லிருந்து விலகிநிற்பதற்குச் சாதகமா யிருந்தால் பிரிவினைப் பிரச்னை அதோடு முடிவடைந்துவிடுகிறது. ஆனால் அப்படியில்லாமல் 59 பேர் சாதகமாகவும் 41 பேர் பாதகமாகவும் இருந்தால் அந்த மாகாணத்தில் சர்வஜன வாக்கு எடுக்கப்படும். இவ்விதமாக முஸ்லிம்கள் ஒரு தனி தேசிய சமுதாயத்தினர் என்ற உண்மையும் நியாயமும் ஒப்புக்கொள்ளப்படவில்லை. தற்போதைய மாகாணங்களின் பிரதேச அமைப்பு பிரிட்டிஷ் ஆட்சியில் சந்தர்ப்ப வசத்தால் அமைந்தது. இது பிரமாதமாக வற்புறுத்தப்பட்டிருக்கிறது. இரண்டு தேசிய இனங்களும் ஒன்ருகவே, பாகுபாடற்ற பிரதேசமாகவே சேர்த்தெண்ணப்பட்டு அவைகட்குத் தேசிய இனச் சுய நிர்ணய உரிமை உண்டென்று சொல்லப்பட் டிருக்கிறதே யொழிய தனிப்பட முஸ்லிம்களுக்கு தேசிய இன சுய நிர்ணய உரிமை உண்டென்று சந்தேகத்துக்கிடமில்லாமல் ஒப்புக்கொள்ளப்படவில்லை. இரண்டு பெரிய முஸ்லிம் மாகாணங்களான பஞ்சாப், வங்காளச் சட்ட சபைகளில் முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இல்லை. இந்துச் சிறுபான்மை இந்த முஸ்லிம்களை ஆட்டிவைத்துவிடும். வடமேற்கெல்லைப்புற மாகாணத்திலும் சிந்துவிலும் முஸ்லிமல்லாதாருக்கு அதிகப்படி ஸ்தானம் கொடுப்பதன் மூலம் முஸ்லிம்கள் தங்களுடைய லட்சியத்தை நெருங்குவது மிகமிகக் கடினமாகிறது.

பிரிவினைக் கொள்கையை ஏற்றுக்கொண்டிருப்பது போற்றற்குரியது என்ருலும் பாகிஸ்தானை ஐயந்திரிபற அனுமதிக்கவில்லை. முஸ்லிம் சுய நிர்ணய உரிமை மறுக்கப்பட்டிருக்கிறது. எனவே இத்திட்டம் ஏற்கத் தகாதது.[2]

---

2. Some recent speeches & writings of Mr. Jinnah pp. 350-364.

## 36. பேராசிரியர் கூப்லண்டின் திட்டம்

பேராசிரியர் ரெஜினல்டு கூப்லண்டு தனது "இந்தியாவின் வருங்காலம்" என்ற புத்தகத்தில் ஒரு திட்டத்தை வகுத்திருக்கிறார். அதன் அடிப்படை பிரதேச ரீதியில் அமைந்துள்ளது. சர். சிக்கந்தர் ஹயத்கானின் இந்திய சமஷ்டித் திட்டத்திலிருந்து இந்தக் கருத்தைக் கையாண்டிருக்கிறார். இந்திய ஜனக்கணக்குக் கமிஷனராக இருந்த திரு. எம். டபிள்யூ. எம். ஈட்ஸ் 1941-ம் வருஷத்து ஜனக்கணக்குக்கு எழுதிய முன்னுரையில், இந்தியாவின் நீர் வளமையை விருத்தி செய்வதற்கான ஒரு ஐம்பது வருடத்திட்டத்தைச் சிபார்சு செய்திருக்கிறார். அதில் அவர் போட்டிருக்கும் பிரதேச வரம்புகளைப் பேராசிரியர் எடுத்துக்கொள்கிறார். இப்பிரதேச வரம்புப்படி வட இந்தியா மூன்று நதி பள்ளத்தாக்குகளாகப் பிரிக்கப்படுகின்றன. அவையாவன (i) காஷ்மீரத்திலிருந்து கராச்சிவரை பரவிய சிந்துப் பள்ளத்தாக்கு (அரசியல் வார்த்தைகளில் பாகிஸ்தானுக்கு ஒத்தது) (ii) பஞ்சாபுக்கும் வங்காளத்துக்கும் இடையிலுள்ள கங்கை யமுனைப் பள்ளத்தாக்கு (இந்துஸ்தானத்துக்கு ஒத்தது) (iii) பீஹாருக்கும் கிழக்கெல்லைக்கும் இடையிலுள்ள கங்கை பிரமபுத்திராப் பள்ளத்தாக்கு (வடகிழக் கிந்தியாவுக்கு ஒத்தது) கங்கைப் படுகையை இரண்டாகப் பிரித்தது இயற்கைக்குப் பொருந்தியதாகும். பீஹாரின் கிழக்கெல்லையில், பிரம்மபுத்ராவோடு கலக்கும் கங்கைநதி தெற்காகத் திரும்பின உடனே, சுமார் 150 மைல் தள்ளி நிலப்பாங்கு மாறுகிறது. வடசமவெளி அதோடு சரி. அதற்கப்புறம் பெரிய வண்டல் பிரதேசத்தின் தொடக்கம்.'[1] (iv) நான்காவது பிரதேசம் கிட்டத்தட்ட பெரிய தீபகற்பத்துக்கு நேரானது. நதிப்படுகைகளை யொட்டிய பிரதேசப் பிரிவினை பொருளாதாரத் தேவைகளுக்கேற்றது என்பது பேராசிரியர் கூப்லண்டின் கருத்து. பரவிக்கிடக்கும் நீர்வளமையைப் பயன்படுத்துவதைப் பொறுத்தே வருங்கால அபிவிருத்திகள் அமைந்திருக்கின்றன. நீர் மின்சார சக்தி நிலயங்களும் நதிகளை முழுக்கப் பயன்படுத்துதலும் நெடுங்காலத் திட்டத்தால் எய்தக் கூடியவை. தனித்தனிப் பரப்பான மாகாணங்களில், அவைகளது குறுகிய நிதிவளத்தில் நிறைவேறுவன அல்ல. இவைகளை நிறைவேற்ற மாகாணத்தை மீறிய கூட்டுறவும் கூட்டுழைப்பும் தேவை. பிரதேச அடிப்படையில்தான் இதற்குச் செலவு செய்யவும் கட்டுப்படுத்தவும் இயலும். இவ்விதமாக அட்டவணை (52)–ல் காட்டியபடி இந்தியாவை நான்கு பிரதேசங்களாகப் பிரிக்கலாம்.

விகிதத்தைக் கணக்கிடுகையில் இந்த பேராசிரியர் ஒரு சிறு தவறிழைத்திருக்கிறார். அவர் கொடுத்துள்ள ஜனத்தொகைப் படிவந்த சரியான விகிதத்தை நான் கொடுத்திருக்கிறேன். அதற்குரிய கட்டங்களில் ஜனத்தொகை போடப்பட்டிருக்கிறது.

பேராசிரியரின் கருத்துப்படி, பிரதேசவாரித்வம், பிரிவினையுமல்ல, சமஷ்டியுமல்ல, இரண்டிலும் வேறானது. இந்திய வொற்றுமையைப் பேணுகிறது. எல்லாப் பிரதேசங்களின் மத்திய ஸ்தாபனம் ஒன்றையும் வைத்துக்கொள்கிறது. இந்திய வொற்றுமை வேண்டியிருக்குமானால் அதைப் பேணுவதற்குப் போதிய அளவுமட்டும் அதிகாரங்கள் இருக்கும். அகில இந்திய வாக்காளர்களின் நேரடி அனுமதியாலில்லாமல் பிரதேசங்களின் பிரதிநிதியாகவே இது அதிகாரம் செலுத்தும்.

---

1. R. Coupland: *The future of India* p. 120.

## அட்டவணை LII—(10 லக்ஷம் வீதம்)

| பிரதேசத்தின் பெயர் | பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள மாகாணங்கள் | இந்திய சமஸ்தானங்கள் | பிரதேசம்: இந்திய சமஸ்தானங்கள் உட்பட 1000 சதுர மைல்களில் | பிரதேசம்: சமஸ்தானங்கள் நீங்கலாக 1000 சதுர மைல்களில் | சமஸ்தானங்கள் உள்பட ஜனத்தொகை: இந்துக்கள் | முஸ்லிம்கள் | மலைஜாதியினர் | மொத்தம் | சமஸ்தானங்கள் நீங்கலாக ஜனத்தொகை: இந்துக்கள் | முஸ்லிம்கள் | மலைஜாதியினர் | மொத்தம் | சமஸ்தானங்கள் உள்பட ஜனத்தொகை விகிதம்: இந்துக்கள் | முஸ்லிம்கள் | இதரர் | சமஸ்தானங்கள் நீக்கிய ஜனத்தொகை விகிதம்: இந்துக்கள் | முஸ்லிம்கள் | இதரர் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| இந்து நதி | எல்லைப்புறம் | காஷ்மீரம் | 569.73 | | ... | ... | ... | ... | 9.38 | ... | ... | ... | 34.8 | ... | ... | 25.2 | ... | ... |
| | பஞ்சாப் | வ. மே. எ. | | 218.35 | ... | ... | ... | ... | ... | 22.75 | ... | ... | ... | 52.0 | ... | ... | 61.3 | ... |
| | பிரி. பலுசிஸ் | பஞ்சாப் | | | 21.34 | ... | ... | ... | ... | ... | 0.13 | ... | ... | ... | 13.2 | ... | ... | 13.5 |
| | தானம் | மலைப்பிரதேசம் | | | ... | 31.90 | ... | ... | ... | ... | ... | 37.08 | ... | ... | ... | ... | ... | ... |
| | சிந்து | பலுசிஸ்தானம் | | | ... | ... | 1.22 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| | ஆஜ்மீரும் | ராஜபுதனம் | | | ... | ... | ... | 61,25 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| | மேர்வாரும் | (எ. பி. தவிர) | | | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| கங்கை நதி | | ஐ. மாகாணம் | 311.80 | 208.20 | ... | ... | ... | ... | 79.15 | ... | ... | ... | 78.7 | ... | ... | 79.0 | ... | ... |
| | ஐ. மாகாணம் | குவாலியர் | | 208.20 | ... | ... | ... | ... | ... | 13.29 | ... | ... | ... | 12.0 | ... | ... | 13.2 | ... |
| | பிஹார் | ஒரிஸ்ஸா | | | 91.89 | ... | ... | ... | ... | ... | 7.07 | ... | ... | ... | 9.3 | ... | ... | 7.8 |
| | ஒரிஸ்ஸா | ம. இந்தியா | | | ... | 14.03 | ... | ... | ... | ... | ... | 100.09 | ... | ... | ... | ... | ... | ... |
| | | கிழக்கு குவாலியர் | | | ... | ... | 9.81 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| | | சாட்டிஸ்கார் | | | ... | | ... | 116.55 | | ... | | | ... | ... | | ... | | ... |
| | | (ஸி. தவிர) | | | | | | | | | | | | | | | | |
| வண்டல் பிரதேசம் | வங்கம் | வங்காளம் | 156.96 | 132.39 | ... | ... | ... | ... | 29.27 | ... | ... | ... | 41.7 | ... | ... | 41.5 | ... | ... |
| | அஸ்ஸாம் | அஸ்ஸாம் | | | ... | ... | ... | ... | ... | 36.45 | ... | ... | ... | 50.1 | ... | ... | 51.6 | ... |
| | | சிக்கிம் | | | 30.66 | ... | ... | ... | ... | ... | 4.37 | ... | ... | ... | 8.2 | ... | ... | 6.9 |
| | | | | | ... | 36.85 | ... | ... | ... | ... | ... | 70.51 | ... | ... | ... | ... | ... | ... |
| | | | | | | | 5.59 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| | | | | | | | | 73.50 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| தக்ஷணம் | சென்னை | மேற்கிந்திய | 539.25 | 302.79 | ... | ... | ... | ... | 72.42 | ... | ... | ... | 80.5 | ... | ... | 83.0 | ... | ... |
| | பம்பாய் | மத்திய இந்தியா | | | ... | ... | ... | ... | ... | 6.61 | ... | ... | ... | 8.2 | ... | ... | 7.5 | 9.5 |
| | ம. மாகாணம் | மே. குவாலியர் | | | 110.44 | ... | ... | ... | ... | ... | 5.13 | ... | ... | ... | 11.3 | ... | ... | ... |
| | கூர்க் பிர | வ. குவாலியர் | | | ... | 11.22 | ... | ... | ... | ... | ... | 87.18 | ... | ... | ... | ... | ... | ... |
| | தேசம் | குஜராத் | | | ... | ... | 8.77 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| | | பரோடா | | | ... | ... | ... | 136.82 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |

(ஏ) பரத்பூர், பிர்டி போலபூர், கரன்லி கோட்டா. (பி) பன்ஸ்வாரா, டாண்டா, பலன்பூர், துங்கர்பூர், போலன்பூர், சாட்டிஸ்கார்.

(ஸி) பஸ்டார், சிக்காதன், கெஸ்கார், கவர்தா கெய்ரோகா, நாங்தன்.

வெளியிலிருந்து பார்த்தால் இந்திய வொற்றுமைக் கறிகுறியாக உள்ள குறைந்த அளவு அதிகாரங்களே எந்த இந்திய மத்திய ஸ்தாபனமும் கொள்ள வேண்டும். அவையாவன, வெளிநாட்டு விஷயங்கள், பாதுகாப்பு, வெளி வியாபாரம், அல்லது சுங்கக்கொள்கை, நாணயம். வெளியிலிருந்து ஆக்கிர மிப்பு நேராதவாறு இந்தியாவைப் பாதுகாப்பதற்குத் தேவையான ஆயுதந் தாங்கிய படைகளைக் காப்பாற்றி யாள்வதே பாதுகாப்பாகும். படைகளில் ஆகாயப்படை, கப்பற்படையு மடங்கும்.

வெளியேற்றம், குடிவருதல், குடிவந்தவர்களையும் இந்நாட்டு மக்களாக்கு தல் முதலியவற்றைக் கட்டுப்படுத்துவது வெளிநாட்டு விஷயங்களோடு சேர்ந் தவையாகையால் அவை மத்திய விஷயங்களாக இருக்கவேண்டும். ஒரு பிரதேசம், தானும் தனியாக தேசிய இனக்கொள்கையை மேற்கொள்ள விரும்பினுல் அதைத் தடைசெய்ய முடியாது.

மத்திய அரசாங்கச் சிப்பந்திச் செலவு, இந்தியத் தூதர் வகைச்செலவு, சுங்கவரி வசூல் செய்யும் செலவு ஆகியவை ஒன்றும் அதிகமாக வந்துவிடா. செலவினத்தில் மிகப் பெரிது பாதுகாப்பு. சண்டைக்கு முன்பு பாதுகாப்புச் செலவு, சுங்கவரி வசூலால் சமாளிக்கப்பட்டு விட்டது. செலவுக்குப் பற்ருத போது மத்திய அரசாங்கத்திற்கே நேரடியாக வரி விதிப்பதற்கு அதிகார மளிப்பதா அல்லது அரசியலமைப்பில் குறிப்பிட்ட அளவுப்படி பிரதேசங்கள் கொடுக்கும் பணத்தைக்கொண்டு ஈடுபண்ணலாமா வென்பது யோசனை செய்ய வேண்டிய விஷயம்.

இவைகளெல்லாம் குறைந்தபட்ச மத்திய விஷயங்கள். இவைகளோடு ரயில்வே, விமானப் போக்குவரத்து, கடற்கரையோர கப்பல் போக்குவரத்து, ரேடியோ, டெலிபோன், தந்தி தபால் முதலியவைகளையும் சேர்த்துக் கொள்ளு தல் சௌகரியமும் சிக்கனமுமானதாகும். சாதாரண காலங்களில் பிரதேசங் களின் மத்திய நிர்வாகத்தின்கீழ் அவை இருக்க வேண்டுமென்பதில்லை. சண் டைக் காலங்களில் மத்திய நிர்வாகத்தின்கீழ் இருக்கவேண்டுமென்று அரசிய லமைப்பில் அவசரத் தேவை ஷரத்து வைத்துக் கொள்ளலாம். ஜனத் தொகைக் கணக்கு, இயற்கலை யாராய்ச்சி போன்ற விஷயங்களும் இவ்வாறே மத்திய நிர்வாகத்திலிருப்பது சிக்கனமும் சௌகரியமுமாகும். கைத்தொழி லபிவிருத்தி, சுரங்கங்கள், எண்ணெய் வயல்கள், துறைமுக கப்பற்போக்கு வரத்து, துப்பாக்கிகள், வெடிமருந்துகள் முதலியவற்றை கட்டுப்படுத்தி ஒழுங்கு செய்தல் போன்றவைகளும் மத்திய நிர்வாகத்திலிருக்கலாம். என் ருலும் இவைகள், மீண்டும் பிரதேச அதிகாரத்துக்குட்பட வேண்டியன வாகின்றன. எல்லாப் பிரதேசங்களிலும் ஒத்தாற்போல எடுக்கவேண்டிய நடவடிக்கைகளுக்கு பிரதேசங்களின் வேண்டுகோளின்படி சட்டமியற்ற மத்திய சட்டசபைக்கு அதிகாரமளிக்கலாம். அதாவது, பிரதேசங்களின் அனுமதியின் பேரில்தான் இத்தகைய சட்டமியற்றலாம். ஒரு அகிலப் பிரதேச யூனியனை, ஒரு கட்டுப்பாடு தளர்ந்த யூனியனுகக் கொள்ளலாம். ஆனுல் பிரதேசவாரித்வம் ஒரு புதிய கருத்தையும், ஒரு புதிய காரிய காரணத்தையும் புகுத்துகிறதென்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும். முழுதும் சுதந்தர மான பெரிய ராஜ்யங்களாக அது இந்தியாவைப் பிரிக்கிறது. சில பொதுக் காரியங்களுக்காக அந்த ராஜ்யங்கள் தங்களுடைய அதிகாரங்களைப் பகிர்ந்து கொள்ளத் தீர்மானித்துக் கொள்கின்றன. தேசிய ஒற்றுமை மாகாண சுதந் திரம் என்ற இரு கொள்கைகளும் ஒன்று சேரும்படியாகவே இப்போதிருக்கும்

சமஷ்டிகள் பிரிக்கப்பட்டிருக்கின்றன. பிரதேச வாரித்துவத்தில் இத்தகைய இருமுகக் கொள்கையொன்றும் கிடையாது. இதன்படி மத்திய நிர்வாகம், எல்லாப் பிரதேசங்களைச் சேர்ந்த ஸ்தாபனமாக இருக்கிறது. மத்திய நிர்வா கத்தை பிரதிநிதியாக வேலை செய்யும் சபையாகக் கொள்ளலாம். அதன் நிர்வாகிகளும், சட்ட சபையார்களும் தத்தம் பிரதேசங்களின் பிரதிநிதிகளாக வேலையைக் கவனிப்பார்கள். பிரதேச மத்திய நிர்வாகம், மத்திய சமஷ்டியைப் போலும் இராது, மத்திய சமஷ்டியென்பது ஒரு கூட்டுக் காரியச்சபை. ஒரு வகை நேச உறவு, அதற்கென்று அதிகாரம், ஆதிக்கம் கிடையாது. அத னுடைய தீர்மானங்களை பகுதிகள் ஏற்றுக்கொண்டால், பகுதிகள் தங்கள் செலவில் அத்தீர்மானங்களை நிறைவேற்றும். ஆனால் பிரதேசங்களின் மத்திய நிர்வாகமோ ஒரு அரசாங்கமாக இருக்கிறது. தனது சிப்பாய்களுக்கும் அதி காரிகளுக்கும் தானே உத்தரவிடுகிறது; சம்பளமுமளிக்கிறது. ஆகவே உண்மையில், இந்தப் புதிய பிரதேச மத்திய நிர்வாகம், மத்திய சமஷ்டியுமல்ல சமஷ்டியுமல்ல, இரண்டிற்கும் நடுவான நிலையிலிருக்கிறது. மத்திய சமஷ்டிக் கும் அதிகமானது, சாதாரண சமஷ்டிக்கும் குறைவானது.

1935-ம் வருஷத்திய சட்டத்தில் கண்ட சமஷ்டிச் சட்டசபை இந்திய தேசியத்தின் பலத்தையும் உயர் நோக்கங்களையும் எடுத்துக் காட்டுவதாக இருக்கிறது. கூப்லண்டின் பிரதேச மத்தி அவ்வாறு இல்லை. காரணம், இந்தியா ஒரே தேசிய இனமாகிவிட்டதென்ற இலட்சியத்தை பிரதேசக் கொள்கை ஏற்றுக்கொள்ளவில்லை. பிரதேசங்களின் தனித் தேசியத் தன்மையை இது எடுத்துக்காட்டும். பிரதேச மத்திக்கு, ஒவ்வொரு பிரதே சத்திலிருந்தும் சம எண்ணிக்கையுடைய அங்கத்தினர்களே வரவேண்டும். அவைகளுக்குப் பிரதிநிதித்துவம் கொடுப்பதற்கு அவசியமான குறைந்தபட்ச எண்ணிக்கையை மீறியதாக இருக்கக்கூடாது. இந்தப் பிரதிநிதித்துவம் பிரதேசங்களின் அளவு, ஜனத்தொகையைப் பொறுத்ததாக இராது. அப் பிரதிநிதிகள் தங்களுடைய அதிகாரத்தை தங்களுடைய பிரதேசங்களிலிருந்தே பெறுவார்கள். அவைகளுக்கே பொறுப்புள்ளவர்களாகவும் இருப்பார்கள், அவ்வப்பிரதேச சட்ட சபைகளினால் இவர்கள் தேர்ந்தெடுக்கப்படக் கூடும். மாகாணங்களுக்கும் சுதேச ராஜ்யங்களுக்கும் போதுமான பிரதிநிதித்துவம் இருக்கும்படியான முறையில் இவர்கள் தேர்ந்தெடுக்கப் படுவார்கள். கங்கைப் பள்ளத்தாக்கிலும் தட்சிணப் பிரதேசங்களிலும் உள்ள மாகாணங்கள், சுதேச ராஜ்யங்கள், எல்லாமோ, அல்லது அவற்றுள் சிலவோ பிரதேசங்களில் சேரச் சம்மதிக்காமல் முன்னிருந்தபடியே மாகாணங்களாகவும், சுதேச ராஜ்யங்க ளாகவும் இருக்க விரும்புவதாக வைத்துக்கொள்வோம். அப்படியானால், அவை களுக்கும் பிரதிநிதிகள் இருந்தால் எப்படியிருக்குமோ அந்தமாதிரியில் பிரதேசங்கள், தங்களுடைய பிரதிநிதித்துவத்தை அமைத்துக்கொள்ள வேண்டியிருக்கும். அதாவது கங்கைப் பள்ளத்தாக்கும், தட்சிணப் பிரதேசங் களும், பிரதேசத் திட்டத்தில் சேர்ந்தாலும் சரி சேராவிட்டாலும் சரி, பிரதேச மத்திய சட்டசபையில் அவைகளுக்கேற்பட்ட பிரதிநிதித்துவ எண்ணிக்கையே சிந்து நதிப் பள்ளத்தாக்குக்கும், வண்டல் பிரதேசத்திற்கும் கிடைக்கும்.

மத்திய நிர்வாக வரம்பு மூன்று விஷயங்களைக்கொண்டு சுருங்கியதாக இருக்கிறது. வேலையளவும் குறுகிய எல்லைக்குட்பட்டது. ஆகவே மந்திரிசபை நால்வர் கொண்டதாக இருக்கும். அவர்களிற் சிலர் ஒன்று அல்லது இரண்டு இலாகாக்களைக் கவனிப்பார்கள். அரசாங்கம், சட்ட பூர்வமான கூட்டு

அரசாங்கமாக இருக்கும். சுவிட்ஜர்லந்து அரசியலமைப்பு, ஓரளவு இதற்கு எடுத்துக்காட்டாக இருக்கக்கூடும். முதன் மந்திரியையும் அவரது சகாக்களையும் சட்டசபையே தேர்ந்தெடுக்கக்கூடும். அவர்களது பதவிக்காலம், சட்டசபையின் பதவிக்கால அளவை யொத்திருக்கும். சுவிட்ஜர்லாந்து நிர்வாக சபையைப்போல, இவர்களும், ஒரு சட்டத்தை இயற்ற வேண்டுமானுல் சட்ட சபையின் பெரும்பான்மையாதரவைப் பெற வேண்டியவர்களாகவும், ஆனுல் அன்ருட நிர்வாகத்தைப் பற்றினவரையில் சட்டசபைகளுக்குப் பொறுப்புள்ளவர்களாக இல்லாமலும் இருக்கலாம். சுவிட்ஜர்லாந்து முறையை அனுசரித்து நிர்வாக ஸ்தானங்களின் உத்தியோகங்கள் பிரதேசங்களுக்கிடையில் சமமாக பங்கிடப்பட வேண்டும். குறைந்த அளவில், ஒன்று அல்லது இரண்டுக்குமேல் ஒரு பிரதேசத்திற்கு இருக்கக்கூடாது. இது காரியமாக, பிரதேசத் திட்டத்திற்குச் சம்மதிக்காத மாகாணங்களையும் பிரதேசங்களாகக் கணக்கிடப்பட வேண்டும். பிரதமர் பதவிக்கு ஒரு இந்து, பிறகு ஒரு முஸ்லிம் என்ற முறையிருக்கவேண்டும்.

அரசியலமைப்பு விதிகளுக்குப் பொருள் கூற, இப்போதிருக்கும் பெடரல் நீதிமன்றத்துக்குள்ள அதிகாரங்களே, பிரதேசத் திட்டப்படி ஏற்படும் சுப்ரீம் நீதிமன்றத்துக்கும் இருக்கும். ஒரு பிரதேசத்திலிருந்து ஒரு நீதிபதி என்ற முறையில் இவர்கள் நியமிக்கப்படுவார்கள். இது விஷயத்தில், பிரதேசத் திட்டத்தில் சேராத மாகாணங்களும், சேர்ந்தவையாகப் பாவிக்கப்படும்.

வகுப்புப் பிரசினையை இந்தப் புதிய திட்டம் எவ்வாறு பாதிக்கிறது? மத்தியில் வகுப்புச் சமநிலை எவ்வாறு ஏற்படுத்தப்படுகிறதோ அதைப் பொறுத்து இதன் பதிலமையும் என்று பேராசிரியர் கூப்லண்டு கருதுகிருர். இப்பிரதேசத் திட்டத்தின்படி நடைபெறும் பிரதேச மத்திய சட்டசபைத் தேர்தலில் தேசீய அம்சம் ஒன்றும் இருக்காது. அங்கத்தினர்கள் பிரதேசங்களுக்குத்தான் பிரதிநிதியாக இருப்பார்கள். அவர்கள் தத்தம் பிரதேசங்களின் அல்லது பிரதிநிதிகளின் காரியக்காரர்களாக இருப்பார்கள். தத்தம் பிரதேச அரசாங்க உத்தரவை அல்லது சட்டசபை உத்தரவை யொட்டி வாக்களிப்பார்கள். இவ்விதமாக, மத்திய சட்டசபையிலுள்ள வகுப்புச் சமநிலை தனி அங்கத்தினர்கள் அல்லது கட்சிகளுடைய அபிப்பிராயத்தின் சமநிலையாக இருக்காது. பிரதேச நடவடிக்கைகளின் சமநிலையாக இருக்கக்கூடும். இருபெரும் வகுப்பைச் சேர்ந்த பிரதிநிதிகளும் இந்தியாவின் சேவையில் நாள்தோறும் ஒன்றுசேர்ந்துழைப்பதற்கு இத்திட்டம் சந்தர்ப்பமளிக்கும். சுவிட்ஜர்லாந்திலும் கானடாவிலும் வாழும் தேசீய இனங்கள், தத்தம் தனியியல்புகளை இழக்காவண்ணம் அந்தந்த நாட்டினராக யிருப்பது போல, இந்தியாவிலும் இந்துக்களும் முஸ்லிம்களும், தத்தம் தனியியல்புகளை இழக்காதபடி, தாம் இந்தியர் என்ற உணர்ச்சியை பெறும் காலம் நாளடைவில் வரக்கூடும். ஆகவே எந்த நிபந்தனையின் பேரிலும் ஒரு யூனியனை ஏற்றுக்கொள்ளுமாறு இந்துக்களை வேண்டிக்கொள்கிருர் பேராசிரியர் கூப்லண்டு. எப்படியும் ஒரு யூனியன் ஏற்படவேண்டும் என்பது அவர் அவா. ' உங்களுக்கு, முழுச் சுதந்திரம் அளிக்காவிட்டாலும் மற்றெல்லாவகையிலும் உங்களுடைய கோரிக்கைகளைப் பூர்த்தி செய்கிறதாகையால் இதை நீங்கள் ஏற்றுக்கொள்க' என்று முஸ்லிம்களை வேண்டிக்கொள்கிருர். இத்திட்டம் ஒரு தேசீய இனக் கொள்கையை ஏற்றுக்கொள்கிறது. தேசீய இன ராஜ்யத்தில் அல்லது ராஜ்யங்களில் இந்திய முஸ்லிம் தேசீய இனத்தை நிலை நாட்டுகிறது. முஸ்லிம்

ராஜ்யங்கள், பரப்பிலும் ஜனத்தொகையிலும் எந்த அளவில் இருந்தாலும், அவைகள் இந்து ராஜ்யங்கள், அல்லது இந்து மாகாணத் தொகுதிகளுக்குச் சமமானவைகள் என்று இத்திட்டம் கொள்கிறது. அவைகளுடைய சுதந் திரத்தை குலைக்காமல், அவைகள் இதர ராஜ்யங்களுடன் சுருங்கிய அளவில் சில அதிகாரங்களைப் பங்கிட்டுக்கொள்ளவும் இத்திட்டம் வசதியளிக்கிறது.

பேராசிரியர் கூப்லண்டின் பிரதேசத்துவத் திட்டத்தை கூடியமட்டும் அவருடைய வார்த்தைகளிலேயே சுருக்கிக் கூறியுள்ளேன். இந்தியாவில் இரண்டு தேசிய சமுதாயங்களுள்ளன, இந்தியா ஒரே தேசிய சமுதாயங் கொண்டதல்ல என்ற அடிப்படையில் இத்திட்டம் வகுக்கப்பட்டதென்ப தற்குச் சந்தேகமில்லை. அதை ஏற்கெனவே இவ்வாசிரியர் கூறியிருக்கிறார். அப்படி வைத்துக்கொண்டுதான், முஸ்லிம் லீகின் பிரிவினைக் கோரிக்கையைத் தன்னால் திருப்திப்படுத்த முடிந்த அளவு முயன்றிருக்கிறார். ஒரே மதமும் ஒரே வகுப்புமான ஜனங்கள் வாழுமிடங்கள் என்ற அடிப்படையில் சுதந்தர முஸ்லிம் ராஜ்யங்களை ஏற்படுத்தவேண்டும் என்று கூறவந்த இவர், அதை விட்டுப் பிறழ்ந்து வேறு அடிப்படையில் அதாவது பூகோளப் பொருளாதார ஒற்றுமைகொண்ட பிரதேசவாரியமைப்பை வற்புறுத்துகிறார். டாக்டர் ராதா கமல முகர்ஜி கூறியவாறு, பேராசிரியர் கூப்லண்டின் திட்டத்தில் விவசாயம்பற்றிய பூகோளப் போக்கில் பெருந்தவறு காணப்படுகிறது. பிரதேசப் பிரிவினைகள், பொருளாதாரத்தை நோக்கியது. அரசியல் காரணம் கொண்டது முஸ்லிம் தாயகப் பிரிவினை. வெவ்வேறு காரணம் கொண்ட இவ்விரண்டையும் ஒன்றாக்கிக் குழப்புகிறது கூப்லண்டின் திட்டம்.'[1]

பிரதேசத்துவ கொள்கையையும்கூட இத்திட்டம் ஒழுங்குமுறையாகப் பின்பற்றவில்லை யென்று குற்றம் சாட்டலாம். பஞ்சாபில் பெரும்பாகம் கங்கைப் பள்ளத்தாக்கைச் சேர்ந்ததென அவர் ஒப்புக்கொள்கிறார். எனினும் அதை சிந்துப் பள்ளத்தாக்கோடு சேர்த்திருக்கிறார். பேராசிரியரே குறிப் பிடுகின்ற மாதிரி "இந்நாடு தனக்கென்ற இயற்கையமைப்புக் கொண்டது. தனக்கென்று தனியான அறநெறி கொண்டது" அப்படியிருந்தும் ராஜபுதனத் தின் முக்கால்பாகத்தை சிந்து நதிப் பிரதேசத்தில் சேர்ப்பதற்கு யாதொருவித நியாயமுமில்லை. ஏதேனும் ஒரு காரணத்தால் இதை சிந்துப் பிரதேசத்தோடு சேர்த்தாலும், கூர்ஜரத்தோடு சிறிதும் சம்பந்தமற்ற நான்கு தெற்கு சுதேச சமஸ்தானங்களை கூர்ஜரத்தோடு சேர்ப்பதற்குக் காரணமேயில்லை. ஆரவல்லி மலையிலுற்பத்தியாகும் நதிகளாலும் அங்குப் பெய்யும் பெருமழையாலும் வளம்பெற்ற கூர்ஜரத்தின் வடபாதியும் அல்லது கூர்ஜரம் முழுவதுமே ஏன் இந்தப் பிரதேசத்தோடு சேர்க்கப்படாமல் தட்சிணத்தோடு சேர்க்கவேண்டும் என்பதற்கும் காரணமில்லை.

கங்கைபாயும் பிரதேசங்களிலும் இதேபோன்று பூகோளம், இயற்கை யமைப்பு முதலியவைகளைப் புறக்கணித்து தாறுமாறாகப் பிரதேசங்களை ஒட்டியும் வெட்டியும் இத்திட்டம் அமைக்கப்பட் டிருக்கிறது. இமயத்தில் உற்பத்தியாகும் நதிகளுள் பல, பிரிட்டிஷ் எல்லைக்கப்பால் உற்பத்தியாகின்றன என்பதும், நதிகள் சம்பந்தமான நடவடிக்கை யெடுப்பதில் பிரிட்டிஷ் மாகா ணங்கள் மிகுந்த சிரமம் அடைகின்றன என்பதும் யாவரும் அறிந்த விஷயம். வட பீஹாரில் மிகச் சேதம் விளைக்கும் கோசி நதி இத்தகையது. இதோடு

1. Dr. Ratha Kamal Mukerjee: *An economist looks on Pakistan*. p. 12.

முஸபர்பூர், தர்பாங்கா ஜில்லாக்களில் கடுஞ் சேதம் விளைக்கும் பாகுமதி முதலிய நதிகளையும் குறிப்பிடலாம். சோணே, நருமதையாறுகள், அமரகண்டக் குன்றுகளில் தோன்றி எதிரெதிராகப் பாய்கின்றன. அமரகண்டக் குன்றுகளில் பெய்யும் மழையால் ஏற்படும் வெள்ளம் ஒன்றுக்கொன்று மிகத் தள்ளியுள்ள ஜில்லாக்களில் நாசத்தை உண்டாக்குகிறது. ஷாஹாபாத், பாட்னு, சாரன், ஜப்பல்பூர், ஹோஷங்கபாத் ஜில்லாக்களும், தள்ளியுள்ள மத்திய மாகாணத்திலும், குஜராத்தின் பாகங்களிலும் வெள்ளச்சேதம் ஏற்படுகிறது.

ஐக்கிய அமெரிக்க நாடுகளில் உள்ள டென்னஸி பள்ளத்தாக்கு நீர்ப்பாசனத் திட்டத்தை விவரமாக எடுத்துக்கூறி அதையொட்டியே தானும், பள்ளத்தாக்குப் பிரிவினைகளைச் செய்ததாகப் பேராசிரியர் கூப்லண்டு கூறுகிருர். எந்த ஒரு திட்டமும் வெற்றிபெறச்செய்யும் முக்கியமானதொரு அம்சத்தை அவர் கண்டுகொள்ளவில்லை. ஒரு நதி பாயும் பிரதேசத்தை அபிவிருத்தி செய்யும் எந்தத் திட்டத்திலும், நதிகளைக் கணுக்கணுவாக வெட்டித் துண்டுபடுத்த முடியாது. நதி பிறக்குமிடம், பாயுமிடம், பிற ஒரு நதியையோ அல்லது கடலிலோ கலக்குமிடம் அத்தனையையும் சேர்த்துக் கவனித்தால்தான் காரியம் நடக்கும். தெற்கு முகமாகத் திரும்பும் இடத்தில் கங்கையைத் துண்டாடுகிருர் பேராசிரியர். நாட்டின் தோற்றத்தையும் மண்ராசியையும் கவனித்தோமானுல், வடக்கு பீஹாருக்கும், வடக்கு வங்காளத்துக்கும், அஸ்ஸாம் பள்ளத்தாக்கு முழுவதற்கும் யாதொரு வேற்றுமையும் இல்லை. பீஹாரிலுள்ள, சாம்பரானின் வடமேற்கு, வடக்கு பாகங்கள், முஸபர்பூர், தர்பாங்கா, மாங்கிர், பாகல்பூர், பூர்ணியா ஜில்லாக்களின் வடக்கு பாகங்கள் எல்லாம் ஒன்றுபோல்வன. பேராசிரியர் குறிப்பிட்ட இடத்தில் கங்கையை இரண்டாகப் பிரித்தாலும், பாகீரதி யென்றும், பின்னுல் ஹுக்ளி என்றும் அழைக்கப்படுகிற கங்கைக் கிளை பாயும் மேல் வங்காள ஜில்லாக்களை, மேகனு, பத்மா நதிகள் பாயும் பிரதேசத்தோடு கிழக்கில் சேர்ப்பதைக் காட்டிலும், பீஹாரோடு சேர்ப்பதுதான் சரி. இவை தவிர, மேற்கு வங்காள ஜில்லாக்கள் வழியாக, சோட்டா நாகபுரியிலிருந்து பாயும் தாமோதர நதியும் வெள்ளச்சேதத்தை உண்டாக்குகிறது. இந்த வரிகள் எழுதிக்கொண்டிருக்கும் இச்சமயத்தில் இந்திய அரசாங்க அங்கத்தினர் ஒருவர் தலைமையில், வங்காளம், பீஹார் அரசாங்கப் பிரதிநிதிகள்கூடி வெள்ளச்சேதத்தைத் தடுக்க என்ன செய்யலாமென்று யோசிக்கிருர்கள். பேராசிரியரின் பிரதேசவாரித் திட்டமும் அதன் விளைவான பிரிவுகளும் ஏற்படுமானுல், இந்த வெள்ளப் பிரசினையைப் பற்றி கங்கைப் பள்ளத்தாக்குப் பிரதேசமும், வண்டல் பிரதேசமும் ஏதாவதொரு தனி ஏற்பாடு செய்யவேண்டியிருக்கும். அந்தத் தனி ஏற்பாடும் இப்பிரச்னையைத் தீர்த்துவிடாது. உண்மை யென்னவென்ருல் பேராசிரியரின் திட்டம் ஒழுங்குமுறையற்றது. பிரதேசத்துவக் கொள்கைக்கே முரணுனது. பிரதேசக் கொள்கையை நியாயமாகவும் இயற்கையாகவும் அனுசரித்தால் முற்றிலும் வேறுவிதமான பிரிவினைகள் ஏற்படும். முஸ்லிம் ராஜ்யங்கள், இந்தியாவின் பிற பாகங்களோடு சம அந்தஸ்திலிருக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு இந்தியாவை இவர் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கிருர். என்ருலும் பிரதேசக் கொள்கையை நியாயமாக அனுசரித்துப் பிரிக்கும் பிரிவுகளில் இரண்டு முஸ்லிம் மண்டலங்களும், இந்தியாவின் இதர பாகங்களோடு சமநிலையில் இரா.

நான்காவது பிரதேசத்தைக் கவனிக்கும்போது இது விஷயம் இன்னும்

தெளிவாகிறது. வடக்கேயுள்ள மூன்று பிரதேசங்களில் சேரும் நாடுகள் போக மிச்சமெல்லாம் நாலாவது பிரதேசத்தில் சேருகிறது. 1000 மைல் நீளமும் 500 மைல் அகலமுமுள்ள இந்தப் பகுதியை ஒரு பிரதேசமாக்குகிற பட்சத்தில் ஏன் நாடு முழுவதையும் ஒரே பிரதேசமாகக் கருதக் கூடாது? நாட்டை நான் காகப்பிரிப்பதன் நோக்கம், இரண்டு முஸ்லிம் மண்டலங்களுக்குச் சமமாக (போட்டியாக) இரண்டு இந்து மண்டலங்கள் இருக்கவேண்டும் என்ற நோக்கம்தானல்லவா? என்னதான் செய்தாலும் முஸ்லிம் மண்டலங்கள் இரண்டுக்கு மேற்படப் போவதில்லை. அது ஒரு நதிப்பள்ளத்தாக்கு என்ற சாக்கிலாவது தட்சிணத்தைப் பிரிக்கமுடியாது என்பதைப் பேராசிரியர் கூப்லண்டு நன்கறிவார். மற்ற மூன்று பிரதேசங்களையும் பிரித்தபின் மிச்சம் இருப்பது தட்சிணம். உண்மையில் இது, மாகாணங்களும், சுதேச ராஜ்யங்களுமாகக் கலந்து கிடக்கும் பாகம்.

நூலறிவு மிக்க இப்பேராசிரியர், இப்பிரதேசத்திட்டத்தை வகுக்கும் பொழுது வேறு ஒரு விஷயத்தையும் கவனிக்கவில்லை. 'பிரதேச சமூதாயத்தைக் கருத்துட்கொண்டதாக இருக்கவேண்டும் பிரதேசக் கொள்கை. ஒரு பிரதேசத்தினரின் வாழ்க்கைமுறை, தொழில், பரம்பரை, கலாசாரம், முதலியவைகளுக்குள் ஒற்றுமையும் உறுதிப்பாடும் கொடுக்க வேண்டும்' என்று பேராசிரியர் ராதாகமல முகர்ஜி எடுத்துக் கூறுகிறார். மேலும் 'மொழி, கலாசார சம்பந்தமான உண்மை நிலைமைகளைப் புறக்கணித்தால் அது பிரதேசத்துவக் கொள்கைக்கே முரணானது' தென்கிறார். இந்தியாவின் பல பாகங்களிலும் பல்வேறு மொழிகளும் இருப்பதன் காரணமாக இந்தியா ஒரே தேசமாகாவிட்டால், ஒவ்வொரு பிரதேசமும் இத்தகைய வேறுபாடுகள் நிறைந்த சின்ன இந்தியாவாகவே இருக்கும். இத்தனை வேறுபாடுகளுடனும் இந்தப் பிரதேசங்கள் தங்களது காரியத்தை நடத்துமானால், ஏன் இந்தியாவும் ஒரே நாடாக இருந்துகொண்டு தனது காரியங்களைச் செவ்வனே நடத்தமுடியாது? தெளிவற்றதான கொள்கையின் மீது இப்பிரதேசப் பிரிவுகள் ஏற்படுத்தப் பட்டிருப்பதால், ஒரு பிரதேசத்துக்குட்பட்ட எந்தப்பகுதியும் அதில் சேராம லிருக்கலாம் என்பதை ஒப்புக்கொள்கிறார். சிந்துப்பகுதிகளும் வண்டல் பகுதிகளும் பிரதேசத்திட்டத்தில் சேரும் என்று எதிர்பார்க்கிறார். ஆனால், கங்கைப்பள்ளத்தாக்கிலும், தெற்குப் பிரதேசத்திலும் கஷ்டம் இருக்கும் என்று எதிர்பார்க்கிறார். எப்பொழுது இந்தக் கஷ்டம் இருக்கிறதோ அப்போது, முஸ்லிம் மண்டலங்களுக்குச் சமமாக முஸ்லிமல்லாத மண்டலங்களை ஏற்படுத்துவது இயலாத காரியம். இருந்தாலும், ஊக்கத்தைக் கைவிடாமல், முஸ்லிமல்லாத மண்டலங்களைச் சேர்ந்த பகுதிகள் இரண்டு பிரதேசங்களாக அமைகின்றன என்று வைத்துக்கொள்ள வேண்டுமென்று பேராசிரியர் கூறுகிறார். இவைகள் பிரதேசங்களாக மாறினாலும் சரி, மாறாவிட்டாலும்சரி, பிரதேச மத்தியில் அவைகளுக்கும் பிரதிநிதித்துவம் இருக்கும் வண்ணம் அவைகளும் பிரதேசங்களாகக் கருதப்பட வேண்டுமென்கிறார்.

இந்த நான்கு பிரதேசங்களை அமைக்கும்பொழுது ஜனத்தொகை யளவையோ நிலப்பரப்பினளவையோ கவனிக்காது விட்டுவிட்டார். அட்டவணை LII ல் காட்டியபடி வண்டல் பிரதேசம் இந்திய சமஸ்தானங்கள் சேர்ந்திருப்பதையும் அல்லது சேராமலிருப்பதையும் பொறுத்து 156.96 அல்லது 132.39. ஆயிரம் சதுரமைல் உள்ளது. கங்கைப் பள்ளத்தாக்கும், தட்சிணமும், சுதேச ராஜ்யங்கள் தம்முடன் சேர்ந்தால் முறையே 311.80, 539.25 ஆயிரம்

சதுரமைல்களும், அவை சேராவிட்டால் முறையே 208·20, 302·79 ஆயிரம் சதுர மைல்களும் உள்ளன. இவ்வாறு பரப்பில் மிகவும் வேறுபாடுள்ள, வண்டல் பிரதேசமும், கங்கைப்பள்ளத்தாக்கும், தட்சிணப் பிரதேசமும் எவ்வாறு சமமாக இருக்கமுடியும்? இதுபோக, ஜனத்தொகை வித்தியாசமோ இன்னும் அதிகமாக இருக்கிறது. சிந்துப் பள்ளத்தாக்கில் சுதேச ராஜ்யங்கள் சேர்ந்திருப்பதையும் அல்லது சேராதிருப்பதையும் பொறுத்து ஜனத் தொகை 612·50 அல்லது 370·80 லட்சம் உள்ளது. அதேபோல வண்டல் பிரதேசத்தில் 735·0 அல்லது 705·10 லட்சம் ஜனத்தொகையிருக்கிறது. கங்கைப் பள்ளத்தாக்கில் 1165·50 அல்லது 1000·90 லட்சமும் தட்சிணத்தில் 1368·20 அல்லது 871·80 லட்சம் ஜனத்தொகையு மிருக்கிறது. இவை எவ்வாறு ஒன்றுக்கொன்று சமமாக எதிர்நிற்கும்? மேலும் நான்கு பிரதேசங்களிலும் உள்ள முஸ்லிம் ஜனத்தொகை, முஸ்லிமல்லாத ஜனத்தொகைகளின் விகிதத் தைக் கவனித்தால் நிலைமை மோசமாகவேயிருக்கும். பிரிட்டிஷ் இந்தியாவையும் சுதேச சமஸ்தானங்களையும் சேர்த்துக் கவனிப்போம். சிந்துப்பிரதேசத்திலும் வண்டல் பிரதேசத்திலும் உள்ள முஸ்லிம்கள், முறையே 52·0, 50·1 சதவிகித மாகவும், முஸ்லிமல்லாதவர்கள் முறையே 48·0 49·9 சதவிகிதமாகவுமிருப் பார்கள். பிரிட்டிஷ் இந்தியாவை மாத்திரம் கவனித்தால் சிந்துவிலும் வண்டல் பிரதேசத்திலும் முஸ்லிம்கள் முறையே 61·3, 51·6 சதவிகிதமாகவும், முஸ்லி மல்லாதவர்கள்முறையே 38·7, 48·4 சதவிகிதமாகவுமிருக்கிறார்கள். இவ்விதமாக முஸ்லிம் பிரதேசங்களில் முஸ்லிம் பெரும்பான்மையினர் பேரளவில் பெரும் பான்மையாக இருக்கிறார்கள். ஆனால் முஸ்லிமல்லாத பிரதேசங்களிலோ முஸ்லி மல்லாதார் மிகப் பெரும்பான்மையாக இருக்கிறார்கள். பிரிட்டிஷ் இந்தியாவும் சமஸ்தானங்களும் சேர்ந்த கங்கைப் பிரதேசத்திலும் தட்சிணப் பிரதேசத்தி லும் முஸ்லிமல்லாதார் முறையே 88·0, 91·8 சத விகிதத்தினர். முஸ்லிம்கள் முறையே 12·0; 8·2 சத விகிதத்தினர். பிரிட்டிஷ் இந்தியாவில் மாத்திரமோ எனில் அந்த இரண்டு பிரதேசங்களிலும் முஸ்லிமல்லாதார் முறையே 86·8, 92·5 சத விகிதமாகவும், முஸ்லிம்கள் முறையே 13·2, 7·5 சத விகிதமாகவும் இருக்கின்றனர்.

இரண்டு முஸ்லிமல்லாத ராஜ்யங்களுக்கெதிராக இரண்டு முஸ்லிம் ராஜ்யங்களைச் சரிசிகராக்குவதற்காக இவ்வளவு ஏற்றத்தாழ்வு, முரண்பாடு, ஒழுங்கீனங்களைப் பொறுமையாகச் சகித்துக்கொள்ள வேண்டுமாம். அதுதான் அவருடைய ஒரே நோக்கமாகில் அதைத் தெளிவாக, வெளிப்படையாகக் கூறு வது மேன்மையாக இருக்கும். முஸ்லிம் ராஜ்யங்கள், முஸ்லிமல்லாத ராஜ்யங் களுடைய கடமையும் பொறுப்பும் எவ்வாறிருப்பினும், மற்ற விஷயங்கள் எப்படியிருந்தாலும், இல்லாவிட்டாலும், அவைகள் சம அந்தஸ்தும் சம அதிகாரமுமுள்ளவையாக இருக்கவேண்டும் என்று சொல்லிவிட்டால் அது எவ்வளவோ நல்லது, நேர்மையானது, கண்ணியமானது. அந்த உட்கருத்தை மறைப்பதற்கு பிரதேசத்துவம், பொருளாதாரச் சௌகரியங்கள் என்ற வார்த்தைகளைப் போட்டு எவ்வளவுதான் எழுதி மறைக்க முயன்றாலும், அவை சுலபத்தில் பகிரங்கப்பட்டு விடுகின்றன. முஸ்லிமோ, முஸ்லிமல்லாதாவரோ, யாரையும் அதனால் ஏமாற்றமுடியாது. பேராசிரியர் கூப்லண்டு வகுத்துள்ள அரசியலமைப்பைக் கவனிக்கும்போது நிலைமை வெகு தெளிவாகிறது. பிரதேச மத்தி ஒரு சட்டசபையைப் பெற்றிருக்கும். அதன் அங்கத்தினர்கள் சுதந்திர அந்தஸ்துடையவர்களாக இருக்கமாட்டார்கள். தத்தம் பிரதேசங்களின்

சொற்படி நடப்பவர்களாக இருப்பார்கள். சட்டசபையினர் மட்டுமல்ல, நிர்வாகஸ்தர்களும் அவ்வாறு கட்டுப்பட்டவர்கள்தான். அடிக்கடி தகராறு களும் முட்டுக்கட்டைகளும் நிரம்பிய அரசிய லமைப்பொன்றைத் தயாரிக்கக் கூடுமானல் அது இவருடையதுதான் என்பது பேராசிரியருக்குத் தென்பட வில்லை. அரசியலமைப்பை நடைமுறைக்குக் கொண்டு வரும்போது தகராறு கள் எழக்கூடுமென்பதை முன்னறிந்து அவைகள் கிளம்பாதவாறு ஏற்பாடுகள் செய்வதுண்டு. ஆனல் பேராசிரியர் கூப்லண்டின் திட்டத்தில் தகராறுகள் கிளம்புவதற்கு அகன்ற வழி திறந்திருப்பது மட்டுமன்றி, கிளம்பியபின் அவை மீண்டும் ஏற்படாதவாறு செய்யவேண்டிய காரியங்களைப் பற்றியும் ஒன்றும் கூறவில்லை.

மத்திய நிர்வாகத்தில் ஒன்று சேர்ந்துழைப்பதனல் ஒற்றுமைக் கருத்து உதயமாகும் என்பதற்கு ஆதாரமொன்றுமில்லை. மத்திய நிர்வாகத்தில் அன்ருட வேலைகளை ஒன்ருகக் கவனிக்க வேண்டியவர்கள், தங்களுக்குள் கலந் துறவாடி, தங்களுக்கு எது உசிதமென்று தோன்றுகிறதோ அதன்படி நடக்க விடாதபடி கவனமாக அரசியலை வகுத்து, ஆயிரக்கணக்கான மைல்களுக் கப்பால் உள்ளவர்கள் எது சரியென்று சொல்லுகிருர்களோ அதன்படி நடக் கும்படி செய்துவிட்டு, அதன்பின் அவர்களிடம் ஒற்றுமைக் கருத்து உதய மாகும் என்ருல் அதில் அர்த்தமேயில்லை. மத்திய நிர்வாகத்தில் வேலை பார்க் கிறவர்கள் சுயசிந்தனைச் சக்தியற்ற கைப்பாவையாகச் சந்திக்கிருர்கள். உண்மையாகக் காரியங்களைக் கவனிக்கிறவர்கள் ஒருவரையொருவர் சந்திக் காமல் வெகுதூரத்திலிருந்துகொண்டு தங்களுடைய கைப்பாவைகளின்மூலம் காரிய நிர்வாகம் செய்கிருர்கள். இந்த அரசியலின் அங்கங்கள் தங்களை இந்துப் பகுதி முஸ்லிம் பகுதி என்று நினைக்குமாறு செய்திருப்பதால் எவ்வித மான ஒற்றுமையும் தலைதூக்காதவாறு சகல தடைகளும் போடப்பட்டிருக் கின்றன. எந்தச் சமயத்திலாவது எந்த மூலையிலாவது தேசீய உணர்ச்சி எட்டிப் பார்ப்பதற்கும் இடமில்லாதவாறு செய்யப்பட்ட பின்பு ஒற்றுமை தோன்றுமென்று நம்புவதெவ்வாறு?

முஸ்லிமல்லாத ராஜ்யங்களுடன் முஸ்லிம் ராஜ்யங்கள் சம அந்தஸ் துடனும் சம அதிகாரத்துடனுமிருக்க வேண்டுமென்பதற்காக ஏற்படுத்தப் பட்டது இந்த அரசியல் என்பதை எடுத்துக் காட்டுவதே போதும். அதற்கு மேலும் அதன் அம்சங்களை ஆராய்வது வேலையற்ற வேலையாகும். எங்கே யாவது இந்த அரசியலமைப்பில், சம அந்தஸ்தும் சம அதிகாரமும், சமப் பொறுப்பும் குறிக்கப்பட்டிருக்கின்றன என்று கூறக் காணேம். அதற்கு மாருன விஷயமே கருதப்படுகிறது. பாதுகாப்பு ஒருபுறமிருக்க, பிரதேச மத்திய நிர்வாகத்தை நடத்துவதற்கு அதிகச் செலவாகாது என்று கூறப்படுகிறது. சமீப யுத்தத்திற்கு முன்பு சுங்க வருமானத்தால் பாதுகாப்பு நிர்வாகம் நடத்தப்பட்டது. சண்டைக்குப் பின்னும் அதே நிலைமை யிருக்குமானல் பாதுகாப்பு சமாளிக்கபட்டு விடும் என்று கருதப்படுகிறது. இந்த நான்கு பிரதேசங்களும் சுங்கவரி எவ்வளவு கொடுத்தன, இனிமேல் எவ்வளவு கொடுக்கக்கூடுமென்பதை இந்த நூலறிவுள்ள பேராசிரியர் ஆராயவில்லை. ஆராய்ச்சிக்குரிய விஷயமில்லை எனக் கொண்டார் போலும். வருமானத்தை அனுபவிப்பதற்கு முஸ்லிம் பிரதேசங்களுக்கும் சம அதிகாரம் இருக்க வேண்டும்; முஸ்லிமல்லாத பிரதேசங்கள் இவ்விதச் சலுகையை முஸ்லிம் பிரதேசங்களோடு கூடி அனுபவிக்கக் கூடாது; வரியின் பெரும் பகுதியைக்

கொடுக்கும் விசேஷ உரிமையை மாத்திரம் முஸ்லிமல்லாத பிரதேசங்கள் அனுபவிக்கவேண்டும் என்ற நியதிகளை வகுத்துவிட்டால் போதும் என்று இப்பெருந்தகையாளர் நினைக்கிறார் போலும். ஒற்றுமை நல்லதுதான். ஆனால் அதற்கு இவ்வளவு அதிக விலையா?

## 37. சர் சுல்தான் அகமதுவின் திட்டம்

சர் சுல்தான் அகமது, 'இந்தியாவுக்கும் பிரிட்டனுக்குமிடையில் ஒரு ஒப்பந்தம்' என்ற புத்தகத்தில் மூன்றாவதான ஒரு திட்டத்தை வகுத்திருக்கிறார். பாகிஸ்தான் பிரேரணையை நன்கு ஆராய்ந்துவிட்டு இம்முடிவுக்கு வருகிறார். 'இந்தியாவின் இதர பாகத்தோடு தொடர்பின்றி வடமேற்கு வடகிழக்குப் பாகிஸ்தான்கள் பூரண சுதந்திரமுள்ளவைகளாக இருக்குமானால், அவை நடைமுறையில் நிறைவேறாது. ஏனெனில் அவைகளுக்கு ராணுவப் பாதுகாப்போ, பொருளாதார உறுதிப்பாடோ இருக்காது. மேலும் இந்தியாவின் இதர பாகங்களில் உள்ள முஸ்லிம்களுக்கு இவை நியாயத்தையும் அமைதியையும் வாங்கித்தர முடியாது. ஆகவே பாகிஸ்தானுக்கு மாற்றுத் திட்டங்களைக் கண்டுபிடித்து ஆராயவேண்டும். அப்படிச் செய்வதில் நொந்து வாடும் இந்திய முஸ்லிமைத் திருப்தி செய்ய வேண்டுமென்பதை மறந்துவிடக்கூடாது. வாழ்க்கைத் துறையின் ஒவ்வொரு பக்கத்திலும் இந்து ஆதிக்கத்தைக் கண்டு இந்திய முஸ்லிம் நடுங்குகிறான்.'[1] சர் சுல்தான் அகமது தமது மாற்றுத் திட்டத்தைச் சமர்ப்பிக்கிறார். அது இந்தியாவில் இன்று காணப்படும் நிலைமைகளுக்கு நியாயமற்ற தாகாதென்றும், நடைமுறைக்குகந்தென்றும் கூறுகிறார். தமது திட்டத்தை பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நகல் அறிக்கையின்மீது கட்டியதாகக் கூறுகிறார். அதற்கு இந்திய யூனியன் என்று பெயர் கொடுத்திருக்கிறார். இந்த யூனியனில் ஒரு மத்திய நிர்வாகத்தைக் கொண்ட அனேக சமஷ்டிகள் இருக்கும். எங்கெங்கு அவசியமோ அங்கங்கு பகுதிகளின் எல்லைகள் திருத்தியமைக்கப்படலாம். வடமேற்கும் வடகிழக்கும் இத்தகைய இரண்டு பகுதிகளாக இருக்கக்கூடும். முஸ்லிம்களுக்கு நல்ல பெரும்பான்மை கிடைக்கும்படி அவைகளின் எல்லைகளை மாற்றி யமைத்துவிடலாம். இந்தப் பகுதிகள் யாவும் உள்நாட்டு விவகாரங்களில் முழு அரசுரிமை பெற்றிருக்கும். பகுதிகள் தங்களுக்குள் கூடிப் பேசிச் சில அதிகாரங்களை யூனியனிடம் ஒப்படைக்கும்.

i. அதிகாரங்கள்: கீழ்வரும் விஷயங்களில் மத்திய அரசங்கத்திற்கு அதிகாரமும் ஆட்சியும் இருக்கும். அவையாவன: பாதுகாப்பு, வெளிநாட்டுத் தொடர்புகள், நாணயம், சுங்கம், ஒலிபரப்புதல், ஆகாயப் போக்குவரத்து, ரயில்வே, கப்பல், தந்தி, தபால். மிச்ச அதிகாரங்கள் பகுதிகளிடமே யிருக்கும்.

ii. சமஷ்டிச் சட்டசபை அமைப்பு: முஸ்லிம்கள் 40 சதவிகிதம், இந்துக்கள் 40 சதவிகிதம், தாழ்த்தப்பட்டோர் 10 சதவிகிதம். இந்தமாதிரி செய்வதால் பெரும்பான்மை நிலையற்றதாய் நெகிழும் தன்மை கொண்டதா யிருக்கும். பலவேறு கூட்டத்தினரின் ஆதரவைப் பெற்றுத்தான் ஒரு பெரும்பான்மை உண்டாக முடியும். இந்துக்களும் பெரும்பான்மையாகலாம். அதேபோல முஸ்லிம்களும் பெரும்பான்மையாகலாம். அப்படியே வருகிற பெரும்பான்

1. Sir Sultan Ahmed: *A Treaty between India and the United Kingdom*, p. 88.

மையும், எதிர்க்கட்சியின் நல்லெண்ணத்தையும் ஆதரவையும் எதிர்பார்க்கக் கூடிய சொற்பப் பெரும்பான்மையாகவே இருக்கமுடியும்.

iii அரசியல் நிர்ணய சபை ஏற்படுத்தும் முறை: இந்துக்களுக்கும் முஸ்லிம் களுக்கும் 80 ஸ்தானங்கள். இவைகள் 40 தொகுதிகளிலிருந்து நிரப்பப்பட வேண்டும். ஒவ்வொரு தொகுதியும் ஒரு முஸ்லிம், ஓர் இந்து ஆக இருவரை அனுப்பவேண்டும். ஒவ்வொரு தொகுதியும் 500 வட்டாரங்களாகப் பிரிக்கப் படவேண்டும். ஒவ்வொரு வட்டாரத்திலுமுள்ள வயதுவந்த முஸ்லிம்களையும் இந்துக்களையும் கணக்கெடுத்துப் பதிவு செய்திருக்கவேண்டும். இவர்கள் படித்திருக்கலாம், அல்லது சொத்துடையவர்களாக யிருக்கலாம் அல்லது எந்த வரியாவது செலுத்தலாம். ஒவ்வொரு வட்டாரமும் ஒரு முஸ்லிமையும் ஓர் இந்துவையும் தனித்தொகுதி மூலம் தேர்ந்தெடுக்க வேண்டும். இப்படி யாக ஒவ்வொரு தொகுதியிலும் தனித்தேர்தல் மூலமாக 500 முஸ்லிம்களும் 500 இந்துக்களும் பிரதிநிதிகளாக வருவார்கள். இந்த ஆயிரம் பேரும் சேர்ந்து கூட்டுத் தேர்தல் நடத்தி ஒரு முஸ்லிமையும் ஓர் இந்துவையும் தேர்ந்தெடுக்க வேண்டும். தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் இதரருக்கும் இத்தகைய ஒரு வழியைக் கண்டுபிடிக்கலாம். இப்படி அமைக்கப்பட்ட கீழ் சபைகளின் 10 சத வீதமாவது 5 சத வீதமாவது நிர்ணய சபையாகும்.

iv. நிர்வாகம்: (அ) மந்திரி சபையிலும், சட்டசபையில் காணப்பட்ட வகுப்பு விகிதம் இருக்கும். (ஆ) நிர்வாக சபை, சட்டசபைக்குப் பொறுப் புள்ளதாக இருக்கும். (இ) முதலில் ஒரு முஸ்லிம், பிறகு ஒரு முஸ்லிமல்லாதார் என பிரதமர் பதவி மாறிவரும். (ஈ) பிரதமர் முஸ்லிமாக இருந்தால் உதவிப் பிரதமர் இந்துவாகவும், பிரதமர் இந்துவாக இருந்தால் உதவிப் பிரதமர் முஸ்லிமாகவும் இருப்பர். (உ) ராணுவ மந்திரி முஸ்லிமல்லாதவராக இருந் தால், பாதுகாப்பு மந்திரி முஸ்லிமாக இருப்பார். அப்படியே மாறியும் இருப்பர். (ஊ) மந்திரிசபை கூட்டுப் பொறுப்பு வாய்ந்ததாக வழக்கத்திலிருக்கும். இது ஒரு கொள்கை யென்பது ஒருபுறமிருக்க, ஏதாவது ஓர் இனத்தின் கருத் துக்களை நன்குணராமல் அதைப் பாதிக்கக்கூடிய காரியங்களைச் செய்ய முடியாதவாறு தடுக்கும். ஒரு வகுப்பைச் சேர்ந்தவர்கள் ராஜிநாமா செய்து விட்டால் மந்திரிசபை கலைந்துவிடும்.

v. பிரஜைகள் நிர்வாக உத்தியோகம்: திறமையைக் கவனித்து உள்நாட்டு உத்தியோகங்களுக்கு மேற்கண்ட விகிதமே மேற்கொள்ளப்படும். திறமை யையும் அனுபவத்தையும் பொறுத்து உயர்வு அளிக்கப்படும்.

vi. ஸ்தல ஸ்தாபனங்கள்: ஸ்தல சுயஆட்சி ஸ்தாபனங்களான கார்ப்ப ரேஷன், முனிஸிபல் கௌன்சில் இன்னும் இதர போர்டுகள், கமிஷன்களில், மேற்கூறிய விகிதமே மேற்கொள்ளப்படும்.

vii. ராணுவ உத்தியோகங்கள்: இந்தியப் போர்வீரரில் முஸ்லிம்கள் 50 விகிதமும், முஸ்லிமல்லாதவர் 50 சதவிகிதமுமா யிருப்பர்.

viii. பாதுகாப்பு ஷரத்துகள்: இது விஷயமாக காங்கிரஸ் வெளியிட் டுள்ள ஜீவாதார உரிமைப் பிரகடனத்தையும், சிறுபான்மை உரிமைப் பிர கடனத்தையும், பாதுகாப்புக் கோரிக்கைகளைக் கொண்ட ஸ்ரீ ஜின்னாவின் பதி னான்கு அம்சங்களையும் கவனிக்கலாம்: (அ) மத, சமூக, கலாசாரப் பாது காப்புகள். (ஆ) அரசியல், நிர்வாகப் பாதுகாப்புகள். (அ) வைப் பொறுத்த வரை வந்தேமாதரப் பாட்டில் எதிர்க்கப்படும் பகுதிகளை எடுத்துவிட்டு அதோடு இக்பால் கவிஞருடைய பாடல்களும் அதிகாரபூர்வமாகச் சேர்க்கப்

படவேண்டும், காங்கிரஸ் கொடியில் முஸ்லிம் அறிகுறி சேர்க்கப்பட வேண்டும். பசுக்கொலையைப் பொறுத்துக்கொள்ள வேண்டும். ஆனால் அதை பிரமாதமாக பகிரங்கப்படுத்திக்கொண்டு செய்யவேண்டாம். மேளதாள ஊர்வலத்தினால் யாருக்கும் கஷ்டம் ஏற்படக்கூடாது. மசூதிக்கு முன்னால் சிறிது அமைதி யிருக்குமானால் இந்து ஊர்வலம் தடுக்கப்படாதென அவர்களுக்கு உறுதியளிக்கவேண்டும். தகராறை ஒழிக்கவேண்டி மத்திய நிர்வாக மொழி ஆங்கிலமும் ரோமன் லிபியும் இருக்கவேண்டும். மாகாணங்களில் அங்குள்ள மொழிகளையே மேற்கொள்ளலாம். (ஆ) ஒரு மாகாணத்தை மாற்றியமைப்பதால் அங்குள்ள முஸ்லிம் பெரும்பான்மை பாதிக்கப்படுமாயின் அப்போது அளிக்கவேண்டிய பாதுகாப்புகள் : முஸ்லிம்கள் தனிநபர் சட்டத்திற்கும் கலாசாரத்திற்கும் சட்டபூர்வமான உத்தரவாதம். அரசாங்கத்திலும் ஸ்தலஸ்தாபனங்களிலும் உத்தியோகங்களுக்குச் சட்டபூர்வமான வகுப்புவாரி விகிதம் சட்டபூர்வமாக்கப்பட வேண்டும். பாகிஸ்தான் கோரிக்கை கைவிடப்பட்டால் மாகாணங்களை மாற்றி யமைப்பதென்பது இராது. மற்றப் பாதுகாப்புகளை ஒப்புக்கொள்ள வேண்டும். இதற்கிடையில் ஏற்படக்கூடிய முறையீடுகளைச் சமாதானம் செய்துவிடவேண்டும்.

ix. பாதுகாப்புகளுக்கு உத்தரவாதம்: சிறுபான்மையோரைக் கவனிக்கும் பொறுப்பு பிரிட்டனிடமே யிருப்பதை பிரிட்டிஷ் நகல் அறிக்கை ஆதரித்தது. இந்திய யூனியனுடைய பூரண அரசுரிமை யதிகாரத்தையும் மதிப்பும் நம்பிக்கையுமுடைய இந்தியா இந்த நிலைமையில் ஏற்றுக்கொள்ளாது. வேறு எந்த வெளி உத்தரவாதத்தையும் ஏற்காது. இந்திய யூனியனின் பூரண அரசுரிமை யதிகாரம் வெளி உத்தரவாதத்திற்கும் மேலானது. 'நிலைமை இவ்வாறானால் நாங்கள் எங்கள் நாட்டுச் சட்டங்களையே நம்புவோம். மாகாண நீதிமன்றங்களிலிருந்து எங்களுக்கு நியாயத்தைப் பெறுவோம். அல்லது யூனியனுடைய சுப்ரீம் நீதி மன்றத்துக்குச் செல்வோம். இல்லாவிட்டால் சர்வதேச நீதி மன்றத்துக்குச் செல்வோம்'.

x. கலாசாரப் பாதுகாப்புகள் : எஸ்டோனியா கலாசார சுதந்திர விதிகளின்படி, மதம், கல்வி, அறச்சாலைகள் சம்பந்தமான பாதுகாப்புகள் ஏற்படுத்தலாம். சிறுபான்மை ஸ்தாபனங்களைக் காக்கவும் அவர்களுடைய மத, சமூக, கல்வி உரிமைகளைக் காப்பாற்றவும் கலாசாரக் கழகங்களை ஒவ்வொரு பகுதியிலும் ஏற்படுத்தலாம்.

xi. அரசியல் பாதுகாப்புகள் : ஒரு வகுப்பாரைப் பாதிக்கிறதாகக் கருதப்படும் எந்தச் சட்டத்தையும் கொண்டுவரக்கூடாது. அவ்வகுப்பினரின் முக்கால்வாசிப்பேர் ஆதரித்தால் அதைக் கொண்டுவரலாம்.

xii. xi-வது பாராவில் கூறிய பாதுகாப்புக்குட்பட்டு, சீக்கியர்கள் சம்பந்தமான தீர்மானங்களை பஞ்சாப் சட்டசபையில்தான் கொண்டுவரலாம்.

xiii. பார்ஸி வகுப்பு சம்பந்தமான சட்டதிட்டங்கள், xi பாராவில் கூறப்பட்ட பாதுகாப்புக்குட்பட்டு, பம்பாய் சட்டசபையில்தான் கொண்டு வரப்படவேண்டும்.

பகுதிகள் (மாகாணங்கள்): சட்டசபைகள், நிர்வாக சபைகள், சமஷ்டி அரசாங்க உத்தியோகங்கள் முதலியவற்றில் பிரதிநிதித்துவம் கொடுப்பதற்கு கீழ்க்காணும் யோசனைகளை மேற்கொள்ளலாம்.

(அ) சிறுபான்மைகள் தனித்தொகுதித் தேர்தல் முறையை அனுஷ்டிக்கலாம். மத்திய அரசாங்கச் சட்டசபைக்குப் பிரதிநிதிகளை அனுப்புவதற்கு

அரசியலமைப்புச் சபைக்கு பிரதிநிதிகள் அனுப்புகிற முறையைக் கையாளலாம்.

(ஆ) சிறுபான்மைகள் இப்பொழுது தாங்களனுபவித்துவரும் அதிகப் படி ஸ்தானத்தை வைத்துக்கொள்ளலாம். வங்காளத்தில் ஐரோப்பியர்க ளனுபவித்துவரும் அதிகப்படி ஸ்தானத்தை மாத்திரம் குறைத்துவிட வேண்டும்.

(இ) பகுதிகள் அதாவது மாகாணங்களின் எல்லைகளை மாற்றி அமைக்க லாம். ஆனால் பெரும்பான்மையைச் சிறுபான்மையாக மாற்றும்படி எல்லைகளை மாற்றிவிடக் கூடாது.

(ஈ) பகுதிகள் அல்லது மாகாண சட்டசபைகளில் கையாளப்படும் வகுப்பு விகிதத்தையே நிர்வாக உத்தியோகம், இதர உத்தியோகத்திலும் அனுஷ்டிக்கவேண்டும். அதோடு திறமையும் கவனிக்கப்படவேண்டும்.

(உ) (iv), (v), (vi), (viii), (ix), (x), (xi), (xii) பாராக்களில் கண்ட விதிகள், எங்கெங்கு சாத்தியமோ அங்கெல்லாம் முக்கியமாக சிறுபான்மை உரிமைகள் பற்றி, மாகாணங்களுக்கும் பொருந்தும். மற்றொரு மாற்றும் கூறப்பட்டிருக்கிறது. இதன்படி மத்திய சட்டசபையில் இந்துக்களும் முஸ்லிம் களும் மாறிமாறி 51 சதவிகிதம் இருக்கும்படி செய்து அவர்களது அந்தஸ்தைச் சமமாக்குவதாம். இதன்மூலம் அவர்களுடைய வாக்குச் சேகரிக்கும் சூழ்ச் சிகள் ஒழிந்துவிடும். ஒருவரையொருவர் புரிந்துகொள்ளவும் விட்டுக் கொடுத்துத் தாராளமாகப் பழகவும் முடியும். அடுத்த முறையில் எதிர்க்கட்சி ஆட்சிக்கு வந்து தான் செய்ததைத் தனக்குத் திருப்பிச் செய்யும் என்ற எண்ண மானது அவர்களை நிதானமாகவும் நியாயமாகவும் நடக்கச் சொல்லும். இதிலே ஒரே ஒரு குறைபாடு இருக்கிறது. முந்திய முறைப்படி இதர சிறு பான்மைகள் கையில் பெரும்பான்மையை உண்டாக்கும் சக்தி இருக்கிறது. ஆனால் இந்த மாற்றுமுறையின் பிரகாரம் அவைகள் இருக்கிற இடமே தெரிய வில்லை.

சர் சுல்தான் அகமதுவின் திட்டம் நேர்மையானது, வெளிப்படை யானது. தான் என்ன விரும்புகிறதோ அதைத்தான் அது கூறுகிறது. தனது உண்மையான நோக்கத்தையும் கருத்தையும் மறைப்பதற்கு பிரதேசத்வம் என்ற போர்வையையோ வேறு சொல்லடுக்கையோ அது மேற்கொள்ளவில்லை. ஆகவே அதன் தகுதிகளைக் கண்டு ஆராயத்தக்கது. முஸ்லிம் லீகின் கருத்தை ஏற்றுக்கொண்டவர் தவிர வேறு யாரும் சமஷ்டி அரசியலை எதிர்க்கவில்லை. எந்தவிதமாக வந்தாலும் எவ்வளவு லேசாக வந்தாலும் எந்தச் சந்தர்ப்பத்திலும் சமஷ்டியை எதிர்ப்பதாகக் கூறிய கட்சி முஸ்லிம் லீக் ஒன்றுதான். மத்திய அரசாங்கத்தின் ஆதிக்கத்திலும் அதிகாரத்திலு முள்ள விஷயங்கள் யாவை என்பதுபற்றிக் கூடிப் பேசி ஒரு சமாதானத்துக்கு வந்துவிடலாம். அது அவ்வளவு பெருந்தடையாக இருந்துவிடாது. சர் சுல்தான் அகமதுவால் கொடுக்கப்பட்ட ஜாபிதா கிட்டத்தட்ட விரிவானதாக இருக்கிறது. பெரியபெரிய முன்னேற்றத் திட்டங்களைப்பற்றி எவ்வாறு நடவடிக்கை யெடுப்பது என்பதுபற்றி மாத்திரம் அவர் ஒன்றுங் கூறவில்லை. ஒருகால் அதுபற்றி கருத்து வேற்றுமை ஏற்படக்கூடும். உண்மையில் அதுவும்கூட அவ்வளவு கொண்டு செலுத்தமுடியாத கஷ்டங்களை உண் டாக்கும் விஷயமல்ல. 1942 ஆகஸ்டில் காங்கிரஸ் தீர்மானம் செய்துவிட்ட படியால் மிச்ச அதிகாரங்கள் மாகாணங்களிடம் ஒப்படைக்கப்படுவதுபற்றி

எந்த காங்கிரஸ்காரரும் தடைசொல்லப் போவதில்லை. மிச்ச அதிகாரங்களைப் பற்றிய காங்கிரஸ் தீர்மானத்தை அரசாங்கமும் கடுமையாகத் தாக்கி யிருக்கிறது. அகில இந்திய முஸ்லிம் லீக் தலைவரும் தாக்கியிருக்கிறார்.

திட்டத்தின் மற்ற அம்சங்கள் சில சொந்த அபிப்பிராயங்களின்மேல் கட்டப்பட்டனவாம். எல்லாவற்றிற்கும் அடிப்படையான அபிப்பிராயம் பெரும்பான்மையாக இருக்கும் இந்துக்கள், முஸ்லிம்களை ஒடுக்க வேண்டு மென்ற நோக்கத்தோடு ஒன்று கூடினார்கள், ஒன்றுசேர்ந் திருக்கிறார்கள் இன்னும் ஒன்றுசேர்ந் திருப்பார்கள் என்பதாம். ஆகவே அவர்கள் அவ்வாறு செய்யவிடாதபடி அரசியலமைப்பு ஏற்படுத்துவது அவசியம். இந்துக்களுக்கு மூன்று பக்கங்களிலிருந்து தாக்குதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் அதற்கு சர் சுல்தான் அகமது பொறுப்பாளியல்ல. இதன் முதல் தாக்குதல் தாழ்த்தப் பட்டவரை இந்துக்களினின்றும் பிரித்து இந்துக்களுடைய விகித பலத்தைக் குறைப்பதாகும். இரண்டாவது தாக்குதல் மலைஜாதியினரையும் இந்துக்களி லிருந்து பிரித்து மேலும் இந்து விகித பலத்தைக் குறைப்பதாகும். மனிதவர்க்க ஆராய்ச்சியாளர்களின் கருத்துப்படி இம் மலைஜாதியினரும் இந்துக்களோடு தான் சேர்த் தெண்ணப்பட வேண்டியவர்கள். இவ்விதமாக இந்துக்களுடைய நியாயமான பிரதிநிதித்துவத்தைக் குறைத்த பிற்பாடும், அரசியலமைப்பு ஏற்பாடு மூலமாக அவர்களது விகித பலத்தைக் குறைக்க முற்படுவது மூன்றாவது விதமான தாக்குதல். 13.5 சத வீதமுள்ள ஹரிஜனங்களையும், 5.65 சத வீதமுள்ள மலைஜாதியினரையும் இந்துக்களிடமிருந்து பிரித்தபின் அவர் கள் 51 சத விகித மிருக்கிறார்கள். முஸ்லிம்களோ 26.83 சத விகித மிருக் கிறார்கள். 26.83 சத விகிதமுள்ள முஸ்லிம்களுக்கும் 40 சத விகித பிரதிநிதித் துவம் கொடுத்துயர்த்தி 51 சத விகிதமாகக் குறைக்கப்பட்ட இந்துக்களை இன் னும் 40 சத விகிதப் பிரதிநிதித்துவம் கொடுத்துத் தாழ்த்தவேண்டு மென்கிறார் சர் சுல்தான் அகமது. தாழ்த்தப்பட்டோருக்காகப் பரிந்துபேச முன்வரும் லீகும் அவர்களுடைய பிரதிநிதித்துவத்தை 10 சத விகிதத்துக்குக் குறைக்கிறது. இது விஷயமாக பழைய சரித்திரத்தை நினைவுபடுத்திக்கொள்வது வீண் வேலையாகாது. இந்திய தேசிய காங்கிரஸுக்கும் அகில இந்திய முஸ்லிம் லீகுக்கும் நடந்த லக்ஷ்மணபுரி ஒப்பந்தம், எங்கெங்கு முஸ்லிம்கள் சிறுபான்மை யாக இருக்கிறார்களோ அங்கெல்லாம் அவர்களுக்கு அதிகப்படி ஸ்தானங்கள் கொடுக்க இணங்கியது. இவ்விதமாக அவர்கள், ஜனத்தொகையில் 14 சத வீதமும் 6.15 சத வீதமுமாக இருக்கிற ஐக்கிய மாகாணத்திலும் சென்னையிலும் அவர்கள் முறையே 30 சத விகிதமும் 15 சத விகிதமும் பிரதிநிதித்துவம் பெற்றார்கள். ஜனத்தொகையில் 10 சத வீதமும் 11 சத வீதமும் உள்ள அவர்கள் பீஹார், ஒரிஸ்ஸா மாகாணங்களில் 25 சத விகிதப் பிரதிநிதித்துவம் பெற்றார்கள். ஆனால் ஜனத்தொகையில் 52.3, 51, சத விகிதப் பெரும்பான்மை யாக இருக்கும் அவர்கள் வங்காளத்திலும் பஞ்சாபிலும் முறையே 50 சத விகிதமும் 40 சத விகிதமும் பிரதிநிதித்துவம் பெற்றார்கள். இவ்வொப்பந்தம் அரசாங்கத்தால் ஒப்புக்கொள்ளப்பட்டது. எல்லா வகுப்பினருக்கும் அவ்வாறே 1920-ம் வருடத்திய அரசியலமைப்பில் பிரதிநிதித்துவம் அளிக்கப் பட்டது. இருந்தாலும் முஸ்லிம்களுக்கு அது திருப்தியளிக்கவில்லை. அதை நிராகரித்துவிட்டார்கள். முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கின்ற மாகாணங்களிலும் அவர்களது பிரதிநிதித்துவத்தைக் குறைக்கக்கூடாது, அவர்களைச் சிறுபான்மை ஆக்கிவிடக்கூடாது, மற்றக் கட்சிகளோடு சம

நிலைக்கும் கொண்டுவந்து விடக்கூடாது என்றெல்லாம் வாதாடினார்கள், இப்பொழுது நிலைமை முற்றிலும் தலைகீழாகிவிட்டது. பெரும்பாலாக உள்ள இந்துக்களை ஆதரவற்ற சிறுபான்மை யாக்குவதற்கான திட்டங்களை, முஸ்லிம் லீகின் நோக்கத்தில் பரிவுகொண்ட அன்பர்கள் கொண்டுவருகிறார்கள். இது விளையாட்டாகவல்ல, வினைக்காகவே. இந்தியா முழுவதிலும் இருப்பதைப் போல இந்துக்கள் பெரும்பான்மையாக இருந்து ஆட்சி செய்தால் அப்பொழுது பெரும்பான்மை ஆட்சிமுறை கெடுதலாகிறது. ஆனால் அதே பெரும்பான்மை ஆட்சிமுறை முஸ்லிம்களால் நடத்தப்படுமானால் - வடமேற்கிலும் வடகிழக்கிலும் இருப்பதைப்போல - அப்போது அது சர்வ நியாயமாக மாறி வருகிறது. இத்தகைய யோசனைகளையும் எண்ணங்களையும் கொண்டுதான் சர் சுல்தான் அகமது மத்திய அரசாங்கத்துக்குப் பிரதிநிதித்துவத்தைப் பிரித்துக் கொடுக்கிறார். முஸ்லிம்களை 40 சத விகிதத்துக்கு உயர்த்தி இந்துக்களை 40 சத விகிதத்திற்கு இறக்கி இரு வகுப்பையும் சமமாக்கிவைக்கிறார். இவர்களது நிலைமையைச் சமமாக்கி, இவர்கள் தங்களுக்குப் பலம் வேண்டுமானால் மற்றச் சிறுபான்மைகளின் கையை எதிர்பார்க்கும்படியாகத் தாம் வைத்துவிட்டதாகவும் அதுவே தமது திட்டத்திலுள்ள சிறப்பென்றும் கொண்டாடுகிறார் சர் சுல்தான் அகமது.

இவ்வாறு சமப்படுத்துவது சட்டசபையோடு நின்றுவிடுகிறதா? இல்லை. எங்கும் ஊடுருவிப் பாய்கிறது. நிர்வாகப் பதவிகள், உத்தியோகங்கள் எங்கும் இதே மாட்சி. சில காரியங்களில் இன்னும் மேலே போகிறது. பிரதமர் பதவிக்கு ஒரு முஸ்லிமும் முஸ்லிமல்லாதவரும் மாறி மாறி வரவேண்டுமாம். முஸ்லிமல்லாதவர்களில் யார் யார் இருக்கிறார்கள்? கிறிஸ்தவர்கள், சீக்கியர்கள், பார்சிகள், மலைஜாதியினர், தாழ்த்தப்பட்டோர், இன்னும் யார் யார் முஸ்லிம்களில்லையோ அவர்கள் யாவரும் உண்டு. இந்துக்களும் முஸ்லிம்களல்லாதவரே. இவ்வரசியலமைப்பு சட்ட பூர்வமாக, ஒரு குறிப்பிட்ட காலத்திற்கப்புறம், அதாவது நான்கோ அல்லது ஐந்தோ ஆண்டுகளுக் கொருமுறை நம்மவர் பிரதமர் ஆவார் என்ற உறுதியை முஸ்லிம்களுக்கு அளிக்கிறது. இந்துக்களோவெனில் ஒதுக்கித் தள்ளப்படுகிறார்கள். முஸ்லிம்கள் உள்பட எல்லாச் சிறுபான்மைகளும் ஒன்று கூடிவிட்டால் பிரதமர் பதவி இந்துக்களுக்குக் கிடைப்பதரிது. பிரதமர் பதவி கொடுக்கக் கூடாதென்ற நோக்கத்தோடு எல்லாச் சிறுபான்மைகளும் கூடிவிடுவார்கள் என்று நினைத்துக் கொள்வது நியாயமல்ல எனக் கூறக்கூடும். முஸ்லிம்களுக்குப் பிரதமர் பதவியைக் கொடுக்கக்கூடாதென்ற நோக்கத்தோடு இந்துக்களோடு இதரச் சிறுபான்மைகளெல்லாம் சேர்ந்துகொள்ளும் என்று நினைப்பதைவிட அது நியாயமற்றதாகிவிடுமா? இந்துக்களும் இதரச் சிறுபான்மைகளும் சேர்ந்து, முஸ்லிமைப் பிரதமராக்க விடக்கூடாததற்காக இருக்கும் சந்தர்ப்பத்தைக் காட்டிலும் முஸ்லிம்களும் இதரச் சிறுபான்மைகளும் சேர்ந்து இந்துவைப் பிரதமராக்கவிடாமல் செய்யும் சந்தர்ப்பமே அதிகமிருக்கிறது. மற்றவர்களை யெல்லாம் விலக்கிவிட்டு இந்துக்களும் முஸ்லிம்களும் மாத்திரம்தான் மாறிமாறி பிரதமர் பதவிக்கு வரவேண்டுமென்று சர் சுல்தான் கூறாதது நல்லவேளை. இம்மாதிரியே ராணுவத் தளபதி முஸ்லிமல்லாதவராக இருந்தால் பாதுகாப்பு மந்திரி முஸ்லிமாக இருக்கவேண்டும். இந்நிலைமை மாறியும் இருக்கவேண்டுமென்கிறோம். இங்கும், முஸ்லிம்களும் இதரச் சிறுபான்மையினரும் சேர்ந்துகொண்டால் இவ்விரு பதவிகளிலிருந்தும் இந்து விலக்கப்படுவார். இவைக

ளெல்லாம் முஸ்லிம் சிறுபான்மையினரின் உரிமைகளையும் நலன்களையும் அரசிய லமைப்பு முறையில் பாதுகாப்பதற்காக உதித்தனபோன்று தென்படவில்லை. ஆனால் வேண்டுமென்றே இந்துக்களை, அவர்கள் இந்துக்களாக இருக்கின்ற காரணத்தால் தண்டித்து அடக்கி யொடுக்குவதுபோல் காணப்படுகிறது.

ஸ்தல ஸ்தாபனங்களைப்பற்றிய ஏற்பாடுகள், சர் சுல்தான் அகமதுவின் திட்டத்தில் (VI) பாராவில் கண்டவை புரியக்கூடாதவையாக இருக்கின்றன; எல்லா மாகாணங்களிலும் அவர்களுடைய ஜனத்தொகை விகிதம் எவ்வாறு இருக்கிறதென்பதைப் பொருட்படுத்தாமலா இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் நாற்பது, நாற்பது என்ற சதவிகிதத்தில், எல்லா ஸ்தாபனங்களிலும் பிரதிநிதித்துவம் அளிப்பது? கார்ப்பரேஷன், முனிஸிபல் கௌன்சில், இதர போர்டுகளிலுமா? ஆற அமர யோசித்துத் தீர்மானிக்கக் கூடிய பேச்சாக இது தோன்றவில்லை. இதன் விளைவுகளென்ன என்பதை யோசிக்காது இதைச் சொல்லிவிட்டார். இது சர் சுல்தான் அகமதுவின் தவறென்றே கருதுகிறேன். ஒரிஸ்ஸாவிலுள்ள முனிஸிபாலிடியிலோ அல்லது ஜில்லா போர்டிலோ முஸ்லிம் களுடைய ஜனத்தொகை 1 அல்லது 1·5 சத விகிதமாயிருக்கும்பொழுது அவர்களுடைய பிரதிநிதித்துவம் 40 விகிதமாக இருக்கவேண்டுமென்று அவர் கூறினால் அதைத் தெரிந்தே கூறுகிறாரா என்பதை நம்மால் நினைக்கக் கூடவில்லை.

ராணுவத்தினமைப்பில் முஸ்லிம்கள் 50 சதவிகிதமும் முஸ்லிமல்லாதவர் 50 சதவிகிதமுமாயிருப்பர். இதற்கும் என்ன அர்த்தம்? அவைகளில் ஓர் இந்துகூடச் சேர்க்கப்படாவிட்டால் அதுவும் நியாயமற்றதாகிவிடாது, சட்ட பூர்வமான செயலாகவே யிருக்கும். முஸ்லிம்களோடு சீக்கியர்களும் கிறிஸ்தவர்களும் கொண்டதாக முழுவதும் இருக்கலாம். சர் சுல்தான் அகமது இவ்வாறு கருதவில்லை என்று சொல்லலாம். ஆனால் நான் அவருடைய வார்த்தைக்குள்ள பொருளைத்தான் கூறுகிறேன். எப்பொழுது முஸ்லிம்க ளுடைய உரிமைகளைப்பற்றிக் கூறும்பொழுது தெளிவான வார்த்தைகளைக் கையாளுகிறாரோ அதே போல இதரருடைய நல உரிமைகளைப்பற்றிக் கூறும் பொழுதும், இத்தகைய உயர்ந்த பெருமையுடைய மனிதர் தெளிவான வார்த்தைகளை உபயோகிக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பது நியாயமே.

மதம், சமூகம், கலை சம்பந்தமான பாதுகாப்புகளை விவரமாகக் கவனிக்க வேண்டியதில்லை. இவரது திட்டத்தின்படி, இந்து ஊர்வலங்கள் மாத்திரம், ஆபத்து ஏற்படாமலிருப்பதற்காக மசூதிகளின் முன்பு கப்சிப் என்று போக வேண்டும் என்பதையும், பசுக்கொலையும் 'அஸான்' கூவுதலும் தடைப்படுத்த முடியாதென்பதையும் மாத்திரம் எடுத்துக்காட்டினால் போதுமானது.

மத்திய அரசாங்கம் ஆங்கிலமொழியையும் ரோமன் லிபியையும் கையாள வேண்டுமென்றும், மாகாண அரசாங்கங்கள் தத்தம் மாகாண மொழிகளையே உபயோகிக்க வேண்டுமென்றுங் கூறி மொழி, எழுத்து சம்பந்தமான தகராறுகளை முடிக்கிறார்.

இத்திட்டத்திலுள்ள ஒருதலைப்பட்சமான ஷரத்துக்களை எடுத்துக்காட்டி அதனால் இந்துக்களுக் கேற்படும் அநியாயத்தையும் அநீதியையும் குறிப்பிட் டுள்ளேனாயினும், கலந்துபேசி ஆராய்வதற்குரிய அம்சங்கள் அதில் இல்லை என்று நான் கருதுவதாகக் கொள்ளக் கூடாது. வெறுப்பும், பாரபட்சமு மின்றிக் கலந்துபேசினால் இத்திட்டத்தைத் திருத்தக்கூடும்.

# 38. சர் அர்தேஷிர் தலால் திட்டம்

1943 மே மாதத்தில் 'பாகிஸ்தானுக்கு மாற்றுத் திட்டம்' என்ற தலைப்பில் சர் அர்தேஷிர் தலால் சில கட்டுரைகள் எழுதியுள்ளார். அதில் அவர் குறிப்பிடுவதாவது: 'இந்தியா, கடல்களையும் மலைகளையும் இயற்கை யெல்லைகளாக உடையது. அது தெளிவாக வரையறுக்கப்பட்ட பூகோளப் பகுதி. அதுமட்டுமல்ல. எண்ணிறந்த காலமாக, அது ஒரு கலாசார ஆத்மீகத் தனிப்பகுதியாகவும் இருந்துவந்திருக்கிறது. இந்திய நாகரிகம், சகிப்புத்தன்மையும், தன்னகங்கொள்ளும் குணமும் மிக்குள்ளது. இங்கு குடியேறினவர்களையும், படையெடுத்தவர்களையும் சகித்துக்கொண்டு நாளடைவில் தன்னவர்களாக அந்நாகரிகம் அவர்களை ஆக்கிக்கொண்டது. அவ்வாறு தோன்றிய மக்களது கலாசாரம், நாகரிகம், பழக்கவழக்கங்களால் ஏற்பட்ட ஒற்றுமை எண்ணிறந்த வருஷங்களால் உருவாக்கப்பட்டது இத்தகைய ஒற்றுமையை பாகிஸ்தான் உருக்குலைத்துவிடும்' வேறு புகல் இல்லாவிட்டால் இதைக் கவனிக்கவேண்டும். பாகிஸ்தானின் விளைவுகளை நன்காராய்ந்துவிட்டு இம் முடிவுக்கு வருகிறார்: 'பாகிஸ்தானின் விளைவுகள் மற்றவர்களைக் காட்டிலும் முஸ்லிம்களுக்கே பெருந் தீங்காகமுடியும். இந்தியாவைத் துண்டாடுவதன் காரணமாக ஏற்படும் பொருளாதாரக் கஷ்டங்கள், செல்வநிலைத் திண்டாட்டங்கள் சமாளிக்க முடியாதவை. தங்களுக்கு அளிக்கப்படும் பிரதிநிதித்துவ ஆட்சி முறையில் தாங்கள் நீடித்த அடிமைத்தனத்தில் இருக்க நேரிடும்; பிற இடங்களில் அரசியல் கட்சிகள் ஆட்சிக்கு வருவதுபோலத் தாங்களும் வரமுடியாதென்று முஸ்லிம்கள் நினைக்கிறார்கள். அரசியல் அல்லது பொருளாதார அடிப்படையன்றி மதத்தை யடிப்படையாகக் கொண்ட அரசியல் கட்சிகள் உள்ளவரை நிலைமை இவ்வாறே இருக்குமென்று அவர்கள் கருதுகிறார்கள். ஒன்றுப்பட்ட இந்தியாவில் ஒரு மத்திய அரசாங்கம் ஏற்படுவதற்கு அவர்கள் தடைசெய்வதன்காரணம் அதுவே. சிறுபான்மைகளது நம்பிக்கை தகர்க்கப்பட்டிருப்பதால், எல்லாவிதத் தியாகமும் செய்து அவர்களுக்கு நம்பிக்கையூட்டுவது, நாட்டில் உள்ள பெரிய அரசியல் கட்சியான இந்துக்களின் கடமையாகும்.' இந்தக் கருத்தோடு சர் அர்தேஷிர்தலால் தமது மாற்றுத் திட்டத்தை அளிக்கிறார். அது பின்வருமாறு:

இந்தியாவின் வருங்கால அரசியலமைப்பு கட்டுப்பாடு மிகுந்த சமஷ்டி முறையிலமைந்திருக்கும். பிரதிநிதித்துவ முறையில் வந்த நிர்வாகசபை இருக்கும். பொதுவான சட்டங்களுள்ள நாடுகளில் போல நீதிபரிபாலனம் இருக்கும். இது நாட்டின் உயர்ந்த சமஷ்டி நீதிமன்றத்தின் சட்டத்திற்குக் கட்டுப்பட்டதாக இருக்கும். நாட்டின் மத்திய அரசாங்கத்தின் கையில் பிராதனவும் இன்றியமையாதனவுமான சில விஷயங்களே இருக்கும். மற்ற எல்லா விஷயங்களும், மிச்ச அதிகாரங்களும் சமஷ்டிப்பகுதிகளிடமே விடப்பட்டிருக்கும்.

மத்திய விஷயங்களாவன: பாதுகாப்பு, வெளிநாட்டுத் தொடர்புகள், நாணயச்செலாவணி, நாணயப் பொறுப்பு, சுங்கம், வருமானத்தின் மீது சமஷ்டிவரிகள், குடியேறவருதல், வெளிநாட்டிற்குக் குடியேறப்போதல், வெளியாருக்கு பிரஜா உரிமை தருதல், ரயில்வே பாதைகள், தந்தி தபால், நீர்ப்பாதைகள், கைத்தொழிலபிவிருத்திகள் முதலியனவாம். முஸ்லிம்கள் அதிகமாகவுள்ள பிரதேசங்களில் அவர்கள் அரைவாசி சுயேச்சைப்பகுதிகளாக

மாறுவதற் கேற்றபடி எல்லேகளை மாற்றி யமைப்பதற்கு ஒருவிதமான தடையும் இருக்கக் கூடாது.

கீழ்க்காணும் விதத்தில் ஒவ்வொரு மனிதனுக்கும், தனிப்பட்ட உரிமை, மத உரிமை, பிரஜா உரிமைகளுக்கு உத்தரவாத மளிக்கிற ஒரு ஜீவாதார உரிமைச் சாசனம் இருக்கவேண்டும் :

சட்டத்தின் முன், சமஷ்டியில்வாழும் குடிமக்கள் அனைவரும் சம மானவரே.

பேச்சு சுதந்திரம், பத்திரிகைச் சுதந்திரம், உறவுச் சுதந்திரம் உத்தரவாத மளிக்கப்படவேண்டும். சட்டத்தின்படி அதிகாரமுள்ள நீதி மன்றத்தாலன்றி யாரையும் விசாரிக்கவோ தண்டிக்கவோ கூடாது. ஒவ்வொரு வீடும் புனிதமாகக் கருதப்படவேண்டும்.

எந்த மனிதனும் அவனுடைய மதம், நம்பிக்கை, குலம், ஜாதி, வகுப்பு, பிரிவு காரணமாக, தகுதியற்றவனென்று கூறப்பட்டு சங்கடத்துக்கு உள்ளாகக் கூடாது. மத சுதந்திரம், இச்சைப்படி நடக்க விடும் சுதந்திரம் உத்தர வாதமளிக்கப்படவேண்டும். மதம், வழிபாடு, சடங்கு, பிரசாரம், கூட்டுறவு ஆகிய காரியங்களுக்கு சுதந்திரம்வேண்டும். சட்டத்தில் எல்லா மதங்களும் சமமாக இருக்கவேண்டும்.

தாங்கள் சிறுபான்மைகளாகத் தனித்து வாழுவதற்குரிய நல உரிமைகள் என்று எவைகளைச் சிறுபான்மைகள் கருதுகிருர்களோ, முக்கியமாகக் கல்வி, மொழி, மதம், தனி நபர்ச் சட்டம் முதலியவைகளை அரசாங்கம் நன்கு பாதுகாக்கும். எல்லாச் சிறுபான்மைகளும் தங்களுடைய சொந்த அறச் சாலைகள், சமயச் சார்பான மடங்கள், கல்விச்சாலைகளை ஏற்படுத்தி அங்கு அவரவர் முறைப்படி அவரவர் மொழிகளில் கல்வி புகட்டலாம்.

ஒரு கிராமத்திலுள்ள சிறுபான்மை வகுப்பைச் சேர்ந்தவர்கள் தங் களுடைய பிள்ளைகளுக்குத் தங்களாசாரப்படி கல்வி புகட்டுவதற்குப் பள்ளிக் கூடம் வேண்டுமென்றால் குறைந்தது 50 பிள்ளைகளிருப்பார்களானால் அங்கு அவர்களது மொழியில் கல்விபுகட்ட ஒரு பள்ளிக்கூடத்தை சம்பந்தப்பட்ட அதிகாரிகள் ஏற்படுத்தித் தரவேண்டும்

பொதுமக்களுக்காக அல்லது பெரும்பான்மையினருக்காக நடத்தப்படும் கல்விச்சாலைகள் எந்தவிதமான கட்டுதிட்டங்களுக்கும் அதிகாரங்களுக்கும் உட்பட்டு நடக்கின்றனவோ அதே விதிகளுக்கு சிறுபான்மையினரால் நடத் தப்படும் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், தொழில் கூடங்களும் உட்பட்டு நடந்தால் அவைகளுக்கும் அரசாங்க அல்லது ஸ்தல ஸ்தாபன உதவியளிக்கப் படவேண்டும்.

தேர்தல் வாக்குரிமை விஸ்தரிக்கப்படவேண்டும். ஆனல் வகுப்புவாரித் தொகுதிகளை வைத்திருக்கத்தான் வேண்டியிருக்கும். முஸ்லிமல்லாத இதரச் சிறுபான்மைகளுக்கு ஸ்தானங்களை ஒதுக்கி, ஒரே தொகுதியில் ஒருவருக்கு மேற் பட்டவர்களைத் தேர்ந்தெடுக்கும் வகையைக் கையாளலாம். முஸ்லிம்களும் தங்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கப்பட வேண்டுமென்று நினைத்தால் அவ்வாறே செய்யலாம். ஸ்தல சுய ஆட்சிக் கழகங்களிலும் பலரைத் தேர்ந்தெடுக்கும் தொகுதி முறையும், ஸ்தானங்களை ஒதுக்கி வைத்தலும் கையாளப்படலாம்.

1935-ம் வருஷத்து அரசியலமைப்பின் பிரகாரம் வெவ்வேறு மாகாணச் சட்டசபைகளில் முஸ்லிம்களுக்கும் தாழ்த்தப்பட்டோருக்கும் எவ்வளவு

அதிகப்படி ஸ்தானங்கள் கொடுக்கப்பட்டிருந்தனவோ அவைகளை அப்படியே வைத்துக்கொள்ளலாம். வங்காளத்திற்குக் கூடுமானால், புனா ஒப்பந்தத்தைச் சிறிது பரஸ்பர சம்மதத்துடன் சிறிது மாற்றியமைத்துக் கொள்ளலாம். பகுதிகளின் எல்லைகளை மாற்றுகிற பட்சத்தில் சட்டசபை ஸ்தானங்களைக் கொடுப்பதிலும் மாற்றவேண்டி யிருக்கும். இவ்வாறு திருத்தி யமைக்கப்பட்ட பகுதிகளில் முஸ்லிம்கள் சிறுபான்மையாக இருந்தால் இப்போது கொடுக்கப்படும் அதிகப்படி ஸ்தானங்களையே கொடுத்துவிடலாம். இந்துக்கள் சிறுபான்மையாக இருக்கும் இடங்களிலும் அவர்களுக்கு அதிகப்படி ஸ்தானங்கள் வழங்கப்படவேண்டும். முஸ்லிம்கள் மிகப் பெருவாரியாக இருக்கும் இடங்களில் பொது ஸ்தானங்களையும் முஸ்லிம்களுக்குக் கொடுப்பது குற்றமாகாது. ஆனால் எந்தப் பகுதியிலும் அல்லது ராஜ்யத்திலும், சிறுபான்மைக்கு அதிகப்படி ஸ்தானங்களளிப்பதன்மூலம் பெரும்பான்மையைச் சிறுபான்மையாகத் தாழ்த்திவிடக் கூடாது.

சமஷ்டியாகச் சேரும் ராஜாங்கங்களை நடத்தும் நிர்வாகிகள், தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபைப் பிரதிநிதிகளிலிருந்து பொறுக்கி யெடுக்கப்பட்டவர்களாக இருக்கவேண்டும். ஆனால் கீழ்வரும் அடிப்படையை யொட்டிய கலப்பு அரசாங்கங்களாக இருக்கவேண்டும்: அதாவது, ஜனத்தொகையில் மிகக் குறைவாயிராமல் ஒரு குறிப்பிட்ட சத விகிதத்துக்கு மேற்பட்ட சிறுபான்மைகளுக்கு மந்திரி சபையில் பிரதிநிதித்துவம் கொடுக்கப்படவேண்டும் மொத்த ஜனத்தொகையில் அவர்கள் எந்த விகிதமாகிருர்களோ அந்த விகிதத்தில் அவர்களுக்கு மந்திரி சபையில் இடமளிக்கப்படவேண்டும் அல்லது இதற்கு மாற்ருக, சட்டசபையில் அவர்கள் எந்த விகிதத்திலிருக்கிருர்களோ அந்த விகிதத்தில் மந்திரிசபை ஸ்தானம் கொடுக்கப்பட வேண்டும்.

மந்திரிகள் எத்தனை பேரென்பதை அதற்கென்று ஏற்படுத்தப்பட்ட கமிஷன் நிச்சயம் செய்யவேண்டும். சட்டசபையிலுள்ள சிறுபான்மையினரால் தேர்ந்தெடுக்கப்பட்டவரே சிறுபான்மை வகுப்பின் பிரதிநிதியாக மந்திரி சபையிலிருக்க வேண்டும். சட்டபூர்வமாகச் சிறுபான்மையினருக்குக் குறைந்த பட்ச ஸ்தானம் இவ்வளவுதான் என்றிருந்தாலும் அதற்கு மேலும் சிறுபான்மை வகுப்பினரை மந்திரியாக்குவதில் ஒரு பிரதமருக்கு எவ்விதத் தடையுமிருக்கக் கூடாது.

மத்திய சட்டசபையில் மொத்தம் எத்தனை ஸ்தானங்களோ அதில் $33\frac{1}{3}$ சதவிகிதம் முஸ்லிம்களுக்குக் கொடுக்கப்படவேண்டும். பெண்கள், தொழில், நிலச்சுவான்தார், வியாபாரிகள் போன்ற இனங்களுக்கு ஒதுக்கியதுபோக மீதி ஸ்தானங்களில் எல்லாச் சிறுபான்மைகளுக்கும் கொடுக்கப்பட்ட ஸ்தானங்கள் மொத்தத்தில் 50 சத விகிதத்தைத் தாண்டிவிடக்கூடாது.

மத்திய அரசாங்க நிர்வாகமும் கூட்டுமுறையில் நடப்பதாக இருக்கவேண்டும். அதில் முஸ்லிம்கள் மூன்றிலொரு பங்கிற்கும் குறையக்கூடாது. அரசாங்க நிர்வாகத்திலுள்ள முஸ்லிம் அங்கத்தினர்கள் சட்டசபையிலுள்ள முஸ்லிம் பிரதிநிதிகளால் விகிதாச்சாரப்படி தேர்ந்தெடுக்கப்படவேண்டும். சட்ட சபையிலுள்ள சீக்கிய, தாழ்த்தப்பட்ட அங்கத்தினர்களால் மந்திரி சபைக்கு ஒரு சீக்கியரும் ஒரு தாழ்த்தப்பட்டவரும் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். சிறுபான்மைப் பிரதிநிதிகளான மந்திரிகளின் எண்ணிக்கை மொத்தத்தில் 50 சத விகிதத்திற்கதிகமாகக் கூடாது. அதற்கு மேலும் சிறுபான்மை

வகுப்பினர் ஒருவரை மந்திரியாக்கப் பிரதமர் முயலுவதைத் தடுப்பதற்கு ஒன்று மிருக்கக்கூடாது.

அரசாங்கம் சட்டசபைக்குப் பொறுப்புள்ளதாக இருக்கவேண்டும். சட்டசபை அரசாங்கத்தின்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரலாம். இத்தகைய தீர்மானம் மிகப் பெருவாரியான வாக்குகளால்தான் நிறைவேற்றப்படவேண்டும். அத்தீர்மானம் கொண்டு வரப்படும் கூட்டத்தில் மொத்த அங்கத்தினர்களில் மூன்றிலிரண்டு பங்கினர் வந்திருக்கவேண்டும்.

ஒரு மசோதா அல்லது திர்மானம் அல்லது அதன் ஒரு பாகத்தை ஒரு வகுப்பாரைச் சேர்ந்தவர்களில் மூன்றிலொரு பங்கினர் எதிர்த்தால், தங்களு டைய மதத்துக்கும் பண்பாட்டுக்கும் கேடுவிளைவிப்பதாகக் கூறினல், தங்களுக்கு வழக்கமான தனி நபர்ச் சட்டத்திற்கும் விரோதமானதென்று கூறி னல், அதை எந்தச் சட்டசபையிலும் நிறைவேற்றக்கூடாது. அந்தச் சட்ட சபையில் அதன் அங்கத்தினர் மொத்தத்தில் குறைந்த அளவு 15 சத வீதம் இருந்தாலொழிய இந்த அதிகாரம் எந்த வகுப்பிற்கும் செல்லாது. ஏதாவது ஒரு மசோதா இத்தகையதா? இல்லையா? என்ற தகராறு கிளம்புமானல் அதைச் சமஷ்டி நீதிமன்றத்தின் முடிவுக்கு விடவேண்டும்.

சமஷ்டி நீதிமன்றத்தில் ஐந்து நீதிபதிகள் இருக்கவேண்டும். அதில் இருவர் முஸ்லிம்களாக இருக்கவேண்டும்.

ராணுவத்தில் முஸ்லிம்களின் பிரதிநிதித்துவம் 1938-ல் இருந்ததற்கும் குறையக்கூடாது.

அரசாங்க உத்தியோகங்கள் சம்பந்தமாக வகுப்புவாதப் பிரதிநிதித் துவம், 1934 ஜுலை 4-ந்தேதி இந்திய அரசாங்கம் வெளியிட்ட No. F 14-17 B. 33-வது தீர்மானத்தின்படி கொடுக்கப்படவேண்டும். இத்தீர்மானத்தில் அவசியமான மாறுதல்களைச் செய்து அரசியலமைப்பில் சட்டமாக்கிவிட வேண்டும்.

மத்திய சட்டசபையிலுள்ள இரண்டு சபைகளும் இதற்காக நன்ருகக் கூடி அதில் மூன்றிலிருபங்கினர் அரசியலமைப்பில் மாறுதலை விரும்பினலன்றி அரசியலமைப்பில் மாறுதல் செய்யக்கூடாது. மேலும், சமஷ்டியாகச் சேரும் பகுதிகளில் இரண்டு சட்ட சபைகளிருக்குமானல் அவைகளும் இதற்காக ஒன்ருய்ச்சேர்ந்து அதிலும் பெரும்பான்மை அரசியலமைப்பில் மாறுதல் கோர வேண்டும். எல்லாச் சட்டங்களின் தன்மையையும் முடிவு செய்யும் அதிகாரம் சமஷ்டி நீதிமன்றத்துக்குண்டு.

இரண்டாவது சபைகளின் அமைப்பு எவ்வாறு இருக்கும்? அதற்குத் தனித்தனி அதிகாரமா? சேர்ந்தாற்போல் அதிகாரமா? என்ற இதுபோன்ற விஷயங்கள் இந்திய அரசியலமைப்பைக் கவனிக்கும்போது எழக்கூடும். அரசியலமைப்பை ஏற்படுத்தும் சபையே இவைகளையும் கவனிக்கும்படி விட்டு விடவேண்டும். இவைகள் சிறுபான்மைகளுக்குப் போதுமான பாதுகாப்புகள் என்ற முக்கிய விஷயத்தைப் பாதிக்கவில்லை.

தற்சமயத்துக்கு இந்திய சமஸ்தானங்களைக் கவனிக்காமல் விட்டு விடலாம்.

மேலே வகுக்கப்பட்டுள்ளது லட்சிய அரசியலமைப்பு என உரிமை பாராட்டப்படவில்லை.

'கூட்டு அரசாங்க அமைப்புத்தான் இந்தப் பிரேரணைகளின் முக்கிய அம்சம் என நான் கருதுகிறேன்.' இத்திட்டத்தில் சிறுபான்மையினருக்குப் பாது

காப்புகளை உறுதியளிக்கும் பல நல்ல அம்சங்களிருக்கின்றன. முதலாவதாக இது ஒரு விவரமாக எழுதப்பட்ட அரசியலமைப்பு. இதை எளிதில் மாற்ற முடியாது. மாற்றுவதுண்டானுல் அவ்வாறு மாற்றி யமைக்கும்போது சிறு பான்மைகளுடைய கருத்துக்களையுமுணர்ந்து அனுசரித்து மாற்றப்படும். சிறுபான்மைகளின் மத, கலாசார சுதந்திரம் காப்பாற்றப்படுகிறது. ராணுவத்திலும் உத்தியோகங்களிலும் சிறுபான்மையினருக்குரிய நியாயமான பங்கைக் கொடுக்கிறது. சட்ட சபைகளில் சிறுபான்மையினருக்கு அதிகப்படி ஸ்தானங்களை அளிக்கிறது. பகுதிகள் அல்லது மாகாண அரசாங்கங்களிலும் மத்திய அரசாங்கங்களிலும் உள்ள நிர்வாகப் பதவிகளில் தங்களுக்குரிய விகிதாசாரத்துக்கு மேலும் இடம்பெற சிறுபான்மைகளுக்கு இத்திட்டம் வசதி யளிக்கிறது. எந்தச் சமஷ்டியிலும், அதன் பகுதிகள் சுதந்திரமாக இருக்க முடியும். அதுபோல இங்கும் சமஷ்டிப்பகுதிகள் சுதந்திரமாக இருக்கின்றன. கடைசியாக, அரசியலமைப்பு விதிகள் மீறப்படுமானுல், சமஷ்டி நீதிமன்றம் வந்து தலையிட அதற்கு இறுதியதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

இந்தப் பாதுகாப்புகள் வெறும் காகிதப் பாதுகாப்புகள் அல்ல. அரசியலமைப்பை முழுதும் மாற்றினுலொழிய அல்லது உள்நாட்டுச் சண்டையைத் தூண்டினுலொழிய இப்பாதுகாப்புகளை மீறமுடியாது. இதை மகா மோசமான திட்டமென்று வைத்துக்கொண்டாலும், இது ஒரு பத்து வருஷகாலத்துக்கே பரிசோதனையாக வைத்திருக்கப்படும். அதன் பின்னர், முஸ்லிம் சிறுபான்மை விரும்பினுல், அது, தன்வழியே செல்லத் தடையொன்றுமில்லை.

மேலும் சண்டைக்குப்பின் சர்வதேச ஸ்தாபனம் ஒன்று தோன்றுவது நிச்சயம். முந்திய சர்வதேச சங்கத்தைக் காட்டிலும் இது அதிக செல்வாக்குள்ளதாக இருக்கும். இது சிறுபான்மைகளைக் காப்பாற்றுவதற்கு உண்மையாகவே கட்டுப்பட்டதா யிருக்கும், காப்பாற்றும் சக்தியுடையதாகவும் இருக்கும் என்பதை மறந்துவிடக் கூடாது.

சர் அர்தேஷிர் தலால் ஒரு பார்ஸி. ஆகவே அவர் ஒரு சாதகமான நிலைமையை உடையவராக இருக்கிருர். அதிகாரம் எனக்கு, உனக்கு என்று தகராறு செய்துகொண்டிருக்கும் இந்துவாகவும் முஸ்லிமாகவும் அவர் இல்லாததனுல் அவருடைய வார்த்தைகளை, விருப்பு வெறுப்பற்ற ஒருவரிடமிருந்து வருவதாக யாரும் ஏற்றுக்கொள்ளலாம். இரண்டு பெரிய வகுப்புக்களிடையே எந்த வகுப்பு மீதாவது தம்மையறியாது வாஞ்சை காட்டலாம் என்று இவரைச் சந்தேகிப்பதற்கு இடமில்லை. மாகாணங்களிலும் மத்தியிலும் கலப்பு அரசாங்கம் இருக்கவேண்டுமென்று வலியுறுத்திக் கூறுகிருர். சட்ட சபைகளிலும் மந்திரி சபையிலும் முஸ்லிம்களுக்கு நியாயமாக எவ்வளவு ஸ்தானங்கள் உண்டோ அதற்கு மேலும் ஸ்தானங்களை நிர்ணயம் செய்கிருர். ஆனுல் மொத்தத்தில் பாதிக்குமேல் சிறுபான்மைகளுடைய விகிதம் இருக்கக் கூடாது. சட்ட சபையிலுள்ள சிறுபான்மை வகுப்பினர், மந்திரி சபைக்குத் தங்களவரை விகிதாசார பிரதிநிதித்துவ முறைப்படித் தாங்களே தேர்ந்தெடுத்தனுப்புவார்கள். அந்தச் சிறுபான்மைக்கு ஏற்பட்ட விகிதத்துக்கு மேலும், அவ்வகுப்பினர் ஒருவரைப் பிரதம மந்திரியாக்கலாம். ஆகவே இவ்விதமாக, அவர்கள் பிரதமருடைய நம்பிக்கைக்கு உகந்தவர்களாக இருந்தால் 50 சத விகிதத்துக்கும் மேல் மந்திரிசபை ஸ்தானங்களைக் கைப்பற்றலாம்.

# 39. வகுப்புப் பிரசினையைத் தீர்க்க டாக்டர் ராதா குமுத முகர்ஜி கூறும் புதிய வழி

டாக்டர் முகர்ஜி 'வகுப்புப் பிரசினையைத் தீர்ப்பதற்கொரு புதிய வழி' என்று ஒரு சிறு பிரசுரத்தை வெளியிட்டிருக்கிறார். முதல் உலக யுத்தத்திற்குப் பின்பு சர்வதேச சங்கத்தின் ஆதரவிலும், அதன் உத்தரவாதத்தின் பேரிலும், ஐரோப்பாவிலுள்ள சிறுபான்மைகள் தங்களுக்குள் ஒப்பந்தங்கள் செய்துகொண்டனர். அந்த ஒப்பந்தங்களின் கதியையும், ரஷ்யாவின் அரசியலமைப்பையும் அதன் முன்னேற்றத்தையும் உணர்ந்து அதனடிப்டையாகச் சில முடிவுகளுக்கு அவர் வந்திருக்கிறார். அந்த முடிவுகளின் சுருக்கம் பின்வருமாறு :

ஜாதி, மத, சமூக எல்லைகளோடு அரசியல், தேசீய எல்லைகளும் ஒன்றுயிருப்பது இயற்கையில் நிகழுவதல்ல. ஆகையால் வகுப்புப் பிரசினை எங்குமுள்ள சர்வதேசப் பிரசினையாக இருக்கிறது. ஒவ்வொரு ராஜ்யமும் தன்னிடமுள்ள எல்லாப் பிரிவினரையும் வகுப்பினரையும் அணைத்து ஆதரித்துக் கொண்டு போகவேண்டி யிருக்கிறது. சிறுபான்மையை ஒழித்துக்கட்டிய ராஜ்யம் என்று ஒன்றுமில்லை. ஆகவே சிறுபான்மை இருக்கத்தான் செய்யும். அவைகளை எவ்வாறு நடத்துவதென்பதற்குத்தான் வழிவகைகள் கண்டுபிடிக்க வேண்டும். ஐரோப்பாவில் கிரிமியா யுத்தத்திற்குப் பின்னுல் 1856 மார்ச் 30-ல் பாரிஸ் உடன்படிக்கை ஏற்பட்டது. ஆகவே இது முதல் உலக யுத்தத்திற்குமுன் நடந்த விஷயம். எந்தப் பிரிவினரையும் மதம் அல்லது இனம் காரணமாக, மற்றவருக்குத் தாழ்ந்தவராகக் கருதக்கூடாதென்று விதித்தது இவ்வுடன்படிக்கை. முதல் உலக யுத்தத்திற்குப்பின் இதுபோன்றதொரு திட்டமும் கொண்டுவரப்பட்டது. சிறுபான்மைகளின் உத்தரவாத ஒப்பந்தங்கள் என்ற சட்டரீதியான மதிப்பு உள்ளதாகவும் அத்திட்டம் ஆக்கப்பட்டது. சர்வதேச சங்கத்தைச் சேர்ந்த தேசங்கள் யாவும்—அச்சங்கத்தில் ஒருசமயம் 52 தேசங்கள் சேர்ந்திருந்தன—அவ் வொப்பந்தங்களின்படி கட்டுப்பட்டு நடக்கவேண்டியவைகளாக இருந்தன.

ஒரு பொதுவான ராஜ்யத்தில் வாழும் சிறுபான்மைகளுக்குள்ளே நிலவும் வித்தியாசங்கள், மொழி ஜாதி மதம் என்பனவற்றுள் அடங்கும். தனக்கென்று தனி ஏற்பாடுகள் வேண்டுமென்று ஒரு சிறுபான்மை வேண்டினுல், அச்சிறுபான்மை எண்ணிக்கையில் குறிப்பிடத்தக்க அளவு பெரிதாக இருக்க வேண்டுமென்று துருக்கி அரசியலமைப்பில் கூறப்பட்டிருக்கிறது. அதாவது மொத்த ஜனத்தொகையில் 20 சத விகிதம் இருக்கவேண்டுமெனத் தீர்மானித்து ஒப்புக்கொள்ளப்பட் டிருக்கிறது. அதற்கும் குறைந்த அளவுள்ள சிறுபான்மைக்கெனத் தனி ஏற்பாடுகள் செய்வது பொருளாதார முறையிலும் நிர்வாக முறையிலும் முடியாத காரியம்

ஜாதி மதம் மொழி காரணமான வித்தியாசங்களுக்காகச் சிறுபான்மைகளுக்கு உத்தரவாத மளிக்கப்பட்டது. ஜாதி மத மொழி வகையினுல் உண்டான சரித்திர இயல்பும், நாகரிக இயல்புமே முக்கியமாகக் கவனிக்கத் தகுந்தவை, மதிக்கத்தகுந்தவையென்றும், ஒரு சிறுபான்மை தனக்கேயுரிய அந்தச் சரித்திரம் நாகரிகம்மூலம் உலக மக்களின் பொது நாகரிகத்துக்கு உதவி செய்யுமாறு அச்சிறுபான்மையை வளர்ச்சியடைய விட வேண்டுமென்றும் கருதப்பட்டது. ஆகவே தன்னுடைய மொழியையும் தாய் மொழியையும் வளர்ப்ப

தற்கு ஒரு வகுப்பிற்கு உரிமையுண்டு. அவ்வகுப்பைச் சேர்ந்த பிள்ளைகளுக்கு அவ்வகுப்பு மொழியிலும் எழுத்திலும் ஆரம்பப் பள்ளிகளில் கல்வி கற்பிக்க வேண்டும். ஒரு பள்ளிக்கூட ஜில்லாவில் 40 பிள்ளைகளுக்கு ஒரு பள்ளிக்கூடம் வீதம் அவை ஏற்படுத்தப்படவேண்டும். மேலும் பள்ளிக்கூடங்களின் பொது நிர்வாகச் செலவுகள், உதவித்தொகை நீங்கலாக, ஆரம்பப் பாடசாலைகளை நடத்துவதற்கென்று ஒதுக்கப்படும் தொகையில் சிறுபான்மைகளுக்கும் அவர்களுடைய பிள்ளைகளின் விகிதப்படி பங்களிக்கவேண்டும்.

ஒவ்வொரு வகுப்புக்கும் இனப் பாதுகாப்பு உறுதியளிக்கப்பட்டது. ஒவ்வொரு வகுப்பின் இனப்பாங்கையும் அதன் பழக்க வழக்கங்கள், தனி நபர் விதிகள், கல்யாணச் சடங்குகள், தாயபாகமுறை போன்ற விஷயங்களில் காணலாம். இவை அந்தந்த வகுப்புக்கே உரியவையாதலால் இது விஷயமாகப் பாதுகாப்பு உறுதி கூறப்பட்டது. இதுபோன்றே ஒவ்வொரு நாகரிக நாட்டிலும் ஒவ்வொரு வகுப்பினருக்கும் மதாச்சாரப் பாதுகாப்பும் அளிக்கப்பட்டிருக்கிறது. இவைகளுக்கெல்லாம் ஆதாரமாக துருக்கியின் அரசியலமைப்பை எடுத்துக் கூறலாம். அதில் காணப்படுவதாவது: 'நாட்டில் வாழும் யாரும், பொது ஒழுங்குக்கும் நன்னெறிக்கும் பொருந்துகிறமுறையில், எந்தக்கொள்கையையும், மதத்தையும், நம்பிக்கையையும் பின்பற்றலாம், கடைப்பிடிக்கலாம். துருக்கியிலுள்ள முஸ்லிமல்லாத சிறுபான்மைத் தேசிய இனங்கள், இதர துருக்கித் தேசீய இனங்களைப்போலச் சட்டத்தின்படி நடத்தப்படுவார்கள் அவர்களுக்குச் சட்டப் பாதுகாப்பு உண்டு. குறிப்பாகக் கூறுமிடத்து அவர்கள் தங்களது செலவில், தங்களுடைய பராமரிப்பில், தங்களுடைய அறக்கூடங்கள், மதக்கூடங்கள், சமூகச் சங்கங்களை ஏற்படுத்த உரிமையுண்டு. தங்களுடைய பிள்ளைகளுக்காகப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தி அங்கு தம் தாய்மொழியில் கல்வி புகட்டலாம், பயிற்சியளிக்கலாம்; சமய நெறிகளைக் கடைப்பிடிக்கலாம்.' நிர்வாகத்தில் சிறுபான்மைகளுடைய இடத்தைப்பற்றி துருக்கிய அரசியலமைப்பு விதித்துள்ளதாவது: 'துருக்கியர் எவரும், அவருடைய மதம், கொள்கை, நம்பிக்கை காரணமாக, அரசியல் உரிமைகளையும் பிரஜா உரிமைகளையும் அனுபவிப்பதற்குத் தடை கிடையாது. உதாரணமாக அரசாங்க உத்தியோகம், வேலைகள், பட்டம் பதவிகள் அவர்களுக்கும் உண்டு. எந்த ஜீவனத்தையும் மேற்கொண்டு எந்தக் கைத்தொழிலையும் வளர்க்கலாம். முஸ்லிம்களைப் போலவே துருக்கியிலுள்ள முஸ்லிமல்லாத சிறுபான்மைகளும் அரசியல், பிரஜா உரிமைகளை அனுபவிக்கலாம். துருக்கியநாட்டார் யாரும், மத வேறுபாடு இன்றி, சட்டத்தின்முன் சமமானவரே. அரசாங்க உத்தியோகங்கள், பட்டம் பதவிகள், ராணுவ அந்தஸ்துகள், தனிப்பட்ட மரியாதைகள் முதலிய யாவும் எல்லா வகுப்பினருக்கும் மேல்கீழ் என்பதின்றி வழங்கப்படும்.'

இவ்விதமாக, சிறுபான்மைகளின் நலத்துக்குரிய முக்கிய சில விஷயங்களில் இத்திட்டம் உண்மையான பாதுகாப்பளிக்கிறது. முழுச் சுதந்திரமும் சுயேச்சையும் இது சம்பந்தமாகக் கொடுக்கிறது. ஆனால் அந்த சுதந்திரத்துக்கும் ஒரு வரம்பு இருக்கிறது. அந்த வரம்புதான் ஓர் அரசாங்கத்தின் கட்டமைப்பு. சிறுபான்மைச் சுதந்திரம் நீண்டுகொண்டேபோய் கடைசியில், அரசாங்கத்தின் கட்டமைப்பில் கை வைப்பதாக முடிந்துவிடக் கூடாது. அரசாங்கத்தின் கட்டமைப்பு யாவருக்கும் பொது உடைமை. என்ன நேர்ந்தாலும் சரி என்று எல்லா வகுப்பினரும் கண்ணெனக் காக்கவேண்டும் தாய் நாட்டின் கட்டமைப்பை. ஆகவே எந்தச் சிறு வகுப்பும், நாட்டிற்குப் பாதகம்

விளைவிக்கக்கூடிய முறையில் பாதுகாப்பு வேண்டும் என்று சதா தொல்லை கொடுத்துக்கொண் டிருக்கக்கூடாது. எதற்கும் ஒரு வரம்பு உண்டு.

சோவியத் ஐக்கியக் குடியரசு, அந்நாட்டில் காணப்படும் மிகமோசமான வகுப்புப் பிரசினையை ஒருவாறு நிர்வாகம் செய்துகொண்டு வருகிறது. சோவியத் யூனியனில், (I) 17 கோடி மக்கள், (II) வெவ்வேறான 180 தேசிய இனங்கள், (III) வெவ்வேறான 151 மொழிகள், (IV) 11 தேசிய இனக் குடியரசுகள், (V) 22 சுயேச்சைக் குடியரசுகள் அடங்கியுள்ளன. ஜார் அரசாட்சி வகுப்புப் பிரசினையை யூனியனுக்கு வைத்து விட்டுச் சென்றது. அங்கு வகுப்புப் பிரசினை கடுந்தொல்லை தரும் பிசாசாக இருந்தது. ஆங்காங்கு வாழும் மக்கள் ஒன்று சேருவதில் ஜார் ஆட்சி உதவி செய்யவில்லை. அம்மக்கள் தங்களுக்குள் சச்சரவிட்டுக் கொண்டிருப்பதையே அது விரும்பியது. சாம்ராஜ்யம், ரஷ்யப் பெருங்குடி மக்களின் நன்மைக்காகவே ஆளப்பட்டு வந்தது. சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த இதர மக்களும் தேசிய இனங்களும் ரஷ்ய மக்களுக்குக் கீழ்ப்பட்டவர் களாகவும் தாழ்ந்தவர்களாகவும் கருதப்பட்டனர். குறுகலான ரஷ்ய தேசியக் கொள்கையை ஜார் அரசாட்சியினர் கடுமையாகவும் மிருகத்தனமாகவும் கையாண்டனர். ரஷ்யரல்லாத இதர தேசிய இனங்களெல்லாம் ரஷ்ய மயமாக்கப்பட்டன. இக்கொடிய கொள்கையாலும் செய்கையாலும் பலவேறு தேசிய இனங்களிடையே கிளர்ச்சி உண்டாயிற்று. எல்லாத் தேசிய இனங் களும் நாலாமூலையாகச் சிதறிக் கட்டிலிருந்து விடுபடத் திமிறின. சுயநிர்ணய உரிமை என்ற கூக்குரலும் இவைகளுக்குத் தூபம் போட்டது. போல்ஷ்விக்கு கள் அதிகாரத்துக்கு வரவும் அவர்கள் ஜார் ஆட்சிக் கொள்கையை மாற்றினார் கள். மகமதியர்கள், தாத்தர்கள், துருக்கியர்கள், தார்த்தாரியர்கள் முதலிய யாவருடைய மதங்கள், பழக்கங்கள், தேசிய ஸ்தாபனங்கள் கலாசாரம் குலைக்கப்படமாட்டா என்றும் அதுவிஷயமாகப் புதிய அரசாங்கம் தலையிடா தென்றும் உறுதிகூறி அவ்வினங்களுக்கு சுயநிர்ணய உரிமை யளித்தனர். ரஷ்ய சாம்ராஜ்யத்திலுள்ள மக்களனைவருக்கும், ரஷ்யப் புரட்சி பாதுகாப்பளித்தது. புதியதொரு சோவியத் பொதுஉடைமை அமைக்கப்பட்டது. அனேக தேசிய இனங்களின் சுயேச்சைச் சமஷ்டியாக இது தோன்றியது 1918-ம் வருஷ அரசிய லமைப்பில் இது ரஷ்ய சோஷலிஸ்டு சமஷ்டி சோவியத் குடியரசு (R. S. F. S. R.) என அழைக்கப்பட்டது. உக்ரேன், ஒயிட் ரஷியா, ட்ரான்ஸ் காகேஷியன் சமஷ்டி, மத்திய ஆசியக் குடியரசு என்று போல்ஷ்விக்குகள் ஏற் படுத்திய மற்ற சோஷலிஸ்டு குடியரசுகளுக்கெல்லாம் அந்தப் பிரகடனம் எடுத்துக்காட்டாக அமைந்தது. இத்தனை சோவியத் அரசாங்கங்களும் சோஷலிஸ்டு சோவியத் குடியரசுகளின் யூனியன் (U. S. S. R.) என்ற புதுப் பேரால், பெரிய சமஷ்டியாக ஒன்று சேர்க்கப்பட்டன. இதில் ரஷ்ய என்ற சொல் எடுக்கப்பட்டு விட்டது.

சோவியத் யூனியன் பல படிகளிலமைந்த சமஷ்டி அரசாங்கம். அதனுடைய பகுதிகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சமஷ்டி அமைப்பைத் தங்களுக் கென கொண்டிருக்கின்றன. இவ்விதமாக அதிகப்படியான உரிமைகளை பதினோரு தேசிய அல்லது யூனியன் குடியரசுகளே அனுபவிக்கின்றன. அவை கள் முழுச் சுயேச்சை பெற்றிருக்கின்றன. சோவியத் யூனியனைத் தங்கள் பிரதிநிதிகள் மூலமாகக் கூட்டுமுறையில் நிர்வாகம் செய்கின்றன. இக்குடியரசு கள் 'தங்களிஷ்டம்போலத் தங்களையாளலாம்' யூனியனிலிருந்து பிரிந்துபோகும் அளவுக்குக்கூட,'—இவ்வாறு 1936-ம் வருஷத்து அரசியலமைப்பின் 17-வது

ஷரத்து உறுதி கூறுகிறது. 22 சுயேச்சைக் குடியரசுகளும், தேசீய அல்லது யூனியன் குடியரசுகளுக்கு அடுத்தபடியில் உள்ளவை. இவைகள் உள்நாட்டு விஷயங்களில் சுயேச்சை பெற்றவை யென்றாலும், பிரிந்து போகின்ற அளவுக்கு இவைகட்குச் சுயநிர்ணய உரிமை கிடையாது. இவைகளுக்கும் அடுத்தாற்போல மூன்றாவதுபடியில் சில சுயேச்சைக் குழாங்கள் இருக்கின்றன. இவைகளின் எண்ணிக்கை அவ்வப்பொழுது மாறிக்கொண்டிருக்கிறது. தத்தம் வேலைகளைக் கவனிப்பதற்கே இவைகளுக்குச் சுதந்திரம் உண்டு. இவைகள் எந்த யூனியன் அல்லது சுயேச்சைக் குடியரசில் இருக்கின்றனவோ அவைகள் இக்குழாங்களின் காரியங்களைக் கட்டுப்படுத்தலாம். இந்தப் புதிய அரசாங்கங்கள் தோன்றுவதற்கு முன்னிருந்த மாகாணங்கள் அநேக ஜாதிகளின் தாயகமாக இருந்தன. இம்மாகாணங்களிலுள்ள அவர்கள் எந்த நேரமும் ஒருவரோடொருவர் 'தண்டெடு தடியெடு' என்றிருந்தார்கள். ஆகவே இந்தப் புதிய அரசியலமைப்பின் முதல் வேலை, பூகோள அமைப்பு, பொருளாதார யோசனைகள், தேசீயக் கொள்கைகள் ஆகியவை ஒன்றுக்கொன்று முரண்படாத வகையில் நாட்டைத் திரும்பப்பிரித்து, அமைத்து, நிலை நிறுத்த வேண்டிய தாயிற்று.

இப்பொழுது இவ்வரசியலமைப் பற்றிப் பொதுப்படையாகக் கவனிப்போம். முதலில் மத்திய அரசாங்கத்திற்கும் அதற்குட்பட்ட பகுதிகளுக்கும் உள்ள அதிகாரங்கள் யாவை? வெளிநாட்டுக்கொள்கை, பாதுகாப்பு, போக்குவரத்து, தந்தி தபால் ஆகியவை யூனியன் அரசாங்கத்தால் கவனிக்கப்படுகின்றன. பொருளாதாரம், நிதி, தொழிற் பிரசினைகளை, யூனியன் அரசாங்கமும், அங்கமாயமைந்த அரசாங்கங்களும் சேர்ந்து நிர்வாகம் செய்கின்றன. சட்டம், பொதுமக்கள் உடல்நலம், நலவளர்ச்சி, சங்கம், கல்வி முதலிய யாவும் பகுதி ராஜ்யங்களுக்கும் சுயேச்சைக் குடியரசுகளுக்கும் பிரதேசங்களுக்கும் விடப்பட்டிருக்கின்றன. இவ்வாறு இத்தனை பல்வேறு சோவியத்துகளும் இந்த வரம்புகளுக்குள் முழுக்கலாசார சுதந்திரம் பெற்றவையாக இருக்கின்றன. ரஷ்யாவிலுள்ள பலவேறு இனத்தாரிடையே சமத்துவம் நிலை நாட்ட வேண்டுமென்பது இப்புதிய அரசாங்க அமைப்பின் கொள்கை. கீழ் நிலையில் இருக்கும் எல்லா வகுப்பினரின், கலாசார அறிவு, பொருளாதார நிலைகளை உயர்த்தி எல்லா மக்களிடையே சமத்துவத்தை நிறுத்துவதற்கான ஏற்பாடுகளனைத்தும் சுயஆட்சி மூலம் செய்யப்படுகின்றன. ஒவ்வொரு வகுப்பும் தன் மக்களுக்குத் தன் மொழியிலேயே கல்வி புகட்டுகிறது. எழுத்தில்லாத மொழிகளுக்கு எழுத்தமைத்துக் கொடுத்திருக்கிறார்கள். 1934-க்குள் 74 வகுப்பினருக்கு எழுத்தமைத்துக் கொடுத்திருக்கிறார்கள்.

சிறுபான்மைக்கு அவ்வப் பிரதேசத்து விஷயங்களில் சுயேச்சை கொடுத்திருந்தாலும், யூனியனுடைய மொத்த பலத்திற்கு உலைவைக்கும் அளவுக்கு அவைகளுக்கு சுய நிர்ணயம் கொடுக்கவில்லை. வெப்ஸ் கூறியது போல, 'அரசாங்கம் தனது ஒற்றுமையை நிலை நாட்டுகிறது. இதர சமஷ்டி அரசாங்கங்கள் போல மத்திய அதிகாரத்தைக்கூட அதிகப்படுத்தி யிருக்கிறது. சோவியத் குடியரசு ஒன்றில் தான் மத்திய அதிகாரம் சிறு பான்மைகளின் சுதந்திரத்தைக் குறைக்கவில்லை.' நடைமுறையில் அவ்வப் பிரதேசச் சுதந்திரம் அந்த அரசாட்சி அமைப்பு முறையால் அதிகமாகக் குறைக்கப்படுகிறது. அங்கு ஒன்றுக்குமேல் ஒன்றாகப் பல நிர்வாகக் குழாங்கள் இருக்கின்றன. இவையத்தனையும் சிலசமயம் ஒரே காரியத்தைக் கவனிக்குமாறு ஏற்பட்டு விடுகின்றன.

இவைகளின் அதிகார வரம்பு செயல் வரம்பு தெளிவான எல்லைக்குட்படவில்லை. கீழ்ப்படியிலுள்ள ஒரு நிர்வாகக் குழாம் செய்யவேண்டிய காரியத்தை அதற்கு மேற்பட்ட நிர்வாகக் குழாம் மேற்கொள்ளலாம். அந்தக் காரியத்துக்குக் கீழ்நிலை குழாம் மாத்திரம் பொறுப்புள்ளதாக இருக்காது. இரண்டு குழாங்களும் அக்காரியப் பொறுப்பைப் பங்கிட்டுக் கொள்ளும். எல்லாவற்றிற்கும் மேலாக நாம் ஒன்றை மட்டும் நினைவு கொள்ள வேண்டும். அதுதான் அடிப்படையான உண்மை. இந்த அரசியல் அமைப்பு, பொருளாதாரத் திட்டம் என்ற அடிப்படையின்மேல் கட்டப்பட்டது. நாட்டின் வாழ்வையும் நாட்டின் நாலாபக்கத்தின் வாழ்வையும் தன்னுட் தழுவியது இந்தப் பொருளாதாரத் திட்டம். இத்திட்டம் சமஷ்டி நிர்வாகத்துக்குப் புறம்பாக இருக்கிறது. 15-வது ஷரத்து, சமஷ்டி அதிகாரத்தைக் கட்டுப்படுத்துவது போலத் தோன்றினாலும், நடைமுறையில் வகுப்புக்களின் கலாசாரச் சுதந்திரத்தையும் முக்கியமாக அவைகளின் மொழிக்கு பாதுகாப்பும் அளிக்கிறது.

தேசிய அல்லது யூனியன் குடியரசுகளுக்குத்தான் பிரிந்துபோகும் உரிமையளிக்கப்பட்டிருக்கிறது. அனேக சுயேச்சைக் குடியரசுகளுக்கும் பிரதேசங்களுக்கும் ஒரு பொது உரிமையாகக்கூட அது அனுமதிக்கப்படவில்லை. ஸ்டாலின் கூறுவதுபோல 'சர்வ தேச நிலைமைகளும் புரட்சியின் நன்மையுமே பிரிந்துபோகும் உரிமைபற்றி கம்யூனிஸ்டு கட்சியின் முடிவை உருவாக்கின. அதனால்தான் மொத்தத் தொகுப்பிலிருந்து காலனிகள் பிரிந்துபோய்விட வேண்டுமென்று கம்யூனிஸ்டுகள் போராடுகிறார்கள். ஆனால் ரஷ்யாவிலிருந்து அதன் எல்லைப் பிரதேசங்கள் பிரிந்துபோவதை முழுமூச்சுடன் எதிர்ப்பார்கள்.' மூன்று ஆண்டுகளுக்கு முன்பு 1917-ல் ஸ்டாலின் கூறியதாவது; 'ஒடுக்கப்பட்ட மக்கள் பிரிந்துசெல்லும் உரிமையை ஒப்புக்கொள்கிறோம். அவர்கள், தாங்களே தங்களது அரசியல் விதியை நிர்ணயிக்கும் உரிமையை ஒப்புக் கொள்கிறோம். ஆனால் அதன் மூலம், சில குறிப்பிட்ட தேசிய இனங்கள், குறிப்பிட்ட நேரத்தில் ரஷ்ய ராஜ்யத்திலிருந்து பிரிந்து போகலாமா என்ற கேள்வியை முடிவுகட்டவில்லை......' இவ்வாறாகப் பொது மக்களின் நன்மையைக் கருதி, பொதுமக்களின் புரட்சியின் நன்மையைக் கருதி பிரிந்துபோவதை ஆதரித்தோ தடுத்தோ கிளர்ச்சி செய்ய நமக்குச் சுதந்திரம் உண்டு. 1937-8-ல் ரஷ்யாவில் அனேக அரசியல் குற்றவாளிகளைத் தொலைத்தார்கள். யூனியனிலிருந்து ஏதோ சில பிரதேசம் பிரிந்துபோவதற்குச் சூழ்ச்சி செய்தவர்கள்தான் களையப்பட்டார்கள் என்று பத்திரிகைகளில் குறிப்பிடப்பட்டன. ரஷ்யாவில் இரண்டு விதக் குடியரசுகள் உள்ளன என்று கண்டோம். ஒன்று யூனியன் குடியரசு. மற்றொன்று சுயேச்சைக் குடியரசு. யூனியன் குடியரசு மேல் தட்டில் உள்ளது. மற்றது கீழ்த்தட்டைச் சேர்ந்தது. யூனியன் குடியரசுக்கே பிரிந்து செல்லும் உரிமை உண்டு. சுயேச்சைக் குடியரசை யூனியன் குடியரசாக மாற்றுவதற்கு மூன்று காரணங்கள் இருக்க வேண்டும். (i) அந்தக் குடியரசு எல்லையிலிருக்கவேண்டும். நாலு புறமும் சோவியத் யூனியனால் சூழப்படாமலிருக்க வேண்டும். பிரிந்துபோனாலும் வேறே போக்கிடம் இருக்கக்கூடாது. (ii) அது எந்த தேசிய இனத்தின் பேரைக் கொண்டுள்ளதோ அந்தத் தேசிய இனம் ஒரே கட்டமைப்பான பெரும்பான்மையாக இருக்கவேண்டும். அங்கு இன்னொரு சிறுபான்மையிருந்துகொண்டு, அதற்கும் வேறு பிரியுமுரிமை கொடுப்பதாக இருக்கக்கூடாது. (iii) அந்தக்

குடியரசு மிகக் குறைந்த ஜனத்தொகை உள்ளதாக இருக்கக்கூடாது. பத்து லட்சத்துக்கு மேலிருக்க வேண்டுமே யொழியக் குறைந்துவிடக் கூடாது.

இப்போது சோஷலிஸ்டு சோவியத் குடியரசு யூனியன் எவ்வாறு தன்னை உருவாக்கிக் கொண்டது என்பதைக் கண்டோம். அதாவது, தனது உயிரங்கங்களான குடியரசுகள் தன்னைவிட்டு நீங்காமல் தன் காலையே சுற்றும்படியாகச் செய்தபின் அவைகளுக்குப் பிரியுமுரிமை கொடுத்துத்தான், உருப்பெற வேண்டியதாக இருந்திருக்கிறது. யூனியனில் எப்போது குடியரசுகள் சேர்ந்துவிட்டனவோ அதன் பிறகு அதை விட்டுபிரிய விரும்புவதில்லை. மாறாக, அவைகளே யூனியனின் மத்திய நிர்வாகப் பிடிப்பை வலுப்படுத்துகின்றன. தனக்கு ஒரு கட்டமைப்பை இப்போதுதான் உருவாக்கிக் கொண்டிருக்கும் தேசமல்ல இந்தியா. நெடுங்காலத்திற்கு முன்பே கட்டமைப்பைப் பெற்று விட்டது. தற்போதைய அரசாங்கமும் கடந்த ஒரு நூற்றாண்டாக இதை அப்படித்தான் நடத்திவந்திருக்கிறது. ஆகவே இந்தக் கட்டமைப்பை 'ஒரே அடியாகத் தொலைத்துப் புதிதாக' ஆரம்பிக்க வேண்டியதில்லை. சுதந்திர முஸ்லிம் ராஜ்யங்கள் வேண்டுமென்றும், கூடாதென்றும் தகராறு செய்பவர்களுடைய மாறுபடுங் கருத்துக்களை சமரசம் செய்வதற்கு, சோவியத் குடியரசு யூனியனுடைய அரசியலில் காணப்படுவதுபோன்ற வகுப்புக் கலாசார சுதந்திரத் திட்டம் ஏற்படுத்த முயலலாம். இந்துக்களைப் பெரும்பான்மையாகக் கொண்ட யூனியன், முஸ்லிம் ராஜ்யத்தின் அரசுரிமையைப் பொருட்படுத்தாது புறக்கணிக்கும் என்று முஸ்லிம்கள் அஞ்சுகிறார்கள். தாய் மரத்தைச் சிதைக்காமலேயே யூனியனுக்குள் இதற்குப் பரிகாரம் கண்டுபிடிக்கலாம். பரிகாரத்திற்குப் பல வழிகள் இருக்கின்றன. (i) முதலாவது மத்திய அரசாங்க விஷயங்கள் யாவை? மாகாண அரசாங்க விஷயங்கள் யாவை? என்பதைப் பிரிக்கும்போது, ஒவ்வொரு மாகாணமும் சுயேச்சையாக இருக்கும்படியும், ஒவ்வொரு பாகிஸ்தான் அரசாங்கமும் நடைமுறையில் முழு அரசுரிமை பெற்றதாகவும் அமைத்து விடலாம். (ii) சோவியத் யூனியனில் அளிக்கப்பட்டது போல, ஒவ்வொரு வகுப்பிற்கும் கலாசார சுதந்திரம் அளிப்பது இரண்டாவது வழி. (iii) தம்மைத்தாமே நிர்வகிக்கப் போதுமான பணசக்தியுள்ளவாறு மொழிவாரி மாகாணங்களைத் திருத்தி அமைப்பது மூன்றாவது வழி. இத்தகைய எந்தத் திட்டத்தையும் திரு. ஜின்னா எதிர்த்துக் கூறுவதாவது: 'இந்தப் பாதுகாப்புகள், சட்ட பூர்வமானதாக இருந்தாலும் சரி, வேறு எப்பேர்ப்பட்டதாக இருந்தாலுஞ் சரி, அவையொன்றும் பயன்படா. மத்திய அரசாங்கத்தில் இந்துப் பெரும்பான்மை இருக்குமளவும் இப்பாதுகாப்புக்கள் ஏட்டுச் சுரைக்காய்தான்.' அரசியலமைப்பு மூலமாகவும் சட்டத்தின் மூலமாகவும் வகுப்புகளுக்குள்ள கலாசார உரிமைகள் பாதுகாக்கப்படுமென்பதுதான் இதற்குக் கூறக்கூடிய பதில். சிறுபான்மைகளுக் களிக்கப்பட்ட பாதுகாப்புகளை அமுல் நடத்துவதற்கென்றே சுப்ரீம் நீதிமன்றம் போன்றவைகள் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளலாம். பாதிக்கப்பட்ட வகுப்புகள் அந்த நீதிமன்றங்களில் நியாயம் கேட்கலாம். பல கட்சிகளும் சம்மதித்து இந்திய யூனியனை உண்டாக்கியபின், யூனியன் அரசியலமைப்பில் அமைத்த பாதுகாப்புகளை ரத்து செய்யவோ, எடுத்துவிடவோ முடியாது. வகுப்புச் சார்பற்ற சுப்ரீம் நீதிமன்றம் பாதுகாப்புகளை அமுலுக்குக் கொண்டுவந்துவிடும்.

## 40. பாகிஸ்தானுக்கு கம்யூனிஸ்டுக் கட்சியின் ஆதரவு

அகில இந்திய முஸ்லிம் லீகின் பாகிஸ்தான் கோரிக்கைக்கு இந்திய கம்யூனிஸ்ட் தலைவர்கள் ஆதரவளிக்கிருர்கள். சோவியத் யூனியன் அரசியலமைப்பையும் ஸ்டாலின் வாசகங்களையும் தங்களுக்காதாரமாக இவர்கள் எடுத்துக் காட்டினுல் அது யாருக்கும் வியப்பைத் தராது. ஆனல் அகண்ட இந்துஸ்தான சங்கத் தலைவரான டாக்டர் ராதா குமுத முகர்ஜியும்கூட அதே தோரணையில் பேசுகிருரென்ருல்தான் உண்மையாகவே வியப்பா யிருக்கிறது. ஆகவே ஸ்டாலினது கருத்துக்களைச் சற்று விரிவாக ஆராய்வது அவசியமாகிறது. இக்கருத்துக்கள் 1917 அக்டோபரிலிருந்து வளர்ச்சியடைந்து வந்திருக்கின்றன. கம்யூனிஸ்ட் கட்சியால் ஒப்புக்கொள்ளப்பட்டு சோவியத் யூனியன் அரசியலமைப்பிலும் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன.

ஸ்டாலின் வரம்புபடுத்திக் கூறுவதாவது: 'ஒரு தேசீய இனம் என்பது, மொழி, நாடு, பொருளாதார வாழ்வு, கலாசாரம் வாய்ந்த மக்களிடையே காணப்படும் உள்ளப்பாங்கு ஆகியவைகளில் ஒற்றுமை கொண்டதாகவும், சரித்திரமுள்ளதாகவும் நிலையானதாகவும் இருக்க வேண்டும்.'[1] பிற சரித்திர சம்பவங்களைப்போல இதுவும் 'மாறுதலடையும்; சரித்திரம் பெறும்; தோன்றும்; மறையும். மேற்கூறிய தனியியல்புகள் மாத்திரம் ஒரு தேசீய இனத்தின் இலக்கணத்தை முழுதுவதும் கூறிவிடவில்லை. மேற்கூறிய தனி இயல்புகளில் ஏதாயினும் ஒன்று குறைந்தாலும், அந்த தேசீய இனம் தனது தேசீய இனத்தன்மையை இழந்து விடுகிறது'[2] 'தற்காலத் தேசீய இனங்கள், தனிப்பட்ட ஒரு சகாப்தத்தின் விளைவு. அதாவது, வளர்ந்துகொண்டிருக்கிற முதலாளித்துவ சகாப்தத்தின் விளைவு. ஜமீந்தாரித்துவமழிந்து கைத்தொழிலாக்கத்தினுல் முதலாளித்துவம் வளரும்போதே ஜனங்களும் தேசீய இனங்களாக மாறினுர்கள். ஜமீன்தாரித்துவம் சிதைந்து அழிய, அதன்மீது முதலாளித்துவம் வெற்றிவாகைசூடி உலவத் தொடங்கியபொழுதுதான், பிரிட்டிஷ், பிரெஞ்சு, ஜெர்மனி, இத்தாலி மக்கள் தேசீய இனங்களாக மாறினுர்கள். கிழக்கு ஐரோப்பாவிலோ மத்திய நிர்வாக ராஜ்யங்கள், தற்காப்பு காரணமாக (துருக்கியர், மங்கோலியர் முதலியவர்களுடைய படையெடுப்பை யெதிர்ப்பதற்காக) ஜமீன்தாரித்துவ முறை ஒழிவதற்கு முன்பே, தேசீய இனங்கள் தோன்றுவதற்கு முன்பே தோன்றிவிட்டன. ஆகவே இங்கு பல தேசீய இனங்களைக் கொண்ட மத்திய வகுப்பாரால் நிர்வாகம் செய்யப்பட்ட ராஜ்யங்கள் தோன்றின. அவற்றில் பலங்கொண்ட ஒரு தேசீய இனம் மற்ற அனேக எளிய, அடிமைத் தேசீய இனங்களை ஆளும். ஆஸ்திரியா, ஹங்கேரி, ரஷ்யா இத்தகைய ராஜ்யங்கள் போல.

'பிரான்ஸ், இத்தாலி போன்ற தேசீய இன ராஜ்யங்கள் தங்களுடைய தேசீய இன ராணுவத்தை நம்பியிருந்ததால் பிற தேசீய இனங்களை நசுக்காமலிருந்தன. இதற்கு மாருக இருந்தது கிழக்கு ஐரோப்பாவிலுள்ள பல தேசீய இனங்களைக்கொண்ட ராஜ்யங்களின் நிலைமை. அங்கு ஒரு தேசீய இனம் பிற தேசீய இனங்களை அடக்கியாண்டது. ஒரு தேசீய இனம் பிறவினங்களை ஆளுகின்ற இனமாக மாறியதால் அங்குதான் தேசீய இனக் கொடுமைகளும் தேசீய இன இயக்கங்களும் தோன்றின. ஆளும் இனத்தின்

---

1. M. Stalin: *Marxism and the National and Colonial Question* p. 8.
2. *ibid.*, p. 8.

நன்மைகளும் ஆளப்படும் இனத்தின் நன்மைகளும் மாறுபட்டவை. ஆகவே அந்த மாறுபாட்டைத் தீர்த்தாலொழிய பல தேசிய இனங்களைக் கொண்ட ராஜ்யங்களின் வாழ்வும் நிலையற்றுவிடும். மத்தியதர வகுப்பாரால் ஆளப்படும் இந்த ராஜ்யங்களால் இந்த மாறுபாட்டைத் தீர்க்க முடிவதில்லை. அதுதான் அங்குள்ள துயரக் கதை. ஆளும் இனத்தை "மட்டம்'' தட்டி ஆளப்படும் இனங்களைக் "காப்பாற்ற"ச் செய்யும் ஒவ்வொரு முயற்சியும் புதுத் தோல்வியாய்தான் வழக்கமாய் முடிகிறது. வகுப்பு வேற்றுமைகளையும் அதிகப்படுத்திவிடுகிறது.

'பின்னல் ஐரோப்பாவில் முதலாளித்துவம் தலையெடுத்தது. புதிய மார்க்கட்டுகளைத் தேடவேண்டியதாயிற்று. மூலப் பொருள்கள், மண்ணெண்ணெய் போன்ற எரி பொருள்கள் முதலிய பொருள்களும் வேண்டியிருந்தன, இறுதியாக ஏகாதிபத்திய விஸ்தரிப்பு, வெளிநாடுகளில் முதலீடு செய்தல்,கடல் மார்க்கம், தரைமார்க்கங்களைக் காப்பாற்ற வேண்டிய அவசியம் ஆகிய இத்தனை காரியங்களும்கூடி பழைய தேசிய இன ராஜ்யங்களைப் பல தேசிய இனங்களைக் கொண்ட ராஜ்யங்களாக மாற்றிவிட்டன. இந்த தேசிய இனங்கள் (கிரேட் பிரிட்டன், பிரான்ஸ், ஜெர்மனி, இதாலி) ஆளும் இனங்களாகவும் காலனிகள் உடையவனவாகவும் மாறின. இந்த ஏகாதிபத்திய ராஜ்யங்களிலும் தேசிய இனக் கொடுமையும், தேசிய இனச் சண்டை சச்சரவுகளும் வந்தன. ஏற்கெனவே பல தேசிய இனங்களைக் கொண்ட பழைய ராஜ்யங்களும் இந்தப் புதிய மாறுதல்களால் தங்களுடைய நாட்டு எல்லையை விஸ்தரிப்பதற்காக அண்டை நாடுகளைக் கைவைக்க முயன்றன. தேசிய இனப் பிரசினை வளர்ச்சியடைந்து நாளடைவில் காலனிப் பிரசினையோடு சேர்ந்துவிட்டது. தேசிய இனக் கொடுமை என்பது ஒரு தேசத்தின் உள்நாட்டு விவகாரம் என்பதுபோய், பல ராஜ்யங்களுக்கும் பொதுவான பிரசினையாக மாறிவிட்டது. ஏழை எளிய நாடுகளை அடிமைப்படுத்திக் கொள்வதற்காகப் பெரிய ஏகாதிபத்திய நாடுகளுக்குள்ளே போட்டியும் போரும் நிகழும் பிரசினையாக முடிந்தது.'[3]

1914-18-ல் நடந்த ஏகாதிபத்திய யுத்தம், வெற்றிபெற்ற காலனி கொண்ட ராஜ்யங்களுக்குள் (கிரேட் பிரிட்டன், பிரான்ஸ், இத்தாலி) தேசிய இனத் தகராறுகளைத் தீவிரமாக்கிவிட்டது. தோல்வியடைந்த தேசங்களான) பல தேசிய இனங்களைக் கொண்ட பழைய ராஜ்யங்களை (ஆஸ்திரியா, ஹங்கேரி, 1917ல் ரஷியா) சிதைத்து, புதிய-தேசிய இன ராஜ்யங்களாக்கிற்று (போலந்து, ஸெக்கோஸ்லவோகியா, யூகோஸ்லாவியா, பின்லந்து, ஜார்ஜியா, ஆர்மீனியா, ஆகியவை) ஒரே தேசிய இனத்தைக்கொண்ட இந்த ராஜ்யங்கள் தனி உடைமையையும், வகுப்பு வேற்றுமையையும் அடிப்படையாக உடையன வாதலால் (அ) தங்களிடமகப்பட்ட தேசிய இனச் சிறுபான்மைகளை அடக்கி யொடுக்காமலும் (ஆ) பக்கத்து நாடுகளோடு போரிட்டு எல்லைகளை விஸ்தரிக்காமலும், (இ) நிதிநிலைமை, பொருளாதாரம், ராணுவம் முதலிய காரியங்கள் சம்பந்தமாகப் பெரிய வல்லரசுகளுக்கு அடிமையாக மாருமலும் வாழ முடியாது.

---

3. 1921 மார்ச்சில் கூடிய ரஷ்ய கம்யூனிஸ்ட் கட்சியின் பத்தாவது காங்கிரஸ் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம்.

Stalin: *Marxism and the National and colonial Question*, pp. 270-1.

தனி உடைமையும் தனிமுதலும் இருக்கிறவரையும் இந்த நிலைமையைத் தவிர்க்கமுடியாது. அவைகள் நிச்சயமாக ஜனங்களைப் பிரிக்கின்றன. இனங்களிடத்திலே இனவேற்றுமையைத் தூண்டுகின்றன. ஓர் இனம் பிறவினங்களைக் கொடுமைப் படுத்துவதையும் அதிகமாக்குகின்றன. அதுபோல பொது உடைமையும் பொது உழைப்பும் ஜனங்களை நெருங்கி உறவாடும்படி செய்கிறது. தேசீய இனவேற்றுமைகளை அழிக்கிறது. கொடுமைகளையும் ஒழிக்கிறது. ஒடுக்கப்பட்ட தேசிய இனங்களுக்கு விடுதலையில்லாமல், தேசிய இன சுதந்தரம் இல்லாமல் பொது உடைமை என்பது எவ்வாறு நினைக்க முடியாத காரியமோ அதுபோலவே ஓர் இனம் மற்றோரினத்தைக் கொடுமைப் படுத்தாமல் முதலாளித்துவம் நிலைக்கும் என்பது நினைக்க முடியாத காரியம். ஆகவே, தேசீய இனக்கொடுமைகளை ஒழிப்பதற்கும் தேசிய இனங்களிடை சமத்துவத்தை நிலைநாட்டுவதற்கும் சிறுபான்மைகளின் உரிமைகளுக்கு உத்தரவாதமளிக்கவும் வேண்டுமானால் முதல் அடிப்படை நிபந்தனையாக, சோவியத் முறை வெற்றிபெறவேண்டும். பாட்டாளியின் சர்வாதிகாரம் ஏற்படுத்தப்பட வேண்டும். ரஷ்யாவில் சோவியத் முறையை ஏற்படுத்தி எல்லா இனங்களுக்கும் பிரிந்துபோகும் அரசியல் உரிமை உண்டென்று பிரகடனப்படுத்தியவுடன் ரஷ்யாவிலுள்ள தேசீய இனங்களைச் சேர்ந்த உழைப்பாளி மக்களிடையே உறவுமுறை முற்றிலும் மாறியது. தனித்து ஒதுங்கி நிற்பதால் அனேக சோவியத் குடியரசுகளுடைய வாழ்வு நிலையற்றதாக இருந்தது. அவைகளுக்கு முதலாளித்துவ நாடுகள் பேராபத்தை விளைவித்துக் கொண்டிருந்தன. சோவியத் குடியரசுகள் தற்காப்புக்காக ஒருமித்துக் காரியங்களைச் செய்யவேண்டியிருந்தது. முதல் உலக யுத்தத்தினால் அவைகளின் ஆக்க வேலைகள் அனைத்தும் சிதறடிக்கப்பட்டன. அவைகளை ஒன்று திரட்ட வேண்டியிருந்தது. உணவு மிகுந்த குடியரசு உணவில்லாத குடியரசுக்கு உதவவேண்டி யிருந்தது. இத்தேவைகளெல்லாம் குடியரசுகள் ஒன்றுபடும்படி கட்டாயப்படுத்தின. அப்பொழுதுதான் ஏகாதிபத்திய அடிமைத்தனத்திலிருந்தும் கொடுமையிலிருந்தும் தப்பமுடியும் என அவை கருதின.[4]

மேலே கண்ட மேற்கோள், ரஷ்ய கம்யூனிஸ்ட் கட்சி வகுத்துள்ள கொள்கைகளை எடுத்துக் காட்டுகிறது. இக்கொள்கைளை, 1917-ம் வருஷத்துப் புரட்சிக்கு முன்பிருந்தே இதுநாள் வரையும் ஸ்டாலினும் இதரரும் விளக்கி வந்திருக்கிறார்கள். மேலே கூறி விளக்கப்பட்டுள்ளபடி, இந்தியாவிலுள்ள பிற தேசீய இனம் அல்லது இனங்களிலிருந்து இந்திய முஸ்லிம்கள் வேறுபட்ட ஒரு தனித் தேசீய இனம். ஆகவே அவர்களுக்குப் பிரியுமுரிமை உண்டு என்பது மட்டுமில்லாமல், அவர்கள் எண்ணிக்கையில் அதிகமாக இருக்கிற பாகங்களை இப்பொழுதே இங்கேயே பிரித்துவிட வேண்டும் என்ற முஸ்லிம் லீகின் கோரிக்கையை ஆராய்வோம்.

ஒரு வகுப்பார் தேசீய இனமாகிறார்களா இல்லையா என்பதற்கு கம்யூனிஸ்டு கட்சி கூறுகிற கொள்கைகளின்படி பார்த்தால் இந்து முஸ்லிம்களனைவரும் ஒரே தேசிய இனத்தைச் சேர்ந்தவர்களாக மாட்டார்கள். அவர்கள் ஒரே மொழியைப் பேசவில்லை. அவர்கள் பேசும் மொழி இடத்துக்கு இடம் மாகாணத்துக்கு மாகாணம் வேறாக இருக்கிறது. முஸ்லிம்கள் எந்தெந்த மாகாணத்தைச் சேர்ந்திருக்கிறார்களோ, அங்கே முஸ்லிமல்லாதவரும் பேசுகிற அந்த மொழியைத்தான் அவர்கள் பேசுகிறார்கள். ஒன்றுக்கொன்று நெடுங்

4. Adopted from the same resolution op. cit., pp. 273—4.

தூரத்திலுள்ள மாகாணங்களில்தான் இப்படியிருக்கிற தென்பதில்லை. ஒன்றையொன்று ஒட்டியுள்ள வடமேற்குப் பிரதேசத்திலும், நாலுமாகாண வாசிகள், பலுச்சி, சிந்தி, புஷ்டு, பஞ்சாபி ஆகிய நான்கு மொழிகளைப் பேசுகிறார்கள். ஹிந்தி, ஹிந்துஸ்தானி, வங்கம் அல்லது குஜராத்தி மொழிக்கும் இவைகளுக்கும் எவ்வளவு வேறுபாடோ அவ்வளவு வேறுபாடு அவைகளுக்குள் உண்டு.

இந்தியா முழுதும் ஒரே நாடாகிறது என்று வைத்துக்கொண்டாலொழிய முஸ்லிம்களனைவரும் ஒரே நாட்டைச் சேர்ந்தவர்களென்று கூற முடியாது. முஸ்லிம்கள் பெருவாரியாக இருக்கக்கூடிய வடமேற்கு வடகிழக்குப் பகுதிகள் ஒன்றுக்கொன்று ஆயிர மைல்களுக்கப்பால் இருக்கின்றன. இவர்களுடைய பொருளாதார வாழ்க்கை பிறரிடமிருந்து வேறுபட்டிருக்கிறதென்றுங் கூறுவதற்கில்லை. ஒரு பிரதேசத்திலுள்ள முஸ்லிமல்லாதவர்களுடைய பொருளாதார வாழ்வைப் போலத்தான் முஸ்லிம்களுடைய பொருளாதார வாழ்வும் இருக்கிறது. மற்றப் பிரதேசத்திலுள்ள முஸ்லிம்களுடைய பொருளாதார வாழ்வுக்கும் முஸ்லிமல்லாதாருடைய வாழ்வுக்கும் வேறுபட்டே இவர்களுடைய பொருளாதார வாழ்வு அமைந்திருக்கிறது.

ஒரு தேசிய இனத்தை நிறுவுவதற்கு மதத்தை அடிப்படையாகக் கொள்ள வேண்டுமென்று ஸ்டாலின் குறிப்பிடவில்லை என்பது கவனிக்கத் தகுந்தது. தனியான மதம் உடையவர்கள் என்ற காரணத்தினால் மாத்திரம் யூதர்கள் ஒரு தனித் தேசிய இனமாகிறார்கள் என்ற கருத்தைப் பல இடங்களில் எள்ளி எழுதியிருக்கிறார். 'கலாசாரம் வாய்ந்த மக்களிடம் காணப்படும் உள்ளப்பாங்கு' என்று அவர் கூறுவதில் மதாச்சாரமும் சேர்ந்ததெனக் கொள்ளலாம். ஏனெனில் கலாசார வளர்ச்சியில் மதாச்சாரம் முக்கிய பங்குடையது. இஸ்லாம் போதித்ததென்னவோ, அது ஒருபுறமிருக்க, இந்தியா முழுவதையும் கவனித்தால் இஸ்லாமியக் கலாசாரம் எங்கும் ஒன்றுபோல இல்லை என்பதற்குச் சந்தேகமில்லை. முஸ்லிம் கலாசாரத்திலடங்கியவையெனக் கருதக்கூடிய விஷயங்கள் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறாக இருக்கின்றன. முஸ்லிம் கலாசாரத்தின் தோற்றமும் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறாகத் தோற்றமளிக்கிறது. இதுவிஷயமாக இதர வகுப்பார் எத்தனை விதமாகக் காணப்படுகிறார்களோ அத்தனை விதமாக முஸ்லிம்களும் காணப்படுகிறார்கள் எனலாம். ஷியாக்களுக்கும் சூனிகளுக்கும் உள்ள வித்தியாசம் இஸ்லாம் எவ்வளவு தொன்மையானதோ அவ்வளவு தொன்மையானதாகும். இன்னும் அநேக முஸ்லிம் கூட்டத்தார், இந்து தாயபாகப் பிரிவினை முறையையும் அவர்கள் ஆதியில் எந்த இந்து வகுப்பைச் சேர்ந்தவர்களாக இருந்தார்களோ அந்த வகுப்பினரின் பழக்க வழக்கங்களை இன்னும் உடையவர்களாகவும் இருக்கிறார்கள். முஸ்லிம்களில் சமீபத்தில் தோன்றிய காதியானிகளும் இருக்கிறார்கள். இந்த வேறுபாடுகளெல்லாம் மதவிதிகளையும் கொள்கைகளையும் பற்றியனவென்றாலும் அவைகள் முஸல்மான்களுடைய சமூக வாழ்வில் உள்ளும் புறமும் ஊறிப் பரவி நிற்கின்றன. இருந்தாலும் இந்தியா முழுவதும் பரவியிருக்கின்ற முஸ்லிம்களிடையே பொதுவான கலாசாரம் இருக்கிறது என்பதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். ஆனால் அதேபோல இந்து முஸ்லிம்களுக்கிடையே வேற்றுமைகள் காணப்பட்டாலும் அவர்களிடையேயும் ஒரு பொதுவான இந்திய கலாசாரம் பரவியிருக்கிறதென்பதையும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஆக, கம்யூனிஸ்டுகள் வகுத்துள்ள வரம்புகளைக்

கொண்டு பார்த்தால் இந்திய முஸ்லிம்களனைவரும் ஒரு தேசீய இனத்தவர் அல்லர். இந்த கம்யூனிஸ்டுகளும் இதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். 'ஒரு தேசீய இனத்தின் அடிப்படையாக மதத்தைக் கொள்வதற்கு காந்திஜி பெரிதும் தடை கூறுகிறார். மதம் மாத்திரம் ஒரு தேசீய இனத்தை ஏற்படுத்த வில்லை என்று அவர் கருதுவது சரியே. உள்ளப்பாங்கும் கலாசாரமும் ஒரு தேசீய இனத்தைக் காட்டும் அம்சங்கள் தான். உள்ளப்பாங்கையும் கலாசா ரத்தையும் எவ்வளவு தூரம் மதம் உருப்படுத்துகிறதென்பது பற்றிப் பேசுவது நமக்குப் புறம்பான விஷயம். பொதுவான மதத்தைப் பின்பற்று வதன் காரணமாக முஸ்லிம்கள் ஒரு தனித் தேசீய இனமாகவில்லை என்பதைக் கூறினால் மட்டும் போதுமானது. ஆனால் அதை மாத்திரம் கூறுவது பாதி உண்மையைக் கூறுவதாகும்.[5] திரு ஜோஷியின் கருத்துப்படி, இந்தியா அனேக தேசீய இனங்களடங்கிய குடும்பம் என்பதே மறுபாதி உண்மையாம்.

அடுத்தபடியாகக் கவனிக்கவேண்டியது சரித்திர வரலாறு—தேசீய இனப் பிரசினை தோன்றிய விதம். இவ்வரலாற்றை எம். ஸ்டாலின் மூன்று காலப் பிரிவுகளில் பிரித்துக் கூறுகிறார். 'முதற் பிரிவில் மேனாட்டில் ஜமீன் தாரித்துவ மொழிந்து முதலாளித்துவம் வெற்றி கண்டது. இந்தக் காலத்தில் தான் ஜனங்கள் தேசீய இனங்களாக மாறினார்கள்.'[6] (கிரேட்பிரிட்டன்—அயர்லாந்து இல்லை, பிரான்ஸ், இத்தாலி) 'கிழக்கு ஐரோப்பாவில் தேசீய இனங்கள் உருவெடுத்து ஜமீன்தாரித்துவம் ஒழிந்த அதேகாலத்தில் மத்திய நிர்வாகமுடைய ராஜ்யங்கள் உண்டாகவில்லை. ஆனால் கலப்பு ராஜ்யங்கள் தோன்றின. தேசீய இனங்களாக உருவம்பெறாத அநேக தேசீய இனங்களைக் கொண்ட பொதுராஜ்யங்கள் உண்டாயின.........இந்த இடங்களில்தான் ஓர் இனத்தை மற்றோர் இனம் கொடுமைப்படுத்துவதும் இக்கொடுமையால் தேசீய இனத் தகராறுகளும், பிரசினைகளும் இயக்கங்களும், இப்பிரசினையைத் தீர்க்கும் முறைகளும் தோன்றின.'[7] கிழக்கு ஐரோப்பாவில், ஜார் ஆட்சியின் போது ரஷ்யாவும் இப்படித்தான் இருந்தது. எல்லைப் பிரதேசங்களை ரஷியப் பெருங்குடி மக்கள் கொடுமைப்படுத்தியதால் தேசீய இனப்பிரசினை அங்கு தோன்றியது.

'தேசீய இனப்பிரசினை வளர்ச்சியின் இரண்டாவது கட்டம், முதல் ஏகாதிபத்திய யுத்தமுடிவில் ஆரம்பமாகிறது. அடிமைத் தேசீய இனங்கள் வீறுகொண்டெழுந்தன. (செக் ஜாதியார், போலந்துக்காரர், உக்ரேனியர்) பல தேசீய இனக் கும்பலைக்கொண்ட மத்தியதர வகுப்பு ராஜ்யங்கள் உருக் குலைந்தன. ஒரே தேசீய இனத்தைக்கொண்ட ராஜ்யங்கள் பல உருவெடுத் தன. ஆனால் இவைகள் பெரிய வல்லரசுகளின் பிடிப்புக்குள்ளிருந்தன.

'மூன்றாவது கட்டம்தான் சோவியத் கட்டம். இக்காலத்தில் முதலா ளித்துவம் ஒழிக்கப்பட்டு தேசீய இனக் கொடுமைகளும் வேரறுக்கப் பட்டன.'[8]

சரி, இப்போது இந்திய வரலாற்றைக் கவனித்தால் இந்த வகையான இனவளர்ச்சி இங்கு கிடையாது. இந்தியா முழுவதையும் ஆளுகின்ற ஒரு மத்திய நிர்வாக அரசாங்கமேயிருந்துவருகின்றதென்பதில் ஐயமில்லை. இந்த அரசாங்கம் இந்திய சமஸ்தானங்கள்மீதும் அதிகாரம் செலுத்துவதாக இருக் கிறது. ஆனால் இந்த மத்திய நிர்வாக ராஜ்யத்தில், கிழக்கு ஐரோப்பிய நாடு

5. P. C. Joshi : *They must meet again*, *p*. 7. 6. *ibid*., p. 99.
7. *ibid*., pp. 99—100. 8. *ibid*., pp, 100—101.

களில் இருந்ததைப்போல, எந்த இந்திய வகுப்பும் அல்லது மாகாணமும் ஆட்சி பெற்றதில்லை. கிழக்கு ஐரோப்பாவிலும், குறிப்பாக ரஷ்யாவிலும் நடைபெற்றதுபோல, இந்தியாவில், ஏதேனும் ஒரு தேசீய இனம் மத்திய நிர்வாகம் செய்ததென்றும் அதனுடைய கொடுமைகளுக்கு மற்ற இனங்கள் இரையாயின என்றும் சொல்வதற்கில்லை. எல்லா வகுப்பும், அன்னிய ஆட்சியான மத்திய நிர்வாகத்துக்கே அடிமைப்பட்டிருக்கிறார்கள். ஒரு இனம் மற்றோர் இனத்தின் உரிமைகளைப் பறிக்காதவாறு பாதுகாக்க வேண்டுமென்பதில்லை இங்குள்ள பிரசினை. இங்குள்ள எல்லா வகுப்பாரின் நலன்களைப் பறித்து அதிகாரம் செலுத்துகிற மத்திய ஆட்சியை எதிர்க்கவேண்டியதே இங்குள்ள பிரசினை. இந்தவகையில் இந்தியா, ஐரோப்பிய தேசங்களோடு சேர்க்கப்படவேண்டியதில்லை. காலனிகளோடு சேர்த்தெண்ணப்படவேண்டும். ஆகவே இப்பொழுது நியாயமாக முதலில் கவனிக்கவேண்டிய விஷயம் கொடுமைப்படுத்துகிற இனத்திலிருந்து, அடிமை இனத்தைப் பிரித்துவிடுவதல்ல. அப்படியொன்றே இங்கில்லை. ஆனால் கொடுமைக்கிரையான அத்தனை இனங்களையும் கிரேட் பிரிட்டனின் ஏகாதிபத்திய ஆதிக்கத்தினின்றும் விடுவிக்கவேண்டும். இதைத்தான் இத்தனைகாலமாக காங்கிரஸ் வற்புறுத்தி வந்திருக்கிறது.

ஏகாதிபத்திய ஆதிக்கத்திலிருந்தும் கொடுமைகளிலிருந்தும் விடுதலை பெற்றபிறகு, அதன் இடத்திற்கு வரக்கூடிய பெரும்பான்மையினால் சிறுபான்மைத் தேசீய இனங்கள் நசுக்கப்படமாட்டார்கள் என்ற உறுதி கூறப்படவேண்டும் எனக் கோரலாம். இந்த உறுதியை எளிதில் கொடுத்துவிடலாம். சோவியத் யூனியன் குடியரசின் அரசியலமைப்பில் விதிக்கப்பட்டுள்ளதுபோல, சில தெளிவான இன்றியமையாத நிபந்தனைகளுக்குட்பட்டு சுயநிர்ண உரிமையையும், பிரியுமுரிமையையும் ஏற்றுக்கொள்வதன்மூலம் அத்தகைய உறுதியளித்தாகிவிடும். 'தேசீய இனங்கள் சுதந்திரமாகப் பிரிந்துபோகலாம் என்ற உரிமையோடு சேர்த்து, ஒரு குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட தேசீய இனங்கள் பிரியலாமா என்ற கேள்வியைப் போட்டுக் குழப்பிக்கொண்டிருக்கக் கூடாது......... கொடுமைக் கிரையான மக்களுக்குப் பிரியுமுரிமை யுண்டென்பதை ஏற்றுக்கொள்கிறோம். அவர்கள் தங்களது அரசியல் விதியைத் தாங்களே வகுக்கும் உரிமையையும் ஏற்றுக்கொள்கிறோம். ஆனால் அதற்காக, ரஷ்ய ராஜ்யத்திலிருந்து குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட ராஜ்யங்கள் பிரியலாமா என்பதைப்பற்றி முடிவுசெய்துவிடவில்லை. ஒரு தேசீய இனத்திற்குள்ள பிரியுமுரிமையை நான் ஏற்றுக்கொள்ளமுடியும். ஆனால் அதன்மூலம் அதைப் பிரியும்படி வற்புறுத்துகிறேன் என்பது அர்த்தமல்ல. ஓர் இனம் அத்தகைய உரிமையைப் பெற்றிருக்கின்றது. ஆனால் சந்தர்ப்பங்களையொட்டி அந்த உரிமையைக் கொண்டாடலாம் அல்லது சும்மா இருக்கலாம். இவ்வாறாக, பாட்டாளியின் நன்மையை உத்தேசித்து, பாட்டாளிப் புரட்சியின் நன்மையைக் கருதி, பிரிவை ஆதரித்தும் அல்லது எதிர்த்தும் போராட நாம் சுதந்திரம் உள்ளவர்களாக இருக்கிறோம். ஆகவே பிரிவு என்பது கிளம்பினால், யார்?, ஏன்?, உள்ளும் புறமுமுள்ள சந்தர்ப்பங்கள் யாவை?, என்பவற்றைத் தனித்தனியாக ஆராய்ந்து முடிவுகட்டவேண்டும். இக்காரணங்களால், பிரியுமுரிமை என்ற பிரசினையோடு, குறிப்பிட சந்தர்ப்பங்களில் பிரிதல் சரிதானா என்பதையும் குழப்பிக்கொண்டிருக்கக்கூடாது.' [9] இந்தியாவில் இப்பொழுது தேவை என்று வேண்டப்படுவது. பிரியுமுரிமையல்ல ஆதிக்கம் செலுத்திக்கொண்டிருக்கிற

---

9. Stalin, op. cit., p. 64.

ஏகாதிபத்திய அதிகாரத்தினின்றும் நாடு தன்னை விடுவித்துக்கொள்ளுமுன்பே—அவசரப்பட்டு இப்பொழுதே—பிரிந்துவிடவேண்டுமென்று கோரப்படுகிறது. ஆங்காங்குள்ள தனிப்பட்ட நிலைமைகள் யாவை என்பதைக் கவனிக்காமல் எல்லா நாடுகளிலும் ஒரேவிதமான நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென எம். ஸ்டாலினும், ரஷ்ய கம்யூனிஸ்டுகளும் சொல்லவில்லை என்பது மேற்கண்ட வாசகங்களிலிருந்து தெளிவாகிறது. எம். ஸ்டாலின் இருவிதப் புரட்சிகளைப் பற்றித் தெளிவாக விளக்கியிருக்கிறார். அவைகளுக்குள்ள வேறுபாட்டைக் குறிப்பாக வலியுறுத்திக் காட்டுகிறார். ஒன்று பிறவினங்கள் ஆதிக்கம் செலுத்திய நாடுகளுக்குள் ஏற்பட்டது. மற்றொன்று ஆளப்பட்ட நாடுகளில் அதாவது காலனி நாடுகளில் ஏற்பட்டது.[10] இதற்கு அதிகாரபூர்வமான ஆதாரமாக கம்யூனிஸ்ட் இன்டர்நுஷனிலிருந்து ஓர் அறிக்கையைக் காட்டுகிறார். சீனு, இந்தியா போன்ற நாடுகளில் 'அன்னிய ஆதிக்கம் சமூக வளர்ச்சிக்கு நிரந்தர இடையூறு செய்கிறது. ஆகவே காலனிகளில் நடக்க வேண்டிய புரட்சியின் முதற்படி அன்னிய முதலாளித்துவ ஆட்சியை ஒழிப்பதே.'[11] இந்தியாவில் செய்ய வேண்டிய முதல் வேலை நாட்டைத் துண்டாடுவது அல்ல, அன்னிய ஆதிக்கத்தை ஒழிப்பது என்று சொல்வது ஸ்டாலினது கருத்துக்களுக்கு முழுவதும் ஒத்திருக்கின்றதல்லவா? ஒன்று கவனிக்க வேண்டும். தேசிய இனங்களுக்கு சுயநிர்ணய உரிமைக் கொள்கையையும், ஜனங்கள் சுதந்திரமான அரசியல் வாழ்வை வாழலாம் என்ற கொள்கையையும் கம்யூனிஸ்டு கட்சி ஏற்றுக்கொண்டபோதிலும், அவைகளைப்போல, அவ்வளவு உறுதியாக வேறு சில இன்றியமையாத கொள்கைகளையும் உடன் கொண்டிருக்கிறது. அவையாவன: தனி உடைமை, சொத்துத் திரட்டுதல் ஆகிய இரண்டையும் ஒழிக்காமல், பொது உடைமையையும் பொது உழைப்பையும் ஏற்படுத்தாமல், பாட்டாளியின் சர்வாதிகாரத்தை நிலைநிறுத்தாமல், ஒடுக்கப்பட்ட மக்கள் விடுதலை பெறுவது இயலாது என்பதாம். தேசிய இனங்களின் பிரியுமுரிமையை ஏற்றுக் கொள்ளல், சோவியத்தை ஏற்படுத்திப் பாட்டாளியின் சர்வாதிகாரத்தை நிலைநாட்டல் என்ற இரட்டைக் கொள்கையின் அடிப்படையில்தான் ஒரு மத்திய சமஷ்டி ராஜ்யத்தில் பல வகுப்பாருடைய சகோதர ஒத்துழைப்பை ஏற்படுத்த முடியும். ஒன்றை மட்டும் எடுத்துக்கொண்டு ஒன்றைத் தள்ளுவதால் காரியம் நடக்காது. பிரியுமுரிமையை மாத்திரம் எடுத்துப் பேசிவிட்டுப் பாட்டாளி சர்வாதிகாரத்தை பற்றிப் பேசாதிருப்பது பயனில்லை. இரண்டு கொள்கைகளையும் ஒழுங்காக வற்புறுத்தினுல் அநேக தொல்லைகள் கிளம்பிவிடும் என்பது வெளிப்படை. பாகிஸ்தான் கோரிக்கையை ஆதரிக்கிறவர்கள் இதனை நன்கு அறிவார்கள். ஆகவேதான் ஒன்றைப்பற்றி வாயெடுத்துவிட்டு இன்னொன்றைப்பற்றி வாய் மூடி விடுகிறார்கள். லீகின் பிரேரணைக்கு கம்யூனிஸ்டுக் கட்சி எவ்வளவோ தாராளமாக முன்வந்து ஆதரவளித்தும், திரு. ஜின்னுவும் முஸ்லிம் லீகும், அதன்மீது வாஸ்தவமாகப் பகைமை காட்டாவிட்டாலும் வெறுத்தாற்போலிருப்பதற்கும் காரணமில்லாமலில்லை.

---

10. *ibid.*, p. 232.
11. *ibid.*, p. 236.

# 41. சப்ரூ கமிட்டியின் பிரேரணைகள்

சிறிது காலத்திற்கு முன்பு சர் தேஜ்பகதூர் சப்ரு தலைமையில் பிரிட்டிஷ் இந்தியாவிலும், சமஸ்தானங்களிலும், அனுபவம் பெற்ற பிரமுகர்களைக் கொண்ட கமிட்டி ஒன்று கூடியது. இவர்கள் பொது வாழ்விலும் உயர்பதவி களிலும் ஈடுபட்டவர்கள். இவர்கள் எத்தகைய வகுப்புவாதக் கட்சிகளிலும் தொடர்பில்லாதவர்களென்றும், இந்தியாவின் அரசியல், வகுப்புவாதப் பிரசினை களுக்குக் கொண்டுவரப்பட்ட எவ்விதத் திட்டங்களோடும் சம்பந்தமில்லாத வர்களென்றும் சொல்லப்பட்டது. ஆகவே அவர்களுடைய ஆலோசனைகள் கட்சிச் சார்பற்றதாக இருக்குமென்று வலியுறுத்தப்பட்டது. இந்தக் கமிட்டி தனது சிபார்சுகளை இரண்டு பகுதிகளாக வெளியிட்டது. முதற்பகுதி மத்தி யில் ஒரு தேசீய அரசாங்கத்தை ஏற்படுத்துவதற்கான இடைக்கால ஏற்பாடு களைப்பற்றியது. இரண்டாவது பகுதி இந்தியாவின் வருங்கால அரசியலமைப் பைப் பற்றியது. நான் இப்போது இரண்டாவது பகுதியிலுள்ள திட்டங் களைப் பற்றிக் கூறுகிறேன்.

இக்கமிட்டியின் பிரேரணைகளில், இந்திய சுதந்திரப் பிரசினையைப் பற்றித் தனியான சிபார்சுகள் ஒன்றுங் காணவில்லை. அதனுடைய சிபார்சுகள் பிரிட்டிஷ் பார்லிமெண்டினால் நிறைவேற்றப்பட வேண்டுமென்று எதிர்பார்க்கப் படுகின்றன. இச்சிபாரிசுகளை நிறைவேற்றி வைக்கும் அதிகாரம் பார்லி மெண்டுக்கு ஒப்படைக்கப்பட்டிருந்ததென்பதொரு புறமிருக்க, இச்சிபாரிசுகள், ஒரு டொமினியனுக்கும், சுதந்திர இந்தியாவுக்கும் பொருந்தக்கூடிய அரசிய லமைப்பைப்பற்றியே கூறுகின்றன.

சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் கொண்டுவந்த நகல் அறிக்கையின் D ஷரத்து பிரகாரம் அரசியலமைப்புச் சபை சபை அமைக்கப்பட வேண்டும். அதில் கீழ்வரும் மாறுதல்களைச் செய்துகொள்ள வேண்டும்:—(1) அச்சபையின் மொத்த அங் கத்தினர்கள் 160 பேராக இருக்க வேண்டும். விவரம்: வர்த்தகம், கைத் தொழில், நிலச்சுவான்தார்கள், சர்வ கலாசாலைகள், தொழிலாளி, பெண்கள் ஆகிய தனி நலன்களுக்கு 16 பேர்; தாழ்த்தப்பட்டோர் நீங்கலாக இந்துக்கள் 51; முஸ்லிம்கள் 51; தாழ்த்தப்பட்டோர் 20; இந்தியக் கிறிஸ்தவர்கள் 7; சீக்கியர்கள் 8; பிற்போக்குப் பிரதேசங்கள் பூர்வகுடிகள் 3; ஆங்கிலோ-இந்தியர் 2; ஐரோப்பியர் 1; இதரர் 1. மொத்த அங்கத்தினர்களின் தொகையை 160 ஆக இக்கமிட்டி திட்டப்படுத்திவிட்டது. சட்டசபை அங்கத் தினர்களின் மொத்தத் தொகையில், பத்திலொரு பாகம், அரசியலமைப்புச் சபை அங்கத்தினராக வேண்டுமென்று கிரிப்ஸ் திட்டம் கூறுவதைக் கணக்கிட்டாலும் இரண்டும் ஒன்ருகத்தான் வருகிறது. ஒவ்வொரு நலனுக்கும் வகுப்புக்கும் இத்தனை ஸ்தானங்கள் என்று சப்ரூ கமிட்டி திட்டப்படுத்தும்போது, தாழ்த் தப்பட்டோர் நீங்கலாக உள்ள இந்துக்களையும் முஸ்லிம்களையும் சமநிலையில் வைக்கிறது. சட்டசபை அங்கத்தினர்கள், விகிதாசாரப் பிரதிநிதித்துவமுறைப் படிதேர்தல் நடத்தவேண்டுமென்று கிரிப்ஸ் திட்டம் கூறுகின்றது. இத்திட்டத் தின்படி ஒவ்வொரு வகுப்பும் அதற்குரிய ஸ்தானங்களைப் பெறுமேயல்லாது கூடுதலாகவோ குறைவாகவோ பெற முடியாது. சப்ரூ கமிட்டி சிபார்சு செய்த தைக் காட்டிலும் முஸ்லிம் பிரதிநிதித்துவம் மிகக் குறையும். இந்துப் பிரதி நிதித்துவம் அதிகப்படும். ஆனால் வகுப்பு ஒற்றுமையை உத்தேசித்துக் கமிட்டி இந்த மாறுதலைச் சிபார்சு பண்ணியிருக்கிறது.

அரசியலமைப்புச் சபைக்கு வந்திருந்து வாக்கு அளிப்பவர்களில் முக்கால் வாசிப்பேர் ஆதரவளித்தாலொழிய அச்சபையின் எந்த முடிவும் செல்லுபடி யாகாது. அரசியலமைப்புச் சபையின் முடிவுகளை மன்னரது சர்க்கார் சட்ட மாக்க வேண்டும். எங்தெந்த விஷயங்களில் சபையின் பெரும்பான்மை முடிவு தெரிவிக்கப்படவில்லையோ அது சம்பந்தமாக மன்னரது சர்க்காரே தனது தீர்ப்புகளைச் செய்யலாம்.

இந்தியப் பிரிவினை: இந்தியாவை இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட சுதந்திர ராஜ்யங்களாகப் பிரிப்பதைக் கமிட்டி எதிர்க்கிறது. எந்த வகுப்பாருக் கும் அதனால் நன்மையில்லை. அது மட்டுமன்றி நாடு முழுவதின் முன்னேற் றத்தையும் அமைதியையும் கெடுத்துவிடும்.

இந்திய சமஸ்தானங்கள் :—ஒப்புக்கொள்ளப்பட்ட விதிகளின்பேரில் சமஸ் தானங்கள் யூனியனில் சேருவதற்கு வழியிருக்க வேண்டும். ஆனால் அவைகளில் சிலவோ எல்லாமோ வந்தால்தான் யூனியனை ஏற்படுத்துவது என்பதிருக்கக் கூடாது.

சேராதிருப்பதும் பிரிவதும்: பிரிட்டிஷ் இந்தியாவைச் சேர்ந்த எந்த மாகாண மும் அல்லது பகுதியும் யூனியனில் சேராமலிருக்கலாமென்பது கூடாது— மாகாணமானாலும் சரி, சமஸ்தானமானாலும் சரி, சேர்ந்தபின் பிரிவதற்கும் உரிமை கிடையாது.

மொழிவாரி அல்லது கலாசாரத்தையொட்டி மாகாண எல்லைகளை மாற்றியமைப்பது காரணமாக அரசியலமைப்பைத் தாமதிப்பது விரும்பத் தகுந்ததல்ல என்று கமிட்டி கருதுகிறது. அதுபற்றிப் பிற்பாடு கவனிக்கலாம்.

அரசியலமைப்புச் சபைக்குக் கமிட்டி சில சிபாரிசுகளைச் செய்கிறது.

ராஜ்யத்திற்கு (இந்திய யூனியனுக்கு) ஒரு தலைவர் இருக்க வேண்டும். (அ) அரசியலமைப்பு அவருக்களித்த எல்லா அதிகாரமும், அரசியலமைப்பு அவருக்கு விதித்த எல்லாக் கடமைகளும் கொண்டவராக அவர் இருக்க வேண்டும். (ஆ) இங்கிலாந்து அரசருக்குரிய அதிகாரங்களும் அவருக்கிருக்க வேண்டும். இந்திய சுதேச ராஜ்யங்கள் சம்பந்தமாக இங்கிலாந்து அரசருக் குள்ள அதிகாரமும் அவருக்கிருக்க வேண்டும்.

சாதாரணமாக ராஜ்யத் தலைவர் ஐந்து வருஷத்திற்குப் பதவி வகிக்க வேண்டும். ஒருதடவைக்குமேல் பதவிக்கு வரக்கூடாது.

ராஜ்யத் தலைவர் பின்வருமாறு தேர்ந்தெடுக்கப்படலாம் :—(1) யூனியனைச் சேர்ந்த இரண்டு சட்டசபை அங்கத்தினர்களும்கூடி ஒரு தேர்தல் குழுவாக மாறி, தங்களிஷ்டப்படி யாரையாவது தேர்ந்தெடுக்கலாம். குறைந்தது இவ் வளவு ஜனத்தொகை, அல்லது வருமானம் அல்லது இரண்டுமுள்ள சுதேச அரசர்களில் யாரையாவது தேர்ந்தெடுப்பதென்று வைத்துக் கொள்ளலாம். (2) அல்லது அத்தகைய அரசர்கள் தங்களுக்குள்ளேயே ஒருவரைத் தேர்ந் தெடுக்கலாம். (3) யூனியன் சபை, கட்டுப்பாடின்றித் தன்னிஷ்டம்போல சிபாரிசு செய்த ஒருவரை இங்கிலாந்து அரசர் நியமிக்கலாம். அல்லது சுதேச மன்னர்களுக்குள் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவரை நியமிக்கலாம். இந்த மூன்ருவது வகைப்படி நியமனம் செய்து பிரிட்டிஷ் மன்னரது தொடர்பை வைத்துக் கொண்டாலும், இங்கிலாந்திலுள்ள இந்தியா மந்திரிப் பதவியும் அவருடைய அதிகாரமும், பிரிட்டிஷ் மந்திரி சபை இந்தியாமீது செலுத்தும் ஆதிக்கமும் எடுபட வேண்டும்.

இந்திய அரசாங்கத் தலைவர், யூனியன் மந்திரிசபையின் ஆலோசனையின் பேரில் இந்திய சமஸ்தானமல்லாத பகுதிக்கு ஒருவரைத் தலைவராக நியமிக்க வேண்டும்.

யூனியன் சட்டசபைகள், ராஜ்யத் தலைவரையும் இரண்டு சபைகளையும் —சட்டசபை, அரசாங்கசபை—கொண்டதாக இருக்கும். ஜனத்தொகையில் சராசரி பத்து லட்சத்துக்கு ஒருவர்வீதம் இருக்கும்படியாக யூனியன் சட்ட சபை இருக்கும். மொத்த ஸ்தானங்களில் 10 சதவிகிதம் தனி நலன்களுக்காக ஒதுக்கப்படவேண்டும் அவையாவன: நிலச்சுவான்தார்கள், வர்த்தகம், கைத் தொழில், தொழிலாளர், பெண்கள். மீதி ஸ்தானங்கள் பின்கண்ட வகுப்பு களுக்கு பிரித்துக் கொடுக்கப்படவேண்டும். தாழ்த்தப்பட்டோரல்லாத இந்துக்கள்; முஸ்லிம்கள்; தாழ்த்தப்பட்டோர்: சீக்கியர்கள்; இந்தியக் கிறிஸ்தவர்கள்; ஆங்கிலோ இந்தியர்கள்; இதர வகுப்பார். ஒதுக்கப்பட்ட ஸ்தானங்களோடு பொதுத் தொகுதி முறையை எங்கும் வைத்துக்கொள்ள முஸ்லிம்கள் இசைந்தால், தனித்தொகுதி முறை வேண்டாமென்று கூறி விட்டால், தனி நலன்களுக்கு ஒதுக்கப்பட்ட ஸ்தானங்கள் போக, இந்துக் களுக்குச் சமமாக முஸ்லிம்களுக்கும் ஸ்தானங்கள் கொடுக்கலாமென்று சிபாரிசு செய்கிறது. இந்து, முஸ்லிம் ஜனத்தொகையில் ஏற்றத்தாழ்வு அதிக மாக இருந்தாலும் வகுப்பு ஒற்றுமையைக் கருதி இவ்வாறு கமிட்டி சிபார்சு செய்கிறது.

இந்தத் திட்டம் முழுவதையும் அப்படியே நிறைவேற்றுவிட்டால், இவ்வித சரிபங்கு பிரதிநிதித்துவத்தை இந்து வகுப்பு மறுக்கலாம். வகுப்புத் தீர்ப்பை மாற்றி யமைக்கும்படியும் வேண்டலாம். அதற்கு உரிமை உண்டு.

இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி சீக்கியர்களுக்கும் தாழ்த்தப் பட்டோர்களுக்கும் கொடுக்கப்பட்ட பிரதிநிதித்துவம் குறைவானது; நியாய மற்றது. ஆகையால் அரசியலமைப்புச் சபையினிஷ்டப்படி அதிகமாக்க வேண்டும்.

யூனியன் சட்டசபையில் தனி நலன்களுக்கு ஒதுக்கப்பட்டது தவிர மற்ற ஸ்தானங்களுக்கு வயதுவந்தோர் வாக்குரிமைமூலம் தேர்தல் நடத்த வேண்டும்.

அதிகாரத்தைப் பங்கிடுதல்: விவரமான அதிகார ஜாபிதாவை அரசிய லமைப்புச் சபை தயார் செய்யவேண்டும். அச்சபைக்குச் சில கொள் கைகளை இக்கமிட்டி சிபாரிசு செய்கிறது. மத்திய நிர்வாகத்தின் அதிகாரங் களும் கடமைகளும் குறைந்த அளவில் இருக்கவேண்டும். அவையாவன: (i) வெளிநாட்டு விஷயங்கள், பாதுகாப்பு, சமஸ்தான உறவுகள், எல்லாப் பகுதிகளிலுமுள்ள போக்குவரத்து, வர்த்தகம், சுங்கம், தந்தி தபால் போன்ற இந்தியா முழுமைக்கும் பொதுவான விஷயங்கள். (ii) பகுதிகளுக்கிடை யேற் படும் தகராறுகளைத் தீர்த்தல். (iii) தேவையானபோது எல்லாப் பகுதிக ளிடையே ஒரேமாதிரி சட்டமியற்றுதல், நிர்வாகம் செய்தல். (iv) இந்தியாவின் அல்லது அதன் ஏதாவதொரு பாகத்தின் பாதுகாப்பையும் அமைதியையும் நிலைநிறுத்தவும் அல்லது இந்தியாவின் அரசியல் கட்டமைப்பையும் பொரு ளாதார ஒற்றுமையையும் நிலைநிறுத்தவும் அல்லது அவசர நிலைமைகளைச் சமாளிக்கவும் வேண்டிய எல்லா விஷயங்களையும் காரியங்களையும் மேற் கொள்ளுதல்.

மிச்ச அதிகாரங்கள்: யூனியனுக்கும் பகுதிகளுக்கும் சேராத அதிகா ரங்கள் இருக்குமானால் அவைகள் பகுதிகளிடம் சேர்ந்தவையாகவேண்டும்.

பகுதிகளுக் கிடையே சுங்கத் தடைகளை ஒழித்துவிடவேண்டும். இதனல் பாதிக்கப்படுகிற பகுதிக்கு யூனியன் நிதியிலிருந்து ஈடுசெய்ய வேண்டும்.

யூனியன் மந்திரி சபை: இச்சபையில் கீழ்க்கண்ட வகுப்புகளுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கவேண்டும். (i) தாழ்த்தப்பட்டோரல்லாத இந்துக்கள். (ii) முஸ்லிம்கள். (iii) தாழ்த்தப்பட்டோர் (iv) சீக்கியர். (v) இந்தியக் கிறிஸ் தவர்கள். (vi) ஆங்கிலோ இந்தியர்கள். சட்டசபையில் ஒவ்வொரு வகுப்புக்கு முள்ள பலத்தைக் கூடியமட்டும் எடுத்துக்காட்டுவதாக, நிர்வாகசபைப் பிரதிநிதித்துவம் அமையவேண்டும்.

ஏதாயினும் ஒரு வகுப்பு இதில் சேரமறுத்தால், அதில்லாவிட்டாலும் அச்சபை ஒழுங்காக அமைக்கப்பட்டதாகக் கருதப்படவேண்டும்.

மந்திரிசபை, சட்டசபைக்குக் கூட்டுப்பொறுப்பு வாய்ந்ததாக இருக்க வேண்டும். அந்த மந்திரி சபையை ஒன்று பிணைத்துத் தலைமைதாங்கி நடத்தும் பிரதமர், ஒரு கட்சியின் தலைவராகவோ அல்லது யூனியன் சட்டசபையில் உறுதியான பெரும்பான்மையாக இருக்கக் கூடிய கூட்டுக்கட்சியின் தலைவ ராகவோ யிருப்பார். ஒரே வகுப்பைச் சேர்ந்தவர்கள் பிரதமராகவும் உதவிப் பிரதமராகவும் இருக்கக் கூடாதென்ற வழக்கம் இருக்கவேண்டும்.

பிரதமரின் ஆலோசனையின்பேரில் மற்ற மந்திரிகள் நியமிக்கப்பட வேண்டும். அவர்களில் ஒருவர் உதவிப்பிரதமராக அழைக்கப்படவேண்டும். ஒரு நிரந்தர விதியின்படி இருவரும் ஒரே இனத்தவராக இருக்கக் கூடாது.

இதற்கு ஒரு மாற்றுமுறையும் கூறப்படுகிறது. யூனியன் சட்டசபைகள் ஒரே கூட்டமாகக் கூடி, ஒற்றைமாற்று வோட் மூலம் மந்திரிகளைத் தேர்ந் தெடுக்கலாம். சட்டசபையின் ஆயுள்காலம்வரை மந்திரிகளும் பதவி வகிக்கலாம். மந்திரிகளுக்குள் இருவரைத் தலைவராகவும் உபதலைவராகவும் சட்டசபை தேர்ந்தெடுக்கலாம். அவர்கள் இருவரும் ஒரே வகுப்பைச் சேர்ந்தவர்களாக இருக்கக் கூடாது.

இந்திய சமஸ்தான மந்திரிகள்: இந்திய சமஸ்தானக் காரியங்களைக் கவனிக்கவேண்டிய மந்திரி ஒருவரிருக்கவேண்டும். அவருக்கு ஆலோசனை கூற இந்திய சமஸ்தான ஆலோசகர்கள், மூன்றுக்குக் குறையாமலும் ஐந்துக்கு அதிகப்படாமலும் இருக்கவேண்டும். இந்திய சமஸ்தானங்களோடு ஒப்புக் கொண்ட விதத்தில் இவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அரசியலமைப்புச் சட்டத்தில் குறிப்பிட்ட சில விஷயங்கள்பற்றி இவ்வாலோசகர்களைக் கலந்து அவர்களுடைய சம்மதத்தை மந்திரிகள் பெறவேண்டும்.

நீதி நிர்வாகம்: யூனியனுக்கு ஒரு சுப்ரீம் நீதிமன்றமும் பகுதிகளொவ் வொன்றுக்கும் ஒவ்வொரு உயர்நீதி மன்றமும் இருக்கவேண்டும். எத்தனை நீதிபதிகள், எவ்வளவு சம்பளம் என்பதை அரசியலமைப்புச் சபை குறித்து விடும். உயர்நீதிமன்றம், சம்பந்தப்பட்ட அரசாங்கம், சுப்ரீம் நீதிமன்றம் ஆகியவைகளின் சிபார்சுகளினுலும், ராஜ்யத் தலைவருடைய அனுமதியின் பேரிலும் அவைகளை மாற்றலாம். எந்த நீதிபதிக்கும் அவருடைய பதவிக் காலத்தில் சம்பள நஷ்டம் ஏற்படும்படியான மாறுதல் இருக்கக் கூடாது.

இந்தியப் பிரதம நீதிபதியை இந்திய ராஜ்யத் தலைவரே நியமிக்க வேண்டும். இந்தியப் பிரதம நீதிபதியைக் கலந்துகொண்டு சுப்ரீம் மன்றத்தின் இதர நீதிபதிகளையும் நியமிக்க வேண்டும். உயர்தர நீதிமன்றத்தின் பிரதம நீதிபதியை இந்திய அரசாங்கத் தலைவரே நியமிக்கவேண்டும். அந்தப் பகுதித்

தலைவரையும் இந்தியப் பிரதம நீதிபதியையும் கலந்து கொண்டே இந்த நியமனம் செய்யப்படவேண்டும். உயர்தர நீதிமன்றத்தின் இதர நீதிபதிகளையும் இந்திய அரசாங்கத் தலைவரே நியமிக்கவேண்டும். நியமிக்கும்போது, அப்பகுதியின் தலைவர், அப்பகுதியைச் சேர்ந்த உயர்நீதிமன்றப் பிரதமநீதிபதி, இந்தியப் பிரதமநீதிபதி ஆகியோரைக் கலந்தே செய்வார். உயர்நீதிமன்றத்துக்கோ சுப்ரீம்நீதிமன்றத்துக்கோ நீதிபதியாக நியமிக்கப்படுகிறவர்கள் அரசியலமைப்புச் சட்டம் விதித்த வயதுவரையும் வேலைபார்க்கும்படி ஏற்பாடு வேண்டும்.

ஒழுங்கற்ற நடத்தை, மனத்தளர்ச்சி, உடல்தளர்ச்சி காரணமாக உயர்நீதிமன்றநீதிபதியை இந்திய அரசாங்கத் தலைவர் நீக்கிவிடலாம். அரசாங்கத் தலைவர், அதுபற்றி சுப்ரீம் நீதிமன்றம் கவனிக்கும்படி கூற, சுப்ரீம் நீதிமன்றம், மேற்கண்ட ஏதாயினும் காரணத்தால் ஒரு நீதிபதியை நீக்கவேண்டுமென்று அறிவித்தால் அவர் அவ்வாறே நீக்கப்படுவார். அரசாங்கத்தலைவரால் ஏற்படுத்தப்பட்ட விசேஷ நீதிமன்றம் மேற்கூறிய காரணங்களால் சுப்ரீம் மன்ற நீதிபதி ஒருவரை நீக்க வேண்டுமென்று அறிவித்தால், அரசாங்கத் தலைவர் அவரை நீக்கிவிடலாம்.

பாதுகாப்பு : சட்டசபைக்குப் பொறுப்பு வாய்ந்த மந்திரி ஒருவர் வசம் பாதுகாப்பிலாகா இருக்கவேண்டும். ஆனால் சேனையை நேரே நிர்வகித்து ஆளும் பொறுப்பு தளபதியிடம் இருக்கவேண்டும்.

எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் ஒரு தேசியப் படை ஏற்படுத்தி அதை விருத்திசெய்யவேண்டும். இத்தகைய படையை உண்டாக்கும்படி கமிட்டி கீழ்க்கண்டவாறு சிபார்சு செய்கிறது :

(அ) இந்தியாவின் திறமையான பாதுகாப்புக்கு வேண்டிய பிரிட்டிஷ் படைகளையும், போதுமான இந்திய உத்தியோகஸ்தர்கள் தயாராகும் வரை, தேசியப் படையை நடத்துவதற்கு வேண்டிய உயர்தர பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களையும், யூனியன் அரசாங்கத்துக்கும், மன்னரது சர்க்காருக்கும் இடையே ஏற்படும் ஒப்பந்தத்தின் மூலமாக வைத்துக்கொள்ளலாம் (ஆ) சண்டை முடிந்தவுடனே இந்திய சேனைக்கு பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களைச் சேர்ப்பதை நிறுத்திவிடவேண்டும். (இ) இந்திய சேனையில் சேராத பிரிட்டிஷ் அதிகாரிகளையும், தனிப்பட்ட வேலைகளுக்கென்றும் வேண்டப்படாதவர்களையும் பிரிட்டிஷ் சேனைக்கே திருப்பிவிடவேண்டும். ஆகாயம், தரை, கடல் ஆகிய மூன்றுபடைகளுக்கும் போதிய அதிகாரிகளை இங்கேயே தயார் செய்வதற்கு ஒரு ராணுவப் பயிற்சிசாலை ஏற்படுத்தவேண்டும். தற்காலத்திய கல்வி முறையிலுள்ள குறைபாடுகள் ஒழிக்கப்படவேண்டும். சர்வகலாசாலைகளில் ஆபீஸர்களுக்குப் பயிற்சிதருவது என்பதை இல்லாத இடங்களிலும் ஏற்படுத்தி விரிவாக்கவேண்டும்.

உத்தியோகங்களில் பிரதிநிதித்துவம் : உத்தியோகங்களில் பிரதிநிதித்துவத்தைப்பற்றி எவ்வித உத்தரவுகள் இப்போதைய மத்திய நிர்வாகத்திலிருக்கின்றனவோ அவை புதிய அரசியலமைப்பு அமுலுக்கு வரும்வரை நீடிக்கலாம். ஆனால், சீக்கியர், இந்தியக்கிறிஸ்தவர், ஆங்கிலோ இந்தியர், பார்சிகள் ஆகியோருக்கு மொத்தமாக $8\frac{1}{3}$ சதவிகிதம் என்பதைப் பின்வருமாறு பிரிக்க வேண்டும். சீக்கியர்கள் $3\frac{1}{2}$ சதவிகிதம், இந்தியக் கிறிஸ்தவர்கள் 3 சதவிகிதம், ஆங்கிலோ இந்தியர்களும் பார்சிகளும் $1\frac{5}{6}$ சதவிகிதம்.

அரசாங்க உத்தியோகக் கமிஷன் தலைவரும் அங்கத்தினர்களும், யூனியன், அல்லது பகுதி ராஜ்யத் தலைவரால், அந்தந்தப் பிரதமர்களைக் கலந்தபின், நியமிக்கப்படுவார்கள்.

ஜீவாதார உரிமைகள்: முழு விவரமடங்கிய ஜீவாதார உரிமைப் பிரகடனத்தை அரசியலமைப்பில் சேர்க்கவேண்டும். பின் வருபவைகளை உறுதியளிக்கவேண்டும். (அ) தனி நபர் சுதந்திரங்கள். (ஆ) பத்திரிகைச் சுதந்திரம், கூட்டுறவு சுதந்திரம். (இ) எல்லா இனத்தவர்களின் உரிமைகளில் சமத்துவம். (ஈ) முழு மதச் சுதந்திரம். (உ) எல்லா இனத்தவருடைய மொழி, கலாசாரம் முதலியவற்றைப் பாதுகாத்தல்; தாழ்த்தப்பட்டோருக்கு நெடுங்காலமாக இருந்துவரும் குறைபாடுகளை ஒழித்தல்; சீக்கியர்கள் கிர்ப்பான் வைத்துக்கொள்ளுவதுபோன்ற மதாச்சாரத்தைப் பாதுகாத்தல்.

சிறுபான்மைக் கமிஷன்: சிறுபான்மை வகுப்பின் பிரதிநிதிகளைக் (அவ்வகுப்பைச் சேர்ந்தவராக இருக்கவேண்டியதில்லை) கொண்ட சிறுபான்மைக் கமிஷன்கள் மத்தியிலும் மாகாணங்களிலும் இருக்கவேண்டும். சட்டசபையிலுள்ள அந்தந்த வகுப்பினரால் இவர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். சட்டசபை அங்கத்தினர்கள் இக்கமிஷனில் அங்கத்தினர்களாக இருக்க முடியாது. இக்கமிஷன் அங்கத்தினர்கள், சட்டசபைப் பதவிக் காலம்வரை, பதவியிலிருப்பார்கள். சிறுபான்மை நலன்களின்மீது கண்ணும் கருத்துமாயிருப்பதே இந்தக் கமிஷனின் வேலை. சிறுபான்மைகள் சம்பந்தமான அவசிய விவரங்களைக் கேட்பதற்கு இது உரிமை பெற்றது. சட்டவரம்புக்குட்படாத ஜீவாதார உரிமைகளை நிறைவேற்றுவதற்கு எடுக்கப்பட்ட நடவடிக்கைகளை அவ்வப்பொழுது பரிசீலனைசெய்து பிரதமருக்கு விவரம் தெரிவிப்பதும் இதன் வேலையாகும். இக்கமிஷனின் சிபார்சுகளை மந்திரிசபை கவனிக்கும். கமிஷனின் அறிக்கையும் அதன்மீது எடுத்துக் கொள்ளப்பட்ட நடவடிக்கைகளைப்பற்றிய முழு விவரமும் சட்டசபைமுன் சமர்ப்பிக்கப்படும். அவ்வறிக்கைகளின்மீது விவாதம் செய்யச் சட்டசபைகளுக்குச் சகல வசதிகளும் ஏற்படுத்தப்படும்.

பஞ்சாபிலுள்ள சிறுபான்மைகள்: பஞ்சாப் சட்டசபைகளில் சீக்கியர், இந்துக்கள், இந்தியக் கிறிஸ்தவர்கள் ஆகியோருடைய பிரதிநிதித்துவத்தைப்பற்றி அரசியலமைப்புச் சபை கவனமாகப் பரிசீலனைச் செய்து ஆராயவேண்டுமென்று இக்கமிட்டி சிபாரிசு செய்கிறது.

அரசியலமைப்புக்குத் திருத்தம்: அரசியலமைப்புத் திட்டம் வெளியாகி ஆறு மாதங்களாவதற்குள்ளாக யூனியன் சட்டசபைகளில் அரசியலமைப்புக்குத் திருத்தம் கொண்டுவரக்கூடாது. ஒவ்வொரு சட்டசபையிலும் மூன்றிலிரு பங்கினருக்குக் குறையாத பெரும்பான்மை ஆதரித்தாலொழிய எந்தத் திருத்தமும் ஏற்றுக்கொண்டதாகக் கருத முடியாது. மேலும் மொத்தப் பகுதிகளில் மூன்றிலிரு பகுதிகள் ஏற்றுக்கொண்டாலொழிய இத்தகைய திருத்தங்களை அமுலுக்குக் கொண்டுவரக்கூடாது.

புதிய அரசியலமைப்பு அமுலுக்குவந்த ஐந்து வருஷத்தில், அதில் அமைக்கப்பட்டுள்ள அதன் உயிர்நாடிபோன்ற அம்சங்களில் திருத்தம் செய்யவே கூடாது.

இத்திட்டத்தை வெவ்வேறு மனிதர்கள் வெவ்வேறு நோக்கிலிருந்து அலசியாராய்ந் திருக்கிறார்கள். ஒரு கூட்டத்தாரால் குறைபாடாகக் கருதப்படுகிற அம்சம் இன்னொரு கூட்டத்தாரால் மேம்பாடாக மதிக்கப்படுகிறது. இவ்விதமாக இவ்வாராய்ச்சிகள் ஒன்றையொன்று தகர்த்துவிடுகின்றன.

எந்தக் கட்சியின் தீவிர நோக்கத்தையும் இத்திட்டம் மேற்கொள்ளவில்லை என்ற விஷயம்தான் இதிலுள்ள நல்ல அம்சமெனச் சொல்லலாம். இந்தியாவைத் துண்டாட வேண்டுமென்ற முஸ்லிம் லீகின் பிரேரணையை இத்திட்டம் நிராகரிக்கிறதென்றால் அரசியலமைப்புச் சபையிலும், மத்திய சட்டசபைகளிலும், யூனியன் மந்திரிசபையிலும் இந்துக்களுக்குச் சமமாக முஸ்லிம்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்துகிறது. இவ்விதமாக அரசியலமைப்புச் சபையிலும், மத்திய சட்டசபையிலும், மத்திய மந்திரிசபையிலும் இந்துக்களுக்குச் சமமாக முஸ்லிம்களுக்கு வாக்குரிமையளித்தால் அப்பொழுது முஸ்லிம்கள் தனித்தொகுதியை விட்டுவிட வேண்டும் என்ற நிபந்தனையை விதிக்கிறது. இத்திட்டம் சுதந்திரத்தை ஒதுக்கிவிடவில்லை. ஆனாலும் டொமினியன் அரசியலமைப்புக்கும் வழி விட்டிருக்கிறது. அரசாங்கத் தலைமைப் பதவியைத் தேர்தலுக்கு விட்டிருக்கிறது. எனினும் அரசர்களைத் தான் தேர்ந்தெடுக்கவேண்டுமென்கிறது. அரசர்களோடு வைத்துக்கொள்ளும் உறவு சம்பந்தமான விஷயங்களை யூனியன் மந்திரிசபையிடம் ஒப்படைக்கிறது என்றாலும் அரசாங்கத் தலைமைப்பதவிக்கு வர அவர்களே தகுதியுடையவர்கள் என்று கூறுகிறது. அரசாங்கத் தலைமைப் பதவியை ஐந்து வருஷத்திற்கென்று கட்டுப்படுத்துகிறது. ஆனால் பெரிய சமஸ்தானங்களைச் சேர்ந்த ஒரு கூட்டத்தாரிடமே சுற்றிச்சுற்றி இப்பதவி போய்ச்சேரும்படி செய்துவிடுகிறது. மந்திரிசபையைச் சட்டசபைகளுக்குப் பொறுப்பாக்குகிறது என்றாலும் சட்டசபையிலுள்ள அத்தனை வகுப்புக்கும் மந்திரிசபையில் பிரதிநிதித்துவம் அளிக்கிறது. இத்திட்டம் சட்டசபையை வகுப்புப் பிரிவுகளாகப் பிரிக்கிறதென்றால், கூட்டுத்தொகுதியை ஏற்படுத்துகிறது.

இவ்விதமாக எல்லா வகுப்பாரும் இதர வகுப்பாரைச் சேர்ந்தவர்களுடைய தேர்தலுக்காகப் பாடுபடும்படி செய்கிறது. எந்த ஒரு வகுப்பும் அரசியலமைப்புச் சபையிலோ, யூனியன் சட்டசபைகளிலோ, மந்திரிசபையிலோ நாட்டாண்மை செலுத்தவிடாதபடி தங்குதடைகள் அமைத்திருக்கிறது. அரசியலமைப்பு சம்பந்தமான பொது அடிப்படைகளைக் கூறிவிட்டு மற்ற விவரங்களையெல்லாம் அரசியலமைப்புச் சபையே கவனிக்குமாறு செய்திருக்கிறது.

இதைப்பற்றிக் கூறப்படும் சாதகபாதகங்கள் ஒருபக்கம் இருக்க, சுதேச அரசர்களுக்குத்தான் அரசாங்கத் தலைமைப்பதவி என்று வரம்பு கட்டியதற்கு ஒரு காரணமும் இருப்பதாகத் தெரியவில்லை. அதே சமயத்தில் அவர்களுடைய அதிகாரம் அவர்களது ராஜ்யத்திலுள்ள மக்களுக்கு மாற்றவேண்டியதைப் பற்றிய பேச்சே காணப்படவில்லை. இந்த அரசர்களனைவரும் தங்கள் ராஜ்யங்களை ஜனநாயக முறையில் ஆளுவதற்குத் தங்களுக்குள்ள திறமையையோ, விருப்பத்தையோ காட்டியதற்குச் சான்று கிடையாது. 'முதலில் நீங்கள் உங்கள் சமஸ்தான மக்களுக்கு உங்களது அதிகாரத்தை மாற்றுங்கள்' என்று அவர்களைக் கேட்பதுபோக அவர்களை அவர்களது சொந்த சமஸ்தானங்களின் நிரந்தரத் தலைவர்களாக ஆக்குவதன்றி இந்தியா முழுமைக்கும் தலைவர்களாக ஆக்குவது பொருத்தமற்ற செயலாகும்.

# 42. டாக்டர் அம்பேத்காரின் திட்டம்

சமீப காலத்தில் டாக்டர் அம்பேத்கார், வகுப்புப் பிரசினையைத் தீர்க்க ஒரு திட்டத்தை வெளியிட்டிருக்கிறார். பாகிஸ்தானைக் காட்டிலும் இது சிலாக்கியமானதெனச் சொல்லுகிறார். ஒரு பெரும்பான்மை வகுப்பை ஒப்புக்குப் பெரும்பான்மையாக வைக்கலாமே தவிர எல்லாவகையிலும் பெரும்பான்மையாக இருக்கும் உரிமையைக் கொண்டாட விடக்கூடாது என்ற தத்துவத்தின் மீது கட்டப்பட்டது அவரது திட்டம். இத்திட்டத்தில் இந்துக்கள் பெரும்பான்மையாக இருக்கிற மாகாணங்களிலும் முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கிற மாகாணங்களிலும் இக்கொள்கையை எடுத்துக் கூறுகிறார். இதன்படி இரண்டு மாகாணங்களிலும் பெரும்பான்மைக்குக் கொடுக்கப்படும் ஸ்தானங்கள் 40 சத விகிதத்திற்குமேற் போகாது. அரசியல் நிர்ணயசபை வேண்டும் என்ற திட்டத்தை டாக்டர் அம்பேத்கார் வன்மையாக எதிர்க்கிறார். 1935-ம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்திலேயே இந்திய அரசியலமைப்பைப் பெரும்பாலும் முடித்துவிட்டதால் திரும்பியும் அக்காரியத்தைச் செய்ய ஓர் அரசியலை ஏற்படுத்துவது அனாவசியம். டொமினியன் அந்தஸ்துக்குப் பொருந்தாத பிரிவுகள் அந்தச் சட்டத்தி லிருக்குமானால் அவைகளை எடுத்து விடுவது போதுமானது என்று கூறுகிறார்.

வகுப்புப் பிரசினையை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கிறார். சட்டசபை, மந்திரிசபை, உத்தியோகங்கள் ஆகிய மூன்று இடங்களிலும் பிரதிநிதித்துவம் காரணமாக இப்பிரசினை கிளம்புகிறதென்று வைத்துக்கொண்டு அவை ஒவ்வொன்றையும் எவ்வாறு தனித்தனியாகச் சமாளிப்பது என்பதைக் கூறுகிறார். உத்தியோகங்கள் சம்பந்தமாகச் செய்யவேண்டியது, நிர்வாகப் பயிற்சியை சட்டபூர்வமான கடமையாக மாற்ற வேண்டியதுதான், அவ்வளவே. இந்துக்கள், முஸ்லிம்கள், தாழ்த்தப்பட்டோருக்குச் சட்டசபையில் எவ்வளவு பிரதிநிதித்துவம் தேவையென்று அளிக்கப்பட் டிருக்கிறதோ அதற்கேற்றவாறு நிர்வாக சபையிலும் பிரதிநிதித்துவம் அளிக்கவேண்டும். மற்றச் சிறுபான்மைகள் சம்பந்தப்பட்டவரை அவர்களுடைய பிரதிநிதித்துவத்திற் கென்று ஒன்று அல்லது இரண்டு ஸ்தானங்களை ஒதுக்கி வைக்கவேண்டும். பார்லிமெண்டரி காரியதரிசிப் பதவிகளிலும் அவர்களுக்குரிய நியாயமான பங்கை அளிப்பது என்ற சம்பிரதாயம் இருக்கவேண்டும்.

சட்டசபையிலுள்ள பெரும்பான்மைக் கட்சியின் கமிட்டியாக நிர்வாக சபை இருக்கும் வழக்கம் கூடாது. சட்டசபையிலுள்ள பெரும்பான்மைக் கட்சியின் ஆணையை நிறைவேற்றுவதாக மட்டும் இல்லாமல் சிறுபான்மைக் கட்சியின் ஆணையையும் நிறைவேற்றுவதாக அது அமைக்கப்பட வேண்டும். சட்ட சபை ஆயுட்காலத்திற்கு முன்பு நிர்வாக சபை, பதவியிலிருந்து அகற்றப்பட முடியாததாக இருக்கவேண்டும். அந்த வகையில் அது பார்லிமெண்டரி முறையை யொட்டியதாக இருக்கவேண்டும். அதாவது நிர்வாக மெம்பர்கள் சட்டசபை அங்கத்தினர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக இருக்க வேண்டும். சட்டசபையில் அமரவும், வாக்குக் கொடுக்கவும், பதிலளிக்கவும் உரிமையிருக்க வேண்டும்.

அரசாங்கத்தின் நிர்வாக சபைத் தலைவர் என்ற முறையில் பிரதம மந்திரி, சட்டசபையின் முழு நம்பிக்கையைப் பெற்றவராக இருக்கவேண்டும். ஒரு குறிப்பிட்ட வகுப்பாரின் பிரதிநிதியாக மந்திரி சபையிலமர்ந்திருப்பவர்,

அந்த வகுப்பாரின் நம்பிக்கையைப் பெற்றிருக்க வேண்டும். லஞ்சம் வாங்கியதாக அல்லது துரோகம் செய்ததாகச் சட்டசபையில் குற்றஞ்சாட்டப்பட்டாலொழிய ஒருவரை மந்திரி சபையிலிருந்து நீக்கக்கூடாது. இந்தக் கொள்கைகளையொட்டி பிரதம மந்திரியும் மந்திரி சபையிலுள்ள இதர அங்கத்தினர்களும் முழுச் சட்டசபையாலும் பெரும்பான்மைக் கட்சியிலிருந்து ஒற்றை மாற்று வாக்குரிமையால் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். வெவ்வேறு சிறுபான்மைகளைச் சேர்ந்த இதரப் பிரதிநிதிகளும் சட்டசபையிலுள்ள ஒவ்வொரு சிறுபான்மை அங்கத்தினர்களால் ஒற்றைமாற்று வாக்குரிமையால் தேர்ந்தெடுக்கப்படவேண்டும்.

பல வேறு இனங்களுக்கும் கீழ்க்கண்டபடி பிரதிநிதித்தும் அளிக்கப் படுகிறது.

## அட்டவணை LIII

மத்திய அசெம்பிளியில் ஜனத்தொகையில்

| | | | | |
|---|---|---|---|---|
| | ஹிந்துக்கள் | 54·68% இருக்கும் | | 40% ஸ்தானம் பெற வேண்டும். |
| | முஸ்லிம்கள் | 28·5% | ,, | 32% |
| | தாழ்த்தப்பட்டோர் | 14·3% | ,, | 20% |
| | இந்தியக் கிறிஸ்தவர் | 1·16% | ,, | 3% |
| | சீக்கியர் | 1·49% | ,, | 4% |
| | ஆங்கிலோ இந்தியர் | 0·5% | ,, | 1% |

(ஜனத்தொகையிலிருந்து, மலைஜாதியினர், பூர்வ குடிகளை நீக்கிவிட்டு ஜனத்தொகை சதவிகிதம் கணிக்கப்பட்டிருக்கிறது.)

| | | | | |
|---|---|---|---|---|
| பம்பாயில் | இந்துக்கள் | 76·42% | ,, | 40% |
| | முஸ்லிம்கள் | 9 98% | ,, | 28% |
| | தாழ்த்தப்பட்டமக்கள் | 9·64% | ,, | 28% |
| | இந்திய கிறிஸ்துக்கள் | 1·75% | ,, | 2% |
| | ஆங்கிலோ இந்தியர் | 0·07% | ,, | 1% |
| | பார்ஸிகள் | 0·44% | ,, | 1% |
| பஞ்சாபில் | முஸ்லிம்கள் | 57·06% | ,, | 40% |
| | இந்துக்கள் | 22·17% | ,, | 28% |
| | சீக்கியர் | 13·22% | ,, | 21% |
| | தாழ்த்தப்பட்டோர் | 4·39% | ,, | 9% |
| | இந்தியக் கிறிஸ்தவர் | 1·71% | ,, | 2% |

பின்வரும் கொள்கைகளை யனுசரித்து இவைகளைப் பிரித்துக் கொடுக்க வேண்டும்.

(1) பெரும்பான்மைக் கட்சியினாட்சி யென்ற கொள்கை கூடாது. அது நடைமுறையில் நியாயமற்றது.

(2) பெரும்பான்மைக் கட்சிக்கு ஜனவிகிதாசார முறைப்படி சட்ட சபையில் பிரதிநிதித்துவம் கொடுக்கக்கூடாது. ஒப்புக்குத்தான் அவர்கள் சட்ட சபையில் பெரும்பான்மையாக இருக்கலாம். மிகமிகச் சொற்பமான சிறுபான்மையின் உதவியைக் கொண்டும் பெரும்பான்மை ஆட்சியை ஏற்படுத்த

முடியாதபடி பெரும்பான்மைக் கட்சிக்கு பிரதிநிதித்துவம் குறைத்துக் கொடுக்கப்பட வேண்டும்.

(3) பெரும்பான்மைக் கட்சியோடு சிறுபான்மைகளுக்குள் பெரிதான ஒரு கட்சி சேர்ந்துகொண்டால், இரண்டும்கூடி இதரச் சிறுபான்மைகளுக்குச் செவிசாய்க்காதபடி பலமடைந்து விடக்கூடும். இப்படியும் ஏற்படாதவாறு ஒவ்வொரு கட்சிக்கும் ஸ்தானங்களைப் பிரித்துக் கொடுக்கவேண்டும்.

(4) எல்லாச் சிறுபான்மைகளும் ஒன்று சேர்ந்தால், பெரும்பான்மையை எதிர்பாராமல் தங்களுடைய அரசாங்கத்தை ஏற்படுத்தக் கூடியவகையில் ஸ்தானங்களைப் பங்கிடவேண்டும்.

(5) பெரும்பான்மைக் கட்சியிலிருந்து எடுக்கப்பட்ட அதிகப்படி ஸ்தானங்களைச் சிறுபான்மைகளுக்கு எதிரிடை விகிதமுறையில் பிரித்துக்கொடுக்க வேண்டும். அதாவது, எண்ணிக்கையில் அதிகமாகவும், சமூக, கல்வி, பொருளாதார நிலைமைகளில் உயர்வாகவு முள்ளவைகள் குறைந்த ஸ்தானங்களையும் மேற்படி விஷயங்களில் தாழ்ந்தவை அதிக ஸ்தானங்களையும் பெறவேண்டும்.
முஸ்லிம்களுக்குப் பாகிஸ்தானைக் காட்டிலும் தன்னுடைய திட்டம் சிறந்ததென்று டாக்டர் அம்பேத்கார் கொண்டாடுகிறார். ஏனெனில் (1) பெரும்பான்மை சிறுபான்மையை நசுக்கிவிடும் என்ற பயமே பாகிஸ்தான் தோன்றுவதற்குக் காரணம். அந்தப் பயத்தை இத்திட்டம் நீக்குகிறது. (2) தற்போது முஸ்லிம்கள் அனுபவித்துவரும் அதிகப்படி ஸ்தானத்தை குலைக்கவில்லை. (3) பாகிஸ்தானடைந்தால் எவ்வளவு கிடைக்குமோ அதைக் காட்டிலுமதிகமாக, பாகிஸ்தானல்லாத மற்ற இடங்களிலுள்ள முஸ்லிம்கள் பிரதிநிதித்துவம் பெறுகிறார்கள்.

வகுப்புப் பிரசினையில் பெரிய தொல்லையாக இருக்கிற பெரும்பான்மை ஆட்சி முறையை வற்புறுத்த வேண்டாமென்றும், ஒப்புக்குப் பெரும்பான்மையாக இருப்பதைக் கொண்டும், சிறுபான்மைகளுக்குப் பாதுகாப்புகள் அளிப்பதைக் கண்டும் திருப்தி அடையவேண்டுமென்று டாக்டர் அம்பேத்கார் இந்துக்களைக் கேட்டுக் கொள்கிறார்.

டாக்டர் அம்பேத்காருடைய கொள்கைகளைச் சிறிது ஆராய்வோம். இந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்று சேரமாட்டார்கள் என்று வைத்துக் கொண்டு மேலே பேசுகிறார். அதோடு போகவில்லை. அவ்விரு வகுப்பினரும் ஒன்று சேரக்கூடாது என்ற போக்கிலும் இருக்கிறது அவர் போடுகிற திட்டம். இது கொள்கைமுறையிலும் நியாயமில்லை. மேலும், பெரும்பான்மை ஆட்சியையும், சின்னஞ் சிறுபான்மையோடு கூடிய பெரும்பான்மை ஆட்சியையும் கொள்கை முறையில் சகிக்க முடியாது என்றும், நடைமுறையில் நியாயமற்றதென்றும் கூறுகிறார். ஆனால் அதே சமயத்தில் ஒரு சிறுபான்மை மற்றொரு சிறுபான்மையோடு கூடி, ஒரு பெரும்பான்மையையோ, சிறுபான்மைகளோடு கூடிய பெரும்பான்மையையோ ஆள அனுமதிப்பதுபற்றி அவர் எவ்விதமான சங்கடமும் அடைவதாகத் தெரியவில்லை. அவர் கொடுக்கும் புள்ளிக் கணக்குகளிலிருந்து ஒரு பெரும்பான்மை எவ்வளவு பெரிதாக இருந்தாலும் அதற்கு அவர் கொடுக்கத் தயாராயிருப்பது சதவிகிதப் பிரதிநிதித்துவமே. மீதி ஸ்தானங்கள், சிறுபான்மைகளுக்குப் பங்கிடப்படுகிறது. ஆகவே சிறுபான்மைகளெல்லாம் கூடிக்கொண்டு, பெரும்பான்மையை அதிகாரத்துக்கு வரவிடாதபடி செய்யவும் கூடும். மத்தியிலும் அல்லது புள்ளி விவரங்கள் அளித்திருக்கிற இரண்டு மாகாணங்களிலும் அவர் கொண்டுவரும் மூன்றாவது

கொள்கையைப் புகுத்தவில்லை. அவர் கொடுத்திருக்கின்ற புள்ளிக் கணக்குப்படி ஒரு பெரும்பான்மையும் அதோடு ஒரு பெரிய சிறுபான்மையும் சேர்ந்து சட்டசபையில் போதுமான பெரும்பான்மைப் பலத்தைச் சுலபமாகப் பெறமுடியும். அது மட்டுமல்ல. இரண்டு பெரிய சிறுபான்மைகள் சேர்ந்தும் பலம்பெற்று மத்தியிலும் பம்பாயிலும் ஆட்சி செய்யக்கூடும்.

அவருடைய ஐந்தாவது கொள்கை புதுமையானது. ஆனால் அது தாழ்த்தப்பட்டோரைப் பொறுத்த மட்டிலும்தான் பின்பற்றப்படுவது போலவும் மற்றவர்களுக்கில்லை யெனவும் தோன்றுகிறது. கல்வி, பொருளாதார, சமூக நிலைமைகளில் மலைஜாதியினர்தான் மிகவும் கீழ்ப்படியிலுள்ளவர்கள் என்பது ஒப்புக்கொள்ளக்கூடிய உண்மை. ஜனத்தொகையில் ஒவ்வொரு இனமும் என்ன விகிதத்திலிருக்கிறதென்று கணக்கிடும்போது மலைஜாதியினர் எண்ணிக்கை கணக்கிலிருந்து எடுக்கப்பட்டு விட்டது என்பதைக் காட்டுகிறதற்குத் தவிர வேறு எங்கும் அவர்களைப்பற்றி ஒரு வார்த்தையும் இவர் புகலவில்லை. இந்திய மொத்த ஜனத்தொகையில் அவர்கள் 5·65 சதவிகிதத்துக்குக் குறைவில்லை மற்றவர்கள், அதாவது தாழ்த்தப்பட்டோர் 13·50 சதவிகிதம், முஸ்லிம்கள் 26.83 சதவிகிதம், கிறிஸ்தவர்கள் 1·18 சதவிகிதம், சீக்கியர்கள் 1·41 சதவிகிதமுமாக இருக்கின்றனர். இவர்களெல்லாம் அதிகப்படி ஸ்தானங்களைப் பெறும்போது மலைஜாதியினர் மட்டும் புறக்கணிக்கப்படுகிறார்கள். சில மாகாணங்களில் அவர்கள் தாழ்ந்தப்பட்டோரினும் எண்ணிக்கையில் அதிகமாக இருக்கிறார்கள். உதாரணமாக அஸ்ஸாமில் அவர்கள் 24·35 விகிதத்தினர்; தாழ்த்தப்பட்டோர் 6·63 சதவிகிதத்தினர். பீஹாரில் மலை ஜாதியினர் 13·91 சதவிகிதமாகவும் தாழ்த்தப்பட்டோர் 11·94 சதவிகிதமாகவும் இருக்கின்றனர். ஒரிஸ்ஸாவில் மலை ஜாதியினரும் தாழ்த்தப்பட்டோரும் முறையே, 19·72, 14·19 என்ற சதவிகிதமாக இருக்கின்றனர். ம. மாகாணத்திலும் பீராரிலும் அவர்களிரு வகுப்பினரும் கிட்டத்தட்ட சமமாக இருக்கின்றனர். அதாவது 17·47, 18·14 மாக இருக்கின்றனர். பம்பாயில் அவ்விரு வகுப்பினரும் 7·74-ம் 8·89-மாக இருக்கின்றனர். பீஹார், ம. மாகாணம், பீரார், ஒரிஸ்ஸா மாகாணங்களில் முஸ்லிம்கள் முறையே, 12·98, 4·66, 1·68 சதவிகிதமாக இருப்பதால் அம்மாகாணங்களில் மலைஜாதியினர் முஸ்லிம்களுக்கும் அதிகமாக இருக்கிறார்கள். ஆகவே அவர்கள் பேச்சை எடுக்காததற்கு நல்ல காரணமிருக்கிறது ஜனத்தொகையில் அவர்களது விகிதம் அவர்களை தாழ்த்தப்பட்டோரினும் வலுவுள்ளதாகச் செய்கிறது. சில மாகாணங்களில் அவர்களது நிலைமை முஸ்லிம்களின் நிலைமைக்கு மீறி அதிகமாகவும் இருக்கிறது. ஐந்தாவது கொள்கையை அமுலுக்குக் கொண்டு வருவதானால் அவர்களது பிற்பட்ட தன்மைக்கு மலைஜாதியினர், தாழ்த்தப்பட்டோரைக் காட்டிலும் அதிகப் பிரதிநிதித்துவத்திற்கு உரியவர்களாகி விடுவார்களாகையால், தாழ்த்தப்பட்டோருக்கும் முஸ்லிம்களுக்குமிடையில் அதிகாரத்தைப் பங்கு போட்டுக்கொள்வது என்ற கருத்து ஈடேறாமல் போய்விடும்.

டாக்டர் வெளியிட்டுள்ள கருத்துக்கள் தவிர அவரது பிரேரணையிலடங்கியுள்ள வேறு சில கருத்துக்களும் இருக்கின்றன. சிறுபான்மைகள் தங்களுடைய மந்திரிகளைத் தாங்கள் மாத்திரம்தான் தேர்ந்தெடுத்துக்கொள்ள உரிமை யுள்ளவர்களென்றும், பெரும்பான்மை வகுப்பைச் சேர்ந்த மந்திரிகளைச் சட்டசபை அங்கத்தினர்கள் யாவரும் கூடி ஒற்றைமாற்று வாக்குகளால் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும் கூறப்படுகிறது. சட்டசபைகளில் பெரும்-

பான்மையை 40 சத விகிதமாகக் குறைக்கப்பட்டிருப்பதால், அந்த 40 சத விகிதப் பெரும்பான்மையினரால்தான், பெரும்பான்மை வகுப்பைச் சேர்ந்த மந்திரிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். அவர்கள் மொத்தத்தில் 16 சத விகிதத்தினராகக் குறைந்துவிடுவர். மற்றவர்கள் பெரும்பாலும் சிறுபான்மைகளாலேயே தேர்ந்தெடுக்கப்படுவார்கள். சிறுபான்மைகளின் ஜனத்தொகைக்கு அவர்களுடைய சட்டசபை அங்கத்தினர்கள் என்ன விகிதத்திலிருப்பார்களோ அதே விகிதம், சட்டசபை அங்கத்தினர்களுக்கும் அவர்களுடைய மந்திரிகளுக்குமிடையில் காணப்படும். அது மட்டுமின்றி மற்றவர்களோடு சேர்ந்துகொள்வதன் மூலம் மந்திரிசபையில் பெரும்பான்மைக் கட்சிக்குரிய ஸ்தானங்கள் பலவற்றுக்கும் தங்களது பிரதிநிதிகளையே அவர்கள் தேர்ந்தெடுத்துக்கொள்ள முடியும்.

மேலும், இந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்றுகூடினாலும் அவர்கள் தாழ்த்தப்பட்டோரின் உதவியின்றி மந்திரிசபையை அமைக்கமுடியாது. அதே சமயத்தில் இந்து முஸ்லிம் இருவகுப்புகளில் ஏதாவதொன்று தாழ்த்தப்பட்டோருடன் சேர்ந்தாலும் இதரச் சிறுபான்மைகளைப் பொருட்படுத்தாமல் தாங்களாக மந்திரிசபையை ஏற்படுத்த முடியும்.

பத்திரிகைகளில் வெளியிட்டுள்ள திட்டத்தின்படி டாக்டர் அம்பேத்கார், மத்தியரசாங்கம், பம்பாய், பஞ்சாப் மாகாணங்களுக்கே புள்ளி விவரங்களைக் கணக்கிட்டிருக்கிறார். எல்லா மாகாணங்களுக்கும் அவருடைய கொள்கையை அனுசரிப்பதன்மூலம் என்ன ஏற்படுமென்பதைக் கணக்கிட்டுக் காட்டியிருப்பாரானால், அவருடைய கொள்கைகளின் அபத்தம் வெளிப்பட்டுவிடும். உதாரணமாக வ. மே. எ. மாகாணத்தில் மொத்த ஜனத்தொகையில் எல்லாச் சிறுபான்மைகளும் சேர்ந்து 8·21 சதவிகிதந்தானிருக்கின்றன. இவைகளுக்கிடையில் 60-சதவிகித ஸ்தானங்களை அவர் எவ்வாறு பங்கிடுவார் என்று சொல்லுவது கடினம். ஒரிஸ்ஸாவில் தாழ்த்தப்பட்டோர் 14·19 சதவிகிதம், முஸ்லிம்கள் 1·68 சதவிகிதம், கிறிஸ்தவர்கள் 0·32 சதவிகிதம். இவர்கள் யாவரும் மொத்தம் சேர்ந்து மலைஜாதியினரில்லாமல் 16·19-சதவிகிதம்தான் ஆகிறார்கள். இவர்களுக்கிடையேயும் எவ்வாறு 60-சதவிகித ஸ்தானங்களை அவர் பிரித்துக் கொடுப்பார் என்பதும் அதிசயமாகவே யிருக்கிறது.

## 43. திரு. எம். என். ராயின் அரசியலமைப்பு நகல்

திரு. எம். என். ராய் இந்திய அரசியலமைப்புக்கு ஒரு நகல் திட்டம் வெளியிட்டிருக்கிறார். (சில்லறை விவரங்களைப் பின்னால் பூர்த்தியாகும்படி விட்டுவிட்டு, அடிப்படை விஷயங்களையும் தகராறான விஷயங்களையும் இத்திட்டம் கூறுகிறது.' 'அடிப்படை விஷயங்களாவன: (1) அதிகாரத்தை மாற்றும் முறை, (2) அரசாங்க அமைப்பு, (3) அதிகாரத்தின் தோற்றுவாய். தாழ்த்தப்பட்ட வகுப்புகளைப் போன்ற இதர சில வகுப்புகளின் நிலைமையும் தகராறாக இருந்து வந்திருக்கிறது. அடிப்படைக் கேள்விகளுக்கு இந்நகல் விடையளிக்கிறது. தகராறுகளையும் தீர்க்க முன் வருகிறது' ஜனநாயக அரசியலமைப்பு என்றால் இந்திய ஜனங்களனைவருக்கும் அதிகாரத்தை மாற்றுவது என்று கொண்டுள்ள முடிவை அடிப்படையாக வைத்துக் கொண்டது இந்நகல். புரட்சி இல்லாமல் ஓர் அரசியல் நிர்ணயசபை ஏற்படுவது நடக்காத காரியம். ஆகவே அதிகாரத்தை மாற்றுகிற வேலையை

பிரிட்டிஷ் பார்லிமெண்டே தொடங்கவேண்டும். பிரிட்டிஷ் பார்லிமெண்டு இந்திய மக்களுக்கு அதிகாரத்தை முறைப்படியும் சட்டபூர்வமாகவும் முதலில் மாற்றவேண்டும். இரண்டாவதாக, ஜனங்கள் தங்களது அரசுரிமையை நடைமுறையில் கொண்டு வருவதற்கேற்றபடி ஓர் அரசாங்க அதிகார சபை அல்லது இயந்திரத்தை உண்டாக்கவேண்டும். ' முழு அரசுரிமையை மாற்றுதல் என்ற அடிப்படையில், இருக்கிற அரசியலமைப்பை மாற்றி அதனிடத்தில் புதியதொரு அமைப்பை ஏற்படுத்தும்போது, ஒரு தற்காலிக அரசாங்கத்தை ஏற்படுத்துவது இன்றியமையாத அவசியமாகும். ' உயில் எழுதி வைக்கிறவர்கள், அதை நிறைவேற்றுகிறவர்களையும் ஏற்பாடு செய்வதுபோல, பிரிட்டிஷ் பார்லிமெண்டு, ஒரு தற்காலிக சர்க்காரை ஏற்படுத்தும். இதற்காக ஒரு மசோதாவை பிரிட்டன் நிறைவேற்றும். பிரிட்டிஷ் இந்தியா, இந்திய சமஸ்தானங்கள் யாவற்றிலும் அடங்கிய பிரதேசங்கள் இதன்மூலம் இந்திய மக்களின் கைக்கு மாற்றப்படும். பிரிட்டிஷ் பார்லிமெண்டும் இந்திய சமஸ்தானங்களும் தங்களுக்குள் ஆதியில் செய்துகொண்ட உடன்படிக்கைகளை ரத்துசெய்வதாகச் சம்மதம் தெரிவித்து ஓர் ஒப்பந்தம் செய்துகொள்ளும். வரப்போகும் அரசியலமைப்பு ஜனநாயகப் போக்கிலிருக்கும் என்று நம்பி அதை பிரஸ்தாப அதிகாரமாற்ற மசோதா அங்கீகாரம் செய்யும். மேலும் ஒரு கவர்னர் ஜெனரலை நியமிக்கும். அவர் தற்காலிக சர்க்காரை ஏற்படுத்துவார். அதிகாரமாற்ற (அரசுரிமை) சட்டத்திலிருந்து அதிகாரத்தைப் பெற்ற தற்காலிக அரசாங்கத் தேர்தல் முறையினல் அதிகாரத்துக்கு வரவில்லையாகையால் எந்த சபைக்கும் அது பொறுப்பு வாய்ந்ததல்ல. அதுவே புதிய அரசாங்க அமைப்புக்கேற்ற சகல காரியங்களையும் நிறைவேற்றி வைக்கும். எவ்வளவு ஜனத்தொகைக்கு ஒரு ஜனக்கமிட்டி என்பதையும் ஒரு ஜனக்கமிட்டி எவ்வளவு நிலப்பரப்புப் பற்றிய நடவடிக்கைகளை மேற்கொள்ளலாமென்பது பற்றியும் அது நிர்ணயம் செய்யும். மொழி, கலாசார ஒற்றுமையுள்ள இந்திய மாகாணங்களின் எல்லையை நிர்ணயம் செய்யும். மாகாண மக்கள் சபைகளுக்கும் மாகாண கவர்னர் பதவிகளுக்கும் தேர்தல் நடத்தி மாகாண அரசாங்கங்களை அமைக்கும். இவ்வாறு புதிதாக அமைக்கப்பட்ட மாகாண அரசாங்கங்களில் எவையெவை சமஷ்டி யூனியனுக்கு வெளியிலிருக்க விரும்புகின்றன என்பதை உறுதியாய்த் தெரிந்துகொள்ளும். கவர்னர் ஜெனரல் பதவிக்கும், உதவி கவர்னர் ஜெனரல்கள் பதவிக்கும் தேர்தல்களை நடத்தும். அரசாங்க கௌன்சிலுக்கு அங்கத்தினர்களை நியமனம் செய்யும். இவ்விதமாக இந்திய சமஷ்டி யூனியனின் பெருமக்கள் சபையை அமைத்து, இந்திய சமஷ்டி யூனியனில் சேராத மாகாணங்களில் ஏற்படுத்த வேண்டிய சட்ட திட்டங்களையும் நிறைவேற்றும். மாகாண நிர்வாக அரசாங்கங்களும், சமஷ்டி நிர்வாக அரசாங்கமும் ஏற்பட்டவுடன் இத்தற்காலிக அரசாங்கம் ராஜினமா செய்யும்.

இந்திய மன்னர்கள் தங்கள் பிரதேசத்தை ஆளும் உரிமைகளைக் கைவிடுமாறும், அதற்கு ஈடாக கௌரவ வாழ்க்கை நடத்துவதற்கேற்ற பணம் பெற்றுக்கொள்ளும்படியும் பிரிட்டிஷ் அரசாங்கம் அவர்களோடு ஏற்பாடு செய்யவேண்டுமாய்க் கேட்டுக்கொள்ளப்படவேண்டும். இவ்விதமாக இந்திய மன்னர்கள் சம்பந்தப்பட்ட தகராறு தீர்க்கப்படவேண்டும்.

ஜீவாதார உரிமைகள், கொள்கைகளைப் பற்றியொரு பிரகடனம் செய்ய வேண்டும் என்று அரசியலமைப்பில் கண்டிருக்கிறது. 'எல்லாப்

பிரதிநிதித்துவ சபைகளிலும் தனித்தொகுதி மூலம் விகிசாரப் பிரதிநிதித்துவ மளித்து சிறுபான்மை உரிமைகள் பாதுகாக்கப்படும்' என்ற வாக்குறுதி அப்பிரகடனத்தில் காணப்படும். 'எந்த ஒரு மாகாணம் சமஷ்டி யூனியனில் சேர விரும்பவில்லையோ, அது அந்த யூனியனுடைய பகுதியாக இருக்க முடியாது' என்ற விதியைச் சமஷ்டி யூனியனமைப்பில் சேர்க்கின்றது.

இந்திய சமஷ்டி யூனியன் ஏற்படுத்துவதற்கு முன்னதாக, இவ்வரசிய லமைப்பின் பிரகாரம் மாகாண மக்கள் சபைகள் கூடி, அந்த மாகாணம் யூனியனிலிருந்து வெளியேயிருக்கும் உரிமையைக் கொண்டாடலாம். அந்த உரிமையை அங்கு நிறைவேற்றிவிட்டால், அத்தீர்மானத்தை அம்மாகாணவாசி களின் சர்வஜன வாக்குக்கு விட்டுவிடவேண்டும். மாகாணவாசிகளில் பெரும் பான்மையோர் அதை ஒப்புக்கொண்டால்தான் தீர்மானம் அமுலுக்கு வரலாம். சமஷ்டியில் சேராத மாகாணங்கள் தனியான ஒரு சமஷ்டியை ஏற்படுத்திக் கொள்ளலாம். பொதுநலக் காரியங்களான சுங்கம், நாணயம், ரயில்வே போன்ற விஷயங்களில் சமஷ்டி யூனியன் அந்தத் தனிச் சமஷ்டியோடு பரஸ்பர உதவி, கூட்டுழைப்புக்கான உடன்பாடுகள் செய்துகொள்ளலாம். பிரிட்டிஷ் காமன்வெல்த் என்ற பெரிய சமஷ்டியில், இந்திய சமஷ்டி யூனியன் ஓர் உடன் படிக்கையின்பேரில் அங்கத்தினராக இருக்கும். இந்திய சமஷ்டி யூனியன் அமைப்பு ஏப்பட்டபிறகு, சமஷ்டிப் பகுதிகள், யூனியனிலிருந்து பிரியும் உரிமையை வைத்துக்கொள்ளலாம். பிரியவேண்டுமானுல் அதை சர்வஜன வாக்குக்கு விட்டு, பெரும்பான்மை ஆதரவு கிடைத்தால் நிறைவேற்றலாம்.

சமஷ்டி சட்டசபை, அரசாங்கக் கௌன்சில், பெருமக்கள் சபை, கவர்னர் ஜெனரல், சட்டசபை அதிகார இயந்திரம், நிர்வாக இயந்திரம், மாகாணங்கள், சமூகப் பொருளாதார சங்கம், நீதி, பஞ்சாயத்து ஆட்சி முதலிய அரசியலமைப்புப் பாகங்களைப்பற்றி நான் சுருக்கிக் கூறவில்லை. வகுப்புப் பிரசினையைப்பற்றியும், அதற்குப் பாகிஸ்தானை ஏற்படுத்துவது மருந்தாகுமா என்பதுபற்றியும் நாம் ஆலோசிப்பதற்கு மேற்கண்டவை வேண் டாதவை. அவைகளில் வகுப்புப் பிரசினை சம்பந்தமாக விசேஷ ஏற்பாடுகள் ஒன்றுமில்லையாதலால் அந்த முக்கிய அம்சங்களை, பக்கவிஷயங்களாக இச் சந்தர்ப்பத்தில் கவனிப்பது சரியல்ல.

வகுப்புப் பிரசினை சம்பந்தமாகத் தம்முடைய யோசனைகள் 'முஸ்லிம் லீகின் நோக்கத்தை முழுதும் பூர்த்தி செய்கிறதாக' திரு. ராய் சொல்லுகிருர். தற்போதுள்ளபடி இருக்கிற இந்திய தேச மக்களின் கைக்கு அதிகாரத்தை மாற்று முன்பு, சில பிரதேசங்களைப் பிரிக்க வேண்டுமென்ற கோரிக்கை, பிரசினையைத் தீர்க்க வேண்டிய விதத்திற்கு மாறுபட்டதாக இருக்கிறது. ஆகவே பிரிவினைப் பிரசினையை இங்கல் நீக்கிவிடுகிறது. இந்தியா ஒரு முழு அரசியலமைப்பாகக் கருதப்பட்டே அதிகாரமாற்றம் செய்யப்படுகிறது. எந்த பிரதிநிதித்துவ சபைக்கும் பொறுப்பில்லாத தற்காலிக அரசாங்கம் மாகாண எல்லைகளைப் பிரித்த பின்னர், அம்மாகாணங்கள் சமஷ்டியில் சேராமலிருக்கும் சுதந்திரம் உண்டு. ஒரு பக்கம் பிரிய விரும்புகிற மாகாணங்கள் பிரிவதற்கு இடமளித்துவிட்டு, மறுபக்கம், சிதறித் தெறிக்கும் நோக்கங்களுக்கு இடமளிக் காது சமஷ்டியமைப்புக்கும் இங்கல் ஏற்பாடு செய்கிறது. சமஷ்டித் தன்மை யும், மத்திய இணைப்புத்தன்மையும் சேர்க்கப்பட்டிருக்கிறது. மொழி, கலா சார அடிப்படையில் மாகாண எல்லைகளை மாற்றி யமைத்தால், அது, மதம், வகுப்பு என்ற அடிப்படையில் மாற்றுவதற்கு நேராகாது. ஆகையால் அவ்விதக்

காரியத்திற்கும் லீக் உடன்படப் போவதில்லை. மேலும் இவ்வித எல்லை மாறு தலைச் செய்யும் அரசியலமைப்பைப்பற்றி ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை. பார்லிமெண்டால் நியமிக்கப்படும் கவர்னர் ஜெனரலால் இந்த அரசியலமைப்பு நியமிக்கப்படும் என்பது தவிர வேறொன்றும் தெரியவில்லை. தனித்தொகுதி மூலம் விகிதாசாரப் பிரதிநிதித்துவத்தை ஏற்படுத்திச் சிறுபான்மைகளின் உரிமைகள் காக்கப்படும் என்ற ஏற்பாட்டினாலும் முஸ்லிம் லீக் மனங் குளிர்ந்து விடப் போவதில்லை.

## 44. பின்னுரை

இந்தியாவின் வடமேற்கிலும் வடகிழக்கிலும் சுதந்திர முஸ்லிம் ராஜ்யங் களை ஏற்படுத்த வேண்டுமென்ற முஸ்லிம் லீகின் திட்டத்துக்கு மாற்றாக வந்த பலவகைத் திட்டங்களை வாசகர்களே படித்தறிந்து தமது சொந்த அபிப் பிராயங்களை அமைத்துக் கொள்ளுமாறு முந்திய பக்கங்களில் அவைகளைக் கொடுத்திருக்கிறேன். நானும் எனது முடிவான கருத்துக்களைத் தரவேண்டு மென்பது அவசியமல்ல. இந்தியாவை சுதந்திர முஸ்லிம் ராஜ்யங்கள், சுதந்திர முஸ்லிமல்லாத ராஜ்யங்களாகப் பிரிக்க வேண்டுமென்ற பிரேரணையை எனக் குத் தெரிந்தவரை வேறு எந்த வகுப்புவாதக் கூட்டமோ சங்கமோ முன் கொண்டுவரவில்லை, முஸ்லிம்களுக்குள்ளும் இப் பிரேரணையை எதிர்ப் பவர்களிருக்கிறார்கள். இவர்கள் பெரும்பான்மையான முஸ்லிம்களின் சார்பில் பேசும் உரிமை கொண்டவர்களா, அல்லது எத்தனை விகிதத்தினர் சார்பில் பேச உரிமை கொண்டவர்கள் என்பதை எல்லாம் தீர்மானிக்கும் வேலை என்னுடையதல்ல. எனது இப்போதைய நோக்கத்திற்கு அவ்வாறு தீர்மானிப் பது தேவையும் அல்ல என்பதையும் இப்போது காண்போம். முஸ்லிமல்லாத ஸ்தாபனங்களத்தனையும் ஒன்றுபோல பிரிவினைத் திட்டத்தை எதிர்த்துத் தங்கள் கருத்தை வெளியிட்டிருக்கின்றன என்று நம்புகிறேன். பிரிவினையை நாடும் எந்தத் திட்டத்தையும் எதிர்ப்பவர்கள், முன்னால் கொடுக்கப்பட்ட எந்தத் திட்டத்தையும் பேச்சுவார்த்தைக் காதாரமாக வைத்துக் கொண்டு, எல்லோருக்கும் ஒழுங்கான, நீதியான, திருப்தியளிக்கக்கூடிய ஒரு திட்டத்தை உருவாக்கலாம். ஒரு வட்டமேஜை மகாநாடு கூடி இத்தகைய திட்டமொன்றை உருவாக்க முடியுமென்றே நம்புகிறேன். இத்தகைய மகாநாட்டுக்கு, மேலே விவரிக்கப்பட்ட திட்டங்களுக்கு மேலும், ஏதாவது நான் பார்க்காத அல்லது விவாதிக்காத ஒரு திட்டத்தைச் சேர்ப்பதனால் பயனொன்றும் ஏற்பட்டுவிடாது. எந்தத் திட்டமும் லீகின் லாகூர் திட்டத்தை ஏற்றுக் கொள்வதிலிருந்து தான் தொடங்கவேண்டுமென்ற தீர்மானத்தைத் தனது தலைவர், இதரப் பெரியோர் கள் மூலமாக, லீக் கூறியிருக்கிறது. எந்தப் பேச்சுக்கும் அதை முதற்காரியமாக வைத்துக் கொள்ள வேண்டும், முதல் நிபந்தனையாக ஏற்றுக்கொள்ள வேண்டும். இந்த அடிப்படையில் தொடங்காத எந்தத் திட்டத்தையும் விரும் பாது, விவாதிக்காது. அது மாத்திரமல்ல. லாகூர் தீர்மானத்துக்கு லீக் கற்பிக்கிற அர்த்தத்தை ஒப்புக் கொள்ளாத எந்தத் திட்டத்தையும் பற்றிப் பேச அது தயாராக இல்லை. அதே சமயத்தில் அந்தத் தீர்மானத்தை எல் லோருக்கும் தெளிவாகப் புரிகிற விதத்தில் விளக்கிக் கூறவும் மறுக்கிறது. தன்னுடைய திட்டம் லீகின் லாகூர் தீர்மானத்தைப் பூர்த்திசெய்வதாக ஸ்ரீ ஜத். ராஜகோபாலாச்சாரியார் சொல்லுகிறார். லாகூர் தீர்மானம் பொதுப்படை

யான வார்த்தைகளில் சொல்லியிருக்கும் கொள்கைக்கு ராஜாஜி திட்டம் உருவம் கொடுக்க முன் வருகிறது. ஆனுல் லீக் தலைவர் அது பற்றியும் பேசத் தயாராக இல்லை. அவர் மகாத்மா காந்தியோடு நடத்திய நீண்ட பேச்சு வார்த்தைகளின் போது, அத்தீர்மானத்தின் விவரங்களைப்பற்றி வாயெடுக்காமல் அதன் விவரமில்லாத கொள்கைகளையும் பொதுப் போக்குகளையும் பற்றி அவருக்கு 'உபதேசிக்க' முயன்ருர். இவ்வாருக, எந்த உருப்படியான திட்டமும் முஸ்லிம் லீகுக்குத் தேவையில்லை. ஆகவே தீர யோசித்த பிறகு, இருக்கிற திட்டங்களுக்குமேல் இன்னும் திட்டங்களைச் சேர்க்க வேண்டாமென்று முடிவு செய்தேன். எந்தத் திட்டமும் அடிப்படையான இரண்டு நிபந்தனைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும். எல்லா வகுப்பினருக்கும் ஒழுங்காகவும் நியாயமாகவும் இருக்க வேண்டும். விரிவான கொள்கை கொண்டிருக்க வேண்டும். சில்லறைக் கூப்பாடுகளின் சிக்கலிலிருந்து அப்பாற்பட்டு விளங்குவதாக இருக்கவேண்டும். கோடான கோடி இந்திய மக்களையும் இந்தியாவையும் கண்டு 'மாறுபட்ட வாதமே ஐந்நூறு—வாயில் நீள ஓதுவாய் போ, போ, போ, சேறுபட்ட நாற்றமும், தூறுஞ்சேர் சிறியவீடு (திட்டங்கள்) கட்டுவாய் போ, போ, போ' எனக் கூறிவிடையனுப்பி விட்டுப் புதிய தொரு இந்தியாவைப் படைக்க முன்வர வேண்டும். அந்நாட்டில் பிறந்த கோடானு கோடி மக்கள் பெருமைப் படத் தக்கதாகவும், அதற்காக வாழ்ந்து, உழைத்து, சாகக் கூடியதாகவும், 'ஒளியிழந்த நாட்டிலே நின்றேறும் உதய சூரியனை ஒப்பக் களை சிறக்க வந்த இளைய பாரதமாக' இருக்கவேண்டும். மனிதன் ஓர் இனத்தைச் சேர்ந்தவன் என்ற குறுகிய வட்டத்துக்குள் அடங்கியவனல்லன், அதற்கப்பாலும் ஒளி வீசுபவன். ஒரு திட்டம் எவ்வளவுதான் விரிவாக இருந்தாலும், வகுப்புக் கோரிக்கைகளை எவ்வளவுதான். இம்மியும் விடமல் பூர்த்தி செய்தாலும், மனிதனை மட்டும் வெறும் மனிதனுக, அவனுடைய தேவைகளைக் கவனிக்காமல், அவனுக்காவன கருதிச் செய்யாமல் விட்டுவிடுமானுல், அத்திட்டம், அது எழுதப்பட்டிருக்கும் காகிதத்தின் மதிப்பையும் பெருது. எந்தத் திட்டம் இந்நாட்டில் வாழும் தாழ்ந்த ஏழையையும், அவன் இதற்கு முன்பு வாழ்ந்ததைக் காட்டிலும் மகிழ்ச்சியுடனும் மேன்மையுடனும் வாழச் செய்கிறதோ அதுவே இப் பெருமை மிக்க நாட்டுமக்களுக் கேற்றதாகும்.

இந்திய மக்கள் முன்பு இரண்டே இரண்டு நிலைமைகளை நிறுத்தி 'இது வேண்டுமா? அது வேண்டுமா?' என்று கேட்கப்படுகிறது. அதுதான் இன்றைய பிரசினை. இரண்டு திட்டங்களுக்குள் ஒன்றை அவர்கள் தேர்ந்தெடுக்க வேண்டும். ஒன்று நாட்டை மண்டலங்களாகப் பிரிப்பது; நாட்டு மக்களை தேசிய இனங்களாகப் பிரிப்பது; மற்ருென்று நாட்டின் ஒற்றுமையைப் பேணிக் காப்பது. எல்லா இனத்துக்கும், மிக மிகச் சிறிய இனத்துக்கும் அறம், பொருள், அறிவுத் துறைகளில் முழு வளர்ச்சியடைய ஏற்பாடு செய்வது. அவ்வளர்ச்சியைத் தடுக்கவோ தளைப்படுத்தவோ செய்யும் எவ்வித சமூக, அரசியல், பொருளாதார இடையூறுகளிருப்பினும் அவைகளை நீக்குவது. இவ்விரண்டினுள் ஒன்றை மக்கள் தேர்ந்தெடுக்க வேண்டும். கண்கள் விழிப்படைந்து, மனம் அறிவுறுத்தப்பட்டு, எச்சரிக்கையோடு முன்பின் ஆராய்ந்து தேர்ந்து தெளிய வேண்டும். இதில் வலுக்கட்டாயமோ, பலாத்காரமோ கூடாது. எதிர்க் கட்சிக்கு உமியைக் கொடுத்துவிட்டு நாம் அவலைக் கொண்டு போய்விட வேண்டும் என்ற எண்ணமும் இருக்கக்கூடாது. இக்காரியங்களின் பலனுகக் கிளம்பும் விளைவுகள் இப்போதைய உலக சந்தர்ப்பத்தில் இந்

நாட்டுக்குமட்டுமன்றி, வெளியிலுள்ள கோடானுகோடி மக்களையும் பாதிக்கும் மகத்தான தன்மை வாய்ந்ததென்பதை மறுக்க முடியாது. ஒவ்வொரு கேள்வியையும், உணர்ச்சி வேகத்தில் மிதந்து பார்க்காமல், அது கிளம்பக் கிளம்ப, ஆற அமர யோசிக்கத் தயாராக இருக்க வேண்டும். அறிவாற்றலோடும், 'எல்லோருக்கும் நியாயமாகவும் ஒழுங்காகவும் நடக்க வேண்டும்' என்ற உறுதியோடும் ஒவ்வொரு கேள்வியையும் அணுக வேண்டும். நியாயமாகவும் ஒழுங்காகவும் இருப்பது என்ற மன உறுதி மாத்திரம் ஏற்பட்டுவிட்டால், பிறகு எல்லோருக்கும் இசைந்த ஒரு திட்டத்தைக் கண்டுபிடிப்பது கடினமல்ல. பிரசினையைத் தீர்ப்பதற்கு இதற்குமுன் செய்த முயற்சிகள் தோல்வியுற்றன என்று சொல்லுவதில் பயனில்லை. அது நம்முடைய பலவீனத்தையே காட்டுகிறது. நம்மிடம் தன்னம்பிக்கை இல்லை என்பதைத்தான் காட்டுகிறது.

விவாதம் வெற்றி காண வேண்டுமானால்—விவாதம் நடைபெறவாவது வேண்டுமானால், நாம் இறுதி எச்சரிக்கைகள் விடுத்துக் கொண்டிருப்பதைச் சற்று நிறுத்திக்கொள்ள வேண்டும். விவாதத்திற்குமுன் நிபந்தனைகள் விதிப்பதை நிறுத்திக்கொள்ள வேண்டும். விவாதம் தொடங்குமுன்பு, 'எமது இந்தக் குறைந்தபட்சக் கோரிக்கைகளை ஏற்றுக்கொள்ள வேண்டும்' என்று சொல்லி உண்மையாகவே அதிகபட்சமான கோரிக்கைகளைக் கேட்கக்கூடாது. விவாதத்தில், வேண்டிக் கொள்ளுதல், சிலவற்றைக் கொடுத்துச் சிலவற்றை வாங்கிக் கொள்ளுதல் ஆகிய வழிகளே நமக்குரியவை. இன்னும் அதிகமாகச் சொல்லப்போனால் இவைதான் நாகரிக முறைகளுமாகும். பிற முறைகளை நினைப்பதற்கும் நமக்குத் துணிவில்லை. நாகரிக நாடுகள் பயங்கர முறைகளைப் பிரமாண்டமான அளவில் கையாளுவதை நாம் இன்று கண்கூடாகக் காண்கிறோமாயினும் நமக்கு அவை தகுந்ததல்ல.

ஐரோப்பாவிலுள்ள, மிக மிகச் சிறிய நாடுகள், சிறிய தேசிய இனங்கள் ஆகியவற்றைக் காட்டிலும் பரப்பிலும் ஜனத் தொகையிலும் பாகிஸ்தான் பெரிதாயிருக்குமென்று எல். ஹம்ஸா தம்முடைய புத்தகத்தில் கூற முயன்றிருக்கிறார். ஐரோப்பாவிலுள்ள சின்னஞ் சிறு நாடுகளைக் காட்டிலும் பெரிதாயிருப்பதில் ஏன் திருப்தி கொள்ள வேண்டும்? ஐரோப்பாவிலுள்ள மிகப் பெரிய நாட்டைக் காட்டிலும் பெரிதாயிருக்கக்கூடிய, அமெரிக்காவிலுள்ள மிகப் பெரிய நாட்டிலும் பெரிதாயிருக்கக்கூடிய, ஆசியாவிலுள்ள மிகப் பெரிய நாட்டுக்குக் கிட்டத்தட்ட சமமாக இருக்கக்கூடிய இந்தியாவை ஏன் நமது குறிக்கோளாகக் கொள்ளக்கூடாது? 'இதற்காகவே வாழ்வேன், வீழ்ந்தால் இதற்காகவே வீழ்வேன்' என்று மேற்கொள்ளத் தகுந்த சிறந்த நோக்கம் அல்லவா இது? நாம் இவ்வாறு விரும்புவது சின்னஞ் சிறு நாடுகளையும் ஏழை எளிய நாடுகளையும் அடக்கியொடுக்கி நசுக்குவதற்கல்ல. எந்த அயல் நாட்டையாவது அல்லது தொலை நாட்டையாவது சண்டைக்கிழுத்துத் தாக்கியதாக இந்தியாவின் நெடுங்காலச் சரித்திரம் கூறக் காணோம். நாம் ஒரு வல்லரசாக விரும்புகிறோம். எதற்காக? நமக்கும் பிறர்க்கும் பணி செய்ய; நம்மிடையேயுள்ள சின்ன நாடுகளுக்கும் பிறத்தியாருக்கிடையே அகப்பட்டிருக்கும் சின்ன நாடுகளுக்கும் சேவை செய்ய. இவ்விதம் சேவை செய்வதற்குக் குறுக்கே நிற்கும் தங்குதடைகளையும் இடறுகற்களையும் எல்லாவகையாலும் அகற்றுங்கள். வல்லரசாண்மையினால் கிடைக்கும் அதிகாரத்தைக் கொண்டு பிறரை அடிமைப்படுத்தி அடக்கியொடுக்கி நசுக்க வேண்டுமென்ற ஆசையை, தூண்டுதலை எல்லாவகையாலும் தகர்த்தெறியுங்கள். இதனால்

நாம் நம்பிக்கையிழக்காதிருப்போமாக! 'இனிமேல் ஒப்பேருது, அவ்வளவு தான்' என்று கைவிடப்பட்ட மாதிரியில் கடைசி உபாயங்களைத் தேடா திருப்போமாக.

பிரிவினை என்பது மனமுடைந்தவர்களின் உபாயம் என்பதில் ஐயமில்லை. வகுப்புப் பிரசினையை இவ்வுபாயம் அதிகப்படுத்தா விட்டாலும் அதைத் தீர்க்கவில்லை. அதிகப்படுத்துமென்றுதான் நான் உள்ளூரப் பயப்படுகிறேன். இப்பிரிவினை, கொடிய விளைவுகளை விட்டுச் செல்லும் என்பது நிச்சயம். இதைப் புகுத்துவதால் ஒரு பக்கம் செல்வக் களிப்பின் எக்காளமும், மற்றொரு பக்கம் வயிற்றெரிச்சலும் ஏக்கமும் ஏற்படுவது நிச்சயம். இத்தகைய காரியங் களே சகோதரச் சச்சரவுகளையும் உலக யுத்தங்களையும் உண்டாக்கி யிருக் கின்றன. இவைகளைப் பொருட்படுத்துவது நமக்கு அறிவுடைமையாகும். ஆயிர வருஷங்களாகக் கூடிவாழ்ந்த வாழ்வும் கூடி உழைத்த உழைப்பும் நமக் களித்திருக்கிற நல்லெண்ணத்தையும் தோழமை உணர்ச்சியையும் நாம் குறை வாக மதிப்பிடவேண்டாம். திருப்திகரமான ஒரு முடிவுக்கு அவை வழி காட்டும்.

ஆனல்,—நாம் புறக்கணிக்க முடியாத ஆனல் ஒன்று இருக்கிறது— இதெல்லாம் மனத்தைத் திருப்பாவிட்டால், பிரிவினை போட்டுத்தான் தீரவேண்டுமென்ருல் நாம் அதன் பின்விளைவுகளை அனுபவிக்கத் தயாராக இருக்கவேண்டும். பிரிவினைக்குப் பின் எல்லாம் பழம் நழுவிப் பாலில் விழுந்தது போல் நடக்கும் என்ற மயக்கம் கொள்ளக்கூடாது. பிரிவினை நன்மைகளை எவ்வளவு ஓவியப் படுத்தலாமோ அவ்வளவு எளிதாக அதன் நாசகார விளைவு களையும் மனத்தால் யூகிக்கலாம். எப்படியிருந்தாலும் நாம் ஒழுங்காகவும் நேர்மையாகவும், நீதியாகவும் இருப்பதற்குத் தயாராக இருக்கவேண்டும் வாழ்விலும் செயலிலும் நாம் உண்மையாகவே அப்படியிருந்தோமானல் நமது பேராபத்தைச் சிறிது குறைக்கலாம். ஏற்படக்கூடிய பாபதாபத்தைத் தணிக்கலாம். 'ஆ! இனி என்ன செய்வோம்?' என்ற தீனக் குரலோடு இப்புத்தகத்தை முடிக்க நான் விரும்பவில்லை. நமது நாட்டினர்—இந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர், கிறிஸ்தவர், பார்சிகள் ஆகியோருடைய நீதி, நேர்மை, பொது அறிவில் எனக்கு நம்பிக்கையற்று விடவில்லை. நமக்குத் தகுந்ததும், பயனுள்ளதும், நமது சந்ததிகள் பெருமைப்படத் தக்கதும், தாறுமாருக மனஞ் சிதறிய இவ்வுலகம் பின்பற்றக் கூடியதுமான ஒரு வழியை நமது நாட்டவர் கண்டுபிடிப்பார்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது. உண்மையை ஒளி யாகவும், அஹிம்சையை ஊன்றுகோலாகவும் கொண்டால்தான் இது நிறை வேறும்.

நமது தலைமுறையிலேயே நாம் இரண்டு பாழும் கொடிய உலக யுத்தங் களைக் கண்டோம். முதல் உலக யுத்தத்திற்குப் பின், தேசிய இனப்பிரசினை யைத் தீர்ப்பதற்கு தேசிய இன ராஜ்யங்களை ஏற்படுத்துவது என்ற பரிசோதனை படுதோல்வி யடைந்தது. முந்தியதைக் காட்டிலும் நாலாமூலையும் பரவிப் பெரும் பாழ்படுத்திய இரண்டாவது உலக மகாயுத்தத்தில் தேசங்களை நேரே கொண்டுபோய் இறக்கியது இந்தப் பரிசோதனையே. ஒருகால் இத்தகைய இரண்டு யுத்தங்களினலும் ஐரோப்பா புத்தி பெருமல் இருக்கலாம். ஒன்றையொன்று தூக்கி விழுங்குவதற்குத் தகுந்த சமய சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிற தேசிய இனங்களைக் காவல்புரிந்து கண்காணிப்பதன் மூலம் அமைதியை நிலைநாட்டுவேன் என்று

ஐரோப்பா சொல்லிக் கொண்டிருக்கலாம். எல்லாவித வேற்றுமைகள்—பழைய துக்கசுர ஞாபகங்கள் என்று வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளுங்கள்—இருந்தபோதிலும், அவைகளை மீறி எல்லோரையும் கொண்டணைத்துக் காப்பாற்றுவதோடல்லாமல் எல்லா மக்களுடைய உயர்ந்த ஆசைகளையும் பூர்த்தி செய்கிற ஒரு ராஜ்யத்தை நமது நாட்டில் ஏற்படுத்த நாமும் நமது ஒத்தாசையைச் செய்ய முடியாதா? இவ்வாறு செய்ய முற்படுவது சுய நிர்ணயத்தை மறுப்பதாகாது, பூர்த்தி செய்வதாகும். நல்லெண்ணத்தோடும் நேர்மையோடும் இக்காரியத்திலிறங்க வேண்டும், அவ்வளவுதான்.

## முதற் பதிப்புக்குப் பிற்சேர்க்கை

இந்து முஸ்லிம் பிரசினையைத் தீர்ப்பதற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட முயற்சிகளின் வரலாற்றை 1945 ஜூலையில் நடைபெற்ற ஸிம்லா மகாநாடுவரை தொடர்ச்சியாகக் கூறினேன். அதற்கப்புறம் நாளதுவரை நடந்த விவரங்களை இங்கு கவனிப்போம். 1944-ல் மகாத்மா காந்தி ஜின்னுவுடன் பேச்சு வார்த்தை நடத்தினர். எங்தெந்தப் பகுதிகள் முஸ்லிம் பெரும்பான்மையைக் கொண்டிருக்கின்றன, எவைகளைச் சேர்த்து முஸ்லிம் மண்டலங்களை வரம்பு கட்டுவது என்பதுபற்றிப் பேச்சு எழுந்தது. அந்தச் சமயத்தில்தான் பகுதிகள் என்பவை மாகாணங்களைக் குறிக்குமேயல்லாது ஜில்லாக்களையோ அதற்கும் சிறிய இடப் பரப்புகளையோ குறிக்காதென்ற விஷயம் முதன்முதலில் வெளிப்படுத்தப் பட்டது. முஸ்லிம்கள் மிகப் பெரும்பான்மையாக உள்ள இடங்களில் சேர்ந்தாற்போன்று இருப்பவை எவை என்பதை வரம்புபடுத்த ஒரு கமிஷன் ஏற்படுத்த வேண்டும் என்று ஸ்ரீ சி. ராஜகோபாலாச்சாரியார் தம்முடைய திட்டத்தைக் கொண்டுவரும் வரையும் லீகும் அதன் தலைவர்களும் இது சம்பந்தமாகத் தங்களது கருத்து என்ன என்பதைத் தெரிவிக்கப் பிடிவாதமாக மறுத்து வந்தார்கள். ராஜாஜியின் திட்டத்திற்கப்புறம்தான் பாகிஸ்தான், இந்துஸ்தான் என்ற இரண்டு பூரண அரசுரிமை பெற்ற பாகங்களாக இந்தியா பிரிக்கப்பட வேண்டும் என்றும், 'வடமேற்கு மாகாணம் முழுவதும், பலுசிஸ்தானம், சிந்து, பஞ்சாப், வங்காளம், அஸ்ஸாம் ஆகிய மாகாணங்கள் இப்பொழுதிருக்கின்ற படியே முஸ்லிம் பிரதேசங்களாக ஒப்புக்கொள்ளப்பட வேண்டும் என்றும்'[1] 1944 அக்டோபர் 4-ம் தேதி லண்டன் 'நியூஸ் கிரானிகள்' பத்திரிகை நிருபருக்குத் திரு. ஜின்னு சொல்ல வேண்டியதாயிற்று. 1944 அக்டோபர் 5-ம் தேதி லண்டன் 'டெயிலி ஓர்க்கர்' பிரதிநிதிக்கு அளித்த பேட்டியில் கூறியதாவது: 'வடமேற்கிலுள்ள வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பலுசிஸ்தானம், சிந்து, பஞ்சாப், வடகிழக்கிலுள்ள வங்காளம், அஸ்ஸாம் ஆகிய ஆறு மாகாணங்களில் 7 கோடி முஸ்லிம்கள் இருக்கின்றுர்கள் என்பதையும், மொத்த முஸ்லிம் ஜனத்தொகை 70 சத வீதத்துக்குக் குறையாது என்பதையும் மனதில் இறுத்திக் கொண்டால்தான் பாகிஸ்தான் கோரிக்கையினுடைய முழு அர்த்தத்தையும் உணர முடியும் என்றுர்.'[2] காந்திஜி-ஜின்னு பேச்சு வார்த்தைகள் முடிந்த பிறகு பத்திரிகை நிருபர்கள் முன்னிலையில் 'ஜின்னு பேசினர். அப்போது வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பஞ்சாப், சிந்து, வங்காளம், அஸ்ஸாம், பலுசிஸ்தானம் ஆகிய ஆறு மாகாணங்களின் தற்போதைய எல்லைகள் எவ்வாறு

1. *Jinnah-Gandhi* Talks, p. 75.
2. *ibid.*, p. 79.

இருக்கின்றனவோ அதை அடிப்படையாகக் கொண்டுதான் பிரிவினை செய்ய வேண்டும் என்றும் அவசியமான இடங்களில் பிரதேசங்களை மாற்றுவது இதற்கு உட்பட்டு இருப்பதாகவும் லாகூர் தீர்மானம் கூறுவதாக' ஜின்னா குறிப்பிட்டார். 'உட்பட்டு' என்ற வார்த்தையை வலியுறுத்திக் கூறினார். பிரதேசங்களை மாற்றி அமைப்பது என்பது ஒரு சார்பைச் சேர்ந்தது மாத்திர மல்ல, இந்துஸ்தான் பாகிஸ்தான் ஆகிய இரண்டு சார்பையும் சேர்ந்ததாகவும் விளக்கிக் கூறினார். 'இரண்டு தேசங்களுக்கிடையே எல்லைகளைப்பற்றிய தகராறு எதுவும் வந்தால் அது எப்படிப் பொதுவாகத் தீர்க்கப்படுகிறதோ அதேபோல பாகிஸ்தான், இந்துஸ்தான்களுக்கிடையே எல்லை வகுக்கும் பிரசினை, எல்லையை நிர்ணயம் செய்யும் பிரசினை முதலியவைகளைப் பிறகு தீர்த்துக் கொள்ளலாமென்று தெளிவுபடுத்தினார்.'[3] ஆகவே பகுதிகள் என்ற சொல் முழு மாகாணங்களைக் குறிக்குமேயல்லாது சிறிய நிலப்பரப்பான ஜில்லாக்களையோ தாலுகாக்களையோ சப் டிவிஷன்களையோ அல்லது கமிஷனர் ஆட்சிப் பிரதேசங்களையோ குறிக்காதென்பது இவ்வாறாகப் பலவிதத்திலும் தெளிவாக்கப்பட்டது. இருந்தாலும் பிரதேசங்களை மாற்றியமைப்பது என்ற ஒரு விஷயம் மட்டும் இன்னும் தெளிவுபடுத்தப்படவில்லை. இப்பொழுது அந்த வார்த்தைகளுக்கு என்ன வியாக்யானம் கொடுக்கிறார்கள் என்பதைப் பின்னர் கவனிப்போம்.

ஆறு மாகாணங்களைக் கொண்ட பாகிஸ்தானில் 7 கோடி முஸ்லிம்கள் இருப்பார்கள் என்றும், ஜனத்தொகையில் 70 சத விகிதமாக இருப்பார்கள் எனவும் திரு. ஜின்னா, 'டெய்லி ஒர்க்கர்' பத்திரிகை நிருபருக்குக் கூறியதைச் சற்று இங்கு கவனிப்போம். திரு. ஜின்னாவுக்குப் புள்ளி விவரங்களில் நம்பிக்கை யில்லை என்பது கண்கூடு. உண்மைமுன் நிற்காத வாதங்களைத் திருப்பித் திருப்பிக் கூறுவதன்மூலம், ஆயிரம் வருஷங்களாக இருந்துவரும் பூகோள அமைப்பையும் சரித்திரத்தையும் கட்டுப்படுத்தவும் மாற்றவும் முடியும் என்று திரு. ஜின்னா நினைக்கிறார் என்று தெரிகிறது. அதைப்போல கணக்கு விவரங்களையும் மாற்றிவிடுவது கஷ்டமல்ல என்றும் நினைக்கிறார் போலும்! இப் புத்தகத்தில் மற்றொரு பாகத்தில் ஜனத்தொகை அட்டவணைகள் கொடுக்கப் பட்டிருக்கின்றன. வடமேற்கு எல்லைப்புறம், பலுசிஸ்தானம், சிந்து, பஞ்சாப் ஆகிய நான்கு மாகாணங்களைக் கொண்ட வடமேற்கு மண்டலத்தில் இருக்கும் மொத்த ஜனத்தொகை 3,64,93,525. அதில் முஸ்லிம்கள் 2,26,53,294 அல்லது 62·07 சதவிகிதம் என்று காட்டப்பட்டிருக்கிறது. இதைப்போலவே கிழக்கு மண்டலத்திலுள்ள அஸ்ஸாம், வங்காள மாகாணங்களின் ஜனத்தொகை 7,05,11,258. அதில் முஸ்லிம்கள் 3,64,47,913 அல்லது 51·69 சதவிகிதம் என்றும் கணக்கிடப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு மண்டலங்களையும் சேர்த்துப் பார்த்தால் அவைகளின் மொத்த ஜனத்தொகை 10,70,04,783. முஸ்லிம்களின் தொகையோ 5,91,01,207 அல்லது 55·23 சதவிகிதம். இரண்டு மண்டலங்களிலுமுள்ள முஸ்லிம் ஜனத்தொகை 590 லட்சமாக இருக்கின்றதே தவிர, திரு. ஜின்னா கூறியதுபோல 7 கோடி இல்லை. மேலும், முஸ்லிம்கள் 55·23 சத விகிதம் இருக்கின்றார்களே தவிர திரு. ஜின்னா கூறியதைப்போல 70 சதவிகிதம் இருக்கவில்லை.

மத்தியிலே இந்துப் பிரதேசமிருக்க இந்தியாவிற்கு வடமேற்கிலும் வட கிழக்கிலும் ஒன்றுக்கொன்று ஆயிரம் மைல்களுக்கப்பாலுள்ள இடங்களைக்

3. *Jinnah-Gandhi Talks*. p. 72.

கொண்டு ஒரு பாகிஸ்தான் ராஜ்யத்தை ஏற்படுத்துவது கடினமல்லவா என்று பிரிட்டிஷ் ரேடியோ ஸ்தாபனத்தைச் சேர்ந்த திரு. டோனல்டு எட்வர்ட்ஸ், திரு. ஜின்னாவைக் கேட்டதற்கு அவர் பின்வருமாறு பதிலளித்தார்: 'நீங்கள் பிரிட்டனிலிருந்து பிரிட்டிஷ் காமன்வெல்த்தைச் சேர்ந்த இதர நாடுகளுக்குப் பிரயாணம் செய்யும்பொழுது அந்நியப் பிரதேசம் வழியாக, உதாரணமாக சூயஸ் கால்வாய் வழியாகச் செல்கிறீர்கள். இதெல்லாம் நேச உறவு முறையைக் கொண்டு நடைபெறுகிறது. வடகிழக்கு முஸ்லிம் பிரதேசங்களிலிருந்து வடமேற்கு முஸ்லிம் பிரதேசத்திற்கு இந்து நாடு என்று சொல்லப்படுகிற நெடும் பாதை வழியாக இன்று நாங்கள் ஒருவிதக் கஷ்டமுமின்றிப் பிரயாணம் செய்கிறோம். இந்த ஏற்பாடு பின்னும் ஏன் நீடிக்கக்கூடாது? ஒரு நாடு இந்துக்களோடு சிநேகப்பான்மையில் அயல்நாடாக இருக்க விரும்பினால் அதற்கு இந்துக்கள் சங்கடங்களை உண்டாக்குவதற்கு இடமளிக்கக் கூடாது. இந்தியாவின் வடமேற்கிலுள்ள முஸ்லிம்களும் வடகிழக்கு முஸ்லிம்களும் போக்குவரத்து நடத்துவதை இந்துக்கள் தடை செய்யும்படி விடக்கூடாது. உடன்படிக்கையில் இது ஒரு ஷரத்தாக இருக்க வேண்டும்.'[4]

இந்தியாவின் வடமேற்கு, வடகிழக்கு மண்டலங்களை இந்த அறிக்கை ஒரே முஸ்லிம் ராஜ்யம் என்று ஆக்குகிறது. 1940 மார்ச்சில் லீக் நிறைவேற்றிய லாகூர் தீர்மானம், இந்தியாவின் வடமேற்கு, வடகிழக்கில் முஸ்லிம்கள் அதிகமாக உள்ள பிரதேசங்களை சுதந்திர ராஜ்யங்கள் ஆக்கவேண்டுமென்று கூறியிருக்கிறதேயொழிய ஒரே ராஜ்யம் என்று குறிப்பிடவில்லை. இப்பொழுது அந்த இரண்டு மண்டலங்களும் ஒரே ராஜ்யமாக அமைக்கப்பட வேண்டுமென்று கூறுவதோடல்லாமல் அந்த இரண்டு முஸ்லிம் மண்டலங்களுக்கிடையில் ஆயிரம் மைல்கள் நீளமுள்ள பாதையையும் இந்து ராஜ்யம் தங்களுக்கு அளிக்கவேண்டுமென்று திரு. ஜின்னா உரிமை கொண்டாடுகிறார். கிழக்கு மண்டலம் மேற்கு மண்டலங்களுக்கிடையே இன்று தங்கு தடையற்ற பாதையிருக்கிறது என்று கூறுகிறார். ஏன் அந்த ஏற்பாடு நீடிக்கக்கூடாதென்றும் கேட்கிறார். அதற்கு பதில் அளிப்பது மிக எளிதே. அந்த இரண்டு மண்டலங்களும், இடைநிற்கும் பிரதேசமும் ஒரு பெரிய ராஜ்யத்தில் இருக்கின்றன. ஆகவே அவைகளுக்கிடையில் தடையற்ற போக்குவரத்து இருக்கின்றது. அதுமட்டுமல்ல, டில்லியைத் தலைநகராகக்கொண்ட ஒரே மத்திய அரசாங்கத்தின்கீழ் அவை யாவும் இருக்கின்றன. பிரிவினைக் கப்புறம் பாகிஸ்தானும் இந்துஸ்தானும் தனித்தனி சுதந்திர அரசுரிமைபெற்ற நாடுகளாக இருக்கும். ஆகவே ஒரு சுதந்திர நாடு, இன்னொரு சுதந்திர நாட்டிற்குத் தன் நாட்டின் வழியாகப் போக்குவரத்துக்கு அனுமதிக்கவேண்டுமென்ற பிரசினையே கிடையாது.

அதே பேட்டியின்போது இந்து ஜனத்தொகையை அதிகமாகக்கொண்ட அஸ்ஸாமும் ஏன் பாகிஸ்தானோடு சேரவேண்டும் என்று கேட்டபொழுது, 'பாகிஸ்தானில் தவிர அஸ்ஸாமை வேறு எங்கும் சேர்ப்பதற்கு வழி இல்லை' என்றார். பாகிஸ்தானில் வங்காளத்தைச் சேர்த்துவிட்டால் இந்தியாவின் பிற பாகங்களிலிருந்து அஸ்ஸாம் துண்டிக்கப்பட்டுவிடுகிறது. ஆகவே அதை பாகிஸ்தானின் கிழக்கு மண்டலத்தில் சேர்க்கவேண்டும் என்பதாகத் திரு. ஜின்னா நினைக்கிறார் என்பது தெளிவு. 23-சதவிகிதம் முஸ்லிம் ஜனத்தொகை கொண்ட ஜல்பைகுரி ஜில்லாவும் 2·4 சதவிகிதம் முஸ்லிம் ஜனத்தொகை

4. *The Dawn*, dated 2-4-'46.

கொண்ட டார்ஜிலிங் ஜில்லாவும், 62-சதவிகிதம் இந்து ஜனத்தொகை கொண்ட கூச்பிஹார் இந்து சமஸ்தானமும் முஸ்லிம் மண்டலத்தில் சேர்க்கப்பட்டால் தான் இந்துஸ்தானத்திலிருந்து அஸ்ஸாம் துண்டிக்கப்பட்டு நிற்கும். பாகிஸ்தான் ராஜ்யத்தில் எந்த நிலப்பரப்புகளைச் சேர்ப்பது என்பதைக் கவனிக்குமிடத்து பகுத்தறிவிற்கும் நேர்மைக்கும் இடத்தைக் காணேம். பஞ்சாப், வங்காள மாகாணங்களில் இந்துக்களைப் பெரும்பான்மையாகக் கொண்ட ஜில்லாக்கள் பாகிஸ்தானில் சேர்க்கப்படவேண்டுமாம். ஏனெனில் முஸ்லிம் மண்டலங்களைச் சேர்ந்தவை என்று கருதப்படுகிற மாகாணங்களில் இந்த ஜில்லாக்கள் இருக்கின்றனவாம். இரண்டு முஸ்லிம் மண்டலங்களுக் கிடையே நெடும்பாதை யமைப்பதை இந்துக்கள் தடுக்கும்படி விடக்கூடாதாம். இந்துஸ்தானத்திலிருந்து துண்டிக்கப்பட்டு இருப்பதால் அஸ்ஸாம் கிழக்கு மண் டலத்தில் சேர்க்கப்படவேண்டுமாம். அஸ்ஸாமும் இந்துஸ்தானும் ஒன்றுசேரு வதற்கு இந்துக்கள் பெரும்பான்மையாக உள்ள ஜில்லாக்கள் வழியாகப் பாதை ஏற்படுவதை முஸ்லிம் ராஜ்யம் அனுமதிக்கக்கூடாதாம். இதை எல்லாம் கவனிக்கும்போது 'அரிசி எனக்கு, தவிடு உனக்கு' என்ற வழக்காகத்தான் இருக்கிறது என்பது தெளிவாகிறது.

சமீபத்தில் இன்னெரு விஷயமும் வெளிக் கிளம்பி யிருக்கிறது. வங்காள லீக் மந்திரிசபையின் பிரதமரான திரு. சுஹ்ரவர்த்தி புதிய உரிமை களைக் கொண்டாடுகிருர். வங்காளம், அஸ்ஸாம் ஆகிய மாகாணங்கள் முழுமையும் அன்றி பீஹாரைச்சேர்ந்த சிங்பூம், மன்பூம், சாந்தால் பர்கானுக்கள், பூர்ணியா ஜில்லாக்களும் பாகிஸ்தானத்தில் சேர்க்கப்படவேண்டுமாம். அப்படி யானுல் அவைகள் கிழக்கு மண்டலத்தின் பாகங்களாகச் சேரும். அப்பொழுது இந்தியாவில் கிடைக்கக்கூடிய அதிகமான இரும்பு, செம்பு, நிலக்கரி, எண் ணெய், இதர உலோகங்கள் எல்லாம் பாகிஸ்தானில் கிடைக்கின்றன என்று சொல்லிக்கொள்ளமுடியும்: எந்த சுதந்திர நாட்டுக்கும் இன்றியமையாத பொருள்களான இத்தாதுப்பொருள்கள் பாகிஸ்தானில் கிடையாது என்பதை ஜனங்கள் சிரமப்பட்டுச் சுட்டிக் காட்டிக்கொண்டே யிருந்தார்கள். இப் பொருள்கள் இருக்கக்கூடிய பிரதேசங்களைப் பாகிஸ்தானில் சேர்த்துவிட வேண்டுமென்று அவர்களுக்குத் திரு. சுஹ்ரவர்த்தி பதிலளிக்கிருர். உலோ கங்கள் சம்பந்தமாகவும் பாகிஸ்தான் இவ்விதமாகச் சுயதேவையைப் பூர்த்தி செய்வதாக ஆக்கப்படுகிறது. பாகிஸ்தானுக்குக் கோரப்பட்ட மாகாணங் களில் இந்தப் பிரதேசங்கள் இல்லையே என்பதுபற்றியும் பொருட்படுத்த வேண்டாம். முஸ்லிம் ஜனத்தொகையும் மிகக் குறைவாக, 18·12-சதவிகித மிருந்தாலும் பரவாயில்லை, அவர்களுக்கு வேண்டியது தாதுப்பொருள்கள் தானே!

போகிறபோக்கில் இன்னெரு விஷயத்தையும் நாம் கவனிக்கவேண்டும். இந்த ஜில்லாக்களையும் கிழக்குமண்டலத்தில் சேர்த்துவிட்டால் அப்பொழுது முஸ்லிம்கள் 48·34-சதவிகிதமான சிறுபான்மையாக ஆகிவிடுகிருர்கள். பிர தேசத்தை மாற்றி அமைப்பதன்மூலம், முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ள இடங்களைக் கொண்டு தனியான முஸ்லிம் சுதந்திர ராஜ்யத்தை ஏற்படுத்துவது என்ற கொள்கை இவ்வாறு அடிபட்டுப் போய்விடுகிறது. இரண்டு மண்டலங்களின் ஜனத்தொகையைச் சேர்த்துப் பார்த்தாலும்கூட முஸ்லிம் ஜனவிகிதம், 55·23-சதவிகிதமாக இருக்கின்ற சொற்பப் பெரும்பான் மையும், 52·71-சதவிகிதமான அற்பப் பெரும்பான்மையாக இறங்கிவிடும்.

இரண்டு பக்கத்திலும் பிரதேசத்தை மாற்றி அமைப்பது என்று திரு. ஜின்ன சொல்வதன் அர்த்தம் இப்பொழுதுதான் நமக்குத் தெரியவருகிறது. அதாவது கொடுக்கின்ற காரியம் இந்துஸ்தானத்தைச் சேர்ந்தது. பெற்றுக்கொள்ளும் வேலை பாகிஸ்தானத்தைச் சேர்ந்ததாக இருக்கவேண்டுமாம்.

## அட்டவணை LIV

வடமேற்கு, கிழக்குப் பகுதிகளிலும் பீஹாரைச் சேர்ந்த நாலு ஜில்லாக்களிலும் உள்ள முஸ்லிம், முஸ்லிமல்லாதார் ஆகியோரின் ஜனத்தொகை

| | மொத்த ஜனத் தொகை | முஸ்லிம் ஜனத் தொகை | முஸ்லிம் ஜனத் தொகையின் சத விகிதம் | முஸ்லி மல்லாதார் ஜனத் தொகை | முஸ்லி மல்லாதாரின் ஜனத் தொகை சதவிகிதம் |
|---|---|---|---|---|---|
| வ. மே. பகுதி | 3,64,93,525 | 2,26,53,294 | 62·07 | 1,38,40,231 | 37·92 |
| வங்கம் அஸ்ஸாம் | 7,05,11,258 | 3,64,47,913 | 51·69 | 3,40,63,345 | 48·30 |
| மொத்தம் | 10,70,04,783 | 5,91,01,207 | 55·23 | 4,79,03,576 | 44·76 |
| பீஹார் ஜில்லாக்கள் | | | | | |
| பூர்ணியா | 23,09,105 | 9,76,048 | 40·84 | 14,14,057 | 59·16 |
| சந்தல் பர்காணு | 22,34,497 | 2,62,836 | 11·76 | 19,71,661 | 88·24 |
| மான்பும் | 20,32,146 | 1,32,234 | 6·51 | 18,99,912 | 93·49 |
| சிங்பும் | 11,44,717 | 43,233 | 3 77 | 11,01,484 | 96·23 |
| மொத்தம் | 78,01,465 | 14,14,351 | 18.12 | 63,87,114 | 81·87 |
| வ. மே. பகுதி, வங்கம் அஸ்ஸாம், பீஹாரைச் சேர்ந்த நாலு ஜில்லாக்கள் ஆகியவைகளின் மொத்தம் | 11,48,06,248 | 605,15,558 | 52·17 | 5,42,90,690 | 47·28 |

இரு தேசீய இனக் கொள்கையை முன்னணிக்குக் கொண்டுவந்ததிலிருந்து இன்னொரு கேள்வியும் பொது ஜனங்களுடைய கவனத்தை இழுத்து வந்திருக்கிறது. எல்லா முஸ்லிம்களும் அவர்கள் வாழும் பிரதேசம், பேசும் மொழி முதலியவைகளைப்பற்றிக் கவனிக்காமல் மதத்தை மாத்திரம் கவனிக்கும் போது அவர்கள் ஒரே தேசீய இனமாக மாறுகிறார்கள் என்றால் இந்துஸ்தானத்திலுள்ள முஸ்லிம்களின் கதி என்ன? மேலே குறிப்பிடப்பட்ட பேட்டியின்போது முஸ்லிம்கள் சிறுபான்மையாக இருக்கிற பிரதேசங்களை என்ன செய்வது என்று திரு. ஜின்னவைக் கேட்டபொழுது அவர் கூறியதாவது: 'சென்னையைப் போன்ற இடங்களில் இந்து அரசாங்கம் இருக்கும். அங்குள்ள சிறுபான்மையினரான முஸ்லிம்களுக்கு மூன்றேமூன்று வழிகளுள்ளன. ஒன்று, அவர்கள் அந்த ராஜ்யத்தின் பிரஜைகளாக இருக்கவேண்டும். அல்லது அங்கு அந்நியரைப்போல இருக்கவேண்டும் அல்லது அவர்கள் பாகிஸ்தானுக்கு வந்துவிடலாம். நான் அவர்களை வரவேற்கிறேன். போதுமான இடம் இருக்கிறது. ஆனால் இதை முடிவு செய்யவேண்டியது அவர்களே.' இன்று இந்தியாவின் பிரஜைகளாக உள்ள முஸ்லிம்கள் பிரிவினைக்கப்புறம் இந்துஸ்தானத்தின் பிரஜைகளாக இருக்கவில்லை என்ற நிலைமையைத் திரு. ஜின்ன ஏற்றுக்கொள்ளு

கிருர். அவர்களுக்கு மூன்று வழிகளைச் சொல்லுகிருர். இப்பொழுது அந்த மூன்று வழிகளை விவரமாகக் கவனிப்போம்.

அவர்கள் எந்த நாட்டில் இருக்கின்ருர்களோ அந்த நாட்டின் பிரஜைகள்தான் தாங்கள் என்பதை முஸ்லிம்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். இது தான் முதலாவது வழி. ஒரு ராஜ்யத்தின் பிரஜா உரிமையை ஓர் அந்நியன் பெறவேண்டுமென்ருல் இதற்கென்று ஏற்படுத்தப்பட்ட சட்டங்களின்படி தான் அவன் அவ்வுரிமைகளை அடையலாம். சுதந்திரமான ஒரு ராஜ்யம் தன்னுடைய ஜனத்தொகையை ஒழுங்குபடுத்தலாம், கட்டுப்படுத்தலாம். பிரஜா உரிமையைப் பெறுகின்ற அந்நியர்களுக்கே கடுமையான தடைவிதிகளை ஏற்படுத்தலாம். அந்நியர்கள் தன் நாட்டுப் பிரஜைகளாவதை முழுவதும் விலக்கவும் கூடும். பிரிட்டிஷ் டொமினியன்களின் சரித்திரத்தைச் சற்று கவனிப்போம். தென்ஞப்பிரிக்கா, கானடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளத்தனையும் பிரிட்டிஷ் காமன்வெல்த்தையும் சாம்ராஜ்யத்தையும் சேர்ந்த நாடுகள்தாம். இந்தியாவும் அதே சாம்ராஜ்யத்தைச் சேர்ந்ததுதான். அந்த நாடுகளைப் போன்றே அதே சக்கரவர்த்திக்கு விசுவாசமுள்ள நாடுதான். இருந்தாலும் அந்த நாடுகள் இந்தியர்கள் பிரஜா உரிமையைப் பெற முடியாதபடி தடுப்பதில் திறமையாக வெற்றியடைந்திருக்கின்றன. ஐக்கிய அமெரிக்க நாடுகள் எந்த அந்நியருக்கும் அவர் பிரஜா உரிமை விரும்புகிருர் என்ற காரணத்தால் அவருக்கு அவ்வுரிமையைக் கொடுத்துவிடுவதில்லை. எல்லோரையும் குடியேறவும் அனுமதிப்பதில்லை. ஆகவே இந்துஸ்தானமும் உண்மையான சுதந்திர நாடாக இருக்குமாஞல் பூரண அரசுரிமை பெற்றிருக்குமாஞல் பிரஜா உரிமையைக் கட்டுப்படுத்துகின்ற அதே உரிமையைப் பெற்றிருக்கும். அந்நியர்கள் அவ்வுரிமையைப் பெறுவதையும் விலக்கும். இந்துஸ்தானம் அனுமதித்தாலொழிய அங்குள்ள முஸ்லிம் மக்கள் அந்நாட்டின் பிரஜைகளாக முடியாது. ஆனல் இந்துக்கள் அவ்வாறு தடை விதிப்பதற்கு விடக்கூடாது என்று திரு. ஜின்ஞ நினைத்துக்கொள்ளுகிருர்.

முஸ்லிம்கள் இந்துஸ்தானத்தில் அந்நியர்களைப்போல வாழலாம். இது இரண்டாவது வழி. இங்கும் திரு. ஜின்ஞ மேற்கூறியவாறு நினைத்துக் கொள்ளுகிருர். எந்த சுதந்திர ராஜ்யமும் அந்நியர்களைத் தன்னுட்டில் தங்க அனுமதிக்க வேண்டுமென்ற நியதியில்லை. இந்துஸ்தானும் அப்படித்தான். அதிலும் முஸ்லிம்களைப்போன்று ஏராளமானவர்களை அனுமதிக்க வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. ஒரு சுதந்திர ராஜ்யம் தன் நாட்டில் அந்நியர்கள் நிலபுலன்கள் வாங்காதபடி கட்டுப்படுத்துவதற்கும் தடை செய்வதற்கும் முடியும் என்பதை நினைவு வைத்துக்கொள்வது நல்லது. இதற்கும் தென்னுப்பிரிக்காவின் உதாரணமே நமக்கு முன்னுல் நிற்கின்றது.

இந்துஸ்தானத்திலுள்ள முஸ்லிம்கள் பாகிஸ்தானுக்குப் போய் விடலாம் என்பது மூன்ருவது வழி. சட்டபூர்வமாக இது நடக்கக்கூடிய காரியமே. எந்த அந்நியனும் குற்றம் சாட்டப்பட்டு அந்நிய நாட்டில் விசாரிக்கப் படவேண்டிய நிலைமையில் இல்லாவிட்டால் அவன் அந்த அந்நிய நாட்டை விட்டுக் கிளம்பி தன் நாட்டுக்குப் போகலாம். இந்துஸ்தானத்தைச் சேர்ந்த முஸ்லிம்கள் இஷ்டப்பட்டால் இந்துஸ்தானத்தைவிட்டு வெளியேறலாம். ஆனுல் அவர்கள் தங்கள் வீடுவாசல்களையும் நிலபுலன்களையும் தூக்கிக் கொண்டு செல்லமுடியாது. ரொக்கம், நகை நட்டு, ஆடுமாடு இதர பொருள்களை அவர்கள் கொண்டுபோவதற்கு அனுமதிக்கப்பட்டாலும்

